**கேள்வி -** இப்படியானால், [1]**"அந்த ப்ரஹ்மத்துக்கு ப்ரியம் தான் சிரஸ்"** முதலியதில் ப்ரஹ்மத்தின் குணமாக ஓதப்பட்டவையான ப்ரியசிரஸ்த்வம் முதலியவையும், ஆனந்தத்வம் முதலியன போல,எல்லா வித்யைகளிலும் எண்ணப்பட நேரிடும்; ஏனெனில்,குணமுடைய பொருளை விட்டு குணங்கள் தனியாக இருக்காதானபடியாலேயே.

*✍(ஆனந்தமயமான ப்ரஹ்மத்துக்கு ப்ரியம் என்பது தலையாகும்; மோதம் என்பது வலது பக்கம் ஆகும் ..... என்று தலை, வால் முதலியதை வேதம் சொல்கிறது; ப்ரியம், மோதம் என்பதெல்லாம் ஆனந்தத்தின் சில விதங்கள்; அந்த ப்ரியத்தை தலையாக கொண்டிருத்தல் முதலியதும் ப்ரஹ்மத்தின் குணம் ஆகிறது; ஆதலால், அதையும் உபாஸநம் செய்ய வேண்டி வரும் என்று கேள்வி)✍*

**பதில் -** அல்ல என்கிறார் -

**366.ப்ரியஶிரஸ்த்வாத்யப்ராப்தி: உபசயாபசயௌ ஹி பேதே (3-3-12)**

*ப்ரியசிரஸ்த்வம் முதலியவை உபாஸனத்தில் சேராது; ஏனெனில், [ப்ரஹ்மத்துக்கு] அவயவப் பிரிவு இருக்குமானால், பெரிய-சிறிய அளவுகள் இருக்க நேரிடும்.*

**ப்ரியசிரஸ்த்வாத்யப்ராப்தி: -** ப்ரஹ்ம-ஸ்வரூப-குணங்கள் (உபாஸனத்தில்) சேரும் என்று சொல்லப்படும்போது, ப்ரியசிரஸ்த்வம் முதலியவை (உபாஸனத்தில்) சேராது; ஏனெனில், அவை ப்ரஹ்மத்தின் குணங்களே அல்ல. (பரமாத்ம-ஸ்வரூபமான ப்ரஹ்மத்துக்கு தலை முதலிய பாகம் கிடையாது)

**பேதே (அவயவப்பிரிவு இருக்குமானால்) -** அப்படி இல்லாமல், ப்ரஹ்மத்துக்கு தலை, பக்கம், வால் முதலிய அவயவப் பிரிவு இருக்குமானால்,

**உபசய-அபசயௌ -** சிறிதாகவும் பெரிதாகவும் இருத்தல் வர நேரிடும்; (ஒரு அவயவம் பெரிதாகவும், மற்றொன்று சிறிதாகவும் இருக்க நேரிடும்) அப்படியானால், [2]**"ப்ரஹ்மம் மாறாதது, ஜ்ஞாநஸ்வரூபமானது, அளவற்றது"** முதலியது முரண்படும்.



**கேள்வி -** (குணமுடைய பொருளை விட்டு குணங்கள் இருக்காது எனும் காரணத்தால் ஆனந்தத்வம் முதலிய குணங்கள் எல்லா வித்யையிலும் வரும் என்றால்,) அப்படியே எல்லா குணங்களும் எல்லா வித்யையிலும் வர நேரிடும்; ப்ரஹ்மத்துடன் ஸம்பந்தப்பட்ட ஐஶ்வர்யம், காம்பீர்யம், ஔதார்யம், காருண்யம் முதலிய எண்ணற்ற குணங்கள், அந்த(ந்த) வித்யையில் சொல்லப்படாமல் இருந்தாலும், குணமுடைய பொருளை (ப்ரஹ்மத்தை)விட்டுப் பிரிந்து இருக்காது எனும் காரணத்தால் மட்டும், இப்படியே சேர்த்து எண்ணிக் கொள்ளப்பட வேண்டும் என்றாகும்; அவை எண்ணற்றவை ஆதலால், முழுதுமாக எண்ண முடியாது என்பதும் ஆகும்.

**பதில் -** அதற்கு பதில் சொல்கிறார் -

## ३६७.इतरे त्वर्थसामान्यात् (३-३-१३)

तुशब्दश्चोद्यं व्यावर्तयति। **इतरे तु** - आनन्दादयः **अर्थसामान्यात्** सर्वत्रानुवर्तन्ते। ये त्वर्थसमानाः - अर्थस्वरूपनिरूपणधर्मत्वेनार्थप्रतीत्यनुबन्धिनः, तेऽर्थस्वरूपवत् सर्वत्रानुवर्तन्ते। ते च गुणाः सत्यज्ञानानन्दामलत्वानन्तत्वानि। **''यतो वा इमानि''** (तै.1.भृ.1)[1] इत्यादिना जगत्कारणतयोपलक्षितं ब्रह्म,**''सत्यं ज्ञानमनन्तं ब्रह्म''** (तै.1.आन.2)[2] **''आनन्दो ब्रह्म''**(तै.1.भृ.6)[3] इति आनन्दादिभिर्हि स्वरूपतो निरूप्यते। अत उपास्यब्रह्मस्वरूपवगमाय सर्वासु विद्यास्वानन्दादयोऽनुवर्तन्ते।

ये तु निरूपितस्वरूपस्य ब्रह्मणः कारुण्यादयो गुणाः प्रतिपन्नाः, तेषां गुण्यपृथक्स्थितत्वेऽपि प्रतीत्यनुबन्धित्वाभावात्, ये यत्र श्रुताः, ते तत्रोपसंहार्याः इति निरवद्यम्॥१३॥



यदि - उपचयापचयप्रसङ्गात् प्रियशिरस्त्वादयो ब्रह्मणः पुरुषविधत्वरूपणमात्रार्थाः, न तु ब्रह्मगुणाः; तर्ह्यतथारूपस्य ब्रह्मणः तथात्वेन रूपणं किमर्थं क्रियते? अतथाभूतस्य

## 367.இதரே த்வர்தஸாமாந்யாத் (3-3-13)

துஶப்தஶ்சோத்யம் வ்யாவர்தயதி। *இதரே து* - ஆநந்தாதய: அர்தஸாமாந்யாத் ஸர்வத்ராநுவர்தந்தே। யே து அர்தஸமாநா: - அர்தஸ்வரூபநிரூபணதர்மத்வேந அர்தப்ரதீத்யநுபந்திந:, தே அர்தஸ்வரூபவத் ஸர்வத்ராநுவர்தந்தே।

தே ச குணா: ஸத்யஜ்ஞாநாநந்தாமலத்வாநந்தத்வாநி। *''யதோ வா இமாநி''*(தை.1.ப்ரு.1)[1] இத்யாதிநா ஜகத்காரணதயோபலக்ஷிதம் ப்ரஹ்ம, *''ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம''*(தை.1.ஆந.2)[2] *''ஆநந்தோ ப்ரஹ்ம''*(தை.1.ப்ரு.6)[3] இதி ஆநந்தாதிபிர்ஹி ஸ்வரூபதோ நிரூப்யதே। அத: உபாஸ்யப்ரஹ்மஸ்வரூபாவகமாய ஸர்வாஸு வித்யாஸு அநந்தாதயோऽநுவர்தந்தே।

யே து நிரூபதஸ்வரூபஸ்ய ப்ரஹ்மண: காருண்யாதயோ குணா: ப்ரதிபந்நா:, தேஷாம் குண்யப்ருதக்ஸ்திதத்வேऽபி ப்ரதீத்யநுபந்தித்வாபாவாத், யே யத்ர ஶ்ருதா:, தே தத்ரோபஸம்ஹார்யா: - இதி நிரவத்யம்॥13॥



யதி - உபசயாபசயப்ரஸங்காத் ப்ரியஶிரஸ்த்வாதய: ப்ரஹ்மண: புருஷவிதத்வரூபணமாத்ரார்தா:, ந து ப்ரஹ்மகுணா: - தர்ஹி அததாரூபஸ்ய ப்ரஹ்மண: ததாத்வேந ரூபணம் கிமர்தம் க்ரியதே? அததாபூதஸ்ய ஹி

## 367.இதரே து அர்த்தஸாமாந்யாத்(3-3-13)

*மற்றவையோ, குணங்களை உடைய பொருளுக்கு ஸமமாக ஆவதால் [எல்லாவிடத்திலும் சேரும்].*

**'து'** என்ற சொல், கேள்வியைக் களைகிறது.

**இதரே (மற்றவை) து -** ஆனந்தத்வம் முதலியவையோ

**அர்த்தஸாமாந்யாத் -** (குணங்களை உடைய பொருளுக்கு ஸமானமாக ஆவதால்) எல்லா இடத்திலும் தொடர்ந்து வரும்.

(சில குணங்கள்) குணங்களை உடைய பொருளுக்கு ஸமமாக ஆனவையாக (ஆகும்;) அதாவது, அந்த பொருளின் ஸ்வரூபத்தை நிரூபணம் செய்யும் தன்மைகள் ஆவதால், பொருளைப் பற்றிய ஜ்ஞாநத்தில் சேர்ந்தே தெரிபவையாக (ஆகும்; அப்படி) எவை ஆகின்றனவோ, அவை பொருளின் ஸ்வரூபம் போல் எல்லா வித்யைகளிலும் தொடர்ந்து இருக்கும்.

அந்த குணங்கள் (ஸ்வரூப-நிரூபக-குணங்கள்)-

1. ஸத்யத்வம் (உருமாற்றம் இல்லாமல் ஒரே நிலையில் ஆதல்)
2. ஜ்ஞாநத்வம் (ஸ்வயம்ப்ரகாஶம் ஆகவும் ஜ்ஞாநம் உடையவனாகவும் இருத்தல்)
3. ஆனந்தத்வம் (அனுகூலமாகவே ஆதல்)
4. அமலத்வம் (தோஷங்களுக்கு எதிர்த்தட்டாக இருத்தல்)
5. அனந்தத்வம் (எந்த விதத்திலும் அளவுபடாமை)ஆகியவை.

[1]**''எதிலிருந்து இந்த பொருள்கள் (உண்டாகின்றனவோ)...''** என்பது முதலியவற்றால் உலகின் காரணமாக ப்ரஹ்மம் புற-அடையாளம் இடப்பட்டது; அதுவே, [2]**''ஸத்யம் ஜ்ஞாநம் அனந்தம் ப்ரஹ்ம'', [3]''ஆனந்தோ ப்ரஹ்ம''** என்று ஆனந்தத்வம் முதலியவற்றால் ஸ்வரூபத்தை இட்டு (அதற்கு மட்டுமேயான தன்மைகளைக் கொண்டு) நிரூபிக்கப் படுகிறது. எனவே, உபாஸனம் செய்யப்படும் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை அறிவதற்காக, எல்லா வித்யைகளிலும் ஆனந்தத்வம் முதலியவை தொடர்கின்றன.

ஸ்வரூப-நிரூபணம் பெற்ற ப்ரஹ்மத்துக்கு, காருண்யம் முதலிய எந்த குணங்கள் தெரிகின்றனவோ, அவை எந்த வித்யையில் சொல்லப்படுபவையோ, அந்த வித்யையில் மட்டும் எண்ணப்பட வேண்டியவை; ஏனெனில், அவை குணங்களை உடைய ப்ரஹ்மத்தை விட்டு தனியாக இருக்காது என்றாலும், ப்ரஹ்மம் பற்றிய ஜ்ஞாநத்தில் விடாமல் தொடர்ந்தே விஷயமாக இருக்கும் என்பது கிடையாது. எனவே, (கேள்வியில் கேட்கப்பட்ட) தோஷம் கிடையாது.



**கேள்வி -** (ப்ரஹ்மத்துக்கு) பெரிய-சிறிய அளவுடைமை வர நேரிடும் என்பதால், ப்ரிய-ஶிரஸ்த்வம் முதலியவை ப்ரஹ்மத்தின் குணங்கள் அல்ல; அவை ப்ரஹ்மத்தை மனிதன் எனும் விதமாக உருவகப் படுத்த மட்டுமே ஆனவை என்பதானால்,

हि तथात्वरूपणे केनचित् प्रयोजनेन भवितव्यम्। यथा, **''आत्मानं रथिनं विद्धि''** (क.3-3)[1] इत्यादिनोपासकस्य तदुपकरणानां च रथिरथादित्वरूपणम् उपासनोपकरण-भूतशरीरेन्द्रियादिवशीकरणार्थं क्रियत इत्युक्तम्। न चेह तथाविधं किञ्चित् प्रयोजनं दृश्यते इति बलाद्ब्रह्मगुणत्वं प्रियशिरस्त्वादीनामभ्युपेत्यम्। तत्राह -

## ३६८.आध्यानाय प्रयोजनाभावात् (३-३-१४)

प्रयोजनान्तराभावादाध्यानायायं रूपणोपदेशः क्रियते। **आध्यानम्** अनुचिन्तनम् उपासनमुच्यते।

**''ब्रह्मविदाप्नोति परम्''** (तै.1.आन.2)[2] इत्यत्रोपदिष्टाऽऽध्यानरूपवेदनसिद्धये ह्यान-न्दमयब्रह्मप्रतिपत्त्यर्थमानन्दमयं ब्रह्म प्रियमोदादिरूपेण विभज्य शिरःपक्षादित्वेन रूपयित्वोपदिश्यते। यथाऽन्नमयः पुरुषः अयं देहः शिरःपक्षादिभिः **''तस्येदमेव शिरः''** (तै.1.आन.2)[3] इत्यादिना बुद्धावारोप्यते, यथा च प्राणमयमनोमयविज्ञानमयाः **''तस्य प्राण एव शिरः''** (तै.1.आन.3)[4] इत्यादिना प्राणाद्यवयवैर्बुद्धावारोप्यन्ते ; एवमेभ्योऽ-र्थान्तरभूतस्तदन्तरात्मा आनन्दमयोऽपि प्रियमोदादिभिरेकदेशैः शिरःप्रभृतित्वेन रूपितैराध्यानाय बुद्धावारोप्यते। एवमानन्दमयोपलक्षणत्वात् प्रियशिरस्त्वादीनाम्, न सर्वदा आनन्द-मयप्रतीतावनुवर्तन्ते॥१४॥



ததாத்வரூபணே கேநசித் ப்ரயோஜநேந பவிதவ்யம். யதா, *''ஆத்மாநம் ரதிநம் வித்தி''* (க.3-3) இத்யாதிநா உபாஸகஸ்ய ததுபகரணாநாம் ச ரதிரதாதித்வ-ரூபணம் உபாஸநோபகரணபூதஶரீரேந்த்ரியாதிவஶீகரணார்தம் க்ரியத இத்-யுக்தம். ந சேஹ ததாவிதம் கிஞ்சித் ப்ரயோஜநம் த்ருஶ்யதே இதி பலாத் ப்ரஹ்மகுணத்வம் ப்ரியஶிரஸ்த்வாதீநாம் அப்யுபேத்யம். தத்ராஹ -

## 368.ஆத்யாநாய ப்ரயோஜநாபாவாத்(3-3-14)

ப்ரயோஜநாந்தராபாவாத் ஆத்யாநாயாயம் ரூபணோபதேஶ: க்ரியதே. **ஆத்யாநம்** - அநுசிந்தநம் உபாஸநமுச்யதே. *''ப்ரஹ்மவிதாப்நோதி பரம்''* (தை.1.ஆந.2)[2] இத்யத்ரோபதிஷ்டாத்யாநரூபவேதநஸித்தயே ஹி ஆநந்த-மயப்ரஹ்மப்ரதிபத்த்யர்தம் ஆநந்தமயம் ப்ரஹ்ம ப்ரியமோதாதிரூபேண விபஜ்ய ஶிர:பக்ஷாதித்வேந ரூபயித்வா உபதிஶ்யதே. யதா அந்நமய: புருஷ: அயம் தேஹ: ஶிர:பக்ஷாதிபி:, *''தஸ்யேதமேவ ஶிர:''* (தை.1.ஆந.2)[3] இத்யாதிநா புத்தாவாரோப்யதே, யதா ச ப்ராணமய-மநோமய-விஜ்ஞாநமயா:, *''தஸ்ய ப்ராண ஏவ ஶிர:''* (தை.1.ஆந.3)[4] இத்யாதிநா ப்ராணாத்யவயவை: புத்தா-வாரோப்யந்தே; ஏவம் ஏப்யோऽர்தாந்தரபூத: ததந்தராத்மா ஆநந்தமயோऽபி ப்ரியமோதாதிபி: ஏகதேஶை: ஶிர:ப்ரப்ருதித்வேந ரூபிதை: ஆத்யாநாய புத்தாவாரோப்யதே. ஏவம் ஆநந்தமயோபலக்ஷணத்வாத் ப்ரியஶிரஸ்-த்வாதீநாம், ந ஸர்வதா ஆநந்தமயப்ரதீதாவநுவர்தந்தே.. 14 ..



அப்போது, அப்படி மனித-உருவமாகாத ப்ரஹ்மத்தை அப்படி மனிதனாக உருவகப் படுத்துதல் எதற்காக செய்யப்படுகிறது? அந்த உருவாகாத ஒன்றை அப்படியாக உருவகப் படுத்துவதில் ஏதாவது ஒரு பயன் இருக்க வேண்டும்! எடுத்துக் காட்டாக- [1]**''ஆத்மாவை தேரோளியாக அறிவாய்''** முதலியதால், உபாஸனம் செய்பவனையும், அந்த உபாஸனத்தின் உபகரணங்களையும் தேரோளியாகவும் தேர் முதலியவையாகவும் உருவகம் செய்ததானது, உபாஸனத்துக்கு உபகரணங்களான ஶரீரம் இந்த்ரியம் முதலியவற்றை வசப் படுத்துவதற்காக செய்யப் படுகிறது என்று சொல்லப்பட்டது (1-4-1 ஆனுமானிக-அதிகரணம் காண்க). இங்கு அப்படிப்பட்ட பயன் எதுவும் தெரியவில்லை; ஆகையால் ப்ரிய-சிரஸ்த்வம் முதலியவை ப்ரஹ்மத்தின் குணங்களே என்று பலவந்தமாக ஏற்றுக்கொள்ள வேண்டும்.

**பதில் -** அதற்கு பதில் சொல்கிறார் -

**368.ஆத்யானாய ப்ரயோஜநாபாவாத்(3-3-14)**
*வேறு பயன் இல்லாததால், த்யானத்தின் பொருட்டு [ உருவகம் ஆகும் ]*

வேறு பயன் இல்லாதபடியால், ஆத்யானத்தின் பொருட்டு இந்த உருவக-உபதேஶம் செய்யப் படுகிறது. ஆத்யானம் - தொடர்ந்து சிந்தித்தல், உபாஸனம் சொல்லப்படுகிறது.

[2]**''ப்ரஹ்மத்தை அறிபவன் பர-ப்ரஹ்மத்தை அடைகிறான்''** என்னும் இடத்தில் த்யானம் ஆகிற அறிவு உபதேஶம் செய்யப்பட்டது; அந்த த்யானம் ஸித்திப்பதன் பொருட்டு, ஆனந்தமயமான ப்ரஹ்மத்தைப் புரிந்து கொள்வதற்காக, ஆனந்தமயமான ப்ரஹ்மமே, ப்ரியம், மோதம் முதலிய உருவில் பிரிக்கப்பட்டு தலை, பக்கம் முதலியதாக உருவகம் செய்யப்பட்டு உபதேஶிக்கப் படுகிறது. எடுத்துக் காட்டாக, அன்னமய-புருஷனாகிற இந்த உடலானது, தலை, பக்கம் முதலியவற்றை இட்டு, [3]**''அவனுக்கு இதுவே தலை''** முதலியவற்றால் புத்தியில் ஏற்றப்படுகிறது; ப்ராணமயம், மனோமயம், விஜ்ஞானமயம் ஆகியவை [4]**''அவனுக்கு ப்ராணன்தான் சிரஸ்''** முதலியதால், ப்ராணன் முதலிய அவயவங்களை இட்டு புத்தியில் ஏற்றப் படுகின்றன; அவை எப்படியோ, அப்படியே இவற்றை விட வேறானதும் இவற்றின் உள்-இருக்கும் ஆத்மாவானதும் ஆன ஆனந்தமயனும், தலை முதலியனவாக உருவகம் செய்யப்பட்ட ப்ரியம், மோதம் முதலிய பகுதிகளை இட்டு புத்தியில் ஏற்றப் படுகிறது. இப்படியாக ஆனந்தமயனுக்கு ப்ரிய-சிரஸ்த்வம் முதலியவை வெளி-அடையாளம் மட்டுமே; ஆகையால், அவை ஆனந்தமயனைப் பற்றிய ஜ்ஞாநத்தில் எப்போதும் தொடரும் என்பது கிடையாது.

*✍(ஆனந்தமய-ப்ரஹ்மம் எப்படி இருக்கும் என்பதைப் புரிந்து கொண்டால்தான் த்யானம் செய்ய முடியும்; அதை நமக்கு புரிய வைப்பதற்காக ஆனந்தமயமான ப்ரஹ்மத்தை ஒரு உடலாக உருவகம் செய்கிறது; அதற்கு ப்ரியம்தான் தலை, மோதம் எனும் ஒருவித ஆனந்தம்தான் வலது பக்கம் என்றெல்லாம் உருவகம் செய்கிறது. இது ஒரு உருவக-கற்பனையே; உண்மையில் தலை முதலியது ப்ரஹ்மஸ்வரூபத்தில் கிடையாது; அதை உபாஸனம் செய்யக் கூடாது; விரிவாக 1-1-6 ஆனந்தமய-அதிகரணம் காண்க).✍*



## ३६९.आत्मशब्दाच्च (३-३-१५)

**"अन्योऽन्तर आत्माऽऽनन्दमयः"**(तै.1.आन.5)[1] इत्यात्मशब्देन निर्देशात् आत्मनश्च शिरःपक्षपुच्छासम्भवात् प्रियशिरस्त्वादयः तस्य सुखप्रतिपत्त्यर्थं रूपणमात्रमिति गम्यते॥१५॥



ननु, **"अन्योऽन्तर आत्मा प्राणमयः"**(तै.1.आन.3)[2], **"अन्योन्तर आत्मा मनोमयः"**(तै.1.आन.4)[3] इत्यात्मशब्दस्यानात्मस्वपि पूर्वं प्रयुक्तत्वात्, **"अन्योन्तर आत्माऽऽनन्दमयः"**(तै.1.आन.5)[4] इत्यात्मशब्दस्य परमात्मविषयत्वं कथं निश्चीयते? तत्राह -

## ३७०.आत्मगृहीतिरितरवत् उत्तरात् (३-३-१६)

**"अन्योऽन्तर आत्माऽऽनन्दमयः"**(तै.1.आन.5)[1] इत्यत्राऽऽत्मशब्देन परमात्मन एव ग्रहणम्; इतरवत् - यथेतरत्र **"आत्मा वा इदमेक एवाग्र आसीत्। स ईक्षत लोकान्नु सृजै"**(ऐ.1-1)[2] इत्यादिष्वात्मशब्देन परमात्मन एव ग्रहणम्, तद्वत्॥

---

## 369.ஆத்மஶப்தாச்ச(3-3-15)

*"அந்யோऽந்தர ஆத்மாऽऽநந்தமய:"*(தை.1.ஆந.5)[1] இத்யாத்மஶப்தேந நிர்தேஶாத் ஆத்மநஶ்ச ஶிர:பக்ஷபுச்சாஸம்பவாத் ப்ரியஶிரஸ்த்வாதய: தஸ்ய ஸுகப்ரதிபத்த்யர்தம் ரூபணமாத்ரமிதி கம்யதே।। 15 ।।



நநு, *"அந்யோऽந்தர ஆத்மா ப்ராணமய:"*(தை.1.ஆந.3)[2], *"அந்யோந்தர ஆத்மா மநோமய:"*(தை.1.ஆந.4)[3] இத்யாத்மஶப்தஸ்ய அநாத்மஸ்வபி பூர்வம் ப்ரயுக்தத்வாத், *"அந்யோந்தர ஆத்மாऽऽநந்தமய:"*(தை.1.ஆந.5)[4] இத்யாத்மஶப்தஸ்ய பரமாத்மவிஷயத்வம் கதம் நிஶ்சீயதே தத்ராஹ -

## 370.ஆத்மக்ருஹீதிரிதரவத் உத்தராத் (3-3-16)

*"அந்யோऽந்தர ஆத்மாऽऽநந்தமய:"*(தை.1.ஆந.5)[1] இத்யத்ர ஆத்மஶப்தேந பரமாத்மந ஏவ க்ரஹணம், இதரவத் - யதா இதரத்ர *"ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத்। ஸ ஈக்ஷத லோகாந்நு ஸ்ருஜை"*(ஐ.1-1)[2] இத்யாதிஷு ஆத்மஶப்தேந பரமாத்மந ஏவ க்ரஹணம், தத்வத்।।

## 369.ஆத்மஶப்தாத் ச (3-3-15)

ஆத்மா எனும் சொல்லாலும்.

[1]**''வேறானவனாக உள்ளிருக்கும் ஆத்மா ஆனந்தமயன்''** என்று'ஆத்மா' எனும் சொல்லால் (ஆனந்தமயனைக்) குறிக்கிறது; அதனால், ஆத்மாவுக்கு தலை, பக்கம், வால் முதலியது கிடையாதாகையால், ப்ரிய-சிரஸ்த்வம் முதலியவை அந்த ஆத்மாவை எளிதாக புரிந்து கொள்வதன் பொருட்டு, உருவகம் செய்தது மட்டுமே என்று அறியப்படுகிறது.

*(தலை, பக்கம் கால் முதலியவை ஶரீரத்தின் பாகங்கள்; ஆத்மாவின் பாகங்கள் அல்ல; எனவே, ஆநந்தமயனான ஆத்மாவை ஒரு ஶரீரமாக உருவகப் படுத்தி தலை முதலியதை சொல்கிறது; உண்மையில் ஆத்மாவுக்கு தலை முதலியது கிடையாது)*



**கேள்வி -** ஆத்மா எனும் சொல்லானது ஆத்மாவாகாத (ப்ராணவாயு, மனஸ் ஆகிய) பொருள்களிலும் முன்பு சொல்லப்பட்டது - [2]**''வேறானவனாக உள்ளிருக்கும் ஆத்மா ப்ராணமயன்''**, [3]**''வேறானவனாக உள்ளிருக்கும் ஆத்மா மனோமயன்''** என்று; ஆகையால், (இங்கு) [4]**''வேறானவனாக உள்ளிருக்கும் ஆத்மா ஆநந்தமயன்''** என்னுமிடத்தில், 'ஆத்மா' எனும் சொல்லானது ஆத்மாவைப் பற்றியதாக எப்படி தீர்மானிக்கப் படும்?

**பதில் -** அதற்கு பதில் சொல்கிறார் -

## 370.ஆத்மக்ருஹீதி: இதரவத் உத்தராத்(3-3-16)

*வேறிடங்களில் போல [இங்கும்] ஆத்மாவை எடுத்துக்கொள்வது; பின்னுள்ள வாக்யத்தால்[அது ஆகும்]*

**ஆத்மக்ருஹீதி:** (பரமாத்மாவை எடுத்துக் கொள்ளுதல்) - [1]**''வேறானவனாக உள்ளிருக்கும் ஆத்மா ஆனந்தமயன்''** என்னுமிடத்தில் 'ஆத்மா' எனும் சொல்லால் பரமாத்மாவையே எடுத்துக் கொள்வது ஆகும்;

**இதரவத் -** வேறிடங்களில், [2]**''இந்த உலகப்பொருள் முதலில் ஒரே ஆத்மாவாக மட்டுமே இருந்தது; அது உலகங்களைப் படைக்கலாம் என்று பார்த்தது''** முதலியவற்றில் 'ஆத்மா' எனும் சொல்லால் பரமாத்மாவையே எடுத்துக் கொள்ளுதல் உள்ளது; அதுபோல இங்கும்.

அது ஏன்?

कुत एतत्? उत्तरात् - **''सोऽकामयत बहु स्यां प्रजायेय''**(तै.1.आन.7)[3] इति आनन्दमयविषयादुत्तराद्वाक्यात्॥ १६ ॥



## ३७१.अन्वयादिति चेत्, स्यादवधारणात् (३-३-१७)

पूर्वत्र प्राणमयादिष्वनात्मसु आत्मशब्दान्वयदर्शनात् नोत्तरान्निश्चेतुं शक्यत इति चेत्, स्यादवधारणात्। स्यादेव निश्चयः। कुतः? **अवधारणात्।** पूर्वत्रापि, **''तस्माद्वा एतस्मादात्मन आकाशः सम्भूतः''**(तै.1.आन.2)[4] इति परमात्मन एव बुद्ध्याऽवधारितत्वात्।

अन्नमयादन्तरे प्राणमये प्रथमं परमात्मबुद्धिरवतीर्णा; तदनन्तरं च प्राणमयादन्तरे मनोमये; ततो विज्ञानमये। तत आनन्दमये, प्रक्रान्ता परमात्मबुद्धिः तदन्तराभावात्, उत्तराच्च **''सोऽकामयत''**(तै.1.आन.7)[1] इति वाक्यात् प्रतिष्ठितेति, उपक्रमेऽप्यपरमात्मनि परमात्मबुद्ध्या आत्मशब्दान्वयः इति निरवद्यम्॥ १७ ॥

इति आनन्दाद्यधिकरणम् ॥ ४ ॥

---

குத ஏதத் *உத்தராத் - ''ஸோऽகாமயத* **ப**ஹு ஸ்யாம் ப்ரஜாயேய''(தை.1.ஆந.7)[1] இதி ஆநந்**த**மயவிஷயாத் உத்தராத் வாக்யாத்।। 16।।



## 371.அந்வயா**தி**தி சேத், ஸ்யா**த**வ**தா**ரணாத்(3-3-17)

பூர்வத்ர ப்ராணமயா**தி**ஷு அநாத்மஸு ஆத்மஶ**ப்தா**ந்வய**த**ர்ஶநாத் ந உத்தராந்நிஶ்சேதும் ஶக்யத இதி சேத் - *ஸ்யா**த**வ**தா**ரணாத்।* ஸ்யா**தே**வ நிஶ்சய:। குத:? *அவ**தா**ரணாத்।* பூர்வத்ராபி, *''தஸ்மாத்வா ஏதஸ்மா**தா**த்மந ஆகாஶ: ஸம்**பூ**த:''*(தை.1.ஆந.2)[2] இதி பரமாத்மந ஏவ **புத்**த்யா அவ**தா**ரிதத்வாத்।

அந்நமயா**த**ந்தரே ப்ராணமயே ப்ரதமம் பரமாத்ம**புத்தி**ரவதீர்ணா; த**த**நந்தரம் ச ப்ராணமயா**த**ந்தரே மநோமயே; ததோ விஜ்ஞாநமயே। தத ஆநந்**த**மயே, ப்ரக்ராந்தா பரமாத்ம**புத்தி**: த**த**ந்தரா**பா**வாத், உத்தராச்ச *''ஸோऽகாமயத''*(தை.1.ஆந.7)[3] இதி வாக்யாத் ப்ரதிஷ்டிதேதி, உபக்ரமேபி அபரமாத்மநி பரமாத்ம**புத்**த்யா ஆத்மஶ**ப்தா**ந்வய: இதி நிரவ**த்**யம்।।17।।

இதி ஆநந்**தா**த்ய**தி**கரணம் ।। 4 ।।

**உத்தராத் -** [1]**"அது பலவாக ஆவேன், பிறப்பேன் என விரும்பியது (ஸங்கல்பம் செய்தது)"** என்று ஆனந்தமயனைப் பற்றிய பின் வாக்யத்தால்.



## 371. அந்வயாத் இதி சேத் ஸ்யாத் அவதாரணாத் (3-3-17)

*[வேறு பொருளிலும், ஆத்மா எனும் சொல்] சேர்வதால் என்றால், [அங்கும்] ஆத்மாவே தெரிவதால், தீர்மானம் வரும்*

கேள்வி -

**அன்வயாத் (சேர்வதால்) -** முன்னிடங்களில் ப்ராணமயன் முதலியவற்றில், ஆத்மாவை விட வேறான பொருள்களிலும் கூட ஆத்மா எனும் சொல் சேர்வது காணப்படுகிறது; அதனால், பின் வாக்யத்தைக் கொண்டு நிச்சயிக்க முடியாது.

**இதி சேத் -** என்றால்,

பதில் - **ஸ்யாத் அவதாரணாத்**

**ஸ்யாத் -** நிச்சயம் (தீர்மானம்) வரும்தான்.

ஏன்?

**அவதாரணாத்** (புத்தியால் பற்றப்படுவதால்) - முன்னிடத்தில், [2]**"இந்த ஆத்மாவிலிருந்து ஆகாசம் உண்டாயிற்று"** என்று பரமாத்மாதான் புத்தியால் பற்றப்படுகிறான் (புத்தியில் விஷயமாக்கப் படுகிறான்) என்பதால்.

முதலில் அன்னமயத்துக்கு உள்ளிருக்கும் ப்ராணமயனிடம் பரமாத்மா எனும் எண்ணம் பிறந்தது. அதற்குப் பிறகு ப்ராணமயனுக்கு உள்ளிருக்கும் மனோமயனிடமும் பரமாத்மா எனும் எண்ணம் வந்தது; அதற்குப் பிறகு, (மனோமயனுக்கு உள்ளிருக்கும்) விஜ்ஞாநமயனிடமும் (பரமாத்மா எனும் எண்ணம்) வந்தது. பிறகு (விஜ்ஞாநமயனுக்கு உள்ளிருக்கும்) ஆனந்தமயனிடம் பரமாத்மா எனும் எண்ணம் வந்தது.

முதலில் ஆரம்பித்த பரமாத்மா எனும் எண்ணமானது, ஆனந்தமயனிடம் நிலைபெற்றது; ஏனெனில், ஆனந்தமயனுக்கு உள்ளே எதுவும் கிடையாது; மேலும், பின்னர், [3]**"அது விரும்பியது"** எனும் வாக்யம் உள்ளது; ஆகையால், ஆரம்பத்திலும் பரமாத்மாவை விட வேறான பொருளிலும் கூட, பரமாத்மா எனும் எண்ணத்தில்தான் 'ஆத்மா' எனும் சொல் சேர்கிறது. ஆகையால், தோஷமில்லை.

*(இங்கு அன்னமயம், ப்ராணமயம், முதலிய எல்லாவிடத்திலும் ஆத்மா என்ற சொல்லுக்கு பரமாத்மா என்றுதான் அர்த்தம்; அன்னமயம் முதலியதை பரமாத்மாவாக தவறாக நினைக்கிறான் என்று கருத்து; பிறகு ஆனந்தமயம் பரமாத்மா என்று முடிவு.*

*இந்த ஆத்மா பற்றிய விஷயத்தை, ஸ்ரீபாஷ்யம் முதல் பாக-புஸ்தகத்தில் பின் இணைப்பில் ஆனந்தமயவித்யை பற்றிய கட்டுரையில் விரிவாக காணலாம்.)*

**ஆனந்தாத்யதிகரணம் முற்றிற்று.**

# 87.கார்யாக்யாந-அதிகரணம்(3-3-5)

## முன் குறிப்பு

ஸர்வாபேத-அதிகரணத்தில் ப்ராணவித்யை பற்றி பார்த்தோம்; அதன் அங்கம் பற்றிய வேறொரு விஷயம் விசாரம் செய்ய வேண்டியுள்ளது.

ப்ராணன் ஆனது இந்த்ரியங்களிடம் கேட்டது, ''எனக்கு எது வஸ்த்ரமாகும்?'' என்று; இந்த்ரியங்கள் சொல்லின - ''ஜலம்தான் வஸ்த்ரம்'' என்று. எனவே, இப்-போதும் உண்ணுபவர்கள் உணவுக்கு முன்பும் பின்பும் ஆசமனம் செய்வார்கள் (கையில் ஜலம் எடுத்து மந்த்ரம் சொல்லி, பருகுவார்கள்) இதன் மூலம் ப்ராணனுக்கு உடை கிடைக்கிறது என்று வேதம் சொல்கிறது.

இதன் கருத்து - நாம் உண்ணும் உணவுதான் ப்ராணன் என வைத்துக் கொள்வோம்; நமக்கு முன்னும் பின்னும் மறைக்கும் உடை இருக்கிறது; உணவுக்கு முன்னும் பின்னும் ஆசமனத்தில் நாம் பருகும் நீர்தான் ப்ராணனுக்கு உடை ஆகும்; அதாவது, காற்றில் நீர்த்துளிகளும் நீராவியும் கலந்திருப்பது போல, இந்த ஆசமனநீர், ப்ராணவாயுவில் மேலோட்டமாகக் கலந்து அதை மறைக்கும் உடை போல ஆகும் என்று கருத்து.

இதன் மூலம் வேதத்தில் எதை விதிக்கிறது என்று விசாரம்.

உணவுக்கு முன்னும் பின்னும் ஆசமனம் செய்ய வேண்டும் என்பதை இங்கே விதிக்-கவில்லை; ஏனெனில், அது ஶாஸ்த்ரங்களில் ஏற்கனவே தெரிந்த விஷயம்தான்; தெரிந்த விஷயத்தை ஶாஸ்த்ரம் சொல்லாது; ஏனெனில், அதை சொல்வதால் பயன் கிடையாது.

ப்ராணவித்யைக்கு அங்கமாக ஆசமனம் செய்ய வேண்டும் என விதிக்கிறது என்று பூர்வபக்ஷம்.

ஆனால், அதுவும் விதிக்க வேண்டியதில்லை; எல்லா அனுஷ்டானத்துக்குமே முன்னும் பின்னும் ஆசமனம் செய்ய வேண்டும் என்பது ஶாஸ்த்ரங்களில் தெரிந்த விஷயம்தான்; எனவே, ஜலத்தை ஆடையாக கொண்டதாக ப்ராணனை எண்ணி உபாஸனம் செய்ய வேண்டும் என்பதுதான் விதிக்கப் படுகிறது.

ஆரம்பத்தில், 'ப்ராணனுக்கு ஜலம்தான் உடையாகும்' என்று சொல்லும்போது, ஜலத்தை ப்ராணனுக்கு உடையாக நினைக்க வேண்டும் என்றுதான் அர்த்தம் கிடைக்கும். இதுபோல, கடைசியிலுள்ள வாக்யமும் இதே கருத்தில்தான் உள்ளது.

''குளித்து விட்டு சாப்பிடு'' என்று சொன்னால், குளிக்க வேண்டும் என்று விதி ஆகும்; சாப்பிட வேண்டும் என்பது விதி அல்ல; அதுபோல, ஒரு ஶாகையில், ''இதை அறிபவன் உண்பதற்கு முன்-பின் ஆசமனம் செய்க'' என்று சொல்லும்போது, இதை அறிய வேண்-டும் (எண்ணி உபாஸனம் செய்ய வேண்டும்) என்றுதான் விதியாகும்.

# ८७.कार्याख्यानाधिकरणम् (३-३-५)

## ३७२.कार्याख्यानादपूर्वम् (३-३-१८)

पूर्वप्रस्तुतप्राणविद्याशेषभूतमिदानीं चिन्त्यते। छान्दोग्यवाजसनेयकयोः ज्येष्ठं च श्रेष्ठञ्च प्राणमुपास्यमुक्त्वा, प्राणस्य वासस्त्वेनाऽऽपोऽभिधीयन्ते।

- ✱ छान्दोग्ये तावत्, **"स होवाच, किं मे वासो भविष्यतीति। आप इति होचुः। तस्माद्वा एतदशिष्यन्तः पुरस्ताच्चोपरिष्टाच्चाद्भिः परिदधति। लम्भुको ह वासो भवति। अनग्नो भवति"**(छा.5-2-2)[1] इति।
- ✱ वाजसनेयके, **"किं मे वासः"**(बृ.8-1-14)[2] इति प्राणेन पृष्टा वागादयः ऊचुः, **"आपो वासः"**(बृ.8-1-14)[3] इति। **"तद्विद्वांसः श्रोत्रिया अशिष्यन्त आचामन्ति, अशित्वा चाचामन्ति, एतमेव तदनमनग्नं कुर्वन्तो मन्यन्ते।** (बृ.8-1-14)[4]
- ✱ **तस्मादेवंवित् अशिष्यन् आचामेत्, अशित्वा चाचामेत्। एतमेव तदनमनग्नं कुरुते"**(बृ.मा.8-1-14)[5] इति।

तत्र संशयः - किमत्राचमनं विधीयते, उतापां प्राणवासस्त्वानुसन्धानमिति।

---

# 87.கார்யாக்யாநாதிகரணம்(3-3-5)

## 372.கார்யாக்யாநாதபூர்வம்(3-3-18)

பூர்வப்ரஸ்துதப்ராணவித்யாஶேஷபூதம் இதாநீம் சிந்த்யதே। சாந்தோக்ய-வாஜஸநேயகயோ: ஜ்யேஷ்டம் ச ஶ்ரேஷ்டஞ்ச ப்ராணமுபாஸ்யமுக்த்வா, ப்ராணஸ்ய வாஸஸ்த்வேந ஆபோऽபிதீயந்தே।

- ✱ சாந்தோக்யே தாவத், *"ஸ ஹோவாச, கிம் மே வாஸோ பவிஷ்யதீதி। ஆப இதி ஹோசு:। தஸ்மாத்வா ஏததஶிஷ்யந்த: புரஸ்தாச்சோபரிஷ்டாச்சாத்பி: பரித ததி। லம்புகோ ஹ வாஸோ பவத்யநக்நோ பவதி"*(சா.5-2-2)[1] இதி।
- ✱ வாஜஸநயேகே, *"கிம் மே வாஸ:"*(ப்ரு.8-1-14)[2] இதி ப்ராணேந ப்ருஷ்டா வாகாதய: ஊசு:, *"ஆபோ வாஸ:"*(ப்ரு.8-1-14)[3] இதி। *"தத்வித்வாம்ஸ: ஶ்ரோத்ரியா அஶிஷ்யந்த ஆசாமந்தி, அஶித்வா சாசாமந்தி, ஏதமேவ ததநமநக்நம் குர்வந்தோ மந்யந்தே।"*(ப்ரு.8-1-14)[4]
- ✱ *"தஸ்மாதேவம்வித் அஶிஷ்யந் ஆசாமேத், அஶித்வா சாசாமேத்। ஏதமேவ ததநமநக்நம் குருதே"*(ப்ரு.மா.8-1-14)[5] இதி।

தத்ர ஸம்ஶய: - கிமத்ராசமநம் விதீயதே, உதாபாம் ப்ராணவாஸஸ்த்வாநுஸந்தாநமிதி।

# 87.கார்யாக்யாந-அதிகரணம்(3-3-5)

## 372.கார்யாக்யாநாத் அபூர்வம்(3-3-18)

*[வேறுப்ரமாணத்தால்] தெரியாததையே [ஶாஸ்த்ரம்] சொல்வதால், முன்னர் தெரியாத விஷயம் [விதிக்கப்படுவதாக] ஆகும்.*

**ஸங்கதி(விஷயதொடர்பு)**

முன்பு (போன அதிகரணத்துக்கு முன் அதிகரணத்தில்) சொல்ல ஆரம்பிக்கப்பட்ட ப்ராணவித்யைக்கு ஶேஷமான (அதைப் பற்றியதாய் எஞ்சியுள்ள) ஒன்று இப்போது விசாரிக்கப் படுகிறது.

**விஷயவாக்யம்**

சாந்தோக்ய-வாஜஸனேயக உபநிஷத்களில் ஜ்யேஷ்டமும் ஶ்ரேஷ்டமும் ஆக ப்ராணனை உபாஸனம் செய்யப்பட வேண்டியவனாக சொல்லிவிட்டு, ப்ராணனுக்கு வஸ்த்ரமாக ஜலம் சொல்லப்படுகிறது.

- சாந்தோக்யத்தில், [1]**''அந்த ப்ராணன், 'எனக்கு எது வஸ்த்ரமாக ஆகும்?' என்று கேட்டது; 'ஜலம்' என்று (வாக் முதலியவை) சொல்லின; அதனால்-தான் இப்போதும், உண்ணப் போகிறவர்கள், முன்பும் பின்பும் ஜலத்தினால் சுற்றி மறைக்கின்றனர்; (ப்ராணன்) வஸ்த்ரம் பெற்றவனாக ஆகிறான்; நக்-னன்(உடை அணியாதவன்) ஆகாமல் இருக்கிறான்''** என்று.
- வாஜஸனேயகத்தில், [2]**''எனக்கு எது வஸ்த்ரம்?** என்று ப்ராணனால் கேட்கப்-பட்ட வாக் முதலியவை [3]**''ஜலம்தான் வஸ்த்ரம்''** என்று சொல்லின; [5]**''இதை அறியும் வைதிகர்கள் உண்ணப் போகிறவர்களாய் ஆசமனம் செய்வர்; உண்டபிறகும் ஆசமனம் செய்வர்;அதன் மூலம் இந்த ப்ராணனை நக்னன் ஆகாமல் செய்வதாக எண்ணுகின்றனர்''**;
- (மாத்யந்தினஶாகை) [5]**''ஆகையால் இதை அறிபவன், உண்ணப் போகிற-வனாய் ஆசமனம் செய்க, உண்டபின்னும் ஆசமனம் செய்க; அதன் மூலம் இந்த ப்ராணனை நக்னன் ஆகாமல் செய்கிறான்''** என்று.

**ஸந்தேஹம்**

இதில் ஸந்தேஹம் - இங்கு ஆசமனம் விதிக்கப் படுகிறதா? அல்லது ஜலத்தை ப்ராணனின் வஸ்த்ரமாக எண்ணுதல் விதிக்கப் படுகிறதா?

"**अशिष्यन् आचामेदशित्वा चाचामेत्**" (बृ.मा.8-1-14)[1] इत्याचमने विधिप्रत्ययश्रवणात्, "**एतमेव तदनमनग्नं कुरुते**" (बृ.मा.8-1-14)[2] इति वेदने विधिप्रत्ययाभावात् अनग्नतासङ्कीर्तनस्य स्तुत्यर्थतयाऽन्वयोपपत्तेश्च, भोजनाङ्गस्याऽऽचमनस्य स्मृत्याचारप्राप्तत्वेन, विधिप्रत्ययबलात् प्राणविद्याङ्गमाचमनान्तरं विधीयते -

इति प्राप्ते ब्रूमः - आचमनीयानामपां प्राणस्य वासस्त्वानुसन्धानमेव (वेह) - **अपूर्वम्** - अप्राप्तमिह(प्तं) विधीयते, **कार्याख्यानात्** - अप्राप्ताख्यानात्; अप्राप्ताख्याने शब्दस्यार्थवत्त्वादित्यर्थः।

एतदुक्तं भवति - "**किं मे वासः? आपो वासः**" (बृ.8-1-14)[3] "**अद्भिः परिदधति**" (छा.5-2-2)[4] "**एतमेव तदनमनग्नं कुरुते**" (बृ.8-1-14)[5] इत्युपक्रमोपसंहारयोर्वाक्यस्यापां प्राणवासोदृष्टिपरत्वप्रतीतेः, आचमनस्य स्मृत्याचारप्राप्तत्वात्, आचमनमनूद्य आचमनीयास्वप्सु प्राणवासस्त्वानुसन्धानं विधीयते इति। अत एव च्छान्दोग्ये, "**तस्माद्वा एतदशिष्यन्तः पुरस्ताच्चोपरिष्टाच्चाद्भिः परिदधति**" (छा.5-2-2)[6] इति अद्भिः परिधानमेवोक्तम्, नाचमनम्॥१८॥

इति कार्याख्यानाधिकरणम् ॥ ५ ॥

---

"*அஶிஷ்யந் ஆசாமேதஶித்வா சாऽऽசாமேத்*" (ப்ரு.8-1-14)[1] இத்யாசமநே விதிப்ரத்யயஶ்ரவணாத், "*ஏதமேவ ததநமநக்நம் குருதே*" (ப்ரு.8-1-14)[2] இதி வேதநே விதிப்ரத்யயாபாவாத் அநக்நதாஸங்கீர்தநஸ்ய ஸ்துத்யர்ததயா அந்வயோபபத்தேஶ்ச, போஜநாங்கஸ்யாऽऽசமநஸ்ய ஸ்ம்ருத்யாசாரப்ராப்தத்வேந, விதிப்ரத்யயபலாத் ப்ராணவித்யாங்கம் ஆசமநாந்தரம் விதீயதே -

இதி ப்ராப்தே ப்ரூம: - ஆசமநீயாநாமபாம் ப்ராணஸ்ய வாஸஸ்த்வாநுஸந்தாநமேவ (வேஹ) *அபூர்வம்* - அப்ராப்தம் இஹ(ப்தம்) விதீயதே, *கார்யாக்யாநாத்* - அப்ராப்தாக்யாநாத்; அப்ராப்தாக்யாநே ஶப்தஸ்யார்தவத்த்வாத் இத்யர்த:।

ஏததுக்தம் பவதி "*கிம் மே வாஸ:*"? "*ஆபோ வாஸ:*" (ப்ரு. 8-1-14)[3] "*அத்பி: பரிதததி*" (ப்ரு.8-1-14)[4] "*ஏதமேவ ததநமநக்நம் குருதே*" (ப்ரு. 8-1-14)[5] இத்யுபக்ரமோபஸம்ஹாரயோ: வாக்யஸ்யாபாம் ப்ராணவாஸோத்ருஷ்டிபரத்வப்ரதீதே:, ஆசமநஸ்ய ஸ்ம்ருத்யாசாரப்ராப்தத்வாத், ஆசமநமநூத்ய ஆசமநீயாஸ்வப்ஸு ப்ராணவாஸஸ்த்வாநுஸந்தாநம் விதீயதே இதி। அத ஏவ சாந்தோக்யே, "*தஸ்மாத்வா ஏததஶிஷ்யந்த: புரஸ்தாச்சோபரிஷ்டாச்சாத்பி: பரிதததி*" (சா.5-2-2)[6] இதி அத்பி: பரிதாநமேவோக்தம், ந ஆசமநம்।।18।।

இதி கார்யாக்யாநாதிகரணம் ।। 5 ।।

**பூர்வபக்ஷம்**

(ஆசமனம் விதிக்கப்படுகிறது; ஏனெனில்) [1]**''உண்ணப் போகிறவனாய் ஆசமனம் செய்க, உண்டபின்னும் ஆசமனம் செய்க''** என்று ஆசமனம் செய்வதில் விதி-ப்ரத்யயம் (கட்டளை-உருபு) உள்ளது; [2]**''அதன் மூலம் இந்த ப்ராணனை நக்னன் ஆகாமல் செய்கிறான்''** என்று எண்ணுதலைப் பற்றி கட்டளை-உருபு எதுவும் இல்லை; மேலும், நக்னன் ஆகாமல் செய்வதாகச் சொன்னது துதிப்பதற்காக சொன்னதாகும் என்கிற முறையில் சேருவது சரியாகலாம்; ஆகையால், போஜனத்-துக்கு அங்கமான ஆசமனம் என்பது ஸ்ம்ருதியாலும், ஆசாரத்தாலும் தெரிந்த விஷயம்தான் என்பதால், விதி-ப்ரத்யயத்தின் (கட்டளை-உருபின்) பலத்தால், ப்ராணவித்யைக்கு அங்கமாக வேறொரு ஆசமனம் விதிக்கப் படுகிறது.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிடும்போது ஸித்தாந்தம் சொல்கிறோம்.

**அபூர்வம்** (முன்னர் தெரியாதது) - ஆசமனம் செய்யப்படும் ஜலத்தை ப்ராண-னுக்கு வஸ்த்ரமாக எண்ணுதல் என்பது முன்னர் (வேறு ப்ரமாணத்தால்) தெரியாதது; அதுவே இந்த இடத்தில் விதிக்கப் படுகிறது.

**கார்யாக்யாநாத் -** (வேறு ப்ரமாணம் மூலம்) தெரியாததைச் சொல்வதால்; தெரியாததைச் சொன்னாலே வாக்யம் பயனுள்ளதாகும் என்பதால் என்று பொருள்.

இது சொன்னதாக ஆகிறது -

- [3]**''எனக்கு எது வஸ்த்ரம்?'', ''ஜலம்தான் வஸ்த்ரம்'',**
- [4]**''ஜலத்தைக் கொண்டு சுற்றி மறைக்கிறான்'', [5]''அதன் மூலம் இந்த ப்ரா-ணனை நக்னன் ஆகாமல் செய்கிறான்''**

என்று ஆரம்பத்திலும் முடிவிலும் ஜலத்தை ப்ராணனுக்கு வஸ்த்ரமாக எண்-ணிப் பார்த்தலே வாக்யத்தின் நோக்கம் என்று தெரிகிறது; ஆசமனம் என்பதோ ஸ்ம்ருதியாலும் ஆசாரத்தாலும்(ஏற்கனவே)அறியப்பட்டது என்பதால், அந்த ஆசமனத்தை மீண்டும் எடுத்துரைத்து, ஆசமனம் செய்யப்பட வேண்டிய ஜலத்தை ப்ராணனுக்கு வஸ்த்ரமாக எண்ணுதல் விதிக்கப் படுகிறது - என்று.

அதனால்தான் சாந்தோக்யத்தில், [6]**''அதனால்தான் இப்போதும், உண்ணப் போகிறவர்கள், (உண்ணுவதற்கு) முன்பும் பின்பும் ஜலத்தினால் சுற்றி மறைக்-கின்றனர்''** என்று ஜலத்தினால் சுற்றி மூடி மறைப்பதுதான் சொல்லப்பட்டது; ஆசமனம் சொல்லப்படவில்லை.

*****************************

**கார்யாக்யானாதிகரணம் முற்றிற்று.**

# 88.ஸமாநாதிகரணம்(3-3-6)

## முன் குறிப்பு

சாண்டில்யவித்யை ஆனது, வாஜஸனேயகத்தில் (ஶதபத ப்ராஹ்மணத்தில்) அக்னி-ரஹஸ்யம் எனும் பாகத்திலும், பின்னர் அதே ஶாகையில் ப்ருஹதாரண்யக-உபநிஷத் பாகத்திலும் உள்ளது; அது ஒரே வித்யையா? வெவ்வேறா? என்று விசாரம்.

சாந்தோக்யத்தில் கூட சாண்டில்யவித்யை உள்ளது; ஆனால், அதுவும் இதுவும் ஒன்றுதான்; வெவ்வேறு ஶாகைகளில் சொன்ன வித்யைகள் ஒன்றாகலாம் என்று முதலிலேயே (3-3-1) சொல்லியாயிற்று. இங்கோ, ஒரே ஶாகையிலேயே இரண்டு இடத்தில் சொல்வதால் வித்யை வேறாகுமோ என விசாரம் வருகிறது.

பூர்வபக்ஷம் - இரண்டு இடத்திலும் சொன்ன விஷயங்கள் பெரும்பாலும் ஒன்றாகவே இருந்தாலும்,அக்னிரஹஸ்யத்தில் ஸத்ய-ஸங்கல்பத்வம் எனும் குணம் சொல்லி உள்-ளது; ப்ருஹதாரண்யகத்திலோ வஶீ, ஈச்வரன், அதிபதி, சாஸநம் செய்பவன் என்பதாக வேறு சில குணங்கள் உள்ளன. எனவே, ரூபம் வேறு; வித்யை வேறாகும்.

ஸித்தாந்தம்- ஸத்ய-ஸங்கல்பத்வம் எனும் குணத்தின் விரிவுதான் வஶீ முதலியதாக சொல்லப்பட்டு உள்ளது;

**வசித்வம்** - பொருள்களை தரித்து தனக்கு அதீனமாக வைக்கும் ஸங்கல்பம்.

**ஈச்வரத்வம்** - அந்தர்யாமியாக இருந்துகொண்டு ஆளுதல் எனும் ஸங்கல்பம்.

**அதிபதி(சேஷி)த்வம்**- பொருள்கள் மூலம் தான் பயன் பெறுவதற்கான ஸங்கல்பம்.

**சாஸனம்** - பொருள்களை செயல்படத் தூண்டும் ஸங்கல்பம்.

பரமாத்மா வெறும் ஸங்கல்பத்தால் மட்டுமே உலகை நடத்துகிறான்; அதுவும் எண்-ணியதை தடையின்றி நடத்தும் ஸத்யஸங்கல்பன்; ஸத்ய-ஸங்கல்பத்வம் எனும் அந்த குணத்தையே விரிவாக இப்படி பலவிதமாக உபநிஷத்விளக்குகிறது. எனவே, குணங்-களில் வேறுபாடு இல்லை; எனவே, வித்யை ஒன்றுதான்.

அல்லது பூர்வபக்ஷத்தில், வஶீ என்றால் பிறருக்கு வசப்பட்டவன் என்று அர்த்தம்; இது ஸத்யஸங்கல்பன் என்பதற்கு நேர் எதிரான குணம் என்பதால் வித்யை வேறாகும் என கேள்வி; ஸித்தாந்தத்தில், வஶீ என்றால் எல்லா பொருளையும் தன் வசத்தில் வைத்-திருப்பவன் என்று பொருள்; ஆகையால் முரண்பாடு இல்லை. அல்லது வஶீ என்றால் தன் விருப்பப்படி பக்தர்களுக்கு வசப்பட்டு இருப்பவன் என்றும் பொருள் சொல்லலாம்; இதில் முரண்பாடு இல்லை என்பர்.

இங்கே சொன்ன மனோமயன் முதலியதின் பொருளை (1-2-1) ஸர்வத்ர ப்ரஸித்த்-யதிகரணத்தில் காணலாம்.

# ८८. समानाधिकरणम् (३-३-६)

## ३७३. समान एवं चाभेदात् (३-३-१९)

★ वाजसनेयके अग्निरहस्ये शाण्डिल्यविद्याऽऽम्नाता, **''सत्यं ब्रह्मेत्युपासीत। अथ खलु क्रतुमयोऽयं पुरुषः''** इत्यारभ्य, **''स आत्मानमुपासीत मनोमयं प्राणशरीरं भारूपमाकाशात्मानं ....सत्यसङ्कल्पम्''**(अ.र.1-10-6)[1] इति।

★ तथा तस्मिन्नेव बृहदारण्यके पुनरपि शाण्डिल्यविद्याऽऽम्नायते, **''मनोमयोऽयं पुरुषो भास्सत्यः। तस्मिन्नन्तर्हृदये यथा व्रीहिर्वा यवो वा। स एष सर्वस्य वशी सर्वस्येशानः सर्वस्याधिपतिः सर्वमिदं प्रशास्ति, यदिदं किञ्च''**(बृ.7-6-1)[2] इति।

तत्र संशयः - किमत्र विद्या भिद्यते, उत नेति।

संयोगचोदनाख्यानामविशेषेऽपि वशित्वाद्युपास्यगुणभेदेन रूपभेदात् विद्याभेदः,

इति प्राप्ते उच्यते - **समान एवमिति।** यथाऽग्निरहस्ये मनोमयप्राणशरीरभारूपसत्यसङ्कल्पत्वगुणगणः श्रुतः, एवं बृहदारण्यकेऽपि मनोमयत्वादिके समाने सति अधिकस्य वशित्वादेश्च सत्यसङ्कल्पत्वगुणाभेदान्न रूपभेदः। अतो विद्यैक्यम्॥ १९ ॥

इति समानाधिकरणम् ॥ ६ ॥

---

# 88. ஸமாநாதிகரணம்(3-3-6)

## 373.ஸமாந ஏவம் சாபேதாத் (3-3-19)

★ வாஜஸநேயகே அக்நிரஹஸ்யே ஶாண்டில்யவித்யா ஆம்நாதா, *''ஸத்யம் ப்ரஹ்மேத்யுபாஸீத। அத கலு க்ரதுமயோऽயம் புருஷ:''* இத்யாரப்ய, *''ஸ ஆத்மாநமுபாஸீத மநோமயம் ப்ராணஶரீரம் பாரூபமாகாஶாத்மாநம் ஸத்யஸங்கல்பம்''*(அ.ர.1-10-6)[1] இதி।

★ ததா தஸ்மிந்நேவ ப்ருஹதாரண்யகே புநரபி ஶாண்டில்யவித்யாऽऽம்நாயதே, *''மநோமயோऽயம் புருஷோ பா:ஸத்யம்। தஸ்மிந்நந்தர்ஹ்ருதயே யதா வ்ரீஹிர்வா யவோ வா। ஸ ஏஷ ஸர்வஸ்ய வஶீ ஸர்வஸ்யேஶாந: ஸர்வஸ்யாதிபதி: ஸர்வமிதம் ப்ரஶாஸ்தி, யதிதம் கிஞ்ச''* (ப்ரு.7-6-1)[2] இதி।

தத்ர ஸம்ஶய: - கிமத்ர வித்யா பித்யதே, உத நேதி।

ஸம்யோகசோதநாக்யாநாம் அவிஶேஷேऽபி வஶித்வாத்யுபாஸ்யகுணபேதேந ரூபபேதாத் வித்யாபேத:,

இதி ப்ராப்தே உச்யதே -*ஸமாந ஏவமிதி।* யதா அக்நிரஹஸ்யே மநோமய-ப்ராணஶரீர-பாரூப-ஸத்யஸங்கல்பத்வகுணகண: ஶ்ருத:, ஏவம் ப்ருஹதாரண்யகேऽபி மநோமயத்வாதிகே ஸமாநே ஸதி அதிகஸ்ய வஶித்வாதேஶ்ச ஸத்யஸங்கல்பத்வகுணாபேதாந்ந ரூபபேத:। அத: வித்யைக்யம்।।19।।

இதி ஸமாநாதிகரணம் ।। 6 ।।

# 88.ஸமாநாதிகரணம்(3-3-6)

## 373.ஸமாநே ஏவம் ச அபேதாத்(3-3-19)

*இப்படி ஸமானமாக ஆகும் போது, வித்யாசம் இல்லாதபடியால் [வித்யை ஒன்றே]*

### விஷயவாக்யம்

- வாஜஸனேயகத்தில் அக்னிரஹஸ்யத்தில் சாண்டில்யவித்யை ஓதப்படுகிறது - [1]**"ஸத்யமே ப்ரஹ்மம் என்று உபாஸனம் செய்க, இந்த மனிதன் உபாஸனமயன் (எப்போதும் சிந்திப்பதையே முக்யமாகக் கொண்டவன்)"** என்று ஆரம்பித்து, **"அவன் மனோமயனும், ப்ராணஶரீரனும், ஒளிரும் உருவினனும், ஆகாசாத்மாவும் ஆன பரமாத்மாவை உபாஸனம் செய்ய வேண்டும்"** என்று.
- அப்படியே அந்த வாஜஸனேயகத்திலேயே ப்ருஹதாரண்யகத்தில் மீண்டும் சாண்டில்யவித்யை ஓதப்படுகிறது - [2]**"மனோமயன் ஆன இந்த புருஷன் ஒளிர்பவன், ஸத்யஸ்வரூபன் (மாற்றம் இல்லாதவன்), அங்கே ஹ்ருதயத்தின் உள்ளே நெல் போல, யவம் போல (இருக்குமிடத்தை இட்டு சிறிய அளவினனாக) இருப்பவன், இவன் எல்லாவற்றுக்கும் வசீ, எல்லாவற்றுக்கும் ஈச்வரன், எல்லாவற்றுக்கும் அதிபதி (சேஷீ); எது இருக்கிறதோ, அந்த எல்லாவற்றையும் ஸங்கல்பத்தால் ஆள்கிறான்"** என்று.

### ஸந்தேஹம்

இங்கு ஸந்தேஹம் - இங்கு வித்யை வேறுபடுமா? அல்லது இல்லையா? என்று.

### பூர்வபக்ஷம்

வித்யை வேறாகும்; ஏனெனில், ஸம்யோகம், சோதனா, ஸம்ஜ்ஞா (பலன்-தொடர்பு, கட்டளை, பெயர்) ஆகியவை வித்யாசம் இல்லாமல் இருந்தாலும், உபாஸனம் செய்யப்பட வேண்டிய வசித்வம் முதலிய குணங்கள் வேறாவதால் ரூபம் (உபாஸன-விஷயம்) வேறாகிறது.

### ஸித்தாந்தம்

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **ஸமானே ஏவம்** என.

**ஏவம் (இப்படி)** - எப்படி அக்னிரஹஸ்யத்தில் மனோமயத்வம், ப்ராணஶரீரத்வம், பாரூபத்வம், ஸத்யஸங்கல்பத்வம் எனும் குணக்குழு சொல்லப்படுகிறதோ, அப்படி

**ஸமானே (ஸமானமாக ஆகும்போது)** - ப்ருஹதாரண்யகத்திலும் மனோமயத்வம் முதலியது சமானமாக ஆகும்போது,

**அபேதாத் (வேற்றுமை இல்லாததால்)** - அதிகமான வசித்வம் முதலியது, ஸத்யஸங்கல்பத்வம் எனும் குணத்தை விட வேறானது அல்ல என்பதால், ரூபம் வேறு அல்ல; ஆகையால், வித்யை ஒன்றுதான்.

***********************************

**ஸமாநாதிகரணம் முற்றிற்று.**

# 89.ஸம்பந்தாதிகரணம்(3-3-7)

## முன் குறிப்பு

ப்ருஹதாரண்யகத்தில் வ்யாஹ்ருதிவித்யை உள்ளது; வ்யாஹ்ருதி மந்த்ரத்தை ஶரீரமாகக் கொண்டதாக ஸத்யப்ரஹ்மத்தை உபாஸனம் செய்ய வேண்டும்; அதில் இரு விஷயங்கள் - 1. ஆதித்யமண்டலத்தின் இருக்கும் ஸத்யப்ரஹ்மத்துக்கு 'அஹ:' என்று ஒரு ரஹஸ்ய-பெயர்; ப்ரகாசமானது என்று அர்த்தம் 2. கண்ணில் இருக்கும் ஸத்யப்ரஹ்-மத்துக்கு'அஹம்' என்று ரஹஸ்ய-பெயர்; நான் என்று அர்த்தம்.

இதில், ஒரு இடத்தில் சொன்ன ரஹஸ்யபெயரை மற்ற இடத்திலும் எண்ணிக் கொள்ள-லாமா? கூடாதா? என்று விசாரம்; இந்த இரண்டு இடத்திலும் சொன்னது, ஒரே வித்யை-யானால், பெயரை பொதுவாக எண்ணலாம்; வெவ்வேறு வித்யையானால், அந்தந்த இடத்தில் மட்டுமே அந்தந்த பெயரை எண்ணிக் கொள்ள வேண்டும்.

பூர்வபக்ஷம் - இரண்டும் ஒரே வித்யைதான்; வ்யாஹ்ருதி-ஶரீரத்தைக் கொண்ட ஸத்ய-ப்ரஹ்ம உபாஸனம்தான் இரண்டிலும் உள்ளது; ப்ரஹ்மத்துக்கு, ஆதித்யன், கண் என இரண்டு இடங்கள் சொல்லியிருந்தாலும், அந்த இடங்களை உபாஸனம் செய்ய வேண்டியதில்லை; எனவே, உபாஸன-விஷயத்தில் வித்யாசம் இல்லை;அல்லது ஒரு மனிதனுக்கே இரு இடங்களில் இரு பெயர்கள் இருந்தாலும், அது நியமம் கிடையாது என்பது போல, ஒரு இடத்தில் சொன்ன ரஹஸ்ய-பெயரை வேறிடத்திலும் எண்ணலாம்.

ஸித்தாந்தம் - இரண்டும் வேறு வித்யைகள்;எல்லா இடத்திலும் இருக்கும் ப்ரஹ்மத்-துக்கு இரு இடங்களைச் சொல்வது, அப்படி உபாஸனம் செய்ய வேண்டும் என்பதற்காக மட்டுமே ஆகும்; எனவே,ஆதித்யமண்டலத்தில் இருப்பவனாக ப்ரஹ்மத்தை உபாஸனம் செய்வது ஒரு வித்யை; கண்ணில் இருப்பவனாக அவனை உபாஸனம் செய்வது மற்றொரு வித்யை; எனவே, வித்யைகள் வேறாவதால், அந்தந்த இடத்தில் சொன்ன ரஹஸ்ய-பெயரை அந்தந்த இடத்தில் எண்ணிக் கொள்ள வேண்டும்.

ஆரம்பத்தில், ''ஆதித்யனில் இருக்கும் புருஷனும், கண்ணில் இருக்கும் புருஷனும் இருவரும்'' என்று, இரண்டு விஷயங்களாவதை தெளிவாக சொல்கிறது; பின்னர், ஒவ்-வொருவரைப் பற்றி சொல்லும்போதும், அந்தந்த உபாஸனத்துக்கு பலன் தனித்தனியாக சொல்கிறது;

வேதம் சொல்கிறது, ''ஸூர்யமண்டலத்தில் இருக்கும் பரமாத்மாவுக்கு என்ன ரூபமோ, அதுவே கண்ணில் இருக்கும் பரமாத்மாவுக்கும் ஆகும்'' என்று; இதனால், இரண்டு இடங்களிலும் உள்ள பரமாத்மா பற்றிய வித்யைகள் வேறுவேறு என்று தெரிகிறது; இரண்டும் ஒன்றானால், அதனுடைய குணங்கள் இதற்கு தானாகவே இருப்பதாக கிடைத்துவிடும்! அப்படியானால், அதை வேதம் எடுத்து சொல்ல வேண்டிய தேவை-யில்லை! ஆகையால், தானாக இந்த விஷயம் கிடைக்கவில்லை என்றாகிறது; எனவே, ஒரே வித்யை இல்லை என்று தெரிய வருகிறது.

வித்யைகள் வேறானாலும் வ்யாஹ்ருதிவித்யை என்று ஒரே பெயர் ஆகலாம். (ஸூத்ரம் - 3-1-9 காண்க).

# ८९. सम्बन्धाधिकरणम् (३-३-७)

## ३७४.सम्बन्धादेवमन्यत्रापि (३-३-२०)

बृहदारण्यके श्रूयते, **''सत्यं ब्रह्म''**(बृ.7-4-2)[1] इत्युपक्रम्य।

* **''तद्यत् सत्यमसौ स आदित्यो य एष एतस्मिन् मण्डले पुरुषः, यश्चायं दक्षिणेऽक्षन्''**(बृ.7-5-1)[2] इत्युपक्रम्य आदित्यमण्डलेऽक्षणि च सत्यस्य ब्रह्मणो व्याहृतिशरीरत्वेनोपास्यत्वमुक्त्वा,
* **''तस्योपनिषदहरिति''**(बृ.7-5-3)[3] अधिदैवतम् -
* **''तस्योपनिषदहमिति''**(बृ.7-5-3)[4] अध्यात्मम् -

इति द्वे उपनिषदौ - रहस्यनामनी उपासनशेषतया आम्नायेते।

ते किं यथाश्रुतस्थानविशेषनियतत्वेन व्यवस्थिते, उतोभयत्रोभे अनियमेनेति संशये,

सत्यस्य व्याहृतिशरीरस्यैवोपास्यस्य ब्रह्मणो द्वयोः स्थानयोः सम्बन्धादुपास्यैक्येन रूपाभेदात् संयोगाद्यभेदाच्च विद्यैक्यादनियमेनेति प्राप्तम्। तदिदमुच्यते - **सम्बन्धादेवमन्यत्रापीति**।

---

# 89. ஸம்பந்தாதிகரணம் (3-3-7)

## 374.ஸம்பந்தாதேவமந்யத்ராபி (3-3-20)

ப்ருஹதாரண்யகே ஶ்ரூயதே, *''ஸத்யம் ப்ரஹ்ம''*(ப்ரு.7-4-2)[1] இத்யுபக்ரம்ய।

* *''தத்யத் ஸத்யமஸௌ ஸ ஆதித்யோ ய ஏஷ ஏதஸ்மிந் மண்டலே புருஷ:, யஶ்சாயம் தக்ஷிணேऽக்ஷந்''*(ப்ரு.7-5-1)[2] இத்யுபக்ரம்ய ஆதித்யமண்டலே அக்ஷணி ச ஸத்யஸ்ய ப்ரஹ்மணோவ்யாஹ்ருதிஶரீரத்வேநோபாஸ்யத்வமுக்த்வா,
* *''தஸ்யோபநிஷதஹரிதி''*(ப்ரு.7-5-3)[3] அதிதைவதம்,
* *''தஸ்யோபநிஷதஹமிதி''*(ப்ரு.7-5-4)[4] அத்யாத்மம்

இதி த்வே உபநிஷதௌ - ரஹஸ்யநாமநீ உபாஸநஶேஷதயா ஆம்நாயேதே।

தே கிம் யதாஶ்ருதஸ்தாநவிஶேஷநியதத்வேந வ்யவஸ்திதே, உத உபயத்ர உபே அநியமேநேதி ஸம்ஶயே,

ஸத்யஸ்ய வ்யாஹ்ருதிஶரீரஸ்யைவோபாஸ்யஸ்ய ப்ரஹ்மண: த்வயோ: ஸ்தாநயோ: ஸம்பந்தாத் உபாஸ்யைக்யேந ரூபாபேதாத் ஸம்யோகாத்யபேதாச்ச வித்யைக்யாத் அநியமேநேதி ப்ராப்தம்। ததிதமுச்யதே - *ஸம்பந்தாதேவமந்யத்ராபீதி।*

# 89.ஸம்பந்தாதிகரணம்(3-3-7)

## 374.(ஸூ)ஸம்பந்தாத் ஏவம் அந்யத்ர அபி(3-3-20)

*இப்படி [முன் அதிகரண முறையில்] வேறிடத்திலும், [ஒரேப்ரஹ்மத்தின்] தொடர்பு ஆவதால், [வித்யை ஒன்றாவதால், பெயரும் ஒன்றாகும்].*

**விஷயவாக்யம்**

[1]**''ஸத்யம் ப்ரஹ்ம''** என்று ஆரம்பித்து, ப்ருஹதாரண்யகத்தில் ஓதப்படுகிறது.

- [2]**''ஸத்யம் என்பது எதுவோ, அவன்தான், யாரொருவன் இந்த (ஸூர்ய) மண்டலத்தில் உள்ள புருஷனோ, யாரொருவன் வலது கண்ணில் இருக்கும் புருஷனோ அந்த ஆதித்யன்''** என்று ஆரம்பித்து, ஆதித்யமண்டலத்திலும், கண்ணிலும் ஸத்ய-ப்ரஹ்மம் ஆனது வ்யாஹ்ருதியை ஶரீரமாகக் கொண்டதாக உபாஸநம் செய்யப்பட வேண்டும் என்று சொல்லி,
- தேவதையில் (ஸூர்யனிடத்தில்) [3]**''அதற்கு அஹ: என்று உபநிஷத் என்றும்,**
- ஶரீரத்தில்(கண்ணில்) [4]**''அதற்கு அஹம் என்று உபநிஷத் என்றும்**

இரண்டு உபநிஷத்கள் - இரண்டு ரஹஸ்யநாமங்கள் உபாஸனத்துக்கு அங்கமாக ஓதப்பட்டன.

**ஸந்தேஹம்**

அந்த இரு பெயர்களும் வேதத்தில் சொன்னபடியான தனி-இடத்தில் (ஒவ்வொரு இடத்தில்) மட்டும் இருப்பதாக, (மற்றைய இடத்தில் சேராதபடி) வரையறுக்கப் படுபவையா? அல்லது இரண்டு பெயரும் இரண்டு இடங்களில் நியமம் இல்லாமல் ஆகுமோ? என்று ஸந்தேஹம் வரும்போது,

(முன் குறிப்பில் விளக்கம் உள்ளது)

**பூர்வபக்ஷம்**

நியமம் இல்லாமல் (வரும்); ஏனெனில், வ்யாஹ்ருதிகளை ஶரீரமாகக் கொண்டுள்ள ஸத்ய-ப்ரஹ்மம்தான் உபாஸன-விஷயமாக இரண்டு இடங்களிலும் சேர்வதால், உபாஸன-விஷயம் ஒன்றே ஆகிறது; அதனால், ரூபத்தில் வித்யாசம் இல்லை; அப்படியே ஸம்யோகம் முதலியவை ஒன்றாக இருப்பதாலும், ஒரே வித்யை ஆகும்; அதனால், நியமம் இல்லாமல் ஆகும் (இரு பெயர்களும் இரு இடத்தும் வரும்) என்பதாகநேரிடுகிறது.

அது சொல்லப்படுகிறது - **''ஸம்பந்தாத் ஏவம் அந்யத்ர அபி''** என்று.

यथा मनोमयत्वादिगुणविशिष्टस्यैकत्वादुपास्यैक्येन रूपाभेदात् विद्यैक्यात् गुणोपसंहारः, एवमन्यत्राक्ष्यादित्यसम्बन्धिनो ब्रह्मणः सत्यस्यैकत्वेन विद्यैक्यादुभयोरुभयत्रोपसंहार इति॥२०॥



एवं प्राप्ते प्रचक्ष्महे -

## ३७५.न वा विशेषात् (३-३-२१)

**न वै**तदस्ति, यत् विद्यैक्यादुपसंहारः इति। कुतः? **विशेषात्** - उपास्यरूपविशेषात् ब्रह्मण एकत्वेऽप्येकत्राऽऽदित्यमण्डलस्थतया उपास्यत्वम्, इतरत्राक्ष्याधारतयोपास्यत्वमिति स्थानसम्बन्धित्वभेदेन रूपभेदात् विद्याभेदः।

नैवं शाण्डिल्यविद्यायाः उपास्यस्थानं भिद्यते; उभयत्र हृदयाधारत्वेनोपास्यत्वात्। अतो व्यवस्थिते इति॥२१॥



---

யதா மநோமயத்வாதிகுணவிஶிஷ்டஸ்யைகத்வாத் உபாஸ்யைக்யேந ரூபாபேதாத் வித்யைக்யாத் குணோபஸம்ஹார:, ஏவம் அந்யத்ர அக்ஷ்யாதித்யஸம்பந்திநோ ப்ரஹ்மண: ஸத்யஸ்ய ஏகத்வேந வித்யைக்யாத் உபயோ: உபயத்ரோபஸம்ஹார: இதி।। 20 ।।



ஏவம் ப்ராப்தே ப்ரசக்ஷ்மஹே-

## 375.ந வா விஶேஷாத் (3-3-21)

ந வைததஸ்தி, யத் வித்யைக்யாதுபஸம்ஹார: இதி। குத:? *விஶேஷாத்* - உபாஸ்யரூபவிஶேஷாத் ப்ரஹ்மண ஏகத்வேऽப்யேகத்ர ஆதித்யமண்டலஸ்ததயா உபாஸ்யத்வம், இதரத்ர அக்ஷ்யாதாரதயா உபாஸ்யத்வமிதி ஸ்தாநஸம்பந்தித்வபேதேந ரூபபேதாத் வித்யாபேத:।

நைவம் ஶாண்டில்யவித்யாயா: உபாஸ்யஸ்தாநம் பித்யதே, உபயத்ர ஹ்ருதயாதாரத்வேந உபாஸ்யத்வாத்। அதோ வ்யவஸ்திதே இதி।। 21 ।।



**ஏவம் (இப்படி) -** (போன அதிகரணத்தில்) மனோமயத்வம் முதலிய குணங்களுடன் கூடியவன் (பரமாத்மா) ஒருவனே ஆனபடியால், உபாஸன-விஷயம் ஒன்றே என்பதால், ரூபம் ஒன்றே ஆகும் என்பதால், வித்யை ஒன்றாகும் என்பதால், குணங்கள் சேர்த்துக் கொள்ளப்படுதல் ஆகும் என்பது எப்படியோ, அப்படியே,

**அந்யத்ர அபி -** வேறிடத்திலும் (ஒரு இடத்தில் சொன்ன பெயர் வேறிடத்திலும் ஆகும்).

**ஸம்பந்தாத்** (ஒரே விஷயத்தின் ஸம்பந்தம் ஆவதால்) - கண், ஆதித்யன் ஆகியவருடன் ஸம்பந்தப்பட்ட ஸத்ய-ப்ரஹ்மம் ஒன்றே ஆவதால்,

வித்யை ஒன்றாகும்; அதனால், இரண்டு பெயர்களும் இரண்டு இடத்திலும் சேர்த்துக்கொள்வது ஆகும்.



**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்கிறோம் -

**375. ந வா விஶேஷாத் (3-3-21)**

*[ஒரே வித்யை என்பது] இல்லை; ரூபம் வேறாவதால்.*

**ந வா (இல்லை) -** ஒரே வித்யை என்று சொன்னது எதுவோ, அது இல்லை.

ஏன்?

**விஶேஷாத் -** உபாஸனம் செய்யப்பட வேண்டிய ரூபம் வேறாவதால்.

ப்ரஹ்மம் ஒன்றே ஆனாலும், ஓரிடத்தில் ஸூர்யமண்டலத்தில் இருப்பவனாக உபாஸனம் செய்யப்பட வேண்டும்; வேறொரு இடத்தில், கண்ணை இருப்பிடமாகக் கொண்டு (கண்ணில்) இருப்பவனாக உபாஸனம் செய்யப்பட வேண்டும்; எனவே, இடங்களின் ஸம்பந்தம் வேறாவதால், உபாஸன-ரூபம் வேறாகும்; அதனால், வித்யை வேறாகும்.

சாண்டில்ய வித்யையில் இப்படி உபாஸன-விஷயமான ஸ்தானம் (இடம்) வேறுபடவில்லை; ஏனெனில், அக்னிரஹஸ்யம், ப்ருஹதாரண்யகம் எனும் இரண்டு இடங்களிலும் ஹ்ருதயத்தை இருப்பிடமாகக் கொண்டு (ஹ்ருதயத்தில்) இருப்பவனாக (பரமாத்மா) உபாஸன-விஷயம் ஆகிறான்.

அதனால், (இங்கு இரு பெயர்கள்) வரையறுக்கப் பட்டவையே.



## ३७६.दर्शयति च (३-३-२२)

दर्शयति चाक्ष्याधाराऽऽदित्याधारयोर्गुणानुपसंहारम्, **"तस्यैतस्य तदेव रूपम्, यदमुष्य रूपम्"**(छा.1-2-8)[1] इत्यादिना रूपाद्यतिदेशेन। स्वतो ह्यप्राप्तौ अतिदेशेन प्राप्त्यपेक्षा॥२२॥

इति सम्बन्धाधिकरणम्॥ ७ ॥

---

## 376.தர்ஶயதி ச (3-3-22)

***தர்ஶயதி ச*** அக்ஷ்யாதாராऽऽதித்யாதாரயோ: குணாநுபஸம்ஹாரம், *"தஸ்யைதஸ்ய ததேவ ரூபம், யதமுஷ்ய ரூபம்"*(சா.1-2-8)[1] இத்யாதிநா ரூபாத்யதிதேஶேந। ஸ்வதோ ஹ்யப்ராப்தௌ அதிதேஶேந ப்ராப்த்ய-பேக்ஷா।। 22 ।।

இதி ஸம்பந்தாதிகரணம்।। 7 ।।

## 376.தர்ஶயதி ச (3-3-22)

**வேதம் காண்பிக்கிறதும் கூட**

கண்ணை இருப்பிடமாகக் கொண்டு இருப்பவனுக்கும், ஸூர்யனை இருப்பிடமாகக் கொண்டு இருப்பவனுக்கும் குணங்களை சேர்த்துக் கொள்ளுதல் கூடாது என்பதை வேதம் காண்பிக்கிறது - [1]**''ஸூர்யனில் இருக்கும் அவனுக்கு என்ன ரூபமோ, அதுவே கண்ணில் இருக்கும் இவனுக்கும் ரூபம்''** என்பது முதலால் ரூபம் முதலியதை அதிதேசம் செய்வதன் மூலம் (காட்டுகிறது). தானாக கிடைக்காதபடியால்தானே, அதிதேசம் மூலம் (அந்த குணங்களை) பெறவைத்தல் தேவையாகிறது!

✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻

**ஸம்பந்தாதிகரணம் முற்றிற்று.**

# 90.ஸம்ப்ருத்யதிகரணம்(3-3-8)

## முன் குறிப்பு

ஒரு வேதவாக்யத்தில் ப்ரஹ்மத்திடம் இரு குணங்களை சொல்கிறது - 1. ஸம்ப்ருதி - சிறந்த சக்திகள் சேர்ந்திருத்தல்; 2. த்யு-வ்யாப்தி - ஆகாசத்தை பரவி இருத்தல். இந்த இரு குணங்களை எல்லா வித்யைகளிலும் சேர்த்து உபாஸனம் செய்ய வேண்டுமா? அல்லது சில வித்யைகளில் மட்டுமா? என்று விசாரம்.

பூர்வபக்ஷம் - இந்த வேதவாக்யமானது, ஒரு வித்யையின் நடுவே சொல்லப்படவில்லை; பொதுவிலே சொன்ன வாக்யம் ஆகும்; அதனால், எல்லா வித்யையிலும் சேர்த்துக் கொள்ள வேண்டும்; (பூர்வமீமாம்ஸா ஶாஸ்த்ரப்படி, ஒரு விஷயத்தைச் சொல்ல ஆரம்பித்து, அதற்கு இடையில்வேறு சில அங்கங்களைச் சொன்னால், அவற்றை அந்த விஷயத்துடன் சேர்க்கலாம்; அப்படி இல்லாமல் பொதுவே சொல்லும் அங்கங்களை எல்லா விஷயத்துடனும் சேர்க்க வேண்டும்)

ஸித்தாந்தம் - அர்த்தத்தை வைத்துப் பார்த்தால், சில வித்யைகளில் இவற்றை சேர்க்க முடியாது. எனவே, அங்கு சேராது. பூர்வமீமாம்ஸாஶாஸ்த்ரத்தில் சொன்ன லிங்கம் (அர்த்த-ஸாமர்த்யம்) எனும் ப்ரமாணத்தை இட்டு இப்படி சொல்லலாம்.

த்யு-வ்யாப்தி (ஸ்வர்க்கத்தை பரவி இருத்தல்) எனும் குணமானது, சாண்டில்ய-வித்யை, தஹரவித்யை முதலியதில் சேராது; ஏனெனில், அந்த வித்யைகளில் ஹ்ருதயம் எனும் சிறிய இடத்தில் இருப்பவனாக (சிறிய அளவினனாக) ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்யவேண்டும்; அப்போது, அவனையே பெரிய இடத்தில் ஆகாசத்தில் பரவி இருப்ப-வனாக உபாஸனம் செய்வது முடியாது.

ஸம்ப்ருதி எனும் குணமும் இந்த த்யு-வ்யாப்தியுடன் சேர்த்தே சொல்லியிருப்பதால், இதனுடன் சேர்ந்தே வரும்; சாண்டில்யவித்யை, முதலியதில் த்யு-வ்யாப்தி சேராத-படியால், ஸம்ப்ருதியும் சேர்த்துக் கொள்ளக் கூடாது.

(உ-ம்) ஆகாசம் அளவற்றது; அதையே, நான்கு சுவர்களுக்கு இடையில் கணக்கிட்டு, ஒரு வீடு என்று அளவிட்டு சொல்கிறோம்; அப்படி அளவிட்டு பார்க்கும்போது வேறொரு அளவினை இதனுடன் சேர்த்து கணக்கிட முடியாது; பொதுவாக ஆகாசம் அளவற்றது என்று சொல்லலாம்.

அதுபோல, ப்ரஹ்மம் அளவற்றது என்பதுதான் உண்மையான இயல்பு; அதையே ஹ்ருதயத்தில் இருப்பவனாக உபாஸனம் செய்யும்போது அளவுபட்டதாக ஆகும்; அப்போது வேறொரு அளவையிட்டு உபாஸநம் செய்ய முடியாது; எனவே, சாண்டில்ய வித்யை முதலியதில் த்யு-வ்யாப்தி சேராது; ஆனால், அதே சமயம் ப்ரஹ்மம் அனந்த-மானது - இயல்பாக அளவற்றது என உபாஸனம் செய்யலாம்.

காண்க - தஹரவித்யை - தஹராதிகரணம்(1-3-5)- ப்ரதானாதிகரணம்(3-3-18); சாண்டில்யவித்யை - ஸர்வத்ரப்ரஸித்த்யதிகரணம்(1-2-1)-, ஸமாநாதிகரணம்(3-3-6).

# ९०.सम्भृत्यधिकरणम् (३-३-८)

## ३६७.सम्भृतिद्युव्याप्त्यपि चातः (३-३-२३)

तैत्तिरीयके, राणायणीयानां खिलेषु च, "**ब्रह्म ज्येष्ठा वीर्या सम्भृतानि ब्रह्माग्रे ज्येष्ठं दिवमाततान। ब्रह्म भूतानां (ऋतस्य ब्रह्म (तै)) प्रथमोत जज्ञे तेनार्हति ब्रह्मणा स्पर्धितुं कः**"(तै.ब्रा.1-8-7-26)[1] इति ब्रह्मणि ज्येष्ठानां वीर्याणां सम्भृतिः द्युव्याप्तिश्चेत्यादिगुणजातमाम्नातम्।

तेषामुपासनविशेषमनारभ्याधीतानां गुणानां सर्वासु विद्यासूपसंहारे प्राप्ते,

उच्यते - **सम्भृतिद्युव्याप्त्यपि** इति। सम्भृतिद्युव्याप्तीति समाहारद्वन्द्वत्वादेकवद्भावः। सम्भृत्यादिकमनारभ्याधीतमपि **अत** एव स्थानभेदात् व्यवस्थाप्यम्; न सर्वत्रोपसंहर्तव्यम्।

कथमनारभ्याधीतानां स्थानविशेषनियतत्वम्? स्वसामर्थ्यादिति ब्रूमः। द्युव्याप्ति-स्तावत् हृदयाद्यल्पस्थानगोचरासु विद्यासु नोपसंहर्तुं शक्या, सम्भृत्यादयोऽपि तत्सहचारिण-स्तत्तुल्यदेशा इति अल्पस्थानविषयासु विद्यास्वनुपसंहार्याः।

---

# 90. ஸம்பி௴ருத்யதி௴கரணம் (3-3-8)

## 377.ஸம்ப்௴ருதித்௴யுவ்யாப்த்யபி சாத: (3-3-23)

தைத்திரீயகே, ராணாயணீயாநாம் கிலேஷு ச, *"ப்ரஹ்ம ஜ்யேஷ்டா வீர்யா ஸம்ப்ருதாநி ப்ரஹ்மாக்ரே ஜ்யேஷ்டம் திவமாததாந। ப்ரஹ்ம பூதாநாம் (ருதஸ்ய ப்ரஹ்ம (தை)) ப்ரதமோத ஜஜ்ஞே தேநார்ஹதி ப்ரஹ்மணா ஸ்பர்திதும் க:"* (தை.ப்ரா.1-8-7-26)[1] இதி ப்ரஹ்மணி ஜ்யேஷ்டாநாம் வீர்யாணாம் ஸம்ப்ருதி: த்யுவ்யாப்திஸ்சேத்யாதிகுணஜாதம் ஆம்நாதம்।

தேஷாமுபாஸநவிஶேஷமநாரப்ய அதீதாநாம் குணாநாம் ஸர்வாஸு வித்யாஸு உபஸம்ஹாரே ப்ராப்தே,

உச்யதே - *ஸம்ப்ருதித்யுவ்யாப்த்யாபி* - இதி। ஸம்ப்ருதித்யுவ்யாப்தீதி ஸமாஹாரத்வந்த்வத்வாத் ஏகவத்பாவ:। ஸம்ப்ருத்யாதிகம் அநாரப்யாதீதமபி அத ஏவ ஸ்தாநபேதாத் வ்யவஸ்தாப்யம், ந ஸர்வத்ரோபஸம்ஹர்தவ்யம்।

கதமநாரப்யாதீதாநாம் ஸ்தாநவிஶேஷநியதத்வம்? ஸ்வஸாமர்த்யாத் இதி ப்ரூம:। த்யுவ்யாப்திஸ்தாவத் ஹ்ருதயாத்யல்பஸ்தாநகோசராஸு வித்யாஸு ந உபஸம்ஹர்தும் ஶக்யா, ஸம்ப்ருத்யாதயோऽபி தத்ஸஹசாரிண: தத்துல்யதேஶா இதி அல்பஸ்தாநவிஷயாஸு வித்யாஸு அநுபஸம்ஹார்யா:।

# 90.ஸம்ப்ருத்யதிகரணம்(3-3-8)

## 377. ஸம்ப்ருதி-த்யுவ்யாப்தி அபி ச அத: (3-3-23)

*ஸம்ப்ருதியும் [சிறந்த ஶக்திகள் சேர்ந்திருத்தல்], த்யு-வ்யாப்தியும் [ஸ்வர்க்கத்தை பரவி இருத்தல்] அதனாலேயே [ஸ்தானம் வேறாவதாலேயே வரையறுக்கப் படுவதாக] ஆகும்.*

**விஷயவாக்யம்**

தைத்திரீயத்திலும், ராணாயனீயர்களின் கில-பாகங்களிலும் [1]**"ப்ரஹ்மத்தில் போற்றத்தக்க ஶக்திகள் சேர்ந்துள்ளன; சிறந்த ப்ரஹ்மம்தான் முதலில் ஸ்வர்க்கத்தை வ்யாபித்து(பரவி) இருந்தது; பொருள்களில் ப்ரஹ்மம்தான் முதலில் இருந்தது; அந்த ப்ரஹ்மத்துடன் போட்டியிட யார் தகுந்தவன்? (யாருமில்லை)"** என்று ப்ரஹ்மத்தினிடம் ஸம்ப்ருதி (சிறந்த ஶக்திகள் சேர்ந்திருத்தல்), த்யு-வ்யாப்தி (ஸ்வர்க்கத்தைபரவி இருத்தல்) முதலிய குணக் கூட்டம் ஓதப்பட்டது.

**பூர்வபக்ஷம்**

அந்த குணங்கள் ஒருதனிப்பட்ட உபாஸனத்தை சொல்ல ஆரம்பித்து ஓதப்பட்டவை அல்ல;(ஒரு ஆரம்பமும் இல்லாமல் பொதுவாக சொன்னவை); அதனால், எல்லா வித்யைகளிலும் சேர்த்துக் கொள்வது நேரிடும்.

**ஸித்தாந்தம்**

அப்போது ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **ஸம்ப்ருதி-த்யுவ்யாப்தி அபி-** என்று. இங்கு ஸமாஹார-த்வந்த்வஸமாஸம் ஆவதால் ஏகவசனம் ஆகும். (இந்த இரண்டும் சேர்த்து ஒரு குழு ஆகும்; இரண்டும் சேர்ந்தே வரும்; ஒன்றுவராமல் போனால் மற்றொன்றும் வராது என குறிப்பு).

**ஸம்ப்ருதித்யுவ்யாப்தி அபி** (ஸம்ப்ருதியும் த்யுவ்யாப்தியும்) - ஸம்ப்ருதி முதலியது

ஒரு தனிப்பட்ட விஷயத்தை ஆரம்பித்து ஓதப்படவில்லை என்றாலும்,

**அத: -** அதனாலேயே - ஸ்தானம் வேறாவதாலேயே வரையறுக்கப் படும்; எல்லா வித்யையிலும் சேர்த்துக் கொள்ளக் கூடாது.

**கேள்வி -** ஒரு விஷயத்தை சொல்ல ஆரம்பிக்காமல் ஓதப்படுகிறவை, எப்படி (பொதுவாக ஆகாமல்)தனிப்பட்ட இடங்களில் மட்டுமேயாக ஆகும்?

**பதில் -** தன் ஸாமர்த்யத்தால் என்று சொல்கிறோம். (அர்த்தத்தின் அடிப்படையில் அப்படி வரையறுக்க முடியும்).

த்யுவ்யாப்தி (ஸ்வர்க்கலோகத்தைப் பரவி இருத்தல்) என்பது, ஹ்ருதயம் முதலிய சிறிய இடத்தைப் பற்றிய வித்யைகளில் சேர்த்து எண்ணப்பட முடியாது; ஸம்ப்ருதி முதலியவையும் அந்த த்யு-வ்யாப்தியுடன் கூட சேர்ந்து வருபவையாதலால், அதனுடன் ஒரே இடத்தில் ஆகும்; அதனால், சிறிய இடத்தைப் பற்றிய வித்யைகளில் சேர்த்துக்கொண்டு எண்ண முடியாதவை. (முன் குறிப்பில் விளக்கம் காணலாம்).

शाण्डिल्यदहरादिविद्यास्वल्पस्थानविषयासु, **"ज्यायान् पृथिव्याः"** (छा.3-14-3)[1], **"यावान् वा अयमाकाशस्तावानेषोऽन्तर्हृदय आकाशः"** (छा.8-3-1)[2] इत्यादयः तत्रतत्राशक्योपसंहाराः मनोमयत्वापहतपाप्मत्वादिविशिष्टस्योपास्यस्य माहात्म्य-प्रतिपादनपराः॥२३॥

इति सम्भृत्यधिकरणम्॥ ८ ॥

---

ஶாண்டில்யதஹராதிவித்யாஸு அல்பஸ்தாநவிஷயாஸு, *"ஜ்யாயாந் ப்ருதிவ்யா:"* (சா.3-14-3)[1] *"யாவாந் வா அயமாகாஶஸ்தாவாநேஷோऽந்தர்ஹ்ருதய ஆகாஶ:"* (சா.8-3-1)[2] இத்யாதய: தத்ர தத்ர அஶக்யோபஸம்ஹாரா: மநோமயத்வாபஹதபாப்மத்வாதிவிஶிஷ்டஸ்யோபாஸ்யஸ்ய மாஹாத்ம்யப்ரதிபாதநபரா:।।23।।

இதி ஸம்ப்ருத்யதிகரணம்।। 8 ।।

சிறிய இடத்தைப் பற்றிய வித்யைகள் ஆகிற சாண்டில்யவித்யை, தஹரவித்யை முதலியவற்றில், [1]**''பூமியை விடப் பெரியது''**, [2]**''ஹ்ருதயத்தின் உள்ளே இருக்கும் ஆகாசமாகிற ப்ரஹ்மம், இந்த (வெளி) ஆகாசம் எவ்வளவோ, அவ்வளவு ஆகும்''** முதலியவை, அங்கங்கு சேர்த்து எண்ணப்பட முடியாதவையே; அவை, மனோமயத்வம், அபஹதபாப்மத்வம் முதலியவற்றுடன் கூடியவனாய் உபாஸனம் செய்யப்படும் ப்ரஹ்மத்தின் பெருமையை அறிவிப்பதில் நோக்குள்ளவை ஆகும்.

*✍(கேள்வி - சாண்டில்யவித்யையிலும், தஹரவித்யையிலும், சிறிய இடமான ஹ்ருதயத்தில் ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்யவேண்டும்; ஆனால், சாண்டில்யவித்யையில், ''பூமியை விடப் பெரியவன்'' என்றும் சொல்கிறது; தஹரவித்யையில் 'ஆகாசமளவு பெரியவன்' என்று சொல்கிறது. இங்கெல்லாம் சிறிய இடத்தில் சிறிய அளவினனாக எண்ணப்படும் ப்ரஹ்மத்தை எப்படி பெரியதாக உபாஸனம் செய்ய முடியும்?*

*பதில்- சிறிய இடத்தில் இருப்பவனாக ப்ரஹ்மத்தை உபாஸனம் செய்யும்போது, ப்ரஹ்மம் உண்மையில் சிறியது என்று நினைத்து விடக்கூடாது; அது மிகப் பெரியது ஆகும்; இந்த உண்மையை உணர்த்துவதற்காக பூமியை விடப் பெரியது என்றும் ஆகாசம் அளவு பெரியது என்றும் சொல்கிறது; அது, ப்ரஹ்மம் பற்றிய உண்மையை புரிய வைப்பதற்காக சொன்னது; பெரியதாக எண்ணி உபாஸனம் செய்யவேண்டாம்; அதற்காக சொல்லவில்லை; ஆகையால், முரண்பாடு இல்லை).✍*

✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻

**ஸம்ப்ருத்யதிகரணம் முற்றிற்று.**

# 91.புருஷவித்யாதிகரணம்(3-3-9)

## முன் குறிப்பு

தைத்திரீய-உபநிஷத்தில் ந்யாஸ-வித்யையைச் (சரணாகதியைச்) சொன்னபின், கடைசி அனுவாகம், ''தஸ்யைவம்'' என்று ஆரம்பித்து உள்ளது; இதில் சரணாகதி செய்பவனுடைய ஶரீர-அவயவங்களை யாக-அவயவங்களாக கற்பனை செய்து சொல்கிறது; - சரணாகதி செய்பவன்தான் யாகம்; அந்த யாகத்துக்கு ஜீவாத்மாதான் யஜமானன் (யாகம் செய்பவன்); ச்ரத்தைதான் பத்நீ; ஶரீரமே இத்மம், மார்புதான் வேதி; ரோமங்கள் தர்பங்கள் ...'' முதலியதாக கற்பனை நீள்கிறது.

சாந்தோக்யத்தில் இதுபோல புருஷவித்யை ஒன்று உள்ளது; அதிலும் மனிதனின் ஶரீர-அவயவங்களில் யஜ்ஞ-அவயவங்களை கற்பனை செய்கிறது.

இரண்டு இடத்திலும் சொன்ன புருஷ-வித்யை ஒன்றுதான் என பூர்வபக்ஷம்.

வெவ்வேறு என்பது ஸித்தாந்தம்; இரண்டு இடத்திலும், புருஷ-அவயவங்களை யாக-அவயவங்களாக கற்பனை செய்வது பொதுவான விஷயம்; ஆனாலும், கற்பனை செய்யும் விதத்தில் பெருமளவில் வித்யாசம் உள்ளது; அதனால், உபாஸனத்தில் ரூபம் வேறாவதால், வித்யை வேறாகும்.

மேலும்,ஒரு இடத்தில் சொன்ன விஷயத்துக்கு நேர் எதிராக வேறொரு இடத்தில் சொல்கிறது; (உ.ம்) சாந்தோக்யத்தில், பசியை தீக்ஷா என்கிறது; தைத்திரீயத்தில் உயிர் வாழும் காலத்தை தீக்ஷா என்கிறது; இரண்டையும் சேர்த்து எண்ண முடியாது; ஆகையால், வித்யை வேறு.

மேலும், பலனும் வெவ்வேறாக உள்ளது; சாந்தோக்யத்தில், 116 ஆண்டுகள் வாழ்வது பலன்; தைத்திரீயத்தில் புருஷவித்யைக்கு தனி பலன் இல்லை; முன்னர் சொன்ன ந்யாஸ-வித்யையின் பலனான ப்ரஹ்ம-ப்ராப்தி என்பதையே இங்கும் சொல்கிறது; அதனால், இது ந்யாஸ-வித்யையின் அங்கம் ஆகும் எனத் தெரிகிறது.

ஸ்ரீதேசிகன் ஸாதிக்கும் உண்மை - தைத்திரீயத்தில் சொன்ன புருஷவித்யை தனியொரு வித்யை அல்ல; அது சரணாகதியைப் புகழும் வார்த்தை ஆகும்; பொதுவாக ப்ரஹ்ம-வித்யை செய்பவர்கள் ஆயுள் இறுதி வரை அதற்கு அங்கமாக யாகம் முதலிய கர்மம் செய்துகொண்டே உபாஸனம் செய்ய வேண்டும்; ஆனால், சரணாகதி செய்தவன், பின்னர் உபாயமாகவோ, அங்கமாகவோ எதுவும் செய்ய வேண்டாம்; சரணாகதி செய்ததே எல்லா யாகமும் செய்ததற்கு சமம்; இதைப்புரிய வைப்பதற்காக இப்படி கற்பனையாக சொல்கிறது; ஆழ்வாரும் சரணாகதி செய்தவரை 'செய்த வேள்வியர்' என்று அருளினார்.

தைத்திரீயத்தில், சரணாகதி செய்தவனை யாகமாக குறிப்பிடுகிறது என்று ஸ்ரீபாஷ்யத்தில் அருளினார்; அல்லது, சரணாகதியை யாகமாக சொல்கிறது என்று சொன்னாலும் தவறில்லை என்பர்; சாந்தோக்யத்திலோ, புருஷவித்யையை அனுஷ்டானம் செய்பவனை யாகமாக சொல்கிறது.

# ९१.पुरुषविद्याधिकरणम् (३-३-९)

तैत्तिरीयके पुरुषविद्याऽऽम्नायते, **''तस्यैवं विदुषो यज्ञस्याऽऽत्मा यजमानः, श्रद्धा पत्नी, शरीरमिध्मम्, उरो वेदिर्लोमानि बर्हिः''**(तै.2.64)[1] इत्यादिका।

छान्दोग्येऽपि पुरुषविद्याऽऽम्नायते, **''पुरुषो वा यज्ञः। तस्य यानि चतुर्विंशतिवर्षाणि''**(छा.3-16-1)[2] इत्यादिका।

तत्र संशयः - किमत्र विद्या भिद्यते, उत नेति।

पुरुषविद्येति नामैक्यात् पुरुषावयवेषु यज्ञावयवकल्पनसाम्येन रूपैक्यात्, तैत्तिरीयके फलसंयोगाश्रवणात्, **''प्र ह षोडशं वर्षशतं जीवति''**(छा.3-16-7)[3] इति छान्दोग्ये श्रुतस्यैव पुरुषविद्याफलत्वात् फलसंयोगस्याप्यविशेषात् विद्यैक्यम् -

इति प्राप्ते उच्यते -

**३७८.पुरुषविद्यायामपि चेतरेषामनाम्नानात् (३-२-२४)**

उभयत्राम्नातयोर्विद्ययोः पुरुषविद्यात्वेऽपि विद्याभेदोऽस्त्येव। कुतः? **इतरेषामनाम्नानात्** एकस्यां शाखायामाम्नातानां गुणानामन्यत्रानाम्नानात्।

---

## 91.புருஷவித்யாதிகரணம் (3-3-9)

தைத்திரீயகே புருஷவித்யாऽऽம்நாயதே, *"தஸ்யைவம் விதுஷோ யஜ்ஞஸ்யாऽऽத்மா யஜமாநः, ஶ்ரத்தா பத்நீ, ஶரீரமித்மம், உரோ வேதிர்லோமாநி பர்ஹிः"* (தை.2-64)[1] இத்யாதிகா।

சாந்தோக்யேऽபி புருஷவித்யாऽऽம்நாயதே, *"புருஷோ வா யஜ்ஞः। தஸ்ய யாநி சதுர்விம்ஶதிர்வர்ஷாணி"*(சா.3-16-1)[2] இத்யாதிகா।

தத்ர ஸம்ஶய: - கிமத்ர வித்யா பித்யதே, உத நேதி।

புருஷவித்யேதி நாமைக்யாத் புருஷாவயவேஷு யஜ்ஞாவயவகல்பநஸாம்யேந ரூபைக்யாத், தைத்திரீயகே பலஸம்யோகாஶ்ரவணாத், *"ப்ர ஹ ஷோடஷம் வர்ஷஶதம் ஜீவதி"*(சா.3-16-7)[3] இதி சாந்தோக்யே ஶ்ருதஸ்யைவ புருஷவித்யாபலத்வாத் பலஸம்யோகஸ்யாப்யவிஶேஷாத் வித்யைக்யம்,

இதி ப்ராப்தே, உச்யதே -

**378.புருஷவித்யாயாமபி சேதரேஷாமநாம்நாநாத் (3-2-24)**

உபயத்ராம்நாதயோ: வித்யயோ: *புருஷவித்யாத்வேऽபி* வித்யாபேத: அஸ்த்யேவ। குத:? *இதரேஷாமநாம்நாநாத்;* ஏகஸ்யாம் ஶாகாயாமாம்நாதாநாம் குணாநாம் அந்யத்ராநாம்நாநாத்।

# 91.புருஷவித்யாதிகரணம்(3-3-9)

**விஷயவாக்யம்**

தைத்திரீயத்தில் புருஷவித்யை ஓதப்படுகிறது - [1]**''இப்படி அறிபவனாகிற (அறிபவனுடைய) யாகத்துக்கு ஆத்மாதான் யஜமானன் (யாகம் செய்பவன்); ஶ்ரத்தை பத்நீ; ஶரீரம் இத்மம்; மார்பு வேதி; ரோமங்கள் பர்ஹி: (தர்பங்கள்)..''** முதலியதாக.

சாந்தோக்யத்தில், புருஷவித்யை ஓதப்படுகிறது - [2]**''புருஷன்தான் யாகம், அவனுக்கு 24 ஆண்டுகள் எவை உண்டோ..''** முதலியதாக.

**ஸந்தேஹம்**

அதில் ஸந்தேஹம் - இங்கு வித்யை வேறுபடுமா? அல்லது இல்லையா? என்று.

**பூர்வபக்ஷம்**

ஒரே வித்யைதான்; ஏனெனில்,

- புருஷவித்யை என்று பெயர் ஒன்றாக இருக்கிறபடியாலும்,
- புருஷனின் அவயவங்களில் (சில தன்மைகளில்)யாகத்தின் அவயவங்களை கல்பனை செய்வது சமமாக இருப்பதால், ரூபம் ஒன்றாவதால்,
- தைத்திரீயத்தில் பலன்-தொடர்புசொல்லப்படவில்லை; ஆதலால், சாந்தோக்யத்தில், [3]**''நூற்று பதினாறு ஆண்டுகள் நன்கு வாழ்வான்''** என்று சொல்லப்பட்டதே புருஷவித்யையின் பலனாக ஆகுமாதலால், பலன்-தொடர்பும் ஒன்றாவதால்.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப் படுகிறது.

## 374.புருஷவித்யாயாம் அபி ச இதரேஷாம் அநாம்நாநாத்(3-3-24)

*புருஷவித்யையிலும் கூட மற்றவற்றை ஓதாதபடியால் [வித்யை வேறாகும்தான்]*

**புருஷவித்யாயாம் அபி** (புருஷவித்யையிலும் கூட) - இரண்டு இடத்திலும் ஓதப்பட்ட வித்யைகள் புருஷவித்யைதான் என்றாலும்,

**ச** (உண்டுதான்)- வித்யையில் வேறுபாடு உண்டுதான்.

ஏன்?

**இதரேஷாம் அநாம்நாநாத்** (மற்றவற்றை ஓதாதபடியால்) - ஒரு ஶாகையில் ஓதப்பட்ட குணங்களை மற்றொரு ஶாகையில் ஓதாதபடியால்.

तथा हि - **''यत् सायं प्रातर्मध्यन्दिनं च तानि सवनानि''**(तै.2.64)[1] इत्यादयस्तैत्तिरीयके आम्नाताः; छान्दोग्ये सवनत्वेन नाम्नायन्ते, त्रेधा विभक्तं पुरुषायुषं छान्दोग्ये सवनत्वेन कल्प्यते। छान्दोग्ये श्रुतानामशिशिषादीनां दीक्षादित्वकल्पनं तैत्तिरीयके न कृतम्; यजमानपत्न्यादिपरिकल्पनं चान्यथा। अतो रूपमुभयत्र भिद्यते।

तथा फलसंयोगोऽपि भिद्यते। तैत्तिरीयके हि पूर्वानुवाके, **''ब्रह्मणे त्वा महस ओमित्यात्मानं युञ्जीत''**(तै.2.63)[2] इति ब्रह्मविद्यामभिधाय तत्फलत्वेन, **''ब्रह्मणो महिमानमाप्नोति''**(तै.2.63)[3] इत्युक्त्वा, **''तस्यैवं विदुषः''** (तै.2.64)[4] इत्यादिना आम्नाता पुरुषविद्याऽस्यैव ब्रह्मविदुषो यज्ञत्वकल्पनमिति गम्यते। अतो ब्रह्मविद्याङ्गत्वात् ब्रह्मप्राप्तिरेवात्र फलम्। **''फलवत्संवि(न्नि)धावफलं तदङ्गम्''** (पू.मी.सू.4-1-5)[5] इति न्यायात् तैत्तिरीयकाम्नाता पुरुषविद्या ब्रह्मविद्याङ्गमिति गम्यते। छान्दोग्ये त्वायुःप्राप्तिफला पुरुषविद्येत्युक्तम्।

अतो रूपसंयोगयोर्भेदात् विद्याभेद इत्येकत्राऽऽम्नातानां गुणानामितरत्रानुपसंहारः॥२४॥

इति पुरुषविद्याधिकरणम् ॥ ९ ॥

---

ததா ஹி - *''யத் ஸாயம் ப்ராதர்மத்₄யந்தி₃நம் ச தாநி ஸவநாநி''* (தை.2-64)[1] இத்₃யாத₃ய: தைத்திரீயகே ஆம்நாதா: சா₂ந்தோ₃க்₃யே ஸநத்₃வேந நாம்நாயந்தே, த்ரேதா₄ விப₄க்தம் புருஷாயுஷம் சா₂ந்தோ₃க்₃யே ஸவநத்₃வேந கல்ப்யதே। சா₂ந்தோ₃க்₃யே ஶ்ருதாநாம் அஶிஶிஷாதீ₃நாம் தீ₃க்ஷாதி₃த்வகல்பநம் தைத்திரீயகே ந க்ருதம், யஜமாந-பத்ந்யாதி₃பரிகல்பநம் ச அந்யதா₂। அத: ரூபம் உப₄யத்ர பி₄த்₃யதே।

ததா₂ ப₂லஸம்யோகோ₃ऽபி பி₄த்₃யதே। தைத்திரீயகே ஹி பூர்வாநுவாகே, *''ப்₃ரஹ்மணே த்வா மஹஸ ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத''*(தை.2-63)[2] இதி ப்₃ரஹ்மவித்₃யாமபி₄தாய தத்ப₂லத்₃வேந, *''ப்₃ரஹ்மணோ மஹிமாநமாப்நோதி''*(தை.2-63)[3] இத்யுக்த்வா, *''தஸ்யைவம் விது₃ஷ:''*(தை.2-64)[4] இத்₃யாதி₃நா ஆம்நாதா புருஷவித்₃யா அஸ்யைவ ப்₃ரஹ்மவிது₃ஷோ யஜ்ஞத்வகல்பநமிதி க₃ம்யதே। அத: ப்₃ரஹ்மவித்₃யாங்க₃த்வாத் ப்₃ரஹ்மப்ராப்திரேவாத்ர ப₂லம்।। *''ப₂லவத் ஸந்நிதௌ₄ அப₂லம் தத₃ங்க₃ம்''*(பூ.மீ.ஸூ.4-1-5)[5] இதி ந்யாயாத் தைத்திரீயகாம்நாதா புருஷவித்₃யா ப்₃ரஹ்மவித்₃யாங்க₃மிதி க₃ம்யதே। சா₂ந்தோ₃க்₃யே து ஆயு:ப்ராப்திப₂லா புருஷவித்₃யா இத்யுக்தம்।

அத: ரூபஸம்யோகயோர்பே₄தா₃த் வித்₃யாபே₄த₃ இதி ஏகத்ராऽऽம்நாதாநாம் கு₃ணாநாம் இதரத்ர அநுபஸம்ஹார:।। 24 ।।

இதி புருஷவித்₃யாதி₄கரணம் ।। 9 ।।

அப்படித்தானே-

- [1]**''மாலை, காலை, மதியம் என்று எவை உண்டோ, அவையே ஸவனங்கள்''** என்பது முதலாக தைத்திரீயத்தில் ஓதப்பட்டவை சாந்தோக்யத்தில் ஸவனங்களாக ஓதப்படவில்லை; மூன்றாக பிரிக்கப்பட்ட மனித-ஆயுள்தான் சாந்தோக்யத்தில் ஸவனமாக கல்பனை செய்யப்படுகிறது.
- சாந்தோக்யத்தில் ஓதப்பட்டவையான பசி முதலியவற்றை தீக்ஷை முதலியவையாக கல்பனை செய்தல் என்பது தைத்திரீயத்தில் செய்யப்படவில்லை. (தைத்திரீயத்தில் உயிர் பிழைத்திருக்கும் காலம்தான் தீக்ஷை என்கிறது)
- யஜமானன் (யாகம் செய்பவன்), பத்நீ முதலிய கல்பனையும் வேறுவிதமாக உள்ளது. (தைத்திரீயத்தில் சொன்ன யஜமானன், பத்நீ முதலிய கற்பனை சாந்தோக்யத்தில் இல்லை; சாந்தோக்யத்தில் சொன்ன ஸ்தோத்ர, ஶஸ்த்ர கல்பனை தைத்திரீயத்தில் இல்லை)

ஆகையால் இரண்டு இடத்திலும் ரூபம் வேறுபடுகிறது.

அப்படியே பலன்-தொடர்பும் வேறுபடுகிறது.

தைத்திரீயத்தில் முன் அனுவாகத்தில், [2]**''மஹத் ஆன ப்ரஹ்மத்தின் பொருட்டு, ஓம் என்று ஆத்மாவை சேர்க்கவும் (ஸமர்ப்பணம் செய்யவும்)''** என்று ப்ரஹ்ம வித்யையைச் சொல்லி, அதன் பலனாக [3]**''ப்ரஹ்மத்தின் பெருமையை அடைகிறான்''** என்று சொல்கிறது; பிறகு, [4]**''இப்படி அறிபவனுக்கு''** என்பது முதலியதால் புருஷவித்யை சொல்லப்படுகிறது; ப்ரஹ்மத்தை இப்படி அறிபவனான அவனையே யாகம் முதலியதாக கல்பனை செய்வது என்பதாக தெரிகிறது. ஆகையால், ப்ரஹ்மவித்யைக்கு அங்கமாவதால், ப்ரஹ்மத்தை அடைதல்தான் இங்கு பலன் ஆகும். [5]**''பலனுடையதான ஒன்றின் அருகில் பலனில்லாத ஒன்று அதன் அங்கமாகும்''** எனும் ந்யாயத்தின்படி தைத்திரீயத்தில் ஓதப்பட்ட புருஷவித்யையானது, ப்ரஹ்மவித்யைக்கு அங்கமாகும் எனத் தெரிகிறது. சாந்தோக்யத்திலோ, புருஷவித்யை ஆனது, ஆயுள் பெறுவது எனும் பலனை உடையது என்று சொல்லப்பட்டது.

ஆகையால், ரூபமும் பலன்-தொடர்பும் வேறாக இருப்பதால், வித்யை வேறாகும்; ஆகவே, ஒரு இடத்தில் ஓதப்பட்ட குணங்களை மற்ற இடத்தில் சேர்த்து எண்ணுதல் கிடையாது.

**புருஷவித்யாதிகரணம் முற்றிற்று.**

# 92.வேதாத்யதிகரணம்(3-3-10)

## முன் குறிப்பு

உபநிஷத்களின் ஆரம்பத்தில் சில ஆரம்ப-மந்த்ரங்கள் உள்ளன; உதாஹரணமாக தைத்திரீயத்தில் ''ஶம் நோ மித்ர:'' என்று ஆரம்பிக்கும் மந்த்ரம் சொல்கிறோம்; அதர்வண வேதத்திலோ, ''(எதிரியின்) தேஜஸ் நிறைந்த அங்கத்தை பிளப்பாய்! ஹ்ருதயத்தை பிளப்பாய்!'' முதலிய மந்த்ரங்கள் உள்ளன; சில உபநிஷத்களில் ஆரம்பத்தில் ப்ரவர்க்யம் முதலிய கர்மங்களைச் சொல்கிறது.

இவையெல்லாம் வித்யைக்கு (உபாஸநத்துக்கு) அங்கமா இல்லையா என்பது விசாரம்.

பூர்வபக்ஷம் - இவை வித்யைக்கு அங்கம் ஆகும்; ஏனெனில்,இங்கே வித்யையைச் சொல்ல ஆரம்பிக்கும் இடத்தில் இவற்றைச் சொல்லியுள்ளது; இவை வித்யைக்கு அங்க-மல்ல என்றால், வித்யையை உபதேசம் செய்யும் உபநிஷத்தில் இவற்றைச்சொன்னது வீணாகி விடும்.

ஸித்தாந்தம் - வித்யைக்கு அங்கம் அல்ல; அது அந்தந்த ஆரம்ப-மந்த்ரங்களில் சொன்ன விஷய-ஸாமர்த்யத்தால் தெரிய வரும்.

(உ.ம்) - ''(எதிரியின்) தேஜஸ் நிறைந்த அங்கத்தை பிளப்பாய்! ஹ்ருதயத்தை பிளப்-பாய்!'' என்னும் மந்த்ரமானது, சத்ரு-வதம் எனும் பலனுக்கான யாகத்தில் உபயோகப் படும் என்பது தெளிவாகவே தெரிகிறது.

அதுபோல, ''ஶம் நோ மித்ர:'' என்னும் மந்த்ரத்தில்,''ருதம் வதிஷ்யாமி(உண்மைச் சொல்லை சொல்லப்போகிறேன்); ஸத்யம் வதிஷ்யாமி(உண்மைப் பொருளை சொல்-லப்போகிறேன்)'' என்று உள்ளது; அதனால், இது அத்யயனத்துக்கு (வேதம் சொல்வ-தற்கு) அங்கம் என்று தெரிகிறது; உபாஸனத்துக்கு அங்கமானால், 'சொல்லப் போகி-றேன்' என்று வராது.

ப்ரவர்க்யம் எனும் கர்மம் ஆனது உபநிஷத் ஆரம்பத்தில் சொல்லி இருந்தாலும், அது யாக-கர்மத்தில் செய்யப்பட வேண்டியது என்பதை வேதமே அந்த யாக-இடத்தில் தெளி-வாக சொல்லியுள்ளது; எனவே, சந்தேகமே வராது.

கேள்வி - இவை ப்ரஹ்மவித்யைக்கு அங்கமல்ல என்றால், இங்கே ப்ரஹ்மவித்யையை சொல்லப் போகும் இடத்தில் சொன்னது எதற்கு? கர்ம-பாகத்தில் சொல்லி இருக்கலாமே?

பதில் - இவை காட்டில் சொல்ல வேண்டிய மந்த்ரங்கள்; இரவில் சொல்லக்கூடாத மந்த்ரங்கள்; அதனால், ஆரண்யக-பாகத்தில் சொல்லப்பட்டு உள்ளன. வேதத்தில் ஆரண்-யகபாகத்தை இரவில் சொல்லக் கூடாது; அதில் சில பாகங்களை காட்டில்தான் சொல்ல வேண்டும் என்னும் நியமம் இப்போதும் நடைமுறையில் உண்டு. உபநிஷத்களை அகங்களில் சொன்னாலும், இரவில் சொல்வதில்லை.

# ९२. वेधाद्यधिकरणम् (३-३-१०)

## ३७९.वेधाद्यर्थभेदात् (३-३-२५)

★ आथर्वणिका उपनिषदारम्भे, ''शुक्रं प्रविध्य हृदयं प्रविध्य''(अथ.म.?)[1] इत्यादीन् मन्त्रान् अधीयते।

★ सामगाश्च रहस्यब्राह्मणारम्भे, ''देव सवितः प्रसुव यज्ञं प्रसुव'' (सा.र.ब्र.?)[2] इत्याद्यामनन्ति।

★ काठकास्तैत्तिरीयकाश्च, ''शन्नो मित्रश्शं वरुण''(तै.1.शी.1)[3] इत्यादिकम्।

★ शाठ्यायनिनश्च, ''श्वेताश्वो हरिनीलोऽसि''(?)[4] इत्यादिकम्।

★ ऐतरेयिणस्तु महाव्रतब्राह्मणमधीयते, ''इन्द्रो हवै वृत्रं हत्वा महानभवत्'' (ऐ.म.ब्रा.?)[5] इत्यादि।

★ कौषीतकिनोऽपि महाव्रतब्राह्मणमेव, ''प्रजापतिर्वै संवत्सरः। तस्यैष आत्मा यन्महाव्रतम्''(कौ.म.ब्रा.?)[6] इति।

★ वाजसनेयिनस्तु प्रवर्ग्यब्राह्मणम्, ''देवा ह वै सत्रं निषेदुः''(?)[7] इत्यादि।

तत्र संशयः - किमुपनिषदारम्भेष्वधीताः ''शुक्रं प्रविध्य'', ''शं नो मित्रः'' इत्यादयो मन्त्राः, प्रवर्ग्यादीनि च कर्माणि विद्याङ्गम्, उत नेति।

# 92. வேதாத்யதிகரணம் (3-3-10)

## 379.வேதாத்யர்தபேதாத் (3-3-25)

★ ஆதர்வணிகா உபநிஷதாரம்பே, *"ஶுக்ரம் ப்ரவித்ய ஹ்ருதயம் ப்ரவித்ய"* (அத.ம.?)[1] இத்யாதீந் மந்த்ராந் அதீயதே।

★ ஸாமகாஶ்ச ரஹஸ்யப்ராஹ்மணாரம்பே, *"தேவ ஸவித: ப்ரஸுவ யஜ்ஞம் ப்ரஸுவ"*(ஸா.ர.ப்ர?)[2] இத்யாத்யாம்நந்தி।

★ காடகா: தைத்திரீயகாஶ்ச, *"ஶம் நோ மித்ர: ஶம் வருண:"*(தை.1.ஶீ.1)[3] இத்யாதிகம்।

★ ஶாட்யாயநிநஶ்ச, *"ஶ்வேதாஶ்வோ ஹரிநீலோऽஸி"*(?)[4] இத்யாதிகம்।

★ ஐதரேயிணஸ்து மஹாவ்ரதப்ராஹ்மணமதீயதே, *"இந்த்ரோ ஹவை வ்ருத்ரம் ஹத்வா மஹாநபவத்"*(ஐ.ம.ப்ரா.?)[5] இத்யாதி,

★ கௌஷீதகிநோऽபி மஹாவ்ரதப்ராஹ்மணமேவ, *"ப்ரஜாபதிர்வை ஸம்வத்ஸர:। தஸ்யைஷ ஆத்மா யந்மஹாவ்ரதம்"*(கௌ.ம.ப்ரா.?)[6] இதி।

★ வாஜஸநேயிநஸ்து ப்ரவர்க்யப்ராஹ்மணம், *"தேவா ஹவை ஸத்ரம் நிஷேது:"*(?)[7] இத்யாதி।

தத்ர ஸம்ஶய: - கிம் உபநிஷதாரம்பேஷ்வதீதா: *"ஶுக்ரம் ப்ரவித்ய"*, *"ஶம் நோ மித்ர:"* இத்யாதயோ மந்த்ரா:, ப்ரவர்க்யாதீநி ச கர்மாணி வித்யாங்கம், உத நேதி।

# 92.வேதாத்யதிகரணம்(3-3-10)

## 371.வேதாத்யர்த்தபேதாத்(3-3-25)

*பிளத்தல் முதலிய அர்த்தம் வேறாவதால்*

**விஷயவாக்யம்**

- அதர்வவேதத்தினர் உபநிஷத்தின் ஆரம்பத்தில், [1]**''(எதிரியின்) தேஜஸ் நிறைந்த அங்கத்தை பிளப்பாய்! ஹ்ருதயத்தை பிளப்பாய்!''** முதலிய மந்த்-ரங்களை ஓதுகின்றனர்.
- ஸாமகானம் செய்பவர், ரஹஸ்ய-ப்ராஹ்மணத்தின் ஆரம்பத்தில், [2]**''ஸவிதா எனும் தேவனே, யாகத்தை செய்ய வைப்பாய்!''** முதலியதை ஓதுகின்றனர்.
- காடகர்களும் தைத்திரீயர்களும் [3]**''எமக்கு மித்ரன் (ஸூர்யன்) சுகமளிப்பவ-ராக ஆகட்டும்; வருணன் சுகமளிப்பவராக ஆகட்டும்''** என்பது முதலியதை ஓதுகின்றனர்.
- சாட்யாயனிகள் [4]**''(இந்த்ரனே), வெண்குதிரை உடையவனாய் இந்திர-நீலக்கல் போல நீலமாக இருக்கிறாய்''** என்பது முதலியதை ஓதுகின்றனர்.
- ஐதரேயிகளோ, [5]**''இந்த்ரன் வ்ருத்ரனைக் கொன்று மஹான் ஆனான்''** என்-பது முதலாக மஹாவ்ரத-ப்ராஹ்மணத்தை ஓதுகின்றனர். (மஹாவ்ரதம் என்பது ஸத்ரத்துக்கு அங்கமான ஒரு அனுஷ்டாநம்; அதை பற்றி விளக்கும் வேதபாகம் மஹாவ்ரத-ப்ராஹ்மணம் ஆகும்.)
- கௌஷீதகிகளும் மஹாவ்ரதப்ராஹ்மணத்தையே, [6]**''ப்ரஜாபதிதான் வருஷம் ஆவார்; அவருக்கு மஹாவ்ரதம் என்று எதுவோ, அதுதான் ஆத்மா''** என்று ஓதுகின்றனர்.
- வாஜஸனேயிகளோ ப்ரவர்க்ய-ப்ராஹ்மணத்தை [7]**''தேவர்கள் ஸத்ரத்தை செய்தனர்''** முதலியதாக ஓதுகின்றனர். (ப்ரவர்க்யம் என்பது ஜ்யோதிஷ்டோம யாகத்துக்கு அங்கமான ஒரு அனுஷ்டாநம்; அது பற்றிய விளக்கமான ப்ராஹ்-மணத்தை ஓதுகின்றனர்)

**ஸந்தேஹம்**

அதில் ஸந்தேஹம் - உபநிஷத்களின் ஆரம்பங்களில் ஓதப்பட்ட **''சுக்ரம் ப்ர-வித்ய (தேஜஸ் ஆன அங்கத்தை பிளப்பாய்)'', ''ஶம் நோ மித்ர: (மித்ரன் எமக்கு மங்களம் ஆகட்டும்)''** முதலிய மந்த்ரங்களும் ப்ரவர்க்யம் முதலிய கர்மங்களும் உபாஸனத்துக்கு அங்கமா? அல்லது இல்லையா? என்று.

किं युक्तम्? विद्याङ्गमिति। कुतः? सन्निधिसमाम्नानात् विद्याङ्गत्वप्रतीतेः। यद्यपि, "**शुक्रं प्रविध्य**"(अथ.म.?)[1] इत्यादीनां मन्त्राणां प्रवर्ग्यादेश्च कर्मणः श्रुतिलिङ्गवाक्यैर्बलवद्भिर्यथायथं कर्मसु विनियोगोऽवगम्यते, तथाऽपि "**शं नो मित्रः**"(तै.1.शि.1)[2], "**सह नाववतु**"(तै.1.आन.1)[3] इत्यादेर्मन्त्रस्यान्यत्र विनियोगाभागात् विद्याधिकाराच्च विद्याङ्गत्वमवर्जनीयमिति सर्वासु विद्यासु इमे मन्त्राः उपसंहर्तव्याः -

एवं प्राप्ते प्रचक्ष्महे - **वेधाद्यर्थभेदात्।**

- "**शुक्रं प्रविध्य हृदयं प्रविध्य**"(अथ.म.?)[4],
- "**ऋतं वदिष्यामि सत्यं वदिष्यामि**"(तै.1.शि.1)[5],
- "**ऋतमवादिषम् सत्यमवादिषम्**"(तै.1.शि.24)[6]
- "**तेजस्विनावधीतमस्तु मा विद्विषावहै**"(तै.1.आ.1)[7]

इत्यादिभिर्लिङ्गैरभिचाराध्ययनादिष्वेषां विनियोगावगमान्न विद्याङ्गत्वम्।

एतदुक्तं भवति - यथा "**हृदयं प्रविध्य**"(अथ.म.?)[8] इत्यादिमन्त्रसामर्थ्यात् "**शुक्रं प्रविध्य**"(अथ.म.?)[9] इत्यादीनामभिचारादिशेषत्वमवगम्यते, एवमेव "**ऋतं**

---

கிம் யுக்தம்? வித்₃யாங்க₃மிதி। குத:? ஸந்நிதி₄ஸமாம்நாநாத் வித்₃யாங்க₃த்வப்ரதீதே:। யத்₃யபி, "*ஶுக்ரம் ப்ரவித்₄ய*"(அத₂.ம?)[1] இத்யாதீ₃நாம் மந்த்ராணாம் ப்ரவர்க்₃யாதே₃ஶ்ச கர்மண: ஶ்ருதிலிங்க₃வாக்யைர்ப₃லவத்₃பி₄: யதா₂யத₂ம் கர்மஸு விநியோகோ₃ऽவக₃ம்யதே, ததா₂ऽபி "*ஶம் நோ மித்ர:*"(தை.1.ஶி.1)[2], "*ஸஹ நாவவது*"(தை.1.ஆந.1)[3] இத்யாதே₃ர்மந்த்ரஸ்ய அந்யத்ர விநியோகா₃பா₄வாத் வித்₃யாதி₄காராச்ச வித்₃யாங்க₃த்வம் அவர்ஜநீயமிதி ஸர்வாஸு வித்₃யாஸு இமே மந்த்ரா: உபஸம்ஹர்தவ்யா: -

ஏவம் ப்ராப்தே ப்ரசக்ஷ்மஹே - **வேதா₄த்₃யர்த₂பே₄தா₃த்।**

- "*ஶுக்ரம் ப்ரவித்₄ய ஹ்ருத₃யம் ப்ரவித்₄ய*"(அத₂.ம.?)[4],
- "*ருதம் வதி₃ஷ்யாமி ஸத்யம் வதி₃ஷ்யாமி*"(தை.1.ஶி.1)[5],
- "*ருதமவாதி₃ஷம் ஸத்யமவாதி₃ஷம்*"(தை.1.ஶி.24)[6]
- "*தேஜஸ்வி நாவதீ₄தமஸ்து மா வித்₃விஷாவஹை*" (தை.1.ஆ1)[7]

**இத்யாதி₃பி₄ர்லிங்கை₃: அபி₄சாராத்₄யயநாதி₃ஷு ஏஷாம் விநியோகா₃வக₃மாத் ந வித்₃யாங்க₃த்வம்।**

**ஏதது₃க்தம் ப₄வதி - யதா₂** "*ஹ்ருத₃யம் ப்ரவித்₄ய*"(அத₂.ம.?)[8] இத்யாதி₃மந்த்ரஸாமர்த்₂யாத் "*ஶுக்ரம் ப்ரவித்₄ய*"(அத₂.ம.?)[9] இத்யாதீ₃நாம் அபி₄சாராதி₃ஶேஷத்வ-

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்?

உபாஸனத்துக்கு அங்கம் என்பது.

ஏன்?

(உபாஸனத்துக்கு) அருகில் ஓதப்பட்டிருப்பதால் உபாஸனத்துக்கு அங்கம் என்பதாகத் தெரிகிறது.

[1]**''சுக்ரம் ப்ரவித்ய (தேஜஸ் ஆன அங்கத்தை பிளப்பாய்)''** முதலிய மந்த்ரங்களுக்கும் ப்ரவர்க்யம் முதலிய கர்மங்களுக்கும், பலம் வாய்ந்த ஶ்ருதி, லிங்கம், வாக்யம் ஆகியவற்றைக் கொண்டு கர்மங்களில் உபயோகப் படுத்துதல் தெரிகிறது; ஆனாலும், [2]**''ஶம்நோ மித்ர: (மித்ரதேவன் நமக்கு சுகமளிப்பவனாக ஆகட்டும்),** [3]**''ஸஹ நாவவது (நம் இருவரையும் சேர்த்து காப்பாற்றட்டும்)''** முதலிய மந்த்ரத்துக்கு வேறிடத்தில் உபயோகப் படுத்துதல் சொல்லப்படவில்லை; மேலும் ப்ரஹ்மவித்யையை சொல்ல ஆரம்பிக்கும் இடத்தில் உள்ளது; ஆகையால், உபாஸனத்துக்கு அங்கம் என்பது தவிர்க்க முடியாதது; ஆகையால், எல்லா உபாஸனங்களிலும் இந்த, மந்த்ரங்கள் சேர்த்து எண்ணத் தக்கவையே.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்கிறோம் - **''வேதாத்யர்த்தபேதாத்''**

- [4]**''தேஜஸ் நிறைந்த அங்கத்தை பிளப்பாய்! ஹ்ருதயத்தை பிளப்பாய்!''**
- [5]**''உண்மைச் சொல்லை சொல்லப் போகிறேன்; உண்மைப் பொருளை சொல்லப் போகிறேன்''**
- [6]**''உண்மைச் சொல்லை சொன்னேன்; உண்மைப் பொருளை சொன்னேன்'',**
- [7]**''(ஆசார்யனும் ஶிஷ்யனும் ஆகிய) நமக்கு ஓதிய வேதம் வீர்யமுடையதாக இருக்கட்டும்; நாம் இருவரும் ஒருவருக்கொருவர் த்வேஷப்படாமல் இருப்போம்''**

முதலிய அடையாளங்களால் அபிசாரம், அத்யயனம் முதலியவற்றில் இவற்றுக்கு உபயோகப் படுதல் தெரிகிறது; ஆகையால்,உபாஸனத்துக்கு அங்கம் அல்ல.

இது சொன்னதாக ஆகிறது - [8]**''ஹ்ருதயத்தை பிளப்பாய்''** முதலிய மந்த்ரத்தின் பொருள்-திறனையிட்டு, [9]**''தேஜஸ்ஸினை பிளப்பாய்''** முதலியவையும் (சத்ருவைக் கொல்வதற்கான) அபிசாரம் முதலியதுக்கு அங்கமானது என்று தெரிகிறது;

**वदिष्यामि**''(तै.1.शि.1)[1], ''**तेजस्विनावधीतमस्तु**''(तै.1.शि.1)[2] इत्यादिमन्त्रसामर्थ्यादेव स्वाध्यायशेषत्वं ''**शं नो मित्रः**''(तै.1.शि.1)[3] इत्यादिमन्त्राणामवगम्यते। अतो न तेषां विद्याङ्गत्वम् इति।

''**शुक्रं प्रविध्य**''(अथ.म.?)[4] इत्यादीनां प्रवर्ग्यादिब्राह्मणानां चेह पाठो दिवाकीर्त्यत्वारण्येनुवाक्यत्वकृतः॥ २५ ॥

इति वेधाद्यधिकरणम्॥ १० ॥

---

மவகம்யதே, ஏவமேவ *''ருதம் வதிஷ்யாமி''*(தை.1.ஶி.1)[1], *''தேஜஸ்வி நாவதீதமஸ்து''*(தை.1.ஶி.1)[2] இத்யாதிமந்த்ரஸாமர்த்யாதேவ ஸ்வாத்யாயஶேஷத்வம் *''ஶம் நோ மித்ர:''*(தை.1.ஶி.1)[3] இத்யாதி மந்த்ராணாமவகம்யதே। அதோ ந தேஷாம் வித்யாங்கத்வம் இதி। *''ஶுக்ரம் ப்ரவித்ய''* (அத.ம. ?)[4] இத்யாதீநாம் ப்ரவர்க்யாதிப்ராஹ்மணாநாம் சேஹ பாட: திவாகீர்த்யத்வாரண்யேநுவாக்யத்வக்ருத:॥25॥

இதி வேதாத்யதிகரணம்॥ 10 ॥

அது எப்படியோ, அப்படியே, [1]**''உண்மையை சொல்லப் போகிறேன்''**; [2]**''நமக்கு ஓதிய வேதம் வீர்ய முடையதாக இருக்கட்டும்''** முதலிய மந்த்ரங்களின்' பொருள்-திறனையிட்டு, [3]**''மித்ரன் நமக்கு சுகமளிப்பவனாக ஆகட்டும்''** முதலிய மந்த்ரங்-களும் ஓதப்படும் வேதத்துக்கு அங்கமானவை என்று தெரிகிறது.

அதனால், அவை உபாஸனத்துக்கு அங்கம் அல்ல.

(மந்த்ரங்களின் பொருளை கவனித்தால், அவை எங்கு உபயோகப்படும் என்-பது தெரிந்து விடும் 'பிளப்பாய்' முதலிய மந்த்ரங்கள் எதிரிகளைப் பிளக்க உதவும் கர்மங்களில் ஆகும்; 'சொல்ல போகிறேன்' முதலிய மந்த்ரங்கள் வேத-அத்யயனத்-தில் ஆகும்; எனவே, இத்தகு மந்திரங்கள் உபாஸனத்துக்கு அங்கமாக ஆகாது)

[4]**''தேஜஸ்ஸினை பிளப்பாய்''** முதலியவற்றையும், ப்ரவர்க்யம் முதலியவற்-றின் ப்ராஹ்மணங்களையும் இங்கு உபநிஷத்தில் சொன்னது, பகலில் ஓதப்பட வேண்டியதாகவும், காட்டில் ஓதப்பட ஏற்றதாகவும் ஆவதால் விளைந்தது ஆகும்.

**வேதாத்யதிகரணம் முற்றிற்று.**

# 93.ஹாந்யதிகரணம்(3-3-11)

## முன் குறிப்பு

உபாஸனம் செய்பவருக்கு ப்ரஹ்மத்தை அடையும் முன் இரு பலன்கள் வரும் - 1. ஹாநி - புண்யபாபகர்மங்களை விடுதல்; 2. உபாயனம் - அந்த புண்யபாப கர்மங்கள் வேறொருவரை சென்றடைதல். (புண்யங்கள் இவனது நண்பர்களிடம் போகும்; பாபங்கள் இவனது எதிரிகளிடம் போகும்) இந்த பலன்களை உபாஸனத்தில் சிந்திக்க வேண்டும்.

விசாரம் - எல்லா வித்யையிலும் இரண்டையும் சிந்தனை செய்ய வேண்டுமா? அல்லது இரண்டையோ ஏதாவது ஒன்றையோ விருப்பப்படி சிந்தனை செய்யலாமா?

பூர்வபக்ஷம் - இரு வித்யைகளில் ஹாநி மட்டுமே சொல்கிறது; ஒரு வித்யையில், உபாயனம் மட்டுமே சொல்கிறது; ஒரு வித்யையில் இரண்டும் சொல்லியுள்ளது. இப்படி பலவாறாக சொல்லியிருப்பதால், இவற்றை எப்படி வேண்டுமானாலும் சிந்தனை செய்யலாம்; ஹாநி மட்டுமோ, அல்லது உபாயனம் மட்டுமோ அல்லது இரண்டையுமோ சிந்தனை செய்யலாம்; எல்லா வித்யையிலும் இரண்டையும் சிந்தனை செய்ய வேண்டும் என்றால், அப்போது வேதத்தில், ஒன்றை மட்டும் சொன்னது எதற்கு? இரண்டையும் சொல்லக் கூடிய வேத-பாகம் மட்டுமே போதுமே! ஆகையால், எப்படி வேண்டுமானாலும் சிந்தனை செய்யலாம்.

பதில் - ஒரு வேதத்தில் ஒன்றை மட்டும் சொல்லியிருந்தாலும், அங்கே இரண்டையும் சொன்னதாகத்தான் கருத்து! ஏனெனில், உபாயனம் என்பது, ஹாநிக்கு சேஷம் (அங்கம்) ஆகும்; புண்யபாபத்தை விட்டாலும், அது மற்றவரிடம் போயிற்று என்பது ஆனாலே, நன்கு விட்டுவிட்டதாக ஆகும்; ஹாநியும் உபாயனமும் ஒன்றுக்கொன்று தொடர்பு அற்றதாக இருந்தால், அப்போது ஒன்றைச் சொன்னால், மற்றதைச் சொன்னதாக ஆகாது; ஆனால், இரண்டும் அங்கம்-அங்கி எனும் தொடர்பில் இருப்பதால், ஒன்றைச் சொன்னால் மற்றதையும் சொன்னதாக ஆகும். ஆகவே, எல்லாரும் இரண்டையும் சிந்திக்க வேண்டும்.

(உ.ம்)- 1. திருமண் இடவும் என்று சொன்னால், திருமண்-ஸ்ரீசூர்ணம் இரண்டையும் இடவும் என்று சொன்னதாக கணக்கு; ஏனெனில், ஸ்ரீசூர்ணம் இடுதல் என்பது திருமண் இடுதலுக்கு சேஷம் ஆகும்; எனவே, ஒன்றைச் சொன்னால், இரண்டையும் சொன்னதாக ஆகும்; அதுபோல இங்கும்.

கேள்வி-ஹாநி-வாக்யமும் உபாயன-வாக்யமும்வெவ்வேறு ஶாகைகளில் இருப்பதால், ஒரு வாக்யமாக ஆகாது;அங்கம்-அங்கி தொடர்பு எப்படி வரும்?

பதில் - அப்படி வெவ்வேறு ஶாகைகளில் இருந்தாலும் ஒரு வாக்யம் ஆகலாம். அங்கம்-அங்கி தொடர்பு வரலாம்; இதற்கு நான்கு உதாஹரணங்கள் இங்கே ஸூத்ரத்தில் சொல்கிறார்.

# ९३. हान्यधिकरणम् (३-३-११)

**३८०.हानौ तूपायनशब्दशेषत्वात् कुशाच्छन्दस्स्तुत्युपगानवत् तदुक्तम् (३-३-२६)**

★ छन्दोगा आमनन्ति - "**अश्व इव रोमाणि विधूय पापं चन्द्र इव राहोर्मुखात् प्रमुच्य। धूत्वा शरीरमकृतं कृतात्मा ब्रह्मलोकमभिसम्भवामि**" (छा.8-13-1)[1] इति।

★ आथर्वणिकाश्च, "**तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति**" (मु.3-1-3)[2] इति।

★ शाठ्यायनिनस्तु "**तस्य पुत्रा दायमुपयन्ति सुहृदः साधुकृत्यां द्विषन्तः पापकृत्याम्**" (शा.श्रु.)[3] इत्यादि।

★ कौषीतकिनस्तु, "**तत् सुकृतदुष्कृते धूनुते तस्य प्रिया ज्ञातयः सुकृतमुपयन्ति अप्रिया दुष्कृतम्**" (कौ.1-4)[4] इति।

एवं क्वचित् पुण्यपापयोर्हानिः, क्वचित् प्रियाप्रियेषु तत्प्राप्तिः, क्वचिदुभयं च श्रुतम्। तदुभयमेकैकविद्यायां श्रुतमपि सर्वविद्याङ्गमास्थेयम्, सर्वब्रह्मविद्यानिष्ठस्यापि ब्रह्म प्राप्नुवतः

---

## 93. ஹாந்யதிகரணம் (3-3-11)

**380.ஹாநௌ தூபாயநஶப்தஶேஷத்வாத் குஶாச்சந்த:-ஸ்துத்யுபகாநவத் ததுக்தம் (3-3-26)**

★ சந்தோகா ஆமநந்தி - "*அஶ்வ இவ ரோமாணி விதூய பாபம் சந்த்ர இவ ராஹோர்முகாத் ப்ரமுச்ய। தூத்வா ஶரீரமக்ருதம் க்ருதாத்மா ப்ரஹ்மலோகமபி-ஸம்பவாமி*" (சா.8-13-1)[1] இதி।

★ ஆதர்வணிகாஶ்ச, "*ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி*" (மு.3-1-3)[2] இதி।

★ ஶாட்யாயநிநஸ்து "*தஸ்ய புத்ரா தாயமுபயந்தி ஸுஹ்ருத: ஸாதுக்ருத்யாம் த்விஷந்த: பாபக்ருத்யாம்*" (ஶா.ஶ்ரு.)[3] இத்யாதி।

★ கௌஷீதகிநஸ்து, "*தத் ஸுக்ருததுஷ்க்ருதே தூநுதே தஸ்ய ப்ரியா ஜ்ஞாதய: ஸுக்ருதமுபயந்தி அப்ரியா துஷ்க்ருதம்*" (கௌ.1-4)[4] இதி।

ஏவம் க்வசித் புண்யபாபயோர்ஹாநி:, க்வசித் ப்ரியாப்ரியேஷு தத்ப்ராப்தி:, க்வசிதுபயம் ச ஶ்ருதம்। ததுபயமேகைகவித்யாயாம் ஶ்ருதமபி ஸர்வவித்யாங்கமாஸ்தேயம், ஸர்வப்ரஹ்மவித்யாநிஷ்டஸ்யாபி ப்ரஹ்ம

# 93.ஹாந்யதிகரணம்(3-3-11)

## 380.ஹாநௌ து உபாயனஶப்த-ஶேஷத்வாத் குசா-சந்தஸ்-ஸ்துத்யுபகானவத் தத் உக்தம்(3-3-26)

*உபாயனவாக்யம்[ஹானிவாக்யத்துக்கு] சேஷமாவதால், ஹானியில்[உபாயனமும் ஆகும்]; குசா, சந்தஸ், ஸ்துதி, உபகானம் ஆகியவற்றில் போல [வாக்ய-சேஷம் ஆகலாம்]; அது [பூர்வமீமாம்ஸாவில்] சொல்லப்பட்டது.*

**விஷயவாக்யம்**

- சந்தோகர்கள் ஓதுகின்றனர் - [1]**''குதிரை ரோமங்களை விடுவது போல புண்யபாப-கர்மத்தை விட்டு, சந்த்ரன் ராஹுவின் வாயிலிருந்து விடுபட்டு இருப்பதுபோல, ஶரீரத்தை விட்டுவிட்டு,செய்யவேண்டியதை செய்து முடித்தவனாய்,நித்யமான ப்ரஹ்மமாகிறலோகத்தை அடைகிறேன்''** என்று.
- அதர்வணவேதத்தினரும் - [2]**''அப்போது உபாஸனம் செய்பவன் புண்யபாபங்களை விட்டு, கர்ம-தொடர்பு அற்றவனாய் (ப்ரஹ்மத்துடன்)மிகவும் சமமான தன்மையை அடைகிறான்''** என்று ஓதுகின்றனர்.
- சாட்யாயனிகளோ, [3]**''அந்த ஜ்ஞானியின் புத்ரர்கள் உரிமையான பங்கினை அடைவர்; நண்பர்கள் புண்யத்தை அடைவர்; த்வேஷிகள் பாபத்தை அடைவர்''** முதலியதை ஓதுகின்றனர்.
- கௌஷீதகியினரோ, [4]**''அப்போது புண்யபாபங்களை விடுகிறான்; அவனுக்கு ப்ரியமான உறவினர் புண்யத்தை அடைகின்றனர்; த்வேஷிகள் பாபத்தை அடைகின்றனர்''** என்று ஓதுகின்றனர்.

இப்படியாக வேதத்தில்-

1. சில இடங்களில் (சாந்தோக்யத்திலும் அதர்வண வேதத்திலும்) புண்யபாபங்களை விடுதல் சொல்லப்பட்டது;
2. ஒரு இடத்தில் (சாட்யாயனத்தில்) அந்த புண்ய-பாபம் அன்பர்களிடமும் த்வேஷிகளிடமும் சென்றடைவது சொல்லப்பட்டது;
3. ஒரு இடத்தில் (கௌஷீதகியில்) இரண்டும் (புண்யபாபங்களை விடுதலும், அவை மற்றவரைச் சென்றடைதலும் ஆகிய இரண்டும்) சொல்லப் பட்டது.

இந்த இரண்டும் ஒவ்வொரு வித்யையில் ஓதப்பட்டது ஆனாலும், எல்லா வித்யைக்கும் தேவையானதாக ஏற்க வேண்டும்; ஏனெனில், எல்லா ப்ரஹ்ம-வித்யையை அனுஷ்டானம் செய்பவருக்கும் ப்ரஹ்மத்தை அடைபவராய் புண்ய-

पुण्यपापप्रहाणस्यावश्यम्भावित्वात्, प्रहीणविषयत्वाच्चोपायनस्य। तच्चिन्तनं च विधीयमानं सर्वविद्याङ्गं भवितुमर्हति॥

तत्रेदं विचार्यते - हानिचिन्तनमुपायनचिन्तनमुभयचिन्तनं च विकल्प्ये(ल्पे)रन्, उपसंह्रियेरन् वा।

किं युक्तम्? विकल्प्ये(ल्पे)रन्निति। कुतः? पृथगाम्नानसामर्थ्यात्। समुच्चये हि सर्वत्रोभयानुसन्धानं स्यात्, तच्च कौषीतकिवाक्येनैव सिद्धमित्यन्यत्राम्नानमनर्थकमेव स्यात्। अतोऽनेकत्राम्नानस्य विकल्प एव प्रयोजनम्।

न चाध्येतृभेदेन परिहर्तुं शक्यमनेकत्राम्नानम्। अविशेषपुनश्श्रवणं ह्यध्येतृभेदपरिहार्यम्। अत्र तु हानिरेव द्वयोः शाखयोः; उपायनमेव चैकस्याम्।

न च विद्याभेदेन व्यवस्थापयितुं शक्यम्, सर्वशेषभूतमिदमनुसन्धानमित्युक्तत्वात्।

---

ப்ராப்நுவத: புண்யபாபப்ரஹாணஸ்ய அவஶ்யம்பாவித்வாத், ப்ரஹீண-விஷயத்வாச்ச உபாயநஸ்ய। தச்சிந்தநம் ச விதீயமாநம் ஸர்வவித்யாங்கம் பவிதுமர்ஹதி।।

தத்ரேதம் விசார்யதே - ஹாநிசிந்தநம் உபாயநசிந்தநம் உபயசிந்தநம் ச விகல்ப்யே(ல்பே)ரந், உபஸம்ஹ்ரியேரந் வா।

கிம் யுக்தம்? விகல்ப்யே(ல்பே)ரந்நிதி। குத:? ப்ருதகாம்நாநஸாமர்த்-யாத்। ஸமுச்சயே ஹி ஸர்வத்ர உபயாநுஸந்தாநம் ஸ்யாத், தச்ச கௌஷீத-கிவாக்யேநைவ ஸித்தமிதி அந்யத்ராம்நாநம் அநர்தகமேவ ஸ்யாத்। அத: அநேகத்ராம்நாநஸ்ய விகல்ப ஏவ ப்ரயோஜநம்।

ந ச அத்யேத்ருபேதேந பரிஹர்தும் ஶக்யம் அநேகத்ராம்நாநம்। அவிஶேஷபுநஶ்ஶ்ரவணம் ஹி அத்யேத்ருபேதபரிஹார்யம்। அத்ர து ஹாநிரேவ த்வயோ: ஶாகயோ:, உபாயநமேவ சைகஸ்யாம்।

ந ச வித்யாபேதேந வ்யவஸ்தாபயிதும் ஶக்யம், ஸர்வஶேஷபூதம் இதமநுஸந்தாநமித்யுக்தத்வாத்।

பாபங்களை விடுதல் என்பது கட்டாயம் வரும்; (பிறரிடம்) அடைதல் என்பதும், விடுதலோடு ஸம்பந்தப் பட்டதால், கட்டாயம் வரும். அந்த இரண்டையும் சிந்தித்தல் என்பது விதிக்கப்படுகிறது; அந்த சிந்தனம் ஆனது, எல்லா வித்யைக்கும் அங்கமாக ஆகத் தகும்.

**ஸந்தேஹம்**

அதில் இது விசாரிக்கப் படுகிறது -

1. ஹாநியை (புண்யபாபங்களை விடுவதை) சிந்தித்தலும்,
2. உபாயனத்தை (வேறொருவரிடம் அவை சென்றடைதலை) சிந்தித்தலும்,
3. (ஹாநி, உபாயனம் எனும்) இரண்டையும் சிந்தித்தலும் -

விகல்பமாக வருமா? அல்லது உபஸம்ஹாரமாக சேர்ந்து வருமா?

✎*(விகல்பம்- இந்த மூன்றில் ஏதாவது ஒன்றன் படி, ஹாநி மட்டுமோ அல்லது உபாயனம் மட்டுமோ, அல்லது இரண்டையுமோ இஷ்டப்படி சிந்தித்தல் சரியா?*

*உபஸம்ஹாரம் - அல்லது ஹானியும் உபாயனமும் என இரண்டையும் சேர்த்து எல்லா வித்யையிலும் சிந்திக்க வேண்டுமா?)*✍

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்? விகல்பமாக ஆகும் என்பது; ஏன்? தனியாக வேதத்தில் சொன்னபடியால்.

(மூன்று சிந்தனமும்) சேர்த்து வருமானால், எல்லா இடத்திலும் (ஹாநி, உபாயனம் எனும்) இரண்டையும் எண்ணுதல் வரும்; அது கௌஷீதகீ-வாக்யத்தாலேயே ஏற்படுவதால், பிற இடங்களில் இதை சொன்னது பயனற்றதாகவே ஆக நேரிடும்; ஆகையால் பல இடங்களில் வேதத்தில் சொன்னதற்கு பயன் விகல்பம்தான் (ஏதாவது ஒன்றை எடுத்துக் கொள்ளுதல்) ஆகும்.

**ஶங்கை -** அத்யயனம் செய்பவர் வெவ்வேறாவதால், (அந்தந்த ஶாகையினர் தெரிந்து கொள்வதற்காக) பல இடங்களில் சொன்னது (வீணாகாமல்) பரிஹரிக்க முடியும்.

**பதில் -** அதுவும் கிடையாது; ஏனெனில், (ஒரு ஶாகையில் சொன்னதை) ஒரு வித்யாசமும் இல்லாமல் அப்படியே மீண்டும் (வேறொரு ஶாகையில்) சொல்லுதல் என்பதுதான், அத்யயனம் செய்பவர் வெவ்வேறாவதால் பரிஹரிக்க முடியும்; இங்கோ ஹாநி (புண்யபாபங்களை விடுதல்) மட்டுமே இரு ஶாகைகளில் சொல்லியுள்ளது; உபாயனம் (வேறொருவரிடம் சென்றடைதல்) மட்டுமே ஒரு ஶாகையில் உள்ளது.

**ஶங்கை -** வித்யை வெவ்வேறாவதால் (அந்தந்த வித்யையில் அந்தந்த சிந்தனம் என்று) வரையறுக்க முடியும்.

**பதில் -** அதுவும் கிடையாது; ஏனெனில், இந்த சிந்தனம் ஆனது எல்லா வித்யைக்கும் அங்கமாகும் என்று சொல்லியாயிற்று.

अत्रेदमुच्यते - **हानौ तूपायनशब्दशेषत्वात्** इति। **तुशब्दः** पक्षं व्यावर्तयति। हानाविति प्रदर्शनार्थम्। केवलायां हानौ केवले चोपायने श्रूयमाणे तयोरितरेतरसमुच्चयोऽ-वश्यम्भावी। कुतः? **उपायनशब्दशेषत्वात्** - उपायनशब्दस्य हानिवाक्यशेषत्वात्। उपायनवाक्यस्य हि हानिवाक्यशेषत्वमेवोचितम्, विदुषा त्यक्तयोः पुण्यपापयोः प्रवेशस्थानवाचित्वादुपायनवाक्यस्य॥

प्रदेशान्तराम्नातस्य वाक्यस्य प्रदेशान्तराम्नातवाक्यशेषत्वे दृष्टान्ता उपन्यस्यन्ते - **कुशाच्छन्दस्स्तुत्युपगानवदिति।**

कालापिनः, "**कुशा वानस्पत्याः**" (?)[1] इत्यामनन्ति। शाठ्यायनिनां तु "**औदुम्बर्यः कुशाः**" (?)[2] इति वाक्यं सामान्येन वानस्पत्यत्वेनावगताः कुशाः औदुम्बर्य इति विशिंषत् तद्वाक्यशेषतामापद्यते।

तथा, "**देवासुराणां छन्दोभिः**" (?)[3] इत्यादिना अविशेषेण देवासुराणां छन्दसां प्रसङ्गे, (पैङ्गि) "**देवच्छन्दांसि पूर्वम्**" (?)[4] इति वचनं क्रमविशेषं प्रतिपादयत् तद्वाक्यशेषतां गच्छति।

---

அத்ரேதமுச்யதே - *ஹாநௌ தூபாயநஶப்தஶேஷத்வாத்* - இதி। **துஶப்த:** பக்ஷம் வ்யாவர்தயதி। ஹாநாவிதி ப்ரதர்ஶநார்தம்। கேவலாயாம் *ஹாநௌ* கேவலே சோபாயநே ஶ்ரூயமாணே தயோரிதரேதரஸமுச்சய: அவஶ்யம்-பாவீ। குத:? *உபாயநஶப்தஶேஷத்வாத்* - உபாயநஶப்தஸ்ய ஹாநிவாக்ய-ஶேஷத்வாத்। உபாயநவாக்யஸ்ய ஹி ஹாநிவாக்யஶேஷத்வமேவ உசிதம், விதுஷா த்யக்தயோ: புண்யபாபயோ: ப்ரவேஶஸ்தாநவாசித்வாத் உபாயநவாக்யஸ்ய।।

ப்ரதேஶாந்தராம்நாதஸ்ய வாக்யஸ்ய ப்ரதேஶாந்தராம்நாதவாக்ய-ஶேஷத்வே த்ருஷ்டாந்தா உபந்யஸ்யந்தே - *குஶாச்சந்தஸ்ஸ்துத்யுபகாந-வத் இதி।*

காலாபிந:, *"குஶா வாநஸ்பத்யா:"*(?)[1] இத்யாமநந்தி। ஶாட்யாயநி-நாம் து *"ஔதும்பர்ய: குஶா:"*(?)[2] இதி வாக்யம் ஸாமாந்யேந வாநஸ்பத்-யத்வேநாவகதா: குஶா: ஔதும்பர்ய இதி விஶிம்ஷத் தத்வாக்யஶேஷ-தாமாபத்யதே।

ததா, *"தேவாஸுராணாம் சந்தோபி:"*(?)[3] இத்யாதிநா அவிஶேஷேண தேவாஸுராணாம் சந்தஸாம் ப்ரஸங்கே, (பௌங்கி) *"தேவச்சந்தாம்ஸி பூர்வம்"* (?)[4] இதி வசநம் க்ரமவிஶேஷம் ப்ரதிபாதயத் தத்வாக்யஶேஷதாம் கச்சதி।

**ஸித்தாந்தம்**

இந்த பூர்வபக்ஷத்தில், இந்த ஸித்தாந்தம் சொல்லப் படுகிறது - **''ஹாநௌ து உபாயந ஶப்த ஶேஷத்வாத்''** என்று.

**'து'** என்ற சொல் பூர்வபக்ஷத்தைக் களைகிறது.

'ஹாநௌ' என்பது (உபாயனத்தையும்) எடுத்துக் காட்டுவதற்காக ஆகும்.

**ஹாநௌ -** ஹாநி மட்டுமோ, உபாயனம் மட்டுமோ வேதத்தில் சொல்லப்-படும் போது

அவற்றை ஒன்றுக்கொன்று சேர்த்துக் கொள்ளுதல் கட்டாயம் ஆக வேண்டும்.

ஏன்?

**உபாயன ஶப்தஶேஷத்வாத் -** உபாயன வாக்யமானது, ஹாநிவாக்யத்துக்கு சேஷமாக ஆவதால்.

உபாயன வாக்யமானது, ஹாநிவாக்யத்துக்கு சேஷமாக ஆகும் என்பதே தகுந்ததாகும்; ஏனெனில், உபாஸநம் செய்தவனால் விடப்பட்ட புண்யபாபங்கள் சேருமிடத்தை உபாயனவாக்யம் சொல்கிறது.

✎(*ஜ்ஞானிக்கு புண்யபாபங்களை விடுதல்தான் முக்யமான பலன் ஆகும்; அது எங்கே சென்றடைகிறது என்பது தேவையில்லை; ஆனாலும், அது விடுபட்டதை உறுதியாக்க உபாயனம் - வேறொருவரிடம் சென்றடைதல் உபயோகப்படும்; எனவே, ஹாநி-வாக்யத்துக்கு உபாயன-வாக்யம் சேஷம் ஆகும்; அதாவது ஹாநிவாக்யத்தில் மீதமுள்ள பகுதிதான் உபாயன-வாக்யம்; இரண்டும் தனித்தனி வாக்யமல்ல; ஒரே வாக்யம்தான் என்று கருத்து*).✍

வேறு இடத்தில் ஓதப்பட்ட வாக்யங்கள் மற்றோரிடத்தில் ஓதப்பட்ட வாக்யத்-துக்கு சேஷமாக ஆகலாம் (அப்படி இரண்டையும் சேர்த்து ஒரு வாக்யமாக கருதலாகும்) என்பதற்கு உதாஹரணங்கள் சொல்லப் படுகின்றன -

**குஶா-சந்தஸ்-ஸ்துத்யுபகாநவத்** (குஶா, சந்தஸ், ஸ்துதி, உபகாநம் என்றி-வற்றில் போலே) - என்று.

➢ குசா (யாகத்தில் ரிக்-மந்த்ரங்களைப் பாடும்போது எண்ணுவதற்காக உப-யோகப்படும் குச்சி) -

காலாபிகள் (ஒரு ஶாகையினர்) [1]**''குசா என்பவை மரத்தினால் ஆனவை''** என்று ஓதுகின்றனர்; சாட்யாயனிகளுடைய வாக்யம் [2]**''குசா என்பவை அத்தி-மரத்தால் ஆனவை''** என்றுள்ளது; இந்த வாக்யமானது, பொதுவாக மரத்தா-லானவை என்பதாக அறியப்பட்ட குசா என்பவற்றை அத்திமரத்தாலானவை என்று விஶேஷமாக குறிப்பதால் அந்த வாக்யத்துக்கு ஶேஷமாக ஆகும் தன்மையை அடைகிறது.

➢ சந்தஸ் (வேதமந்த்ரம்)-

அப்படியே, [3]**''தேவர்களைப் பற்றியவையும், அசுரர்களைப் பற்றியவையுமான சந்தஸ்களைக் கொண்டு''** முதலியதால், (முன்-பின் வரிசையாகிற) விசேஷம் ஏதுவும் இல்லாமல் தேவ-அசுர-சந்தஸ்கள் வர நேரிடுகிறது; அப்போது, [4]**''முன்னம் தேவ-சந்தஸ்கள்''** எனும் வாக்யமானது, விசேஷமான வரிசையை அறிவிப்பதாய், அந்த வாக்யத்துக்கு சேஷமாக ஆகும் தன்மையை அடைகிறது.

तथा, **''हिरण्येन षोडशिनः स्तोत्रमुपाकरोति''**(?)[1] इत्यविशेषेण प्राप्ते, **''समयाविषिते सूर्ये षोडशिनः स्तोत्रमुपाकरोति''**(तै.सं.6-5-11)[2] इति विशेषविषयं वाक्यं तद्वाक्यशेषतां भजते।

तथा, **''ऋत्विज उपगायन्ति''**(?)[3] इत्यविशेषप्राप्तस्य, **''नाध्वर्युरुपगायेत्''** (तै.सं.6-3-1)[4] इति वाक्यमनध्वर्युविषयतामवगमयत् तद्वाक्यशेषत्वमृच्छति॥

एवं सामान्येनावगतमर्थं विशेषे व्यवस्थापयितुं क्षमस्य वाक्यस्य तच्छेषत्वमनभ्युपगच्छद्भिस्तयोरर्थयोर्विकल्पः समाश्रयितव्यः। स च सम्भवन्त्यां गतौ न युज्यते। तदुक्तं पूर्वस्मिन् काण्डे, **''अपितु वाक्यशेषः स्यात् अन्याय्यत्वाद्विकल्पस्य, विधीनामेकदेशः स्यात्''**(पू.मी.सू.10-8-4)[5] इति।

तदेवं केवलहानोपायनवाक्ययोरेकवाक्यत्वात्, केवलस्य हानस्य केवलस्य चोपायनस्याभावात् विकल्पो नोपपद्यते। कौषीतकिनामुभयाम्नानमविशेषपुनश्श्रवणत्वेन प्रतिपत्तृभेदादविरुद्धम्॥ २६ ॥

इति हान्यधिकरणम् ॥ ११ ॥

---

ததா, *''ஹிரண்யேந ஷோடஶிந: ஸ்தோத்ரமுபாகரோதி''*(?)[1] இத்யவிஶேஷேண ப்ராப்தே, *''ஸமயாவிஷிதே ஸூர்யே ஷோடஶிந: ஸ்தோத்ரமுபாகரோதி''* (தை.ஸம்.6-5-11)[2] இதி விஶேஷவிஷயம் வாக்யம் தத்வாக்யஶேஷதாம் பஜதே।

ததா, *''ருத்விஜ உபகாயந்தி''*(?)[3] இதி அவிஶேஷப்ராப்தஸ்ய, *''நாத்வர்யுருபகாயேத்''*(தை.ஸம்.6-3-1)[4] இதி வாக்யம் அநத்வர்யுவிஷயதாம் அவகமயத் தத்வாக்யஶேஷத்வம்ருச்சதி।।

ஏவம் ஸாமாந்யேநாவகதமர்தம் விஶேஷே வ்யவஸ்தாபயிதும் க்ஷமஸ்ய வாக்யஸ்ய தச்சேஷத்வமநப்யுபகச்சத்பி: தயோரார்தயோ: விகல்ப: ஸமாஶ்ரயிதவ்ய:। ஸ ச ஸம்பவந்த்யாம் கதௌ ந யுஜ்யதே। ததுக்தம் பூர்வஸ்மிந் காண்டே, *''அபிது வாக்யஶேஷ: ஸ்யாத் அந்யாய்யத்வாத் விகல்பஸ்ய, விதீநாமேகதேஶ: ஸ்யாத்''* (பூ.மீ.ஸூ.10-8-4)[5] இதி।

ததேவம் கேவலஹாநோபாயநவாக்யயோ: ஏகவாக்யத்வாத், கேவலஸ்ய ஹாநஸ்ய கேவலஸ்ய சோபாயநஸ்ய அபாவாத் விகல்போ நோபபத்யதே। கௌஷீதகிநாம் உபயாம்நாநம் அவிஶேஷபுந:ஶ்ரவணத்வேந ப்ரதிபத்த்ருபேதாத் அவிருத்தம்।। 26 ।।

இதி ஹாந்யதிகரணம் ।। 11 ।।

- ஸ்துதி (ஸ்தோத்ரம்- மந்த்ரங்களைப் பாடி யாகத்தில் புகழ்தல்)

  அப்படியே, [1]**''ஸ்வர்ணத்தையிட்டு, ஷோடசி எனும் க்ரஹத்தின் ஸ்தோத்-ரத்தைத்தொடக்கி வைக்கிறான்''** என்று (கால)விசேஷம் இல்லாமல் வர நேருகிறது; அப்போது, [2]**''ஸூர்யன் பாதி மறையும் போது ஷோடசியின் ஸ்தோத்ரத்தைத் தொடக்கி வைக்கிறான்''** எனும் வாக்யமானது (கால)விசே-ஷத்தைப் பற்றியதாக ஆவதாய், அந்த வாக்யத்துக்கு சேஷமான தன்மையை அடைகிறது.

- உபகானம் (பின்பாட்டு - யாகத்தில் உத்காதா ஸ்துதி செய்யும் போது ரித்-விக்கள் 'போ' என்று பின்பாட்டு இசைத்தல்)-

  அப்படியே, [3]**''ருத்விக்கள் உபகானம் செய்வர்''** என்று விசேஷம் இல்லாமல் (எல்லா ரித்விக்களுக்கும்)வரநேரிடும்; ஆனால், அது, அத்வர்யு தவிர பிற ருத்விக்களைப் பற்றியது என்பதாக, [4]**''அத்வர்யு உபகானம் செய்ய வேண்-டாம்''** எனும் வாக்யம் அறிவிக்கிறது; அப்படியாக, அந்த பொதுவான வாக்-யத்துக்கு சேஷமாக ஆதலை இந்த விசேஷவாக்யம் அடைகிறது.

இப்படி பொதுவாக அறிந்த விஷயத்தை விசேஷத்தில் வரையறுக்க தகுந்த வாக்யமானது, அந்த பொதுவான வாக்யத்துக்கு சேஷமாகும்;(இரண்டும் சேர்த்து ஒரே வாக்யமாக ஒரே பொருளைச் சொல்லும்). இதனை ஒப்புக் கொள்ளாத-வர்களால் அந்த இரு பொருள்களுக்கும் விகல்பம் (ஏதாவது ஒன்றை விருப்பப்படி ஏற்றுக் கொள்ளுதல்) சார்ந்திருக்கப்பட வேண்டும்; வேறு வழி இருக்கும்போது விகல்பத்தை ஏற்பது என்பது தகாது; அது முன் காண்டத்தில் (பூர்வமீமாம்ஸா ஶாஸ்த்ரத்தில்) சொல்லப்பட்டது - [5]**''விகல்பம் ஆனது முறையற்றது என்பதால், வாக்யத்துக்கு சேஷமாக ஆவதால், விதிகளுடையஒரு பாகமாக ஆகும்''** என்று.

எனவே, இப்படியாக, ஹானம் மட்டுமோ, உபாயனம் மட்டுமோ பற்றிய வாக்யங்கள் ஒரே வாக்யமாக ஆவதால், ஹானம் மட்டுமோ, உபாயனம் மட்டு-மோ கிடையாது; அதனால், (ஏதாவது ஒன்று ஆகலாம் எனும்) விகல்பம் பொருந்-தாது. கௌஷீதகிகள் இரண்டையும் சொன்னதானது, வித்தியாசமின்றி திரும்பச் சொல்வதாக ஆவதால், அறிபவர் வேறாவதால் ஆகும்; (அந்த ஶாகையை அத்ய-யனம் செய்பவர் அறிவதற்காக சொன்னதாகும்); ஆகையால், முரண்பாடு இல்லை.

***********************************

**ஹாந்யதிகரணம் முற்றிற்று.**

# 94.ஸாம்பராயாதிகரணம்(3-3-12)

## முன் குறிப்பு

உபாஸநம் செய்தவனுக்கு புண்யபாப கர்மங்கள் எப்போது அழியும் என்று விசாரம்.

பூர்வபக்ஷம் - ஶரீரத்தைப் பிரியும்போது, பெரும்பகுதி அழியும்; பின்னர் அர்ச்சிராதி-வழியில் போகும்போது, விரஜாநதிக் கரையில் மீதி பகுதி அழியும்; வேதத்தில் இருவித-மாகவும் சொல்லியிருப்பதால் அப்படி ஏற்க வேண்டும்.

ஸித்தாந்தம் - ஶரீரத்தை விட்டுப் பிரியும்போதே மொத்த கர்மமும் அழிந்துவிடும்; ஏனெனில், கர்மம் மீதி இருக்குமானால், அதன் பலனாக சுகதுக்கம் வர நேரிடும்; இவ-னுக்கோ, அனுபவிக்க வேண்டிய ப்ராக்ருதமான சுகதுக்கம் எதுவும் கிடையாது; எனவே, மொத்தமும் அப்போதே அழிந்து விடும்.

ஒருவேத-வாக்யத்தில், ''விரஜா நதியைக் கடக்கிறான்; புண்யபாபங்களை விடுகி-றான்'' என்று உள்ளது; அதில்,''புண்யபாபங்களை விடுகிறான்'' என்பதை முன்ன-மேயே கூட்டி சேர்த்து பொருள் சொல்லிக் கொள்ள வேண்டும்; ஏனெனில், பிற வேத வாக்யங்களில் அப்படி சொல்வதாலும்; அதுவே பொருந்தி இருப்பதாலும்.

கேள்வி -எல்லா கர்மமும் ஶரீர-முடிவில்தொலைந்து விட்டால், ஸூக்ஷ்மஶரீரம் கூட இருக்க முடியாது; பின்னர் ஜீவன் எப்படி அர்ச்சிராதி-பாதையில் செல்ல முடியும்? (ஜீவன் செல்ல வேண்டுமானால், ஜ்ஞாநம், இச்சை, ப்ரயத்னம் ஆகியவை வேண்டும்; அவை-யெல்லாம் ஶரீரம் இருந்தால்தான் உண்டாகும்).

பதில் -கர்மம் அழியும் போது, ஶரீரம் அழியும்; அப்போதே ஶரீரத்தின் ஒரு பகுதியான ஸூக்ஷ்மஶரீரமும் அழிய வேண்டும்; ஆனால், வித்யையானது, அதனை அழியாமல் நிறுத்திவிடும். பின்னர் தேவயானவழியில் ஜீவன் செல்வதற்கு உபயோகமாக இதனைப் பாதுகாக்கும்; வித்யையானது ஶரீரத்தை உண்டாக்காது; ஆனால், தனக்குத் தேவையான ஸூக்ஷ்ம ஶரீரத்தை நிலை நிறுத்தி வைக்கும்.

எனவே, மொத்த கர்மமும் ஶரீர முடிவிலேயே அழிந்து விடும்.

இங்கு ஸ்ரீதேசிகன் ஸாதிக்கும் ஸூக்ஷ்மமான வேறொரு விஷயம் - சுகதுக்கங்க-ளுக்கு காரணமான கர்மங்கள் மொத்தமும் ஶரீரமுடிவில் தொலையும்; ஆனாலும், ஜீவனுக்கு இயல்பான அபஹதபாப்மத்வம் முதலியதான ஸ்வரூபமும், ஸர்வஜ்ஞனாதல் முதலியதும் ஶரீரமுடிவில் வெளிப்படுவ- தில்லை; அதெல்லாம், பரமாத்மாவை அடைந்த பின்னரே வெளிப்படும்; அதுவரை அதற்கு தடையான கர்ம-வாஸனை இருக்கும்; கர்ம-வாஸனை என்பது, பகவானின் நிக்ரஹ- ஸங்கல்பம்தான்.

# ९४. साम्परायाधिकरणम् (३-३-१२)

## ३८१.साम्पराये तर्तव्याभावात् तथा ह्यन्ये (३-३-२७)

सुकृतदुष्कृतयोर्हानमुपायनं च सर्वासु विद्यासु चिन्तनीयमित्युक्तम्। तद्धानं किं देहवियोगकाले देहादुत्क्रान्तस्याध्वनि च, उत देहवियोगकाल एवेति विशये,

उभयत्रेति युक्तम्, उभयधा(था) श्रुतत्वात्।

- एवं हि कौषीतकिनः समानन्ति, **''स एतं देवयानं पन्थानमापद्याग्निलोकमागच्छति''**(कौ.1-21)[1] इत्युपक्रम्य, **''स आगच्छति विरजां नदीम्। तां मनसाऽत्येति। तत् सुकृतदुष्कृते धूनुते''**(कौ.1-37)[2] इति। अत्र वाक्ये अध्वनि सुकृतदुष्कृतहानिः प्रतीयते।
- ताण्डिनस्तु, **''अश्व इव रोमाणि विधूय पापं चन्द्र इव राहोर्मुखात् प्रमुच्य। धूत्वा शरीरमकृतं कृतात्मा ब्रह्मलोकमभिसम्भवामि''** (छा.8-1-13)[3] इति। अत्र तु देहवियोगकाले इति प्रतीयते।
- शाठ्यायनकेऽपि, **''तस्य पुत्रा दायमुपयन्ति, सुहृदः साधुकृत्याम्, द्विषन्तः पापकृत्याम्''**(शा.श्रु.)[4] इति पुत्रेषु दायसङ्क्रान्तिसमकालं सुकृतदुष्कृतसंक्रमणं श्रूयमाणं देहवियोगकाले इति गम्यते।

---

# 94. ஸாம்பராயாதிகரணம் (3-3-12)

## 381.ஸாம்பராயே தர்தவ்யாபாவாத் ததா ஹ்யந்யே(3-3-27)

ஸுக்ருததுஷ்க்ருதயோ: ஹாநமுபாயநம் ச ஸர்வாஸு வித்யாஸு சிந்தநீயமித்யுக்தம்। தத்தாநம் கிம் தேஹவியோககாலே தேஹாதுத்க்ராந்தஸ்ய அத்வநி ச, உத தேஹவியோககால ஏவேதி விஶயே,

உபயத்ரேதி யுக்தம், உபயதா(தா) ஶ்ருதத்வாத்।

- ஏவம் ஹி கௌஷீதகிந: ஸமாநந்தி, *''ஸ ஏதம் தேவயாநம் பந்தாநமாபத்யாக்நிலோகமாகச்சதி''*(கௌ.1-21)[1] இத்யுபக்ரம்ய, *''ஸ ஆகச்சதி விரஜாம் நதீம்। தா மநஸாऽத்யேதி। தத் ஸுக்ருததுஷ்க்ருதே தூநுதே''*(கௌ.1-37)[2] இதி। அத்ர வாக்யே அத்வநி ஸுக்ருததுஷ்க்ருதஹாநி: ப்ரதீயதே।
- தாண்டிநஸ்து, *''அஶ்வ இவ ரோமாணி விதூய பாபம் சந்த்ர இவ ராஹோர்முகாத் ப்ரமுச்ய। தூத்வா ஶரீரமக்ருதம் க்ருதாத்மா ப்ரஹ்மலோகமபிஸம்பவாமி''* (சா.8-1-13)[3] இதி। அத்ர து தேஹவியோககாலே இதி ப்ரதீயதே।
- ஶாட்யாயநகேऽபி, *''தஸ்ய புத்ரா தாயமுபயந்தி, ஸுஹ்ருத: ஸாதுக்ருத்யாம், த்விஷந்த: பாபக்ருத்யாம்''*(ஶா.ஶ்ரு)[4] இதி புத்ரேஷு தாயஸக்ராந்திஸமகாலம் ஸுக்ருததுஷ்க்ருதஸங்க்ரமணம் ஶ்ரூயமாணம் தேஹவியோககாலே இதி கம்யதே।

# 94.ஸாம்பராயாதிகரணம்(3-3-12)

## 381.ஸாம்பராயே தர்தவ்யாபாவாத் ததா ஹி அந்யே (3-3-27)

*ஶரீரவியோக காலத்திலேயே [புண்யபாபங்கள் அழியும்]; அடைய வேண்டிய [சுகதுக்கபலன்] இல்லாதபடியால்; அப்படியே பிறர் [ஓதுவர்]*

**ஸங்கதி (விஷயதொடர்பு) & ஸந்தேஹம்**

புண்யபாபங்களை விடுதலும், அவை வேறிடத்தில் சென்றடைதலும் எல்லா வித்யைகளிலும் எண்ணப் பட வேண்டும் என்று சொல்லியாயிற்று. புண்யபாபங்களை விடுதல் என்னுமது, ஶரீரத்தைப் பிரியும் காலத்திலும், ஶரீரத்திலிருந்து வெளியேறியவனுக்கு வழியிலும் (இருகாலங்களில்) ஆகும் என்பதா? அல்லது ஶரீரத்தைப் பிரியும் காலத்தில் மட்டுமா? என்று ஸந்தேஹம் வரும்போது,

**பூர்வபக்ஷம்**

இரு காலங்களிலும் ஆகும் என்பது தகும்; ஏனெனில், இரு விதமாகவும் வேதத்தில் சொல்லப்பட்டு உள்ளது.

- இப்படித்தானே கௌஷீதகிகள் ஓதுகின்றனர் - [1]**''அவன் இந்த தேவயானமார்க்கத்தை அடைந்து அக்னிலோகம் செல்கிறான்''** என்று ஆரம்பித்து, [2]**''அவன் விரஜாநதிக்கு வருகிறான்; அதை மனஸ்ஸாலேயே கடக்கிறான்; அப்போது புண்யபாபங்களை விடுகிறான்''** என்று; இந்த வாக்யத்தில், வழியில் புண்யபாபங்களை விடுதல் தெரிகிறது.
- தாண்டிகள் (ஸாமவேதத்தில் ஒரு ஶாகையினர்), [3]**''குதிரை ரோமங்களை விடுவது போல புண்யபாப-கர்மத்தை விட்டு, சந்த்ரன் ராஹுவின் வாயிலிருந்து விடுபடுவது போல விடுபட்டு, ஶரீரத்தை விட்டுவிட்டு, செய்யவேண்டியதை செய்து முடித்தவனாய்,நித்யமான ப்ரஹ்மமாகிறலோகத்தை அடைகிறேன்''** என்று ஓதுகின்றனர்; இங்குஶரீரத்தைப் பிரியும் காலத்தில் (புண்யபாபங்கள் அழியும்)என்பது தெரிகிறது.
- சாட்யாயனகத்திலும், [4]**''அந்த ஜ்ஞானியின் புத்ரர்கள் உரிமையான பங்கினை அடைவர்; நண்பர்கள் புண்யத்தை அடைவர்; த்வேஷிகள் பாபத்தை அடைவர்''** என்பதாக, புத்ரர்களிடம் சொத்து-பங்கு மாறிப்போகும் அதே காலத்தில் புண்யபாபங்கள் மாறிச்செல்வது ஓதப்படுகிறது; அது ஶரீரத்தைப் பிரியும் காலத்தில் என்பதாகத் தெரிகிறது.

अतः सुकृतदुष्कृतयोरेकदेशो देहवियोगकाले हीयते; शेषस्त्वध्वनि -

इति प्राप्ते उच्यते - साम्पराये इति। **साम्पराये** - देहादपक्रमणकाले एव विदुषः सुकृतदुष्कृते निरवशेषं हीयेते। कुतः? **तर्तव्याभावात्** - विदुषो देहवियोगात्पश्चात् सुकृतदुष्कृताभ्यां तरितव्यभोगाभावात्। विद्याफलभूतब्रह्मप्राप्तिव्यतिरेकेण हि सुकृत-दुष्कृताभ्यां भोक्तव्ये सुखदुःखे न विद्येते। तथा ह्यन्ये देहवियोगादूर्ध्वं ब्रह्मप्राप्तिव्यतिरिक्त-सुखदुःखोपभोगाभावमधीयते,

- **"अशरीरं वा व सन्तं न प्रियाप्रिये स्पृशतः"** (छा.8-12-1)[1],
- **"एष सम्प्रसादोऽस्माच्छरीरात् समुत्थाय परं ज्योतिरुपसम्पद्य स्वेन रूपेणा-भिनिष्पद्यते"** (छा.8-12-2)[2],
- **"तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्येऽथ सम्पत्स्ये"** (छा.6-14-2)[3] इति॥२७॥

## ३८२.छन्दत उभयाविरोधात् (३-३-२८)

एवमर्थस्वाभाव्यात् सुकृतदुष्कृतहानिकालेऽवधृते सति, **उभयाविरोधेन** श्रुतेरर्थ-

---

அத: ஸுக்ருததுஷ்க்ருதயோரேகதேஶ: தேஹவியோககாலே ஹீயதே, ஶேஷஸ்து அத்வநி -

இதி ப்ராப்தே உச்யதே - *ஸாம்பராயே* இதி। *ஸாம்பராயே* - தேஹாத-பக்ரமணகாலே ஏவ விதுஷ: ஸுக்ருததுஷ்க்ருதே நிரவஶேஷம் ஹீயேதே। குத:? *தர்தவ்யாபாவாத்* - விதுஷ: தேஹவியோகாத்பஶ்சாத் ஸுக்ருததுஷ்-க்ருதாப்யாம் தரிதவ்யபோகாபாவாத்। வித்யாபலபூதப்ரஹ்மப்ராப்திவ்ய-திரேகேண ஹி ஸுக்ருததுஷ்க்ருதாப்யாம் போக்தவ்யே ஸுகதுஃகே ந வித்யேதே। ததா ஹ்யந்யே தேஹவியோகாதூர்த்வம் ப்ரஹ்மப்ராப்திவ்ய-திரிக்தஸுகதுஃகோபபோகாபாவமதீயதே,

- *"அஶரீரம் வா வ ஸந்தம் ந ப்ரியாப்ரியே ஸ்ப்ருஶத:"* (சா.8-12-1)[1]
- *"ஏஷ ஸம்ப்ரஸாதோऽஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே"* (சா.8-12-2)[2],
- *"தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யேऽத ஸம்பத்ஸ்யே"* (சா.6-14-2)[3] இதி॥ 27 ॥

## 382.சந்தத உபயாவிரோதாத்(3-3-28)

ஏவம் அர்தஸ்வாபாவ்யாத் ஸுக்ருததுஷ்க்ருதஹாநிகாலே அவத்ருதே

ஆகையால், புண்யபாபங்களில் ஒரு பாகம் ஶரீரத்தை விட்டுப் பிரியும்போது அழியும்; மீதி பாகம் வழியில் அழியும்.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப் படுகிறது - **'ஸாம்பராயே'** என்று.

**ஸாம்பராயே -** ஶரீரத்தை விட்டு வெளியேறும் காலத்திலேயே ஜ்ஞாநியி-னுடைய புண்யபாபங்கள் மீதியின்றி அழிகின்றன;

ஏன்?

**தர்தவ்யாபாவாத்** (அடைய வேண்டியது இல்லாத படியால்) - ஜ்ஞாநிக்கு ஶரீரத்தைப் பிரிந்தபின் புண்யபாபங்களைக் கொண்டு அடைய வேண்டிய போகம் இல்லாதபடியால்.

வித்யையின் பலனான ப்ரஹ்மத்தை அடைதல் என்பது தவிர, புண்யபாபங்-களால் அனுபவிக்க வேண்டிய சுக-துக்கங்கள் எதுவும் இல்லைதானே!

**ததா ஹி அந்யே** (அப்படியே பிறர்) - அப்படியே பிறர், ஶரீரத்தைப் பிரிந்த-பின் ப்ரஹ்மத்தை அடைதல் தவிர (வேறு) சுகதுக்க-அனுபவம் இல்லை என்பதை ஓதுகின்றனர் -

- [1]**''ஶரீரமில்லாமல் இருப்பவனை சுகதுக்கங்கள் தீண்டுவதில்லை''**
- [2]**''இந்த ஜீவன் இந்த ஶரீரத்திலிருந்து வெளியேறி, (உடனேயே) பர-ப்ரஹ்-மத்தை அடைந்து, தன்ஸ்வரூபத்துடன் ஆகிறான்''**
- [3]**''அவனுக்கு எவ்வளவு காலம் (கர்மத்தால் விளைந்த ஶரீரத்திலிருந்து) விடுபடவில்லையோ, அவ்வளவே தாமதம்; பின்னர் உடனே (ப்ரஹ்-மத்தை) அடைகிறான்''** - என்று.



## 382.சந்தத: உபயாவிரோதாத்(3-3-28)

*இரண்டுக்கும் முரண்பாடு இல்லாமல், இஷ்டப்படி [பதங்களுக்கு அன்வயம்] ஆகும்*

இப்படியாக பொருளின் தன்மையை இட்டு, புண்யபாபங்கள் அழியும் காலம் தீர்மானிக்கப்பட்டது; இப்படியாகும் போது,

**உபயாவிரோதாத்** (இரண்டுக்கும் முரண்பாடு இல்லாமல் ஆவதற்காக) - வேதத்துக்கும் பொருள்-தன்மைக்கும் முரண்பாடு இல்லாமல்,

स्वभावस्य चाविरोधेन **छन्दतः** यथेष्टं पदानामन्वयो वर्णनीयः। कौषतकिवाक्ये, **''तत् सुकृतदुष्कृते धूनुते''**(कौ.1-37)[1] इति चरमश्रुतो वाक्यावयवः, **''एतं देवयानं पन्थानमापद्य''**(कौ.1-21)[2] इति प्रथमश्रुतावयवात् प्रागनुगमयितव्य इत्यर्थः॥ २८ ॥

अत्र पूर्वपक्षी प्रत्यवतिष्ठते-

**३८३.गतेरर्थवत्त्वमुभयथाऽन्यथा हि विरोधः (३-३-२९)**

सुकृतदुष्कृतयोरेकदेशस्य देहवियोगकाले हानिः, शेषस्य च पश्चादिति **उभयधा** कर्मक्षये सत्येव **गतेरर्थवत्त्वम्**; देवयानगतिश्रुतेरर्थवत्त्वमित्यर्थः। **अन्यथा हि विरोधः** - देहवियोगकाल एव सर्वकर्मक्षये सूक्ष्मशरीरस्यापि विनाशः स्यात्; तथा सति केवलस्याऽऽत्मनो गमनं नोपपद्यते। अत उत्क्रान्तिसमये विदुषो निश्शेषकर्मक्षयो नोपपन्नः॥२९॥

अत्रोत्तरम् -

**३८४.उपपन्नस्तल्लक्षणार्थोपलब्धेर्लोकवत् (३-३-३०)**

---

ஸதி, உபயாவிரோதேந ஶ்ருதே: அர்தஸ்வபாவஸ்ய சாவிரோதேந *சந்தத:* - யதேஷ்டம் பதாநாமந்வயோ வர்ணநீய:। கௌஷதகிவாக்யே, *''தத் ஸுக்ருததுஷ்க்ருதே தூநுதே''*(கௌ.1-37)[1] இதி சரமஶ்ருதோ வாக்யாவயவ:, *''ஏதம் தேவயாநம் பந்தாநமாபத்ய''*(கௌ.1-21)[2] இதி ப்ரதமஶ்ருதாவயவாத் ப்ராக் அநுகமயிதவ்ய: இத்யர்த:।। 28 ।।

அத்ர பூர்வபக்ஷீ ப்ரத்யவதிஷ்டதே -

**383. கதேரர்தவத்த்வமுபயதாऽந்யதா ஹி விரோத: (3-3-29)**

ஸுக்ருததுஷ்க்ருதயோரேகதேஶஸ்ய தேஹவியோககாலே ஹாநி:, ஶேஷஸ்ய ச பஶ்சாதிதி **உபயதா** கர்மக்ஷயே ஸத்யேவ *கதேரர்தவத்த்வம்;* தேவயாநகதிஶ்ருதே: அர்தவத்த்வம் இத்யர்த:। *அந்யதா ஹி விரோத:* - தேஹவியோககால ஏவ ஸர்வகர்மக்ஷயே ஸூக்ஷ்மஶரீரஸ்யாபி விநாஶ: ஸ்யாத், ததா ஸதி கேவலஸ்ய ஆத்மந: கமநம் நோபபத்யதே। அத: உத்க்ராந்திஸமயே விதுஷோ நிஶ்ஶேஷகர்மக்ஷய: நோபபந்ந:।। 29 ।।

அத்ரோத்தரம்-

**384.உபபந்நஸ்தல்லக்ஷணார்தோபலப்தேர்லோகவத்(3-3-30)**

*உபபந்ந* ஏவ உத்க்ராந்திகாலே ஸர்வகர்மக்ஷய:। கதம்? *தல்லக்ஷணார்-*

**சந்தத:** (விருப்பப்படி) - விருப்பப்படி பதங்களுக்கு அன்வயம் (முன்-பின் பதங்களுடன் சேர்த்தல்) வர்ணிக்கப்பட வேண்டும். கௌஷீதகீ-வாக்யத்தில் கடைசியில் சொல்லப்பட்ட வாக்ய-பகுதியான [1]**''அப்போது புண்யபாபங்களை விடுகிறான்''** என்பது, [2]**''இந்த தேவயான-வழியை அடைந்து''** என்று முதலில் சொன்ன வாக்ய-பகுதிக்கு முன் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும் என்று பொருள்.

*(அத்யயனம் செய்யும் வாக்ய-வரிசையை மாற்றக் கூடாது; அர்த்தம் சொல்லும்போது அந்த வாக்ய-பகுதியை முன்னம் சேர்த்து எண்ணிக்கொண்டு அர்த்தம் சொல்ல வேண்டும் என்று கருத்து).*



இந்த விஷயத்தில் பூர்வபக்ஷம் செய்பவன் கேட்கிறான் -

**383.(பூ)கதே: அர்த்தவத்த்வம் உபயதா அந்யதா ஹி விரோத:(3-3-29)**

***இரு விதமாக ஆனாலே, ஜீவன் செல்வதாகச் சொல்வது அர்த்தம் உள்ளதாகும்; இல்லையெனில், முரண்பாடு ஆகும்.***

**உபயதா** (இருவிதமாக ஆனாலே) - புண்யபாபங்களில் ஒரு பகுதி, ஶரீரத்தைப் பிரியும்போது அழியும், மீதி பிறகு அழியும் என்று இருவிதமாக கர்மங்கள் அழிவதாக ஆனால்தான்,

**கதே: -** தேவயான வழியில் செல்வதைச் சொல்வதானது

**அர்த்தவத்த்வம் -** அர்த்தமுள்ளது ஆகும்;

**அந்யதாஹி** (வேறுவிதமானால்) - ஶரீரத்தைப் பிரியும் காலத்திலேயே எல்லா கர்மங்களும் அழிவதானால், ஸூக்ஷ்மஶரீரத்துக்கும் கூட அழிவு ஆகிவிடும்; அப்படியானால்,

**விரோத:** (பொருந்தாமை ஆகும்) - (ஶரீரம் இல்லாமல்) ஆத்மா மட்டும் செல்கிறது என்பது பொருந்திவராது.

*(ஆத்மா செல்ல வேண்டுமானால், ஜ்ஞாநம், இச்சை, ப்ரயத்னம் தேவை; அதெல்லாம் ஶரீரம் இல்லாவிட்டால் வராது; எனவே, ஶரீரம் தேவை; அந்த ஶரீரம் நிலை நிற்பதற்காக கர்மம் தேவை; எனவே, கர்மத்தின் ஒரு சிறுபகுதி அழியாமல் உள்ளது; அது பின்னர் அழியும்)*

ஆகையால், ஶரீரத்தை விட்டு வெளியேறும் சமயத்தில் கர்மங்கள் மீதமின்றி அழியும் என்பது சரியாகாது.



இதற்கு பதில் -

**384.உபபந்ந: தல்லக்ஷணார்த்தோபலப்தே: லோகவத்(3-3-30)**

***[கர்மங்கள்அழியப் பெற்றவனுக்கும்] ஶரீரஸம்பந்தம் ஆகிற விஷயம் தெரிவதால், [ஸூக்ஷ்மஶரீரம் இருக்கலாமாதலால், ஸ்தூலஶரீரம் அழியும்போதே] கர்மம் அழிவது சரியாகும்; உலகில் ஆவதுபோல ஆகும்.***

उपपन्न एवोत्क्रान्तिकाले सर्वकर्मक्षयः। कथम्? **तल्लक्षणार्थोपलब्धेः** - क्षीण-कर्मणोऽप्याविर्भूतस्वरूपस्य देहसम्बन्धलक्षणार्थोपलब्धेः।

- **"परं ज्योतिरुपसम्पद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते...स तत्र पर्येति जक्षत् क्रीडन् रममाणः"**(छा.8-12-2,3)[1],
- **"स स्वराड्भवति। तस्य सर्वेषु लोकेषु कामचारो भवति"**(छा.7-25-2)[2],
- **"स एकधा भवति त्रिधा भवति"**(छा.7-26-2)[3]

इत्यादिषु देहसम्बन्धाख्योऽर्थो ह्युपलभ्यते। अतः क्षीणकर्मणोऽपि सूक्ष्मशरीरयुक्तस्य देवयानेन गमनमुपपद्यते॥

कथं सूक्ष्मशरीरमप्यारम्भककर्मविनाशेऽवतिष्ठत इति चेत्, विद्यामाहात्म्यादिति ब्रूमः। विद्या हि स्वयं सूक्ष्मशरीरस्यानारम्भिकापि प्राकृतसुखदुःखोपभोगसाधनस्थूलशरीरस्य सर्वकर्मणां च निरवशेषक्षयेऽपि स्वफलभूतब्रह्मप्राप्तिप्रदानाय देवयानेन पथैनं गमयितुं सूक्ष्मशरीरं स्थापयति।

**लोकवत्** - यथा लोके सस्यादिसमृद्ध्यर्थमारब्धे तटाकादिके, तद्धेतुषु तदिच्छादिषु विनष्टेष्वपि तदेव तटाकादिकमशिथिलं कुर्वन्तस्तत्र पानीयपानादि कुर्वन्ति, तद्वत्॥ ३०॥



---

*தோபலப்தே:* - க்ஷீணகர்மணோऽபி ஆவிர்பூதஸ்வரூபஸ்ய தேஹஸம்-பந்தலக்ஷணார்தோபலப்தே:।

- *"பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே" "ஸ தத்ர பர்யேதி ஜக்ஷித் க்ரீடந் ரமமாண:"*(சா.8-12-2,3)[1],
- *"ஸ ஸ்வராட்பவதி। தஸ்ய ஸர்வேஷு லோகேஷு காமசாரோ பவதி"*(சா.7-25-2)[2],
- *"ஸ ஏகதா பவதி த்ரிதா பவதி"* (சா.7-26-2)[1]

இத்யாதிஷு தேஹஸம்பந்தாக்ய: அர்தோ ஹி உபலப்யதே। அத: க்ஷீண-கர்மணோऽபி ஸூக்ஷ்மஶரீரயுக்தஸ்ய தேவயாநேந கமநமுபபத்யதே।।

கதம் ஸூக்ஷ்மஶரீரமபி ஆரம்பககர்மவிநாஶே அவதிஷ்டதே இதி சேத், வித்யாமாஹாத்ம்யாத் இதி ப்ரூம:। வித்யா ஹி ஸ்வயம் ஸூக்ஷ்ம-ஶரீரஸ்ய அநாரம்பிகாऽபி ப்ராக்ருதஸுகது:கோபபோகஸாதநஸ்தூலஶரீ-ரஸ்ய ஸர்வகர்மணாம் ச நிரவஶேஷக்ஷயேऽபி ஸ்வபலபூதப்ரஹ்மப்ராப்தி-ப்ரதாநாய தேவயாநேந பதா ஏநம் கமயிதும் ஸூக்ஷ்மஶரீரம் ஸ்தாபயதி।

**லோகவத்** - யதா லோகே ஸஸ்யாதிஸம்ருத்த்யர்தமாரப்தே தடா-காதிகே, தத்தேதுஷு ததிச்சாதிஷு விநஷ்டேஷ்வபி ததேவ தடாகாதிகம் அஶிதிலம் குர்வந்த: தத்ர பாநீயபாநாதி குர்வந்தி, தத்வத்।।30।।



**உபபந்ந:** (சரியாகும்) - ஶரீரத்தை விட்டு வெளியேறும் ஸமயத்தில் எல்லா கர்மங்களும் அழியும் என்பது சரியாகும்தான்.

எப்படி?

**தல்லக்ஷணார்த்தோபலப்தே:** - கர்மங்கள் அழியப் பெற்றவனாய், ஸ்வரூப-ஆவிர்பாவம் பெற்றவனுக்கும், ஶரீர-ஸம்பந்தம் ஆகிறவிஷயம் தெரிவதால்.

- [1]**''பர-ப்ரஹ்மத்தை அடைந்து தன் ஸ்வரூபத்துடன் ஆகிறான்; அவன் அங்கு உண்பவனாக விளையாடுபவனாக களிப்பவனாக சுற்றுகிறான்''**
- [2]**''அவன் கர்மத்துக்கு வசப்படாதவன்ஆகிறான்; அவனுக்கு எல்லா உலகங்-களிலும் விருப்பப் படியான ஸஞ்சாரம் ஆகும்''**
- [3]**''அவன் ஒருவனாக ஆகிறான்; மூன்றாக ஆகிறான்''**

முதலியவற்றில், ஶரீர-ஸம்பந்தம் எனும் விஷயம் தெரிகிறதுதான்.

ஆகையால், கர்மம் அழியப் பெற்றவனுக்கும் கூட, ஸூக்ஷ்ம-ஶரீரத்துடன் கூடியவனுக்கு தேவயான வழியால் செல்வது சரியாகும்.

**கேள்வி** - ஸூக்ஷ்மஶரீரமும் தான், (அது) உண்டாவதற்குக் காரணமான கர்மம் அழிந்தபின் எப்படி இருக்க முடியும்? - என்றால்,

**பதில்** - வித்யையின் மஹிமையால் என்று சொல்கிறோம்.

வித்யை ஆனது தானாக ஸூக்ஷ்மஶரீரத்தை உண்டாக்காது; ப்ராக்ருதமான (ப்ரக்ருதியின் மூலம் வரும்) சுக-துக்க-போகத்துக்கு காரணமான ஸ்தூல ஶரீரமும் எல்லா கர்மங்களும் கூட மீதமில்லாமல் அழிந்துவிடும்; ஆனாலும், வித்யையா-னது, தன் பலனான ப்ரஹ்ம-ப்ராப்தியைக் கொடுப்பதன் பொருட்டு, தேவயான-வழியால் இவனைச் செல்ல வைப்பதற்காக ஸூக்ஷ்மஶரீரத்தை நிலை நிறுத்தி வைக்கிறது.

**லோகவத்** (உலகத்தில் போல) - உலகில் பயிர் முதலியவற்றின் செழிப்பின் பொருட்டு உண்டாக்கிய குளம் முதலியதில், அதற்குக் காரணமான அந்த விருப்பம் முதலியவை அழிந்தாலும், அதே குளம் முதலியதை அழியாமல் செய்பவர்களாய் அதில் குடிநீர் பருகுதல் முதலியதை செய்கின்றனர்; அது-போல இங்கும் ஆகும்.

*(கர்மத்தினால் ஸ்தூலஶரீரம் பிறக்கும் போதே ஸூக்ஷ்மஶரீரமும் உண்டாக்கப்பட்டு இருக்கும்; அது வித்யையால் உண்டானது அல்ல; கர்மத்தால் வந்ததுதான்; காரணமான கர்மம் அழியும்போது, ஸ்தூலஶரீரம் அழியும்; அப்போதே ஸூக்ஷ்மஶரீரமும் அழிய வேண்டும்; ஆனால், வித்யையானது, அதனை அழியாமல் நிறுத்திவிடும். பின்னர் தேவயான வழியில் ஜீவன் செல்-வதற்கு உபயோகமாக இதனைப் பாதுகாக்கும்).*



अथ स्यात् - ज्ञानिनां साक्षात्कृतपरतत्त्वानां देहपातसमये कर्मणो निरवशेषक्षयात् देहपातादूर्ध्वं सूक्ष्मशरीरमात्रं गत्यर्थमनुवर्तते, सुखदुःखानुभवो न विद्यते इति यदुक्तम्, तन्नोपपद्यते; वसिष्ठावा(पा)न्तरतपःप्रभृतीनां साक्षात्कृतपरतत्त्वानां देहपातादूर्ध्वं देहान्तर-सङ्गमः, पुत्रजन्मविपत्त्यादिनिमित्तसुखदुःखानुभवश्च दृश्यते इति। अत उत्तरं पठति -

## ३८५.यावदधिकारमवस्थितिराधिकारिकाणाम् (३-३-३१)

नास्माभिः सर्वेषां ज्ञानिनां देहपातसमये सुकृतदुष्कृतयोर्विनाश उक्तः, अपितु येषां ज्ञानिनां देहपातानन्तरमर्चिरादिका गतिः प्राप्ता, तेषां देहपातसमये सुकृतदुष्कृतहानिरुक्ता।

वसिष्ठादीनां त्वाधिकारिणां न देहपातानन्तरमर्चिरादिगतिप्राप्तिः; प्रारब्धस्याधिकार-स्यासमाप्तत्वात्। तेषां कर्मविशेषेणाधिकारविशेषं प्राप्तानां यावदधिकारसमाप्ति तदारम्भकं कर्म न क्षीयते। प्रारब्धस्य हि कर्मणो भोगादेव क्षयः। अत आधिकारिकाणां तदारम्भकं कर्म यावदधिकारमवतिष्ठते। अतस्तेषां न देहपातादनन्तरमर्चिरादिगतिप्राप्तिः॥३१॥

इति साम्परायाधिकरणम् ॥ १२ ॥

அத ஸ்யாத் - ஜ்ஞாநிநாம் ஸாக்ஷாத்க்ருதபரதத்த்வாநாம் தேஹபாத-ஸமயே கர்மணோ நிரவஶேஷக்ஷயாத் தேஹபாதாதூர்த்வம் ஸூக்ஷ்மஶரீ-ரமாத்ரம் கத்யர்தமநுவர்ததே, ஸுகதுःகாநுபவோ ந வித்யதே இதி யதுக்-தம், தந்நோபபத்யதே; வஸிஷ்டாவா(பா)ந்தரதப:ப்ரப்ருதீநாம் ஸாக்ஷாத்-க்ருதபரதத்த்வாநாம் தேஹபாதாதூர்த்வம் தேஹாந்தரஸங்கம:, புத்ரஜந்ம-விபத்த்யாதிநிமித்தஸுகது:காநுபவஶ்ச த்ருஶ்யதே இதி, அத உத்தரம் படதி -

## 385.யாவததிகாரமவஸ்திதிராதிகாரிகாணாம் (3-3-31)

நாஸ்மாபி: ஸர்வேஷாம் ஜ்ஞாநிநாம் தேஹபாதஸமயே ஸுக்ருத-துஷ்க்ருதயோர்விநாஶ உக்த:, அபிது யேஷாம் ஜ்ஞாநிநாம் தேஹபாதா-நந்தரம் அர்சிராதிகா கதி: ப்ராப்தா, தேஷாம் தேஹபாதஸமயே ஸுக்ருத-துஷ்க்ருதஹாநிருக்தா।

வஸிஷ்டாதீநாம் து ஆதிகாரிணாம் ந தேஹபாதாநந்தரம் அர்சிராதி-கதிப்ராப்தி:, ப்ராரப்தஸ்யாதிகாரஸ்ய அஸமாப்தத்வாத்। தேஷாம் கர்ம-விஶேஷண அதிகாரவிஶேஷம் ப்ராப்தாநாம் யாவததிகாரஸமாப்தி ததா-ரம்பகம் கர்ம ந க்ஷீயதே। ப்ராரப்தஸ்ய ஹி கர்மண: போகாதேவ க்ஷய:। அத ஆதிகாரிகாணாம் ததாரம்பகம் கர்ம யாவததிகாரம் அவதிஷ்டதே। அத: தேஷாம் ந தேஹபாதாதநந்தரம் அர்சிராதிகதிப்ராப்தி:।।31।।

இதி ஸாம்பராயாதிகரணம் ।। 12 ।।

**கேள்வி -** பரம்பொருளை நேராக அறிந்த ஜ்ஞானிகளுக்கு ஶரீரம் அழியும் போது, கர்மம் மீதியில்லாமல் அழிகிறது; ஆதனால், ஶரீரம் அழிந்தபின், ஸூக்ஷ்ம-ஶரீரம் மட்டும் (தேவயானவழியில்) செல்வதற்காக தொடரும்; ஆனால், சுக-துக்க-அனுபவம் கிடையாது என்று (ஸித்தாந்தத்தில்) சொல்லப்பட்டது; அது சரியா காது; ஏனெனில், பரம்பொருளை நேராக அறிந்தவர்களான வஸிஷ்டர், அவாந்தர-தபஸ் முதலியவர்களுக்கு ஶரீரம் அழிந்தபின்னர் மற்றொரு ஶரீரத்துடன் சேர்வது காணப்படுகிறது; மகனுடைய பிறப்பு-இறப்பு முதலிய காரணத்தால் சுக-துக்க-அனு-பவமும் காணப்படுகிறது - என்று.

*(அவாந்தர-தபஸ் என்பவர், வேத-ஆசார்யரான மஹர்ஷி; அவருக்கு பெருமாள் விசேஷ-அனுக்ரஹம் செய்து, அடுத்த ஜன்மத்தில் வ்யாஸராகப் பிறக்க வைத்து, தானும் ஆவேச-அவதாரம் செய்தார்; வஸிஷ்டர் ப்ரஹ்மாவின் மானஸ-புத்ரர்; நிமியின் சாபத்தால், ஶரீரத்தை விட்டு, மீண்டும் ப்ரஹ்மாவின் அனுக்ரஹத்தால், மித்ராவருணர்களுக்குப் பிறந்தார்; இவர்கள் எல்லாம் ப்ரஹ்ம-ஜ்ஞானிகள்; ஆனாலும், ஶரீர-முடிவில் மொத்த புண்யபாப கர்மமும் தொலையவில்லை; அடுத்த பிறவி எடுக்கின்றனர்; அது எப்படி?)*

அதற்கு பதில் சொல்கிறார் -

## 385.யாவததிகாரம் அவஸ்திதி: ஆதிகாரிகாணாம்(3-3-31)

***அதிகாரத்தில் நியமிக்கப் பட்டவர்களுக்கு அதிகாரம் இருக்கும் வரை [கர்மங்களை விடாமல்] இருத்தல் ஆகும்.***

எல்லா ஜ்ஞாநிகளுக்கும் ஶரீரம் அழியும்போது புண்யபாபங்கள் அழியும் என்பது எங்களால் சொல்லப்படவில்லை; மாறாக, எந்த ஜ்ஞாநிகளுக்கு ஶரீரம் அழிந்தபின்னர் அர்ச்சிராதி-கதி கிடைக்கிறதோ, அவர்களுக்கு ஶரீரம் அழியும் சமயத்தில் புண்யபாபங்களின் அழிவு சொல்லப்பட்டது.

வஸிஷ்டர் முதலியவர்களோ ஆதிகாரிகர்கள் - அதிகாரத்தில் (பதவியில்) நியமிக்கப் பட்டவர்கள்; (அவர்களுக்கு)ஶரீரம் போனவுடன் அர்ச்சிராதி-கதி என்-பது கிடையாது; ஏனெனில், (அவர்களுக்கு) ஆரம்பிக்கப்பட அதிகாரம் (பதவி) முடியவில்லை; கர்ம-விசேஷத்தினால் விசேஷமான பதவியைப் பெற்ற அவர்க-ளுக்கு அந்த பதவி முடியும்வரை அதற்குக் காரணமான கர்மம் அழியாது; ஏனெனில், ப்ராரப்த-கர்மத்தின் (பலன் தர ஆரம்பித்த கர்மத்தின்) அழிவானது, போகத்தால் (பலனை அனுபவித்தால்) மட்டுமே ஆகும்; ஆகையால், அதிகாரத்-தில் நியமிக்கப்பட்டவர்களுக்கு அதற்குக் காரணமான கர்மம் ஆனது, அதிகாரம் இருப்பது வரை இருக்கும்; ஆகவே, அவர்களுக்கு ஶரீரம் அழிந்தவுடன் அர்ச்சிராதி கதியை அடைதல் என்பது கிடையாது.

**ஸாம்பராயாதிகரணம் முற்றிற்று.**

# 95.அநியமாதிகரணம்(3-3-13)

## முன் குறிப்பு

உபாஸனம் செய்தவர் ப்ரஹ்மலோகத்தை அடைவதற்கு செல்ல வேண்டிய வழி ஒன்று உண்டு; அதற்கு தேவயானம் / அர்ச்சிராதிகதி என்று பெயர்; இது, உபகோ-ஸல-வித்யை, பஞ்சாக்னிவித்யை, பர்யங்கவித்யை முதலிய சில வித்யைகளில் மட்டுமே சொல்லப்படுகிறது; அதில் விசாரம் - அந்த வித்யைகளை உபாஸனம் செய்பவருக்கு மட்டும் அர்ச்சிராதி-கதியா? அல்லது பொதுவாக ப்ரஹ்ம-வித்யை எதுவானாலும், ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவர்கள் எல்லாருக்கும் உண்டா?

**பூர்வபக்ஷம்** - எந்த வித்யையில் அர்ச்சிராதி-கதி சொல்லியுள்ளதோ, அந்த வித்-யையை அனுஷ்டானம் செய்பவருக்கு மட்டுமே அந்த கதி உண்டு; மற்றவருக்கு அது சொல்லாதபடியால், வர முடியாது.

**ஸித்தாந்தம்** - பஞ்சாக்னிவித்யையில், ''யாவர் பஞ்சாக்னிவித்யையின் படி உபா-ஸனம் செய்கிறாரோ, யாவர் ஸத்யத்தை / தபஸ்ஸினை உபாஸனம் செய்கிறாரோ அவர்களுக்கும் அர்ச்சிராதிகதி என்று சொல்கிறது. இங்கு ஸத்யம், தபஸ் என்றால் ப்ரஹ்மம் என்று அர்த்தம்; எனவே, பஞ்சாக்னிவித்யை தவிர பொதுவாக ப்ரஹ்மத்தை உபாஸனம் செய்பவர் எல்லாருக்கும் அர்ச்சிராதிகதி உண்டு என சொன்னதாக ஆகிறது.

**பூர்வபக்ஷம்** - இங்கு ஸத்யம்/தபஸ் என்று சொன்னதன் மூலம் எல்லா ப்ரஹ்ம-வித்யையையும் குறித்ததாக ஆகாது; அப்படியானால், எல்லா ப்ரஹ்மவித்யைக்கும் அர்ச்சிராதி-கதி உண்டு என கிடைத்து விடும்! அப்படியானால், அதே உபநிஷத்தில், உபகோஸல-வித்யையில் அர்ச்சிராதிகதியை மீண்டும் சொன்னது எதற்கு? எனவே, அந்தந்த வித்யையினருக்கு மட்டுமே அர்ச்சிராதிகதி என்று சொல்ல வேண்டும்.

**ஸித்தாந்தம்** - உபகோஸல-வித்யையில், இந்த கதி மூலமாக செல்பவருக்கு மறு-பிறப்பு ஆகிற ஸம்ஸாரம் கிடையாது என்று சொல்கிறது; அதைச் சொல்வதற்காக வந்த வாக்யமே தவிர கதியைச் சொல்ல வந்த வாக்யம் அல்ல. எனவே, ஸத்யம்/தபஸ் என்று குறிப்பிட்டதன் மூலம் ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவர் எல்லாருக்கும் அர்ச்சிராதி-கதி உண்டு என்று பஞ்சாக்னிவிதையில் சொல்கிறது.

கதி-பாதத்தில் (4-3 வது பாதம்) அர்ச்சிராதி-கதி பற்றிய விசாரங்கள் உள்ளன.

இந்த அர்ச்சிராதி-கதியை எல்லா வித்யைகளிலும் சிந்தனம் செய்ய வேண்டும் என்-றும் வ்யாக்யானங்களில் சாதித்துள்ளனர்.

# ९५.अनियमाधिकरणम् (३-३-१३)

## ३८३.अनियमः सर्वेषामविरोधः शब्दानुमानाभ्याम् (३-३-३२)

उपकोसलादिषु येषूपासनेष्वर्चिरादिगतिः श्रूयते, किं तन्निष्ठानामेव तया ब्रह्मप्राप्तिः, उत सर्वेषां ब्रह्मोपासननिष्ठानामिति संशये,

इतरेष्वनाम्नानात्, **''ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते''**(छा.5-10-1)[1], **''श्रद्धां सत्यमुपासते''**(बृ.8-2-15)[2] इति इतरसकलब्रह्मविद्योपस्थापकत्वे प्रमाणाभावाच्च तन्निष्ठानामेव,

इति प्राप्तेऽभिधीयते - **अनियमः** इति। **सर्वेषां** - सर्वोपासननिष्ठानां तयैव गन्तव्यत्वात् तन्निष्ठानामेवेति नियमो नास्ति। सर्वेषां तयैव गमने हि सति, **शब्दानुमानाभ्यां** - श्रुतिस्मृतिभ्यामविरोधः। अन्यथा विरोध एवेत्यर्थः।

श्रुतिस्तावत् छान्दोग्यवाजसनेयकयोः पञ्चाग्निविद्यायामर्चिरादिमार्गेण सर्वब्रह्मोपासननिष्ठानां गमनमाह।

★ **''य एवमेतद्विदुः, ये चामी अरण्ये श्रद्धां सत्यमुपासते तेऽर्चिषमभिसम्भवन्ति''** (बृ.8-12-15)[1] इति वाजसनेयके;

---

# 95.அநியமாதிகரணம் (3-3-13)

## 386.அநியம: ஸர்வேஷாமவிரோத: ஶப்தாநுமாநாப்யாம் (3-3-32)

உபகோஸலாதிஷு யேஷு உபாஸநேஷு அர்சிராதிகதி: ஶ்ரூயதே, கிம் தந்நிஷ்டாநாமேவ தயா ப்ரஹ்மப்ராப்தி:, உத ஸர்வேஷாம் ப்ரஹ்மோபாஸநநிஷ்டாநாம் இதி ஸம்ஶயே,

இதரேஷு அநாம்நாநாத், *''யே சேமேऽரண்யே ஶ்ரத்தா தப இத்யுபாஸதே''*(சா.5-10-1) , *''ஶ்ரத்தாம் ஸத்யமுபாஸதே''* (8-2-15)[2] இதி இதரஸகலப்ரஹ்மவித்யோபஸ்தாபகத்வே ப்ரமாணாபாவாச்ச தந்நிஷ்டாநாமேவ

இதி ப்ராப்தேऽபிதீயதே - *அநியம:* - இதி। *ஸர்வேஷாம்* - ஸர்வோபாஸநநிஷ்டாநாம் தயைவ கந்தவ்யத்வாத் தந்நிஷ்டாநாமேவேதி நியமோ நாஸ்தி। ஸர்வேஷாம் தயைவ கமநே ஹி ஸதி, *ஶப்தாநுமாநாப்யாம்* - ஶ்ருதிஸ்ம்ருதிப்யாம் அவிரோத:। அந்யதா விரோத ஏவேத்யர்த:।

ஶ்ருதிஸ்தாவத் சாந்தோக்ய-வாஜஸநேயகயோ: பஞ்சாக்நிவித்யாயாம் அர்சிராதிமார்கேண ஸர்வப்ரஹ்மோபாஸநநிஷ்டாநாம் கமநமாஹ।

★ *''ய ஏவமேதத்வித:, யே சாமீ அரண்யே ஶ்ரத்தாம் ஸத்யமுபாஸதே தேऽர்சிஷமபிஸம்பவந்தி''* (ப்ரு.8-12-15)[1] இதி வாஜஸநேயகே,

# 95.அநியமாதிகரணம்(3-3-13)

## 386.அநியம: ஸர்வேஷாம் அவிரோத: ஶப்தாநுமாநாப்யாம்(3-3-32)

*[ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவர்] அனைவருக்கும் [அர்ச்சிராதிகதி] ஆகும்; நியமம் கிடையாது; [அப்படியானாலே], வேத-ஸ்ம்ருதிகளுடன் முரண்பாடு இல்லாமல் ஆகும்.*

**ஸந்தேஹம்**

உபகோஸல-வித்யை முதலிய எந்த வித்யைகளில் அர்ச்சிராதி-கதி ஓதப்படுகிறதோ, அந்த உபாஸனத்தை அனுஷ்டானம் செய்பவருக்கு மட்டுமே அந்த வழியால் ப்ரஹ்மத்தை அடைதல் ஆகுமா? அல்லது ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவர்கள் எல்லாருக்கும் ஆகுமா? என்று ஸந்தேஹம் ஆகும்போது,

**பூர்வபக்ஷம்**

அந்த வித்யையை அனுஷ்டானம் செய்பவர்களுக்கு மட்டுமே ஆகும்; ஏனெனில், பிற வித்யைகளில் இந்த அர்ச்சிராதிகதியை ஓதவில்லை; மேலும்,-

- [1]**''காட்டில் இருந்து கொண்டு ஶ்ரத்தையை முன்னிட்டு தபஸ்ஸினை (ப்ரஹ்மத்தை) யார் இப்படி உபாஸனம் செய்கின்றனரோ (அவர்களும் அர்ச்சிராதி கதியில் செல்வர்)'',**
- [2]**''ஶ்ரத்தையை முன்னிட்டு ஸத்யத்தை (ப்ரஹ்மத்தை) உபாஸனம் செய்கின்றனரோ (அவர்களும் அர்ச்சிராதிகதியில் செல்வர்)''**

என்று சொன்னது, வேறு எல்லா ப்ரஹ்ம-வித்யைகளையும் நினைவுறுத்தும் என்பதற்கு ப்ரமாணம் கிடையாது.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிடும்போது ஸித்தாந்தம் சொல்லபடுகிறது - **அநியம:** என்று.

**ஸர்வேஷாம்** (எல்லாருக்கும் ஆவதால்) - ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவர் எல்லாரும் அந்த (அர்ச்சிராதி) வழியாலே போக வேண்டியிருப்பதால்,

**அநியம:** (நியமம் இல்லை) - (அர்ச்சிராதிகதி ஓதப்படும் உபகோஸலவித்யை முதலிய) அந்த உபாஸனம் செய்பவர்களுக்கு மட்டுமே என்னும் நியமம் கிடையாது.

ஏனெனில், எல்லாரும் அந்த வழியால் செல்வர் என்பது இருந்தால்தான்

**ஶப்தாநுமாநாப்யாம் அவிரோத:** - வேதங்களோடும் ஸ்ம்ருதிகளோடும் முரண்பாடு இல்லாமல் ஆகும்; இல்லாவிட்டால், முரண்பாடுதான் ஆகும் என்று அர்த்தம்.

வேதமாவது - சாந்தோக்ய-வாஜஸனேய-உபநிஷத்-வாக்யங்களில் பஞ்சாக்னி-வித்யையில் ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவர் எல்லாருக்கும் அர்ச்சிராதி-மார்க்கத்தால் செல்வதைச் சொல்கிறது -

- [1]**''யாவர் இப்படி இதனை உபாஸநம் செய்கிறார்களோ, யாவர் காட்டில்**

★ **"तद्य इत्थं विदुर्ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते, तेऽर्चिषमभिसम्भवन्ति"** (छा.5-10-1)[1] इति छान्दोग्ये।

"य इत्थं विदुः" इति पञ्चाग्निविद्यानिष्ठान्, "ये चेमे" इत्यादिना श्रद्धापूर्वकं ब्रह्मोपासीनांश्चोद्दिश्यार्चिरादिका गतिरुपदिश्यते। **"सत्यं ज्ञानमनन्तं ब्रह्म"** (तै.1.आन.2)[2], **"सत्यं त्वेव विजिज्ञासितव्यम्"** (छा.7-16)[3] इति सत्यशब्दस्य ब्रह्मणि प्रसिद्धेः, तपश्शब्दस्यापि तेनैकार्थ्यात् सत्यतपश्शब्दाभ्यां ब्रह्मैवाभिधीयते। श्रद्धापूर्वकं ब्रह्मोपासनं चान्यत्र श्रुतम् **"सत्यं त्वेव विजिज्ञासितव्यम्"** (छा.7-16)[4] इत्युपक्रम्य, **"श्रद्धा त्वेव विजिज्ञासितव्या"** (छा.7-16)[5] इति।

स्मृतिरपि,

**"अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम्।**
**तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः॥"** (गी.8-24)[6]

इति सर्वेषां ब्रह्मविदामनेनैव मार्गेण गमनमित्याह। एवंजातीयकाः श्रुतिस्मृतयो बह्व्यः सन्ति। एवं सर्वविद्यासाधारणी इयं गतिः प्राप्तैवोपकोसलविद्यादावनूद्यते॥ ३२ ॥

इति अनियमाधिकरणम्॥ १३ ॥

---

★ *"தத்ய இத்தம் விதுர்யே சேமேऽரண்யே ஶ்ரத்தா தப இத்யுபாஸதே, தேऽர்சி-ஷமபிஸம்பவந்தி"* (சா.5-10-1)[2] இதி சாந்தோக்யே।

'ய இத்தம் விது:' இதி பஞ்சாக்நிவித்யாநிஷ்டாந், 'யே சேமே' இத்-யாதிநா ஶ்ரத்தாபூர்வகம் ப்ரஹ்மோபாஸீநாம்ஶ்ச உத்திஶ்ய அர்சிராதிகா கதிருபதிஶ்யதே। *"ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம"* (தை.1.ஆந.2)[3], *"ஸத்யம் த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யம்"* (சா.7-16)[4] இதி ஸத்யஶப்தஸ்ய ப்ரஹ்மணி ப்ரஸித்தே: தப:ஶப்தஸ்யாபி தேநைகார்த்யாத் ஸத்யதப:ஶப்தாப்யாம் ப்ரஹ்மைவாபிதீயதே। ஶ்ரத்தாபூர்வகம் ப்ரஹ்மோபாஸநம் சாந்யத்ர ஶ்ருதம் *"ஸத்யம் த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யம்"* (சா.7-16)[5] இத்யுபக்ரம்ய, *"ஶ்ரத்தா த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யா"* (சா.7-16)[6] இதி।

ஸ்ம்ருதிரபி,

*"அக்நிர்ஜ்யோதிரஹ: ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணம்।*
*தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநா:।।"* (கீ.8-24)[1]

இதி ஸர்வேஷாம் ப்ரஹ்மவிதாம் அநேநைவ மார்கேண கமநமித்யாஹ। ஏவம்ஜாதீயகா: ஶ்ருதிஸ்ம்ருதயோ பஹ்வ்ய: ஸந்தி। ஏவம் ஸர்வவித்யா-ஸாதாரணீ இயம் கதி: ப்ராப்தைவ உபகோஸலவித்யாதௌ அநூத்யதே।।32।।

இதி அநியமாதிகரணம்।। 13 ।।

**(இருந்து கொண்டு), ஶ்ரத்தையை (முன்னிட்டு) ஸத்யத்தை உபாஸநம் செய்கிறார்களோ, அவர்களும் அர்சிஷ்-தேவனை அடைவர்''** என்று வாஜ-ஸனேயகத்தில்.

[2]**''யாவர் இப்படி உபாஸநம் செய்கிறார்களோ, யாவர் காட்டில் (இருந்து-கொண்டு), ஶ்ரத்தையை(முன்னிட்டு) தபஸ்ஸினை உபாஸநம் செய்கி-றார்களோ, அவர்களும் அர்சிஷ்-தேவனை அடைவர்''** என்று சாந்தோக்-யத்தில்.

(இங்கு) ''யாவர் இப்படி உபாஸனம் செய்வரோ'' என்று (முன் சொன்ன) பஞ்சாக்னி-வித்யையை அனுஷ்டானம் செய்பவர்களைக் குறிக்கிறது; ''யாவர் காட்டில்'' என்பது முதலியதால், ஶ்ரத்தையை முன்னிட்டு ப்ரஹ்மத்தை உபாஸனம் செய்பவர்களையும் குறிக்கிறது; இவர்களைக் குறித்து, அர்ச்சிராதி-கதி உபதேஶம் செய்யப் படுகிறது. ஏனெனில், [3]**''ஸத்யம் ஜ்ஞாநம் அனந்தம் ப்ரஹ்ம''**, [4]**''ஸத்யம் தான் அறியப்பட வேண்டியது''** என்பதாக ஸத்யம் எனும் சொல்லானது ப்ரஹ்மத்-தைப் பற்றியதாக ப்ரஸித்தம். (நன்கு தெரிந்ததுதான்). 'தபஸ்' என்னும் சொல்லும் அதனுடன் ஒரே பொருளில் ஆவதால், 'ஸத்யம்', 'தபஸ்' எனும் சொற்களால் ப்ரஹ்மம்தான் சொல்லப்படுகிறது. ஶ்ரத்தையை முன்னிட்டுக்கொண்டு ப்ரஹ்ம-உபாஸனம் செய்வதும் வேறொரு இடத்தில் ஓதப்படுகிறது - [5]**''ஸத்யம்தான் அறியப்பட வேண்டும்''** என்று ஆரம்பித்து, [6]**''ஶ்ரத்தைதான் சம்பாதிக்கப்பட-வேண்டும்''** என்று. (பூமாதிகரணம் 1-3-2 காண்க)

ஸ்ம்ருதியும், [1]**''அக்னியாகிற ஜ்யோதி, பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம் ஆகிற ஆறுமாசங்கள் (என்றிது வழியாகும்); ப்ரஹ்ம-ஜ்ஞானிகளான மக்கள் அந்த வழியில் செல்பவர்களாய் ப்ரஹ்மத்தை அடைவர்''** என்று ப்ரஹ்மஜ்ஞா-நிகள் எல்லாருக்கும் இந்த வழியாலேயே செல்லுதல் ஆகும் என்கிறது.

இந்த வகையிலான ஶ்ருதி-ஸ்ம்ருதி வாக்யங்கள் பல உள்ளன.

இப்படி எல்லா ப்ரஹ்மவித்யைக்கும் பொதுவான இந்த அர்ச்சிராதிகதியானது, உபகோஸல-வித்யை முதலியதில் உள்ளதாக ஏற்பட்டதுதான், திருப்பி சொல்லப்-படுகிறது.

*(உபகோஸல-வித்யை முதலியதில் அர்ச்சிராதி-கதி சொன்னது எதற்காக என்று ஆராய வேண்டும்; இந்தவித்யைகளை அனுஷ்டானம் செய்பவர் அர்ச்சிராதி-வழியால் செல்வர் எனும் விஷயத்தைத் தெரிவிப்பதற்காக சொல்லவில்லை; ஏனெனில், அது பொதுவாக எல்லா ப்ரஹ்ம-வித்யைகளுக்கும் உள்ளபடியால், இங்கு ஏற்கனவே தெரிந்ததுதான்; சொல்ல வேண்-டிய தேவையில்லை; மாறாக, இந்த அர்ச்சிராதிகதியால் செல்பவர் மீண்டும் ஸம்ஸாரத்துக்கு திரும்பி வரமாட்டார் என்பதைச் சொல்வதற்காக அர்ச்சிராதி-கதியைக் குறிப்பிடுகிறது).*

**அநியமாதிகரணம் முற்றிற்று.**

# 96.அக்ஷரத்யதிகரணம்(3-3-14)

## முன் குறிப்பு

அக்ஷர-வித்யையில் ''ஸ்தூலம் அல்ல; அணு அல்ல'' முதலியதாக ப்ரஹ்மத்தைச்-சொல்கிறது; உலகில் பொருள்கள் பெரிதாக, சிறிதாக இருக்கும்; ப்ரஹ்மமோ உலகப் பொருட்களை விட முற்றிலும் வேறுபட்டது என்று அர்த்தம்; ஸ்தூலமாகாமை முதலிய இந்த குணங்களை மொத்தமாகச் சேர்த்து பொதுவாக அமலத்வம் என்பர் - தோஷங்-களுக்கு எதிர்த்தட்டான தன்மை என்று அர்த்தம். ப்ரஹ்மத்தின் இந்த குணத்தை எல்லா வித்யைகளிலும் எண்ண வேண்டும்.

**பூர்வபக்ஷம்** – ப்ரஹ்ம-ஸ்வரூபத்தை புரிய வைக்கும் குணங்கள் ஸத்யத்வம், ஜ்ஞாந-த்வம் முதலியவை; அவை எல்லா வித்யையிலும் சேரும்; ஆனால், தோஷமின்மை என்பது ஸ்வரூபத்தை புரிய வைக்கும் குணம் அல்ல; முதலில் ப்ரஹ்ம-ஸ்வரூபம் புரிந்தால்தான், அதில் தோஷமில்லை என்று சொல்ல முடியும்! ப்ரஹ்ம-ஸ்வரூபமே புரியாதபோது அதில் தோஷம் இருக்கிறதா, இல்லையா என்பதை விளக்க முடியாது; எனவே,அது ஸ்வரூ-பத்தை புரிய வைக்கும் குணம் அல்ல; எனவே, அதுஎல்லா வித்யையிலும் சேராது.

**ஸித்தாந்தம்** – எல்லா வித்யையிலும், ப்ரஹ்ம-ஸ்வரூபத்தை பொதுவாக தெரிந்து கொண்டால் போதாது; தனிப்பட்ட அடையாளத்துடன் பிரித்து தெரிந்து கொள்ள வேண்-டும்; ஸத்யத்வம் முதலியதோ, ஜீவனுக்கும் உண்டு; ப்ரஹ்மத்தின் தனிப்பட்ட அடையாள-மாக ஆகாது; அதனால், தோஷமற்ற தன்மை என்பதையும் ப்ரஹ்மத்தின் தனி-அடையா-ளமாக சேர்த்துக்கொள்ள வேண்டும்; ஜீவனுக்கு புண்யபாப-கர்மம் முதலிய தோஷத் தகுதி உள்ளதால், தோஷத்துக்கு எதிர்ப்பட்ட தன்மை இல்லை. எனவே, அமலத்வம் என்பதும் ப்ரஹ்மத்துக்கு ஸ்வரூபநிரூபக குணம்தான்; இதையும் சேர்த்து எல்லா வித்யையிலும் எண்ண வேண்டும்.

முதல் ஸூத்ரத்தில் இரு காரணங்கள் சொல்கிறார் - 1. ஸாமான்யம்( ஒன்றாதல் )-எல்லா வித்யைகளிலும் ஒரே விஷயமாக ப்ரஹ்மம் ஆதல். 2. தத்பாவ:( அதன் தன்மை ) – அந்த ப்ரஹ்மம் எந்த ஜ்ஞாநத்தில் தெரிகிறதோ, அந்த ஜ்ஞாநத்தில் கூடவே தெரியும் தன்மை என்று அர்த்தம். இவை இரு தனி காரணங்கள் அல்ல; இரண்டும் சேர்த்து ஒரே காரணம்; எல்லா வித்யையிலும் விஷயமாகும் ப்ரஹ்மம் ஒன்றுதான்; அந்த ப்ரஹ்மம் தெரியும்போது எப்போதும் இந்த குணங்களும் கூடவே தெரியும்; ஆகையால், இவை எல்லா வித்யையிலும் சேரும் என்று கருத்து.

இந்த அதிகரணம் மூலம் அமலத்வம் என்பது ஸ்வரூபநிரூபக-குணம் என்று தெரிகிறது; இதை அடிப்படையாக வைத்து, ஆநந்தாத்யதிகரணத்தில்( 3-3-4 )இதையும் சேர்த்து, ஸ்வரூப-நிரூபக-குணங்கள் ஐந்து சொல்லப்பட்டன.

இந்த அதிகரணத்தில் இரண்டாவது ஸூத்ரமானது, 3-3-13 ஸூத்ரத்தின் விளக்கமே.

# ९३. अक्षरध्यधिकरणम् (३-३-१४)

## ३८७. अक्षरधियां त्ववरोधः सामान्यतद्भावाभ्यामौपसदवत् तदुक्तम् (३-३-३३)

बृहदारण्यके श्रूयते, **"एतद्वै तदक्षरं गार्गि ब्राह्मणा अभिवदन्ति अस्थूलमनण्व-ह्रस्वमदीर्घमलोहितमस्नेहमच्छायमतमोऽवाय्वनाकाशमसङ्गमरसमगन्धमचक्षुष्कम-श्रोत्रमवागमनोऽतेजस्कमप्राणमसुखममात्रमनन्तरमबाह्यम्। न तदश्नाति किञ्चन...। एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठतः"** (बृ.5-8-7,8)[1] इति।

तथा आथर्वणे, **"अथ परा यया तदक्षरमधिगम्यते यत्तदद्रेश्यमग्राह्यमगोत्रमवर्णम-चक्षुश्श्रोत्रं तदपाणिपादम्"** (मु.1-1-5)[2] इति।

तत्र संशयः - किमिमे अक्षरशब्दनिर्दिष्टब्रह्मसम्बन्धितया श्रुताः अस्थूलत्वादयः प्रपञ्चप्रत्यनीकतास्वरूपाः सर्वासु ब्रह्मविद्यास्वनुसन्धेयाः, उत यत्र श्रूयन्ते तत्रैव इति।

---

# 96. அக்ஷரத்யதிகரணம் (3-3-14)

## 387. அக்ஷரதியாம் த்வவரோதஃ ஸாமாந்யதத்பாவாப்யாமௌபஸதவத் தது க்தம் (3-3-33)

**ப்ருஹதாரண்யகே ஶ்ரூயதே,** ***"ஏதத்வை ததக்ஷரம் கார்கி ப்ரஹ்மணா அபிவதந்தி அஸ்தூலம் அண்வஹ்ரஸ்வம் அதீர்கம் அலோஹிதம் அஸ்நேஹம் அச்சாயம் அதம: அவாவு அநாகாஶம் ஸங்கமரஸம் அகந்தம் அசக்ஷுஷ்கம் அஶ்-ரோத்ரம் அவாக் அமந: அதேஜஸ்கம் அப்ராணம் அஸுகம் அமாத்ரம் அநந்தரம் அபாஹ்யம்। ந ததஶ்நாதி கிஞ்சந...। "ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்கி ஸூர்யாசந்த்ரமஸௌ வித்ருதௌ திஷ்டத:"*** (சா.5-8-7,8)[1] **இதி।**

**ததா ஆதர்வணே,** ***"அத பரா யயா ததக்ஷரம் அதிகம்யதே யத்ததத்ரேஶ்யம் அக்ராஹ்யம் அகோத்ரம் அவர்ணம் அசக்ஷுஶ்ஶ்ரோத்ரம் ததபாணிபாதம்"*** (மு.1-1-5)[1] **இதி।**

**தத்ர ஸம்ஶய: - கிமிமே அக்ஷரஶப்தநிர்திஷ்டப்ரஹ்மஸம்பந்திதயா ஶ்ருதா: அஸ்தூலத்வாதய: ப்ரபஞ்சப்ரத்யநீகதாஸ்வரூபா: ஸர்வாஸு ப்ரஹ்மவித்யாஸு அநுஸந்தேயா:, உத யத்ர ஶ்ரூயந்தே தத்ரைவ - இதி।**

# 96.அக்ஷரத்யதிகரணம்(3-3-14)

## 387.அக்ஷரதியாம் து அவரோத: ஸாமாந்ய-தத்பாவாப்யாம் ஔபஸதவத் தத் உக்தம்(3-3-33)

*அக்ஷரப்ரஹ்மத்துடன் சம்பந்தப்பட்டஜ்ஞாநங்களுக்கு[எல்லா ப்ரஹ்ம-வித்யைகளிலும்] எடுத்துக் கொள்ளுதல் [ஆகும்]; ஏனெனில், விஷயமான ப்ரஹ்மம் ஒன்றாவதாலும், அத்தன்மை இக்குணங்களுக்கு இருப்பதாலும்*

**விஷயவாக்யம்**

ப்ருஹதாரண்யகத்தில் ஓதப்படுகிறது - [1]**"கார்க்கியே, அக்ஷர-ப்ரஹ்மம் ஆனது ஸ்தூலம் அல்ல; அணு அல்ல; குறியதுஅல்ல; நெடியது அல்ல; சிவப்பானது (நிறமுடையது) அல்ல; ஒட்டுவது அல்ல; தேஜஸ் அல்ல; இருள் அல்ல; வாயு அல்ல; ஆகாசம்அல்ல; ரஸமுடையது அல்ல; தொடர்புடையது (தொடப்படும் பொருள்) அல்ல; வாசனை உடையது அல்ல; கண் உடையது அல்ல; காது உடையது அல்ல; வாக் உடையது அல்ல; மனஸ் உடையது அல்ல; தேஜஸ் உடையது அல்ல; ப்ராணன் உடையது அல்ல; மு(ஸு)கம் உடையது அல்ல; அளவு உடையது அல்ல; உட்பொருள் அல்ல (வெளியிலும் இருக்கும்); வெளிப்பொருள் அல்ல (உள்ளிலும் இருக்கும்); இந்த அக்ஷரப்ரஹ்மத்தையே ப்ரஹ்மஜ்ஞானிகள் சொல்கின்றனர்; இது எதையும் உண்பதில்லை; ..., கார்க்கியே, இந்த அக்ஷர-ப்ரஹ்மத்தின் உயர்ந்த (தடையற்ற ஸங்கல்பம் ஆகிற) கட்டளையில்தான் ஸூர்ய-சந்த்ரர்கள் தரிக்கப்பட்டு உள்ளனர்"** என்று.

அப்படியே அதர்வணவேத-உபநிஷத்தில், [2]**"எது அறியப்பட முடியாதது, எடுக்கப்பட முடியாதது, கோத்ரம் அற்றது; ஜாதி அற்றது; கண்காது அற்றது; கைகால் அற்றதோ, அந்த அக்ஷரம் எதன் மூலம் நேராகஅறியப்படுகிறதோ, அந்த பரவித்யை இனி (சொல்லப்படுவது) ஆகும்"** என்று.

**ஸந்தேஹம்**

அதில் ஸந்தேஹம் - அஸ்தூலத்வம் (ஸ்தூலம் ஆகாமை) முதலியவை, அக்ஷரம் என்ற சொல்லால் குறிக்கப்பட்ட ப்ரஹ்மத்துடன் ஸம்பந்தப்பட்டனவாக வேதத்தில் சொல்லப்பட்டவை; ப்ரபஞ்சத்துக்கு எதிர்தட்டாக (ப்ரஹ்மம்) ஆகும் தன்மையை விளக்குபவை; இவை எல்லா ப்ரஹ்ம-வித்யைகளிலும் எண்ணப்பட வேண்டியவையா? அல்லது எந்த வித்யையில் ஓதப்பட்டனவோ, அந்த வித்யையில் மட்டுமா?

किं युक्तम्? यत्र श्रुतास्तत्रैवेति। कुतः? विद्यान्तरस्य रूपभूतानां गुणानां विद्यान्तरस्य रूपत्वे प्रमाणाभावात्; प्रतिषेधरूपाणामेषामानन्दादिवत् स्वरूपावगमोपायत्वाभावाच्च। आनन्दादिभिरवगतस्वरूपे हि ब्रह्मणि स्थूलत्वादयः प्रपञ्चधर्माः प्रतिषिध्यन्ते; निरालम्बन-प्रतिषेधायोगात् -

एवं प्राप्ते प्रचक्ष्महे - **अक्षरधियां त्ववरोधः** इति। अक्षरब्रह्मसम्बन्धिनीनामस्थूल-त्वादिधियां सर्वब्रह्मविद्यास्ववरोधः - सङ्ग्रहणमित्यर्थः। कुतः? **सामान्यतद्भावाभ्याम्** - सर्वेषूपासनेषूपास्यस्याक्षरस्य ब्रह्मणः समानत्वात्, अस्थूलत्वादीनां तत्स्वरूपप्रतीतौ भावाच्च।

एतदुक्तं भवति - असाधारणाकारेण ग्रहणं हि वस्तुनो ग्रहणम्। न च केवलमानन्दादि ब्रह्मणोऽसाधारणमाकारमुपस्थापयति, प्रत्यगात्मन्यप्यानन्दादेर्विद्यमानत्वात्। हेयप्रत्य-नीको ह्यानन्दादिर्ब्रह्मणोऽसाधारणं रूपम्। प्रत्यगात्मनस्तु स्वतो हेयविरहिणोऽपि हेयसम्ब-न्धयोग्यताऽस्ति।

---

கிம் யுக்தம்? யத்ர ஶ்ருதா: தத்ரைவேதி। குத:? வித்யாந்தரஸ்ய ரூபபூதாநாம் குணாநாம் வித்யாந்தரஸ்ய ரூபத்வே ப்ரமாணாபாவாத் ச। ப்ரதிஷேதரூபாணாமேஷாம் ஆநந்தாதிவத் ஸ்வரூபாவகமோபாயத்வா-பாவாச்ச। ஆநந்தாதிபி: அவகதஸ்வரூபே ஹி ப்ரஹ்மணி ஸ்தூலத்வாதய: ப்ரபஞ்சதர்மா: ப்ரதிஷித்யந்தே, நிராலம்பநப்ரதிஷேதாயோகாத்-

ஏவம் ப்ராப்தே ப்ரசக்ஷ்மஹே - *அக்ஷரதியாம் த்வவரோத:* - இதி। அக்ஷர-ப்ரஹ்மஸம்பந்திநீநாம் அஸ்தூலத்வாதிதியாம் ஸர்வப்ரஹ்மவித்யாஸு அவரோத: - ஸங்க்ரஹணம் இத்யர்த:। குத:? *ஸாமாந்யதத்பாவாப்யாம்* - ஸர்வேஷூபாஸநேஷு உபாஸ்யஸ்யாக்ஷரஸ்ய ப்ரஹ்மண: ஸமாநத்-வாத், அஸ்தூலத்வாதீநாம் தத்ஸ்வரூபப்ரதீதௌ பாவாச்ச।

ஏததுக்தம் பவதி - அஸாதாரணாகாரேண க்ரஹணம் ஹி வஸ்துநோ க்ரஹணம்। ந ச கேவலமாநந்தாதி ப்ரஹ்மண: அஸாதாரணமாகாரமு-பஸ்தாபயதி, ப்ரத்யகாத்மந்யபி ஆநந்தாதேர்வித்யமாநத்வாத்। ஹேயப்ர-த்யநீகோ ஹி ஆநந்தாதி: ப்ரஹ்மண: அஸாதாரணம் ரூபம்। ப்ரத்யகாத்-மநஸ்து ஸ்வதோ ஹேயவிரஹிணோऽபி ஹேயஸம்பந்தயோக்யதாऽஸ்தி।

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்? எங்கு ஓதப்பட்டனவோ, அங்கு மட்டுமே எண்ணப்பட வேண்டியவை என்பது.

ஏன்?

மற்றொரு வித்யையின் ரூபம் (உபாஸன-விஷயம்) ஆகிற குணங்கள், மற்றொரு வித்யைக்கு ரூபமாக (உபாஸன-விஷயமாக) ஆவதற்கு காரணம் இல்லாத படியால்; மேலும், (உலகத் தன்மைகளை) மறுக்கும் உருவிலான இவை (அஸ்தூலத்வம் முதலியவை), இவை ஆனந்தத்வம் முதலியவை போல ஸ்வரூபத்தை அறிய உதவுபவையாக ஆகாது; ஆனந்தத்வம் முதலியவற்றை இட்டு ஸ்வரூபம் அறியப்பெற்ற ப்ரஹ்மத்தில்தானே ஸ்தூலத்வம் முதலிய ப்ரபஞ்ச-தன்மைகள் மறுக்கப்படுகின்றன; ஏனெனில், ஆதாரமான பொருள் இல்லாமல் மறுத்தல் என்பது பொருந்தாது.

*✍(மறுத்தல் என்பது ஒரு பொருளில் ஒரு சில தன்மையை இல்லையென சொல்லுதல் ஆகும்; ஆதாரமான ஒரு பொருள் இல்லாமல், வெறும் தன்மையை மறுப்பது வராது; இங்கும், ப்ரஹ்மம் எனும் ஆதார-பொருள் முதலில் தெரிந்தால்தான் அதில் ஸ்தூலத்வம் முதலியதை மறுக்க முடியும்; ப்ரஹ்மஸ்வரூபத்தை புரிய வைப்பவை ஸத்யத்வம் முதலிய குணங்கள்; அப்படி புரிந்தபின், அதில் ஸ்தூலத்வம் முதலியவற்றை இந்த வாக்யம் மறுக்கிறது; எனவே ஸ்தூலமாகாமை முதலியவை ஆதாரப் பொருளான ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தைப் புரிய வைக்க உதவாதவை; எனவே, அவை எல்லா வித்யைகளிலும் சேர்பவை அல்ல.)✍*

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்கிறோம் - **''அக்ஷரதியாம் து அவரோத:''** என்று

**அக்ஷரதியாம்** (அக்ஷரத்தின் ஜ்ஞாநங்களுக்கு) - அக்ஷரப்ரஹ்மத்துடன் ஸம்பந்தப்பட்டவையான ஸ்தூலமாகாமை முதலியது பற்றிய ஜ்ஞாநங்களுக்கு

**அவரோத:** (எடுத்துக் கொள்ளுதல்) - எல்லா ப்ரஹ்மவித்யைகளிலும் எடுத்துக் கொள்ளுதல் (ஆகும்) என்று அர்த்தம்;

ஏன்?

**ஸாமாந்ய-தத்பாவாப்யாம் -** (ஒன்றாக ஆதல், அதாக ஆதல் ஆகியவற்றால்) எல்லா உபாஸனங்களிலும் உபாஸனம் செய்யப்பட வேண்டிய அக்ஷர-ப்ரஹ்மம் என்பது ஒன்றான படியாலும், அந்த ப்ரஹ்ம-ஸ்வரூபம் பற்றிய ஜ்ஞாநத்தில் ஸ்தூலமாகாமை முதலியவை (விஷயமாக) இருப்பதாலும். (விளக்கம் முன் குறிப்பில் காண்க).

இது சொன்னதாக ஆகிறது - பொருளை அறிதல் என்பது தனிப்பட்ட உருவுடன் அறிதல்தானே! (ஒரு பொருளை பொதுவாக அறிந்தால், அதனை நன்கு அறிந்ததாக ஆகாது; தனிப்பட்ட முறையில் குறிப்பாக அறிந்தாலே நன்கு அறிந்ததாகும்). வெறும் ஆனந்தத்வம் முதலியது மட்டும் ப்ரஹ்மத்துக்கு தனிப்பட்ட உருவை அறிவுறுத்தாது; ஏனெனில், ஜீவாத்மாவில் கூட ஆனந்தத்வம் முதலியது உள்ளது; இழி-தன்மைகளுக்கு எதிர்த்தட்டான ஆனந்தத்வம் முதலியதுதான் ப்ரஹ்மத்தின் தனிப்பட்ட உரு ஆகும்; ஜீவாத்மாவுக்கோ இயல்பாக இழிதன்மை

हेयप्रत्यनीकत्वं च चिदचिदात्मकप्रपञ्चधर्मभूतस्थूलत्वादिविपरीतरूपम्। अतोऽसाधारणाकारेण ब्रह्मानुसन्दधता अस्थूलत्वादिविशेषितज्ञानानन्दाद्याकारं ब्रह्मानुसन्धेयमिति अस्थूलत्वादीनामानन्दादिवत् ब्रह्मस्वरूपप्रतीत्यन्तर्भावात् सर्वासु ब्रह्मविद्यासु तथैव ब्रह्मानुसन्धेयमिति।

गुणानां प्रधानानुवर्तित्वे दृष्टान्तमाह - **औपसदवत्** इति। यथा जामदग्न्यचतूरात्रपुरोडाश्युपसद्गुणभूतः सामवेदपठितः, ''**अग्निर्वै होत्रं वेः**''(ता.ब्रा.21-10-11)[1] इत्यादिको मन्त्रः प्रधानानुवर्तितया याजुर्वैदिकेनोपांशुत्वेन प्रयुज्यते। तदुक्तं प्रथमे काण्डे, ''**गुणमुख्यव्यतिक्रमे तदर्थत्वान्मुख्येन वेदसंयोगः**''(पू.मी.सू.3-2-9)[2] इति॥३३॥



नन्वेवं सर्वासु ब्रह्मविद्यासु ब्रह्मण एव गुणित्वात् गुणानां च प्रधानानुवर्तित्वात्, ''**सर्वकर्मा सर्वगन्धः सर्वरसः**''(छा.3-14-4)[3] इत्यादेर्गुणजातस्य प्रतिविद्यं व्यवस्थितस्याप्यव्यवस्था स्यात्। तत्राह -

## ३८८.इयदामननात् (३-३-३४)

ஹேயப்ரத்யநீகத்வம் ச சிதசிதாத்மகப்ரபஞ்சதர்மபூதஸ்தூலத்வாதிவிபரீதரூபம்। அத: அஸாதாரணாகாரேண ப்ரஹ்மாநுஸந்தததா அஸ்தூலத்வாதிவிஶேஷிதஜ்ஞாநாநந்தாத்யாகாரம் ப்ரஹ்ம அநுஸந்தேயமிதி அஸ்தூலத்வாதீநாம் ஆநந்தாதிவத் ப்ரஹ்மஸ்வரூபப்ரதீத்யந்தர்பாவாத் ஸர்வாஸு ப்ரஹ்மவித்யாஸு ததைவ ப்ரஹ்மாநுஸந்தேயமிதி।

குணாநாம் ப்ரதாநாநுவர்தித்வே த்ருஷ்டாந்தமாஹ - *ஔபஸதவத்* இதி। யதா ஜாமதக்ந்யசதூராத்ரபுரோடாஶ்யுபஸத்குணபூத: ஸாமவேதபடித:, *''அக்நிர்வை ஹோத்ரம் வே:''*(தா.ப்ரா.21-10-11)[1] இத்யாதிகோ மந்த்ர: ப்ரதாநாநுவர்திதயா யாஜுர்வைதிகேந உபாம்ஶுத்வேந ப்ரயுஜ்யதே। ததுக்தம் ப்ரதமே காண்டே, *''குணமுக்யவ்யதிக்ரமே ததர்தத்வாந்முக்யேந வேதஸம்யோக:''*(பூ.மீ.ஸூ.3-2-9)[2] இதி।। 33 ।।



நந்வேவம் ஸர்வாஸு ப்ரஹ்மவித்யாஸு ப்ரஹ்மண ஏவ குணித்வாத் குணாநாம் ச ப்ரதாநாநுவர்தித்வாத், *''ஸர்வகர்மா ஸர்வகந்த: ஸர்வரஸ:''* (சா.3-14-4)[3] இத்யாதேர்குணஜாதஸ்ய ப்ரதிவித்யம் வ்யவஸ்திதஸ்யாபி அவ்யவஸ்தா ஸ்யாத்। தத்ராஹ -

## 388.இயதாமநநாத் (3-3-34)

கிடையாதானாலும், இழி-தன்மைகளுடன் சேரும் தகுதி உள்ளது; (அதனால்தானே கர்ம-ஸம்பந்தமும் ஸம்ஸாரமும் ஜீவனுக்கு வருகிறது).

இழி-தன்மைகளுக்கு எதிர்த்தட்டாக இருத்தல் என்பது சேதன-அசேதனங்கள் ஆகிற ப்ரபஞ்சத்தின் தன்மைகள் ஆகிற ஸ்தூலத்வம் முதலியதற்கு விபரீதமான (நேர் எதிரான) தன்மை ஆகும்; ஆகையால், தனிப்பட்ட ஸ்வரூபத்துடன் ப்ரஹ்மத்தை எண்ணுபவரால், ஸ்தூலமாகாமை முதலியதுடன் சேர்ந்த ஜ்ஞாநத்வம், ஆனந்தத்வம் முதலிய உருவுடையதாக ப்ரஹ்மம் எண்ணப்பட வேண்டும்; ஆகையால், ஸ்தூலமாகாமை முதலியவை, ஆனந்தத்வம் முதலியது போல, ப்ரஹ்மஸ்வரூபம் பற்றிய ஜ்ஞாநத்தில் உட்பட்டதாகும்; ஆகையால், எல்லா ப்ரஹ்மவித்யைகளிலும் அப்படியே ப்ரஹ்மம் எண்ணப்பட வேண்டும் - என்று.

அங்கங்கள் ஆனவை, ப்ரதானத்தை அனுசரித்து ஆகும் என்பதில் எடுத்துக்காட்டு ஒன்று சொல்கிறார் -

**ஔபஸதவத்** (உபஸத்தின் மந்த்ரம் போல) - ஜாமதக்ன்ய சதுராத்ரத்தில், புரோடாசமுடைய உபஸத்துக்கு அங்கமாக ஸாமவேதத்தில் சொல்லப்படும் [1]**''அக்னிர் வை ஹோத்ரம் வே:து''** முதலிய மந்த்ரமானது, ப்ரதானத்தைப் பின்பற்றியதாக யஜுர்வேதத்தினுடையதான மெதுவான-குரலால் ப்ரயோகம் செய்யப் படுகிறது.

**தத் உக்தம்** (அது சொல்லப்பட்டது) - அது முதல் காண்டத்தில் (பூர்வமீமாம்ஸா ஶாஸ்த்ரத்தில்) சொல்லப்பட்டது - [2]**''அங்கத்துக்கும் ப்ரதானத்துக்கும் விரோதம் வரும் போது, ப்ரதானத்தை இட்டு (ஸ்வரத்தை விதிக்கும்) வேதத்தின் தொடர்பு ஆகும்; ஏனெனில், அங்கங்கள் ப்ரதானத்துக்காக ஆகுமவை''** என்று. *(இதன் விளக்கத்தை பின் இணைப்பில் கட்டுரையில் காணலாம்)*



**கேள்வி** - இப்படியானால், ஒவ்வொரு வித்யையிலும் வரையறுக்கப் பட்டுள்ள [3]**''எல்லா செயலையும் உடையவன், எல்லாவித மணமும் உடையவன், எல்லாவித சுவையும் உடையவன்''** முதலிய குணக்குழுவுக்கு வரையறை இல்லாமல் போக நேரிடும். ஏனெனில், எல்லா ப்ரஹ்ம-வித்யைகளிலும் ப்ரஹ்மம்தான் ப்ரதானமானது என்பதால்; குணங்கள் எல்லாம் ப்ரதானத்தை அனுசரித்து வர வேண்டியது என்பதால்.

**பதில்** - அதற்கு பதில் சொல்கிறார்-

**388. இயத் ஆமநநாத் (3-3-34)**

*[ப்ரஹ்மம் குறித்த] சிந்தனம் செய்வதற்காக இவ்வளவே ஆகும்*

**आमननम्** - आभिमुख्येन मननम् - अनुचिन्तनम्। आमननाद्धेतोरियदेव गुणजातं सर्वत्रानुसन्धेयत्वेन प्राप्तम्, यत् अस्थूलत्वादिविशेषितमानन्दादिकम्। येन गुणजातेन विना ब्रह्मस्वरूपस्येतरव्यावृत्तस्यानुसन्धानं न सम्भवति, तदेव सर्वत्रानुवर्तनीयम्; तच्चेयदेवेत्यर्थः। इतरे तु सर्वकर्मत्वादयः प्रधानानुवर्तिनोऽपि चिन्तनीयत्वेन प्रतिविद्यं व्यवस्थिताः॥ ३४ ॥

इति अक्षरध्यधिकरणम् ॥ १४ ॥

---

*ஆமநநம்* - ஆபிமுக்யேந மநநம் - அநுசிந்தநம்। ஆமநநாத்தேதோ: இயதேவ குணஜாதம் ஸர்வத்ர அநுஸந்தேயத்வேந ப்ராப்தம், யத் அஸ்-தூலத்வாதிவிஶேஷிதம் ஆநந்தாதிகம்। யேந குணஜாதேந விநா ப்ரஹ்ம-ஸ்வரூபஸ்ய இதரவ்யாவ்ருத்தஸ்ய அநுஸந்தாநம் ந ஸம்பவதி, ததேவ ஸர்வத்ராநுவர்தநீயம்; தச்ச இயதேவேத்யர்த:। இதரே து ஸர்வகர்மத்வாதய: ப்ரதாநாநுவர்திநோऽபி சிந்தநீயத்வேந ப்ரதிவித்யம் வ்யவஸ்திதா:॥34॥

இதி அக்ஷரத்யதிகரணம் ॥ 14 ॥

ஆமநநம் - எதிர்நோக்கி (குறித்து) மனனம் செய்தல்; சிந்தனம் செய்தல்.

**ஆமநநாத் -** சிந்தனை செய்தல் எனும் காரணத்துக்காக

**இயத்** (இவ்வளவுதான்) - ஸ்தூலமாகாமை முதலியதுடன் கூடிய ஆனந்தத்வம் முதலிய எது உண்டோ, இந்த அளவு குணக்குழுதான் எல்லா இடத்திலும் எண்ணப்பட வேண்டியதாக வரும்;

எந்த குணக்குழு இல்லாமல் ப்ரஹ்மஸ்வரூபத்தை பிற பொருளை விட வேறுபட்டதாக எண்ணுதல் வராதோ, அந்த குணக்குழுதான் எல்லா இடத்திலும் தொடர்ந்து வரப்பட வேண்டும்; அது இவ்வளவுதான் என்று அர்த்தம். ஸர்வ-கர்மத்வம் முதலிய மற்றவை ப்ரதானமான ப்ரஹ்மத்துடன் கூட இருப்பவையானா-லும், ஒவ்வொரு வித்யையில் (மட்டும்) எண்ணப்பட வேண்டியவையாக வரை-யறுக்கப் பட்டவை ஆகும்.

**அக்ஷரத்யதிகரணம் முற்றிற்று.**

# 97. அந்தரத்வாதிகரணம் (3-3-15)

## முன் குறிப்பு

ஒரு சமயம் ஜனகர் யாகம் செய்யும்போது பல ப்ராஹ்மணர்கள் வந்திருந்தனர்; அவர்களில் யார் சிறந்த ப்ரஹ்மஜ்ஞானி என்பதை ஜனகர் தெரிந்து கொள்ள விரும்பினார்; அப்போது யாஜ்ஞவல்க்யரை பலரும் பல கேள்விகள் கேட்டனர்; அவரும் பதில் சொல்லி, தானே சிறந்தவர் என உணர்த்தினார்.

அதில் உஷஸ்தர் என்பவர், ''எது ஸாக்ஷாத் ப்ரஹ்மம்?'' என்று ஆரம்பித்து கேள்வி கேட்டார்; யாஜ்ஞவல்க்யர் ''ப்ராணம் (மூச்சு சுவாசம்) செய்பவன் தான் ப்ரஹ்மம்'' என்று பதில் சொன்னார்; இந்த பதில் அவருக்கு கொஞ்சம் குழப்பமாக இருந்தது; ஜீவன் சுவாசம் செய்கிறான்; பரமாத்மா எல்லாரையும் சுவாசம் செய்துவைக்கிறான்; இதில் யாரை இவர் சொல்கிறார் என புரியவில்லை; அதனால், மீண்டும் கேட்டார்; அப்போது அவர், ''பார்ப்பவன், கேட்பவன் ஆக இருப்பவனை நான் சொன்னதாக நினைக்காதே'' என்றார்; அதாவது இந்த்ரியங்களால் ஜ்ஞானம் பெறும் ஜீவனை நான் சொல்லவில்லை; எப்போதும் ஸர்வஜ்ஞன் ஆன ப்ரஹ்மத்தை சொன்னேன்'' என்றார்.

அடுத்து கஹோளர் என்பவர், அதே கேள்வியை திரும்பி கேட்டார்; எந்த விதத்திலும் ஜீவாத்மாவுக்கு வராத ஒரு தன்மையை இட்டு ப்ரஹ்மத்தை அறிய விரும்பி அந்த கேள்வி கேட்டார்; யாஜ்ஞவல்க்யர் சொன்னார், ''பசி-தூக்கம் முதலியது அற்றவன்தான் ப்ரஹ்மம்'' என்று.

**பூர்வபக்ஷம்** - இவை வெவ்வேறான இரு வித்யைகள்; உஷஸ்தருக்கு சொன்ன பதிலில் சுவாசம் செய்பவனான ஜீவனை சொல்கிறார்; கஹோலருக்கு சொன்ன பதிலில், பசி முதலியது அற்ற ப்ரஹ்மத்தை சொல்கிறார். எனவே, இருவித்யைகளும் வேறாகும்.

**ஸித்தாந்தம்** - இரண்டு இடத்திலும் ப்ரஹ்மம்தான் சொல்லப் படுகிறது; இரண்டுபேரும் கேட்டது ஒரே கேள்விதான்; ப்ரஹ்மத்தை நன்கு தெளிவாக பிரித்து தெரிந்து கொள்வதற்காக மீண்டும் கேட்கின்றனர்; உஷஸ்தர், கஹோளர் ஆகிய இருவரும் ஒருவருக்கொருவர் பதில்களை பரிமாற்றம் செய்துகொண்டு, ஜீவனை விட வேறான ப்ரஹ்மத்தை தெளிவாக அறியலாம்.

இந்த குணங்களை உபாஸனம் செய்வதற்காக சொல்லவில்லை; ப்ரஹ்மத்தை பிரித்து தெரிந்து கொள்வதற்காக சொன்னதுதான்; ஸர்வாந்தரத்வம் (எல்லாருக்கும் உள்ளிருப்பவன்) என்பதுதான் இங்கே உபாஸனம் செய்யப்பட வேண்டிய குணம் ஆகும்.

## ९७. अन्तरत्वाधिकरणम् (३-३-१५)

### ३८९. अन्तरा भूतग्रामवत्स्वात्मनोऽन्यथा भेदानुपपत्तिरिति चेन्नोपदेशवत् (३-३-३५)

* बृहदारण्यके उषस्तप्रश्न एवमाम्नायते, **"यत् साक्षादपरोक्षाद्ब्रह्म य आत्मा सर्वान्तरः, तं मे व्याचक्ष्व"** (बृ.5-4-1)[1] इति।
* तस्य प्रतिवचनम् **"यः प्राणेन प्राणिति स त आत्मा सर्वान्तरः, योऽपानेनापानिति स त आत्मा"** (बृ.5-4-1)[2] इत्यादि।
* अतुष्टेन तेन पुनः पृष्ट आह, **"न दृष्टेर्द्रष्टारं पश्येः; न श्रुतेः श्रोतारं शृणुयाः; न मतेर्मन्तारं मन्वीथाः; न विज्ञातेर्विज्ञातारं विजानीयाः; एष त आत्मा सर्वान्तरः। अतोऽन्यदार्तम्"** (बृ.5-4-2)[3] इति।
* तथा तदनन्तरं कहोलप्रश्ने चैवमाम्नायते, **"यदेव साक्षादपरोक्षाद्ब्रह्म य आत्मा सर्वान्तरः तं मे व्याचक्ष्व"** (बृ.5-5-1)[4] इति।
* प्रतिवचनं च, **"योऽशनायापिपासे शोकं मोहं जरां मृत्युमत्येति। एतं वै तमात्मानं विदित्वा ब्राह्मणाः पुत्रैषणायाश्च वित्तैषणायाश्च"** (बृ.5-5-1)[5] इत्यादि, **"अतोऽन्यदार्तम्"** इत्यन्तम्।

---

## 97. அந்தரத்வாதிகரணம் (3-3-15)

### 389. அந்தரா பூதக்ராமவத்ஸ்வாத்மநோऽந்யதா பேதாநுபபத்திரிதி சேந்நோபதேஶவத் (3-3-35)

* ப்ருஹதாரண்யகே உஷஸ்தப்ரஶ்நே ஏவமாம்நாயதே, *"யத் ஸாக்ஷாதபரோக்ஷாத்ப்ரஹ்ம ய ஆத்மா ஸர்வாந்தர:, தம் மே வ்யாசக்ஷ்வ"* (ப்ரு.5-4-1)[1] இதி।
* தஸ்ய ப்ரதிவசநம் *"ய: ப்ராணேந ப்ராணிதி ஸ த ஆத்மா ஸர்வாந்தர:, யோऽபாநேநாபாநிதி ஸ த ஆத்மா"* (ப்ரு.5-4-1)[2] இத்யாதி।
* அதுஷ்டேந தேந புந: ப்ருஷ்ட ஆஹ, *"ந த்ருஷ்டேர்த்ரஷ்டாரம் பஶ்யே:, ந ஶ்ருதே: ஶ்ரோதாரம் ஶ்ருணுயா:, ந மதேர்மந்தாரம் மந்வீதா:, ந விஜ்ஞாதேர்விஜ்ஞாதாரம் விஜாநீயா:, ஏஷ த ஆத்மா ஸர்வாந்தர:। அதோऽந்யதார்தம்"* (ப்ரு.5-4-2)[3] இதி।
* ததா தததநந்தரம் கஹோலப்ரஶ்நே சைவமாம்நாயதே, *"யதேவ ஸாக்ஷாதபரோக்ஷாத்ப்ரஹ்ம ய ஆத்மா ஸர்வாந்தர: தம் மே வ்யாசக்ஷ்வ"* (ப்ரு.5-5-1)[4] இதி।
* ப்ரதிவசநம் ச, *"யோऽஶநாயாபிபாஸே ஶோகம் மோஹம் ஜராம் ம்ருத்யுமத்யேதி। ஏவம் வை தமாத்மாநம் விதித்வா ப்ராஹ்மணா: புத்ரைஷணாயாஶ்ச வித்தைஷணாயாஶ்ச"* (ப்ரு.5-5-1)[5] இத்யாதி, *"அதோऽந்யதார்தம்"* (ப்ரு.5-5-1)[6] இத்யந்தம்।

# 97.அந்தரத்வாதிகரணம் (3-3-15)

**389.அந்தரா பூதக்ராமவத்-ஸ்வாத்மாந: அந்யதாபேதாநுபபத்தி: இதி சேத் ந உபதேஶவத் (3-3-35)**

*உள்ளிருக்கும் ஆத்மாவாக [சொன்னமுதல் பதிலானது], [பஞ்ச] பூதசமுதாயத்தை உடைய தானான ஜீவாத்மாவைப் பற்றியது; வேறுவிதமானால், பதிலில் வித்யாசம் வராதுபோகும் என்றால், அதல்ல; [ஸத்-வித்யை] உபதேஶத்தில் போல ஆகும்.*

**விஷயவாக்யம்**

- ப்ருஹதாரண்யகத்தில் உஷஸ்த-ப்ரஶ்னம் சொல்லுமிடத்தில் (உஷஸ்தர் என்பவரது கேள்வியில்) இப்படி ஓதப்படுகிறது - [1]**"எது ஸாக்ஷாத் ஆக (நேர்ப்-பொருளாக) பரோக்ஷமாகாத (நேராக தெரியத் தகுந்ததான) ப்ரஹ்மம் ஆகுமோ, யார் எல்லாவற்றுக்கும் உள்ளிருக்கும் ஆத்மாவோ, அவனை எனக்குச் சொல்லவும்"** என்று.

- 1) அதற்கு (யாஜ்ஞவல்க்யர் சொன்ன) பதில், [2]**"யார் ப்ராணவாயுவைக்-கொண்டு ப்ராணனம் (ஶ்வாஸத்தை) செய்கிறானோ, எல்லாவற்றுக்கும் உள்ளிருக்கும் இவர்தான் உனது ஆத்மா; யார் அபானவாயுவைக் கொண்டு அபானனம் செய்கிறானோ இவர் உனது ஆத்மா"** முதலியது.

- (இந்த பதிலில்) திருப்தி அடையாத அந்த உஷஸ்தரால் மீண்டும் கேட்கப் பட்டவர் (யாஜ்ஞவல்க்யர்) சொன்னார், [3]**"காணுதலைச் செய்பவனைப் பார்க்-காதே; கேட்டலைச் செய்பவனைக் கேட்காதே; மனனத்தை செய்பவனை எண்ணாதே; அறிதலைச் செய்பவனை அறியாதே; எல்லாவற்றுக்கும் உள்-ளிருக்கும் இவன்தான் உனது ஆத்மா; இவனை விட மற்றது துக்கமுடை-யது"** என்று.

- அப்படியே அதற்குப் பிறகு கஹோளர் கேள்வியிலும் இப்படி ஓதப்படுகிறது - [4]**"எதுதான் ஸாக்ஷாத் ஆக பரோக்ஷமாகாமல் ப்ரஹ்மம் ஆகுமோ, யார் எல்-லாவற்றுக்கும் உள்ளிருக்கும் ஆத்மாவோ, அவனை எனக்குச் சொல்"** என்று.

- 2) பதிலும், [5]**"யார் பசி-தாகங்களையும், சோகத்தையும் மோஹத்தையும், மூப்பையும் மரணத்தையும் கடந்தவனோ, அந்த ஆத்மாவை அறிந்து ப்ராஹ்-மணர்கள் மகனாசையிலிருந்தும், பணத்தாசையிலிருந்தும் (வெளிவந்து)"** முதலியதாக, **"இவரை விட மற்றது துக்கமுடையது"** என்பது வரை.

तत्र संशय्यते - किमनयोर्विद्याभेदोऽस्ति, नेति।

किं युक्तम्? भेद इति। कुतः? रूपभेदात्। प्रतिवचनभेदाद्रूपं भिद्यते। प्रश्नस्यैकरूप्येऽपि प्रतिवचनप्रकारो हि भेदेनोपलभ्यते। पूर्वत्र प्राणनादीनां कर्ता सर्वान्तरात्मत्वेनोच्यते; परत्राशनायापिपासादिरहितः। अतः पूर्वत्र प्राणिता देहेन्द्रियबुद्धिमनःप्राणव्यतिरिक्तः प्रत्यगात्मोच्यते, परत्र तु तदतिरिक्तोऽशनायापिपासादिरहितः परमात्मा। अतो रूपं भिद्यते।

भूतग्रामवतश्च प्रत्यगात्मनः, तस्य भूतग्रामस्य सर्वस्यान्तरात्मत्वेन सर्वान्तरत्वमप्युपपन्नम्। यद्यपि प्रत्यगात्मनः सर्वान्तरत्वं भूतग्राममात्रापेक्षत्वेनापेक्षिकम्, तथापि तदेव ग्राह्यम्। अन्यथा मुख्यान्तरात्मपरिग्रहलोभात् परमात्मस्वीकारे प्रतिवचनभेदो नोपपद्यते। प्रतिवचनं हि पूर्वत्र प्रत्यगात्मविषयम्, परमात्मनः प्राणितृत्वापानितृत्वाद्यसम्भवात्। परं च परमात्मविषयम्; अशनायापिपासाद्यतीतत्वात्।

तदिदमाशङ्कते - **अन्तरा भूतग्रामवत्स्वात्मनोऽन्यथा भेदानुपपत्तिरिति चेत्** इति। **अन्तरा** - सर्वान्तरत्वेन प्रथमप्रतिवचनं **भूतग्रामवत्स्वात्मनः**। भूतग्रामवान् -

---

தத்ர ஸம்ஶய்யதே - கிமநயோர்வித்யாபேதோऽஸ்தி, நேதி।

கிம் யுக்தம்? பேத இதி। குத:? ரூபபேதாத்। ப்ரதிவசநபேதாத் ரூபம் பித்யதே। ப்ரஶ்நஸ்யைகரூப்யேऽபி ப்ரதிவசநப்ரகாரோ ஹி பேதேநோபலப்யதே। பூர்வத்ர ப்ராணநாதீநாம் கர்தா ஸர்வாந்தராத்மத்வேநோச்யதே, பரத்ர அஶநாயாபிபாஸாதிரஹித:। அத: பூர்வத்ர ப்ராணிதா தேஹேந்த்ரியபுத்திமந:ப்ராணவ்யதிரிக்த: ப்ரத்யகாத்மோச்யதே, பரத்ர து தததிரிக்த: அஶநாயாபிபாஸாதிரஹித: பரமாத்மா। அதோ ரூபம் பித்யதே।

பூதக்ராமவதஶ்ச ப்ரத்யகாத்மந:, தஸ்ய பூதக்ராமஸ்ய ஸர்வஸ்ய அந்தராத்மத்வேந ஸர்வாந்தரத்வமபி உபபந்நம்। யத்யபி ப்ரத்யகாத்மந: ஸர்வாந்தரத்வம் பூதக்ராமமாத்ராபேக்ஷத்வேந ஆபேக்ஷிகம், ததாபி ததேவ க்ராஹ்யம்। அந்யதா முக்யாந்தராத்மபரிக்ரஹலோபாத் பரமாத்மஸ்வீகாரே ப்ரதிவசநபேதோ நோபபத்யதே। ப்ரதிவசநம் ஹி பூர்வத்ர ப்ரத்யகாத்மவிஷயம், பரமாத்மந: ப்ராணித்ருத்வாபாநித்ருத்வாத்யஸம்பவாத்। பரம் ச பரமாத்மவிஷயம், அஶநாயாபிபாஸாத்யதீதத்வாத்।

ததிதமாஶங்கதே - *அந்தரா பூதக்ராமகத்ஸ்வாத்மநோऽந்யதா பேதாநுபபத்திரிதி சேத்*, இதி। *அந்தரா* - ஸர்வாந்தரத்வேந ப்ரதமப்ரதிவசநம்; பூதக்ராம-

**ஸந்தேஹம்**

இங்கு ஸந்தேஹிக்கப் படுகிறது - இந்த இரு பதில்களில், வித்யை வேறாகும் என்பது உண்டா இல்லையா?

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்? வேறாகும் என்பது.

ஏன்? ரூபம் (உபாஸன-விஷயம்) வேறாவதால்.

பதில் வேறாவதால், ரூபம் வேறாவது ஆகிறது; கேள்வி ஒரே மாதிரி இருந்-தாலும், பதில் சொன்ன முறை வேறாகத் தானே தெரிகிறது!

முன்னதில், (உஷஸ்திக்கான பதிலில்) ப்ராணனம் (சுவாசம்) முதலியதை செய்பவன் எல்லாவற்றுக்கும் உள்ளிருக்கும் ஆத்மாவாக சொல்லப்படுகிறான்; பின்னதில் (கஹோளருக்கான பதிலில்) பசி-தாகம் முதலியது அற்றவன் சொல்லப்-படுகிறான்; ஆகையால், முன்னதில் ப்ராணனம் செய்பவனாய் (சுவாசம் செய்ப-வனாய்) ஶரீரம், இந்த்ரியம், புத்தி, மனஸ், ப்ராணன் ஆகியவற்றை விட வேறான-வனான ஜீவாத்மா சொல்லப் படுகிறான்; பின்னதிலோ, அந்த ஜீவனை விடவும் வேறானவனாய் பசி-தாகம் முதலியது அற்றவனான பரமாத்மா சொல்லப் படு-கிறான். ஆகையால் ரூபம் வேறாகிறது.

(ஶரீரம் ஆகிற) பஞ்சபூத ஸமுதாயத்தை உடைய ஜீவாத்மா, அந்த பூத-ஸமு-தாயம் மொத்தத்துக்கும் உள்ளிருக்கும் ஆத்மாவாக ஆவதால், ஸர்வ-அந்தராத்மா என்பது பொருந்தும்.

**ஶங்கை** - ஜீவன் ஸர்வ-அந்தராத்மா என்பது, பஞ்ச-பூத-ஸமுதாயத்தை மட்-டும் குறித்து ஆவதால் (எல்லாவற்றையும் குறிக்காமல்) சிலதைக் குறித்து மட்டும் ஆவதாக ஆக நேரிடும்! ✍*(ஸர்வம் என்ற சொல்லானது எல்லா பொருளையும் குறிக்-கும்; ஆனால், பூதஸமுதாயத்தை மட்டும் குறிப்பதாக ஏற்று, அதைக்குறித்து மட்டும் ஆத்மாவான ஜீவனை ஸர்வாத்மா என்று சொல்வது பொருந்தாது).*✍

**ஸமாதானம்** - அப்படியானாலும் கூட, அதுவே இங்கு எடுத்துக் கொள்ள வேண்டும்; இல்லையானால், நேர்ப் பொருளான அந்தராத்மாவை எடுத்துக் கொள்-ளும் ஆசையினால், பரமாத்மாவை ஏற்றுக் கொண்டால், பதிலில் வேறுபாடு வருவது பொருந்தாமல் போக நேரிடும்! பதிலானது முன்னதில் ஜீவனைப் பற்றியது; ஏனெனில், பரமாத்மாவுக்கு ப்ராணனம் செய்தல் (சுவாசம் செய்தல்), அபானனம் செய்தல் முதலியது வராது. பின்னதான பதிலோ, பரமாத்மாவைப் பற்றியது; ஏனெனில், பசி-தாகம் முதலியதைக் கடந்தவனாக (அவனே) ஆகிறான்.

இந்த பூர்வபக்ஷத்தைக் கேள்வியாக (ஸூத்ரத்தில்) கேட்டுக் கொள்கிறார் - **''அந்தரா பூதக்ராமவத்-ஸ்வாத்மாந: அந்யதா பேதாநுபபத்தி: இதி சேத்''** என்று.

**அந்தரா** - எல்லாவற்றுக்கும் உள்ளிருக்கும் ஆத்மாவாக, (சொன்ன) முதல் பதில் ஆனது,

तदन्तरः, स्वात्मा - प्रत्यगात्मा, सर्वान्तर इत्युच्यत इत्यर्थः। अन्यथा **"यः प्राणेन प्राणिति"** (बृ.5-4-1)[1] **"योऽशनायापिपासाद्यतीतः"**(बृ.5-5-1)[2] इति प्रतिवचन-भेदानुपपत्तिरिति चेत् -

अत्रोत्तरं - **नेति**। न विद्याभेद इत्यर्थः। उभयत्र परविषयत्वात् प्रश्नप्रतिवचनयोः।

तथाहि - **"यत् साक्षादपरोक्षद्ब्रह्म य आत्मा सर्वान्तरः"**(बृ.5-4-1)[3] इति प्रश्न-स्तावत् परमात्मविषय एव।

- ब्रह्मशब्दस्य परमात्मासाधारणत्वेऽपि प्रत्यगात्मन्यपि कदाचिदुपचरितप्रयोगात् तद्व्यावृत्त्या परमात्मप्रतिपत्त्यर्थं **"यत्साक्षाद्ब्रह्म"**(बृ.5-4-1)[4] इति विशेषणं क्रियते।
- अपरोक्षत्वमपि सर्वदेशसर्वकालसम्बन्धित्वम्, **"सत्यं ज्ञानमनन्तं ब्रह्म"** (तै.1.आन.2)[5] इत्यनन्तत्वेनावगतस्य परमात्मन एवोपपद्यते।
- सर्वान्तरत्वमपि **"यः पृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरः"**(बृ.5-7-3)[6] इत्यारभ्य, **"यः आत्मनि तिष्ठन् आत्मनोऽन्तरः"**(बृ.मा.5-7-26)[7] इति सर्वान्तर्यामिणः परमात्मन एव सम्भवति।

---

வத்ஸ்வாத்மந:। **பூதக்ரா**மவாந் - ததந்தர:, ஸ்வாத்மா, ப்ரத்யகாத்மா, ஸர்வாந்தர இத்யுச்யத இத்யர்த:। அந்யதா *"ய: ப்ராணேந ப்ராணிதி"*(ப்ரு.5-4-1)[1] *"யோऽஶநாயாபிபாஸாத்யதீத:"*(ப்ரு.5-5-1)[2] இதி ப்ரதிவசநபேதாநுபபத்திரிதி சேத்,

அத்ரோத்தரம் - நேதி। ந வித்யாபேத இத்யர்த:। உபயத்ர பரவிஷயத்-வாத் ப்ரஶ்நப்ரதிவசநயோ:।

ததாஹி - *"யத் ஸாக்ஷாதபரோக்ஷாத்ப்ரஹ்ம ய ஆத்மா ஸர்வாந்தர:"* (ப்ரு. 5-4-1)[3] இதி ப்ரஶ்நஸ்தாவத் பரமாத்மவிஷய ஏவ।

- **ப்ரஹ்மஶப்த**ஸ்ய பரமாத்மாஸாதாரணத்வேऽபி ப்ரத்யகாத்மந்யபி கதாசித் உபசரிதப்ரயோகதர்ஶநாத் தத்வ்யாவ்ருத்த்யா பரமாத்மப்ரதி-பத்த்யர்தம் *"யத்ஸாக்ஷாத்ப்ரஹ்ம"*(ப்ரு.5-4-1)[4] இதி விஶேஷணம் க்ரியதே।
- அபரோக்ஷத்வமபி ஸர்வதேஶஸர்வகாலஸம்பந்தித்வம், *"ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம"*(தை.1.ஆந.2)[5] இதி அநந்தத்வேநாவகதஸ்ய பரமாத்மந ஏவோபபத்யதே।
- ஸர்வாந்தரத்வமபி *"ய: ப்ருதிவ்யாம் திஷ்டந் ப்ருதிவ்யா அந்தர:"*(ப்ரு. 5-7-3)[6] இத்யாரப்ய, *"ய: ஆத்மநி திஷ்டந் ஆத்மநோऽந்தர:"*(ப்ரு. மா.5-7-26)[7] இதி ஸர்வாந்தர்யாமிண: பரமாத்மந ஏவ ஸம்பவதி।

**பூதக்ராமவத் ஸ்வாத்மந:** (பூதஸமுதாயத்தை உடையதானான ஆத்மாவைப் பற்றியது) - பூதஸமுதாயத்தை உடையவன், அதாவது அதற்கு உள்ளிருப்பவன் ஆன ஸ்வாத்மா - தானானப்ரத்யகாத்மா (ஜீவாத்மா), ஸர்வாந்தர: என்று சொல்லப் படுகிறான் என்று அர்த்தம்.

**அந்யதா -** (வேறுவிதமாக ஆனால்- பரமாத்மாவை சொல்வதானால்)

**பேதாநுபபத்தி: -** [1]**''யார் ப்ராணனால் ப்ராணனம் செய்கிறானோ''** [2]**''யார் பசி-தாகம் முதலியதைக் கடந்தவனோ''** என்று பதிலில் வித்யாசம் பொருந்தாமல் போக நேரிடும்.

**இதி சேத்** (என்றால்) - (இப்படி பூர்வபக்ஷம் ஆனால்)

**ஸித்தாந்தம்**

இதற்கு பதில் - **'ந'** என்று.

**ந** (அல்ல) - வித்யை வேறாவது இல்லை என்று அர்த்தம்; ஏனெனில், இரண்டு இடத்திலும், கேள்வி-பதில்கள் இரண்டும் பரமாத்மாவைப் பற்றியவையே.

அப்படித்தானே-

[3]**''எது ஸாக்ஷாத் ஆக (நேர்ப்பொருளாக) பரோக்ஷமாகாத (நேராக தெரியத் தகுந்ததான) ப்ரஹ்மம் ஆகுமோ, யார் எல்லாவற்றுக்கும் உள்ளிருக்கும் ஆத்மாவோ''** என்கிற கேள்வியானது, பரமாத்மாவைப் பற்றியதுதான் -

- 'ப்ரஹ்மம்' எனும் சொல், பரமாத்மாவுக்கு தனிப்பட்ட சொல்லானாலும், சில ஸமயம் ஜீவாத்மாவிலும் உபசாரமாக சொல்-வழக்கு இருப்பதால், அது இல்லாமல் பரமாத்மா தெரிவதற்காக, [4]**''எது ஸாக்ஷாத் ப்ரஹ்மமோ''** என்று விஶேஷணம் இடப்படுகிறது;
- பரோக்ஷமாகாதது என்பதும் எல்லா இடத்திலும் எல்லா காலத்திலும் தொடர்புடைமை என்பதாகும்; அது, [5]**''ஸத்யம் ஜ்ஞாநம் அனந்தம் ப்ரஹ்ம''** என்று அனந்தமாக (தேச-கால-அளவற்றதாக) அறியப்படும் பரமாத்மாவுக்கே பொருந்தும். ✍*(நிகழ் காலத்தில் நிகழிடத்தில் இருக்கும் விஷயம் ப்ரத்யக்ஷம் ஆகும்; அந்த காலத்தில் அந்த இடத்தில் இல்லாதது பரோக்ஷமாகும்; ப்ரஹ்மமோ எல்லா காலத்திலும் எல்லா இடத்திலும் இருப்பதால், பரோக்ஷம் ஆகத் தக்கதல்ல என்று கருத்து).*✍
- எல்லாவற்றுக்கும் உள்ளிருக்கும் ஆத்மா என்பதும், [6]**''யார் ப்ருதிவியில் இருப்பவனாய், ப்ருதிவீக்கு உள்ளிருப்பவனாய்''** என்று ஆரம்பித்து, [7]**''யார் ஜீவாத்மாவில் இருப்பவனாய், ஜீவாத்மாவுக்கு உள்ளிருப்பவனாய்''** என்று எல்லாவற்றுக்கும் அந்தர்யாமியான பரமாத்மாவுக்கே வரும்.

प्रतिवचनमपि तथैव परमात्मविषयम्। **''यः प्राणेन प्राणिति''**(बृ.5-4-1)[1] इति निरुपाधिकं प्राणनस्य कर्तृत्वं परमात्मन एव ; प्रत्यगात्मनः सुषुप्तौ प्राणनं प्रति कर्तृत्वाभावात्।

एवमजानतोषस्तेन प्राणने कर्तृत्वमात्रमुक्तं मन्वानेन, प्रत्यगात्मनोऽपि साधारणत्वं प्रतिवचनस्य मत्वा अतुष्टेन पुनः पृष्टः, तं प्रति प्रत्यगात्मनो व्यावृत्तं निरुपाधिकत्वेन प्राणनस्य कर्तारं परमात्मानमाह, **''न दृष्टेर्द्रष्टारं पश्येः''**(बृ.5-4-2)[2] इत्यादिना। इन्द्रियाधीनानां दर्शनश्रवणमननविज्ञानानां कर्तारं प्रत्यगात्मानं, प्राणनस्य कर्तृत्वेनोक्त इति न मन्वीथाः; तस्य सुषुप्तिमूर्च्छादौ प्राणनादेरकर्तृत्वात्। **''को ह्येवान्यात् कः प्राण्यात्, यदेष आकाश आनन्दो न स्यात्''**(तै.1.आन.7)[3] इति सर्वप्राणिप्राणनहेतुत्वं हि परमात्मन एवान्यत्र श्रुतम्।

अतः पूर्वप्रश्नप्रतिवचने परमात्मविषये। एवमुत्तरे अपि; अशनायाद्यतीतत्वस्य परमात्मासाधारणत्वात्। उभयत्र, **''अतोऽन्यदार्तम्''**(बृ.5-4-2)[4] इत्युपसंहारश्चैकरूपः। प्रश्नप्रतिवचनावृत्तिस्तु कृत्स्नप्राणिप्राणनहेतोः परस्य ब्रह्मणोऽशनायाद्यतीतत्वप्रतिपादनाय।

तत्र दृष्टान्तमाह - **उपदेशवदिति**। यथा सद्विद्यायाम् **''उत तमादेशमप्राक्ष्यः''** (छा.6-1-2)[5] इति प्रक्रान्ते सदुपदेशे, **''भगवांस्त्वेव मे तद्ब्रवीतु इति''**(छा.6-1-7)[6],

---

ப்ரதிவசநமபி ததைவ பரமாத்மவிஷயம். *''யঃ ப்ராணேந ப்ராணிதி''*(ப்ரு.5-4-1)[1] இதி நிருபாதிகம் ப்ராணநஸ்ய கர்த்ருத்வம் பரமாத்மந ஏவ, ப்ரத்யகாத்மந: ஸுஷுப்தௌ ப்ராணநம் ப்ரதி கர்த்ருத்வாபாவாத்.

ஏவமஜாநதா உஷஸ்தேந ப்ராணநே கர்த்ருத்வமாத்ரமுக்தம் மந்வாநேந, ப்ரத்யகாத்மநோऽபி ஸாதாரணத்வம் ப்ரதிவசநஸ்ய மத்வா அதுஷ்டேந புந: ப்ருஷ்ட:, தம் ப்ரதி ப்ரத்யகாத்மநோ வ்யாவ்ருத்தம் நிருபாதிகத்வேந ப்ராணநஸ்ய கர்தாரம் பரமாத்மாநமாஹ - *''ந த்ருஷ்டேர்த்ரஷ்டாரம் பஶ்யே:''* (ப்ரு.5-4-2)[2] இத்யாதிநா. இந்த்ரியாதீநாநாம் தர்ஶநஶ்ரவணமநநவிஜ்ஞாநாநாம் கர்தாரம் ப்ரத்யகாத்மாநம், ப்ராணநஸ்ய கர்த்ருத்வேநோக்த இதி ந மந்வீதா:, தஸ்ய ஸுஷுப்திமூர்ச்சாதௌ ப்ராணநாதேரகர்த்ருத்வாத். *''கோ ஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத், யதேஷ ஆகாஶ ஆநந்தோ ந ஸ்யாத்''* (தை.1.ஆந.7)[3] இதி ஸர்வப்ராணிப்ராணநஹேதுத்வம் ஹி பரமாத்மந ஏவ அந்யத்ர ஶ்ருதம்.

அத: பூர்வப்ரஶ்நப்ரதிவசநே பரமாத்மவிஷயே. ஏவமுத்தரே அபி, அஶநாயாத்யதீதத்வஸ்ய பரமாத்மாஸாதாரணத்வாத். உபயத்ர, *''அதோऽந்யதார்தம்''*(ப்ரு.5-4-1)[4] இத்யுபஸம்ஹாரஶ்ச ஏகரூப:. ப்ரஶ்நப்ரதிவசநாவ்ருத்திஸ்து க்ருத்ஸ்நப்ராணிப்ராணநஹேதோ: பரஸ்ய ப்ரஹ்மண: அஶநாயாத்யதீதத்வப்ரதிபாதநாய.

தத்ர த்ருஷ்டாந்தமாஹ - உபதேஶவதிதி. யதா ஸத்வித்யாயாம் *''உத தமாதேஶமப்ராக்ஷ்ய:''*(சா.6-1-2)[5] இதி ப்ரக்ராந்தே ஸதுபதேஶே, [6] **''பகவாம்ஸ்-**

பதிலும் அப்படியே பரமாத்மாவைப் பற்றியதுதான் -

[1]**''யார் ப்ராணவாயுவைக் கொண்டு ப்ராணனம் (ச்வாஸத்தை) செய்கிறானோ''** என்று காரண-வரையறை இல்லாமல் ப்ராணனம் (ச்வாஸத்தை) செய்தல் என்பது பரமாத்மாவுக்கு மட்டுமே ஆகும்; ஏனெனில், ஜீவாத்மா உறக்கத்தில் சுவாசத்தைக் குறித்து செய்பவராக ஆவதில்லை.

*(ஜீவன், தூங்கும் போது ஒரு செயலையும் செய்யமுடியாது; மூச்சு விடும் செயலையும் அவன் செய்வதில்லை; பரமாத்மாதான் செய்து வைக்கிறான்; இங்கு ப்ராணனம் செய்கிறான் என்பதற்கு ச்வாஸம் செய்விக்கிறான் என்று அர்த்தம்).*

(ச்வாஸம் செய்விக்கிறான் என்கிற கருத்தினை) இப்படி புரிந்து கொள்ளாத உஷஸ்தர் ச்வாஸத்தை செய்பவராக ஆதல் மட்டுமே (பதிலாக)சொல்லப்பட்டது என்று எண்ணினார்; (அந்த) பதில் ஜீவனுக்கும் பொதுவாக இருப்பதாக நினைத்து திருப்தி அடையாமல் இருந்தார்; அவரால் மீண்டும் கேள்வி கேட்கப்பட்டவர் (யாஜ்ஞவல்க்யர்) [2]**''காணுதலைச் செய்பவனைப் பார்க்காதே''** என்பது முதலியதைச் சொன்னார்; அதன் மூலம், காரண-வரையறையின்றி ப்ராணனத்தை செய்பவனாக ஜீவனை விட வேறான பரமாத்மாவைச் சொன்னார். ''இந்த்ரியங்களுக்கு அதீனமாக காணுதல், கேட்டல், எண்ணுதல், அறிதல் ஆகியவற்றைச் செய்யும் ஜீவன்தான், ப்ராணனம் செய்பவனாக சொல்லப்பட்டவன் என நினைக்காதே; ஏனெனில், அவன் உறக்கம், மூர்ச்சை முதலிய நிலையில் ப்ராணனம் முதலியதை செய்பவனாக ஆக மாட்டான்; [3]**''இந்த மிகப்பெரிய ஆனந்தம் ஆகிற பரமாத்மா இல்லாவிட்டால், யார் தான் இருப்பான்? யார் தான் ப்ராணனம் செய்வான்?''** என்று எல்லா ப்ராணிகளுடைய ப்ராணனத்துக்கு (ச்வாஸத்துக்கு) காரணமாதல் என்பது பரமாத்மாவுக்குத்தானே வேறிடத்தில் ஓதப்பட்டது!

எனவே, முன் கேள்வி-பதில்கள் பரமாத்மாவைப் பற்றியவை; பின்னவையும் அப்படியே; பசி முதலியதைக் கடந்தவன் ஆதல் என்பது பரமாத்மாவுக்கு மட்டும் தனிப்பட்டதாகும்; இரு பதில்களிலும், [4]**''இதை விட வேறானது துக்கமுடையது''** என்று முடிவுரையும் ஒரேமாதிரி உள்ளது.

கேள்வி-பதில்களை திருப்பி சொன்னது, எல்லா ப்ராணிகளுக்கும் ப்ராணனத்துக்கு (ச்வாஸத்துக்கு) காரணமான பரப்ரஹ்மத்துக்கு பசி முதலியதைக் கடந்த தன்மையை அறிவிப்பதற்காக ஆகும்.

அதில் உதாஹரணம் சொல்கிறார் -

**உபதேஶவத்** (ஸத்வித்யை உபதேஶத்தில் போலே) - என்று.

ஸத்வித்யையில், [5]**''அந்த ஆதேஶத்தைக் கேட்டாயா?''** என்று ஸத்-உபதேஶம் ஆரம்பிக்கப் பட்டது; அதில், [6]**''பகவானே, (நீங்களே) எனக்கு அதைச் சொல்-**

**"भूय एव मा भगवान् विज्ञापयतु"**(छा.6-5-4)[1] इति प्रश्नस्य, **"एषोऽणिमा ऐतदात्म्यमिदं सर्वं तत् सत्यम्"**(छा.6-8-6,7)[2] इति प्रतिवचनस्य च भूयोभूय आवृत्तिः सतो ब्रह्मणः तत्तन्माहात्म्यविशेषप्रतिपादनाय दृश्यते - तद्वत्।

अत एकस्यैव सर्वान्तरभूतस्य ब्रह्मणः कृत्स्नप्राणिप्राणनहेतुत्वाऽशनायाद्यतीतत्व-प्रतिपादनेन रूपैक्यात् विद्यैक्यम्॥ ३५ ॥



अथ स्यात् - यद्यप्युभे प्रश्नप्रतिवचने परब्रह्मविषये, तथापि विद्याभेदोऽवर्जनीयः, एकत्र सर्वप्राणिप्राणनहेतुत्वेनोपास्यम्, इतरत्राशनायाद्यतीतत्वेनेति उपास्यगुणभेदेन रूपभेदात्। प्रष्टृभेदाच्च, पूर्वत्र उषस्तः प्रष्टा, उत्तरत्र कहोलः इति; तत्राह -

## ३९०.व्यतिहारो विशिंषन्ति हीतरवत् (३-३-३६)

नात्र विद्याभेदः, प्रश्नप्रतिवचनाभ्यामेकरूपार्थविषयाभ्यामेकेन च विधिपदेनैकवाक्यत्वप्रतीतेः। प्रश्नद्वयं तावत् सर्वान्तरात्मत्वविशिष्टब्रह्मविषयम्। द्वितीये प्रश्ने, **"यदेव साक्षादपरोक्षाद्ब्रह्म य आत्मा सर्वान्तरः"**(बृ.5-5-1)[3] इत्येवकारश्च पूर्वत्रोषस्तेन पृष्टगुणविशिष्टब्रह्मविषयत्वं कहोलप्रश्नस्यावधारयति।

*த்வேவ மே தத்ப்ரவீத்விதி"*[1] (சா.6-1-7) *"பூய ஏவ மா பகவாந் விஜ்ஞாபயது"*(சா. 6-5-4)[1] இதி ப்ரஶ்நஸ்ய, *"ஏஷோऽணிமா ஐததாத்ம்யமிதம் ஸர்வம் தத் ஸத்யம்"* (சா.6-8-6,7)[2] இதி ப்ரதிவசநஸ்ய ச பூயோபூய ஆவ்ருத்தி: ஸதோ ப்ரஹ்மண: தத்தந்மாஹாத்ம்யவிஶேஷப்ரதிபாதநாய த்ருஶ்யதே; தத்வத்।

அத: ஏகஸ்யைவ ஸர்வாந்தரபூதஸ்ய ப்ரஹ்மண: க்ருத்ஸ்நப்ராணி-ப்ராணநஹேதுத்வாऽஶநாயாத்யதீதத்வ-ப்ரதிபாதநேந ரூபைக்யாத் வித்யைக்யம்।। 35 ।।



அத ஸ்யாத் - யத்யபி உபே ப்ரஶ்நப்ரதிவசநே பரப்ரஹ்மவிஷயே, ததாபி வித்யாபேதோऽவர்ஜநீய:, ஏகத்ர ஸர்வப்ராணிப்ராணநஹேதுத்வேந உபாஸ்யம், இதரத்ர அஶநாயாத்யதீதத்வேநேதி உபாஸ்யகுணபேதேந ரூபபேதாத்। ப்ரஷ்ட்ருபேதாச்ச, பூர்வத்ர உஷஸ்த: ப்ரஷ்டா, உத்தரத்ர கஹோல: இதி; தத்ராஹ -

## 390.வ்யதிஹாரோ விஶிம்ஷந்தி ஹீதரவத் (3-3-36)

நாத்ர வித்யாபேத:, ப்ரஶ்நப்ரதிவசநாப்யாம் ஏகரூபார்தவிஷயாப்யாம் ஏகேந ச விதிபதேந ஏகவாக்யத்வப்ரதீதே:। ப்ரஶ்நத்வயம் தாவத் ஸர்வாந்தராத்மத்வவிஶிஷ்டப்ரஹ்மவிஷயம்। த்விதீயே ப்ரஶ்நே, *"யதேவ ஸாக்ஷாதபரோக்ஷாத்ப்ரஹ்ம ய ஆத்மா ஸர்வாந்தர:"*(ப்ரு.5-5-1)[3] இதி ஏவகாரஶ்ச பூர்வத்ர உஷஸ்தேந ப்ருஷ்டகுணவிஶிஷ்டப்ரஹ்மவிஷயத்வம் கஹோலப்ரஶ்நஸ்யாவதாரயதி।

**லவும்'',** [1] **''பகவானே, இன்னமும் எனக்கு அறிவிக்கவும்''** என்று கேள்வியையும், [2] **''இவன் அணுவானவன்; (அணுபோல ஸூக்ஷ்மமானவன்; அறியப்பட முடியாத-வன்); இந்த பொருளெல்லாம் இந்த பரமாத்மாவால் பரவப்பட்டது; இதுவே உண்மை''** என்ற பதிலையும், மீண்டும் மீண்டும் திருப்பச் சொல்லுதல் காணப்-படுகிறது; அது, ஸத்-ப்ரஹ்மத்துக்கு அந்தந்த விசேஷ பெருமையை அறிவிப்-பதற்காக ஆகும்; அது எப்படியோ, அப்படி இங்கும்.

*(ஸத்வித்யையை பற்றிய அறிமுகக் கட்டுரை ஸ்ரீபாஷ்யம் முதல்பாகபுஸ்தகத்தில் உள்ளது; ஸத்வித்யையில் இரு பாகங்கள் உள்ளன; அதில் பின் பாகத்தில், ப்ரஹ்மம் பற்றி ஆசார்யன் ஒவ்வொரு விஷயத்தை சொல்லி முடிந்தபின், ஶிஷ்யன், 'இன்னமும் எனக்கு அறி-விக்கவும்' என்று கேட்பான்; அவரும் ப்ரஹ்மம் பற்றி அடுத்தவிஷயம் சொல்வார்; ஒவ்வொரு பதிலிலும் ஒவ்வொரு விஷயம் சொல்லி முடிக்கும்போது ''இவன் அணு; இது அவனால் பரவப்-பட்டது; அவன் ஆத்மா; இதுவே உண்மை'' என்று சொல்லி முடிப்பார். இப்படியாக ஒன்பது விஷயங்களை சொல்கிறார்.*

*அங்கு ப்ரஹ்மத்துக்கே அடுத்தடுத்த பெருமையை சொல்வதற்காக திரும்பத் திரும்ப கேள்வி-பதில்கள் ஆகும்; அதுபோல இங்கும் ப்ரஹ்மத்துக்கே இன்னமும் பெருமைகளைச் சொல்வதற்காக திரும்பத் திரும்ப கேள்வியும் பதிலும் ஆகும்)*

ஆகையால், எல்லாவற்றுக்கும் உள்ளிருக்கும் ப்ரஹ்மம் ஒன்றுக்கே, எல்லா ப்ராணிகளின் ச்வாஸத்துக்கு காரணமாக ஆதலையும் பசி முதலியதைக் கடந்த-வனாக இருத்தலையும் சொல்வதால், ரூபம் ஒன்றுதான்; எனவே, வித்யை ஒன்றுதான்.



**கேள்வி -** இரண்டு கேள்வி-பதில்களும் பரப்ரஹ்மத்தைப் பற்றியதாக ஆனா-லும், வித்யை வேறாகும் என்பது தவிர்க்க முடியாது; ஏனெனில், உபாஸனம் செய்-யப்படும் குணங்கள் வேறாவதாக, ரூபம் வேறாகிறது; ஒரு இடத்தில் எல்லா ப்ராணிகளின் ச்வாஸத்துக்கு காரணமாக உபாஸனம் செய்யப்பட வேண்டும்; மற்றொரு இடத்தில், பசி முதலியதைக் கடந்தவனாக உபாஸனம் செய்யப்பட வேண்-டும் என்று. மேலும், முந்தையதில் உஷஸ்தர் கேட்பவர்; பிந்தையதில் கஹோளர் என்று கேட்பவர் வேறானபடியாலும் (வித்யை வேறாகும்) - என்று ஆகட்டும்.

**பதில் -** அதற்கு பதில் சொல்கிறார் -

**390.வ்யதிஹார: விஶிம்ஷந்தி ஹி இதரவத் (3-3-36)**
*பரிமாற்றம் ஆகும்; வேறிடத்தில்[ஸத்வித்யையில்]போல,[வாக்யங்கள் பரமாத்-மாவை] தனி அடையாளம் இட்டு பிரிக்கின்றனதானே!*

இங்கு வித்யை வேறாகாது; ஏனெனில், ஒரே பொருளைப் பற்றியே கேள்வி-பதில்கள் ஆவதாலும், ஒரே விதிச்சொல்லின் மூலம் ஒரு வாக்யமாக தெரிவதாலும்.

இரண்டு கேள்வியுமே எல்லாவற்றுக்கும் உள்ளிருக்கும் ப்ரஹ்மத்தைப் பற்-றியது ஆகும்; இரண்டாவது கேள்வியில், [3] **''எதுதான் ஸாக்ஷாத் ஆக பரோக்ஷமா-காமல் ப்ரஹ்மம் ஆகுமோ, யார் எல்லாவற்றுக்கும் உள்ளிருக்கும் ஆத்மாவோ''** என்று 'தான்' எனும் சொற்குறிப்பானது, கஹோளருடைய (இந்த)கேள்வியும் முன்-னர் உஷஸ்த்ரால் கேட்கப்பட்ட குணங்களுடன் கூடிய ப்ரஹ்மத்தைப் பற்றியதே என்பதாக உறுதிப் படுத்துகிறது.

प्रतिवचनं चोभयत्र, **''स त आत्मा सर्वान्तरः''**(बृ.5-4-1)[1] इति सर्वान्तरात्मत्वविशिष्टब्रह्मविषयमेकरूपमेव। विधिप्रत्ययश्चोत्तरत्रैव दृश्यते, **''तस्माद्ब्राह्मणः पाण्डित्यं निर्विद्य बाल्येन तिष्ठासेत्''**(बृ.5-5-1)[2] इति। एवं सर्वान्तरात्मत्वविशिष्टब्रह्मैकविषयत्वे द्वयोरवग(धृ)ते सति, एकस्मिन्नेव सर्वान्तरात्मत्वविशिष्टे ब्रह्मण्युपास्ये उषस्तकहोलयोरितरेतरबुद्धिव्यतिहारः कर्तव्यः। उषस्तस्य या सर्वान्तरात्मनो ब्रह्मणः सर्वप्राणिप्राणनहेतुत्वविषया बुद्धिः, सा कहोलेनापि प्रष्ट्रा कार्या; या च कहोलस्य तस्यैव ब्रह्मणोऽशनायाद्यतीतत्वविषया बुद्धिः, सा उषस्तेनापि कार्या।

एवं व्यतिहारे कृते उभाभ्यां सर्वान्तरस्य ब्रह्मणो जीवव्यावृत्तिरवग(धृ)ता भवति। एनं सर्वान्तरात्मानं प्रत्यगात्मनो व्यावृत्तमवगमयितुं सर्वप्राणिप्राणनहेतुत्वाशनायाद्यतीतत्वप्रतिपादनेन **विशिंषन्ति** हि याज्ञवल्क्यस्य प्रतिवचनानि। अतो ब्रह्मणः सर्वान्तरात्मत्वमेवोपास्यगुणः। प्राणनहेतुत्वादयस्तु तस्योपपादकाः; नोपास्याः।

ननूपास्यगुणः सर्वान्तरात्मत्वमेव चेत्, प्राणनहेतुत्वस्य अशनायाद्यतीतत्वस्य च प्रष्ट्रोः व्यतिहृत्यानुसन्धानं किमर्थम्?

---

ப்ரதிவசநம் ச உபயத்ர, *''ஸ த ஆத்மா ஸர்வாந்தர:''*(ப்ரு.5-4-1)[1] இதி ஸர்வாந்தராத்மத்வவிஶிஷ்டப்ரஹ்மவிஷயம் ஏகரூபமேவ। விதிப்ரத்யயஶ்ச உத்தரத்ரைவ த்ருஶ்யதே, *''தஸ்மாத்ப்ராஹ்மண: பாண்டித்யம் நிர்வித்ய பால்யேந திஷ்டாஸேத்''*(ப்ரு.5-5-1)[2] இதி। ஏவம் ஸர்வாந்தராத்மத்வவிஶிஷ்டப்ரஹ்மைகவிஷயத்வே த்வயோரவக(த்ரு)தே ஸதி, ஏகஸ்மிந்நேவ ஸர்வாந்தராத்மத்வவிஶிஷ்டே ப்ரஹ்மண்யுபாஸ்யே உஷஸ்த-கஹோலயோ: இதரேதரபுத்திவ்யதிஹார: கர்தவ்ய:। உஷஸ்தஸ்ய யா ஸர்வாந்தராத்மநோ ப்ரஹ்மண: ஸர்வப்ராணிப்ராணநஹேதுத்வவிஷயா புத்தி:, ஸா கஹோலேநாऽபி ப்ரஷ்ட்ரா கார்யா, யா ச கஹோலஸ்ய தஸ்யைவ ப்ரஹ்மண: அஶநாயாத்யதீதத்வவிஷயா புத்தி:, ஸா உஷஸ்தேநாபி கார்யா।

ஏவம் வ்யதிஹாரே க்ருதே உபாப்யாம் ஸர்வாந்தரஸ்ய ப்ரஹ்மண: ஜீவவ்யாவ்ருத்தி: அவக(த்ரு)தா பவதி। ஏநம் ஸர்வாந்தராத்மாநம் ப்ரத்யகாத்மநோ வ்யாவ்ருத்தமவகமயிதும் ஸர்வப்ராணிப்ராணநஹேதுத்வாஶநாயாத்யதீதத்வப்ரதிபாதநேந *விஶிம்ஷந்தி* ஹி யாஜ்ஞவல்க்யஸ்ய ப்ரதிவசநாநி। அத: ப்ரஹ்மண: ஸர்வாந்தராத்மத்வமேவ உபாஸ்யகுண:। ப்ராணநஹேதுத்வாதயஸ்து தஸ்யோபபாதகா:, ந உபாஸ்யா:।

நநு உபாஸ்யகுண: ஸர்வாந்தராத்மத்வமேவ சேத், ப்ராணநஹேதுத்வஸ்ய அஶநாயாத்யதீதத்வஸ்ய ச ப்ரஷ்ட்ரோ: வ்யதிஹ்ருத்யாநுஸந்தாநம் கிமர்தம்?

ஆனாலும், ஸ்வரூபம் மட்டும் ஆகிற ஆகாரத்தை விட குணத்துடன் கூடிய ஆகாரம் வேறு ஆகும்; மேலும், [1]**"அபஹதபாப்மா (அபஹத- பாப்மத்வம் எனும் குணமுடையவன்), விஜர: (மூப்பில்லாமை எனும் குணம் உடையவன்)"** என்றிது முதலியதால், குணத்தோடு கூடியவனாக உபாஸனம் செய்யப்பட வேண்டும் என விதிக்கப் படுகிறது.ஆகையால், முன்னர் ஸ்வரூபத்தையிட்டு சிந்தனம் செய்யப்படவனுக்கு (தஹர-ஆகாசத்துக்கு) அபஹதபாப்மத்வம் முதலிய குணங்களுடன் கூடியவனாக சிந்திப்பதன் பொருட்டு மறுமுறைசிந்தனம் செய்யப்பட வேண்டும்.

எப்படியாக, -

- [2]**"ராஜாவான இந்த்ரனின் பொருட்டு ஏகாதசகபால-புரோடாசம் ஸமர்ப்-பித்து யாகம் செய்ய வேண்டும்",**
- [3]**"அதிராஜனான இந்த்ரனின் பொருட்டு",**
- [4]**"ஸ்வராட் ஆன இந்த்ரனின் பொருட்டு"**

என்று ஒரே இந்த்ரனே ராஜத்வம் முதலிய குணங்களுடன் கூடியவன் ஆனா-லும், அந்தந்த குண-தொடர்புடைய ஆகாரம் என்பது வேறாவதால், ப்ரதானம் (அர்ப்பணம் செய்தல், தேவர்களுக்குக் கொடுத்தல்) மறுமுறையாக மீண்டும் மீண்-டும் செய்யப் படுகிறது;

**தத் உக்தம் -** அது ஸங்கர்ஷணருடைய தேவதாகாண்டத்தில் சொல்லப்பட்-டது - [5]**"தேவதை வேறாவதால், (ப்ரதானம்) வேறாகும்"** என்று. (அது போலபோல இங்கும் ஆகும்

**ப்ரதானாதிகரணம் முற்றிற்று.**

# 101.லிங்கபூயஸ்த்வாதிகரணம்(3-3-19)

## முன் குறிப்பு

இந்த அதிகரணம் மிக முக்கியமானது; ப்ரஹ்ம-வித்யைகளில் உபாஸனம் செய்யப்படும் ப்ரஹ்மம் என்பது ஸ்ரீநாராயணன்தான் என்பதை இங்கே நிச்சயம் செய்கிறார்.

தைத்திரீய உபநிஷத்தில் ''தஹ்ரம் விபாப்மம் பரவேச்மபூதம்'' என்று ஆரம்பித்து, தஹர வித்யை உள்ளது; அதில் ஹ்ருதய-ஆகாசத்தில் இருக்கும் பரமாத்மாவை எட்டு குணங்களுடன் கூடியவனாக உபாஸனம் செய்ய வேண்டும் என்று சொல்கிறது; அதைத் தொடர்ந்து, அடுத்த அனுவாகம் ''ஸஹஸ்ரசீர்ஷம் தேவம்'' என்பது; அதில் உபாஸனம் செய்யப்படுபவன் நாராயணன் என்று சொல்கிறது. அதிலும் கூட ''பத்மகோசப்ரதீகாசம் ஹ்ருதயம்'' என்று ஆரம்பித்து, தஹரவித்யையை குறிக்கிறது.

**பூர்வபக்ஷம்** - இது தஹரவித்யையைச் சொல்லிக்கொண்டு வரும் இடம்; ஆகையால், தஹரவித்யையில் உபாஸனம் செய்யப் படுபவன் நாராயணன் என்பது இந்த ப்ரகரணத்தால் தெரிகிறது; ஆனால், எல்லா வித்யைகளிலுமே உபாஸனம் செய்யப் படுபவன் நாராயணன் என்பது இதன் மூலம் தெரிய வராது.

**ஸித்தாந்தம்** - எல்லா வித்யைகளிலும் உபாஸனம் செய்யப் படுபவன் நாராயணன் என்று இங்கே சொல்கிறது; அதை அறிவிக்கும் அடையாளங்களான வாக்யங்கள் பல உள்ளன; ''நாராயண பரம் ப்ரஹ்ம'' என்று ஆரம்பித்து, ''நாராயணனே பரப்ரஹ்மம், நாராயணனேபரதத்த்வம் (பரம்பொருள்); நாராயணனே பரஜ்யோதி; நாராயணனே பரமாத்மா'' என்கிறது; மேலும் ''அவனே ப்ரஹ்மா; அவனே சிவன்; அவனே இந்த்ரன்; அவனே ஸ்வராட் ஆன முக்தாத்மா'' என்றும் சொல்கிறது; உபநிஷத்களில் ஆங்காங்கே ஜகத்-காரணத்தையும், மோக்ஷ-காரணத்தையும் சொல்லும்போது பரப்ரஹ்மம், பரமாத்மா, பரதத்த்வம், பரஜ்யோதி முதலிய சொற்களால் குறிக்கின்றன; சில இடங்களில், ப்ரஹ்மா, சிவன் என்றும் சொல்லியிருக்கலாம்; அந்த சொற்கள் எல்லாம் நாராயணனையே குறிக்கும் என்பதை தெளிவாக இங்கே சொல்கிறது.

ப்ரகரணம் எனும் ப்ரமாணத்தை வைத்து பூர்வபக்ஷம் வந்தது; வாக்யம் எனும் ப்ரமாணத்தை இட்டு ஸித்தாந்தம்; வாக்யம் என்பது, ப்ரகரணத்தை விட வலிமையானது என்பதை மீமாம்ஸா சொல்கிறது. (காண்க - பின் இணைப்பு).

ஸூத்ரத்தில் 'லிங்கம்' என்பது ஆறு ப்ரமாணங்களில் இரண்டாவதான லிங்கம் அல்ல; இங்கே லிங்கம் என்பதற்கு அறிவிக்கும் அடையாளம் என்று அர்த்தம்; வாக்யம் எனும் ப்ரமாணத்தை குறிக்கிறது.

# १०१. लिङ्गभूयस्त्वाधिकरणम् (३-३-१९)

## ३९७.लिङ्गभूयस्त्वात् तद्धि बलीयः तदपि (३-३-४३)

तैत्तिरीया दहरविद्यानन्तरमधीयते, **''सहस्रशीर्षं देवं विश्वाक्षं विश्वशम्भुवम्। विश्वं नारायणं देवमक्षरं परमं प्रभुम्''**(तै.2.11-1)[1] इत्यारभ्य, **''सोऽक्षरः परमः स्वराट्''**(तै.2.11-11)[2] इत्यन्तम्।

तत्र संशयः - किं पूर्वप्रकृतविद्यैकविद्यात्वेन तदुपास्यविशेषनिर्धारणमनेन क्रियते, उत सर्ववेदान्तोदितपरविद्योपास्यविशेषनिर्धारणमिति।

किं युक्तम्? दहरविद्योपास्यविशेषनिर्धारणमिति। कुतः? प्रकरणात्। पूर्वस्मिन्ननुवाके दहरविद्या हि प्रकृता, **''दहं विपाप्मं परवेश्मभूतं यत् पुण्डरीकं पुरमध्यसंस्थम्। तत्रापि दहं गगनं विशोकः, तस्मिन् यदन्तस्तदुपासितव्यम्''**(तै.2.10-23)[3] इति। अस्मिंश्चानुवाके, **''पद्मकोशप्रतीकाशं हृदयं चाप्यधोमुखम्''**(तै.2.11-7)[4] इत्यादिना हृदयपुण्डरीकाभिधानमस्य नारायणानुवाकस्य दहरविद्योपास्यनिर्धारणार्थत्वमुपोद्बलयतीति -

---

# 101. லிங்கபூயஸ்த்வாதிகரணம் (3-3-19)

## 397.லிங்கபூயஸ்த்வாத் தத்தி பலீய: ததபி (3-3-43)

தைத்திரீயா தஹரவித்யாநந்தரமதீயதே, *''ஸஹஸ்ரஶீர்ஷம் தேவம் விஶ்வாக்ஷம் விஶ்வஶம்புவம்। விஶ்வம் நாராயணம் தேவமக்ஷரம் பரமம் ப்ரபும்''* (தை.2.11-1)[1] இத்யாரப்ய, *''ஸோऽக்ஷர: பரம: ஸ்வராட்''*(தை.2.11-11)[2] இத்யந்தம்।

தத்ர ஸம்ஶய: - கிம் பூர்வப்ரக்ருதவித்யயா ஏகவித்யாத்வேந ததுபாஸ்யவிஶேஷநிர்தாரணம் அநேந க்ரியதே, உத ஸர்வவேதாந்தோதிதபரவித்யோபாஸ்யவிஶேஷநிர்தாரணமிதி।

கிம் யுக்தம்? தஹரவித்யோபாஸ்யவிஶேஷநிர்தாரணமிதி। குத:? ப்ரகரணாத்। பூர்வஸ்மிந் அநுவாகே தஹரவித்யா ஹி ப்ரக்ருதா, *''தஹ்ரம் விபாப்மம் பரவேஶ்மபூதம் யத் புண்டரீகம் புரமத்யஸம்ஸ்தம்। தத்ராபி தஹ்ரம் ககநம் விஶோக:, தஸ்மிந் யதந்தஸ்ததுபாஸிதவ்யம்''*(தை.2.10-23)[3] இதி। அஸ்மிம்ஶ்சாநுவாகே, *''பத்மகோஶப்ரதீகாஶம் ஹ்ருதயம் சாப்யதோமுகம்''* (தை.2.11-7)[4] இத்யாதிநா ஹ்ருதயபுண்டரீகாபிதாநம் அஸ்ய நாராயணாநுவாகஸ்ய தஹரவித்யோபாஸ்யநிர்தாரணார்தத்வமுபோத்பலயதீதி -

# 101.லிங்கபூயஸ்த்வாதிகரணம்(3-3-19)

## 397.லிங்கபூயஸ்த்வாத் தத் ஹி பலீய: தத் அபி (3-3-43)

*அடையாளம் பல ஆவதால்;ஏனெனில்[வாக்ய-ப்ரமாணம் என்னும்]அது அதிக வலிமையுடையது; அதுவும்[சொல்லப்பட்டது]*

**விஷயவாக்யம்**

தைத்திரீயத்தில் தஹரவித்யைக்குப் பின் (நாராயணானுவாகத்தில்) ஓதுகின்றனர் - [1]**''ஆயிரம் தலையுடைய தேவன், எல்லாவற்றையும் நேராகப்பார்ப்பவன்; எல்லாவற்றுக்கும் மங்களம் அளிப்பவன்; எல்லாமே ஆகும் நாராயணன்; தேவன், அக்ஷரன், பரமன், ப்ரபு''** என்று ஆரம்பித்து, [2]**''உயர்ந்தவனான அவனே கர்ம-வசப்படாத முக்த-ஜீவனும் ஆவான்''** என்பது வரை.

**ஸந்தேஹம்**

இதில் ஸந்தேஹம் - (இந்த வாக்யமானது) முன்சொல்ல ஆரம்பிக்கப் பட்ட தஹர-வித்யையுடன் ஒரே வாக்யமாவதால், அந்த வித்யையில் உபாஸனம் செய்யப்படும் விஷய-விசேஷத்தைப் பற்றிய நிர்ணயம் இந்த வாக்யத்தால் செய்யப் படுகிறதா? அல்லது வேதாந்தங்களில் சொல்லப்பட்ட எல்லா பர-வித்யைகளிலும் உபாஸனம் செய்யப்படும் விஷய-விசேஷத்தைப் பற்றிய நிர்ணயம் செய்யப் படுகிறதா? *(நாரயணனே உபாஸனவிஷயம் எனும் விசேஷம் இங்கே சொல்லப்படுகிறது; இந்த விசேஷம் தஹரவித்யைக்கு மட்டுமா? அல்லது எல்லா ப்ரஹ்மவித்யைக்குமா? என்று ஸந்தேஹம்)*

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்? தஹர-வித்யையில் உபாஸனம் செய்யப்படும் விஷய-விசேஷத்தைப் பற்றிய நிர்ணயம் செய்யப் படுகிறது என்பது; ஏன்? ப்ரகரணத்தால் (சொல்லப்பட்டு வரும் இடத்தால்).

முன் அனுவாகத்தில், தஹர-வித்யைதான் சொல்ல ஆரம்பிக்கப் பட்டது - [3]**''ஶரீரத்தின் நடுவில் பரமாத்மாவின் வீடாக இருக்கும் சிறிய பாபமற்ற ஹ்ருதய-தாமரை எது உள்ளதோ, அதில் சோகமற்ற சிறிய-ஆகாசம் (ப்ரஹ்மம்) உள்ளது; அதில் உள்ளே எது (எட்டு குணங்கள்) உள்ளதோ அந்த இரண்டும் உபாஸனம் செய்யப்பட வேண்டும்''** - என்று. (காண்க தஹராதிகரணம் 1-3-5); இந்த அனுவாகத்திலும், [4]**''தாமரைமொட்டு போன்ற ஹ்ருதயம் கீழ்முகமாக (உள்ளது)''** முதலியதால் ஹ்ருதய-தாமரையைச் சொல்கிறது; அப்படி சொல்வதானது, (முன் சொன்ன தஹரவித்யை இங்கும் தொடர்வதை உணர்த்துவதன் மூலம்) தஹர-வித்யையில் உபாஸனம் செய்யப்படும் விஷய-விசேஷத்தைப் பற்றிய நிர்ணயத்தின் பொருட்டு இந்த நாராயணானுவாகம் ஆகும் என்பதை வலியுறுத்துகிறது - என்று.

एवं प्राप्ते प्रचक्ष्महे - **लिङ्गभूयस्त्वात्** इति। अस्य निखिलपरविद्योपास्यविशेष-निर्धारणार्थत्वे भूयांसि लिङ्गानि दृश्यन्ते। तथा हि परविद्यासु अक्षर-शिव-शम्भु-परब्रह्म-परज्योतिः-परतत्त्व-परमात्मादिशब्दनिर्दिष्टमुपास्यं वस्त्विह तैरेव शब्दैरनूद्य तस्य नारायणत्वं विधीयते; भूयसीषु विद्यासु श्रुतान् अनूद्य नारायणत्वविधानभूयस्त्वं नारायण एव सर्वविद्यासूपास्यमस्थूलत्वादिविशेषितानन्दादिगुणकं परं ब्रह्मेति विशेषनिर्णये **भूयः** - बहुतरम् लिङ्गं भवति।

अत्र लिङ्गशब्दः चिह्नपर्यायः। चिह्नभूतं वाक्यं बहुतरमस्तीत्यर्थः। तद्धि प्रकरणा-द्बलीयः। तदप्युक्तं प्रथमकाण्डे, ''**श्रुतिलिङ्गवाक्यप्रकरणस्थानसमाख्यानां समवाये पा(प)रदौर्बल्यमर्थविप्रकर्षात्**''(पू.मी.सू.3-3-14)[1] इति।

यत्तूक्तम्, ''**पद्मकोशप्रतीकाशम्**''(तै.2.11-7)[2] इत्यादिवचनं दहरशेषत्वमस्यो-पोद्बलयतीति, तन्न; बलीयसा प्रमाणेन सर्वविद्योपास्यनिर्धारणार्थत्वेऽवधृते सति, दहर-विद्यायामपि तस्यैव नारायणस्योपास्यत्वेन तद्वचनोपपत्तेः।

न च सहस्रशीर्षमित्यादिद्वितीयानिर्देशेन पूर्वानुवाकोदितोपासिना सम्बन्धः शङ्कनीयः;

---

ஏவம் ப்ராப்தே ப்ரசக்ஷ்மஹே - *லிங்கபூயஸ்த்வாத்* - இதி। அஸ்ய நிகிலபரவித்யோபாஸ்யவிஶேஷநிர்தாரணார்தத்வே பூயாம்ஸி லிங்காநி த்ருஶ்யந்தே। ததா ஹி பரவித்யாஸு அக்ஷர-ஶிவ-ஶம்பு-பரப்ரஹ்மபர-ஜ்யோதி:-பரதத்த்வ-பரமாத்மாதிஶப்தநிர்திஷ்டமுபாஸ்யம் வஸ்து இஹ தைரேவ ஶப்தை: அநூத்ய தஸ்ய நாராயணத்வம் விதீயதே। பூயஸீஷு வித்யாஸு ஶ்ருதாந் அநூத்ய நாராயணத்வவிதாநபூயஸ்த்வம் நாராயண ஏவ ஸர்வவித்யாஸூபாஸ்யம் அஸ்தூலத்வாதிவிஶேஷிதாநந்தாதிகுண-கம் பரம் ப்ரஹ்மேதி விஶேஷநிர்ணயே பூய: - பஹுதரம் லிங்கம் பவதி।

அத்ர லிங்கஶப்த: சிஹ்நபர்யாய:। சிஹ்நபூதம் வாக்யம் பஹுதர-மஸ்தீத்யர்த:। தத்தி ப்ரகரணாத்பலீய:। ததப்யுக்தம் ப்ரதமகாண்டே, ''*ஶ்ரு-திலிங்கவாக்யப்ரகரணஸ்தாநஸமாக்யாநாம் ஸமவாயே பா(ப)ரதௌர்பல்யமர்த-விப்ரகர்ஷாத்*''(பூ.மீ.ஸூ.3-3-14)[1] இதி।

யத்தூக்தம், ''*பத்மகோஶப்ரதீகாஶம்*''(தை.2.11-7)[1] இத்யாதிவசநம் தஹரஶேஷத்வம் அஸ்ய உபோத்பலயதீதி - தந்ந, பலீயஸா ப்ரமாணேந ஸர்வவித்யோபாஸ்யநிர்தாரணார்தத்வே அவத்ருதே ஸதி, தஹரவித்யா-யாமபி தஸ்யைவ நாராயணஸ்யோபாஸ்யத்வேந தத்வசநோபபத்தே:।

ந ச 'ஸஹஸ்ரஶீர்ஷம்' இத்யாதித்விதீயாநிர்தேஶேந பூர்வாநுவா-

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்கிறோம் -

**''லிங்கபூயஸ்த்வாத்''** (அறிவிக்கும் அடையாளம் அதிகமாக இருப்பதால்) என்று.

இந்த வாக்யமானது, எல்லா பர-வித்யைகளிலும் உபாஸனம் செய்யப்படும் விஷய-விசேஷத்தைப் பற்றிய நிர்ணயத்தின் பொருட்டு ஆகிறது என்பதில் பல லிங்கங்கள் (அறிவிக்கும் அடையாளங்கள் ஆன வாக்யங்கள்) காணப் படுகின்றன. அப்படித்தானே, பரவித்யைகளில் உபாஸன-விஷயமான பொருளானது, அக்ஷரம், ஶிவன், ஶம்பு, பரப்ரஹ்ம, பரஜ்யோதிஸ், பரதத்த்வம், பரமாத்மா முதலிய சொற்கள் மூலம் குறிக்கப்பட்டுள்ளது; இங்கு அதே சொற்களையிட்டு அந்த உபாஸன-விஷயமான பொருளை திரும்பச் சொல்லி, அது நாராயணன்தான் என அறிவுறுத்துகிறது; பல வித்யைகளில் சொன்னவற்றை திரும்பச் சொல்லி, நாராயணனாக அறிவுறுத்தல் பலவாக இருப்பதானது, எல்லா வித்யைகளிலும் உபாஸன-விஷயமாய், அஸ்தூலத்வம் முதலிய குணங்களுடன் கூடிய ஆனந்தத்வம் முதலிய குணங்களை உடைய பரப்ரஹ்மம் ஆனது நாராயணன்தான் என்று விசேஷத்தை நிர்ணயிப்பதில் **பூய: -** மிக அதிகமான பல லிங்கமாக ஆகிறது;

இங்கு லிங்கம் என்ற சொல்லானது 'அறிவிக்கும் அடையாளம்' என்ற பொருளில் ஆகும்; அடையாளமான வாக்யம் மிக அதிகமாக பலது இருக்கிறது என்று அர்த்தம். அந்த வாக்யம் என்பதானது ப்ரகரணத்தை விட வலிமையானது; அதுவும் முதல் காண்டத்தில் (பூர்வமீமாம்ஸா ஶாஸ்த்ரத்தில்) சொல்லப்பட்டது - [1]**''ஶ்ருதி, லிங்கம், வாக்யம், ப்ரகரணம், ஸ்தானம், ஸமாக்யை என்றிவற்றில் பின்னதற்கு வலிமை குறைவு; பலன் தள்ளியிருப்பதால் (தாமதிப்பதால்)''** என்று.

**கேள்வி -** [2]**''தாமரை மொட்டு போன்ற''** முதலிய வாக்யம் ஆனது, இந்த வாக்யம் தஹரவாக்யத்துக்கு சேஷமாகும் என அறிவிக்கிறது என பூர்வபக்ஷத்தில் சொல்லப்பட்டது.

**பதில் -** அது கிடையாது; ஏனெனில், வலிமையுடைய ப்ரமாணத்தால், எல்லா வித்யைகளுக்கும் உபாஸன-விஷயமான பொருளை நிர்ணயம் செய்வதன் பொருட்டு இந்த வாக்யம் ஆகும் என உறுதியாகத் தெரிகிறது; அப்போது, தஹர-வித்யையிலும் அந்த நாராயணனே உபாஸன-விஷயம் ஆவதால், அந்த வாக்யம் சரியாகும்.

**கேள்வி -** ஸஹஸ்ரசீர்ஷம் (பல சிரஸ்களை உடையவனை) முதலியதாக இரண்டாவது விபக்தியை(வேற்றுமையை) குறிப்பிடுகிறது; ஆகையால், அதற்கு முன் அனுவாகத்தில் சொன்ன உபாஸனத்துடன் தொடர்பு ஆகலாம். (எனவே, முன் சொன்ன தஹர-உபாஸனம் நாராயணனைப் பற்றியது என்றே வாக்யத்தால் தெரியும்.)

‘‘**तस्मिन् यदन्तः तदुपासितव्यम्**’’(तै.2.10-2)[1] इत्युपासिगतेन कृत्प्रत्ययेनोपास्यस्य कर्मणोऽभिहितत्वात् तदुपास्ये द्वितीयानुपपत्तेः। ‘‘**विश्वमेवेदं पुरुषः**’’(तै.2.11-2)[2], ‘‘**तत्त्वं नारायणः परः**’’(तै.2.11-4)[3] इत्यादिप्रथमानिर्देशाच्च प्रथमार्थे द्वितीया वेदितव्या।

- ‘‘**अन्तर्बहिश्च तत् सर्वं व्याप्य नारायणः स्थितः**’’(तै.2.11-5)[4],
- ‘‘**तस्याः शिखाया मध्ये परमात्मा व्यवस्थितः। स ब्रह्मा स शिवः सेन्द्रः सोऽक्षरः परमः स्वराट्**’’ (तै.2.11-11,13)[5]

इति निर्देशैः सर्वस्मात् परो नारायण एव सर्वत्रोपास्य इति निर्णीयमानत्वाच्च प्रथमार्थे द्वितीयेति निश्चीयते॥ ४३ ॥

इति लिङ्गभूयस्त्वाधिकरणम्॥ १९ ॥

---

கோதிதோபாஸிநா ஸம்பந்த: ஶங்கநீய:, ‘‘*தஸ்மிந் யதந்த: ததுபாஸிதவ்யம்*’’(தை.2.10-2)[1] இதி உபாஸிகதேந க்ருத்ப்ரத்யயேந உபாஸ்யஸ்ய கர்மண: அபிஹிதத்வாத் ததுபாஸ்யே த்விதீயாநுபபத்தே:। ‘‘*விஶ்வமேவேதம் புருஷ:*’’(தை.2.11-2)[2], ‘‘*தத்த்வம் நாராயண: பர:*’’(தை.2.11-3)[3] இத்யாதிப்ரதமாநிர்தேஶாச்ச ப்ரதமார்தே த்விதீயா வேதிதவ்யா।

- ‘‘*அந்தர்பஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:*’’(தை.2.11-5)[4],
- ‘‘*தஸ்யா: ஶிகாயா மத்யே பரமாத்மா வ்யவஸ்தித:। ஸ ப்ரஹ்மா ஸ ஶிவ: ஸேந்த்ர: ஸோऽக்ஷர: பரம: ஸ்வராட்*’’ (தை.2.11-11,13)[5]

இதி நிர்தேஶை: ஸர்வஸ்மாத் பரோ நாராயண ஏவ ஸர்வத்ரோபாஸ்ய: இதி நிர்ணீயமாநத்வாச்ச ப்ரதமார்தே த்விதீயேதி நிஶ்சீயதே।। 43 ।।

இதி லிங்கபூயஸ்த்வாதிகரணம்।। 19 ।।

**பதில் –** இப்படி சங்கை செய்யக் கூடாது; [1]**''அதன் உள்ளில் எது உள்ளதோ, அது (உபாஸிதவ்யம்) உபாஸனம் செய்யப்பட வேண்டும்''** என்கிறது; 'உப+ஆஸ்' எனும் வினைச்சொல்லுடன் சேர்ந்த 'க்ருத்' ப்ரத்யயத்தால், உபாஸன-விஷயமான கர்மம் (செயப்படு பொருள்) சொல்லப்பட்டு விட்டது; ஆகையால், அவனால் உபாஸனம் செய்யப்படும் பொருளைப் பற்றி இரண்டாம் வேற்றுமை வரத் தகாது.

(நாராயணனை உபாஸனம் செய்யப்பட வேண்டும்'' என்பது பொருந்தாது; ஆகவே, முன் சொன்ன உபாஸனத்துடன் சேராது).

மேலும், [2]**''இந்த உலகமெல்லாம் புருஷனே'',** [3]**''நாராயணனே பரம்பொருள்''** முதலியதாக ப்ரதமையை (முதல் வேற்றுமையை) குறிக்கிறது; ஆகையால், ப்ரதமாவிபக்தியின் (முதல் வேற்றுமையின்) பொருளில் த்விதீயா (இரண்டாவது வேற்றுமை) ஆகும்.

- [4]**''அது எல்லாவற்றையும் உள்ளிலும் புறத்திலும் பரவி நாராயணனன் இருக்கிறான்'',**
- [5]**''ஹ்ருதயத்தில் இருக்கும் அந்த ஒளிச்சுடரின் நடுவில் பரமாத்மா இருக்-கிறான்; அவனே ப்ரஹ்மா; அவனே ஶிவன்; அவனே இந்த்ரன்; உயர்ந்த அவனே கர்ம-வசப்படாத முக்த-ஜீவன்''**

முதலிய குறிப்புகளால், எல்லாவற்றையும் விட உயர்ந்தவனான நாராய-ணனே எல்லா இடத்திலும் உபாஸன-விஷயம் ஆனவன் என்று தீர்மானிக்கப் படு-வதாலும், ப்ரதமா விபக்தியின் (முதல் வேற்றுமையின்) பொருளில் த்விதீயா (இரண்டாவது வேற்றுமை) ஆகும் என நிச்சயிக்கப் படுகிறது.

*(கேள்வி- ''ஸஹஸ்ரசீர்ஷம் தேவம்'' என்று ஆரம்பித்து பதங்கள் இரண்டாம் விபக்தியில் உள்ளன; ''ஆயிரம் தலை-தேவனை, ... நாராயணனை'' என்று அர்த்தம்;'நாராயணனை' என்பது எதில் சேரும்? நாராயணனை என்ன செய்ய வேண்டும் என்ற கேள்வி பிறக்கிறது; அப்போது முன்னர் சொன்ன தஹரவித்யையில் உபாஸனம் சொல்லியிருப்பதால், அதில்தான் சேர்த்துக் கொள்ள வேண்டும்; நாராயணனை உபாஸனம் செய்ய வேண்டும் என்று தஹர-வித்யை சொன்னதாகும்; இது எல்லா வித்யையிலும் சேராது.*

*பதில் – முன்னர் தஹரவித்யையில் உபாஸனம் செய்ய வேண்டும்' என்று பதம் இல்லை; ''உபாஸிதவ்யம் - உபாஸநம் செய்யப்பட வேண்டும்'' என்றே விதி உள்ளது; அதனுடன் இதனை சேர்க்க முடியாது; ''நாராயணனை உபாஸநம் செய்யப்பட வேண்டும்'' என்று சேராது; ஏனெனில், இது செயப்பாட்டு வினையில் இருப்பதால், 'நாராயணன் உபாஸனம் செய்யப்பட வேண்டும் என்று வரலாம்; நாராயணனை என்பது இதில் சேராது; ஆகையால், இதனை அந்த தஹரவித்யையுடன் சேர்க்காமல் தனியாக வைத்து அர்த்தம் சொல்ல வேண்டும்; அப்போது,''ஸஹஸ்ரசீர்ஷம் தேவம்'' என்னுமிடத்தில், முதல் விபக்தியின் அர்த்தமே வைத்துக் கொள்ள வேண்டும்; ஆயிரம் தலை தேவன் .. நாராயணன்'' என்று; வேதத்தில் அப்படி விபக்-தியை மாற்றி சொல்வது இலக்கண முறைப்படி சரியானதே).*

***

**லிங்கபூயஸ்த்வாதிகரணம் முற்றிற்று.**

# 102.பூர்வவிகல்பாதிகரணம் (3-3-20)

## முன் குறிப்பு

யாகத்தில், ஹோம-அக்னியை வைக்கும் இடத்தையும் அக்னி என்று சொல்வர்; சில கற்களைக் கொண்டு அந்த இடத்தை தயாரிக்க வேண்டும்; அதற்கு சயனம் என்று பெயர்; அந்த இடத்துக்கு, இஷ்டகசித-அக்னி (செங்கற்களால் தயாரிக்கப்பட்ட அக்னி) என்று பெயர்.

வாஜஸனேயகத்தில் ப்ராஹ்மணத்தில், மனச்சித் முதலிய அக்னிகள் சொல்லப்பட்டன; அதாவது, மனித ஆயுள் ஆன 360 நாட்களில், ஒவ்வொரு நாளும் உள்ள மனஸ்-செயல்களை அக்னியாக கற்பனை செய்ய வேண்டும்; அந்த அக்னிக்கு மனச்சித் என்று பெயர்; மனஸ் ஆகிற சித் என்று அர்த்தம். (இங்கு சித் என்றால், சயனம் செய்யப்படும் அக்னி; மனஸ் என்றால் மனஸ்ஸின் செயல்கள்); இந்த மனச்சித் போல, வாக்சித் முதலிய பல அக்னிகள் உள்ளன; எல்லாமே கற்பனை வடிவானவையே; அதனால், ஜ்ஞாநமயமான அக்னிகள் என்பர்.

இந்த மனச்சித் முதலியவை எந்த யாகத்தில் சேரும் என்பது விசாரம்; செயல் மயமான யாகத்தில் சேருமா? அல்லது ஜ்ஞாநமயமான யாகத்தில் சேருமா?

**பூர்வபக்ஷம்** - பொதுவாக மனிதர்கள் செய்யும் செயல்மயமான யாகத்தில் இவை சேரும்; செங்கற்களால் தயாரிக்கப்படும் இஷ்டகசித-அக்னியானது, 'பசு' எனும் பலனுக்காக ஆவதால், அந்த பலன் தேவையானால் செய்யலாம்; அல்லது, அதற்கு பதிலாக, இந்த மனச்சித் முதலியதில் ஒன்றை கற்பனையாக செய்தாலும், அந்த பலன் கிடைக்கும்; இப்படி இஷ்டகசித-அக்னிக்கும் மனச்சித் முதலிய அக்னிக்கும் விகல்பம் ஆகும்.

**ஸித்தாந்தம்** - யாகம் முழுவதும் அங்கங்களுடன் மனஸ்ஸாலே செய்வதாக கற்பனை-யாகம் ஒன்று அங்கே செர்லியுள்ளது; அந்த கற்பனை-யாகத்தில்தான் இந்த மனச்சித் முதலிய கற்பனை-அக்னிகள் சேரும்.

''முன் சொன்ன இஷ்டகசித-அக்னி எவ்வளவோ, அந்த அளவு மனச்சித் முதலிய அக்னிகளில் ஒவ்வொன்றும் ஆகும்'' என்று வேதம் சொல்கிறது; இரண்டுக்கும் ஒரே பலன் ஆகும் என்று கருத்து; அது தவிர இரண்டுக்கும் விகல்பம் வராது; ஏனெனில், இரண்டும் செய்ய வேண்டிய இடம் வேறு; செயல்மயமான யாகத்தில் இஷ்டகசித அக்னி செய்தால் என்ன பலனோ, அந்த பலன் வித்யைமயமான கற்பனை யாகத்தில் மனச்சித் செய்தால் வரும் என்று அர்த்தம்.

முதல் ஸூத்ரத்தில் க்ரியா என்பதற்கு செயல்மயமான யாகத்தில் சேர்வது என்று அர்த்தம். ஸித்தாந்தஸூத்ரத்தில், வித்யா என்பதற்கு ஜ்ஞாந-உருவான யாகத்தில் சேர்வது என்று அர்த்தம்.

ஶ்ருதி, லிங்கம் முதலியன பற்றி விரிவாக பின் இணைப்பில் காணலாம்.

# १०२. पूर्वविकल्पाधिकरणम् (३-३-२०)

## ३९८.पूर्वविकल्पः प्रकरणात् स्यात् क्रिया मानसवत् (३-३-४४)

वाजसनेयके अग्निरहस्ये मनश्चिदादयोऽग्नयः श्रूयन्ते, **''मनश्चितः''**, **''वाक्चितः''**, **''प्राणचितः''**, **''चक्षुश्चितः''**, **''श्रोत्रचितः''**, **''कर्मचितः''**, **''अग्निचितः''**(अ.र. 10-5-3,4,5,6,7,9,11)[1] इति।

तत्र संशयः - किमेते मनश्चिदादयः साम्पादिकत्वेन विद्यारूपा अग्नयः क्रियामयक्रत्वनुप्रवेशेन क्रियारूपाः, आहोस्वित् विद्यामयक्रत्वनुप्रवेशेन विद्यारूपा एव इति विशये,

क्रियारूपत्वं तावदाह - **पूर्वविकल्पः** इत्यादिना। चित्याग्नित्वेन सम्पादितानामेषां मनश्चिदादीनां क्रत्वनुप्रवेशसाकांक्षाणां स्वदेशे क्रतुविध्यभावात् पूर्वत्र, **''असद्वा इदमग्र आसीत्''**(अ.र.10-5-3)[2] इत्यादिनेष्टकचितस्याग्नेः प्रकृतत्वात् तस्य च क्रियामयक्रत्वव्यभिचारित्वेन तत्र क्रतुसन्निधानात् तत्प्रकरणगृहीताः मनश्चिदादयः तेनेष्टकचितेनाग्निना विकल्प्यमानाः क्रियारूपा एव स्युः।

---

# 102. பூர்வவிகல்பாதிகரணம் (3-3-20)

## 398.பூர்வவிகல்ப: ப்ரகரணாத் ஸ்யாத் க்ரியா மாநஸவத் (3-3-44)

வாஜஸநேயகே அக்நிரஹஸ்யே மநஶ்சிதாதயோऽக்நய: ஶ்ரூயந்தே, *''மநஶ்சித:, வாக்சித:, ப்ராணசித:, சக்ஷுஶ்சித:, ஶ்ரோத்ரசித:, கர்மசித:, அக்நிசித:''* (அ.ர.10-5-3,4,5,6,7,9,11)[1] இதி।

தத்ர ஸம்ஶய: - கிமேதே மநஶ்சிதாதய: ஸாம்பாதிகத்வேந வித்யாரூபா அக்நய: க்ரியாமயக்ரத்வநுப்ரவேஶேந க்ரியாரூபா:, ஆஹோஸ்வித் வித்யாமயக்ரத்வநுப்ரவேஶேந வித்யாரூபா ஏவ இதி விஶயே,

க்ரியாரூபத்வம் தாவதாஹ - பூர்வவிகல்ப: இத்யாதிநா। சித்யாக்நித்வேந ஸம்பாதிதாநாமேஷாம் மநஶ்சிதாதீநாம் க்ரத்வநுப்ரவேஶஸாகாங்க்ஷாணாம் ஸ்வதேஶே க்ரதுவித்யபாவாத் பூர்வத்ர, *''அஸத்வா இதமக்ர ஆஸீத்''* (அ.ர.10-5-3)[2] இத்யாதிநா இஷ்டகசிதஸ்யாக்நே: ப்ரக்ருதத்வாத் தஸ்ய ச க்ரியாமயக்ரத்வவ்யபிசாரித்வேந தத்ர க்ரதுஸந்நிதாநாத் தத்ப்ரகரணக்ருஹீதா: மநஶ்சிதாதய: தேந இஷ்டகசிதேநாऽக்நிநா விகல்ப்யமாநா: க்ரியாரூபா ஏவ ஸ்யு:।

# 102.பூர்வவிகல்பாதிகரணம் (3-3-20)

**398.(பூ)பூர்வவிகல்ப: ப்ரகரணாத் ஸ்யாத் க்ரியா மாநஸவத்(3-3-44)**

*முன்னதுடன் விகல்பம்; [மனச்சித் முதலியவை] ப்ரகரணத்தால், செயல்மயமான யாகத்தில் சேர்வதாகும்; மானஸக்ரஹம் போல*

## விஷயவாக்யம்

வாஜஸனேயகத்தில், அக்னிரஹஸ்யத்தில், மனச்சித் முதலிய அக்னிகள் ஓதப்படுகின்றன - [1]**''மனச்சித்கள், வாக்சித்கள், ப்ராணசித்கள், சக்ஷுச்சித்கள், ஶ்ரோத்ரசித்கள், கர்மசித்கள், அக்னிசித்கள்''**- என்று.

## ஸந்தேஹம்

அதில் ஸந்தேஹம் - இந்த மனச்சித் முதலிய அக்னிகள், கற்பனை செய்யப் படுபவை என்பதால், வித்யை (ஜ்ஞாந) - உருவானவை; இவை செயல் மயமான யாகத்தில் சேர்வதால் க்ரியை என்பதா? அல்லது வித்யைமயமான யாகத்தில் சேர்வதால், வித்யை என்பதா?என்று.

## பூர்வபக்ஷம்

இந்த ஸந்தேஹத்தில்,செயல்-உருவாகும் (செயல்-மயமான யாகத்தில் சேரும்) என்பதை **'பூர்வவிகல்ப:'** முதலியதால் (ஸூத்ரத்தில்) சொல்கிறார்.

**ப்ரகரணாத் -** ஏனெனில் - சயனம் செய்யப்பட வேண்டிய அக்னியாக கற்பனை செய்யப்பட வேண்டிய இந்த மனச்சித் முதலியவை, ஒரு யாகத்தில் சேர்வதை எதிர்பார்த்திருப்பவை; (எந்த யாகத்தில் சேரலாம் எனும் கேள்வியுடன் இருப்பவை); தனது இடத்தில் யாகத்தின் விதி எதுவும் இல்லை; முன்னிடத்தில், [2]**''இது முதலில் அஸத்தாக இருந்தது''** முதலியதால், இஷ்டகசிதமான அக்னி (செங்கற்களைக் கொண்டு செய்த ஸ்தண்டிலம்) ஆரம்பித்து சொல்லப்பட்டு வருகிறது; அது செயல்-மயமான யாகத்தில் சேர்ந்தே இருப்பதாகும்; எனவே, அங்கு யாகம் ஒன்று நினைவுக்கு வரும்; அதனால், அந்த (யாக)ப்ரகரணத்தில் மனச்சித் முதலியவை எடுக்கப்பட்டவை ஆகின்றன; அதனால்,

**பூர்வவிகல்ப: -** இந்த மனச்சித் முதலிய அக்னிகள், அந்த இஷ்டகசிதம் ஆகிற அக்னியுடன் விகல்பம் அடைவன ஆகும்;

**க்ரியா -** (அப்படி) அவைசெயல்-உருவாகவே (செயல்-மயமான யாகத்தில் சேர்பவையாகவே)ஆகும்.

विद्यारूपाणामपि क्रियामयक्रत्वनुप्रवेशेन क्रियारूपत्वं मानसग्रहवदुपपद्यते। यथा द्वादशाहे अविवाक्ये दशमेऽहनि मानसग्रहस्य मनोनिष्पाद्यग्रहणाऽऽसादनस्तोत्रशस्त्रप्रत्याहरणभक्षणत्वेन विद्यारूपस्यापि क्रियामयक्रत्वङ्गतया क्रियारूपत्वम् तथेहापि॥४४॥

## ३९९.अतिदेशाच्च (३-३-४५)

इतश्चेष्टकचितेनाग्निना मनश्चिदादीनां विकल्पः क्रियारूपत्वं चावगम्यते, **"तेषामेकैक एव तावान् यावान् असौ पूर्वः"** (अग्नि.10-5-3)[1] इति पूर्वस्येष्टकचितस्याग्नेर्वीर्यं मनश्चिदादिष्वतिशयते। तेन तुल्यकार्यत्वात् विकल्पः। ततश्चेष्टकचितवत् तत्क्रतुनिर्वर्तनेन तदङ्गभूताः मनश्चिदादयः क्रियामयक्रत्वनुप्रवेशेन क्रियारूपा एवेति॥ ४५ ॥

एवं प्राप्ते प्रचक्ष्महे-

## ४००.विद्यैव तु निर्धारणात् दर्शनाच्च (३-३-४६)

வித்யாரூபாணாமபி க்ரியாமயக்ரத்வநுப்ரவேஶேந க்ரியாரூபத்வம் மாநஸக்ரஹவத் உபபத்யதே। யதா த்வாதஶாஹே அவிவாக்யே தஶமேऽஹநி மாநஸக்ரஹஸ்ய மநோநிஷ்பாத்யக்ரஹணாऽऽஸாதநஸ்தோத்ர ஶஸ்த்ரப்ரத்யாஹரணபக்ஷணத்வேந வித்யாரூபஸ்யாபி க்ரியாமயக்ரத்வங்கதயா க்ரியாரூபத்வம், ததா இஹாபி।। 44 ।।

## 399.அதிதேஶாச்ச(3-3-45)

இதஶ்ச இஷ்டகசிதேநாऽக்நிநா மநஶ்சிதாதீநாம் விகல்ப: க்ரியாரூபத்வம் ச அவகம்யதே, *"தேஷாமேகைக ஏவ தாவாந் யாவாந் அஸௌ பூர்வ:"* (அக்நி.10-5-3)[1] இதி பூர்வஸ்ய இஷ்டகசிதஸ்யாக்நே: வீர்யம் மநஶ்சிதாதிஷு அதிஶயதே। தேந துல்யகார்யத்வாத் விகல்ப:। ததஶ்ச இஷ்டகசிதவத் தத்க்ரதுநிர்வர்தநேந ததங்கபூதா: மநஶ்சிதாதய: க்ரியாமயக்ரத்வநுப்ரவேஶேந க்ரியாரூபா ஏவேதி।। 45 ।।

ஏவம் ப்ராப்தே ப்ரசக்ஷ்மஹே-

## 400.வித்யைவ து நிர்தாரணாத் தர்ஶநாச்ச (3-3-46)

**மாநஸவத்** (மானஸக்ரஹம் போல) - ஜ்ஞாந-உருவானவையும் கூட செயல்-மயமான யாகத்துள் சேர்வதன் மூலம், செயல்-உருவாகும் என்பது மானஸ-க்ரஹம் போலே சரியாகும்;

த்வாதசாஹம் எனும் யாகத்தில், அவிவாக்யம் (பலவித வாக்யங்கள் இல்லாதது) எனப்படும் பத்தாம் நாளில், மானஸ-க்ரஹம் உள்ளது; அது, மனஸ்ஸாலேயே செய்யப்பட வேண்டிய வாங்குதல், வைத்தல், ஸ்தோத்ரம், ஶஸ்த்ரம், (ஹோமத்துக்குப் பின் மீதியை) திரும்பி கொண்டுவருதல், உண்ணுதல் ஆகியவற்றை உடையது; அது ஜ்ஞாந-உருவாகவே ஆனாலும், செயல்-மயமான யாகத்தில் சேர்வதால், செயல்-உருவானது ஆகும்; அது எப்படியோ, அப்படியே இங்கும் ஆகும்.

✍(*யாகத்தில், க்ரஹம் என்பது ஒரு பாத்ரம்; அதில் ஸோமரஸத்தை வாங்கி, வைக்க வேண்டும்; ஸ்தோத்ரம், சஸ்த்ரம் சொல்லி ஹோமம் செய்தபின், அதிலேயே திரும்பிக் கொண்டு வந்து, பின் உண்ணவும் வேண்டும்; த்வாதசாஹம் எனும் யாகத்தில் மானஸ-க்ரஹம் சொல்லியுள்ளது; ப்ருதிவீ எனும் க்ரஹ-பாத்ரத்தில் ஸமுத்ரம் என்னும் ரஸத்தை எடுப்பதாக மனஸ்ஸால் கற்பனை செய்ய வேண்டும்; அப்படி மனஸ்ஸால் கற்பனை செய்யப்படும் க்ரஹ-பாத்ரத்தில், கற்பனையாகவே, அதில் ரஸத்தை வாங்கி வைத்தல் முதலியதை நினைக்க வேண்டும். இப்படி இந்த க்ரஹம் ஜ்ஞாநமயமானது; இது செயல் மயமான த்வாதசாஹ-யாகத்தில் சேர்கிறது; அது போல ஜ்ஞாநமயமான மனச்சித் முதலியவை, செயல்மயமான யாகத்தில் சேரலாம் என்று பூர்வபக்ஷம்.*)✍



**399.(பூ)அதிதேஶாத் ச (3-3-45)**

***அதிதேஶம் செய்வதாலும்***

மனச்சித் முதலிய அக்னிகளுக்கு இஷ்டகசிதம் ஆகிற அக்னியுடன் விகல்பம் ஆகும் என்பதும், செயல்-உருவாகவே (செயல் மயமான யாகத்தில் சேர்பவையாகவே)ஆகும் என்பதும் இந்த காரணத்தாலும் தெரிகிறது - முன் (சொல்லப்பட்டு) இருக்கும் இஷ்டகசித-அக்னியின் வீர்யமானது மனச்சித் முதலியவற்றில் வருவதாக அதிதேசமாக சொல்லப்படுகிறது - [1] **''முன்னது எந்த அளவோ, அந்த அளவு, இவற்றில் ஒவ்வொன்றும் ஆகும்''** என்று. ஆகையால், ஸமமான பலனை உடையதால் விகல்பம் ஆகும்; ஆகையால், இஷ்டகசித-அக்னி போல அந்த யாகத்தை உண்டு பண்ணுவதன் மூலம் அந்த யாகத்துக்கு அங்கமாக மனச்சித் முதலியவை ஆகின்றன; (ஆகவே) அவை, செயல்-மயமான யாகத்தில் சேர்வதால் செயல்-உருவானவைதாம் என்று.



**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்கிறோம் -

**400.வித்யா ஏவ து நிர்தாரணாத் தர்ஶநாத் ச (3-3-46)**

***வித்யைமயமான யாகத்தில் சேர்வனதான்; நிச்சயிப்பதாலும் அந்த யாகத்தைக் காண்பதாலும்.***

तुशब्दः पक्षं व्यावर्तयति। यदुक्तम् - मनश्चिदादयः (क्रियामयक्रत्वनुप्रवेशेन) क्रियारूपा एवेति, नैतदस्ति। विद्यारूपा एवैते। विद्यारूपक्रत्वन्वयिन इत्यर्थः। कुतः? निर्धारणात् दर्शनाच्च।

निर्धारणं तावत् - **"ते हैते विद्याचित एव। विद्यया हैवेत एवंविदश्चिता भवन्ति"** (अग्नि.10-5-3-12)[1] इति। वाङ्मनश्चक्षुरादिव्यापाराणामिष्टकादिवत् चयनानुपपत्तेर्मनसा सम्पादिताग्नित्वेन विद्यारूपत्वे सिद्धेऽपि, **"विद्याचित एव"**, **"विद्यया हैवैते"** (अग्नि.10-5-3-12)[2] इति चावधारणं विद्यामयक्रत्वन्वयेन विद्यारूपत्वज्ञापनार्थमिति निश्चीयते।

दृश्यते चात्रैवैषां शेषी विद्यारूपः क्रतुः, **"ते मनसैवाधीयन्त मनसैवाचीयन्त, मनसैषु ग्रहा अगृह्यन्त, मनसास्तुवन्त, मनसाशंसन्, यत् किञ्च यज्ञे कर्म क्रियते, यत् किञ्च यज्ञियं कर्म, मनसैव तेषु मनोमयेषु मनश्चित्सु मनोमयमक्रियत"** (अग्नि.10-5-3-3)[3] इति। इष्टकचितेष्वग्निषु यत् क्रियामयं यज्ञीयं कर्म क्रियते, तत् मनोनिर्वर्त्येषु मनश्चिदाद्यग्निषु मनोमयमेवाक्रियतेति वचनात् क्रतुरपि विद्यामयोऽत्र प्रतीयते॥४६॥

---

துஶப்த: பக்ஷம் வ்யாவர்தயதி, யதுக்தம் - மநஶ்சிதாதய: (க்ரியாமயக்ரத்வநுப்ரவேஶேந) க்ரியாரூபா ஏவேதி - நைததஸ்தி। வித்யாரூபா ஏவைதே। வித்யாரூபக்ரத்வந்வயிந: இத்யர்த:। குத:? *நிர்தாரணாத் தர்ஶநாச்ச।*

நிர்தாரணம் தாவத் - *"தே ஹைதே வித்யாசித ஏவ। வித்யயா ஹைவேத ஏவம்விதஶ்சிதா பவந்தி"*(அக்நி.10-5-3-12)[1] இதி। வாங்மநஶ்சக்ஷுராதிவ்யாபாராணாம் இஷ்டகாதிவத் சயநாநுபபத்தே: மநஸா ஸம்பாதிதாக்நித்வேந வித்யாரூபத்வே ஸித்தேऽபி, வித்யாசித ஏவ, வித்யயா ஹைவைதே இதி ச அவதாரணம், வித்யாமயக்ரத்வந்வயேந வித்யாரூபத்வஜ்ஞாபநார்தம் இதி நிஶ்சீயதே।

த்ருஶ்யதே ச அத்ரைவ ஏஷாம் ஶேஷீ வித்யாரூப: க்ருது:, *"தே மநஸைவாதீயந்த மநஸைவாசீயந்த, மநஸைஷு க்ரஹா அக்ருஹ்யந்த, மநஸாஸ்துவந்த, மநஸாऽஶம்ஸந், யத் கிஞ்ச யஜ்ஞே கர்ம க்ரியதே, யத் கிஞ்ச யஜ்ஞியம் கர்ம, மநஸைவ தேஷு மநோமயேஷு மநஶ்சித்ஸு மநோமயமக்ரியத"*(அக்நி.10-5-3-12)[2] இதி। இஷ்டகசிதேஷ்வக்நிஷு யத் க்ரியாமயம் யஜ்ஞீயம் கர்ம க்ரியதே, தத் மநோநிர்வர்த்யேஷு மநஶ்சிதாத்யக்நிஷு மநோமயமேவாக்ரியத' இதி வசநாத் க்ரதுரபி வித்யாமயோऽத்ர ப்ரதீயதே।। 46 ।।

**'து'** எனும் சொல் பூர்வபக்ஷத்தை களைகிறது.

(பூர்வபக்ஷத்தில்) மனச்சித் முதலியவை க்ரியைமயமான யாகத்தில் சேர்வதால் க்ரியை-உருவானவைதாம் என்று சொன்னது எதுவோ, அது கிடையாது;

**வித்யா ஏவ -** வித்யை-உருவானவையே; இவை வித்யைமயமான யாகத்தில் சேர்பவையே என்று பொருள்.

ஏன்?

**நிர்தாரணாத் தர்ஶநாத் ச -** (நிச்சயிப்பதாலும் காண்பதாலும்)

நிச்சயித்தல் ஆவது - [1]**''இவை வித்யாசித்கள்தாம்; இப்படி அறிபவனுக்கு வித்யையினாலேயே (வித்யைமயமான யாகத்தில் சேர்வதாகவே) இவை சயனம் செய்யப்பட்டவை ஆகும்''** என்று உள்ளது.

வாக், மனஸ், கண் முதலியவற்றின் செயல்களை செங்கல் முதலியவை போல சயனம் செய்ய முடியாது; ஆகையால் இவை மனஸ்ஸால் கற்பனை செய்யப்படும் அக்னிகள் என்பதால், இவை ஜ்ஞாந-உருவானவை என்பது தெரிந்ததுதான்! ஆனாலும், [2]**''(மனச்சித் முதலியவை) வித்யாசித்கள்தாம்; வித்யையினாலேயே''** என்று, அவதாரணமும் (அவை வித்யைகள்தாம் என்று உறுதிப் படுத்தலும்) உள்ளது; அது, வித்யைமயமான யாகத்தில் சேர்வதன் மூலம் வித்யை-உருவானவை என்பதை அறிவிப்பதன் பொருட்டு ஆகும் என நிச்சயிக்கப் படுகிறது.

*(அந்த மனச்சித் முதலியவற்றை வித்யா-சித:- (ஜ்ஞாந-உருவங்களான அக்னிகள்) என்று வேதம் சொல்கிறது; மனச்சித் முதலியவை கற்பனையே; உண்மையல்ல, ஜ்ஞாந-உருவங்களே என்பது சொல்லாமலேயே நமக்குத் தெரியும்! தெரிந்த விஷயத்தை வேதம் சொல்லாது! எனவே, இங்கே வேறொரு விஷயத்தைச் சொல்கிறது; இங்கே, வித்யா என்றால் வித்யாமயமான (ஜ்ஞாந-உருவான) யாகத்தில் சேர்பவை என்று அர்த்தம்; அதை உறுதியாக்க, 'வித்யாசித்கள்தாம்' என்கிறது; மேலும் அதை விளக்குகிறது - ''வித்யையால்தான் இவை சயனம் செய்யப்படுகின்றன'' என்று. இதன் விளக்கம் அடுத்த ஸூத்ரத்தில்).*

இந்த மனச்சித் முதலியவற்றின் சேஷியான (அங்கியான) யாகம் இங்கேயே காணப்படுகிறதும் கூட - [3]**''அவை மனஸ்ஸாலேயே ஓதப்பட்டன; மனஸ்ஸாலேயே சயனம் செய்யப்பட்டன; மனஸ்ஸால் இவற்றில் க்ரஹங்கள் எடுக்கப்பட்டன; மனஸ்ஸால் ஸ்தோத்ரங்கள் பாடப்பட்டன; மனஸ்ஸால் சஸ்த்ரங்கள் சொல்லப் பட்டன (சொல்லினர்); யாக-ப்ரயோகத்தில் எந்த ப்ரதான-கர்மம் செய்யப் படுகிறதோ, யாக-அங்கமாக எந்த கர்மம் செய்யப் படுகிறதோ,(அது), மனஸ்ஸாலேயே அந்த மனோமயமான மனச்சித்களில் மனோமயமாக செய்யப்பட்டது''** என்று. இஷ்டகசிதங்களான அக்னிகளில் (செங்கற்களால் செய்யப்பட்ட ஸ்தண்டிலங்களில்) செயல்-உருவாக யாக-கர்மம் எது செய்யப் படுகிறதோ, அது, மனஸ்ஸால் கற்பனை செய்யப்படும் மனச்சித் முதலிய அக்னிகளில் மனோமயமாகவே செய்யப்பட்டது என்று சொல்கிறது; அதனால், வித்யைமயமான யாகமும் இங்கு தெரிகிறது. (அதில் தான் மனச்சித் முதலியது அங்கமாக சேரும்)



नन्वत्र विधिपदाश्रवणात् फलसम्बन्धाप्रतीतेश्चेष्टकचिताग्न्युपस्थापितक्रियामयक्रतु-प्रकरणात् विद्यामयक्रत्वन्वयेन विद्यारूपतैषां बाध्यते। नेत्याह -

**४०१.श्रुत्यादिबलीयस्त्वाच्च न बाधः (३-३-४७)**

श्रुतिलिङ्गवाक्यानां प्रकरणात् बलीयस्त्वेन श्रुत्याद्यवगतः क्रतुः, एषां तदन्वयश्च दुर्बलेन प्रकरणेन बाधितुं न शक्यते।

श्रुतिस्तावत्, "**ते हैते विद्याचित एव**"(अग्नि.10-5-3-12)[1] इति। तां विवृणोति, "**विद्यया हैवैत एवंविदश्चिता भवन्ति**"(अग्नि.10-5-3-12)[2] इति। विद्यया क्रतुना सम्बद्धाः मनश्चिदादयः चिता भवन्तीत्यर्थः। "**तान् हैतान् एवंविदे सर्वदा सर्वाणि भूतानि चिन्वन्ति, अपि स्वपते**"(अग्नि.10-5-3-12)[3] इति लिङ्गम्।

वाक्यं च, "**एवंविदे चिन्वन्ति**"(अग्नि.10-5-3-12)[4] इति। समभिव्याहारो वाक्यम्। एवंविदे विद्यामयक्रतुमते सर्वदा सर्वाणि भूतानि चिन्वन्तीत्यर्थः। सर्वभूतकर्तृकं सर्वकालव्यापि चयनं मनसा सम्पादितं परिमितकर्तृकालक्रियामयेष्टकचितकार्यद्वारेण क्रत्वनुप्रवेशसम्भवमलभमानं विद्यामयक्रत्वनुप्रवेशे लिङ्गं भवति॥४७॥

---

நநு அத்ர விதிபதாஶ்ரவணாத் பலஸம்பந்தாப்ரதீதேஶ்ச இஷ்டக-சிதாக்ந்யுபஸ்தாபிதக்ரியாமயக்ரதுப்ரகரணாத் வித்யாமயக்ரத்வந்வயேந வித்யாரூபதா ஏஷாம் பாத்யதே। நேத்யாஹ -

**401.ஶ்ருத்யாதிபலீயஸ்த்வாச்ச ந பாத: (3-3-47)**

ஶ்ருதிலிங்கவாக்யாநாம் ப்ரகரணாத் பலீயஸ்த்வேந ஶ்ருத்யாத்ய-வகத: க்ரது:, ஏஷாம் ததந்வயஶ்ச துர்பலேந ப்ரகரணேந பாதிதும் ந ஶக்யதே।

ஶ்ருதிஸ்தாவத், *"தே ஹைதே வித்யாசித ஏவ"*(அக்நி.10-6-3-12)[1] இதி। தாம் விவ்ருணோதி, *"வித்யயா ஹைவைத ஏவம்விதஶ்சிதா பவந்தி"*(அக்நி. 10-6-3-12)[2] இதி। வித்யயா க்ரதுநா ஸம்பத்தா: மநஶ்சிதாதய: சிதா பவந்தீத்யர்த:। *"தாந் ஹைதாந் ஏவம்விதே ஸர்வதா ஸர்வாணி பூதாநி சிந்வந்தி, அபி ஸ்வபதே"*(அக்நி.10-6-3-12)[3] இதி லிங்கம்।

வாக்யம் ச, *"ஏவம்விதே சிந்வந்தி"*(அக்நி.10-6-3-12)[4] இதி। ஸமபிவ்யாஹாரோ வாக்யம்। ஏவம்விதே வித்யாமயக்ரதுமதே ஸர்வதா ஸர்வாணி பூதாநி சிந்வந்தீத்யர்த:। ஸர்வபூதகர்த்ருகம் ஸர்வகாலவ்யாபி சயநம் மநஸா ஸம்பாதிதம் பரிமிதகர்த்ருகாலக்ரியாமயேஷ்டகார்யத்வாரேண க்ரத்வநுப்ரவேஶஸம்பவமலபமாநம் வித்யாமயக்ரத்வநுப்ரவேஶே லிங்கம் பவதி।। 47 ।।

**கேள்வி -** இங்கு விதி-ப்ரத்யயம் (கட்டளை உருபு) வேதத்தில் சொல்லவில்லை; பலன் தொடர்பும் தெரியவில்லை; அதனால், இவை வித்யைமயமான யாகத்தில் சேர்வதால் வித்யை-உருவானவை என்பதானது, இஷ்டகசிதம் ஆகிற அக்னியால் நினைவுறுத்தப்பட்ட செயல்-மயமான யாகத்தின் ப்ரகரணத்தைக் கொண்டு பாதிக்கப்படும்

**பதில் -** அது இல்லை என்கிறார் -

**401.ஶ்ருத்யாதி-பலீயஸ்த்வாத் ச ந பாத:(3-3-47)**

*ஶ்ருதி முதலியது, [ப்ரகரணத்தை விட] அதிக வலுவானது என்பதால் பாதிக்கப் படாது.*

**ஶ்ருத்யாதி-பலீயஸ்த்வாத் -** ஶ்ருதி, லிங்கம், வாக்யம் என்றிவை ப்ரகரணத்தை விட வலுவானவை என்பதால்,

**ந பாத:** (மறுப்பு ஆகாது) - (அதிக பலமுடைய) ஶ்ருதி முதலியதால் (வித்யைமயமான)யாகமும், இந்த மனச்சித் முதலியவை அந்த யாகத்தில் சேர்வதும் தெரிகிறது; அது, பலம் குறைந்த ப்ரகரணத்தைக் கொண்டு பாதிக்கப்படமுடியாது.

ஶ்ருதியானது - [1]**''அவை வித்யாசித்கள்தாம்''** என்பதாகும்; அதனை விவரிக்கிறது - [2]**''இப்படி அறிபவனுக்கு வித்யையால் இவை சயனம் செய்யப் பட்டவை ஆகின்றன''**- என்று. வித்யையால் - வித்யைமயமான யாகத்துடன் சேர்ந்தவையாக மனச்சித் முதலியவை சயனம் செய்யப்பட்டவை ஆகின்றன என்று அர்த்தம்.

லிங்கம் - [3]**''உறங்குபவனாகிலும் (உறங்கும் போதும்) இப்படி அறிபவனுக்கு இவற்றை எல்லா பூதங்களும் சயனம் செய்கின்றன''** என்பது.

*(அந்தந்த புருஷனின் ஆயுளில் தினமும் உறக்கத்திலும் விழிப்பிலும் உள்ள எல்லா செயல்களும் அக்னியாக எண்ணப் படுகின்றன; புருஷன் உறங்கும்போது அவன் எந்த செயலும் செய்யாவிட்டாலும், அப்போது தேவையான செயல்களை எல்லா பூதங்களும் செய்கின்றன; மூச்சு இழுத்தல், ரத்த ஓட்டம், மற்றும் இவனுக்காக உணவு தயாரித்தல் முதலிய எண்ணற்ற செயல்கள் நடந்து கொண்டே இருக்கின்றன; அந்த செயல்களையும் சேர்த்து அக்னியாக எண்ணுகிறான் என்று கருத்து; இது எப்படி லிங்கமாகும் எனும் விளக்கம் பின்னர் வருகிறது)*

வாக்யமும் - [4]**''இப்படி அறிபவனுக்கு சயனம் செய்கின்றன''** என்று; பதங்கள் சேர்ந்திருத்தல்தான் வாக்யம்; இப்படி அறிபவனுக்கு - வித்யைமயமான யாகம் உடையவனுக்கு எப்போதும் எல்லா பூதங்களும் சயனம் செய்கின்றன என்று அர்த்தம்.

*(இங்கு, சயனம் ஆனது, வித்யைக்கு அங்கமாகும் என்பதை நேராக சொல்லும் தனிப்பதம் எதுவும் இல்லை; ஆனாலும், வாக்யம்உள்ளது; ''இந்த வித்யையை உடையவனுக்கு சயனம்'' என்று சொல்வதால், வித்யைக்கு சயனம் அங்கம் என தெரிகிறது).*

எல்லா பூதங்களையும் செய்பவராகக் கொண்டு, எல்லா காலத்திலும் பரவியிருக்கும் சயனம் ஆனது, மனஸ்ஸால் கற்பனை செய்யப்பட்டது; அது, குறைந்த அளவான செய்பவரையும் காலத்தையும் கொண்ட க்ரியை-மயமான இஷ்டகசிதகார்யம் வாயிலாக யாகத்தில் சேர்வதாக ஆவதைப் பெறாது; (ஆகவே, அது) வித்யை மயமான யாகத்தில் சேர்வதில் லிங்கமாக ஆகிறது.

यच्चेदमुक्तं - विधिप्रत्ययाश्रवणात् फलसम्बन्धाप्रतीतेश्च क्रियामयात् क्रतोरन्योऽत्र विद्यामयः क्रतुर्न सम्भवति इति, तत्राह -

**४०२.अनुबन्धादिभ्यः प्रज्ञान्तरपृथक्त्ववत् दृष्टश्च तदुक्तम्(३-३-४८)**

इष्टकचितान्वयिनः क्रियामयात् क्रतोर्विद्यामयोऽयं क्रतुः पृथक्त्वेन अनुबन्धादिभ्यः पृथक्त्वहेतुभ्योऽवगम्यते। **अनुबन्धाः** यज्ञानुबन्धिनो ग्रहस्तोत्रशस्त्रादयः, **''मनसैषु ग्रहा अगृह्यन्त, मनसाऽस्तुवन्त, मनसाऽशंसन्''**(अग्नि.10-5-3-3)[1] इत्यादिना प्रतिपादिताः। आदिशब्देन श्रुत्यादयः पूर्वोक्ता गृह्यन्ते। श्रुत्यादिभिः सानुबन्धैर्विद्यामयक्रतुः पृथगवगम्यत इत्यर्थः।

**प्रज्ञान्तरपृथक्त्ववत्** - यथा प्रज्ञान्तरं दहरविद्यादि क्रियामयात् क्रतोः पृथग्भूतं श्रुत्यादिभिरवगम्यते, एवमयमपि।

एवं चानुबन्धादिभिः पृथग्भूते विद्यामये यज्ञेऽवगते सति, विधिः परिकल्प्यते। दृष्टश्चानुवादसरूपेषु कल्प्यमानो विधिः। तदुक्तम् - **''वचनानि त्वपूर्वत्वात्''**(पू.मी.सू.3-5-21)[2] इति।

---

யச்சேதமுக்தம் - விதிப்ரத்யயாஶ்ரவணாத் பலஸம்பந்தாப்ரதீதேஶ்ச க்ரியாமயாத் க்ரதோரந்ய: அத்ர வித்யாமய: க்ரதுர்ந ஸம்பவதி - இதி, தத்ராஹ -

**402.அநுபந்தாதிப்ய: ப்ரஜ்ஞாந்தரப்ருதக்த்வவத் த்ருஷ்டஶ்ச ததுக்தம் (3-3-48)**

இஷ்டகசிதாந்வயிந: க்ரியாமயாத் க்ரதோ: வித்யாமயோऽயம் க்ரது: ப்ருதக்த்வேந **அநுபந்தாதிப்ய:** ப்ருதக்த்வஹேதுப்ய: அவகம்யதே। **அநுபந்தா:** யஜ்ஞாநுபந்திநோ க்ரஹ-ஸ்தோத்ரஶஸ்த்ராதய:, *"மநஸைஷு க்ரஹா அக்ருஹ்யந்த, மநஸாऽஸ்துவந்த, மநஸாऽஶம்ஸந்"*(அக்நி.10-5-3-3)[1] இத்யாதிநா ப்ரதிபாதிதா:। **ஆதிஶப்தேந** ஶ்ருத்யாதய: பூர்வோக்தா: க்ருஹ்யந்தே। ஶ்ருத்யாதிபி: ஸாநுபந்தை: வித்யாமய: க்ரது: ப்ருதகவகம்யத இத்யர்த:।

*ப்ரஜ்ஞாந்தரப்ருதகத்வவத்* - யதா ப்ரஜ்ஞாந்தரம் தஹரவித்யாதி க்ரியாமயாத் க்ரதோ: ப்ருதக்பூதம் ஶ்ருத்யாதிபிரவகம்யதே, ஏவமயமபி।

ஏவம் ச அநுபந்தாதிபி: ப்ருதக்பூதே வித்யாமயே யஜ்ஞே அவகதே ஸதி, விதி: பரிகல்ப்யதே। த்ருஷ்டஶ்ச அநுவாதஸரூபேஷு கல்ப்யமாநோ விதி:। ததுக்தம் - *"வசநாநி த்வபூர்வத்வாத்"*(பூ.மீ.ஸூ.3-5-21)[2] இதி।

*(லிங்கம் என்றால் திறன்; அளவற்ற செயல்கள் அக்னியாக எண்ணப்படும்போது, அதற்கு, இப்படி அளவற்ற செயல்களை எண்ணும்படியான யாகத்தில் அங்கமாவதற்குதான் திறன் உண்டு; செயல் முறையான யாகத்திலோ எல்லாமே அளவுடையது என்பதால், இது அதில் சேர முடியாது)*



**கேள்வி -** விதி-ப்ரத்யயத்தை (கட்டளை உருபினை) சொல்லாததாலும், பலன் தொடர்பு தெரியாததாலும் க்ரியை-மயமான யாகத்தை விட வேறாக வித்யைமய-மான யாகமானது இங்கு கிடையாது என்று பூர்வபக்ஷத்தில் சொல்லப்பட்டது எதுவோ,

**பதில் -** அதற்கு பதில் சொல்கிறார் -

**402.அநுபந்தாதிப்ய: ப்ரஜ்ஞாந்தர-ப்ருதக்த்வவத் த்ருஷ்ட: ச தத் உக்தம் (3-3-48)**

*அனுபந்தம் முதலியவற்றால் பிற உபாஸனங்கள் தனியாவது போல, [வித்யைமயமான யாகம் வேறாக ஆகும்] [விதியும் கல்பிக்கப்படுவதாக] காணப்படுகிறதும் கூட; அது [பூர்வமீமாம்ஸாவில்] சொல்லப்பட்டது.*

**அநுபந்தாதிப்ய:** (அனுபந்தம் முதலியவற்றால்) - இஷ்டகசித-அக்னி சேரும் செயல்மயமான யாகத்தை விட வித்யைமயமான யாகம் வேறானதாக வேற்-றுமைக்குக் காரணங்களான அனுபந்தம் முதலியவற்றால் தெரிகிறது; அனு-பந்தங்கள் - யாகத்துடன் சம்பந்தப்பட்ட க்ரஹம், ஸ்தோத்ரம், ஶஸ்த்ரம் முதலி-யவை; இவை, [1]**''மனஸ்ஸால் இவற்றில் க்ரஹங்கள் எடுக்கப்பட்டன; மனஸ்ஸால் ஸ்தோத்ரங்கள் பாடப்பட்டன; மனஸ்ஸால் சஸ்த்ரங்கள் சொல்-லப்பட்டன (சொல்லினர்)''** முதலியதால் அறிவிக்கப் பட்டன;

ஆதி(முதலிய) எனும் சொல்லால் முன் சொன்ன ஶ்ருதி முதலியவை எடுத்-துக் கொள்ளப் படுகின்றன; அனுபந்தங்களுடன் கூடிய ஶ்ருதி முதலியவற்றால் வித்யைமயமான யாகம் வேறாகத் தெரிகிறது என்று அர்த்தம்.

**ப்ரஜ்ஞாந்தர-ப்ருதக்த்வவத் -** வேறு வித்யைகளான தஹரவித்யை முத-லியது செயல்-மயமான யாகத்தை விட வேறானதாக ஶ்ருதி முதலியவற்றால் தெரிகிறது; அது எப்படியோ, அப்படியே இதுவும் ஆகும்.

**த்ருஷ்ட: ச** (காணப் படுவதுதான்) - இப்படி அனுபந்தம் முதலியவற்றால் வித்யைமயமான யாகமானது தனிப்பட்டதாக தெரியும்போது, விதி (கட்-டளை) கல்பனை செய்யப் படுகிறது; அனுவாதம் போன்ற வாக்யங்களில் விதி கல்பிக்கப் படுவது காணப்பட்டதுதான்.

**தத் உக்தம் -** அது, [2]**''முன்னர் தெரியாதபடியால் விதி-வசனங்கள் ஆகும்''** என்று (பூர்வமீமாம்ஸாவில்) சொல்லப்பட்டது.

फलं च, **''तेषामेकैक एव तावान्, यावानसौ पूर्वः''** (अग्नि.10-5-3-11)[1] इत्यतिदेशात् स्वक्रतुद्वारेणेष्टकचितस्याग्नेर्यत् फलम्, तदेव मनश्चिदादीनामपि स्वक्रतुद्वारेण फलमित्यवगम्यते॥४८॥

यत् पुनः अतिदेशेन तुल्यकार्यत्वावगमात् क्रियामयक्रत्वनुप्रवेशोऽवगम्यत इत्युक्तम्, तत्राह -

**४०३.न सामान्यादप्युपलब्धेर्मृत्युवन्न हि लोकापत्तिः (३-३-४९)**

नावश्यमतिदेशादवान्तरव्यापारस्यापि तुल्यतया भवितव्यम्; येन क्रियामयक्रत्वनुप्रवेश एषां स्यात्; यस्मात् कस्माचित् सामान्यमात्रादतिदेशोपलब्धेः। उपलभ्यते हि, **''स एष एव मृत्युः, य एष एतस्मिन् मण्डले पुरुषः''** (अग्नि.10-5-3-13)[2] इत्यादिषु संहर्तृत्वादिसामान्यमात्रादतिदेशः; न हि तत्र मण्डलपुरुषस्य मृत्युवत् **तल्लोकापत्तिः** तद्देशप्राप्तिरपि भवति।

एवमिहापि मनश्चिदादीनामिष्टकचिताग्निवद्भावातिदेशमात्रेण, इष्टकचिताग्निदेशरूप क्रियामयक्रत्वनुप्रवेशेनापि न भवितव्यम्। अत इष्टकचिताग्नेः स्वक्रतुद्वारेण यत् फलम्, तदेव मनश्चिदादीनामपि विद्यामयक्रतुद्वारेण फलमिति अतिदेशादवगम्यते॥४९॥

---

ப<u>ல</u>ம் ச, *''தேஷாமகைக ஏவ தாவாந், யாவாநஸௌ பூர்வ:''*(அக்நி.10-5-3-11)[1] இத்யதிதேஶாத் ஸ்வக்ரதுத்வாரேண இஷ்டகசிதஸ்யாக்நே: யத் பலம், ததேவ மநஶ்சிதாதீநாமபி ஸ்வக்ரதுத்வாரேண பலமித்யவகம்யதே।।48।।

யத் புந: அதிதேஶேந துல்யகார்யத்வாவகமாத் க்ரியாமயக்ரத்வநுப்ரவேஶோऽவகம்யத இத்யுக்தம், தத்ராஹ -

**403.ந ஸாமாந்யாதப்யுபலப்தேர்ம்ருத்யுவந்ந ஹி லோகாபத்தி: (3-3-49)**

நாவஶ்யம் அதிதேஶாத் அவாந்தரவ்யாபாரஸ்யாபி துல்யதயா பவிதவ்யம், யேந க்ரியாமயகத்வநுப்ரவேஶ: ஏஷாம் ஸ்யாத், யஸ்மாத் கஸ்மாச்சித் ஸாமாந்யமாத்ராத் அதிதேஶோபலப்தே:। உபலப்யதே ஹி, *''ஸ ஏஷ ஏவ ம்ருத்யு:, ய ஏஷ ஏதஸ்மிந் மண்டலே புருஷ:''*(அக்நி.10-5-3-13)[1] இத்யாதிஷு ஸம்ஹர்த்ருத்வாதிஸாமாந்யமாத்ராத் அதிதேஶ:; க ந ஹி தத்ர மண்டலபுருஷஸ்ய ம்ருத்யுவத் தல்லோகாபத்தி: - தத்தேஶப்ராப்திரபி பவதி। ஏவமிஹாபி மநஶ்சிதாதீநாம் இஷ்டகசிதாக்நிவத்பாவாதிதேஶமாத்ரேண, இஷ்டகசிதாக்நிதேஶரூபக்ரியாமயக்ரத்வநுப்ரவேஶேநாபி ந பவிதவ்யம்। அத: இஷ்டகசிதாக்நே: ஸ்வக்ரதுத்வாரேண யத் பலம், ததேவ மநஶ்சிதாதீநாமபி வித்யாமயக்ரதுத்வாரேண பலமிதி அதிதேஶாதவகம்யதே।।

பலனும் (சொல்லப்பட்டு உள்ளது) - [1]**''முன்னதான இஷ்டகசித-அக்னி எவ்வளவு ஆகுமோ, மனச்சித் முதலிய அவற்றில் ஒவ்வொன்றும் அவ்-வளவு ஆகும்''** என்று அதிதேசம் செய்வதால், இஷ்டகசிதமானஅக்னிக்கு தன் யாகத்தின் வாயிலாக எந்த பலனோ, அதே பலன் மனச்சித் முதலிய-வற்றுக்கும் தன் யாகத்தின் வழியாக ஆகும் எனத் தெரிகிறது.



**கேள்வி -** அதிதேசத்தின் மூலம், சமமான பலன் உடையதாகத் தெரிவதால், செயல்-மயமான யாகத்தில் சேருவது தெரிகிறது

**பதில் -** இப்படி சொல்லப்பட்டது எதுவோ, அதற்கு பதில் சொல்கிறார் -

**403.ந ஸாமாந்யாத் அபி உபலப்தே: ம்ருத்யுவத் ந ஹி லோகாபத்தி:(3-3-48)**

*ஒற்றுமை மட்டுமாவதாலும் அதிதேசம் காணப்படுவதால், [அதிதேசத்தால் செயல் ஒன்றாவது] கிடையாது; ம்ருத்யுவைப் போல [அவனது] இடத்தை அடைதல்[மண்டலபுருஷனுக்கு] கிடையாதுதானே!*

**ந** (கிடையாது) **-** இந்த மனச்சித் முதலியவை க்ரியைமயமான யாகத்தில் சேர்-வது எந்த காரணத்தால் ஆக நேரிடுமோ, அந்த காரணமான அதிதேசம் ஆவதால், இடையிலாகும் செயலும் சமமாகவே ஆக வேண்டும் என்கிற கட்-டாயம் கிடையாது;

**ஸாமாந்யாத் அபி உபலப்தே:** - ஏனெனில், ஏதாவது ஒரு ஒற்றுமை மட்டு-மாவதாலும் அதிதேசம் காணப்படுகிறது.

**ம்ருத்யுவத் ந ஹி லோகாபத்தி:** (யமனைப் போல அவனது இடத்தை அடை-தல் கிடையாது) - (உ.ம்) [2]**''இந்த மண்டலத்தில் எந்த புருஷன் இருக்கி-றானோ, அவன் ம்ருத்யுதான்''** முதலியவற்றில் ஸம்ஹாரம் செய்தல் முதலிய ஒற்றுமை மட்டும் ஆவதால் அதிதேசம் காணப்படுகிறது. அங்கே மண்டல-புருஷனுக்கு ம்ருத்யு போல அவனது லோகாபத்தி: - அந்த ம்ருத்யுவின் இடத்தை அடைதலும் கூட ஆகும் என்பது கிடையாதுதானே!

அப்படியே இங்கும், மனச்சித் முதலியவை இஷ்டகசிதம் ஆன அக்னிபோல ஆவதை அதிதேசம் செய்தால் மட்டும், இஷ்டகசித-அக்னியின் இடமான செயல்-மயமான யாகத்தில் சேர்வதும் ஆக வேண்டும் என்பது கிடையாது; ஆகையால், இஷ்டகசித-அக்னிக்கு தன் யாகத்தின் வாயிலாக எந்த பலன் உண்டோ, அதுவே-தான், மனச்சித் முதலியவற்றுக்கு வித்யைமய-யாகத்தின் வாயிலாக (வரும்) பலன் ஆகும் என்பது அதிதேசத்தால் தெரிகிறது.



## ४०४.परेण च शब्दस्य ताद्विध्यं भूयस्त्वात्त्वनुबन्धः (३-३-५०)

**परेण च** ब्राह्मणेनास्यापि मनश्चिदाद्यभिधायिनः **शब्दस्य, ताद्विध्यं** - तद्विधत्वम् - विद्यामयप्रतिपादित्वमवगम्यते ;

परेण हि ब्राह्मणेन, "**अयं वाव लोक एषोऽग्निश्चितः। तस्याऽऽप एव परिश्रितः**" (अग्नि.10-5-4-1)[1] इत्यादिना, "**स यो हैतदेवं वेद लोकंपृणाम्, एनं भूतमेतत् सर्वमभिसम्पद्यते**" (अग्नि.10-5-4-1)[2] इति पृथक्फला विद्यैव विधीयते ; तथा वैश्वानरविद्यादौ च विद्यैव विधीयते। अतोऽग्निरहस्यस्य क्रियैकविषयत्वं नास्ति।

एवं तर्हि विद्यामयाः मनश्चिदादयो बृहदारण्यकेऽनुबद्धव्याः किमर्थमिहानुबध्यन्ते? तत्रोच्यते - **भूयस्त्वात्त्वनुबन्धः** इति। मनश्चिदादिषु सम्पादनीयानामग्न्यङ्गानां भूयस्त्वात् तत्सन्निधाविहानुबन्धः कृतः ॥५०॥

इति पूर्वविकल्पाधिकरणम् ॥

---

## 404.பரேண ச ஶப்தஸ்ய தாத்வித்யம் பூயஸ்த்வாத்த்வநுபந்த:(3-3-50)

பரேண ச ப்ராஹ்மணேந அஸ்யாபி மநஶ்சிதாத்யபிதாயிந: *ஶப்தஸ்ய தாத்வித்யம்* - தத்விதத்வம் - வித்யாமயப்ரதிபாதித்வம் அவகம்யதே,

பரேண ஹி ப்ராஹ்மணேந, "*அயம் வாவ லோக ஏஷோऽக்நிஶ்சித:। தஸ்யாऽऽப ஏவ பரிஶ்ரித:*"(அக்நி.10-5-4-1)[1] இத்யாதிநா, "*ஸ யோ ஹைததேவம் வேத லோகம்ப்ருணாம், ஏநம் பூதமேதத் ஸர்வமபிஸம்பத்யதே*"(அக்நி.10-5-4-1)[2] இதி ப்ருதக்பலா வித்யைவ விதீயதே, ததா வைஶ்வாநரவித்யாதௌ ச வித்யைவ விதீயதே। அத: அக்நிரஹஸ்யஸ்ய க்ரியைகவிஷயத்வம் நாஸ்தி।

ஏவம் தர்ஹி வித்யாமயா: மநஶ்சிதாதய: ப்ருஹதாரண்யகே அநுபத்தவ்யா: கிமர்தம் இஹாநுபத்யந்தே? தத்ரோச்யதே - **பூயஸ்த்வாத்த்வநுபந்த:** இதி। மநஶ்சிதாதிஷு ஸம்பாதநீயாநாம் அக்ந்யங்காநாம் பூயஸ்த்வாத் தத்ஸந்நிதௌ இஹாநுபந்த: க்ருத:।। 50 ।।

இதி பூர்வவிகல்பாதிகரணம் ।।

## 404.பரேண ச ஶப்தஸ்ய தாத்வித்யம் பூயஸ்த்வாத் து அநுபந்த:(3-3-50)

*பின் உள்ள ப்ராஹ்மணத்தாலும் இந்த ஶப்தத்துக்கும் அந்த விதமாக ஆதல் தெரிகிறது; அதிகமாக ஆவதால் [இங்கே ப்ராஹ்மணத்தில்] சேர்த்தது ஆகும்.*

**பரேண ச -** பின்னர் உள்ள ப்ராஹ்மணத்தாலும்,

**ஶப்தஸ்ய -** மனச்சித் முதலியதைச் சொல்கிற இந்த ஶப்தத்துக்கும்

**தாத்வித்யம் -** அந்த விதமாக ஆதல் - வித்யைமயத்தை சொல்வதாக ஆதல் - தெரிகிறது.

பின்னர் உள்ள ப்ராஹ்மணம் - [1]**''இந்த பூவுலகம்தான் அக்னிசிதம்; இதற்கு ஜலம்தான் பரிஸ்தரணங்கள்''** முதலியது; இதனால், [2]**''இடத்தை நிறைக்கிற லோகம்ப்ருணா எனப்படும் இந்த அக்னியை யார் இப்படியாக உபாஸனம் செய்கிறானோ, இவனை எல்லா உயிரியும் (சேஷமாக) அடையும்''** என்று தனி பலனை உடைய வித்யைதான் விதிக்கப் படுகிறது.

*✍(யாகத்தில் அக்நி வைக்கும் இடம் செங்கற்களால் அமைக்கப் படும்; அதில் சில கற்களுக்கு லோகம்ப்ருணா என்று பெயர்; அந்த அக்நியை (இடத்தை) பூவுலகமாக சிந்திக்க வேண்டும்; அதற்கு பரிஶேஷனமான ஜலத்தை ஸமுத்ரமாக எண்ண வேண்டும் என்று இந்த வித்யை உள்ளது)✍*

அப்படியே வைஶ்வானர வித்யை முதலியதிலும் வித்யைதான் விதிக்கப் படுகிறது; அதனால், வாஜஸனேயக ப்ராஹ்மணத்தில், அக்னிரஹஸ்யம் எனும் பாகமானது, (யாகம் செய்தல் முதலிய) க்ரியையை மட்டும் பற்றியது என்பது கிடையாது.

**கேள்வி -** இப்படியானால், வித்யைமயங்களான மனச்சித் முதலியவை ப்ருஹதாரண்யக-உபநிஷத்தில் சேர்க்கப்பட வேண்டியவை; எதற்காக இங்கே (ப்ராஹ்மணபாகத்தில்) சேர்க்கப் படுகின்றன?

**பதில் -** அதற்கு பதில் சொல்லப்படுகிறது -

**பூயஸ்த்வாத் து அநுபந்த:** (நிறைய ஆவதால் சேர்த்தது ஆகும்) - மனச்சித் முதலியவற்றில் கற்பனை செய்யப்பட வேண்டிய அக்னியின் அங்கங்கள் (ப்ராஹ்மணபாகத்தில்) நிறைய இருப்பதால், இங்கு அவற்றை அடுத்தே (அக்னியைச் சொல்லும் பாகத்தின் அருகிலே) கூடச்சேர்ப்பது செய்யப் பட்டது.

******************************

**பூர்வவிகல்பாதிகரணம் முற்றிற்று.**

# 103.ஶரீரே பாவாதிகரணம்(3-3-21)

## முன் குறிப்பு

ப்ரஹ்ம-உபாஸனம் செய்யும் போது ஜீவ ஸ்வரூபத்தையும் சிந்தனம் செய்ய வேண்டும்; எந்த ஸ்வரூபத்தை சிந்தனை செய்வது ?ஜீவனுக்கு ஸம்ஸார-நிலையில் இருக்கும் ஸ்வரூபத்தையா ? அல்லது மோக்ஷத்தில் பெறப் போகும் ஸ்வரூபத்தையா ?

**பூர்வபக்ஷம் -** ஜீவன், ஸம்ஸாரத்தில் ஶரீரத்தில் இருக்கும் முறையில் ஜ்ஞாதா, கர்த்தா என்று சிந்தனம் செய்தால் போதும்; மோக்ஷத்தில் வரப் போகும் நிலையில் அபஹதபாப்மா (கர்மவசப்படாதவன்) முதலியதை சிந்திக்க வேண்டிய அவசியம் இல்லை. (உ.ம்) யாகம் செய்பவனுக்கு, பின்னர் ஸ்வர்க்க-பலன் பெறப் போகும் நிலையில் ஜீவன் எப்படி இருப்பான் என்பது பற்றி எண்ண வேண்டிய தேவையில்லை; யாகம் செய்யும் போது அவன் இருக்கும் நிலையைத் தான் அவன் அறிவான்; அதுபோல, இங்கும்ஆகும்.

**ஸித்தாந்தம் -** ஜீவன், பின்னர் மோக்ஷ-நிலையில் பெறப் போகும் தன் ஸ்வரூபத்தை இப்போது சிந்தனம் செய்ய வேண்டும்; ஏனெனில், **''மனிதன் எப்படி சிந்தனை செய்கிறானோ, அப்படியே பலனாக வரும்''** என்று வேதம் சொல்கிறது; இவன் ஸம்ஸார-நிலையில் உள்ள ஸ்வரூபத்தை சிந்தனை சிந்தனை செய்தால், அதுதான் பலனாக வருமே தவிர மோக்ஷ பலன் வராது; எனவே, அதனை எண்ணக் கூடாது.

**பூர்வபக்ஷம் - ''அவனை எப்படி உபாஸனம் செய்கிறானோ, அப்படியே பலனாக வரும்''** என்று சொன்னது, ப்ரஹ்ம-உபாஸனம் பற்றியதாகும்; ஜீவன் பற்றிய உபாஸனத்தில் இதனை சொல்லவில்லை.

**ஸித்தாந்தம் -** ப்ரஹ்மத்தை உபாஸனம் செய்யும்போது, அதிலேயே ஜீவ-சிந்தனம் உள் அடங்கியது; ஜீவனான தனது அந்தர்யாமி-ஆத்மாவாக ப்ரஹ்மத்தை எண்ண வேண்டும். (காண்க - ஆத்மத்வோபாஸன-அதிகரணம் - 4-1-2) எனவே, ஜீவ-சிந்தனத்திலும் இந்த முறைப்படி உபாஸனம் செய்ய வேண்டும்.

யாகம் செய்யும்போது, ஜீவனைப் பற்றி சிந்தனம் தேவையில்லை; அது யாகத்தின் அங்கம் அல்ல; ஆகையால், பொதுவாக ஶரீரம் அழிந்தாலும், ஜீவன் அழியாமல் மேலே சென்று ஸ்வர்க்க-பலன் பெறுவான் என்பது மட்டும் தெரிந்திருந்தால் போதும்; யாகம் செய்யும் தகுதி வரும்; யாகம் செய்யலாம்; அதிகப்படி ஜீவனைப் பற்றி அறியத்தேவையில்லை; இங்கோ, ஜீவ-சிந்தனம் என்பது ப்ரஹ்ம-உபாஸனத்தின் அங்கம் ஆகும்; அப்படி ஜீவ-சிந்தனம் செய்யும்போது, பின்னர் பெறப் போகும் ஸ்வரூபத்துக்கு எதிராக ஸம்ஸார-நிலையில் உள்ளதை சிந்தனம் செய்யக் கூடாது; மோக்ஷநிலையில் பெறப்போகும் 'அபஹத-பாப்மா' முதலிய ஸ்வரூப-நிலையை சிந்தனம் செய்ய வேண்டும்.

# १०३. शरीरेभावाधिकरणम् (३-३-२१)

## ४०५.एक आत्मनः शरीरे भावात् (३-३-५१)

सर्वासु परविद्यासु उपास्योपासनस्वरूपवत् उपासकस्वरूपस्यापि ज्ञातव्यत्वमुक्तम्, "**त्रयाणामेव चैवमुपन्यासः प्रश्नश्च**" (ब्र.सू.1-4-6)[1] इति। वक्ष्यति चास्य प्रत्यगात्मनः परमात्मात्मकत्वेनानुसन्धानम्, "**आत्मेति तूपगच्छन्ति ग्राहयन्ति च**" (ब्र.सू.4-1-3)[2] इति।

किमयं प्रत्यगात्मा ज्ञाता कर्ता भोक्ता इहामुत्रसञ्चारक्षमोऽनुसन्धेयः, उत प्रजापतिवाक्योदितापहतपाप्मत्वादिस्वरूपः?।

किं युक्तम्? ज्ञातृत्वाद्याकारमात्र इत्येके मन्यन्ते। कुतः? अस्योपासकस्याऽऽ**त्मनः शरीरे भावात्**, आत्मनः शरीरे वर्तमानस्य तादृशमेव रूपम्। तावतैवानुसन्धानेन तत्फलसिद्ध्युपपत्तेश्च। न हि कर्मस्वधिकृतानां स्वर्गादिफलार्थिनां ज्ञातृत्वाद्यतिरेकेण, फलानुभवदशायां यादृशं रूपम्, तादृशं रूपं साधनानुष्ठानदशायामनुसन्धातव्यम्; तावतैव साधनानुष्ठानतत्फलयोः सिद्धेरतिरिक्तानुसन्धाने प्रयोजनाभावात्; तदविशेषादिहापि तथैव॥

---

# 103.ஶரீரேபா⁴வாதி⁴கரணம் (3-3-21)

## 405.ஏக ஆத்மந: ஶரீரே பா⁴வாத்(3-3-51)

ஸர்வாஸு பரவித்³யாஸு உபாஸ்ய-உபாஸன-ஸ்வரூபவத் உபாஸகஸ்வரூபஸ்யாபி ஜ்ஞாதவ்யத்வமுக்தம், "*த்ரயாணாமேவ சைவமுபந்யாஸ: ப்ரஶ்நஶ்ச*"(ப்ர.ஸூ.1-4-6)[1] இதி। வக்ஷ்யதி சாஸ்ய ப்ரத்யகாத்மந: பரமாத்மாத்மகத்வேநாऽநுஸந்தா⁴நம், "*ஆத்மேதி தூபக³ச்ச²ந்தி க்³ராஹயந்தி ச*"(ப்ர.ஸூ.4-1-3)[2] இதி।

கிமயம் ப்ரத்யகாத்மா ஜ்ஞாதா கர்தா போ⁴க்தா இஹாமுத்ர ஸஞ்சாரக்ஷம: அநுஸந்தே⁴ய:, உத ப்ரஜாபதிவாக்யோதி³தாபஹதபாப்மத்வாதி³ஸ்வரூப:।

கிம் யுக்தம்? ஜ்ஞாத்ருத்வாத்³யாகாரமாத்ர: இத்யேகே மந்யந்தே। குத:? அஸ்யோபாஸகஸ்யாऽऽத்மந: ஶரீரே பா⁴வாத், ஆத்மந: ஶரீரே வர்தமாநஸ்ய தாத்³ருஶமேவ ரூபம்। தாவதைவாநுஸந்தா⁴நேந தத்ப²லஸித்³த்⁴யுபபத்தேஶ்ச। ந ஹி கர்மஸ்வதி⁴க்ருதாநாம் ஸ்வர்காதி³ப²லார்திநாம் ஜ்ஞாத்ருத்வாத்³யதிரேகேண, ப²லாநுப⁴வத³ஶாயாம் யாத்³ருஶம் ரூபம்; தாத்³ருஶம் ரூபம் ஸாத⁴நாநுஷ்டா²நத³ஶாயாமநுஸந்தா⁴தவ்யம், தாவதைவ ஸாத⁴நாநுஷ்டா²நதத்ப²லயோ: ஸித்³தே⁴: அதிரிக்தாநுஸந்தா⁴நே ப்ரயோஜநாபா⁴வாத், தத³விஶேஷாத் இஹாபி ததை²வ॥

# 103.ஶரீரே பாவாதிகரணம்(3-3-21)

## 405.(ஸூ)ஏகே ஆத்மந: ஶரீரே பாவாத்(3-3-51)

*ஜீவன் ஶரீரத்தில் இருப்பதால், [அந்த நிலையே எண்ணத் தகும் என்று] சிலர்[கருதுவர்].*

**ஸங்கதி (விஷயதொடர்பு)&ஸந்தேஹம்**

எல்லா பரவித்யைகளிலும், 1.உபாஸனம் செய்யப்படும் விஷயத்தின் ஸ்வரூபம், 2.உபாஸன-ஸ்வரூபம் போல 3.உபாஸனம் செய்பவனின் (ஜீவனின்) ஸ்வரூபமும் அறியப்படவேண்டும்; இது, [1] **''த்ரயாணாம் ஏவ ச ஏவம் உபந்யாஸ: ப்ரஶ்ந: ச''** (உபாஸனம் செய்யப்படும் ப்ரஹ்மம், உபாஸனம் செய்யும் ஜீவன், உபாஸனம் ஆகிய மூன்றுக்கும் உபன்யாசமும் கேள்வியும்) என்று சொல்லப்பட்டது; பரமாத்மாவை ஆத்மாவாகக் கொண்டவனாக இந்த ஜீவாத்மாவை எண்ண வேண்டும் என்பதை [2] **''ஆத்மா இதி து உபகச்சந்தி க்ராஹயந்தி ச''** என்று சொல்லவும் போகிறார்.

அந்த ஜீவாத்மா ஆனவன், அறிபவன், செய்பவன், அனுபவிப்பவன், இங்கும் மேலுலகிலும் சஞ்சரிக்கத் தக்கவன் என்பதாக எண்ணப்பட வேண்டியவனா? அல்லது ப்ரஜாபதி வாக்யத்தில் சொல்லப்பட்ட அபஹதபாப்மத்வம் (கர்மவசப் படாமை) முதலிய ஸ்வரூபத்தை உடையவனாக எண்ணப்பட வேண்டியவனா?

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்? அறிபவன் ஆதல் முதலிய ஆகாரத்துடன் மட்டுமே என்று

**ஏகே** - சிலர் (பூர்வபக்ஷம் சொல்பவர்) எண்ணுகின்றனர்.

ஏன்?

**ஆத்மந: ஶரீரே பாவாத்** - உபாஸனம் செய்யும் இந்த ஜீவாத்மா ஶரீரத்தில் இருப்பதால்.

ஶரீரத்தில் இருக்கும் ஆத்மாவின் உருவம் அப்படிப் பட்டதுதானே! அந்த அளவு எண்ணுவதாலேயே அந்த பலன் கிடைக்கும் என்பது பொருந்துவதாலும் ஆகும்.

ஸ்வர்க்கம் முதலிய பலனை விரும்புபவராய் (யாகம் முதலிய) கர்மங்களில் தகுதி பெறுபவருக்கு, அறிபவராதல் முதலியது தவிர, (ஸ்வர்க்க) பலன் அனுபவிக்கும் நிலையில் எப்படிப்பட்ட உருவமோ, அப்படிப்பட்ட உருவம் (யாகம் முதலிய) உபாயத்தை அனுஷ்டானம் செய்யும் நிலையில் எண்ணப்பட வேண்டும் என்பது இல்லையே! ஏனெனில், அந்த அளவால் மட்டும் உபாய-அனுஷ்டானமும் அதன் பலனும் கிடைப்பதால், அதிகப்படியானதை எண்ணுவதில் பயன் இல்லை என்பதால்;

இங்கேயும் அதைவிட வேறு விசேஷம் இல்லாதபடியால் அப்படியே ஆகும்.

ननु चात्र, **"यथाक्रतुरस्मिन् लोके पुरुषो भवति, तथेतः प्रेत्य भवति"** (छा.3-14-1)[1] इति विशेषवचनादपहत-पाप्मत्वाद्याकार एवानुसन्धातव्य इत्यवगम्यते। मैवम्, **"तं यथायथोपासते"** (मुद्ग.3)[2] इत्युपास्यविषयत्वात् तस्य॥५१॥

एवं प्राप्ते प्रचक्ष्महे -

**४०६.व्यतिरेकस्तद्भावभावित्वान्न तूपलब्धिवत् (३-३-५२)**

न त्वेतदस्ति - यत् ज्ञातृत्वाद्याकार एवानुसन्धेय इति। अस्माऽऽत्मनः संसारदशायाः मोक्षदशायां यो **व्यतिरेकः**, सोऽपहतपाप्मत्वादिकोऽनुसन्धेयः, अस्य मोक्षदशायां यादृशं रूपम्, तादृग्रूप एवोपासनवेलायामात्माऽनुसन्धेय इत्यर्थः।

कुतः? **तद्भावभावित्वात्** तद्रूपापत्तेः।

★ **"यथाक्रतुरस्मिन् लोके पुरुषो भवति, तथेतः प्रेत्य भवति"** (छा.3-14-1)[3],

★ **"तं यथायथोपासते, तथै(दे?)व भवति"** (मुद्ग.3)[4]

इति यथोपासनमेव हि प्राप्तिः श्रूयते।

---

நநு சாத்ர, *"யதாக்ரதுரஸ்மிந் லோகே புருஷோ பவதி, ததேத: ப்ரேத்ய பவதி"* (சா.3-14-1) இதி விஶேஷவசநாத் அபஹதபாப்மத்வாத்யாகார ஏவ அநுஸந்தாதவ்ய இத்யவகம்யதே। நைவம், *"தம் யதா யதோபாஸதே"* (முத்க.3)[2] இதி உபாஸ்யவிஷயத்வாத் தஸ்ய।।51।।

ஏவம் ப்ராப்தே ப்ரசக்ஷ்மஹே-

**406.வ்யதிரேகஸ்தத்பாவபாவித்வாந்நதூபலப்திவத் (3-3-52)**

ந த்வேததஸ்தி; யத் ஜ்ஞாத்ருத்வாத்யாகார ஏவாநுஸந்தேய: இதி। அஸ்யாத்மந: ஸம்ஸாரதஶாயா: மோக்ஷதஶாயாம் யோ வ்யதிரேக:, ஸ: அபஹதபாப்மத்வாதிக: அநுஸந்தேய:, அஸ்ய மோக்ஷதஶாயாம் யாத்ருஶம் ரூபம், தாத்ருக்ரூப ஏவ உபாஸநவேலாயாம் ஆத்மாऽநுஸந்தேய: இத்யர்த:।

குத:? *தத்பாவபாவித்வாத்* தத்ரூபாபத்தே:।

★ *"யதாக்ரதுரஸ்மிந் லோகே புருஷோ பவதி, ததேத: ப்ரேத்ய பவதி"* (சா.3-14-1)[3],

★ *"தம் யதா யதோபாஸதே, ததை(தே)வ பவதி"* (முத்க.3)[4]

இதி யதோபாஸநமேவ ஹி ப்ராப்தி: ஶ்ரூயதே।

**உள்கேள்வி** - இங்கு [1]**''இந்த உலகில் புருஷன் எப்படி உபாஸனம் செய்பவனாக இருக்கிறானோ, அப்படியே இங்கிருந்து போனபின்பு ஆகிறான்''** என்று விசேஷ-வசனம் இருக்கிறபடியால், அபஹதபாப்மத்வம் முதலிய உருவம்தான் எண்ணப்பட வேண்டும் எனத் தெரிகிறது.

**உள்பதில்** - அப்படியில்லை; ஏனெனில், [2]**''அவனை எப்படி எப்படி உபாஸனம் செய்கின்றனரோ''** என்றபடி உபாஸனம் செய்யப்பட வேண்டிய பரமாத்மாவைப் பற்றியதாக அந்த வசனம் ஆகும்.



**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்கிறோம் -

**406.வ்யதிரேக: தத்பாவ-பாவித்வாத் ந து உபலப்திவத்(3-3-52)**

*ஸம்ஸார-நிலை அல்ல; அது இல்லாமைதான் [எண்ணப்பட வேண்டும்]; அந்த எண்ணம் இருந்தாலே அந்த நிலை ஆகுமாதலால்; ப்ரஹ்ம-உபாஸனம் போல ஆகும்.*

**ந து** (இல்லை) - அறிபவனாதல் முதலிய ஆகாரம்தான் எண்ணப்பட வேண்டும் என்றது எதுவோ, அது கிடையாது;

**வ்யதிரேக:** - இந்த ஜீவாத்மாவுக்கு மோக்ஷ-நிலையில், ஸம்ஸார-நிலையிலிருந்து எது மாறாக உள்ளதோ, (ஸம்ஸார-நிலையின் இல்லாமை ஆகிற) அந்த அபஹதபாப்மத்வம் முதலியது எண்ணப்படவேண்டும்; இவனுக்கு மோக்ஷநிலையில் எப்படிப்பட்ட ஆகாரமோ, அப்படிப்பட்ட ஆகாரம் உடையவனாகவே உபாஸன-சமயத்தில் ஜீவாத்மா எண்ணப்பட வேண்டும் என்று அர்த்தம்.

ஏன்?

**தத்பாவபாவித்வாத்** - அந்த ஆகாரத்தை அடைவது என்பது அந்த எண்ணம் இருந்தாலே ஆகுமாதலால்.

* [3]**''இந்த உலகில் புருஷன் எப்படி உபாஸனம் செய்பவனாக இருக்கிறானோ, அப்படியே இங்கிருந்து போனபின்பு ஆகிறான்''**
* [4]**''அவனை எப்படி எப்படி உபாஸனம் செய்கின்றனரோ அப்படி ஆகிறான்''**

என்று உபாஸனத்தின்படிதானே அடைதல் சொல்லப்படுகிறது!

# 108.யதாஶ்ரயபாவாதிகரணம்(3-3-26)

**413.(ஸூ)அங்கேஷு யதாஶ்ரயபாவ:(3-3-59)**

*அங்கங்களில்[பற்றியிருக்கும்உபாஸனங்களுக்கு], [உத்கீதம் முதலிய]விஷயம் போன்ற தன்மை ஆகும்.*

**விஷயவாக்யம் -ஸந்தேஹம்**

யாகங்களின் அங்கமான உத்கீதம் முதலியவற்றைப் பற்றி இருக்கிற [1]**''உத்கீ-தத்தின் அவயவமான ஓம் என்னும் இதை உபாஸனம் செய்க''** முதலியவையான வித்யைகள், உத்கீதம் முதலியன போல யாகத்தின் பொருட்டு ஆகும் என்பதால், யாகங்களில் கட்டாயம் எடுத்து செய்யப்பட வேண்டியவையா? அல்லது கோதோ-ஹனம் போல புருஷனின் பொருட்டு ஆகும் என்பதால், விருப்பப்படி (செய்யலாம் என்று) ஆகுமா? என்று ஸந்தேஹம் ஆகும்போது,

*(உத்கீத-உபாஸநங்கள் யாகத்தின் பொருட்டா? அல்லது புருஷனுக்கு யாகபலன் தவிர வேறொரு பலனின் தவிர வேறொரு பலனின் பொருட்டா? யாகத்தின் பொருட்டு என்றால், கட்டாயம் அவற்றை யாகத்தில் செய்ய வேண்டும்; புருஷனுக்கான பலனின் பொருட்டு என்-றால் விருப்பப்படி செய்யலாம்; செய்யாமலும் ஆகலாம்)*

**பூர்வபக்ஷம்**

கட்டாயம் எடுத்து செய்யப்பட வேண்டியவை என்பது சரியாகும்.

**கேள்வி -** [2]**''தந்நிர்தாரணாநியம: தத்த்ருஷ்டே: ப்ருதக் ஹி அப்ரதிபந்த: பலம்''** (ஸூ.3-3-41) என்னுமிடத்தில், இந்த உபாஸனங்கள் புருஷனின் பொருட்டு ஆவதால், செய்ய வேண்டிய கட்டாயம் இல்லை என்று சொல்லப்பட்டது.

**பதில் -** உண்மையே; அதையே திடப்படுத்துவதற்காக, சில லிங்க-தர்சனங்-களாலும் யுக்தியாலும் ஆக்ஷேபம் செய்யப் படுகிறது. ஏனெனில், அங்கு [3]**''(யார் இப்படி இதை உபாஸனம் செய்கிறாரோ, யார் உபாஸனம் செய்யவில்லையோ), அவர் இருவரும் அந்த உத்கீதம் மூலம் யாகம் செய்கின்றனர்''** என்று கட்டாய-மில்லை என்பது தெரிவதால், வேறு பலன் உடையதாக சொல்லப்பட்டது; உபாஸ-னத்துக்கு விஷயமான உத்கீதம் முதலியது போல, உபாஸனங்களும் கூட அங்க-மாக கட்டாயம் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என்பதில் பல காரணங்கள் காணப்படுகின்றன.

[4]**''கால் நடைச் செல்வம் வேண்டி விரும்புபவனுக்கு கோதோஹனத்தால் ப்ரணயனம் செய்ய வேண்டும்''** முதலியதில் (விதிவாக்யத்தில் பலனை சொன்-னது) போல இங்கு உபாஸனத்தை விதிக்கும் வாக்யத்தில் பலன் தொடர்பு சொல்-லப்படவில்லை; [5]**''உத்கீதத்தை உபாஸனம் செய்க''** என்று உத்கீதம் முதலியது-டன் ஸம்பந்தப் பட்டதாகவே (அங்கமாக) உபாஸனம் தெரிகிறது;

**"यदेव विद्यया करोति श्रद्धयोपनिषदा तदेव वीर्यवत्तरम्"** (छा.1-1-10)[1] इति वर्तमानापदेशरूपवाक्यान्तराद्धि फलसम्बन्धो ज्ञायते। स्ववाक्येनैवाव्यभिचरितक्रतुसम्बन्ध्युद्गीथादिसम्बन्धेन निर्ज्ञातक्रत्वङ्गभावस्य वाक्यान्तरस्थवर्तमानफलसम्बन्धनिर्देशोऽर्थवादमात्रं स्यात्, अपापश्लोकश्रवणादिवत्।

अतो यथोद्गीथादय उपासनाश्रयाः क्रत्वङ्गतया प्रयोगविधिना नियमेनोपादीयन्ते, तथा तदाश्रिताश्चोपासनाः तन्मुखेन क्रत्वङ्गभूता इति नियमेनोपादेया एव॥ ५९ ॥

## ४१४.शिष्टेश्च (३-३-६०)

शिष्टिः शासनम्, विधानमित्यर्थः। **"उद्गीथमुपासीत"** (छा.1-1-1)[2] इत्युद्गीथाङ्गतयोपासनविधानाच्चोपादाननियमः। **"गोदोहनेन पशुकामस्य प्रणयेत्"** (आप.श्रौ.1-5-16-2)[3] इत्यादिवत् विधिवाक्येऽधिकारान्तराश्रवणात् उद्गीथाङ्गभाव एव हि विधेय इति गम्यते॥ ६० ॥

## ४१५.समाहारात् (३-३-६१)

**"होतृषदनाद्धैवापि दुरुद्गीथमनुसमाहरति"** (छा.1-5-5)[4] इति उपासनस्य समाहार-

---

*"யதேவ வித்யயா கரோதி ஶ்ரத்தயோபநிஷதா ததேவ வீர்யவத்தரம்"* (சா. 1-1-10)[1] இதி வர்தமாநாபதேஶரூபவாக்யாந்தராத்தி பலஸம்பந்தோ ஜ்ஞாயதே। ஸ்வவாக்யேநைவ அவ்யபிசரிதக்ரதுஸம்பந்த்யுத்கீதாதிஸம்பந்தேந நிர்ஜ்ஞாதக்ரத்வங்கபாவஸ்ய வாக்யாந்தரஸ்தவர்தமாநபலஸம்பந்தநிர்தேஶ: அர்தவாதமாத்ரம் ஸ்யாத், அபாபஶ்லோகஶ்ரவணாதிவத்।

அத: யதா உத்கீதாதய உபாஸநாஶ்ரயா: க்ரத்வங்கதயா ப்ரயோகவிதிநா நியமேநோபாதீயந்தே, ததா ததாஶ்ரிதாஶ்சோபாஸநா: தந்முகேந க்ரதவங்கபூதா இதி நியமேநோபாதேயா ஏவ।। 59 ।।

## 414.ஶிஷ்டேஶ்ச(3-3-60)

ஶிஷ்டி: ஶாஸநம், விதாநமித்யர்த:। *"உத்கீதமுபாஸீத"*[2] இதி உத்கீதாங்கதயா உபாஸநவிதாநாச்ச உபாதாநநியம:। *"கோதோஹேநேந பஶுகாமஸ்ய ப்ரணயேத்"* (ஆப.ஶ்ரௌ.1-5-16-2)[3] இத்யாதிவத் விதிவாக்யே அதிகாராந்தராஶ்ரவணாத் உத்கீதாங்கபாவ ஏவ ஹி விதேய: இதி கம்யதே।। 60।।

## 415.ஸமாஹாராத் (3-3-61)

*"ஹோத்ருஷதநாத்தைவாபி துருத்கீதமநுஸமாஹரதி"* (சா.1-5-5)[1] இதி

[1]**''எந்த உத்கீதத்தை உபாஸனத்துடனும், ஶ்ரத்தையுடனும், உபநிஷத்தால் வரும் ப்ரஹ்ம-ஜ்ஞாநத்துடனும் செய்கிறானோ, அதுவே அதிக வீர்யமுடையதாக ஆகிறது''** என்று நிகழ்காலக் குறிப்பு ஆகிற வேறொரு வாக்யத்தால்தானே பலன்-தொடர்பு அறியப் படுகிறது! (உபாஸனம் ஆனது), யாகத்துடன் மாறாமல் சேர்ந்தே இருக்கும் உத்கீதம் முதலியதுடன் ஸம்பந்தத்தால் யாகத்துக்கு அங்கமாகும் என்பது தன் (விதி) வாக்யத்தின் மூலமாகவே நிச்சயிக்கப் பட்டது; அந்த உபாஸனத்துக்கு வேறொரு வாக்யத்தில், நிகழ்காலத்தில் பலன்-தொடர்பு சொல்வதாவது அர்த்தவாதம் மட்டுமாக ஆகும்; இழி-வார்த்தையை கேட்காமை முதலியது போல ஆகும்.

(அங்கேஷு யதாஶ்ரயபாவ:) - ஆகையால், உபாஸன-விஷயங்களான உத்கீதம் முதலியவை யாகத்துக்கு அங்கமாக ப்ரயோக-விதியால் எப்படி கட்டாயம் எடுக்கப் படுகின்றனவோ, அப்படியே அவற்றைப் பற்றிய உபாஸனங்களும் அந்த உத்கீதம் முதலியதன் வாயிலாக யாகத்தின் அங்கமாகும் என்பதால் கட்டாயம் எடுத்துச் செய்யப்பட வேண்டியவையே.



## 414.(ஸூ) ஶிஷ்டே: ச (3-3-60)

*விதிப்பதாலும்*

**ஶிஷ்டி:** - ஶாஸனம்; விதித்தல் என்று அர்த்தம்;

[2]**''உத்கீதத்தை உபாஸனம் செய்க''** என்று உத்கீதத்துக்கு அங்கமாக உபாஸனத்தை விதிப்பதாலும், கட்டாயம் எடுத்துச் செய்ய வேண்டும்; [3]**''கால்நடைச் செல்வம் வேண்டி விரும்புபவனுக்கு கோதோஹனத்தால் ப்ரணயனம் செய்ய வேண்டும்''** முதலியது போல விதி-வாக்யத்தில் (பலனில் விருப்பமாகிற) வேறு தகுதி சொல்லப்படவில்லை; அதனால், உத்கீதம் முதலியதன் அங்கமாக ஆவதுதான் விதிக்கப் படுகிறது என புரிகிறது. (கோதோஹநம்,பர்ணதா முதலியன பற்றிய விஷயங்களை பின் இணைப்பில் கட்டுரையில் காணலாம்)



## 415.(ஸூ) ஸமாஹாராத்(3-3-61)

*ஸமாதானத்தால்*

[4]**''ஹோதாவின் இடத்தைக் கொண்டு (ஹோதா செய்யும் செயலையிட்டு) மோசமான உத்கீதத்தை ஸமாதானம் செய்கிறான் (சரியாக்குகிறான்)''** என்று உபாஸனத்தை கட்டாயம் எடுத்துக் கொள்வது தெரிகிறது; மோசமான உத்கீதம்

नियमो दृश्यते। दुरुद्गीथं वेदनविहीनमुद्गीथम्। वेदनहानावन्येन समाधानं ब्रुवत् तस्य नियमेनोपादानं दर्शयति॥ ६१ ॥



## ४१६.गुणसाधारण्यश्रुतेश्च (३-३-६२)

उपासनगुणस्य उपासनाश्रयस्य प्रणवस्य सोपासनस्य, **"तेनेयं त्रयी विद्या वर्तते - ओमित्याश्रावयति, ओमिति शंसति, ओमित्युद्गायति"**(छा.1-1-9)[1] इति साधारण्यश्रुतेश्चोपासनसमाहारो गम्यते। तेन इति प्रकृतपरामर्शात् सोपासन एव प्रणवः सर्वत्र सञ्चरति। अत उपासनस्य प्रणवसहभावनियमदर्शनाच्चोद्गीथाद्युपासनानामुद्गीथादिवत् नियमेनोपादानम्॥६२॥



इति प्राप्त उच्यते -

## ४१७.न वा तत्सहभावाश्रुतेः (३-३-६३)

न चैतदस्ति, यत् उद्गीथाद्युपासनानां ऋतुषूद्गीथादिवत् उपादाननियमः इति।

---

உபாஸநஸ்ய ஸமாஹாரநியமோ த்ருஶ்யதே। துருத்கீதம் வேதநவிஹீநமுத்கீதம்। வேதநஹாநௌ அந்யேந ஸமாதாநம் ப்ருவத் தஸ்ய நியமேநோபாதாநம் தர்ஶயதி।। 61 ।।



## 416.குணஸாதாரண்யஶ்ருதேஶ்ச (3-3-62)

உபாஸநகுணஸ்ய உபாஸநாஶ்ரயஸ்ய ப்ரணவஸ்ய ஸோபாஸநஸ்ய, *"தேநேயம் த்ரயீ வித்யா வர்ததே, ஓமித்யாஶ்ராவயதி, ஓமிதி ஶம்ஸதி, ஓமித்யுத்காயதி"*(சா.1-1-9)[1] இதி ஸாதாரண்யஶ்ருதேஶ்ச உபாஸநஸமாஹாரோ கம்யதே। தேந இதி ப்ரக்ருதபராமர்ஶாத் ஸோபாஸந ஏவ ப்ரணவ: ஸர்வத்ர ஸஞ்சரதி। அத: உபாஸநஸ்ய ப்ரணவஸஹபாவநியமதர்ஶநாச்ச உத்கீதாத்யுபாஸநாநாம் உத்கீதாதிவத் நியமேநோபாதாநம்।।62।।



இதி ப்ராப்த உச்யதே-

## 417.ந வா தத்ஸஹபாவாஶ்ருதே: (3-3-63)

ந சைததஸ்தி, யத் உத்கீதாத்யுபாஸநாநாம் க்ரதுஷு உத்கீதாதிவத்

என்பது உபாஸனம் அற்ற உத்கீதம் ஆகும்; (இந்த வாக்யமானது), உபாஸனம் இல்லாவிட்டால், வேறொன்றைக் கொண்டு ஸமாதானம் சொல்கிறது; அப்படியாக, அந்த உபாஸனம் கட்டாயம் செய்யப்பட வேண்டியதை காண்பிக்கிறது.



## 416.(பூ)குணஸாதாரண்யஶ்ருதே: ச(3-3-62)

*[உபாஸனத்தின்] விஷயமானது [ப்ரணவம்], பொதுவாதலை வேதம் சொல்வதாலும்.*

உபாஸனகுணத்துக்கு - உபாஸன விஷயமான ப்ரணவத்துக்கு உபாஸனத்துடன் கூடியதற்கு பொதுவாக ஆகும் தன்மையானது சொல்லப்படுகிறது - [1]**''அதனால் (உபாஸனம் செய்யப்படும் ப்ரணவத்தால்) இந்த வைதிக-யாக-அனுஷ்டானம் நடக்கிறது- ஓம் என்று ஆஶ்ராவணம் சொல்கிறான்; ஓம் என்று ஶஸ்த்ரம் சொல்கிறான்; ஓம் என்று உத்கானம் சொல்கிறான்''** என்று; அதனாலும், உபாஸனம் தொடர்வது தெரிகிறது.

'அதனால்' என்பது, முன் ஆரம்பித்து சொல்லப்பட்டு வரும் விஷயத்தை குறிக்கிறது; (முன்னர் ப்ரணவ-உபாஸனம் சொல்லப்பட்டது) ஆகையால், உபாஸனத்துடன் கூடிய ப்ரணவம்தான் இங்கு எல்லாவிடத்திலும் கூடவருகிறது; ஆகையால், உபாஸனம் ஆனது, ப்ரணவத்துடன் கூடவே எப்போதும் இருப்பது காண்பதாலும், உத்கீதம் முதலியவற்றின் உபாஸனங்களுக்கு உத்கீதம் முதலியன போல (யாகத்தில்) கட்டாயம் எடுத்துக் கொள்ளுதல் ஆகும். ✍*(யாகத்தில், ஆஶ்ராவணம், ஶஸ்த்ரம் முதலியவை சொல்லும்போது 'ஓம்' என்று சொல்லுவார்கள் என இந்த வாக்யம் தெரிவிக்கிறது; இதில் வெறும் ப்ரணவத்தைக் குறிக்கவில்லை; உபாஸநம் செய்யப்படும் ஓம் எனும் ப்ரணவத்தையே குறிக்கிறது; ஏனெனில், அதுவே முன்னர் சொல்லப்பட்டு வருகிறது. எனவே, யாக அனுஷ்டானத்தில் உத்கீத-அவயவமான ப்ரணவம் பற்றிய உபாஸநம் தொடர்வதாகும் என தெரிகிறது)*✍



**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப் படுகிறது -

## 417.ந வா தத்ஸஹபாவாஶ்ருதே:(3-3-63)

*[உத்கீத-உபாஸனம் முதலியது] அந்த உத்கீதம் முதலியதற்கு அங்கமாவதை சொல்லாததால், [எடுத்துக் கொள்ளும் கட்டாயம்] இல்லை.*

**ந வா** (இல்லை) - உத்கீத-உபாஸனம் முதலியவற்றுக்கு உத்கீதம் முதலியது போல, யாகங்களில் கட்டாயம் எடுத்துக் கொள்ளல் ஆகும் - என்பது கிடையாது;

ஏன்?

कुतः? तत्सहभावाश्रुतेः, उद्गीथाङ्गभावाश्रुतेरित्यर्थः। अङ्गभावे हि सहभावनियमो भवति।

यद्यपि **"उद्गीथमुपासीत"** (छा.1-1-1)[1] इत्यस्मिन् पदसमुदायेऽधिकारान्तरं न प्रतीयते, तथापि तदनन्तरमेव, **"यदेव विद्यया करोति श्रद्धयोपनिषदा तदेव वीर्यवत्तरं भवति"** (छा.1-1-10)[2] इति विद्यायाः क्रतुवीर्यवत्तरत्वं प्रति साधनभावः प्रतिपाद्यते। तेन क्रतुफलात् पृथग्भूतफलसाधनभूता विद्या, **"उद्गीथमुपासीत"**[3] इति कर्तव्यतया विधीयते। क्रतुफलात् पृथग्भूतफलसाधनतयाऽवगतस्योपासनस्य क्रत्वङ्गभूतोद्गीथाङ्गतया विनियोगो नोपपद्यते। अत(थ) उपासनस्याश्रयापेक्षायां सन्निहितः उद्गीथः आश्रयमात्रं भवति।

उद्गीथश्च क्रत्वङ्गभूत इति क्रतुप्रयुक्तोद्गीथाद्याश्रये उपासने क्रत्वधिकारिण एव क्रतोर्वीर्यवत्तरत्वेच्छानिमित्तमिदमधिकारान्तरमिति न क्रतुषु तदुपादाननियमः। वीर्यवत्तरत्वं च क्रतुफलस्य प्रबलकर्मान्तरफलेनाप्रतिबन्ध इत्युक्तम्। क्रतोरविलम्बितफलत्वमित्यर्थः।

पर्णतादीनां तु, **"यदेव विद्यया करोति...तदेव वीर्यवत्तरं भवति"** (छा.1-1-10)[4] इति विद्यायाः फलसाधनत्ववत्, अपापश्लोकश्रवणादिफलं प्रति साक्षात्साधनभावो

---

உபாதாநநியம: இதி। குத:? *தத்ஸஹபாவாஶ்ருதே:*, உத்கீதாங்கபாவாஶ்ருதே: இத்யர்த:। அங்கபாவே ஹி ஸஹபாவநியமோ பவதி।

யத்யபி *"உத்கீதமுபாஸீத"* (சா.1-1-1)[1] இத்யஸ்மிந் பதஸமுதாயே அதிகாராந்தரம் ந ப்ரதீயதே; ததாபி தத‌நந்தரமேவ, *"யதேவ வித்யயா கரோதி ஶ்ரத்தயோபநிஷதா ததேவ வீர்யவத்தரம் பவதி"* (சா.1-1-10)[2] இதி வித்யாயா: க்ரதுவீர்யவத்தரத்வம் ப்ரதி ஸாதநபாவ: ப்ரதிபாத்யதே। தேந க்ரது-பலாத் ப்ருதக்பூதபலஸாதநபூதா வித்யா, *"உத்கீதமுபாஸீத"*[3] இதி கர்தவ்ய-தயா விதீயதே। க்ரதுபலாத் ப்ருதக்பூதபலஸாதநதயா அவகதஸ்ய உபா-ஸநஸ்ய க்ரத்வங்கபூதோத்கீதாங்கதயா விநியோகோ நோபபத்யதே। அத(த) உபாஸநஸ்ய ஆஶ்ரயாபேக்ஷாயாம் ஸந்நிஹித: உத்கீத: ஆஶ்ரய-மாத்ரம் பவதி।

உத்கீதஶ்ச க்ரத்வங்கபூத இதி க்ரதுப்ரயுக்தோத்கீதாத்யாஶ்ரயே உபாஸநே க்ரத்வதிகாரிண ஏவ க்ரதோர்வீர்யவத்தரத்வேச்சாநிமித்தமிதம் அதிகாராந்தரமிதி ந க்ரதுஷு ததுபாதாநநியம:। வீர்யவத்தரத்வம் ச க்ரது-பலஸ்ய ப்ரபலகர்மாந்தரபலேந அப்ரதிபந்த: இத்யுக்தம்। க்ரதோ: அவிலம்-பிதபலத்வமித்யர்த:।

பர்ணதாதீநாம் து, *"யதேவ வித்யயா கரோதி...ததேவ வீர்யவத்தரம் பவதி"* (சா.1-1-10)[4] இதி வித்யாயா: பலஸாதநத்வவத், அபாபஶ்லோகஶ்ரவணா-

**தத்ஸஹபாவாஸ்ருதே: -** (உத்கீத-உபாஸனம் ஆனது) அந்த உத்கீதத்துக்கு அங்கமாதலை சொல்லாதபடியால்; அங்கமாக ஆனால்தானே, அதனுடன் கூட ஆதல் கட்டாயமாக ஆகும்!

(யத்யபி) [1]**''உத்கீதத்தை உபாஸனம் செய்க''** எனும் சொல்-தொடரில் (வாக்யத்தில்) வேறு தகுதி (வேறொரு பலனில் விருப்பம் எனும் தகுதி) முதலியது தெரியவில்லை; ஆனாலும், அதனை அடுத்தே, [2]**''எந்த கர்மத்தை உபாஸனத்துடனும், ஸ்ரத்தையுடனும், உபநிஷத்தால் வரும் ப்ரஹ்ம-ஜ்ஞாநத்துடனும் செய்கிறானோ, அதுவே அதிக வீர்யமுடையதாக ஆகிறது''** என்று (எனும் வாக்யத்தில்) யாகம் அதிக வீர்யமுடையதாக ஆதல் என்பதைக் (பலனைக்) குறித்து, உத்கீத-வித்யை காரணமாக ஆவது சொல்லப்படுகிறது; அதனால், யாகத்தின் பலனை விட வேறான பலனுக்குக் காரணமான வித்யைதான், [3]**''உத்கீதத்தை உபாஸனம் செய்க''** என்று செய்யப்பட வேண்டியதாக விதிக்கப் படுகிறது; யாகத்தின் பலனை விட வேறான பலனுக்குக் காரணமாகத் தெரிகிற உபாஸனத்தை யாகத்துக்கு அங்கமான உத்கீதத்துக்கு அங்கமாக ஆக்குவது (அறிவிப்பது) வராது; ஆகவே, உபாஸனத்துக்கு விஷயம் தேவையாகும் போது, அடுத்து நினைவில் வரும் உத்கீதம் விஷயமாக மட்டும் ஆகும்; (அங்கியாக ஆகாது).

உத்கீதமோ யாகத்துக்கு அங்கமாகும் என்பதால், யாகத்தில் செய்யப்படுகிறது; அந்த உத்கீதம் பற்றிய உபாஸனத்தில், யாகம் செய்யும் அதிகாரிக்கே, யாகம் அதிக வீர்யமுடையதாக ஆக வேண்டும் எனும் விருப்பமாகிற காரணத்தால் இது வேறொரு தகுதியாகும்; (இந்த அதிக-பலனில் விருப்பமாகிற தகுதி இருந்தால் உபாஸனம் செய்யலாம்; இல்லாவிட்டால் செய்ய வேண்டாம்). ஆகையால், யாகங்களில் இதை எடுத்துக் கொள்ள வேண்டிய கட்டாயம் இல்லை.

அதிக வீர்யமுடையதாக ஆதல் என்பது - வலிமை வாய்ந்த மற்றொரு கர்மத்தின் பலனால் யாக-பலனுக்கு நேரிடும் தடை இல்லாமை ஆகும் என்று (முன்பே) சொல்லப்பட்டது; யாகமானது, காலம் தாழாமல் பலனை உடையதாதல் என்று அர்த்தம்.

[4]**''எந்த கர்மத்தை உபாஸனத்துடன் செய்கிறானோ, அதுவே அதிக வீர்யமுடையதாக ஆகிறது''** என்று வித்யையானது, (ஒரு) பலனுக்குக் காரணமாக ஆவது (சொல்லப்படுவது) போல, பர்ணத்வம் ஆனது, பழிச் சொல்லைக் கேட்காமை எனும் பலனைக் குறித்து நேரான காரணமாக ஆவது, வேதத்தில் சொல்லப்பட-

न श्रुत इति क्रत्वङ्गभूतजुह्वाद्यङ्गतया विनियोगाविरोधात् तदङ्गभूतानां फलान्तरसाधन-भावकल्पनानुपपत्तेस्तत्र फलश्रुतिरर्थवादमात्रं स्यात्॥ ६३ ॥

## ४१८.दर्शनाच्च (३-३-६४)

दर्शयति च श्रुतिरुपासनोपादानानियमम्, **''एवंविद्ध वै ब्रह्मा यज्ञं यजमानं सर्वांश्चर्त्विजोऽभिरक्षति''** (छा.4-17-10)[1] इति ब्रह्मणो वेदनेन सर्वेषां रक्षणं ब्रुवती। उद्गातृप्रभृतीनां वेदनस्यानियमे सति एतदुपपद्यते। अनेन लिङ्गेन पूर्वोक्तानां समाहारादि-लिङ्गानां प्रायिकत्वमवगम्यते। अतोऽनियम एवेति स्थितम्॥ ६४ ॥

इति यथाश्रयभावाधिकरणम्॥ २६ ॥

इति श्रीभगवद्रामानुजविरचिते शारीरकमीमांसाभाष्ये तृतीयस्याध्यायस्य तृतीयः पादः॥ ३-३ ॥

---

திபலம் ப்ரதி ஸாக்ஷாத்ஸாதநபாவோ ந ஶ்ருத இதி க்ரத்வங்கபூதஜுஹ்வாத்யங்கதயா விநியோகாவிரோதாத் ததங்கபூதாநாம் பலாந்தரஸாதநபாவகல்பநாநுபபத்தே: தத்ர பலஶ்ருதி: அர்தவாதமாத்ரம் ஸ்யாத்।।63।।

## 418.தர்ஶநாச்ச (3-3-64)

தர்ஶயதி ச ஶ்ருதி: உபாஸநோபாதாநாநியமம், *''ஏவம்வித்த வை ப்ரஹ்மா யஜ்ஞம் யஜமாநம் ஸர்வாஸ்சர்த்விஜோऽபிரக்ஷதி''* (சா.4-17-10)[1] இதி ப்ரஹ்மணோ வேதநேந ஸர்வேஷாம் ரக்ஷணம் ப்ருவதீ। உத்காத்ருப்ரப்ருதீநாம் வேதநஸ்ய அநியமே ஸதி ஏததுபபத்யதே। அநேந லிங்கேந பூர்வோக்தாநாம் ஸமாஹாராதிலிங்காநாம் ப்ராயிகத்வமவகம்யதே। அத: அநியம ஏவேதி ஸ்திதம்।। 64 ।।

இதி யதாஶ்ரயபாவாதிகரணம்।। 26 ।।

இதி ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசிதே ஶாரீரகமீமாம்ஸாபாஷ்யே த்ருதீயஸ்யாத்யாயஸ்ய த்ருதீய: பாத:।। 3-3 ।।

வில்லை; அதனால், யாகத்துக்கு அங்கமான ஜுஹூ முதலியது அங்கமாக பர்ணத்வம் ஆவதில் (அறிவிப்பதில்) முரண்பாடு இல்லை; ஆகையால், அதற்கு அங்கமாக ஆனவை, வேறு பலனைக் குறித்து காரணமாக ஆகும் என்பதை கல்பனை செய்ய முடியாது; ஆகையால், அங்கே பலனைச் சொன்னது அர்த்தவாதம் மட்டுமாக ஆகும்.



## 418.தர்ஶநாத் ச(3-3-64)

*[செய்ய வேண்டிய கட்டாயம் இல்லாததைக்] காண்பதாலும்.*

[1]**''இப்படி அறியும் ப்ரஹ்மா, யாகத்தையும், யஜமானனையும், எல்லா ரித்விக்குகளையும் காப்பாற்றுகிறான்''** என்று ப்ரஹ்மாவின் ஜ்ஞாநத்தால் எல்லாருக்கும் ரக்ஷணம் ஆவதை வேதம் சொல்கிறது; இந்த வேதமானது, உபாஸனம் செய்ய வேண்டிய கட்டாயம் இல்லாததை காண்பிக்கிறது என்பதும் கூட; உத்காதா முதலியவர் உபாஸனம் செய்வது கட்டாயம் இல்லை என்றால்தான் இது சரியாகும்!

இந்த லிங்கத்தால், முன் (பூர்வபக்ஷத்தில்) சொன்ன, ஸமாஹாரம் முதலிய லிங்கங்கள் பெரும்பாலும் ஆகும் என்பதே தெரிகிறது. (உபாஸனத்துடன் செய்யப்படும் யாகங்களில் அவை பொருந்தும்; உபாஸநம் இல்லாமல் செய்யும் யாகங்களில் அவை சேராது).

ஆகையால் (உத்கீத-உபாஸனம் முதலியது செய்ய வேண்டிய) கட்டாயம் இல்லை என்பது நிலைநின்றது.

**யதாஶ்ரயபாவாதிகரணம் முற்றிற்று.**

*இப்படியாக ஸ்ரீபகவத்ராமானுஜர் அருளிச் செய்த ஶாரீரக-மீமாம்ஸா-பாஷ்யத்தில் மூன்றாவது அத்யாயத்தின் மூன்றாம் பாதம்*

ஸ்ரீமதேராமானுஜாயநம:

## ஸ்ரீபகவத்ராமானுஜர்அருளிய

# ஸ்ரீபாஷ்யம்

தமிழாக்கம்

(3-4)

## மூன்றாவது அத்யாயம் - ஸாதன அத்யாயம்.

**நான்காவது பாதம் - அங்க பாதம்**

**அதிகரணங்கள் 15 (109-123)**

**ஸூத்ரங்கள் 51 (419 - 469)**

மூன்றாவது அத்யாயத்தில் உபாயமான ப்ரஹ்ம-உபாஸனம் பற்றிய விஷயங்கள் உள்ளன; அதில் இந்த நான்காவது பாதத்துக்கு அங்கபாதம் என்று பெயர்; இதில், ப்ரஹ்ம-வித்யைக்கு தேவையான அங்கங்களை எடுத்து சொல்கிறது; வர்ணாஶ்ரமதர்மங்கள், புலனடக்கம், மன-அமைதி, எப்போதும் பரமாத்மாவை சிந்திக்கும் பாங்கு முதலியவை ப்ரஹ்மவித்யையின் அங்கங்கள்.

இதனுடன் கூட யார் யாருக்கு ப்ரஹ்மவித்யை செய்யும் தகுதி உண்டு, யாருக்குக் கிடையாது எனும் விசாரமும் உள்ளது.

# 109.புருஷார்த்தாதிகரணம்(3-4-1)

## முன் குறிப்பு

வித்யையின் அங்கங்கள் பற்றிய இந்த பாதத்தில், ஆரம்பத்தில் ஒரு பூர்வபக்ஷம் - வித்யையே அங்கம்தான்; அது மோக்ஷத்துக்கு உபாயம் அல்ல என்று; அதை மறுத்து வித்யை உபாயம் ஆகும் என நிலைநாட்டுகிறார்.

**பூர்வபக்ஷம்** - ஜைமினி முனிவரின் மதம் - யாகம் முதலிய கர்மம்தான் உபாயம் ஆகும்; வித்யை அதன் அங்கம் ஆகும்; யாகம் செய்பவன், தனது ஆத்ம-ஸ்வரூபத்தை அறிய-வேண்டும்; அந்த ஆத்மஸ்வரூபத்தையே உபநிஷத் சொல்கிறது; ப்ரஹ்மம் என்று தனி-யாக ஒன்று கிடையாது; ஜீவன்தான் ப்ரஹ்மம்; அது பற்றிய ஜ்ஞானம் ஆனது, யாகம் செய்பவனுக்கு ஸம்ஸ்காரம் ஆகிறது; இந்த ஸம்ஸ்காரம் பெற்று, யாகம் செய்ய வேண்-டும்; யாகத்துக்கு பலன் ஸ்வர்க்கம் முதலியவை; உபநிஷத்களில் சொன்ன பலன்களை கருத்தில் கொள்ளக்கூடாது; மரணம் வரை கர்ம-அனுஷ்டானம் செய்ய வேண்டும் என்று வேதம் சொல்கிறது; ஸந்யாஸம் வாங்கிக் கொள்ளக் கூடாது; அதற்கு ப்ரமாணம் கிடை-யாது; கடைசி வரை கர்ம-அனுஷ்டாநம்தான் செய்யவேண்டும்.

**ஸித்தாந்தம்** - ஸ்ரீவ்யாஸமுனிவரின் மதம் - உபநிஷத்களில் ஜீவனைத் தவிர ப்ரஹ்மம் வேறானவர் என்றும் ப்ரஹ்ம-உபாஸனமே மோக்ஷத்துக்கு உபாயம் என்பதும் தெளி-வாக உள்ளது. ஜீவனே ப்ரஹ்மம் என்னும் வாதங்களுக்கு முன்பே பல ஸூத்ரங்களில், பல விசாரங்களில் பதில் சொல்லியாயிற்று.

வித்யையை விட கர்மம்தான் முக்கியம் என்பதற்கு காரணங்களை பூர்வபக்ஷத்தில் ஐந்து ஸூத்ரங்களில் சொல்கின்றனர்; அதே வரிசையில் ஸித்தாந்தத்தில் ஐந்து ஸூத்ரங்-களில் பதில் உள்ளது; கடைசியில் ஸந்யாஸ-ஆச்ரமம் பற்றிய விசாரம் செய்து, அதனை ஸ்தாபிக்கிறார்.

இங்கு மிகமிக முக்கியமான ஸித்தாந்தக் கருத்தை சொல்வதால், முதல் ஸூத்ரம் ஸித்-தாந்தம்; அடுத்தது பூர்வபக்ஷம் என்று வித்யாசமான அணுகுமுறை உள்ளது.

ஜைமினி-முனிவர் முதலில் இந்த மதத்தை வெளியிட்டார்; பின்னர், ஸ்ரீவ்யாஸரின் சிஷ்யராக மாறி, ப்ரஹ்ம-ஜ்ஞானம் பெற்றார்; அதற்கு சாக்ஷி - ''பரம் ஜைமினி: முதலிய ஸூத்ரங்கள் என்று பெரியோர்கள் சொல்வர்;

ஒரு காலகட்டத்தில், வேத-அனுஷ்டானத்துக்கு எதிரான பௌத்தமதம் பரவும்போது, வைதிக-கர்மங்களை நிலை நாட்டுவதற்காக ஜைமினி-முனிவர் சற்றே அதிகப்படியாக கர்மங்களின் பெருமையை கூட்டிச் சொன்னார்; அது காலத்தின் கட்டாயமே தவிர உண்மை நிலையல்ல என்றும் சொல்வர்.

# १०९. पुरुषार्थाधिकरणम् (३-४-१)

## ४१९.पुरुषार्थोऽतः शब्दादिति बादरायणः (३-४-१)

गुणोपसंहारानुपसंहारफला विद्यैकत्वनानात्वचिन्ता कृता। इदानीं विद्यातः पुरुषार्थः, उत विद्याङ्गकात् कर्मण इति चिन्त्यते।

किं युक्तम्? **अतः** - विद्यातः पुरुषार्थ इति भगवान् बादरायणो मन्यते; कुतः? **शब्दात्**। दृश्यते ह्यौपनिषदः शब्दो विद्यातः पुरुषार्थं ब्रुवन्,

- **"ब्रह्मविदाप्नोति परम्"** (तै.1.आन.2)[1],
- **"वेदाहमेतं पुरुषं महान्तमादित्यवर्णं तमसः परस्तात्। तमेवं विद्वानमृत इह भवति नान्यः पन्था विद्यतेऽयनाय"** (तै.आर.3-13)[2]
- **"यथा नद्यः स्यन्दमानाः समुद्रं अस्तं गच्छन्ति नामरूपे विहाय। तथा विद्वान्नामरूपाद्विमुक्तः परात् परं पुरुषमुपैति दिव्यम्"** (मु.3-2-8)[3] इत्यादिः॥ १ ॥

---

# 109. புருஷார்தாதிகரணம் (3-4-1)

## 419.புருஷார்தோऽதஃ ஶப்தாதிதி பாதராயணஃ (3-4-1)

குணோபஸம்ஹாராநுபஸம்ஹாரபலா வித்யைகத்வநாநாத்வசிந்தா க்ருதா, இதாநீம் வித்யாதஃ புருஷார்தஃ, உத வித்யாங்ககாத் கர்மண இதி சிந்த்யதே।

கிம் யுக்தம்? அதஃ - வித்யாதஃ புருஷார்தஃ இதி பகவாந் பாதராயணோ மந்யதே, குதஃ? ஶப்தாத்। த்ருஶ்யதே ஹி ஔபநிஷதஃ ஶப்தஃ வித்யாதஃ புருஷார்தம் ப்ருவந்,

- *"ப்ரஹ்மவிதாப்நோதி பரம்"* (தை.1.ஆந.2)[1],
- *"வேதாஹமேதம் புருஷம் மஹாந்தமாதித்யவர்ணம் தமஸஃ பரஸ்தாத்। தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி நாந்யஃ பந்தா வித்யதேऽயநாய"* (தை.ஆர.3-13)[2]
- *"யதா நத்யஃ ஸ்யந்தமாநாஃ ஸமுத்ரே அஸ்தம் கச்சந்தி நாமரூபே விஹாய। ததா வித்வாந் நாமரூபாத்விமுக்தஃ பராத் பரம் புருஷமுபைதி திவ்யம்"* (மு.3-2-8)[3] இத்யாதிஃ॥1॥

# 109.புருஷார்த்தாதிகரணம்(3-4-1)

**419.புருஷார்த்த: அத: ஶப்தாத் இதி பாதராயண:(3-4-1)**

*வேதம் சொல்வதால், புருஷார்த்த-பலன் முன் சொன்ன வித்யையால் ஆகும் என பாதராயணர் கருதுகிறார்.*

**ஸங்கதி (விஷயதொடர்பு) & ஸந்தேஹம்**

வித்யை ஒன்றா வெவ்வேறா என்னும் விசாரமானது (இதுவரை) செய்யப் பட்டது; இது குணங்களைச் சேர்த்தலையும் சேர்க்காமையையும் பலனாகக் கொண்டதாகும். (மூன்றாம் பாதம் முன்குறிப்பு காண்க)

இப்போது அந்த புருஷார்த்தம் (மனிதன் வேண்டும் பலன்) ஆனது, வித்யையால் விளைவதா அல்லது வித்யையை அங்கமாகக் கொண்ட (யாகம் முதலிய) கர்மத்தாலா என்று விசாரிக்கப் படுகிறது.

**ஸித்தாந்தம்**

எது சரியாகும்?

வித்யையால் பலன் விளையும் என்பது.

**அத:** (இதனால்) - இந்த வித்யையால்

**புருஷார்த்த: -** புருஷன் வேண்டும் பலன் (உண்டாகும்)

**இதி பாதராயண: -** என்று வ்யாஸபகவான் கருதுகிறார்;

ஏன்?

**ஶப்தாத் -** வேதவாக்யத்தால்;

வித்யையிலிருந்து புருஷார்த்தம் ஆவதைச் சொல்வதான உபநிஷத்-வாக்யம் காணப்படுகிறது -

- [1]**''ப்ரஹ்மத்தை அறிபவன் உயர்ந்த ப்ரஹ்மத்தை அடைவான்''**
- [2]**''ப்ரக்ருதிக்கு அப்பால், ஆதித்ய-வர்ணனாக ஒளிரும் மஹாபுருஷனை நான் உபாஸனம் செய்கிறேன்; அவனை இப்படி அறிபவன் (உபாஸனம் செய்பவன்) இங்கு மோக்ஷம் அடைந்தவன் ஆகிறான்; அதை அடைவதற்கு வேறு வழியில்லை''.** (எனவே கர்மம் உபாயமாகாது)
- [3]**''பெருகும் நதிகள் தனிப் பெயரையும் உருவையும் விட்டு கடலில் எப்படி ஒன்று சேர்கின்றனவோ, அப்படியே உபாஸனம் செய்பவன் பெயர்-உருவிலிருந்து விடுப்பட்டவனாய் உயர்ந்தவனை விட உயர்ந்த திவ்யபுருஷனை அடைகிறான்''**

முதலியது.



अत्र पूर्वपक्षी प्रत्यवतिष्ठते-

**४२०.शेषत्वात् पुरुषार्थवादो यथाऽन्येष्विति जैमिनिः (३-४-२)**

नैतदेवम् - यत् विद्यातः पुरुषार्थावाप्तिः शब्दादवगम्यते इति। न ह्येषः, "**ब्रह्मविदाप्नोति परम्**"(तै.1.आन.2)[1] इत्यादिशब्दो वेदनात् पुरुषार्थावाप्तिमवगमयति, कर्मसु कर्तृभूतस्याऽऽत्मनो याथात्म्यवेदनप्रतिपादनपरत्वात्। अतः कर्तुः संस्कारद्वारेण विद्यायाः क्रतुशेषत्वात् तत्र फलश्रुतिरर्थवादमात्रम्; यथाऽन्येषु द्रव्यादिषु - इति जैमिनिराचार्यो मन्यते। तदुक्तम्, "**द्रव्यसंस्कारकर्मसु परार्थत्वात् फलश्रुतिरर्थवादः स्यात्**" (पू.मी.सू.4-3-1)[2] इति।

ननु च कर्मसु कर्तुर्जीवादन्यो मुमुक्षुभिः प्राप्यतया वेदान्तेषु वेद्य उपदिश्यत इति प्रागेवोपपादितम्,

- "**नेतरोऽनुपपत्तेः**"(ब्र.सू.1-1-17),
- "**भेदव्यपदेशाच्च**"(ब्र.सू.1-1-18),

---

அத்ர பூர்வபக்ஷீ ப்ரத்யவதிஷ்டதே -

**420.ஶேஷத்வாத் புருஷார்தவாதோ யதாऽந்யேஷ்விதி ஜைமிநி:(3-4-2)**

நைததேவம் - யத் வித்யாத: புருஷார்தாவாப்தி: ஶப்தாதவகம்யதே இதி। ந ஹ்யேஷ:, "*ப்ரஹ்மவிதாப்நோதி பரம்*"(தை.1.ஆந.2)[1] இத்யாதிஶப்த: வேதநாத் புருஷார்தாவாப்திம் அவகமயதி, கர்மஸு கர்த்ருபூதஸ்யாऽऽத்மந: யாதாத்ம்யவேதநப்ரதிபாதநபரத்வாத்। அத: கர்து: ஸம்ஸ்காரத்வாரேண வித்யாயா: க்ரதுஶேஷத்வாத் தத்ர பலஶ்ருதி: அர்தவாதமாத்ரம்; யதா அந்யேஷு த்ரவ்யாதிஷு - இதி ஜைமிநிராசார்யோ மந்யதே। தது்க்தம், "*த்ரவ்ய-ஸம்ஸ்கார-கர்மஸு பரார்தத்வாத் பலஶ்ருதிரர்தவாத: ஸ்யாத்*" (பூ.மீ.ஸூ4-3-1)[2] இதி।

நநு ச - கர்மஸு கர்துர்ஜீவாதந்ய: முமுக்ஷுபி: ப்ராப்யதயா வேதாந்தேஷு வேத்ய உபதிஶ்யதே இதி ப்ராகேவோபபாதிதம்,

- "*நேதரோऽநுபபத்தே:*"(ப்ர.ஸூ.1-1-17),
- "*பேதவ்யபதேஶாச்ச*"(ப்ர.ஸூ.1-1-18),

**பூர்வபக்ஷம்**

இதில் பூர்வபக்ஷம் சொல்பவன் கேட்கிறான் -

**420.(பூ)ஶேஷத்வாத் புருஷார்த்தவாத: யதா அந்யேஷு இதி ஜைமிநி:(3-4-2)**

*[வித்யையானது, யாகத்தின்] அங்கமானபடியால், பலனைச் சொன்னது பிறவற்றில் போல புருஷனின் அர்த்தவாதம் ஆகும் என ஜைமினி கருதுகிறார்*

புருஷார்த்தத்தை (பலனை) அடைதலானது, வித்யையால் விளைவதாக வேத-வாக்யத்திலிருந்து தெரிகிறது - என்றது எதுவோ, அது அப்படியல்ல; ஏனெனில், [1]**''ப்ரஹ்மத்தை அறிபவன் உயர்ந்த ப்ரஹ்மத்தை அடைவான்''** முதலிய இந்த வாக்யமானது, ஜ்ஞாநத்தினால் புருஷார்த்தத்தை அடைவதை அறிவிக்காது; ஏனெனில், அது (யாகம் முதலிய) கர்மங்களில் கர்த்தாவாகிற ஆத்மாவின் உண்மையை அறிதலைப் பற்றி சொல்வதில் நோக்குடையது ஆகும்.

*(யாகம் செய்யும் ஜீவன், கர்த்தாவான தனது ஆத்ம-ஸ்வரூபத்தை அறிய வேண்டும்; அந்த ஜீவாத்ம-ஸ்வரூபம்தான் ப்ரஹ்மம் எனப்படும்; அதனை அறிபவன் ஆக வேண்டும் என்று இந்த வாக்யம் சொல்கிறது).*

ஆகையால், வித்யையானது, கர்த்தாவுக்கு ஸம்ஸ்காரம் ஆவதன் மூலமாக, யாகத்துக்கு அங்கமாகிறது; எனவே,

**ஶேஷத்வாத்** - (வித்யை கர்மத்துக்கு அங்கமாவதால்)

**புருஷார்த்தவாத:** - அங்கு பலனைச் சொன்னது,

**யதா அந்யேஷு** (பிறவற்றில் போல) மீதியான த்ரவ்யம் முதலியவற்றில் எப்படியோ, அப்படியே, அர்த்தவாதம் மட்டுமே *(''ப்ரஹ்மத்தை அறிபவன் உயர்ந்த ப்ரஹ்மத்தை அடைவான்'' என்று சொன்னது, புருஷனைத் தூண்டுவதற்கான புகழுரை மட்டுமே; உண்மைக்கருத்து அல்ல)*

**இதி ஜைமிநி:** - என்று ஜைமினி ஆசார்யர் கருதுகிறார்; அது (அவரால் பூர்வ-மீமாம்ஸாவில்) சொல்லப்பட்டது - [2]**''வேறொன்றின் பொருட்டு அங்கமாக ஆவதால், த்ரவ்யம், ஸம்ஸ்காரம், க்ரியை ஆகியவற்றில் பலனைச் சொன்னது அர்த்தவாதம் ஆகும்''** என்று. (இதன் விளக்கம் பர்ணதா பற்றிய கட்டுரையில் பின் இணைப்பில் காணலாம்)

**உள்-கேள்வி** (ஸித்தாந்தகருத்து) - கர்மங்களில் கர்த்தாவாக இருப்பவன் ஜீவன்; அவனை விட வேறான ஒருவனே மோக்ஷம் விரும்புபவர்களால் அடையப்பட வேண்டியவன்; இப்படியாக அவனே வேதாந்தங்களில் அறியப் படுபவனாகி உபதேஶிக்கப் படுகிறான்; இது முன்பே,

- **நேதரோऽநுபபத்தே:**
- **பேதவ்யபதேஶாச்ச**

- **"अनुपपत्तेस्तु न शरीरः"**(ब्र.सू.1-2-3),
- **"इतरपरामर्शात् स इति चेन्नासम्भवात्"**(ब्र.सू.1-3-17)

इत्येवमादिभिः सूत्रैः। तदेव ब्रह्म तत्त्वमस्यादिसामानाधिकरण्येन जीवादनतिरिक्तमित्येतदपि, **"अधिकं तु भेदनिर्देशात्"**(ब्र.सू.2-1-22) इत्येवमादिभिर्निरस्तम्। सामानाधिकरण्यनिर्देशश्च, **"ऐतदात्म्यमिदं सर्वम्"** (छा.6-8-7)[1],**"सर्वं खल्विदं ब्रह्म"** (छा.3-14-1)[2] इति चेतनाचेतनसाधारणः, **"यः पृथिव्यां तिष्ठन्"**(बृ.5-7-3)[3], **"य आत्मनि तिष्ठन्"**इ(बृ.मा.5-7-22)[4] इत्यादिनाऽवगततत्तदात्मतयाऽवस्थितिनिबन्धन इति, **"अवस्थितेरिति काशकृत्स्नः"**(ब्र.सू.1-4-22) इत्यादिभिरुपपादितम्। तत् कथं कर्मसु कर्तुरात्मनो याथात्म्योपदेशपरा वेदान्तशब्दा इति विद्यायाः कर्माङ्गत्वं प्रतिपाद्यते?

उच्यते - वेदान्तवाक्येष्वेव विद्यायाः कर्मप्राधान्यं सूचयद्भिर्लिङ्गैः, तदुपबृंहितसामानाधिकरण्यनिर्देशेन च वेदान्तशब्दाः देहातिरिक्तजीवस्वरूपयाथात्म्योपदेशपरा इति बलादभ्युपगमनीयमिति पूर्वपक्षिणोऽभिप्रायः॥

ननु च कर्तृसंस्कारमुखेन विद्यायाः क्रत्वनुप्रवेशो न शक्यते वक्तुम्, कर्तुर्लौकिकवैदिकसाधारणत्वेनाव्यभिचरितक्रतुसम्बन्धित्वाभावात्॥

---

- *"அநுபபத்தேஸ்து ந ஶரீர:"*(ப்ர.ஸூ.1-2-3),
- *"இதரபராமர்ஶாத் ஸ இதி சேந்நாஸம்பவாத்"*(ப்ர.ஸூ.1-2-17)

இத்யேவமாதிபி: ஸூத்ரை:। ததேவ ப்ரஹ்ம தத்த்வமஸ்யாதிஸாமாநாதிகரண்யேந ஜீவாதநதிரிக்தம் இத்யேததபி, *"அதிகம் து பேதநிர்தேஶாத்"* (ப்ர.ஸூ.2-1-22), இத்யேவமாதிபி: நிரஸ்தம்। ஸாமாநாதிகரண்யநிர்தேஶஶ்ச, *"ஐததாத்ம்யமிதம் ஸர்வம்"*(சா.6-8-7)[1], *"ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம"*(சா.3-14-1)[2] இதி சேதநாசேதநஸாதாரண:, *"ய: ப்ருதிவ்யாம் திஷ்டந்"*(ப்ரு.5-7-3)[3], *"ய ஆத்மநி திஷ்டந்"*(ப்ரு.மா.5-7-22)[4] இத்யாதிநாऽவகததத்ததாத்மதயாऽவஸ்திதிநிபந்தந: இதி, *"அவஸ்திதேரிதி காஶக்ருத்ஸ்ந:"*(ப்ர.ஸூ.1-4-22) இத்யாதிபிருபபாதிதம்। தத் கதம் கர்மஸு கர்துராத்மநோ யாதாத்ம்யோபதேஶபரா வேதாந்தஶப்தா இதி வித்யாயா: கர்மாங்கத்வம் ப்ரதிபாத்யதே।

உச்யதே - வேதாந்தவாக்யேஷ்வேவ வித்யாயா: கர்மப்ராதாந்யம் ஸூசயத்பிர்லிங்கை:, ததுபப்ரும்ஹிதஸாமாநாதிகரண்யநிர்தேஶேந ச வேதாந்தஶப்தா: தேஹாதிரிக்தஜீவஸ்வரூபயாதாத்ம்யோபதேஶபரா இதி பலாதப்யுபகமநீயமிதி பூர்வபக்ஷிணோऽபிப்ராய:।।

நநு ச கர்த்ருஸம்ஸ்காரமுகேந வித்யாயா: க்ரத்வநுப்ரவேஶோ ந ஶக்யதே வக்தும், கர்து: லௌகிகவைதிகஸாதாரணத்வேந அவ்யபசரிதக்ரதுஸம்பந்தித்வாபாவாத்।।

- **அநுபபத்தேஸ்து ந ஶாரீர:**
- **இதரபராமர்ஶாத் ஸ இதி சேத் ந அஸம்பவாத்**

என்றிவை முதலிய ஸூத்ரங்களால் விளக்கப் பட்டது;, **''தத் த்வமஸி''** முதலியதில் ஸமானாதிகரணமாக ஆவதால், அந்த ப்ரஹ்மமே ஜீவனை விட வேறானது அல்ல என்பதும், **''அதிகம் து பேதநிர்தேஶாத்''** முதலியவற்றால் (ஸூத்ரங்களால்) மறுக்கப் பட்டது; (ப்ரஹ்மத்துடன் ஆன) ஸமாநாதிகரண-குறிப்பும் கூட [1]**''இதெல்லாம் இந்த ஆத்மாவே''**, [2]**''இந்த எல்லாமே ப்ரஹ்மம்தான்''** என்று சேதனங்களுக்கும் அசேதனங்களுக்கும் பொதுவாக உள்ளது; அது, [3]**''யார் ப்ருதிவீயில் இருப்பவனாய்''**, [4]**''யார் ஜீவாத்மாவில் இருப்பவனாய்''** முதலிய வாக்யத்தால், அதற்குள்ளே ஆத்மாவாக ப்ரஹ்மம் இருப்பதாக அறியப்படுவதை அடிப்படையாகக் கொண்டு ஆகிறது; இது, **''அவஸ்திதே: இதி காஶக்ருத்ஸ்ந:''** முதலியவற்றால் விளக்கப் பட்டது; ஆகையால் கர்மங்களில் கர்த்தாவான ஜீவாத்மாவின் உண்மையை உபதேஶிப்பதில் வேதாந்தவாக்யங்கள் நோக்குள்ளவை என்பதையிட்டு, வித்யையானது கர்மத்துக்கு அங்கமாகும் என எப்படி சொல்லப்படும்?

**உள்பதில்** (பூர்வபக்ஷ கருத்து) - வேதாந்தவாக்யங்களிலேயே வித்யையை விட கர்மம் ப்ரதானமாவதை (வித்யையானது கர்மத்தின் அங்கமாகும் என்பதை) குறிப்பால் உணர்த்தும் லிங்கங்கள் (காரணங்கள்) உள்ளன; அவற்றாலும், அவற்றைத் துணையாகக் கொண்டு விளக்கப்படும் ஸமானாதிகரண-குறிப்பாலும், வேதாந்தவாக்யங்கள் உடலை விட வேறான ஜீவாத்ம-ஸ்வரூபத்தின் உண்மையை உபதேஶிப்பதில் நோக்குள்ளவை என வலுவில் ஒப்புக்கொள்ள வேண்டும் - என்று பூர்வபக்ஷம் சொல்பவரின் கருத்து ஆகும்.

**உள்கேள்வி -** வித்யையானது, கர்த்தாவுக்கு ஸம்ஸ்காரம் ஆவதன் மூலமாக யாகத்தில் (அங்கமாக) உட்படுகிறது என்று சொல்ல முடியாது; ஏனெனில், கர்த்தா என்பவன் உலக-செயல்களுக்கும் வைதிக-செயல்களுக்கும், பொதுவானவன் ஆனபடியால், யாகத்தை விட்டு பிரியாமல் யாகத்துடன் தொடர்புள்ளவன் என்பது கிடையாது.

*(யாகத்தை விட்டுப் பிரியாமல் யாகத்தில் தொடர்புடையதே யாகத்தின் அங்கமாகும்; இங்கோ கர்த்தா என்பவன், யாகம் தவிர, உலகச் செயல்களுக்கும் கர்த்தா ஆகிறான்; அதனால், யாகத்தின் அங்கமாக ஆக மாட்டான்; அதனால், அவனைப் பற்றிய ஜ்ஞாநம் என்பதும் யாகத்தின் அங்கம் ஆகாது.).*

नैवम्; लौकिकस्य कर्मणः कर्तुः देहादव्यतिरिक्तत्वेऽप्युपपत्तेः देहातिरिक्तनित्यात्मस्वरूपस्य क्रतावेवोपयोगात् तत्स्वरूपप्रतिपादनमुखेन क्रत्वनुप्रवेशो न विरुध्यते। अतो विद्यायाः क्रतुशेषत्वात् नातः पुरुषार्थः॥ २ ॥

कानि पुनस्तानि लिङ्गानि; यदुपबृंहितसामानाधिकरण्यनिर्देशेन वेदान्तशब्दा जीवस्वरूपपरा इति निर्णीयन्ते। तत्राह -

**४२१. आचारदर्शनात् (३-४-३)**

ब्रह्मविदां प्राधान्येन कर्मस्वेवाचारो दृस्यते - अश्वपतिः केकयः किल आत्मवित्तमः तद्विज्ञानायोपगतांस्तानृषीन् प्रत्याह - **''यक्ष्यमाणो ह वै भगवन्तोऽहमस्मि''**(छा.5-11-5)[1] इति। तथा जनकादयो ब्रह्मविदग्रेसराः कर्मनिष्ठाः स्मृतिषु दृश्यन्ते, **''कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः''**(गी.3-20)[2] **''इयाज सोऽपि सुबहून् यज्ञान् ज्ञानव्यपाश्रयः''**(वि.पु.6-6-12)[3] इति।

अतो ब्रह्मविदां कर्मप्रधानत्वदर्शनात् विद्यायाः कर्तृस्वरूपवेदनरूपत्वेन कर्माङ्गत्वमेवेति न विद्यातः पुरुषार्थः॥ ३ ॥

---

நைவம், லௌகிகஸ்ய கர்மண: கர்து: தேஹாதவ்யதிரிக்தத்வேऽபி உபபத்தே: தேஹாதிரிக்தநித்யாத்மஸ்வரூபஸ்ய க்ரதாவேவ உபயோகாத் தத்ஸ்வரூபப்ரதிபாதநமுகேந க்ரத்வநுப்ரவேஶோ ந விருத்யதே। அத: வித்யாயா: க்ரதுஶேஷத்வாத் நாத: புருஷார்த:॥ 2 ॥

காநி புந: தாநி லிங்காநி, யதுபப்ரும்ஹிதஸாமாநாதிகரண்யநிர்தேஶேந வேதாந்தஶப்தா ஜீவஸ்வரூபபரா: இதி நிர்ணீயந்தே। தத்ராஹ -

**421. ஆசாரதர்ஶநாத் (3-4-3)**

ப்ரஹ்மவிதாம் ப்ராதாந்யேந கர்மஸ்வேவ ஆசாரோ த்ருஶ்யதே - அஶ்வபதி: கேகய: கில ஆத்மவித்தம: தத்விஜ்ஞாநாயோபகதாந் தாந்ருஷீந் ப்ரத்யாஹ - *''யக்ஷ்யமாணோ ஹ வை பகவந்தோऽஹமஸ்மி''*(சா.5-11-5)[1] இதி। ததா ஜநகாதயோ ப்ரஹ்மவிதக்ரேஸரா: கர்மநிஷ்டா: ஸ்ம்ருதிஷு த்ருஶ்யந்தே, *''கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய:''*(கீ.3-20)[2] *''இயாஜ ஸோऽபி ஸுபஹூந் யஜ்ஞாந் ஜ்ஞாநவ்யபாஶ்ரய:''*(வி.பு.6-6-12)[3] இதி।

அத: ப்ரஹ்மவிதாம் கர்மப்ரதாநத்வதர்ஶநாத் வித்யாயா: கர்த்ருஸ்வரூபவேதநரூபத்வேந கர்மாங்கத்வமேவேதி ந வித்யாத: புருஷார்த:॥3॥

**உள் பதில் -** அப்படியல்ல; உலகச் செயலைச் செய்யும் கர்த்தா ஆனவன், ஶரீரத்தை விட வேறானவன் அல்ல என்றாலும், செயல் நடந்துவிடும்; ஆகவே, ஶரீரத்தை விட வேறான நித்யமான ஆத்மஸ்வரூபமானது யாகத்தில் மட்டுமே உபயோகமாகும்; அந்த ஸ்வரூபத்தைச் சொல்வதன் மூலமாக, வித்யையானது, யாகத்தில் உட்படுவது முரண்படாது.

*(ஜீவன், கர்த்தா எனும் முறையில் வெளியில் சம்பந்தப் பட்டாலும், ஶரீரத்தை விட வேறான கர்த்தா எனும் முறையில் யாகத்தில் மட்டுமே ஆகிறான்; ஆகையால் அப்படியான ஜீவன், யாகத்துக்கு அங்கம் ஆகிறான்; அவன் வாயிலாக, அவனைப் பற்றிய ஜ்ஞானமும் அங்கம் ஆகிறது; (உ.ம்) கரண்டி போல இருக்கும் ஜுஹு என்பது பொதுவாக கரண்டி என்னும் முறையில் வெளியில் உபயோகப் பட்டாலும், ஜுஹு என்னும் விஶேஷ-முறையில் யாகத்-தில்தான் பயன்படும்; அதனால், யாகத்துக்கு அங்கம் ஆகும்; அதுபோல,)*

ஆகையால், வித்யையானது யாகத்தின் அங்கமானபடியால், அந்த வித்யை-யினால் புருஷார்த்த-பலன் வராது.



**உள் கேள்வி -** எந்த லிங்கங்களின் துணையுடன் விளக்கப்படும் ஸமானாதி-கரண-குறிப்பைக் கொண்டு, வேதாந்தவாக்யங்கள் ஜீவனது ஸ்வரூபத்தை சொல்-லும் நோக்குள்ளவையாக தீர்மானிக்கப் பட்டவையோ, அந்த லிங்கங்கள் (வித்யையை விட கர்ம-அனுஷ்டாநம்தான் முக்கியம் என்பதை அறிய காரணமான சில விஷயங்-கள் உள்ளன என்று பூர்வபக்ஷத்தில் குறிப்பிட்டார்; அந்த காரணங்கள்) எவை?

**உள்பதில் -** அதற்கு (பூர்வபக்ஷத்தில்) பதில் சொல்கிறார் -

## 421.(பூ)ஆசாரதர்ஶநாத்(3-4-3)

*அனுஷ்டானம் காணப்படுவதால்*

ப்ரஹ்மஜ்ஞானிகளின் அனுஷ்டானம் முக்யமாக கர்மங்களில்தான் காணப் படுகிறது; ஆத்மஜ்ஞாநிகளில் உத்தமரான கேகய அரசர் அஶ்வபதி, அந்த ஆத்ம-ஜ்ஞாநத்தைப் பெறும் பொருட்டு வந்த அந்த ரிஷிகளிடம் பதிலுரைத்தார் - [1]**''பூஜிக்-கத் தக்கவர்களே, நான் யாகம் செய்யப் போகிறவனாக இருக்கிறேன்''** என்று; (காண்க - வைஶ்வாநர அதிகரணம் - (1-2-6)

அப்படியே, ப்ரஹ்மஜ்ஞாநிகளில் முன் நிற்பவரான ஜனகர் முதலியவர்கள் கர்மம் செய்பவர்களாகவே ஸ்ம்ருதி-நூல்களில் காணப்படுகின்றனர் - [2]**''ஜனகர் முதலியவர், கர்மத்தால்தானே சித்தியைப் பெற்றவரானார்கள்''**, [3]**''ஜ்ஞாநம் பெற்-றிருந்த அந்த கேசித்வஜரும் பல யாகங்கள் செய்தார்''** என்று.

ஆகையால் ப்ரஹ்மஜ்ஞாநிகளுக்கும் கர்மமே முக்கியமாகக் காண்பதால், வித்யையானது, கர்த்தாவின் ஸ்வரூபத்தை அறிவது என்னும் உருவில், கர்மத்-துக்கு அங்கமாவதுதான்; அதனால், வித்யையினால் புருஷார்த்தபலன் வருவதில்லை.



लिङ्गमिदम्; प्राप्तिरुच्यतामित्यत्राह -

**४२२.तच्छ्रुतेः (३-४-४)**

श्रुतिरेव हि विद्यायाः कर्माङ्गत्वमाह, **''यदेव विद्यया करोति श्रद्धयोपनिषदा तदेव वीर्यवत्तरं भवति''**(छा.1-1-10)[1] इति।

नेयं श्रुतिः प्रकरणादुद्गीथमात्रविषयेति व्यवस्थापयितुं शक्या; यतः प्रकरणात् श्रुतिर्बलीयसी। **''यदेव विद्यया करोति''**(छा.1-1-10)[2] इति विद्यामात्रविषया हीयं श्रुतिः॥ ४ ॥

**४२३.समन्वारम्भणात् (३-४-५)**

**''तं विद्याकर्मणी समन्वारभेते''**(बृ.6-4-2)[3] इति विद्याकर्मणोः साहित्यं च दृश्यते। साहित्यं चोक्तेन न्यायेन विद्यायाः कर्माङ्गत्वे सत्येव भवति॥५॥

**४२४.तद्वतो विधानात् (३-४-६)**

---

லிங்கமிதம்; ப்ராப்திருச்யதாம் இத்யத்ராஹ -

**422. தச்ச்ருதே:(3-4-4)**

ஶ்ருதிரேவ ஹி வித்யாயா: கர்மாங்கத்வமாஹ, *"யதேவ வித்யயா கரோதி ஶ்ரத்தயோபநிஷதா ததேவ வீர்யவத்தரம் பவதி"*(சா.1-1-10)[1] இதி।

நேயம் ஶ்ருதி: ப்ரகரணாத் உத்கீதமாத்ரவிஷயா இதி வ்யவஸ்தாபயிதும் ஶக்யா; யத: ப்ரகரணாத் ஶ்ருதிர்பலீயஸீ। *"யதேவ வித்யயா கரோதி"* (சா.1-1-10)[2] இதி வித்யாமாத்ரவிஷயா ஹி இயம் ஶ்ருதி:।। 4 ।।

**423. ஸமந்வாரம்பணாத் (3-4-5)**

*"தம் வித்யாகர்மணீ ஸமந்வாரபேதே"*(ப்ரு.6-4-2)[3] இதி வித்யாகர்மணோ: ஸாஹித்யம் ச த்ருஶ்யதே। ஸாஹித்யம் ச உக்தேந ந்யாயேந வித்யாயா: கர்மாங்கத்வே ஸத்யேவ பவதி।।5।।

**424.தத்வதோ விதாநாத் (3-4-6)**

**கேள்வி -** இது லிங்கம் ஆகும்; (ஶ்ருதி)ப்ரமாணத்தால் இது ஏற்படுவது சொல்லப் படட்டும்; (ப்ரஹ்ம உபாஸநம் செய்பவர்கள் யாகம் செய்தார்கள் என்கிற காரண-அடையாளம் இருக்கட்டும்; வேதவாக்யத்தில் நேரிடையாக இதைச் சொல்லும் குறிப்பு உள்ளதா?)

**பதில் -** என்பதற்கு பதில் சொல்கிறார் -

## 422.தச்ச்ருதே:(3-4-4) (ஸூ)

*அது பற்றிய ஶ்ருதி இருப்பதால்,*

[1]**''எந்த யாகத்தை வித்யையால், ஶ்ரத்தையால், உபநிஷத்-ஜ்ஞாநத்தால் செய்கிறானோ, அதுவே அதிக வீர்யம் உடையதாக ஆகிறது''** என்று வேதமே-தான் கர்மத்துக்கு அங்கமாக வித்யை ஆவதைச் சொல்கிறது; (வித்யையால் கர்மத்தை செய்கிறான் என்று சொல்வதால், வித்யை அங்கமாவது தெரிகிறது; இதில் மூன்றாவது விபக்தி என்பது ஶ்ருதி ஆகும்).

ப்ரகரணத்தைக் (சொல்லப்பட்டு வரும் இடத்தைக்) கொண்டு, இந்த (வித்யை எனும் சொல்லானது, உத்கீதவித்யையை மட்டும் பற்றியது என வரையறை சொல்ல முடியாது; ஏனெனில், ப்ரகரணத்தை விட ஶ்ருதி வலிமை மிக்கது; [2]**''வித்யையினால் எதனைச் செய்கிறானோ''** என்று எல்லா வித்யையையும் பற்றிதானே இந்த ஶ்ருதி உள்ளது!

*✎(உ.ம் - ''நன்கு வேதாந்தம் படிக்க வேண்டும்; படித்தால்தானே வாழ்வுக்கு நல்லது'' என்று சொல்கிறோம்; இது வேதாந்த-படிப்பைப் பற்றி சொல்லும் இடம்; ஆனாலும், ''படித்தால்தானே வாழ்வில் நல்லது என்பது எல்லா படிப்பையும் குறிக்கலாம்; அதுபோல, ''யாகத்தில் உத்கீத-உபாஸனம் ஆகிற வித்யை செய்ய வேண்டும்'' என்று சொல்லிவிட்டு, பின்னர், ''வித்யையால் எந்த யாகத்தைச் செய்கிறானோ, அதுவே வீர்யம் உடையது'' என்ற வாக்யம் சொல்லியுள்ளது; இது, உத்கீத-வித்யையைச் சொல்லும் இடத்தில் இருந்தாலும் கூட பொதுவாக எல்லா வித்யைகளையும் குறிக்கும்; அதனால், ப்ரஹ்மவித்யையும் உத்கீதவித்யை போல கர்மத்துக்கு அங்கம்தான்).✍*



## 423.ஸமந்வாரம்பணாத்(3-4-5) (ஸூ)

*[வித்யையும் கர்மமும்] சேர்ந்திருப்பதால்*

[3]**''(ஶரீரத்தை விட்டு வெளியேறும்) ஜீவனை வித்யை-கர்மம் என இரண்டும் சேர்ந்து கூட போகின்றன''** என்பதாக வித்யையும் கர்மமும் சேர்ந்திருப்பது காணப் படுகிறது. சேர்ந்திருத்தல் என்பது, முன் சொன்ன முறையில் வித்யையானது கர்மத்துக்கு அங்கமாக ஆனால்தான் வரும். *✎(குருவும் சிஷ்யனும் சேர்ந்தே போவது-போல, அரசனும் சேவகனும் சேர்ந்தே போவது போல, கர்மமும் வித்யையும் சேர்ந்தே போவதால், கர்மம் முக்கியமானது; வித்யை அதன் அங்கமானது என தெரிகிறது).✍*



## 424.தத்வத: விதாநாத்(3-4-6) (ஸூ)

*அந்த வித்யையை உடையவனுக்கு [கர்மங்களை] விதிப்பதால்.*

विद्यावतः कर्मविधानात् विद्या कर्माङ्गमित्यवगम्यते, **''आचार्यकुलात् वेदमधीत्य यथाविधानं गुरोः कर्मातिशेषेणाभिसमावृत्य कुटुम्बे शुचौ देशे''**(छा.8-15-1)[1] इत्यादौ। **''वेदमधीत्य''**(छा.8-15-1)[2] इत्यध्ययनवतः कर्माणि विदधत् अर्थावबोधपर्यन्ताध्ययनवत एव विदधाति। अर्थावबोधपर्यन्तं ह्यध्ययनमिति स्थापितम्। अतो ब्रह्मविद्यापि कर्मसु विनियुक्तेति न पृथक्फलायावकल्पते॥ ६ ॥

इतश्च न विद्यातः पुरुषार्थः -

**४२५.नियमात् (३-४-७)**

**''कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेत् शतं समाः''**(ई.2)[3] इत्यात्मविदः पुरुषायुषस्य सर्वस्य कर्मसु नियमेन विनियोगात् कर्मण एव फलमित्यवगम्यते। विद्या तु कर्माङ्गमिति॥७॥

एवं प्राप्ते प्रचक्ष्महे -

**४२६.अधिकोपदेशात् तु बादरायणस्यैवं तद्दर्शनात् (३-४-८)**

வித்யாவத: கர்மவிதா₄நாத் வித்₃யா கர்மாங்கமித்யவகம்யதே, *''ஆசார்யகுலாத் வேத₃மதீ₄த்ய யதா₂விதா₄நம் கு₃ரோ: கர்மாதிஶேஷேணாபி₄ஸமாவ்ருத்ய குடும்பே₃ ஶுசௌ தே₃ஶே''*(சா.8-15-1)[1] இத்யாதௌ₃. *''வேத₃மதீ₄த்ய''*[2] இதி அத்₄யயநவத: கர்மாணி வித₃த₄த் அர்தா₂வபோ₃த₄பர்யந்தாத்₄யயநவத ஏவ வித₃தா₄தி. அர்தா₂வபோ₃த₄பர்யந்தம் ஹி அத்₄யயநமிதி ஸ்தா₂பிதம். அத: ப்₃ரஹ்மவித்₃யாபி கர்மஸு விநியுக்தேதி ந ப்ருத₂க்ப₂லாயாவகல்பதே.। 6 ।।

இதஶ்ச ந வித்₃யாத: புருஷார்த₂: -

**425.நியமாத் (3-4-7)**

*''குர்வந்நேவேஹ கர்மாணி ஜிஜீவிஷேத் ஶதம் ஸமா:''*(ஈ.2)[3] இதி ஆத்மவித₃: புருஷாயுஷஸ்ய ஸர்வஸ்ய கர்மஸு நியமேந விநியோகாத் கர்மண ஏவ ப₂லமித்யவகம்யதே. வித்₃யா து கர்மாங்கமிதி।। 7 ।।

ஏவம் ப்ராப்தே ப்ரசக்ஷ்மஹே -

**426.அதி₄கோபதே₃ஶாத் து பா₃த₃ராயணஸ்யைவம் தத்₃த₃ர்ஶநாத்(3-4-8)**

[1]**''ஆசார்ய-குலத்திலிருந்து வேதத்தை அத்யயனம் செய்து, ஆசார்ய-ஆஜ்ஞையைப்படி ஆசார்யனின் செயலை (பணிவிடை முதலியதை) மீதமில்லாமல் செய்து, க்ருஹஸ்த ஆஶ்ரமத்தில் ஶுத்தமான இடத்தில்''** முதலிய வாக்யத்தில், வித்யையை உடையவனுக்கு கர்மங்களை விதித்திருப்பதால், வித்யையானது கர்மத்துக்கு அங்கமாகும் என தெரிகிறது.

(இங்கு) [2]**''வேதத்தை அத்யயனம் செய்து''** என்று அத்யயனம் செய்தவனுக்கு கர்மங்களை விதிப்பதாய் அர்த்த-ஜ்ஞாநம் வரையிலான அத்யயனம் உடையவ-னுக்குத்தான் கர்மங்களை விதிக்கிறது; ஏனெனில், அத்யயனம் என்பது, வேதத்தின் அர்த்தத்தை அறிவதுவரை ஆகும் என்று (பூர்வமீமாம்ஸாவில்) நிலைநாட்டப் பட்டது; ஆகையால், (அர்த்தஜ்ஞாநம் ஆகிற) ப்ரஹ்ம-ஜ்ஞாநமும் கர்மங்களில் உபயோகப் படுத்தச் சொல்லியுள்ளது; ஆகையால், அது தனியொரு பலனின் பொருட்டு ஆகாது.



வித்யையினால் பலன் வருவதில்லை என்பது இதனாலும் ஆகும் -

## 425.நியமாத்(3-4-7) (பூ)

*[கட்டாயம் செய்து கொண்டே இருக்க வேண்டியதாக] நியமம் இருப்பதால்*

[3]**''கர்மங்களைச் செய்து கொண்டிருப்பவனாகவே நூறாண்டுகள் வாழ விரும்பவும்''** என்று ஆத்ம-ஜ்ஞாநியின் மனித-ஆயுள் மொத்தமும் கர்மங்களில் மாறாமல் உபயோகப் படுத்தச் சொல்லியுள்ளது; ஆகையால், கர்மத்தால்தான் பலன் என்று தெரிகிறது; வித்யையோ, கர்மத்தின் அங்கமாகும் என்பதாகத் தெரிகிறது. *(எது கட்டாயம் கடைசி வரை செய்ய வேண்டுமோ, அதுதான் முக்யம்; எப்போதாவது செய்வது அங்கமாகலாம்; ஆகையால், கர்மம் ப்ரதானம்; வித்யை அங்கம்)*



**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்கிறோம் -

## 423.அதிகோபதேஶாத் து பாதராயணஸ்ய ஏவம் தத்தர்ஶநாத்(3-4-8)

*[ஜீவனை விட] வேறானதை [ப்ரஹ்மத்தை] உபதேஶிப்பதால் இப்படியே [வித்யையினால் பலன் வருவதாகவே] வ்யாஸருடைய [கருத்தாகும்]. அதை வேதத்தில் காண்பதால்*

तुशब्दात् पक्षो व्यावृत्तः। विद्यात एव पुरुषार्थः, कुतः? **अधिकोपदेशात्।** कर्मसु कर्तुर्जीवात् हेयप्रत्यनीकानवधिकातिशयासंख्येयकल्याणगुणाकरत्वेनाधिकस्यार्थान्तरभूतस्य परस्य ब्रह्मणो वेद्यतयोपदेशात् भगवतो बादरायणस्य विद्यातः पुरुषार्थः (फलम्) इत्येवमेव मतम्।

लिङ्गानि तिष्ठन्तु; वेद्यतयोपदेशस्तु तावत् कर्तुः प्रत्यगात्मनोऽधिकस्यैव। कथम्?

**तद्दर्शनात्** - प्रत्यगात्मन्यशुद्धे शुद्धेऽप्यसम्भावनीयानन्तगुणाकरस्य वेद्यस्य निरस्त-निखिलहेयगन्धस्य स्वसङ्कल्पकृतजगदुदयविभवलयलीलस्य सर्वज्ञस्य सर्वशक्तेर्वाङ्मनसापरि-च्छेद्यानन्दस्य जीवाधिपस्य कृत्स्नप्रशासितुः परस्य ब्रह्मणो वेदनोपदेशवाक्येषु दर्शनात्,

- **"अपहतपाप्मा विजरो विमृत्युर्विशोको विजिघत्सोऽपिपासः सत्यकामः सत्य-सङ्कल्पः"** (छा.8-1-5)[1],
- **"तदैक्षत बहु स्यां प्रजायेयेति तत्तेजोऽसृजत"** (छा.6-2-3)[2]
- **"यः सर्वज्ञः सर्ववित्"**(मु.1-1-9)[3],

---

துஶப்தாத் பக்ஷோ வ்யாவ்ருத்த:। வித்யாத ஏவ புருஷார்த:, குத:? *அதிகோபதேஶாத்।* கர்மஸு கர்துர்ஜீவாத் ஹேயத்யநீகாநவதிகாதிஶயா-ஸங்க்யேயகல்யாணகுணாகரத்வேந அதிகஸ்ய அர்தாந்தரபூதஸ்ய பரஸ்ய ப்ரஹ்மண: வேத்யதயா உபதேஶாத் பகவதோ பாதராயணஸ்ய வித்யாத: புருஷார்த: (பலம்) இத்யேவமேவ மதம்।

லிங்காநி திஷ்டந்து, வேத்யதயா உபதேஶஸ்து தாவத் கர்து: ப்ரத்ய-காத்மநோऽதிகஸ்யைவ। கதம்?

*தத்தர்ஶநாத்* - ப்ரத்யகாத்மநி அஶுத்தே ஶுத்தேऽபி அஸம்பாவநீயா-நந்தகுணாகரஸ்ய வேத்யஸ்ய நிரஸ்தநிகிலஹேயகந்தஸ்ய ஸ்வஸங்கல்-பக்ருதஜகதுதயவிபவலயலீலஸ்ய ஸர்வஜ்ஞஸ்ய ஸர்வஶக்தே: வாங்மநஸா-பரிச்சேத்யாநந்தஸ்ய ஜீவாதிபஸ்ய க்ருத்ஸ்நப்ரஶாஸிது: பரஸ்ய ப்ரஹ்மண: வேதநோபதேஶவாக்யேஷு தர்ஶநாத்,

- *"அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர்விஶோகோ விஜிகத்ஸோऽபிபாஸ: ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப:"*(சா.8-1-5)[1],
- *"ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி தத்தேஜோऽஸ்ருஜத"*(சா.6-2-3)[2]
- *"ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித்"*(மு.1-1-9)[3],

**'து'** என்ற சொல்லால் பூர்வபக்ஷம் களையப் பட்டது.

வித்யையினால்தான் புருஷார்த்தம் (பலன்) ஆகும்;

ஏன்?

**அதிகோபதேஶாத்** (வேறானதை உபதேஶிப்பதால்) - கர்மங்களில் கர்த்தாவாக இருக்கும் ஜீவனை விட ப்ரஹ்மம் அதிகமாகிறது - வேறானதாக ஆகிறது; ஏனெனில், விடத்தக்க இழிகுணங்களுக்கு எதிர்த்தட்டாய், உயர்வற உயர்ந்த எண்ணற்ற கல்யாணகுணங்களுக்கு இருப்பிடமாய் ஆவதால்; அப்படி வேறான ப்ரஹ்மத்தையே அறிய வேண்டியதாக உபதேஶிப்பதால்,

**ஏவம்** (இப்படியே) - இப்படி வித்யையினால் பலன் வரும் என்பதாகவே

**பாதராயணஸ்ய -** வ்யாஸருடைய (கருத்தாகும்).

லிங்கங்கள் இருக்கட்டும்; அறியப்பட வேண்டியதாக உபதேஶமோ, கர்த்தாவான ஜீவனை விட வேறான ஒன்றைப் பற்றியதாகவே உள்ளது; எப்படி?

**தத்தர்ஶநாத்** (அதை வேதத்தில் காண்பதால்) -

- அஶுத்தமாகவும் ஶுத்தமாகவும் ஆகும் ஜீவனிடத்தில் வர முடியாததான எண்ணற்ற கல்யாணகுணங்களுக்கு இருப்பிடமாய்,
- உபாஸனம் செய்யப்பட வேண்டியவனாய்,
- விடத்தக்க எல்லா இழிகுணமும் துளியும் அற்றவனாய்
- தன் ஸங்கல்பத்தாலேயே உலகின் ஆக்கமும் நிலையும் அழிவும் லீலையாகச் செய்பவனாய்,
- ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியாய்,
- வாக்கினாலும் மனத்தாலும் அளவிட முடியாத ஆனந்தம் உடையவனாய்
- ஜீவனை விட வேறானவனாய்,
- எல்லாவற்றையும் அடக்கி ஆள்பவனாய்

இருக்கும் பரப்ரஹ்மத்தையே, ஜ்ஞாந-உபதேஶம் செய்யும் வாக்யங்களில் காண்பதால்;

- [1]**''கர்மம் அற்றவன், மூப்பு அற்றவன், மரணம் அற்றவன், சோகம் அற்றவன், பசி அற்றவன்,, தாகம் அற்றவன், ஸத்யகாமன், ஸத்யஸங்கல்பன்''**
- [2]**''அந்த ப்ரஹ்மம் ஆனது பலவாக ஆவேன்' 'பிறப்பேன்' என்று பார்த்தது; அது தேஜஸ்ஸினைப் படைத்தது.''**
- [3]**''யார் எல்லாம் அறிபவனோ, எல்லாம் அடைபவனோ''**

- **"पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च"** (श्वे.6-8)[1],
- **"स एको ब्रह्मण आनन्दः"** (तै.1.आन.9)[2],
- **"यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह। आनन्दं ब्रह्मणो विद्वान् न बिभेति कुतश्चनेति"** (तै.1.आन.5)[3],
- **"एष सर्वेश्वर एष भूताधिपतिरेष भूतपाल एष सेतुर्विधरणः"** (बृ.6-4-22)[4],
- **"स कारणं करणाधिपाधिपो न चास्य कश्चिज्जनिता न चाधिपः"** (श्वे.6-9)[5],
- **"एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठतः (एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि द्यावापृथिव्यौ विधृते तिष्ठतः)"** (बृ.5-8-9)[6],
- **"भीषाऽस्माद्वातः पवते। भीषोदेति सूर्यः। भीषाऽस्मादग्निश्चेन्द्रश्च। मृत्युर्धावति पञ्चमः"** (तै.1.आन.9)[7] इत्यादिषु।

तस्मात् वेदनोपदेशशब्देषु कर्तुः प्रत्यगात्मनः खद्योतकल्पस्याविद्यादिहेयसम्बन्धयोग्यस्य गन्धोऽपि नास्तीति परमपुरुषविषयाया विद्यायास्तत्प्राप्तिरूपममृतत्वं तत्रतत्र श्रूयमाणं फलमिति विद्यातः पुरुषार्थ इति सुष्ठूक्तम्॥८॥

लिङ्गान्यपि निरस्यन्ते-

---

- *"பராऽஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ருயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச"* (ஶ்வே.6-8)[1],
- *"ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த:"* (தை.1.ஆந.9)[2],
- *"யதோ வாசோ நிவர்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ। ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் ந பிபேதி குதஶ்சநேதி"* (தை.1.ஆந.5)[3],
- *"ஏஷ ஸர்வேஶ்வர ஏஷ பூதாதிபதிரேஷ பூதபால ஏஷ ஸேதுர்விதரண:"* (ப்ரு.6-4-22)[4],
- *"ஸ காரணம் கரணாதிபாதிபோ ந சாஸ்ய கஶ்சிஜ்ஜநிதா ந சாதிப:"* (ஶ்.6-9)[5],
- *"ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்கி ஸூர்யாசந்த்ரமஸௌ வித்ருதௌ திஷ்டத:" (ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்கி த்யாவாப்ருதிவ்யௌ வித்ருதே திஷ்டத:)* (ப்ரு.5-8-9)[6],
- *"பீஷாऽஸ்மாத்வாத: பவதே பீஷோதேதி ஸூர்ய:। பீஷாऽஸ்மாதக்நிஶ்சேந்த்ரஶ்ச ம்ருத்யுர்தாவதி பஞ்சம:"* (தை.1.ஆந.9)[7] இத்யாதிஷு।

தஸ்மாத் வேதநோபதேஶஶப்தேஷு கர்து: ப்ரத்யகாத்மந: கத்யோதகல்பஸ்ய அவித்யாதிஹேயஸம்பந்தயோக்யஸ்ய கந்தோऽபி நாஸ்தீதி பரமபுருஷவிஷயாயா: வித்யாயா: தத்ப்ராப்திரூபம் அம்ருதத்வம் தத்ர தத்ர ஶ்ரூயமாணம் பலமிதி வித்யாத: புருஷார்த இதி ஸுஷ்டூக்தம்।।8।।

லிங்காந்யபி நிரஸ்யந்தே -

- [1]**''இவனது இயற்கையான உயர்ந்த பலவிதமான ஶக்தியும், ஜ்ஞாநம், வலிமை ஆகியவற்றுடன் கூட( உலகங்களைப் படைத்தல், காத்தல், அழித்-தல், மோக்ஷம் அளித்தல் முதலிய) செயலும் ஓதப்படுகிறது''.**
- [2]**''அது ப்ரஹ்மத்தின் ஒரு ஆனந்தம் ஆகும்''** *(மனுஷ்யனின் முழு ஆநந்தத்திலி-ருந்து ஆரம்பித்து நூறு நூறு மடங்காகக் கணக்கு பண்ணி வேதம் சொல்கிறது; இந்த்ரனது ஆனந்தத்தை விட நூறு மடங்கு ப்ருஹஸ்பதியின் அனந்தம் ஆகும்; ப்ருஹஸ்பதியின் ஆனந்தத்தை விட நூறு மடங்கு ப்ரஹ்- மத்தின் ஒரு ஆனந்தம் ஆகும் என்று சொல்கிறது; பிறகு, ப்ரஹ்மத்தின் ஆனந்தம் உண்மையில் அளவற்றது என்றும் சொல்கிறது; வேதத்தாலும் கணக்கிட முடியாத அளவு ஆனந்தம் ப்ரஹ்மத்துக்கு உள்ளது என்கிறது)*
- [3]**''வாக்குகள் மனதுடன் கூட எதை (இறுதிவரை) அடைய முடியாமல் திரும்-புமோ, ப்ரஹ்மத்தின் அந்த (அளவற்ற) ஆனந்தத்தை அறிபவன், எதிலி-ருந்தும் பயப்பட மாட்டான் (ஸம்ஸார-பயம் இருக்காது.)''**
- [4]**''இந்த ப்ரஹ்மம் ஆனவன், எல்லாவற்றையும் ஆள்பவன்; இவன் பொருள்-களின் உரிமையாளன்; இவன் பொருள்களைக் காப்பவன்; இவன் தரிக்கும் அணை ஆனவன்''.**
- [5]**''காரணமான இவன் இந்த்ரியங்களை ஆளும் ஜீவனை ஆள்பவன்; இவ-னுக்கு தந்தையும் யாரும் கிடையாது; தலைவனும் கிடையாது''.**
- [6]**''கார்கியே இந்த அக்ஷர-ப்ரஹ்மத்தின் ஸங்கல்ப-கட்டளையில்தான் ஸூர்ய-சந்த்ரர்கள் தரிக்கப்பட்டு நிற்கின்றனர்; (கார்கியே, இந்த அக்ஷர-ப்ரஹ்மத்-தின் கட்டளையில்தான், விண்ணும் மண்ணும் தரிக்கப்பட்டு நிற்கின்றன'').**
- [7]**''இவனிடமிருந்து பயத்தால் காற்று வீசுகிறது; பயத்தால் ஸூர்யன் உதிக்-கிறான்; இவனிடமிருந்து பயத்தால் அக்னியும் இந்த்ரனும், ஐந்தாவதாக யமனும் விரைகின்றனர். (செய்கின்றனர்)''**

முதலியவற்றில் (காண்கிறது).

ஆகையால், மின்மினிப் பூச்சி போன்றவனாய், அவித்யை முதலிய விடத்தக்க இழிகுணத் தொடர்புக்கு ஏற்றவனாய் இருக்கும் கர்த்தாவான ஜீவாத்மாவுக்கு, ஜ்ஞாநத்தை உபதேஶம் செய்யும் வாக்யங்களில் துளியும் தொடர்பில்லை; ஆகை-யால், பரமபுருஷனைப் பற்றிய வித்யைக்கு பலனாக, அவனை அடைதல் ஆகிற அம்ருதத் தன்மை ஆங்காங்கே ஓதப்பட்டுள்ளது என்பதால், வித்யையால்தான் பலன் வரும் என்பது நன்கு நிலை நிற்கும்படியாக சொல்லப்பட்டது.



பூர்வபக்ஷத்தில் சொன்ன லிங்கங்களும் (காரணங்களும்) மறுக்கப் படு-கின்றன -

## ४२७.तुल्यं तु दर्शनम् (३-४-९)

यदुक्तम् - ब्रह्मविदां कर्मानुष्ठानदर्शनात् विद्या कर्माङ्गम् इति, तन्न। विद्याया अनङ्गत्वेऽपि **तुल्यं दर्शनम्**; ब्रह्मविदां कर्मानुष्ठानदर्शनमनैकान्तिकमित्यर्थः, अननुष्ठानस्यापि दर्शनात्। दृश्यते हि ब्रह्मविदां कर्मत्यागः, ''**एतद्ध स्म वै तद्विद्वांस आहुः ऋषयः कावषेयाः, किमर्था वयमध्येष्यामहे किमर्था वयं यक्ष्यामहे**''(ऐ.आर.3-2-6)[1] इत्यादौ। अतो ब्रह्मविदां कर्मत्यागदर्शनान्न विद्या कर्माङ्गम्॥

कथमिदमुपपद्यते ब्रह्मविदं कर्मानुष्ठानमननुष्ठानञ्च॥ फलाभिसन्धिरहितस्य यज्ञादिकर्मणो ब्रह्मविद्याङ्गत्वात् तथाविधस्य कर्मणोऽनुष्ठानदर्शनमुपपद्यते वक्ष्यति; च, ''**सर्वापेक्षा च यज्ञादिश्रुतेरश्ववत्**'' (ब्र.सू.3-4-26) इति। फलार्थस्य तस्यैव यज्ञादेः कर्मणो मोक्षैकफलब्रह्मविद्याविरोधित्वात् तस्याननुष्ठानदर्शनमुपपन्नतरम्। विद्यायाः कर्माङ्गत्वे कर्मत्यागः कथमपि नोपपद्यते॥९॥

यदुक्तम् - श्रुत्यैव विद्यायाः कर्माङ्गत्वमवगम्यते इति, तत्राह -

## 427.துல்யம் து தர்ஶநம் (3-4-9)

யதுக்தம் - ப்ரஹ்மவிதாம் கர்மாநுஷ்டாநதர்ஶநாத் வித்யா கர்மாங்கம் இதி, தந்ந। வித்யாயா: அநங்கத்வே஽பி துல்யம் தர்ஶநம், ப்ரஹ்மவிதாம் கர்மாநுஷ்டாநதர்ஶநம் அநைகாந்திகமித்யர்த:, அநநுஷ்டாநஸ்யாபி தர்ஶநாத்। த்ருஶ்யதே ஹி ப்ரஹ்மவிதாம் கர்மத்யாக:, *''ஏதத்த ஸ்ம வை தத்வித்வாம்ஸ ஆஹு: ரிஷய: காவஷேயா:, கிமர்தா வயமத்யேஷ்யாமஹே? கிமர்தா வயம் யக்ஷ்யாமஹே''*(ஐ.ஆர.3-2-6)[1] இத்யாதௌ। அத: ப்ரஹ்மவிதாம் கர்மத்யாகதர்ஶநாத் ந வித்யா கர்மாங்கம்।।

கதமிதமுபபத்யதே - ப்ரஹ்மவிதாம் கர்மாநுஷ்டாநம் அநநுஷ்டாநஞ்ச। பலாபிஸந்திரஹிதஸ்ய யஜ்ஞாதிகர்மண: ப்ரஹ்மவித்யாங்கத்வாத் ததாவிதஸ்ய கர்மண: அநுஷ்டாநதர்ஶநமுபபத்யதே; வக்ஷ்யதி ச, *''ஸர்வாபேக்ஷா ச யஜ்ஞாதிஶ்ருதேரஶ்வவத்''*(ப்ர.ஸூ.3-4-26) இதி। பலார்தஸ்ய தஸ்யைவ யஜ்ஞாதே: கர்மண: மோக்ஷைகபலப்ரஹ்மவித்யாவிரோதித்வாத் தஸ்யாநநுஷ்டாநதர்ஶநம் உபபந்நதரம்। வித்யாயா: கர்மாங்கத்வே கர்மத்யாக: கதமபி நோபபத்யதே।। 9 ।।

யதுக்தம் - ஶ்ருத்யைவ வித்யாயா: கர்மாங்கத்வமவகம்யதே இதி; தத்ராஹ -

## 427.துல்யம் து தர்ஶநம்(3-4-9)

*காண்பதோ, சமமாக உள்ளது.*

(பூர்வபக்ஷத்தில்) 'ப்ரஹ்மஜ்ஞாநிகளும் கர்ம-அனுஷ்டானம் செய்வதைக் காண்பதால், வித்யையானது கர்மத்துக்கு அங்கமாகும்' - என்று சொன்னது எதுவோ, அது அல்ல; வித்யையானது கர்மத்துக்கு அங்கமாக ஆகாவிட்டாலும், (அது-போன்ற ஒன்றைக்) காண்பது ஸமமாக உள்ளது; ப்ரஹ்மஜ்ஞாநிகள் கர்ம-அனுஷ்-டானம் செய்வதைக் காண்பது என்பது, இல்லாமலும் ஆகிறது என்று அர்த்தம்; ஏனெனில் அவர்கள் கர்ம-அனுஷ்டானம் செய்யாததையும் காண்பது உள்ளது;

[1]**''ப்ரஹ்மஜ்ஞாநம் உடைய காவஷேயர் முனிவர்கள், சொன்னார்கள், - ''என்ன பலன் பெறப்போகி- றவராக (என்ன பலனுக்காக) நாம் ஓதுவோம்? என்ன பலன் பெறப்போகிறவராக நாம் யாகம் செய்வோம்?''** முதலியவற்றில் ப்ரஹ்மஜ்ஞாநிகள் கர்மத்தைச் செய்யாமல் விடுவதையும் காண்கிறதுதானே! ஆகையால், ப்ரஹ்மஜ்ஞாநிகள் கர்மத்தை விடுவதையும் காண்பதால், வித்யையா-னது கர்மத்துக்கு அங்கம் ஆகாது.

**கேள்வி -** ப்ரஹ்மஜ்ஞாநிகள் கர்ம-அனுஷ்டானம் செய்கின்றனர் என்பதும், செய்யவில்லை என்பதும் (இரண்டுமாக) இது எப்படி சரியாகும்?

**பதில் -** பலனில் எண்ணம் இல்லாமல் வரும் யாகம் முதலிய கர்மம் ஆனது, ப்ரஹ்மவித்யைக்கு அங்கமாவதால், அப்படிப்பட்ட கர்மத்தை அனுஷ்டானம் செய்-வதைக் காண்பது சரியாகும்; **''ஸர்வாபேக்ஷா ச யஜ்ஞாதிஶ்ருதே: அஶ்வவத்''** (யஜ்ஞம் முதலிய வேதவாக்யங்களில் சொல்வதால், எல்லா கர்மங்களையும் அபே-க்ஷித்தே ப்ரஹ்மவித்யை ஆகும்; குதிரை போல) என்று ஸூத்ரத்தில் தாமே சொல்-லவும் போகிறார்.

பலனின் பொருட்டு ஆகும் அதே யாகம் முதலிய கர்மமோ, மோக்ஷம் மட்-டும் பலனாகக் கொண்ட ப்ரஹ்மவித்யைக்கு விரோதி ஆகும்; எனவே, அதைச் செய்யாமல் இருப்பதைக் காண்பதும் மிகவும் சரியாகும்.

(பூர்வபக்ஷ முறையில்) வித்யையானது, கர்மத்துக்கு அங்கம் என்றால், கர்-மத்தை விடுதல் என்பது, எந்த விதத்தாலும் சரியாகாது. ✍*(ஏனெனில் அங்கத்தை விட்டாலும், முக்யமான அங்கியை விட முடியாது).*✍



**கேள்வி -** வித்யையானது கர்மத்துக்கு அங்கம் என்பது ஶ்ருதியினாலேயே தெரிகிறது, என்று (பூர்வபக்ஷத்தில்) சொன்னது எதுவோ,

**பதில் -** அதற்கு பதில் சொல்கிறார் -

## ४२८.असार्वत्रिकी (३-४-१०)

न सर्वविद्याविषयेयं श्रुतिः; अपि तूद्गीथविद्याविषयैव, **"यदेव विद्यया करोति"** (छा.1-1-10)[1] इति यच्छब्दस्यानिर्धारितविशेषस्य, **"उद्गीथमुपासीत"** (छा.1-1-1)[2] इति प्रस्तुतोद्गीथ-विशेषनिष्ठत्वात्। न हि, यत् करोति तत् विद्ययेति सम्बध्यते। यदेव विद्यया करोति, तदेव वीर्यवत्तरमिति विद्यया क्रियमाणं यच्छब्देन निर्दिश्य, तस्य हि वीर्यवत्तरत्वमुच्यते॥१०॥

यच्चेदमुक्तम् - **"तं विद्याकर्मणी समन्वारभेते"** (बृ.6-4-3)[3] इति विद्याकर्मणोः साहित्यदर्शनात् विद्या कर्माङ्गम् इति तत्राह -

## ४२९.विभागः शतवत् (३-४-११)

**"तं विद्याकर्मणी समन्वारभेते"** (बृ.6-4-3)[4] इत्यत्र उक्तेन न्यायेन विद्याकर्मणो-भिन्नफलत्वात् विद्या स्वस्मै फलाय समन्वारभते, कर्म च स्वस्मै फलायेति **विभागो**

---

## 428.அஸார்வத்ரிகீ (3-4-10)

ந ஸர்வவித்யாவிஷயா இயம் ஶ்ருதி:, அபி து உத்கீதவித்யா-விஷயைவ, *"யதேவ வித்யயா கரோதி"*(சா.1-1-10)[1] இதி யச்சப்தஸ்ய அநிர்-தாரிதவிஶேஷஸ்ய, *"உத்கீதமுபாஸீத"*(சா.1-1-1)[2] இதி ப்ரஸ்துதோத்கீத-விஶேஷநிஷ்டத்வாத்। ந ஹி, யத் கரோதி தத் வித்யயேதி ஸம்பத்யதே। யதேவ வித்யயா கரோதி, ததேவ வீர்யவத்தரம் இதி வித்யயா க்ரியமா-ணம் யச்சப்தேந நிர்திஶ்ய, தஸ்ய ஹி வீர்யவத்தரத்வமுச்யதே।। 10 ।।

யச்சேதமுக்தம் - *"தம் வித்யாகர்மணீ ஸமந்வாரபேதே"*(ப்ரு.6-4-3)[3] இதி வித்யாகர்மணோ: ஸாஹித்யதர்ஶநாத் வித்யா கர்மாங்கம் இதி; தத்ராஹ -

## 429.விபாக: ஶதவத்(3-4-11)

*"தம் வித்யாகர்மணீ ஸமந்வாரபேதே"*(ப்ரு.6-4-3)[4] இத்யத்ர உக்தேந ந்யாயேந வித்யாகர்மணோ: பிந்நபலத்வாத் வித்யா ஸ்வஸ்மை பலாய ஸமந்வாரபதே; கர்ம ச ஸ்வஸ்மை பலாயேதி விபாகோ த்ரஷ்டவ்ய:।

**428.அஸார்வத்ரிகீ(3-4-10)**
*எல்லா வித்யையையும் பற்றியது அல்ல*

இந்த ஶ்ருதி ஆனது, எல்லா வித்யையையும் பற்றியது அல்ல; மாறாக உத்கீதவித்யையை மட்டுமே பற்றியது! [1]**''எதனை(எந்த யாகத்தை) வித்யையால் செய்கிறானோ''** என்பதில், 'எது' என்கிற சொல்லானது, தீர்மானம் செய்யப்படாத ஒரு விஶேஷத்தை பற்றியதாக இருக்கிறது; அது, [2]**''உத்கீதத்தை உபாஸநம் செய்யவும்''** என்று முன்பு ஆரம்பித்து சொல்லப்பட்டு வரும் உத்கீத-வித்யையுடன் கூடியதைப் பற்றியது ஆகும்.

''எதனைச் செய்கிறானோ, அதனை வித்யையால் செய்யவும்' என்று சேர்க்கப் படவில்லை; ''எதனை வித்யையால் செய்கிறானோ, அதுவே அதிக வீர்யம் உடையதாக ஆகும்'' என்று வித்யையால் செய்யப்படுவதை (வித்யையுடன் கூடிய யாகத்தை) 'எதனை' என்று சொல்லால் குறிப்பிட்டு, அது அதிக வீர்யம் உடையதாகும் என்று சொல்லப்படுகிறது.

*(''எதனை (எந்த யாகத்தை) வித்யையால் செய்கிறானோ'' என்று வேத-வாக்யம்; இது எந்த யாகத்தைக் குறிப்பிடுகிறது என்பது ப்ரகரணத்தால் புரியும்; இந்த வாக்யம், உத்கீத-வித்யை பற்றி சொல்லும் இடத்தில் உள்ளது; எனவே, 'எதனை' என்பது உத்கீத-வித்யையுடன் கூடிய யாகத்தையே குறிக்கும்; எனவே, எல்லா வித்யையும் யாகத்துக்கு அங்கம் ஆகாது.*

*உண்மையில் இங்கு சொன்ன உத்கீத-வித்யை கூட யாகத்துக்கு அங்கம் அல்ல என்று முன்பே சொல்லியாயிற்று..*

*இங்கு, ஶ்ருதி என்னும் ப்ரமாணத்தை பூர்வபக்ஷம் சொல்லிற்று; ஆனால், இங்கு ஶ்ருதி வராது; ''வித்யையால் யாகத்தை செய்யவும்'' என்று சொன்னால், ஶ்ருதி ப்ரமாணமாக வரும்; இங்கு அப்படி சொல்லவில்லை; ''எதனை வித்யையால் செய்கிறானோ'' என்று உள்ளது; இது அனுவாதவாக்யம் ஆகும்; 'யாகத்தில் உத்கீத-வித்யையை செய்க'' என்று ஆரம்பத்தில் சொன்னதை திரும்பிச் சொல்லி, அதற்கு பலனை சொல்கிறது; எனவே, இங்கு 'ஶ்ருதி' என்னும் ப்ரமாணம் வராது.)*



**கேள்வி** - (பூர்வபக்ஷத்தில்) [3]**''அவனிடம் வித்யையும் கர்மமும் சேர்ந்துள்ளன''** என்பதாக வித்யையும் கர்மமும் சேர்ந்திருத்தலைக் காண்பதால், வித்யை கர்மத்துக்கு அங்கமாகும் என்று சொல்லப்பட்டது எதுவோ,

**பதில்** - அதற்கு பதில் சொல்கிறார் -

**429.விபாக: ஶதவத்(3-4-11)**
*பிரிவானது நூறு போல ஆகும்.*

**விபாக:** (பிரிவு) - [4]**''அவனிடம் வித்யையும் கர்மமும் சேர்ந்துள்ளன''** என்னுமிடத்து, வித்யையானது, தனதுடையதான பலனுக்காக சேர்கிறது, கர்மமும் தனதுடையதான பலனுக்காக சேர்கிறது என்று பிரிவு அறியப்பட வேண்டும்;

द्रष्टव्यः। **शतवत्** - यथा क्षेत्ररत्नविक्रयिणं शतद्वयमन्वेतीत्युक्ते, क्षेत्रार्थं शतम्, रत्नार्थं शतमिति विभागः प्रतीयते; तथेहापि॥११॥



## ४३०.अध्ययनमात्रवतः (३-४-१२)

यदुक्तम् - विद्यावतः कर्मविधानात् विद्या कर्माङ्गम् इति - नैतद्युक्तम्, **"वेदमधीत्य"** (छा.8-15-1)[1] इत्यध्ययनमात्रवतो विधानात्।

न चाध्ययनविधिरेवार्थबोधे प्रवर्तयति; आधानवत् अध्ययनस्याक्षरराशिग्रहणमात्रे पर्यवसानात्। गृहीतस्य च स्वाध्यायस्य फलवत्कर्मावबोधित्वदर्शनात् तन्निर्णयफले तदर्थविचारे पुरुषः स्वयमेव प्रवर्तते। ततः कर्मार्थी कर्मज्ञाने प्रवर्तते, मोक्षार्थी च ब्रह्मज्ञान इति न विद्या कर्माङ्गम्।

यद्यप्यध्ययनविधिरेवार्थावबोधे प्रवर्तयति, तथापि न विद्या कर्माङ्गम्; अर्थज्ञाना-

---

*ஶதவத்* - யதா க்ஷேத்ர-ரத்நவிக்ரயிணம் ஶதத்வயமந்வேதி இத்யுக்தே, க்ஷேத்ரார்தம் ஶதம், ரத்நார்தம் ஶதமிதி விபாக: ப்ரதீயதே - ததா இஹாபி।।11।।



## 430.அத்யயநமாத்ரவத:(3-4-12)

யதுக்தம் - வித்யாவத: கர்மவிதாநாத் வித்யா கர்மாங்கம் இதி; நைதத்யுக்தம், *"வேதமதீத்ய"*(சா.8-15-1)[1] இதி அத்யயநமாத்ரவதோ விதாநாத்।

ந ச அத்யயநவிதிரேவ அர்தபோதே ப்ரவர்தயதி; ஆதாநவத் அத்யயநஸ்ய அக்ஷரராஶிக்ரஹணமாத்ரே பர்யவஸாநாத்। க்ருஹீதஸ்ய ச ஸ்வாத்யாயஸ்ய பலவத்கர்மாவபோதித்வதர்ஶநாத் தந்நிர்ணயபலே ததர்தவிசாரே புருஷ: ஸ்வயமேவ ப்ரவர்ததே। தத: கர்மார்தீ கர்மஜ்ஞாநே ப்ரவர்ததே, மோக்ஷார்தீ ச ப்ரஹ்மஜ்ஞாநே இதி, ந வித்யா கர்மாங்கம்।

யத்யபி அத்யயநவிதிரேவ அர்தாவபோதே ப்ரவர்தயதி, ததாபி ந வித்யா கர்மாங்கம்; அர்தஜ்ஞாநாதர்தாந்தரத்வாத் வித்யாயா:। யதா

ஏனெனில், முன் சொன்ன முறைப்படி வித்யையும், கர்மமும் வெவ்வேறு பலன்களை உடையவை.

**ஶதவத்** (நூறு போல) - 'வயலும் ரத்னமும் விற்பவனிடம் இரண்டு நூறு சேர்கிறது' என்று சொன்னால், வயலுக்காக நூறு, ரத்னத்துக்காக நூறு என்று பிரிவு எப்படி தெரிகிறதோ, அப்படியே இங்கும்.



## 430.அத்யயனமாத்ரவத:(3-4-12)

*அத்யயனம் மட்டும் உடையவனுக்கு [கர்மம் விதிக்கப் படுகிறது].*

(பூர்வபக்ஷத்தில்) வித்யையை உடையவனுக்கு கர்மம் செய்யும்படி விதித்திருப்பதால், வித்யையானது கர்மத்தின் அங்கமாகும் என்று சொன்னது எதுவோ, அது சரியல்ல; ஏனெனில், **''வேதத்தை அத்யயனம் செய்து (... தர்மகர்மங்கள் செய்துகொண்டு)''** என்று அத்யயனம் மட்டும் உடையவனுக்குத்தான் கர்மத்தை விதித்துள்ளது.

**பூர்வபக்ஷம் -** 'அத்யயனம் பற்றிய விதியே, அர்த்தம் அறிவதில் தூண்டும். *(வேத-அத்யயனம் செய்க' என்னும் கட்டளைக்கு அத்யயனம் செய்து அர்த்தம் அறிக என்று கருத்து; அர்த்தத்தை அறிதல்தான் வித்யை; எனவே, வித்யை உடையவனுக்குத் தான் கர்மத்தை விதிக்கிறது)*

**ஸித்தாந்தம் -** அது கிடையாது; ஏனெனில், ஆதானம் போல, அத்யயனமும் அக்ஷர-ஸமூஹத்தை அறிவதில் மட்டுமே நிறைவுறும்.

*(யாகம் என்பது, வைதிகமான அக்னியில்தான் செய்ய வேண்டும்; அதற்காக முதலில் ஆதானம் எனும் கர்மம் மூலம், வைதிக-அக்னியை சம்பாதித்துக் கொள்ள வேண்டும்; ''அக்னிகளை ஆதானம் செய்க'' என்று அந்த விதி உள்ளது; யாகம் செய்வது பற்றி இந்த வாக்யம் கூறவில்லை; ஆதானம் செய்ய வேண்டும் என்பதுடன் இந்த வாக்யத்தின் கருத்து நிறைவு-பெறும்.*

*அதுபோல, ''வேதம் அத்யயனம் செய்யப் படவேண்டும்'' என்கிற விதிக்கு அத்யயனம் மூலம் வேத-வாக்யங்களை (எழுத்துகளை) தெரிந்து கொள்ள வேண்டும் என்று மட்டும்தான் கருத்து; பின் அதற்கு அர்த்தத்தை தெரிந்துகொள்ள வேண்டும் என்பதை இந்த வாக்யம் சொல்லாது).*

மனிதனானவன், அத்யயனம் மூலம் அறியப்பட்ட தன் வேதஶாகையானது, பலன்களை உடைய செயல்களை அறிவிப்பதைக் காண்கிறான்; அதனால், அந்த வேதத்தின் அர்த்தத்தை விசாரம் செய்வதில் தானாகவே முயல்கிறான்; அந்த விசாரம் ஆனது, அந்த அர்த்தத்தை நிர்ணயித்து அறியும் பலனையுடையதாகும்; ஆகையால், கர்மத்தை வேண்டுபவன் கர்மவிசாரம் செய்கிறான்; மோக்ஷம் வேண்டுபவன் ப்ரஹ்மவிசாரம் செய்கிறான்.

ஆகையால், வித்யையானது கர்மத்துக்கு அங்கம் அல்ல.

அத்யயன-விதியே அர்த்தத்தை அறிவதில் ஈடுபடுத்தும் என்று வைத்துக் கொண்டாலும் கூட வித்யையானது, கர்மத்தின் அங்கம் ஆகாது; ஏனெனில்,

दर्थान्तरत्वात् विद्यायाः। यथा ज्योतिष्टोमादिकर्मस्वरूपविज्ञानात् फलसाधनभूतं कर्मानुष्ठानमर्थान्तरम्; तथाऽर्थज्ञानरूपाद्ब्रह्मस्वरूपविज्ञानादर्थान्तरमेव ध्यानोपासनादिशब्दवाच्या पुरुषार्थसाधनभूता विद्येति न तस्याः कर्मसम्बन्धगन्धो विद्यते॥ १२ ॥

## ४३१.नाविशेषात् (३-४-१३)

यच्चोक्तम् - **''कुर्वन्नेवेह कर्माणि''**(ई.2)[1] इति आत्मविदं ज्ञानात् व्यावर्त्य यावज्जीवं कर्मानुष्ठाने नियमयतीति - तन्नोपपद्यते; **अविशेषात्।** न ह्ययं नियमः फलसाधनभूतस्वतन्त्रकर्मविषय इति विशेषहेतुरस्ति; विद्याङ्गभूतकर्मविषयतयाऽप्युपपत्तेः। **''कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः''**(गी.1-20)[2] इति च, विदुषस्त्वाप्रयाणादुपासनस्यानुवर्तमानत्वात्॥ १३॥

एवमर्थस्वाभाव्येन चोद्यं परिहृत्य, **''कुर्वन्नेवेह कर्माणि''**(ई.2)[3] इत्यस्य वाक्यस्यार्थमाह-

## ४३२.स्तुतयेऽनुमतिर्वा (३-४-१४)

**वाशब्दोऽवधारणार्थः। ''ईशावास्यमिदं सर्वम्''**(ई.2)[4] इति विद्याप्रकरणात्

---

ஜ்யோதிஷ்டோமாதிகர்மஸ்வரூபவிஜ்ஞாநாத் பலஸாதநபூதம் கர்மாநுஷ்டாநம் அர்தாந்தரம், ததா அர்தஜ்ஞாநரூபாத் ப்ரஹ்மஸ்வரூபவிஜ்ஞாநாத் அர்தாந்தரமேவ த்யாநோபாஸநாதிஶப்தவாச்யா புருஷார்தஸாதநபூதா வித்யேதி ந தஸ்யா: கர்மஸம்பந்தகந்தோ வித்யதே।। 12 ।।

## 431.நாऽவிஶேஷாத்(3-4-13)

யச்சோக்தம் - *''குர்வந்நேவேஹ கர்மாணி''*(ஈ.2)[1] இதி ஆத்மவிதம் ஜ்ஞாநாத் வ்யாவர்த்ய யாவஜ்ஜீவம் கர்மாநுஷ்டாநே நியமயதீதி - தந்நோபபத்யதே; *அவிஶேஷாத்।* ந ஹி அயம் நியம: பலஸாதநபூதஸ்வதந்த்ரகர்மவிஷய: இதி விஶேஷஹேதுரஸ்தி; வித்யாங்கபூதகர்மவிஷயதயாऽபி உபபத்தே:। *''கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய:''*(கீ.1-20)[2] இதி ச, விதுஷஸ்து ஆப்ரயாணாத் உபாஸநஸ்யாநுவர்தமாநத்வாத்।। 13 ।।

ஏவம் அர்தஸ்வாபாவ்யேந சோத்யம் பரிஹ்ருத்ய, *''குர்வந்நேவேஹ கர்மாணி''*(ஈ.2)[3] இத்யஸ்ய வாக்யஸ்யார்தமாஹ -

## 432.ஸ்துதயேऽநுமதிர்வா (3-4-14)

வா ஶப்த: அவதாரணார்த:। *''ஈஶாவாஸ்யமிதம் ஸர்வம்''*(ஈ.2)[4] இதி

வித்யை என்பது, அர்த்த-ஜ்ஞாநத்தை விட வேறாகும்; (உ.ம்) ஸோமயாகம் முதலிய கர்ம-ஸ்வரூபத்தை அறிதலை விட பலனுக்கு உபாயமான் அந்த கர்மத்தை அனுஷ்டானம் செய்தல் என்பது வேறானது; அது எப்படியோ, அப்படியே அர்த்த-ஜ்ஞாநம் ஆகிற ப்ரஹ்ம-ஸ்வரூப-ஜ்ஞாநத்தை விட பலனுக்கு உபாயமான வித்யை என்பது வேறானது; அது த்யானம், உபாஸனம் முதலிய சொல்லால் சொல்லப் படுவது; அதற்கு கர்மத்தின் (அங்கமாகும்) தொடர்பு துளியும் கிடையாது.



**431.ந அவிஶேஷாத்(3-4-13)**

*விஶேஷம் இல்லாதபடியால், அப்படியல்ல.*

(பூர்வபக்ஷத்தில்) [1]**''இங்கு கர்மங்களைச் செய்துகொண்டே''** என்று ஆத்ம-ஜ்ஞாநியை ஜ்ஞாநத்திலிருந்து மாற்றி, வாழ்வு முடியும் வரை கர்ம-அனுஷ்டானத்-தில் கட்டாயப் படுத்துகிறது என்று சொன்னது எதுவோ, அது சரியில்லை; ஏனெனில், விஶேஷம் எதுவும் இல்லை; இந்த நியமம் ஆனது, பலனுக்கு உபாயமான தனித்த கர்மத்தைப் பற்றியது என்பதில் விஶேஷ-காரணம் எதுவும் இல்லை; ஏனெனில், வித்யைக்கு அங்கமான கர்மத்தைப் பற்றியதாகவும் சரியாகலாம்.

[2]**''ஜனகர் முதலியவர் கர்மத்தாலேயே ஸித்தி அடைந்தனர்''** என்பதும், உபாஸனம் செய்பவனுக்கு இறுதிமரணம் வரை உபாஸனம் தொடர்ந்திருக்கும் என்பதால் (அந்த உபாஸனத்துக்கு அங்கமாக கர்மமும் இருக்கும் என்பதால்) சரியாகும்.



இப்படி, (உபாஸனம் ஆகிற) பொருளின் தன்மையைக் கொண்டு, கேள்விக-ளுக்கு பதில் அளித்து, பரிஹாரம் செய்தபின், [3]**''இங்கு கர்மங்களைச் செய்து கொண்டே (நூறாண்டு வாழ்க)''** என்பதற்கு சரியான பொருளைச் சொல்கிறார் -

**432.ஸ்துதயே அநுமதி: வா(3-4-14)**

*[வித்யையைப்] புகழ்வதன் பொருட்டு அனுமதியே ஆகும்.*

**'வா'** என்ற சொல்லானது, 'அதுதான்' எனும் பொருளில் ஆகும்.

[4]**''இது எல்லாம் ஈஶ்வரனால் பரவப் பட்டது''** என்று வித்யையை ஆரம்-பித்துச் சொல்லும் இடம் இது; அதனால்,

विद्यास्तुतये सर्वदा कर्मानुष्ठानानुमतिरियम्। विद्यामाहात्म्यात् सर्वदा कर्म कुर्वन्नपि न लिप्यते कर्मभिरिति हि विद्या स्तुता भवति। वाक्यशेषश्चैवमेव दर्शयति, **''एवं त्वयि नान्यथेतोऽस्ति न कर्म लिप्यते नरे''**(ई.2)[1] इति। अतो न कर्माङ्गं विद्या॥१४॥

## ४३३.कामकारेण चैके (३-४-१५)

अपि चैवमेके शाखिनः **कामकारेण** ब्रह्मविद्यानिष्ठस्य गार्हस्थ्यत्यागमधीयते, **''किं प्रजया करिष्यामो येषां नोऽयमात्माऽयं लोकः''**(बृ.6-4-22)[2] इति। विदुषो विरक्तस्य कामकारेण गार्हस्थ्यकर्मत्यागं ब्रुवदिदं वचनं ब्रह्मविद्यायाः कर्मानङ्गत्वं दर्शयति। यज्ञादिकर्माङ्गत्वे हि विद्यायाः, विद्यानिष्ठस्य कामकारेण गार्हस्थ्यत्यागो न सम्भवति। अतो न विद्या कर्माङ्गम्॥ १५ ॥

## ४३४.उपमर्दं च (३-४-१६)

पुण्यापुण्यरूपस्य समस्तसांसारिकदुःखमूलस्य कर्मणो ब्रह्मविद्ययोपमर्दं च प्रतिवेदा-

வித்யாப்ரகரணாத் வித்யாஸ்துதயே ஸர்வதா கர்மாநுஷ்டாநாநுமதிரியம். வித்யாமாஹாத்ம்யாத் ஸர்வதா கர்ம குர்வந்நபி ந லிப்யதே கர்மபி: இதி ஹி வித்யா ஸ்துதா பவதி। வாக்யஶேஷஶ்சைவமேவ தர்ஶயதி, *''ஏவம் த்வயி நாந்யதேதோऽஸ்தி ந கர்ம லிப்யதே நரே''*(ஈ.2)[1] இதி। அத: ந கர்மாங்கம் வித்யா।। 14 ।।

## 433.காமகாரேண சைகே(3-4-15)

அபி ச ஏவம் ஏகே ஶாகிந: *காமகாரேண* ப்ரஹ்மவித்யாநிஷ்டஸ்ய கார்ஹஸ்த்யத்யாகமதீயதே, *''கிம் ப்ரஜயா கரிஷ்யாமோ யேஷாம் நோऽயமாத்மாऽயம் லோக:''*(ப்ரு.6-4-22)[2] இதி। விதுஷோ விரக்தஸ்ய காமகாரேண கார்ஹஸ்த்யகர்மத்யாகம் ப்ருவத் இதம் வசநம் ப்ரஹ்மவித்யாயா: கர்மாநங்கத்வம் தர்ஶயதி। யஜ்ஞாதிகர்மாங்கத்வே ஹி வித்யாயா:, வித்யாநிஷ்டஸ்ய காமகாரேண கார்ஹஸ்த்யத்யாகோ ந ஸம்பவதி। அத: ந வித்யா கர்மாங்கம்।।15।।

## 434.உபமர்தம் ச(3-4-16)

புண்யாபுண்யரூபஸ்ய ஸமஸ்தஸாம்ஸாரிகது:கமூலஸ்ய கர்மண:

**ஸ்துதயே** - வித்யையைப் புகழ்வதற்காக,

**அநுமதி:** - எப்போதும் கர்ம-அனுஷ்டானம் செய்யலாம் எனும் அனுமதியாகும் இது;

எப்போதும் கர்மம் செய்பவன் ஆனாலும், வித்யையின் பெருமையால், கர்மங்களால் ஒட்டப் படுவதில்லை என்றுதானே வித்யை புகழப் பட்டதாக ஆகிறது; வாக்யத்தின் மிகுதியும் இப்படியே காண்பிக்கிறது - [1]**''பற்றில்லாத உன்னிடம் கர்மம் ஒட்டுவதில்லை என்கிற இதை விட வேறுவிதம் கிடையாது''** என்று.

ஆகையால், வித்யையானது, கர்மத்துக்கு அங்கம் அல்ல.



## 433.காமகாரேண ச ஏகே(3-4-15)

*விருப்பப்படி [க்ருஹஸ்த-கர்மங்களை விடுவதை] சிலர் [ஓதுகின்றனர்].*

**ஏகே ச** - மேலும் சில ஶாகையினர்,

**காமகாரேண** (விருப்பப்படி) - ப்ரஹ்மவித்யையைச் செய்பவன், விருப்பப்படி இப்படி க்ருஹஸ்த-தர்மங்களை விடுவதை ஓதுகின்றனர் - [2]**''எந்த நமக்கு பரமாத்மா இவ்வுலகப்பொருள் போல நேராக தெரிகிறானோ, அந்த நாம் புத்ரனால் என்ன செய்யப்போகிறோம்?''** - என்று..

ப்ரஹ்மஜ்ஞானியாய் பற்றற்றவனாய் இருப்பவன், (ஸந்யாஸம் ஏற்பவனாய்) விருப்பப்படி க்ருஹதர்மமான கர்மத்தை விடுவதை இந்த வாக்யம் சொல்கிறது; இது ப்ரஹ்மவித்யை ஆனது, கர்மத்துக்கு அங்கமல்ல என்பதைக் காண்பிக்கிறது; வித்யையானது, யஜ்ஞம் முதலிய கர்மத்துக்கு அங்கமாக ஆகுமானால், வித்யையை செய்பவன் விருப்பப்படி நடப்பதன் மூலம் க்ருஹஸ்த-கர்மத்தை விடுவது வராது.

ஆகையால், வித்யையானது கர்மத்துக்கு அங்கம் அல்ல. (அங்கியை விட முடியாது; ஆனால், கர்மத்தை விடுவதால், அது அங்கி அல்ல என்று தெரிகிறது)



## 434.உபமர்தம் ச(3-4-16)

*[ப்ரஹ்மவித்யையால் கர்மம்] அழிவதையும் [ஓதுகின்றனர்].*

ஸம்ஸாரத்தில் வரும் எல்லா துக்கத்துக்கும் காரணமான புண்ய-பாபம் ஆகிற கர்மமானது, ப்ரஹ்மவித்யையால் அழிவதையும் ஒவ்வொரு வேதாந்தத்திலும் ஓது-

न्तमधीयते, "**भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः। क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परवरे**" (मु.2-2-8)[1] इत्यादिकम्। तत् विद्यायाः कर्माङ्गत्वे न सङ्गच्छते॥१६॥

## ४३५.ऊर्ध्वरेतस्सु च शब्दे हि (३-४-१७)

ऊर्ध्वरेतस्सु आश्रमेषु ब्रह्मविद्यादर्शनात् तेष्वग्निहोत्रदर्शपूर्णमासादिकर्माभावाच्च न विद्या कर्माङ्गम्।

ननूर्ध्वरेतसा आश्रमा न सन्त्येव, "**यावज्जीवमग्निहोत्रं जुहोति**" (आ.श्रौ.सू.3-14-8)[2] इत्यादिनाऽग्निहोत्रदर्शपूर्णमासादीनां यावज्जीवाधिकारश्रुतेः; श्रुतिविरुद्धानां स्मृतीनां चाप्रामाण्यात्। अत आह - **शब्दे हि** इति। वैदिक एव हि शब्दे ते दृश्यन्ते,

- "**त्रयो धर्मस्कन्धाः**" (छा.2-23-1)[3],
- "**ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते**" (छा.5-10-1)[4],
- "**एतमेव प्रव्राजिनो लोकमिच्छन्तः प्रव्रजन्ति**" (बृ.6-4-22)[5] इत्यादौ।

यावज्जीवश्रुतिस्त्वविरक्तविषया॥१७॥

---

ப்ரஹ்மவித்யயா உபமர்தம் ச ப்ரதிவேதாந்தமதீயதே, "*பித்யதே ஹ்ருதய-க்ரந்திஸ்சித்யந்தே ஸர்வஸம்ஸயா:। க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பரவரே*" (மு.2-2-8)[1] இத்யாதிகம்। தத் வித்யாயா: கர்மாங்கத்வே ந ஸங்கச்சதே।।16।।

## 435.ஊர்த்வரேதஸ்ஸு ச ஶப்தே ஹி(3-4-17)

ஊர்த்வரேதஸ்ஸு ஆஶ்ரமேஷு ப்ரஹ்மவித்யாதர்ஶநாத் தேஷு அக்நிஹோத்ர-தர்ஶபூர்ணமாஸாதிகர்மாபாவாச்ச ந வித்யா கர்மாங்கம்।

நநு ஊர்த்வரேதஸ: ஆஶ்ரமா: ந ஸந்த்யேவ, "*யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம் ஜுஹோதி*" (ஆ.ஶ்ரௌ.ஸூ.3-14-8)[2] இத்யாதிநா அக்நிஹோத்ர-தர்ஶபூர்ணமாஸாதீநாம் யாவஜ்ஜீவாதிகாரஶ்ருதே:; ஶ்ருதிவிருத்தாநாம் ஸ்ம்ருதீநாம் ச அப்ராமாண்யாத்। அத ஆஹ - *ஶப்தே ஹி* இதி। வைதிக ஏவ ஹி ஶப்தே தே த்ருஶ்யந்தே,

- "*த்ரயோ தர்மஸ்கந்தா:*" (சா.2-23-1)[3],
- "*யே சேமேऽரண்யே ஶ்ரத்தா தப இத்யுபாஸதே*" (சா.5-10-1)[4],
- "*ஏதமேவ ப்ரவ்ராஜிநோ லோகமிச்சந்த: ப்ரவ்ரஜந்தி*" (ப்ரு.6-4-22)[5] இத்யாதௌ।

யாவஜ்ஜீவஶ்ருதிஸ்து அவிரக்தவிஷயா।। 17 ।।

கின்றனர் - [1]**''உயர்ந்தவரை விட உயர்ந்த அந்த ப்ரஹ்மம் காணப்படும்போது, ஹ்ருதயத்தின் முடிச்சு (காமம் முதலியது) அவிழும்; எல்லா ஸந்தேஹங்களும் பிளந்துவிடும்; இவனது கர்மங்கள் அழியும்''** முதலியதாக.

வித்யையானது, கர்மத்துக்கு அங்கமானால், அது சரியாகாது. *(அங்கமானது, அங்கிக்கு உதவுமே தவிர அழிக்காது; எனவே, கர்மத்தை அழிக்கும் வித்யையானது, கர்மத்துக்கு அங்கம் ஆகாது)*



## 435.ஊர்த்வரேதஸ்ஸு ச ஶப்தே ஹி(3-4-17)

*ஸந்யாஸிகளுக்கும் [வித்யை காண்பதால்];*
*வேதவாக்யத்தில் [அவர்கள் தெரிவதால்]*

ஸந்யாஸிகளின் ஆஶ்ரமத்தில் இருப்பவர்களுக்கும் ப்ரஹ்மவித்யை காண்கிறது, அவர்களிடம் அக்னிஹோத்ரம், தர்ஶபூர்ணமாஸம் முதலிய கர்மங்கள் கிடையாது; அதனாலும், வித்யையானது, கர்மத்துக்கு அங்கம் ஆகாது.

**கேள்வி -** ஸந்யாஸிகள் எனும் ஆஶ்ரமங்கள் கிடையவே கிடையாது; ஏனெனில், [2]**''உயிர் வாழ்வது வரை அக்னிஹோத்ரம் செய்க''** முதலியதால் அக்னிஹோத்ரம், தர்ஶபூர்ணமாஸம் முதலியவற்றுக்கு உயிர் வாழ்வது வரை முழுவதும் தகுதியாக வேதம் சொல்கிறது; வேதத்துக்கு முரண்பட்டவையான ஸ்ம்ருதிகள் சரியான சான்றாகாது என்பதாலும் ஆகும்.

**பதில் -** அதற்காக பதில் சொல்கிறார் - **ஶப்தே ஹி** என்று.

**ஶப்தே ஹி -** வேதவாக்யத்திலேயே

- [3]**''தர்மத்தின் பாதைகள் (தர்மம் அனுஷ்டிக்க ஏற்ற ஆஶ்ரமங்கள்) மூன்று''**
- [4]**''யாரிவர்கள் காட்டில் இப்படி ஶ்ரத்தையை முன்னிட்டு ப்ரஹ்ம-உபாஸனம் செய்கிறார்களோ'' (காட்டில் என்று சொல்வதால், க்ருஹஸ்தன் அல்ல; ஸந்யாஸி என்ற அர்த்தம் கிடைக்கும்)**
- [5]**இந்த ப்ரஹ்மத்தை விரும்புபவராய் ஸந்யாஸிகள் ஸந்யாஸம் ஏற்கின்றனர்''**

முதலியதில் அந்த ஆஶ்ரமங்கள் காணப்படுகின்றன.

'உயிர் வாழ்வது வரை (அக்னிஹோத்ரம் செய்யச்)' சொன்ன வேதவாக்யமானது, வைராக்யம் அடையாதவனைப் பற்றியது.

*(மனைவி, மக்கள், பொருள் ஆகிய விஷயத்தில் தீவிர வைராக்யம் இருந்தால் ஸந்யாஸி ஆகலாம்; அது இல்லாதவர், க்ருஹஸ்த-ஆஶ்ரமத்தில் இருந்து கொண்டு கடைசிவரை அக்னிஹோத்ரம் செய்ய வேண்டும் என்று கருத்து).*



## ४३६.परामर्शं जैमिनिरचोदनाच्चापवदति हि (३-४-१८)

यदिदम् - **''त्रयो धर्मस्कन्धाः''**(छा.2-23-1)[1] इत्यादौ वैदिके शब्दे ऊर्ध्वरेतस आश्रमा दृश्यन्ते, अतस्ते सन्त्येवेति - नैतदुपपद्यते ; यतः **''त्रयो धर्मस्कन्धा''**(छा.2-23-1)[2] इत्यादिषु वाक्येषु तेषामाश्रमाणां **परामर्श**मात्रं क्रियते - अनुवादमात्रमित्यर्थः।

कुत एतत्? **अचोदनात्** अविधानादित्यर्थः। न ह्यत्र विधिशब्दः श्रूयते। **''त्रयो धर्मस्कन्धाः''** (छा.2-23-1)[3] इत्यादिना हि प्रकृतं प्रणवेन ब्रह्मोपासनं स्तूयते, **''ब्रह्मसंस्थोऽमृतत्वमेति''** (छा.2-23-1)[4] इत्युपसंहारात्। अतोऽन्यार्थमनुवादमात्रमत्र क्रियते तेषामाश्रमाणाम्। **''ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते''**(छा.5-10-1)[5] इति च देवयानविधिपरत्वात् तत्रापि नाश्रमान्तरविधिसम्भवः।

अपि चापवदति हि श्रुतिराश्रमान्तरम्, **''वीरहा वा एष देवानां योऽग्निमुद्वासयते''** (तै.सं.1-5-2)[6] इत्यादिका। अतः ऊर्ध्वरेतस आश्रमा न सन्तीति जैमिनिराचार्यो मन्यते॥१८॥



## 436.பராமர்ஶம் ஜைமிநிரசோதநாச்சாऽபவததி ஹி(3-4-18)

யதிதம் - *''த்ரயோ தர்மஸ்கந்தா:''*(சா.2-23-1)[1] இத்யாதௌ வைதிகே ஶப்தே ஊர்த்வரேதஸ ஆஶ்ரமா த்ருஶ்யந்தே, அத: தே ஸந்த்யேவேதி - நைததுபபத்யதே; யத: *'த்ரயோ தர்மஸ்கந்தா:'*(சா.2-23-1)[2] இத்யாதிஷு வாக்யேஷு தேஷாமாஶ்ரமாணாம் பராமர்ஶமாத்ரம் க்ரியதே - அநுவாதமாத்ரமித்யர்த:।

குத ஏதத்? *அசோதநாத்* - அவிதாநாதித்யர்த:। ந ஹி அத்ர விதிஶப்த: ஶ்ரூயதே, *'த்ரயோ தர்மஸ்கந்தா:'*(சா.2-23-1)[3] இத்யாதிநா ஹி ப்ரக்ருதம் ப்ரணவேந ப்ரஹ்மோபாஸநம் ஸ்தூயதே, *''ப்ரஹ்மஸம்ஸ்தோऽம்ருதத்வமேதி''*(சா.2-23-1)[4] இத்யுபஸம்ஹாராத்। அத: அந்யார்தம் அநுவாதமாத்ரமத்ர க்ரியதே தேஷாமாஶ்ரமாணாம்। *''யே சேமேऽரண்யே ஶ்ரத்தா தப இத்யுபாஸதே''* (சா.5-10-1)[5] இதி ச தேவயாநவிதிபரத்வாத் தத்ராபி ந ஆஶ்ரமாந்தரவிதிஸம்பவ:।

அபி ச *அபவததி ஹி* ஶ்ருதி: ஆஶ்ரமாந்தரம், *''வீரஹா வா ஏஷ தேவாநாம் யோऽக்நிமுத்வாஸயதே''*(தை.ஸம்.1-5-2)[6] இத்யாதிகா। அத: ஊர்த்வரேதஸ ஆஶ்ரமா ந ஸந்தீதி ஜைமிநிராசார்யோ மந்யதே।। 18 ।।



## 436.(பூ) பராமர்ஶம் ஜைமினி: அசோதநாத் ச அபவததி ஹி (3-4-18)

*விதிக்காததால், பிற ஆஶ்ரமங்களை அனுவாதம் செய்ததாக ஜைமினி கருதுகிறார்; பிற ஆஶ்ரமத்தை மறுப்பதாலும்;*

**பூர்வபக்ஷம்**

[1]**''தர்மத்தின் பாதைகள் மூன்று''** முதலிய வேத-வாக்யத்தில், ஸந்யாஸிகளான ஆஶ்ரமங்கள் காணப்படுகின்றன; ஆகையால் அவை உண்டுதான் - என்றது எதுவோ, அது சரியாகாது; ஏனெனில், [2]**''தர்மத்தின் பாதைகள் மூன்று''** முதலிய வாக்யங்களில் அந்த ஆஶ்ரமங்களின் பராமர்ஶம் மட்டுமே செய்யப் படுகிறது; அனுவாதம் மட்டுமே செய்யப்படுகிறது என்று அர்த்தம். *(வேறொரு புதிய விஷயத்தைச் சொல்வதற்காக முன் சொன்ன விஷயத்தை திருப்பிச் சொல்வதாகும்; அந்த பழைய விஷயத்தை - ஆஶ்ரமங்களைச் சொல்வதில் நோக்கில்லை).*

இது எதனால் ஏற்படும்?

**அசோதநாத் -** விதிக்காததால் என்று அர்த்தம்;

இங்கு கட்டளை இடும் சொல் எதுவும் வேதத்தில் சொல்லப்படவில்லை; ப்ரணவத்தைக் கொண்டு உபாஸனம் செய்தலானது சொல்லப்பட்டு வருகிறது; அது-தானே [3]**''தர்மத்தின் பாதைகள் மூன்று''** முதலியதன் மூலம் துதிக்கப் படுகிறது! ஏனெனில், [4]**''ப்ரஹ்ம-ஸம்ஸ்தன் (ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவன்) மோக்ஷம் அடைகிறான்''** என்றே முடிகிறது. ஆகையால் வேறொன்றின் பொருட்டு (ப்ரஹ்ம-உபாஸனத்தை புகழ்வதன் பொருட்டு அந்த ஆஶ்ரமங்களின் அனுவாதம் மட்டும் இங்கு செய்யப் படுகிறது.

[5]**''யாரிவர் காட்டில் ஶ்ரத்தையை முன்னிட்டு இப்படி தபஸ் உபாஸனம் செய்கிறாரோ''** என்பதும் தேவயான-மார்க்கத்தை விதிப்பதில் நோக்கமுடையது; எனவே அங்கும் பிற ஆஶ்ரமத்தை விதிப்பதாக ஆகாது.

*(யார் இப்படி உபாஸனம் செய்கிறாரோ, அவர் அர்ச்சிராதி வழியில் சென்று ப்ரஹ்மத்தை அடைவர் என்கிறது; இது அர்ச்சிராதி-வழியை சொல்ல வந்ததே தவிர ஆஶ்ரமங்களை சொல்லும் நோக்கத்தில் இல்லை)*

**அபவததி ஹி** - மேலும், [6]**''யார் அக்னியை விடுகிறானோ, அவன் தேவர்களின் வீரஹத்யை செய்தவன் ஆகிறான் (தேவர்களின் வீரமான அக்னியை கொன்றவன் ஆகிறான்)''** முதலியதாக வேதமானது, (க்ருஹஸ்த ஆஶ்ரமம் தவிர) பிற ஆஶ்ரமத்தை மறுக்கிறதும் கூட.

ஆகையால் ஸந்யாஸிகளான ஆஶ்ரமங்கள் கிடையாது என

**ஜைமினி: -** ஆசார்யர் ஜைமினி கருதுகிறார்.



## ४३२. अनुष्ठेयं बादरायणः साम्यश्रुतेः (३-४-१९)

गृहस्थाश्रमवत् आश्रमान्तरमप्यनुष्ठेयं भगवान् **बादरायणो** मन्यते।

कुतः? **साम्यश्रुतेः।** उपादेयतयाऽभिमतगृहस्थाश्रमसाम्यं हि तेषामप्याश्रमाणां श्रूयते। **"त्रयो धर्मस्कन्धाः"**(छा.2-23-1)[1] इत्यारभ्य ब्रह्मसंस्थस्तुत्यर्थतया सङ्कीर्तनं गृहस्थाश्रमस्येतरेषां च समानम्।

अथ गृहस्थाश्रमस्यानुवादः प्राप्तौ सत्यामेव सम्भवतीति तस्य प्राप्तिरवश्याभ्युपेत्येति मतम्, तत् इतरेषामपि समानमन्यत्राभिनिवेशात्।

न च गार्हस्थ्यधर्म एव, यज्ञोऽध्ययनं दानं तपो ब्रह्मचर्यम् इति सर्वैः शब्दैरभिधीयते, ब्रह्मचर्यतपसोर्गृहस्थस्यैव सम्भवादिति युक्तम्, **"त्रयो धर्मस्कन्धाः"**(छा.2-23-1)[2] इति त्रित्वेन सङ्गृह्य, **"प्रथमः...द्वितीयः...तृतीयः"**(छा.2-23-1)[3] इति विभागवचनानुपपत्तेः। अतः,

---

## 437. அநுஷ்டே்யம் பாதராயண: ஸாம்யஶ்ருதே: (3-4-19)

க்ருஹஸ்தாஶ்ரமவத் ஆஶ்ரமாந்தரமபி *அநுஷ்டே்யம்* பகவாந் *பாதராயணோ* மந்யதே।

குத:? *ஸாம்யஶ்ருதே:।* உபாதேயதயாऽபிமதக்ருஹஸ்தாஶ்ரமஸாம்யம் ஹி தேஷாமப்யாஶ்ரமாணாம் ஶ்ரூயதே। *"த்ரயோ தர்மஸ்கந்தா:"*(சா.2-23-1)[1] இத்யாரப்ய ப்ரஹ்மஸம்ஸ்தஸ்துத்யர்த்தயா ஸங்கீர்தநம், க்ருஹஸ்தாஶ்ரமஸ்ய இதரேஷாம் ச ஸமாநம்।

அத க்ருஹஸ்தாஶ்ரமஸ்யாநுவாத: ப்ராப்தௌ ஸத்யாமேவ ஸம்ப-வதீதி தஸ்ய ப்ராப்தி: அவஶ்யாப்யுபேத்யேதி மதம்; தத் இதரேஷாமபி ஸமாநம், அந்யத்ராபிநிவேஶாத்।

ந ச - கார்ஹஸ்த்யதர்ம ஏவ, யஜ்ஞோऽத்யயநம் தாநம் தபோ ப்ரஹ்-மசர்யம் இதி ஸர்வை: ஶப்தைரபிதீயதே, ப்ரஹ்மசர்யதபஸோ: க்ருஹ-ஸ்தஸ்யைவ ஸம்பவாத் இதி - யுக்தம்; *"த்ரயோ தர்மஸ்கந்தா:"*(சா.2-23-1)[2] இதி த்ரித்வேந ஸங்க்ருஹ்ய, *"ப்ரதம:.....த்விதீய:...த்ருதீய:"*(சா.2-23-1)[3] இதி விபாகவசநாநுபபத்தே:। அத:,

## 437.அநுஷ்டேயம் பாதராயண: ஸாம்யஶ்ருதே:(3-4-19)

*ஸமமாக ஆவதை வேதம் சொல்வதால் [ஸங்யாஸி ஆஶ்ரமதர்மமும்] அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியதாக வ்யாஸர் [கருதுகிறார்].*

**அநுஷ்டேயம் -** க்ருஹஸ்த ஆஶ்ரமம் போல பிற ஆஶ்ரமதர்மமும் அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியதாக

**பாதராயண: -** வ்யாஸர் கருதுகிறார்.

ஏன்?

**ஸாம்யஶ்ருதே:** (சமமாக ஆவதை வேதம் சொல்வதால்) - ஏற்றுக் கொள்ளப்பட வேண்டியதாக (நீ) கருதும் க்ருஹஸ்த ஆஶ்ரமத்துக்கு சமமான தன்மையே பிற ஆஶ்ரமங்களுக்கும் வேதத்தில் வேதத்தில் சொல்லப் படுகிறது; [1]**''தர்மத்தின் பாதைகள் மூன்று''** என்று ஆரம்பித்து, ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவனை புகழ்வதன் பொருட்டு சொல்லப்படுதல் என்பது க்ருஹஸ்த ஆஶ்ரமத்துக்கும் பிற ஆஶ்ரமங்களுக்கும் சமம் ஆகும்.

**கேள்வி -** க்ருஹஸ்த ஆஶ்ரமமானது முன்னரே ஒரு ப்ரமாணத்தால் தெரிந்திருந்தாலே இப்போது அதை அனுவாதம் செய்ய (திருப்பிச் சொல்ல) முடியும்; எனவே, அது ஒரு ப்ரமாணத்தால் முன்னரே தெரிந்ததாக கட்டாயம் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்.

**பதில் -** இப்படி கருத்தானால், அது, பிற ஆஶ்ரமங்களுக்கும் ஸமம் ஆகும்; ஏனெனில், (பிற ஆஶ்ரமங்களுக்கும் ப்ரமாணமாக) வேறொரு இடத்தில் பற்றுவது ஆவதால்.

✎(*வேறொரு உரை - க்ருஹஸ்த ஆஶ்ரமத்தை வேறிடத்தில் சொல்லாததால், இங்கே அனுவாதம் ஆக முடியாது; அதனால் இங்கேயே அது விதிக்கப்படுகிறது - என்று கேள்வி; அந்த கருத்தானால், பிற ஆஶ்ரமங்களுக்கும் சமம் ஆகும்; வேறிடத்தில் போவதை விட இங்கேயே விதிப்பதாகக் கொள்ளலாம் என்று பதில்.*)✎

**கேள்வி -** யஜ்ஞம், அத்யயனம், தானம் தபஸ், ப்ரஹ்மசர்யம் என்று எல்லா சொற்களாலும் இங்கு க்ருஹஸ்த தர்மம்தான் சொல்லப் படுகிறது; ஏனெனில், க்ருஹஸ்தனுக்கு மட்டுமே (இந்த) ப்ரஹ்மசர்யம் தபஸ் ஆகியவை வரும். ✎(*யாகம், தானம் என்று சொன்னதால் க்ருஹஸ்தனை சொன்னது தெரிகிறது; அவனுக்கும் அவனது ஆஶ்ரமத்துக்கு ஏற்ற அளவில் ப்ரஹ்மசர்யமும் தபஸ்ஸும் வரலாம்; இதெல்லாம் சேர்ந்து அவனுக்கு மட்டுமே வரும்*).✎

**பதில் -** இது சரியில்லை; ஏனெனில், [2]**''தர்மத்தின் பாதைகள் மூன்று''** என்று மூன்றாக எடுத்து, [3]**''ஒன்றாவது .... இரண்டாவது ..... மூன்றாவது ... ''** என்று பிரித்து சொல்கிறது; அது சரியாகாமல் போய்விடும்;. ஆகையால், -

१. "यज्ञोऽध्ययनं दानम्" इति गृहस्थाश्रम उच्यते। अध्ययनशब्दो वेदाभ्यासपरः।

२. तपश्शब्देन वैखानसपारिव्राज्ययोर्ग्रहणम्, उभयोः तपःप्रधानत्वात्। तपश्शब्दो हि कायक्लेशे रूढः; स च द्वयोरपि समानः।

३. ब्रह्मचारिधर्म एव ब्रह्मचर्यशब्देनाभिधीयते।

"**ब्रह्मसंस्थोऽमृतत्वमेति**"(छा.2-23-1)[1] इति परत्र श्रूयमाणो ब्रह्मसंस्थशब्दो यौगिकः सर्वाश्रमसाधारणः; सर्वेषामाश्रमिणां ब्रह्मसंस्थासम्भवात्। ब्रह्मणि संस्था - संस्थितिः ब्रह्मसंस्थत्वम्; तच्च सर्वेषां सम्भवत्येव। ब्रह्मनिष्ठाविकलाः केवलाश्रमिणः पुण्यलोकभाजः; तेष्वेव ब्रह्मनिष्ठोऽमृतत्वभाक् भवति।

तदेतत् विस्पष्टमुक्तं भगवता पराशरेण, "**प्राजापत्यं ब्राह्मणानाम्**" (वि.पु.1-6-34)[2] इत्यारभ्य, "**ब्राह्मं सन्न्यासिनां स्मृतम्**"(वि.पु.1-6-36)[3] इत्यन्तेन वर्णानामाश्रमाणां च केवलानां ब्रह्मलोकप्राप्त्यन्तं फलमभिधाय,

"**एकान्तिनः सदा ब्रह्मध्यायिनो योगिनो हि ये।**
**तेषां तत् परमं स्थानं यद्वै पश्यन्ति सूरयः॥**"(वि.पु.1-6-39)[4]

इति तेष्वेव ब्रह्मनिष्ठानां ब्रह्मप्राप्तिमभिदधता।

---

1. 'யஜ்ஞோऽத்யயநம் தாநம்' இதி க்ருஹஸ்தாஶ்ரம உச்யதே। அத்யயநஶப்தஃ வேதாப்யாஸபரஃ।

2. தப: ஶப்தேந வைகாநஸ-பாரிவ்ராஜ்யயோர்க்ரஹணம், உபயோ: தப:ப்ரதாநத்வாத்। தபஶ்ஶப்தோ ஹி காயக்லேஶே ரூட:, ஸ ச த்வயோரபி ஸமாந:।

3. ப்ரஹ்மசாரிதர்ம ஏவ ப்ரஹ்மசர்யஶப்தேநாபிதீயதே।

*"ப்ரஹ்மஸம்ஸ்தோऽம்ருதத்வமேதி"*(சா.2-23-1)[1] இதி பரத்ர ஶ்ரூயமாணோ ப்ரஹ்மஸம்ஸ்தஶப்தோ யௌகிக: ஸர்வாஶ்ரமஸாதாரண:, ஸர்வேஷாமாஶ்ரமிணாம் ப்ரஹ்மஸம்ஸ்தாஸம்பவாத்। ப்ரஹ்மணி ஸம்ஸ்தா - ஸம்ஸ்திதி: ப்ரஹ்மஸம்ஸ்தத்வம், தச்ச ஸர்வேஷாம் ஸம்பவத்யேவ। ப்ரஹ்மநிஷ்டாவிகலா: கேவலாஶ்ரமிண: புண்யலோகபாஜ:, தேஷ்வேவ ப்ரஹ்மநிஷ்ட: அம்ருதத்வபாக் பவதி।

ததேதத் விஸ்பஷ்டமுக்தம் பகவதா பராஶரேண, *"ப்ராஜாபத்யம் ப்ராஹ்மணாநாம்"*(வி.பு.1-6-34)[2] இத்யாரப்ய, *"ப்ராஹ்மம் ஸந்யாஸிநாம் ஸ்ம்ருதம்"* (வி.பு.1-6-36)[3] இத்யந்தேந வர்ணாநாம் ஆஶ்ரமாணாம் ச கேவலாநாம் ப்ரஹ்மலோகப்ராப்த்யந்தம் பலமபிதாய,

*"ஏகாந்திந: ஸதா ப்ரஹ்மத்யாயிநோ யோகிநோ ஹி யே।*
*தேஷாம் தத் பரமம் ஸ்தாநம் யத்வை பஶ்யந்தி ஸூரய:॥"* (வி.பு.1-6-39)[4]

இதி தேஷ்வேவ ப்ரஹ்மநிஷ்டாநாம் ப்ரஹ்மப்ராப்திமபிதததா।

1. ''யஜ்ஞம், அத்யயனம், தானம்'' என்று க்ருஹஸ்த ஆஶ்ரம தர்மம் சொல்லப் படுகிறது. அத்யயனம் என்ற சொல்லானது, வேத-அப்யாஸத்தை நோக்கில் உடையது. ✍*(ப்ரஹ்மசர்ய-ஆஶ்ரமத்தில் அத்யயனம் செய்த வேதத்தை க்ருஹஸ்த ஆஶ்ரமத்தில் ஓதிக்கொண்டு இருத்தல் என்று அர்த்தம்)*✍

2. தபஸ் என்ற சொல்லால், வானப்ரஸ்தமும் ஸந்யாஸமும் எடுத்துக் கொள்ளப் படுதல் ஆகும்; ஏனெனில், இரண்டுமே தபஸ்ஸினை முக்யமாகக் கொண்டது; 'தபஸ்' எனும் சொல்லானது உடலை வருத்துதல் எனும் பொருளில் இடுகுறிப் பெயராகும்; உடலை வருத்துதல் என்னுமது இரண்டு ஆஶ்ரமங்களிலும் சமமானது.

3. ப்ரஹ்மசாரி(சர்ய) என்ற சொல்லால் ப்ரஹ்மசாரி-தர்மம்தான் சொல்லப் படுகிறது.

பின்னர், [1]**''ப்ரஹ்மஸம்ஸ்தன் மோக்ஷம் அடைகிறான்''** என்று சொல்லப் படும் 'ப்ரஹ்மம்ஸம்ஸ்தன்' எனும் சொல்லானது, காரணப் பெயராகும்; இது எல்லா ஆஶ்ரமங்களுக்கும் பொதுவானது; ஏனெனில், எல்லா ஆஶ்ரமிகளுக்கும் ப்ரஹ்ம-ஸம்ஸ்தா என்பது வரும்; ப்ரஹ்மணி ஸம்ஸ்தா ப்ரஹ்மஸம்ஸ்தா (என்று ஸமாஸ-இலக்கணக் குறிப்பு); ப்ரஹ்மத்தில் நிலை நிற்பதுதான் ப்ரஹ்மஸம்ஸ்தா ஆகும்; அது எல்லாருக்கும் உண்டுதான்; ப்ரஹ்மத்தில் நிலைநிற்பது இல்லாமல், வெறும் ஆஶ்ரமதர்மத்தை மட்டும் உடையவர்கள் புண்யலோகத்தைப் பெறுவர்; அந்த ஆஶ்ரமதர்மம் உடையவர்களிலேயே ப்ரஹ்மத்தில் நிலை நிற்பவன் மோக்ஷம் அடைபவன் ஆவான். (ப்ரஹ்மத்தில் நிலைநிற்பது - உபாஸனம் செய்வது என்று அர்த்தம்).

(ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில்) [2]**''ப்ராஹ்மணர்களுக்கு (கச்யப)ப்ரஜாபதி-ஸ்தா-னம்''** என்று ஆரம்பித்து, [3]**''ஸந்யாஸிகளுக்கு நான்முகப்ரஹ்மாவின் ஸ்தானம் ஸ்ம்ருதியில் சொல்லப் பட்டது''** என்பது வரை வெறும் வர்ணங்களுக்கும் (ஜாதி-களுக்கும்) ஆஶ்ரமங்களுக்கும் நான்முகனது உலகை அடைதல் வரை பலன் உண்டு என்றார்; பின்னர், அவர்களிலேயே ப்ரஹ்மத்தில் நிலை உள்ளவர் பரப்ரஹ்மத்தை அடைவர் என்பதை, [4]**''ஏகாந்திகளாக எப்போதும் ப்ரஹ்மத்தை த்யானம் செய்ப-வரான யோகிகள் எவரோ, அவருக்கு நித்யஸூரிகள் எந்த ஸ்தானத்தை எப்போ-தும் காண்கின்றனரோ, அந்த உயர்ந்த இடம் (பரமபதம்) ஆகும்''** என்று சொன்-னார். இப்படி சொல்பவரான பராசர-பகவானால் இந்த விஷயம் மிகவும் தெளி-வாகச் சொல்லப்பட்டது.

अतो गृहस्थाश्रमतुल्याः ऊर्ध्वरेतस आश्रमा अपि दृश्यन्त इति तेऽप्यनुष्ठेयाः।

**''ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते''**(छा.1-2-8)[1] इति च अरण्ये इति तपःप्रधा-नाश्रमप्रास्यपेक्षत्वात् देवयानविधानस्य तत्रापि तत्प्राप्तिरङ्गीकरणीया॥ १९ ॥

परामर्शपक्षे विधानपक्षे च गृहस्थाश्रमतुल्यमेषामप्यनुष्ठेयत्वमित्युपपाद्य, विधिरेवाय-माश्रमाणां सर्वेषाम्, नानुवाद इत्युपपादयितुमाह -

## ४३८.विधिर्वा धारणवत् (३-४-२०)

वाशब्दोऽवधारणार्थः। विधिरेवायमाश्रमाणाम्।

धारणवत् - यथा दिष्टाग्निहोत्रे, **''अधस्तात् समिधं धारयन् अनुद्रवेत्; उपरि हि देवेभ्यो धारयति''**(आ.श्रौ.सू.?)[2] इत्यत्रानुवादसरूपादपि वाक्यात्, उपरिधारणस्या-प्राप्तत्वात् विधिराश्रीयते; तदुक्तं शेषलक्षणे, **''विधिस्तु धारणेऽपूर्वत्वात्''**(पू.मी.3-4-15)[3] इति, तथाऽत्राप्यप्राप्तत्वाद्विधिरेवाश्रयणीयः।

---

அத: க்ருஹஸ்தாஶ்ரமதுல்யா: ஊர்த்வரேதஸ ஆஶ்ரமா அபி த்ருஶ்யந்த இதி தேऽபி அநுஷ்டே்யா: *''யே சேமேऽரண்யே ஶ்ரத்தா தப இத்யுபாஸதே''*(சா. 5-10-1)[1] இதி ச அரண்யே இதி தப: ப்ரதாநாஶ்ரமப்ராப்த்யபேக்ஷத்வாத் தேவயாநவிதாநஸ்ய தத்ராபி தத்ப்ராப்திரங்கீகரணீயா।। 19 ।।

பராமர்ஶபக்ஷே விதாநபக்ஷே ச க்ருஹஸ்தாஶ்ரமதுல்யம் ஏஷாமப்-யநுஷ்டே்யத்வம் இத்யுபபாத்ய, விதிரேவாயமாஶ்ரமாணாம் ஸர்வேஷாம், ந அநுவாத இத்யுபபாதயிதுமாஹ -

## 438.விதிர்வா தாரணவத் (3-4-20)

வாஶப்த: அவதாரணார்த:। விதிரேவாயம் ஆஶ்ரமாணாம்।

தாரணவத் - யதா திஷ்டாக்நிஹோத்ரே, *''அதஸ்தாத் ஸமிதம் தாரயந் அநுத்ரவேத், உபரி ஹி தேவேப்யோ தாரயதி''*(ஆ.ஶ்ரௌ.ஸூ.?)[2] இத்யத்ர அநுவாதஸரூபாதபி வாக்யாத், உபரிதாரணஸ்ய அப்ராப்தத்வாத் விதி-ராஶ்ரீயதே, ததுக்தம் ஶேஷலக்ஷணே, *''விதிஸ்து தாரணேऽபூர்வத்-வாத்''*(பூ.மீ.ஸூ.3-4-15)[3] இதி; ததா அத்ராபி அப்ராப்தத்வாத், விதிரே-வாஶ்ரயணீய:।

ஆகையால், க்ருஹஸ்த ஆஶ்ரமம் போல ஸந்யாஸிகளான ஆஶ்ரமங்களும் காணப் படுகின்றன என்பதால், அவையும் அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியவையே.

[1] **''யாரிவர் காட்டில் இப்படி ஶ்ரத்தையை முன்னிட்டு தபஸ் உபாஸனம் செய்கிறாரோ''** என்று தேவயான-மார்க்கத்தை விதிப்பதும் கூட, 'காட்டில்' என்பதாக தபஸ்ஸினை முக்யமாகக் கொண்ட (வானப்ரஸ்த, ஸந்யாஸ) ஆஶ்ரமத்தை அறிவதை தேவையாகக் கொண்டதாக இருக்கிறது; அதனால், அங்கேயும் அந்த ஆஶ்ரமம் தெரிய வரும் என்பது ஏற்கப்பட வேண்டும்.



அனுவாதம் செய்கிறது எனும் கருத்திலும், விதிக்கிறது எனும் கருத்திலும் க்ரு-ஹஸ்த ஆஶ்ரமத்துக்கு ஸமமாக பிற ஆஶ்ரமங்களும் அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியவையே என விளக்கினார்; பின், இது எல்லா ஆஶ்ரமங்களையும் பற்றிய விதியேதான்; அனுவாதம் அல்ல என்று விளக்குவதற்காக சொல்கிறார் -

## 438.விதி: வா தாரணவத்(3-4-20)

*தாரணத்தில் போல விதிதான்.*

**'வா'** என்ற சொல் உறுதி எனும் பொருளில் ஆகும். (அதுதான் என்று அர்த்தம்)

**விதி: வா -** பிற ஆஶ்ரமங்களைப் பற்றிய விதிதான் இது.

**தாரணவத் -** தாரணத்தில் இருப்பது போல.

மரணமடைந்தவனின் அக்னிஹோத்ரத்தில், [2]**''ஸமித்தினை கீழே பிடித்துக்-கொண்டு செல்லுக; தேவர்களுக்குத் தானே மேலே பிடித்துக்கொள்வான்''** என்று உள்ளது; இங்கு, அனுவாதம் போலுள்ள வாக்யத்தாலும் கூட விதிப்பதாக ஏற்கப்-படுகிறது; ஏனெனில், 'மேலே பிடிப்பது' என்பது முன்னர் தெரிய வரவில்லை என்பதால்.

*✍(அக்னிஹோத்ரம் செய்தவன் மரணமானால், அவனுக்கு அக்னிஹோத்ர-முறைப்படி ஸம்ஸ்காரம்; அதில் அக்னிஹோத்ரம் செய்யும்போது, ஹவிஸ்ஸினை ஸ்ருக்கில் எடுத்துக்-கொண்டு ஹோமம் செய்யப் போகும்போது, ஸ்ருக்கின் கீழே ஸமித்தினை சேர்த்து பிடித்துக் கொண்டு போக வேண்டும்; இது பித்ருக்காக செய்வதில் விதியாக சாஸ்த்ரம் சொல்கிறது; அப்-போது சொல்கிறது, ''தேவர்களுக்காக செய்வதில்தானே மேலே சேர்த்து பிடித்துக்கொள்வான்!'' என்று; இங்கே தேவர்களுக்கான அக்நிஹோத்ரத்தில், மேல பிடித்துக் கொள்ள வேண்டும் என கட்டளையாக சொல்லவில்லை; ஏற்கனவே தெரிந்த விஷயம் போல சொல்கிறது; ஆனாலும், முன்னர் வேறு விதி இல்லாததால் இந்த விஷயம் தெரியாது; ஆகையால், இதையே விதியாக ஏற்க வேண்டும்)✍*

அது, (பூர்வமீமாம்ஸா மூன்றாவது அத்யாயமான) ஶேஷ-அத்யாயத்தில் சொல்லப்படுகிறது, [3]**''தாரணத்தில் விதியாகும்; முன்னர் தெரியாதபடியால்''** என்று; அங்கு எப்படியோ, அப்படியே இங்கும் முனர் தெரியாத விஷயம் ஆனபடியால், விதிப்பதாகவே ஏற்கப்பட வேண்டும்.

**"ब्रह्म चर्यं समाप्य गृही भवेत्। गृहाद्वनी भूत्वा प्रव्रजेत्। यदि वेतरथा, ब्रह्मचर्यादेव प्रव्रजेत्; गृहाद्वा; वनाद्वा। यदहरेव विरजेत्, तदहरेव प्रव्रजेत्"**(जाबा.4-1)[1] इति जाबालानामाश्रमविधिमसन्तमिव कृत्वा, एतेष्वन्यपरेष्वपि वाक्येष्वाश्रमप्राप्तिरवश्याश्रयणीयेत्युपपादितम्।

एवमाश्रमान्तरविधानात् ऋणश्रुतिर्यावज्जीवश्रुतिरपवादश्रुतिश्च, अविरक्तविषया एवेति वेदितव्याः। अन्याश्च, ब्रह्मविदः कर्मणामाप्रयाणावश्यकर्तव्यताविधायिन्यः श्रुतयः स्मृतयश्च स्वस्वाश्रमधर्मविषयाः।

अत ऊर्ध्वरेतस्सु च ब्रह्मविद्याविधानात् विद्यातः पुरुषार्थ इति सिद्धम्॥ २० ॥

इति पुरुषार्थाधिकरणम् ॥ १ ॥

---

*"ப்ரஹ்மசர்யம் ஸமாப்ய க்ருஹீ பவேத். க்ருஹாத்வநீ பூத்வா ப்ரவ்ரஜேத். யதி வேதரதா, ப்ரஹ்மசர்யாதேவ ப்ரவ்ரஜேத், க்ருஹாத்வா, வநாத்வா. யதஹரேவ விரஜேத், ததஹரேவ ப்ரவ்ரஜேத்"*(ஜாபா.4-1)[1] இதி ஜாபாலாநாமாஶ்ரமவிதிம் அஸந்தமிவ க்ருத்வா, ஏதேஷ்வந்யபரேஷ்வபி வாக்யேஷு ஆஶ்ரமப்ராப்தி: அவஶ்யாஶ்ரயணீயேத்யுபபாதிதம்.

ஏவம் ஆஶ்ரமாந்தரவிதாநாத் ருணஶ்ருதி:, யாவஜ்ஜீவஶ்ருதி: அபவாதஶ்ருதிஶ்ச, அவிரக்தவிஷயா ஏவேதி வேதிதவ்யா:. அந்யாஶ்ச, ப்ரஹ்மவித: கர்மணாம் ஆப்ரயாணாத் அவஶ்யகர்தவ்யதாவிதாயிந்ய: ஶ்ருதய: ஸ்ம்ருதயஶ்ச ஸ்வஸ்வாஶ்ரமதர்மவிஷயா:.

அத: ஊர்த்வரேதஸ்ஸு ச ப்ரஹ்மவித்யாவிதாநாத் வித்யாத: புருஷார்த இதி ஸித்தம்.. 20 ..

இதி புருஷார்தாதிகரணம் .. 1 ..

[1]**''ப்ரஹ்மசர்யத்தை முடித்து க்ருஹஸ்தன் ஆக வேண்டும்; க்ருஹஸ்த ஆஶ்ரமத்திலிருந்து வானப்ரஸ்தனாக இருந்துவிட்டு, ஸந்யாஸ ஆஶ்ரமம் ஏற்க வேண்டும்; அல்லது வேறு முறையில் ஆகலாம்; ப்ரஹ்மசர்யத்திலிருந்தே ஸந்யாஸம் ஏற்கலாம்; க்ருஹஸ்த ஆஶ்ரமத்திலிருந்தோ, வானப்ரஸ்த ஆஶ்ரமத்திலிருந்தோ ஏற்கலாம்; எந்த நாளில் வைராக்யம் வருகிறதோ, அந்த நாளிலேயே ஸந்யாஸம் ஏற்கவேண்டும்''** என்று ஜாபாலர்கள் சொன்ன ஆஶ்ரம-விதி உள்ளது; அதை இல்லாதது போல வைத்துக்கொண்டு, இது விளக்கப் பட்டது - இந்த முன் சொன்ன உபநிஷத்-வாக்யங்கள் வேறு கருத்தில் ஆனவையானாலும், ஆஶ்ரமங்கள் ப்ரமாணத்தால் தெரிவதாக கட்டாயம் ஏற்கப்பட வேண்டும் என்று.

இப்படியாக பிற ஆஶ்ரமங்களையும் விதித்திருப்பதால், ருணஶ்ருதி, யாவஜ்ஜீவஶ்ருதி, அபவாதஶ்ருதி ஆகியவை வைராக்யம் அடையாதாரைப் பற்றியவை என்று அறியப்பட வேண்டும்.

*✍(ருணஶ்ருதி - ''கடனாளியாகவே பிறக்கிறான் ... யஜ்ஞம் மூலம் தேவர்களின் கடனைத் தீர்க்க வேண்டும்'' எனும் வேதவாக்யம்.*

*யாவஜ்ஜீவஶ்ருதி - உயிர்வாழும் வரை அக்னிஹோத்ரம் செய்க'' எனும் வாக்யம்*

*அபவாதஶ்ருதி - யார் அக்னியை விடுகிறானோ, அவன் வீரஹத்யா செய்தவன் ஆகிறான'' எனும் வாக்யம்.*

*இந்த மூன்றுமே, வைராக்யம் வராமல், க்ருஹஸ்த ஆஶ்ரமத்திலேயே இருப்பவனுக்கு சொன்னவை; வைராக்யம் பெற்றவன், அக்னியையும் யஜ்ஞங்களையும் விட்டு ஸந்யாஸம் ஏற்கலாம்).✍*

ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவன் இறுதிமரணம் வரை கர்மங்களை கட்டாயம் செய்ய வேண்டும் என்று விதிக்கும் பிற வேத-வாக்யங்களும் ஸ்ம்ருதிகளும் தம்தமது ஆஶ்ரமதர்மங்களைப் பற்றியவை. (அவரவர் ப்ரஹ்மவித்யைக்கு அங்கமாக தம்தமது ஆஶ்ரமதர்மங்களை செய்ய வேண்டும்)

**ப்ரயோஜனம் (பலன்)**

ஆகையால், ஸந்யாஸிகளான ஆஶ்ரமங்களிலும் ப்ரஹ்மவித்யையை விதித்திருப்பதால், மோக்ஷ-பலன் ஆனது வித்யையினாலேயே வரும் என ஏற்பட்டது.

**புருஷார்த்தாதிகரணம் முற்றிற்று.**

# 110.ஸ்துதிமாத்ராதிகரணம்(3-4-2)

## முன் குறிப்பு

உத்கீத-உபாஸனம் பற்றி பல விசாரங்கள் முன்பு வந்துள்ளன; அதற்கு அடிப்படை-யாக ஒரு வாதம் - இது உபாஸனமா இல்லையா என்று.

விஷயம் - உபநிஷத்தில் **"இந்த உலகப்பொருட்களுக்கு பூமிதான் ரஸம்; பூமிக்கு ஜலம் ரஸம்; ஜலத்துக்கு ஓஷதிகள் ரஸம்; ஓஷதிகளுக்கு ஶரீரம் ரஸம்; ஶரீரத்-துக்கு வாக் ரஸம்;, வாக்குக்கு ரிக் ரஸம்; ரிக்குக்கு ஸாமம் ரஸம்; ஸாமத்துக்கு உத்கீதம் ரஸம்; இந்த உத்கீதம் என்பது ரஸங்களுக்கு எல்லாம் மிக ரஸமானது; உயர்ந்தது"** என்று வேதம் சொல்கிறது. இங்கு உத்கீதத்தை உயர்ந்த ரஸம் என்று சொன்னது, வெறும் புகழ்ச்சி மட்டுமா? அல்லது அப்படி ரஸமானதாக உத்கீதத்தை உபாஸனம் செய்ய வேண்டுமா? என்று விசாரம்.

**பூர்வபக்ஷம் -** இது ஸ்துதி மட்டுமே; யாகத்தினுடைய அங்கத்தை எடுத்துச் சொல்லி, அதில் மனிதனால் செய்ய முடியாத ஒரு விஷயத்தை சொன்னால், அது ஸ்துதிதான் (புகழ்ச்சிதான்) என்று ஆகும்; (உ.ம்) யாகத்தின் அங்கமான ஜுஹூவை எடுத்து சொல்லி, அதில், "பூமிதான் ஜுஹூ" என்று; இது அந்த ஜுஹூவைத் துதிக்கிறது என்பது மட்டுமே; அதுபோல யாகத்தின் அங்கமான உத்கீதத்தை சொல்லும்போது முதலில் ஏழு ரஸங்களை வரிசையாகச் சொல்லி, பின்னர் "உத்கீதம் எட்டாவது ரஸம்" என்று சொல்கிறது; இதுவும் உத்கீதத்தைத் துதிக்கிறது என்பது மட்டுமே.

**ஸித்தாந்தம் -** ஏற்கனவே தெரிந்த விஷயமாக இருந்தால் அதைச் சொல்லி துதிக்க முடியும்; உத்கீதம் உயர்ந்த ரஸமானது என்பது முன்னர் தெரியாத விஷயம் என்பதால், அதைச் சொல்லி துதிக்க முடியாது.

**கேள்வி -** தெரியாத விஷயத்தையும் தெரியப்படுத்தி துதிக்கலாமே! "பூமிதான் ஜுஹூ" என்று தெரியாத விஷயத்தைச் சொல்லி துதிப்பது போல ஆகலாம்.

**பதில் -** அங்கு கர்மபாகத்தில், ஜுஹூவைப் பற்றிய விதி ஒன்று அருகில் இருக்கிறது; அதனுடன் ஒரே வாக்யமாக ஆவதற்காக, ஜுஹூவைத் துதிக்கிறது எனலாம்; இங்கு உபநிஷத்தில், யாகத்தின் அங்கமான உத்கீதம் பற்றிய விதி இல்லை; மாறாக "உத்கீதத்தை உபாஸனம் செய்க" எனும் உபாஸனவிதியே உள்ளது; எனவே, இங்கு வேதமே சொல்லும் விதியை அனுசரித்து, இது உபாஸனத்துக்காக சொன்னது என்று அறியலாம்.

# ११०. स्तुतिमात्राधिकरणम् (३-४-२)

## ४३९.स्तुतिमात्रमुपादानादिति चेन्नापूर्वत्वात् (३-४-२१)

इदमिदानीं चिन्त्यते, **"स एष रसानां रसतमः परमः परार्ध्योऽष्टमः, यदु(य उ)द्गीथः"** (छा.1-1-3)[1] इत्येवंजातीयकानि वाक्यानि, क्रत्ववयवभूतोद्गीथादिस्तुतिमात्रपराणि, आहोस्वित् उद्गीथादिषु रसतमादिदृष्टिविधानार्थानीति।

अत्र प्रतिपादितमुपासनपरत्वमङ्गीकृत्योपासनस्य पुरुषार्थत्वेन क्रतुषूपादानानियम उक्तः।

किं युक्तम्? स्तुतिमात्रपराणीति। कुतः? उद्गीथाद्युपादानात्। क्रत्वङ्गभूतानि ह्युद्गीथादीन्युपादाय तेषां रसतमादित्वं प्रतिपादितम्। यथा जुह्वादीनां पृथिव्यादित्वं प्रतिपादयतो वचनस्य, **"इयमेव जुहूः स्वर्गो लोक आहवनीयः"** (?)[2] इत्यादिकस्य तत्स्तुतिमात्रपरत्वम्; तथेहापि।

तदिदमाशङ्कते **स्तुतिमात्रमुपादानादिति चेत्** इति। उद्गीथाद्युपादानात् तत्स्तुतिमात्रमेवैषां वाक्यानां विवक्षितमिति चेत् -

---

# 110. ஸ்துதிமாத்ராதிகரணம் (3-4-2)

## 439.ஸ்துதிமாத்ரமுபாதாநாதிதி சேந்நாபூர்வத்வாத் (3-4-21)

இதமிதாநீம் சிந்த்யதே, *"ஸ ஏஷ ரஸாநாம் ரஸதம: பரம: பரார்த்யோऽஷ்டம:, யது(ய உ)த்கீத:"*(சா.1-1-3)[1] இத்யேவம்ஜாதீயகாநி வாக்யாநி, க்ரத்வவயவபூதோத்கீதாதிஸ்துதிமாத்ரபராணி, ஆஹோஸ்வித் உத்கீதாதிஷு ரஸதமாதித்ருஷ்டிவிதாநார்தாநீதி।

அத்ர ப்ரதிபாதிதம் உபாஸநபரத்வமங்கீக்ருத்ய உபாஸநஸ்ய புருஷார்தத்வேந க்ரதுஷு உபாதாநாநியம உக்த:।

கிம் யுக்தம்? ஸ்துதிமாத்ரபராணீதி। குத:? உத்கீதாத்யுபாதாநாத்। க்ரத்வங்கபூதாநி ஹி உத்கீதாதீந்யுபாதாய தேஷாம் ரஸதமாதித்வம் ப்ரதிபாதிதம்। யதா ஜுஹ்வாதீநாம் ப்ருதிவ்யாதித்வம் ப்ரதிபாதயதோ வசநஸ்ய, *"இயமேவ ஜுஹூ: ஸ்வர்கோ லோக ஆஹவநீய:"*(?)[2] இத்யாதிகஸ்ய தத்ஸ்துதிமாத்ரபரத்வம்;

ததா இஹாபி। ததிதமாஶங்கதே *ஸ்துதிமாத்ரமுபாதாநாதிதி சேத்* இதி। உத்கீதாத்யுபாதாநாத் தஸ்ஸ்துதிமாத்ரமேவ ஏஷாம் வாக்யாநாம் விவக்ஷிதமிதி சேத் -

# 110.ஸ்துதிமாத்ராதிகரணம்(3-4-2)

## 439.ஸ்துதிமாத்ரம் உபாதாநாத் இதி சேத் ந அபூர்வத்வாத்(3-4-21)

*[அங்கமான உத்கீதத்தை] எடுத்து சொல்வதால், துதி மட்டுமே என்றால் அதல்ல; முன்பு தெரியாததால்.*

**விஷயவாக்யம்**

[1]**''எட்டாவது ரஸமான உத்கீதம் என்னும் இது எதுவோ, அதுவே ரஸங்க-ளுக்கு எல்லாம் மிக ரஸமானது; உயர்ந்தது; பரப்ரஹ்மத்தின் பாதி-இடத்துக்கு ஏற்றது''** என்று இவ்வகையைச் சேர்ந்த வாக்யங்கள்.

**ஸந்தேஹம்**

இந்த வகையைச் சேர்ந்த வாக்யங்கள் யாகத்தின் அங்கமான உத்கீதம் முத-லியவற்றை புகழ்வதில் மட்டும் நோக்குள்ளவையா? அல்லது, உத்கீதம் முதலிய-வற்றை மிகுந்த ரஸமாகக் காண வேண்டும் என்று (த்ருஷ்டியாகிற உபாஸனத்தை) விதிப்பதற்காக ஆனவையா? என்று இப்போது விசாரிக்கப் படுகிறது.

இந்த அதிகரணத்தில், இந்த வாக்யத்துக்கு உபாஸனத்தைச் சொல்வதில் நோக்கு என்று சொல்லப் படுவதை ஏற்றுக்கொண்டு (முன்னர் அநியமாதிகரணத்தில் 3-3-13) உபாஸனம் மனிதனின் பொருட்டு ஆனபடியால், யாகங்களில் செய்ய வேண்-டிய கட்டாயமில்லை என்று சொல்லப் பட்டது.

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்?

துதிப்பதில் மட்டுமே நோக்குள்ளவை என்பது.

ஏன்?

உத்கீதம் முதலியவற்றை எடுத்து சொல்வதால்;

யாகத்துக்கு அங்கமான உத்கீதம் முதலியவற்றை எடுத்து, அவற்றைக் குறித்து, அவை மிகமிக ரஸமானவை என்று சொல்லப் பட்டது; (உ.ம்) ஜுஹூ முதலி-யவற்றை பூமி முதலியதாக சொல்லும் வாக்யமான, [2]**''பூமியே ஜுஹூ:. ஸ்வர்க்க-லோகமே ஆஹவநீயம்''** முதலியது, அவற்றைத் துதிப்பதில் மட்டுமே நோக்குடை-யது; அது எப்படியோ, அப்படியே இங்கும்.

அதைக் கேள்வியாகக் கேட்டுக் கொள்கிறார் - **''ஸ்துதிமாத்ரம் உபாதாநாத் இதி சேத்''** என்று.

**உபாதாநாத்** - உத்கீதம் முதலியவற்றை எடுத்து (அதைக் குறித்து சொல்வதால்

**ஸ்துதிமாத்ரம்** - துதிப்பது மட்டுமே இந்த வாக்யங்களுக்கு கருத்து

**இதி சேத்** - என்று சொன்னால்,

अत्रोत्तरं - **नापूर्वत्वात्** इति। न स्तुतिमात्रत्वमुपपद्यते ; कुतः? **अपूर्वत्वात्** - अप्राप्तत्वात्। नह्युद्गीथादयो रसतमादितया प्रमाणान्तरेण प्रतिपन्नाः, येन तत्प्राशस्त्यबुद्ध्युत्पत्त्यर्थं रसतमादित्वेनानूद्येरन्।

न चोद्गीथादिविधिरत्र सन्निहितः ; येन, **''इयमेव जुहूः स्वर्गो लोक आहवनीयः''** (?)[1] इत्यादिवत् तदेकवाक्यत्वेन यया कया चन विधया तत्स्तुतिपरत्वमाश्रीयेत। अतः ऋतुवीर्यवत्तरत्वादिफलसिद्ध्यर्थमुद्गीथादिषु रसतमादिदृष्टिविधानमेव न्याय्यम्॥२१॥

## ४४०.भावशब्दाच्च (३-४-२२)

**''उपासीत''**(छा.1-1-1)[2] इत्यादि**भावशब्दाच्च** विधिपरत्वमेव न्याय्यम्। विधिप्रत्यययुक्तो हि क्रियाशब्दो विधेयमेव स्वार्थमवगमयति। तस्मादुपासनविधानार्था एताः श्रुतयः॥२२॥

इति स्तुतिमात्राधिकरणम् ॥ २ ॥

---

அத்ரோத்தரம் - *ந அபூர்வத்வாத்* இதி। ந ஸ்துதிமாத்ரத்வமுபபத்யதே, குத:? *அபூர்வத்வாத்* - அப்ராப்தத்வாத்। நஹி உத்கீதாதய: ரஸதமாதிதயா ப்ரமாணாந்தரேண ப்ரதிபந்நா:, யேந தத்ப்ராஶஸ்த்யபுத்த்யுத்பத்த்யர்தம் ரஸதமாதித்வேந அநூத்யேரந்।

ந ச உத்கீதாதிவிதி: அத்ர ஸந்நிஹித:, யேந, *''இயமேவ ஜுஹூ: ஸ்வர்கோ லோக ஆஹவநீய:''*(?)[1] இத்யாதிவத் ததேகவாக்யத்வேந யயா கயாசந விதயா தத்ஸ்துதிபரத்வமாஶ்ரீயேத। அத: க்ருதுவீர்யவத்தரத்வாதிபலஸித்த்யர்தம் உத்கீதாதிஷு ரஸதமாதித்ருஷ்டிவிதாநமேவ ந்யாய்யம்।। 21 ।।

## 440.பாவஶப்தாச்ச (3-4-22)

*''உபாஸீத''*(சா.1-1-1)[1] இத்யாதிபாவஶப்தாச்ச விதிபரத்வமேவ ந்யாய்யம்। விதிப்ரத்யயுக்தோ ஹி க்ரியாஶப்த: விதேயமேவ ஸ்வார்தமவகமயதி। தஸ்மாதுபாஸநவிதாநார்தா: ஏதா: ஶ்ருதய:।। 22 ।।

இதி ஸ்துதிமாத்ராதிகரணம் ।। 2 ।।

**இதற்கு பதில் - ந அபூர்வத்வாத்** என்று.

**ந -** ஸ்துதி மட்டுமே என்பது சரியாகாது.

ஏன்?

**அபூர்வத்வாத் -** முன்பு (வேறு ப்ரமாணத்தால்) தெரியாதபடியால்.

உத்கீதம் முதலியவை மிகுந்த ரஸமானவை முதலியவையாக வேறு ப்ரமாணத்தால் தெரிந்தவையல்ல; அப்படி தெரிந்திருந்தால், அவை சிறந்தவை எனும் ஜ்ஞாநம் பிறக்க வைப்பதற்காக மிகுந்த ரஸமானவை முதலியவையாக அவை அனுவாதமாக எடுத்து சொல்லப் பட்டிருக்கக் கூடும். (ஆனால் அப்படி இல்லை).

உத்கீதம் முதலியது பற்றிய விதியும் இங்கே அருகில் இல்லை; அப்படியிருந்தால் [1] **''பூமியே ஜுஹூ, ஸ்வர்க்க லோகமே ஆஹவநீயம்''** முதலியது போல அந்த விதிவாக்யத்துடன் ஒரே வாக்யமாக ஆகி, ஏதாவது ஒரு முறையில் அதனைத் துதி செய்வதில் நோக்குடையதாக ஏற்கப்படலாம். (அதுவும் இல்லை).

ஆகையால், யாகமானது அதிக வீர்யத்துடன் ஆகவேண்டும் முதலிய பலன் சித்திப்பதற்காக உத்கீதம் முதலியவற்றில் மிகமிகரஸமானது முதலியதாகக் காண வேண்டும் என்று த்ருஷ்டி-உபாஸனத்தை விதிக்கிறது என்பதே சரியாகும்.

## 440.பாவஶப்தாத் ச(3-4-22)

*வினைச்சொல் இருப்பதாலும்*

[2] **''உபாஸனம் செய்''** முதலியதான வினைச் சொல்லாலும் இங்கு விதிப்பதில் நோக்கு என்பதே சரியாகும்; விதி-ப்ரத்யயத்துடன் (கட்டளை உருபுடன்) கூடிய வினைச்சொல்லானது, விதிக்கப் படுவதாகவே தன் பொருளை அறிவிக்கும்.

**ப்ரயோஜனம் - பலன்**

ஆகையால், இந்த வேதவாக்யங்கள் உபாஸன-விஷயத்தை விதிப்பதற்காக ஆனவையே.

**ஸ்துதிமாத்ராதிகரணம் முற்றிற்று.**

# 111.பாரிப்லவாதிகரணம்(3-4-3)

## முன்குறிப்பு

உபநிஷத்-வித்யைகளில் உபாஸன-விஷயத்தை சொல்வதற்கு முன் கதைகள் சொல்லியுள்ளன; அந்த கதைகள் அந்தந்த வித்யையின் சிறப்பைச் சொல்வதற்காக வந்தவையா? அல்லது பாரிப்லவத்தில் உபயோகப் படுத்துவதற்காக வந்தவையா என்று விசாரம்.

அஸ்வமேதயாகத்தில், பாரிப்லவம் என்று ஒரு ஶஸ்த்ரம் (உரைநடையாக சொல்லுதல்) விதிக்கப் படுகிறது; அதில் அச்வமேதம் செய்யும் அரசனுக்கு எல்லா கதைகளும் சொல்ல வேண்டும் என்று விதிக்கிறது; அரசன் பரிவாரத்துடன் கேட்பான்; (பாரிப்லவம் என்றால் கதை என்றும் அர்த்தம் சொல்லலாம்).

பூர்வபக்ஷம் - பாரிப்லவத்தில் உபயோகப் படுத்துவதற்காக இந்த உபநிஷத் கதைகள் ஆகும்; எல்லா கதைகளும் சொல்ல வேண்டும் என்று அங்கே விதிப்பதால், இந்த கதைகளும் அங்கே சொல்ல வேண்டியவையே.

ஸித்தாந்தம் - என்னென்ன கதைகளைச் சொல்ல வேண்டும் என்பதையும் அங்கேயே வேதமே சொல்கிறது - முதல் நாளில், மனு வைவஸ்வதன் முதலியது; இரண்டாம் நாளில், யமன் வைவஸ்வதன் முதலியது; மூன்றாம் நாளில் வருணன் ஆதித்யன் முதலியது என்று; எனவே, உபநிஷத்-கதைகளை சொல்ல வேண்டாம்.

''எல்லா கதைகளையும் சொல்ல வேண்டும்'' என்றால், குறிப்பிட்ட இந்த கதைகள் எல்லாவற்றையும் ஒன்று விடாமல் சொல்ல வேண்டும் என்று கருத்து; வேதத்திலுள்ள எல்லா கதைகளையும் சொல்ல வேண்டும் என்று அர்த்தம் இல்லை; எண்ணற்ற கதைகளை எல்லாம் சொல்வது முடியாத செயல் ஆகும்.

கர்மபாகத்தில் கூட, பல கதைகள் உள்ளன; அவை பாரிப்லவத்துக்காக வந்தவை அல்ல; (உ.ம்) அக்னியானவர் ஒரு ஸமயம் தேவர்கள் தம்மிடம் கொடுத்துவைத்த செல்வத்தை எடுத்துக்கொண்டு ஓட, தேவர்கள் அவரை வென்று அதை மீட்டனர்; அக்னி அழுதார்; அதனால் ருத்ரன் என்று பெயர் பெற்றார்; அவரது கண்ணீர் வெள்ளியாக ஆனது; ஆகையால் யாகத்தில் வெள்ளியை தானம் பண்ணக்கூடாது; பண்ணினால், அவன் வீட்டிலும் அழுகுரல் கேட்கும்'' என்று ஒரு கதை; இது வெள்ளியை யாகத்தில் தானம் பண்ணக்- கூடாது என்று சொல்வதற்காக வந்தது என்பது அங்கேயே தெரிகிறது; பாரிப்லவத்தின் பொருட்டு சொன்னதல்ல.

அதுபோல, உபநிஷத்-கதைகள் அந்தந்த வித்யையுடன் ஒரு வாக்யமாக இணைந்து பொருள் தரும். எனவே, அவற்றை பிரித்து, பாரிப்லவத்தில் உபயோகப் படுத்துவது சரியில்லை.

# १११.पारिप्लवार्थाधिकरणम् (३-४-३)

## ४४१.पारिप्लवार्था इति चेन्न विशेषितत्वात् (३-४-२३)

- **"प्रतर्दनो ह वै दैवोदासिरिन्द्रस्य प्रियं धामोपजगाम"**(कौ.3-1)[1],
- **"श्वेतकेतुर्हाऽऽरुणेय आस"**(छा.6-1-1)[2]

इत्येवमादीनि वेदान्तेष्वाख्यानानि किं पारिप्लवप्रयोगार्थानि, उत विद्याविशेषप्रतिपादनार्थानीति चिन्तायाम् -

**"आख्यानानि शंसन्ति"**(?)[3] इत्याख्यानानां पारिप्लवे विनियोगान्न विद्याप्रधानत्वं न्याय्यमिति चेत्,

न; सर्वाण्याख्यानानि पारिप्लवप्रयोगे विनियोगमर्हन्ति; कुतः? **विशेषितत्वाद्वि**नियोगस्य। **"आख्यानानि शंसन्ति"**(?)[4] इत्युक्त्वा तत्रैव, **"मनुर्वैवस्वतो राजा"**(?)[5] इत्यादिना मन्वादीनामाख्यानानि विशेष्यन्ते। अतस्तेषामेव तत्र विनियोग इति गम्यते।

तस्मान्न सर्वाः वेदान्तेष्वाख्यानश्रुतयः पारिप्लवप्रयोगार्थाः; अपितु विद्याविध्यर्थाः॥२३॥

---

# 111. பாரிப்லவார்தாதிகரணம் (3-4-3)

## 441.பாரிப்லவார்தா இதி சேந்ந விஶேஷிதத்வாத் (3-4-23)

- *"ப்ரதர்தநோ ஹ வை தைவோதாஸிரிந்த்ரஸ்ய ப்ரியம் தாமோபஜகாம"* (கௌ.3-1)[1],
- *"ஶ்வேதகேதுர்ஹாऽऽருணேய ஆஸ"*(சா.6-1-1)[2]

இத்யேவமாதீநி வேதாந்தேஷ்வாக்யாநாநி கிம் பாரிப்லவப்ரயோகார்தாநி, உத வித்யாவிஶேஷப்ரதிபாதநார்தாநீதி சிந்தாயாம்,

*"ஆக்யாநாநி ஶம்ஸந்தி"*(?)[3] இதி ஆக்யாநாநாம் பாரிப்லவே விநியோகாத் ந வித்யாப்ரதாநத்வம் ந்யாய்யமிதி சேத்,

ந ஸர்வாண்யாக்யாநாநி பாரிப்லவப்ரயோகே விநியோகமர்ஹந்தி; குத:? விஶேஷிதத்வாத் விநியோகஸ்ய। *"ஆக்யாநாநி ஶம்ஸந்தி"*(?)[4] இத்யுக்த்வா தத்ரைவ, *"மநுர்வைவஸ்வதோ ராஜா"*(?)[5] இத்யாதிநா மந்வாதீநாமாக்யாநாநி விஶேஷ்யந்தே। அத: தேஷாமேவ தத்ர விநியோக இதி கம்யதே।

தஸ்மாத் ந ஸர்வா: வேதாந்தேஷ்வாக்யாநஶ்ருதய: பாரிப்லவப்ரயோகார்தா:, அபிது வித்யாவித்யர்தா:॥ 23 ॥

# 111.பாரிப்லவாதிகரணம்(3-4-3)

**441.பாரிப்லவார்த்தா: இதி சேத் ந விஶேஷிதத்வாத்(3-4-23)**

*[உபநிஷத்-கதைகள்] பாரிப்லவத்தின் பொருட்டு ஆனவை என்றால், அதல்ல; தனியாக குறிப்பிடப்பட்டு இருப்பதால்.*

**விஷயவாக்யம்**

- [1]**''திவோதாஸனுடைய புத்ரன் ப்ரதர்தனன் இந்திரனுடைய பிரியமான இடத்தை அடைந்தான் .... ''**
- [2]**''ஆருணியுடைய புத்ரன் ஶ்வேதகேது இருந்தான்''.**

என்றிவை முதலியவையாக வேதாந்தங்களில் உள்ள கதைகள்.

**ஸந்தேஹம்**

இந்த கதைகள் பாரிப்லவத்தில் (யாகத்தில் கதை சொல்வதில்) உபயோகத்துக்காக உள்ளவையா? அல்லது வித்யையின் சிறப்பைச் சொல்வதற்காக உள்ளவையா என்று விசாரம்.

**பூர்வபக்ஷம்**

[3]**''ஆக்யாநங்களை (கதைகளை) சொல்லவும்''** என்று கதைகளை பாரிப்லவத்தில் உபயோகப் படுத்தச் சொல்லியுள்ளது; எனவே, பாரிப்லவத்துக்காக வந்தவை என்பதால், வித்யையை முக்யமாகக் கொண்டவை (வித்யைக்காக சொல்லப்பட்டவை) என்பது சரியல்ல - என்றால்,

**ஸித்தாந்தம்**

**ந** (அதல்ல) - எல்லா கதைகளுமே பாரிப்லவம் சொல்வதில் உபயோகப் படுபவையாக ஆகத் தகுந்தவையல்ல.

ஏன்?

**விஶேஷிதத்வாத் -** கதைகளை உபயோகப் படுத்துதல் ஆனது, (சில கதைகளை இட்டு) தனியாக குறிப்பிடப்பட்டுள்ளது என்பதால்.

[4]**''கதைகளைச் சொல்லவும்''** என்று சொல்லிவிட்டு, அங்கேயே, [5]**''மனு வைவஸ்வதமனு அரசன்''** முதலியதாக மனு முதலியவரின் கதைகள் குறிப்பிடப் படுகின்றன; ஆகையால், அவற்றையே அங்கு உபயோகப் படுத்தச் சொல்லியுள்ளது என்பது தெரிகிறது.

ஆகவே, வேதாந்தங்களில் கதைகளைச் சொல்லும் வேதவாக்யங்கள் எல்லாம், பாரிப்லவத்துக்காக ஆனவை அல்ல; மாறாக, வித்யையை விதிப்பதன் பொருட்டு (புகழுரையாக) ஆனவையே.



## ४४२.तथा चैकवाक्योपबन्धात् (३-४-२४)

**''आत्मा वा अरे द्रष्टव्यः''**(बृ.7-4-2)[1] इत्यादिविधिनैकवाक्यतयोपबन्धाच्चाऽख्यानानाम्, विद्याविध्यर्थान्येव तानीति गम्यते; यथा **''सोऽरोदीत्''**(तै.सं.1-5-1)[2] इत्येवमादेः कर्मविध्यर्थत्वम्; न पारिप्लवार्थत्वम्॥ २४ ॥

इति पारिप्लवार्थाधिकरणम्॥ ३ ॥

---

## 442.ததா சைகவாக்யோபபந்தாத் (3-4-24)

*''ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய:''*(ப்ரு.4-4-5)[1] இத்யாதிவிதிநா ஏகவாக்யதயோபபந்தாச்ச ஆக்யாநாநாம், வித்யாவித்யர்தாந்யேவ தாநீதி கம்யதே, யதா *''ஸோऽரோதீத்''*(தை.ஸம்.1-5-1)[2] இத்யேவமாதே: கர்மவித்யர்தத்வம், ந பாரிப்லவார்தத்வம்।। 24 ।।

இதி பாரிப்லவார்தாதிகரணம்।। 3 ।।

## 442.ததா ச ஏகவாக்யோபபந்தாத்(3-4-24)

*ஒரே வாக்யமாகச் சேர்த்திருப்பதால் அப்படியே ஆகும்.*

[1]**''ஆத்மாதான் காணப்பட வேண்டியவன்''** முதலிய விதி-வாக்யத்துடன் ஒரே வாக்யமாக கதைகளைச் சேர்த்துள்ளபடியால், வித்யையை விதிப்பதற்காகவே இவை ஆனவை என்று தெரிகிறது. (உ.ம்) - கர்மபாகத்தில், [2]**''அவன் அழுதான்''** என்றிவை முதலியவை (கதைகள்), கர்மத்தினை விதிப்பதற்காக ஆனவையே; பாரிப்லவத்துக்காக ஆனவை அல்ல; அது எப்படியோ, அப்படியே இங்கும் ஆகும்.

**பாரிப்லவாதிகரணம் முற்றிற்று.**

# 112. அக்நீந்தநாத்யதிகரணம் (3-4-4)

## முன் குறிப்பு

ஸந்யாஸ-ஆஶ்ரமம் என்று ஒன்று தர்மஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டு உள்ளது; அந்த ஆஶ்ரமத்தில் இருப்பவர்களுக்கும் ப்ரஹ்ம வித்யை உண்டு என்று புருஷார்த்தாதிகரணத்தில் கடைசியில் சொன்னார்; அதில் விசாரம் இப்போது.

இடையே வந்த இரு அதிகரணங்கள் ப்ரஸங்கத்தால் வந்தவை; அதாவது, அங்கே ஸ்துதியைப் பற்றி பூர்வபக்ஷத்தில் சொன்னபடியால், அதேபோல, ஸ்துதிப்பதாக ஆகுமோ என்று இரு விஷயங்களை விசாரம் செய்தார்.

பூர்வபக்ஷம் - ப்ரஹ்ம-வித்யைக்கு அங்கமாக யஜ்ஞம் முதலியது செய்ய வேண்டும்; பத்நீ இல்லாதவர் யஜ்ஞம் செய்யக் கூடாது என்பதால், ஸந்யாஸ-ஆஶ்ரமத்தில் யஜ்ஞம் செய்ய முடியாது; அங்கமான யஜ்ஞம் கிடையாதான படியால், அந்த ஆஶ்ரமத்தவர் ப்ரஹ்ம-வித்யையும் செய்ய முடியாது.

ஸித்தாந்தம் - ஸந்யாஸ ஆஶ்ரமத்தில் இருப்பவர்களுக்கு ப்ரஹ்ம-வித்யை உண்டு என்பதை வேதம் பல இடங்களில் தெளிவாகவே சொல்கிறது; வேத வாக்யங்கள் தெளிவாக இருக்கும்போது, அதற்கு எதிராக யுக்தி-வாதம் செய்யக்கூடாது.

ஸந்யாஸிகளுக்கு யஜ்ஞம், தானம் முதலிய அங்கங்கள் இல்லாவிட்டாலும், அவரது ஆஶ்ரமத்துக்கு ஏற்ற கர்ம-அனுஷ்டானமே வித்யையின் அங்கம் ஆகும்; அதனால் குறையில்லை; ப்ரஹ்மசாரீ முதலிய நான்கு ஆஶ்ரமங்களில் உள்ளவர்களுக்கும் அவரவரது ஆஶ்ரம-கர்ம-அனுஷ்டானமே வித்யைக்கு அங்கம் ஆகும்.

ஸூத்ரத்தில், 'அக்னி-இந்தனம்' என்பதற்கு, அக்னி-ஆதானத்தை முன்னிட்டு செய்யும் அக்னிஹோத்ரம் முதலியது என்று அர்த்தம்; முதலில் அக்னி-ஆதானம் எனும் கர்மம் மூலம், வைதிக-அக்னியை சம்பாதித்துக் கொண்டு, அந்த அக்னியில் அக்னிஹோத்ரம் முதலியது செய்வர்; அந்த அக்னிஹோத்ரம் முதலியது ஸந்யாஸிக்கு தேவையில்லை என்று அர்த்தம்.

# ११२.अग्नीन्धनाद्यधिकरणम् (३-४-४)

## ४४३.अत एव चाग्नीन्धनाद्यनपेक्षा (३-४-२५)

स्तुतिप्रसङ्गादवान्तरसङ्गतिविशेषेणार्थद्वयं चिन्तितम्। विद्यावन्त ऊर्ध्वरेतस आश्रमिणः सन्तीत्युक्तम्, "**ऊर्ध्वरेतस्सु च शब्दे हि**" (ब्र.सू.3-4-17) इत्यादिभिः सूत्रैः। इदानीमुर्ध्वरेतसो यज्ञाद्यभावात् तदङ्गिका विद्या न सम्भवतीत्याशङ्क्याह -

**अत एव चाग्नीन्धनाद्यनपेक्षा** इति। यत ऊर्ध्वरेतस आश्रमिणो विद्यासम्बन्धित्वेन श्रुत्या परिगृह्यन्ते,

- "**ब्रह्म संस्थोऽमृतत्वमेति**" (छा.2-23-1)[1],
- "**ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते**" (छा.5-10-1)[2],
- "**एतमेव प्रव्राजिनो लोकमिच्छन्तः प्रव्रजन्ति**" (बृ.6-4-22)[3],
- "**यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति**" (क.2-15)[4] इत्यादिकया;

अत एवोर्ध्वरेतस्सु विद्या अग्नीन्धनाद्यनपेक्षा। अग्नीन्धनम् अग्न्याधानम्; आधानपूर्वकाग्निहोत्रदर्शपूर्णमासादिकर्मानपेक्षा तेषु विद्या। केवलस्वाश्रमविहितकर्मापेक्षेत्यर्थः॥२५॥

इति अग्नीन्धनाद्यधिकरणम्॥ ४ ॥

# 112. அக்நீந்துநாத்யதிகரணம் (3-4-4)

## 443.அத ஏவ சாக்நீந்துநாத்யநபேக்ஷா(3-4-25)

ஸ்துதிப்ரஸங்காத் அவாந்தரஸங்கதிவிஶேஷேண அர்தத்வயம் சிந்திதம்। வித்யாவந்த: ஊர்த்வரேதஸ: ஆஶ்ரமிண: ஸந்தி இத்யுக்தம், "*ஊர்த்வரேதஸ்ஸு ச ஶப்தே ஹி*" (ப்ர.ஸூ.3-4-17)இத்யாதிபி: ஸூத்ரை:। இதாநீம் ஊர்த்வரேதஸ: யஜ்ஞாத்யபாவாத் ததங்கிகா வித்யா ந ஸம்பவதி இத்யாஶங்க்யாஹ -

*அத ஏவ சாக்நீந்துநாத்யநபேக்ஷா* இதி। யத: ஊர்த்வரேதஸ ஆஶ்ரமிண: வித்யாஸம்பந்தித்வேந ஶ்ருத்யா பரிக்ருஹ்யந்தே,

- "*ப்ரஹ்மஸம்ஸ்தோऽம்ருதத்வமேதி*"(சா.2-23-1)[1],
- "*யே சேமேऽரண்யே ஶ்ரத்தா தப இத்யுபாஸதே*"(சா.5-10-1)[2],
- "*ஏதமேவ ப்ரவ்ராஜிநோ லோகமிச்சந்த: ப்ரவ்ராஜந்தி*"(ப்ரு.6-4-22)[3],
- "*யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி*"(க2-15)[4] இத்யாதிகயா;

அத ஏவ ஊர்த்வரேதஸ்ஸு வித்யா அக்நீந்தநாத்யநபேக்ஷா। அக்நீந்தநம் அக்ந்யாதாநம்; ஆதாநபூர்வகாக்நிஹோத்ர-தர்ஶபூர்ணமாஸாதிகர்மாநபேக்ஷா தேஷு வித்யா। கேவலஸ்வாஶ்ரமவிஹிதகர்மாபேக்ஷேத்யர்த:॥25॥

இதி அக்நீந்துநாத்யதிகரணம்॥ 4 ॥

# 112.அக்நீந்தநாத்யதிகரணம்(3-4-4)

## 443.அத: ஏவ ச அக்நீந்தநாத்யநபேக்ஷா(3-4-25)

*ஆகையால்தான் அக்னி-ஆதானம் முதலியதன் தேவையற்றதாக ஆகும்.*

**ஸங்கதி (விஷயதொடர்பு) & பூர்வபக்ஷம்**

ஸ்துதியைப் பற்றி சொல்லும்போது நினைவுக்கு வந்தபடியால், உள்தொடர்பு ஒன்றினைப் பற்றிக்கொண்டு இரு விஷயங்கள் (போன இரு அதிகரணங்களில்) விசாரிக்கப் பட்டன; (அதற்குமுன்) **''ஊர்த்வரேதஸ்ஸு ச ஶப்தே ஹி''** முதலிய ஸூத்ரங்களால் ஸந்யாஸிகளான ஆஶ்ரமிகளும் ப்ரஹ்மவித்யையை உடையவர்-களாய் உள்ளனர் என்று சொல்லப் பட்டது.

இப்போது, ஸந்யாஸிகளுக்கு யஜ்ஞம் முதலியது கிடையாதானபடியால், அதை அங்கமாகக் கொண்ட வித்யை வர முடியாது என்று கேள்வி கேட்டுக்-கொண்டு,

**ஸித்தாந்தம்**

பதில் சொல்கிறார் - **''அத: ஏவ ச அக்நீந்தநாத்யநபேக்ஷா''** என்று.

ஸந்யாஸிகளான ஆஶ்ரமிகள், வித்யையில் தொடர்புடையவராக -

- [1]**''ப்ரஹ்மத்தில் நிலைநிற்பவன் மோக்ஷம் அடைகிறான்''**,
- [2]**''யாரிவர் காட்டில் ஶ்ரத்தையை முன்னிட்டு இப்படி தபஸ்-உபாஸனம் செய்கிறாரோ''**
- [3]**''இந்த ப்ரஹ்மத்தை விரும்புபவராய் ஸந்யாஸிகள் ஸந்யாஸம் ஏற்கின்ற-னர்''**,
- [4]**''எந்த ப்ரஹ்மத்தை விரும்புபவராய் ப்ரஹ்மசர்யம் அனுஷ்டிக்கின்றனரோ''** (ஸ்த்ரீ-போகம் இன்மை எனும் ஸந்யாஸி-தர்மம்)

முதலிய வேதத்தால் எடுக்கப் படுகின்றனர்; அது எதனாலோ,

**அத: ஏவ** (அதனால்தான்),

**அக்நீந்தநாத்யநபேக்ஷா** - ஸந்யாஸிகளிடம் வித்யை ஆனது. அக்நீந்தனம் முதலியதன் தேவைஅக்நீந்தனம் என்பது அக்னி-ஆதானம்; ஆதா- னத்தை முன்னிட்டுக்கொண்டு ஆகும் அக்னிஹோத்ரம், தர்ஶபூர்ணமாஸம் முதலிய கர்மத்தின் தேவையற்றதாக அவர்களிடம் ப்ரஹ்மவித்யை உள்ளது; தமது ஆஶ்ரமத்துக்கு விதிக்கப்பட்ட கர்மம் மட்டுமே தேவையாகக் கொண்- டது என்று அர்த்தம்.

**அக்நீந்தனாத்யதிகரணம் முற்றிற்று.**

# 113.ஸர்வாபேக்ஷாதிகரணம் (3-4-5)

## முன் குறிப்பு

ஸந்யாஸிகள் யஜ்ஞம் முதலியதைச் செய்யாவிட்டாலும், ப்ரஹ்ம-வித்யை செய்வர் என்று சொல்லியாயிற்று; அப்படியானால், யஜ்ஞம் முதலிய அங்கங்கள் வித்யைக்கு தேவை இல்லை என்று ஆயிற்று; அப்படியானால், க்ருஹஸ்தன் கூட வித்யைக்காக யஜ்ஞம் செய்ய வேண்டிய தேவையில்லை என்று பூர்வபக்ஷம்.

ஸித்தாந்தம் - ''யஜ்ஞத்தினால் ப்ரம்ஹத்தை உபாஸனம் செய்ய விரும்புகின்றனர்'' என்று வேதம் சொல்கிறது; எனவே, யஜ்ஞம் ஆனது, உபாஸனத்தை உண்டாக்கும் காரணம் ஆகும் என தெரிகிறது; ஆகவே, யஜ்ஞம் செய்ய தகுதி உள்ளவரான க்ருஹஸ்தர் அதை செய்ய வேண்டும்.

பூர்வபக்ஷம் - ''யஜ்ஞத்தினால் ப்ரம்ஹத்தை உபாஸனம் செய்ய விரும்புகின்றனர்'' எனும் வேதவாக்யத்தில், ''யஜ்ஞத்தினால்' என்பது, 'விரும்புகின்றனர்' என்ற சொல்லுடன் சேர்க்கிறது; யஜ்ஞத்தால் உபாஸனத்தில் முதலில் விருப்பம் பிறக்கிறது; பின்னர் உபாஸனம் செய்ய ஆரம்பித்தவுடன் யஜ்ஞம் தேவையில்லை.

ஸித்தாந்தம் - அப்படி சொற்களைச் சேர்த்து அர்த்தம் சொல்ல முடியாது; ''கத்தியால் கொல்ல விரும்புகிறான்'', ''குதிரையால் செல்ல விரும்புகிறான்' என்றெல்லாம் சொல்கிறோம்; கத்தியானது, கொல்வதற்கு கருவியே தவிர, விருப்பத்துக்கு கருவி அல்ல; குதிரையானது செல்வதற்கான கருவியே தவிர விருப்பத்துக்கான கருவி அல்ல; அதுபோல, யஜ்ஞத்தால் என்பது உபாஸனம் என்பதில்தான் சேரும்; யஜ்ஞம் ஆனது, உபாஸனத்தின் காரணம் ஆகுமே தவிர விருப்பத்தின் கரணம் ஆகாது; ஆகையால், உபாஸனத்துக்காக யஜ்ஞம் தேவைதான்.

உபாஸனம் ஆனது, மரணம் வரை தினமும் செய்ய வேண்டும்; ஒவ்வொரு நாளும் த்யானத்தில் சிறப்பு கூடி வளர வேண்டும்; அதற்காக தினமும் யஜ்ஞம் முதலியதை விடாமல் இறுதி வரை செய்ய வேண்டும்.

குதிரை போல - குதிரையால் பிரயாணம் செய்ய வேண்டும் என்றால், அதற்கான சாணம் கட்டுதல் முதலிய அங்கங்கள் தேவை; அதுபோல உபாஸனத்தால் மோக்ஷம் பெற வேண்டுமானால், அதற்கு அங்கமான யஜ்ஞம் தேவையே.

# ११३. सर्वापेक्षाधिकरणम् (३-४-५)

## ४४४.सर्वापेक्षा च यज्ञादिश्रुतेरश्ववत् (३-४-२६)

यदि विद्या यज्ञाद्यनपेक्षैवामृतत्वं साधयति, तर्हि गृहस्थेष्वपि तदनपेक्षैव साधयितुमर्हति। यज्ञादिश्रुतिरपि, ''**विविदिषन्ति**'' इति शब्दात् कर्मणो वेदनाङ्गतां न प्रतिपादयतीति -

अत आह - **सर्वापेक्षा** इति। अग्निहोत्रादिसर्वकर्मापेक्षैव विद्या कर्मवत्सु गृहस्थेषु। कुतः? **यज्ञादिश्रुतेः। ''तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसाऽनाशकेन''**(बृ.7-4-2)[1] इत्यादिना यज्ञादयो हि विद्याङ्गत्वेन श्रूयन्ते।

यज्ञादिना विविदिषन्ति - वेदितुमिच्छन्ति; यज्ञादिभिर्वेदनं प्राप्तुमिच्छन्तीत्यर्थः। यज्ञादीनां ज्ञानसाधनत्वे सत्येव, यज्ञादिभिः ज्ञानं प्राप्तुमिच्छन्तीति व्यपदेश उपपद्यते; यथा असेर्हननसाधनत्वे सति, असिना जिघांसतीति व्यपदेशः। अतो यज्ञादीनां ज्ञानसाधनत्वमवगम्यते।

# 113. ஸர்வாபேக்ஷாதிகரணம் (3-4-5)

## 444.ஸர்வாபேக்ஷா ச யஜ்ஞாதிஶ்ருதேரஶ்வவத் (3-4-26)

யதி வித்யா யஜ்ஞாத்யநபேக்ஷைவ அம்ருதத்வம் ஸாதயதி; தர்ஹி க்ருஹஸ்தேஷ்வபி ததநபேக்ஷைவ ஸாதயிதுமர்ஹதி। யஜ்ஞாதிஶ்ருதிரபி, விவிதிஷந்தி இதி ஶப்தாத் கர்மணோ வேதநாங்கதாம் ந ப்ரதிபாதயதீதி -

அத ஆஹ - *ஸர்வாபேக்ஷா* - இதி। அக்நிஹோத்ராதிஸர்வகர்மாபேக்ஷைவ வித்யா கர்மவத்ஸு க்ருஹஸ்தேஷு। குத:? யஜ்ஞாதிஶ்ருதே:। *"தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸாऽநாஶகேந"*(ப்ரு.6-4-22)[1] இத்யாதிநா யஜ்ஞாதயோ ஹி வித்யாங்கத்வேந ஶ்ரூயந்தே।

யஜ்ஞாதிநா விவிதிஷந்தி - வேதிதுமிச்சந்தி; யஜ்ஞாதிபி: வேதநம் ப்ராப்துமிச்சந்தீத்யர்த:। யஜ்ஞாதீநாம் ஜ்ஞாநஸாதநத்வே ஸத்யேவ யஜ்ஞாதிபி: ஜ்ஞாநம் ப்ராப்துமிச்சந்தி இதி வ்யபதேஶ உபபத்யதே। யதா அஸே: ஹநநஸாதநத்வே ஸதி, அஸிநா ஜிகாம்ஸதீதி வ்யபதேஶ:। அத: யஜ்ஞாதீநாம் ஜ்ஞாநஸாதநத்வமவகம்யதே।

# 113.ஸர்வாபேக்ஷாதிகரணம் (3-4-5)

## 444.ஸர்வாபேக்ஷா ச யஜ்ஞாதிஶ்ருதே: அஶ்வவத் (3-4-26)

*யஜ்ஞம் முதலியது பற்றிய வேதவசனத்தால், [வித்யையானது], குதிரை போல, தேவையான [யஜ்ஞம் முதலிய] எல்லாவற்றையும் தேவையாகக் கொண்டது ஆகும்;*

**பூர்வபக்ஷம்**

வித்யை ஆனது, யஜ்ஞம் முதலியதன் தேவை இல்லாமலேயே மோக்ஷத்தை சாதிக்கும் என்றால், அப்போது க்ருஹஸ்தர்களுக்கும் அந்த யஜ்ஞம் முதலியதன் தேவை இல்லாமலேயே சாதிக்க ஏற்றதாகும்; யஜ்ஞம் முதலியன பற்றிய வேத-வாக்யமோ, ஜ்ஞாநத்துக்கு (உபாஸநத்துக்கு) அங்கமாக (யஜ்ஞம் முதலிய) கர்மத்தை அறிவிக்கவில்லை; ஏனெனில், விவிதிஷந்தி (அறிய விரும்புகின்றனர்) என்றே வாக்யம் உள்ளது.

*(உபாஸநத்தில் விருப்பம் உண்டாக யஜ்ஞம் முதலியது தேவை; விருப்பம் உண்டா-னபின் உபாஸநம் செய்வதற்கு அங்கமாக யஜ்ஞம் தேவை இல்லை)*

**ஸித்தாந்தம்**

என்ற இதனை மறுக்க ஸித்தாந்தம் சொல்கிறார் - **ஸர்வாபேக்ஷா** என்று.

**ஸர்வாபேக்ஷா** - கர்மங்கள் உடைய க்ருஹஸ்தரிடத்தில், வித்யை ஆனது, அக்னிஹோத்ரம் முதலிய எல்லா கர்மங்களையும் அபேக்ஷித்துதான் (அவற்-றின் தேவையுடனேயே) இருக்கிறது;

ஏன்?

**யஜ்ஞாதிஶ்ருதே:** (யஜ்ஞம் முதலியதான வேதவசனத்தால்) - [1]**''அவனை வேதானுவசனத்தின் மூலம் ப்ராஹ்மணர்கள் அறிய விரும்புகின்றனர்; யஜ்-ஞத்தாலும், தானத்தாலும்; தபஸ்ஸினாலும்''** என்பது முதலியதால், யஜ்ஞம் முதலியவை வித்யைக்கு (உபாஸனத்துக்கு) அங்கமாக ஓதப்படுகின்றன;.

யஜ்ஞம் முதலியதைக் கொண்டு விவிதிஷந்தி - அறிய விரும்புகின்றனர்; யஜ்ஞம் முதலியதன் மூலம் (உபாஸனம் ஆகிற) அறிவைப் பெற விரும்புகின்றனர் என்று அர்த்தம்;

யஜ்ஞம் முதலியவை (உபாஸநம் ஆகிற) ஜ்ஞாநத்துக்கு காரணமாக ஆவ-தால்தான், 'யஜ்ஞம் முதலியவற்றைக் கொண்டு ஜ்ஞாநம் பெற விரும்புகின்றனர்' என்று சொன்னது சரியாகும். ''கத்தியால் கொல்ல விரும்புகிறான்'' எனும் சொல்-வழக்கானது, கத்தி என்பது கொல்வதற்கு காரணமாக ஆவதால்தான் சரியாகிறது. அதனால் யஜ்ஞம் முதலியவை ஜ்ஞாநத்துக்கு காரணம் என்று தெரிகிறது;

ज्ञानं च वाक्यार्थज्ञानादर्थान्तरभूतं ध्यानोपासनादिशब्दवाच्यं विशदतमप्रत्यक्षतापन्नस्मृतिरूपं निरतिशयप्रियमहरहरभ्यासाधेयातिशयम् आप्रयाणादनुवर्तमानं मोक्षसाधनमित्युक्तमस्माभिः पूर्वमेव। वक्ष्यति च, **''आवृत्तिरसकृदुपदेशात्''**(ब्र.सू.4-1-1) इत्यादिना। एवंरूपं च ध्यानमहरहरनुष्ठीयमानैर्नित्यनैमित्तिककर्मभिः परमपुरुषाराधनरूपैः परमपुरुषप्रसादद्वारेण जायत इति, यज्ञादिना विविदिषन्तीति शास्त्रेण प्रतिपाद्यते। अतः कर्मवत्सु गृहस्थेषु यज्ञादिनित्यनैमित्तिकसर्वकर्मापेक्षा विद्या।

**अश्ववत्** - यथा गमनसाधनभूतोऽश्वः स्वपरिकरबन्धपरिकर्मापेक्षः, एवं मोक्षसाधनभूताऽपि विद्या नित्यनैमित्तिककर्मपरिकरापेक्षा। तदिदमाह स्वयमेव भगवान्,

★ **''यज्ञदानतपःकर्म न त्याज्यं कार्यमेव तत्।**
**यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषिणाम्॥''**(गी.18-5)[1],

★ **''यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम्।**
**स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः॥''**(गी.18-16)[2] इति॥ २६ ॥

इति सर्वापेक्षाधिकरणम् ॥ ५ ॥

---

ஜ்ஞாநம் ச வாக்யார்தஜ்ஞாநாதர்தாந்தரபூதம் த்யாநோபாஸநாதிஶப்தவாச்யம் விஶததமப்ரத்யக்ஷதாபந்நஸ்ம்ருதிரூபம் நிரதிஶயப்ரியம் அஹரஹரப்யாஸாதேயாதிஶயம் ஆப்ரயாணாதநுவர்தமாநம் மோக்ஷஸாதநம் இத்யுக்தமஸ்மாபி: பூர்வமேவ। வக்ஷ்யதி ச, *''ஆவ்ருத்திரஸக்ருதுபதேஶாத்''*(ப்ர.ஸூ.4-1-1) இத்யாதிநா। ஏவம்ரூபம் ச த்யாநம் அஹரஹரநுஷ்டீயமாநை: நித்யநைமித்திககர்மபி: பரமபுருஷாராதநரூபை: பரமபுருஷப்ரஸாதத்வாரேண ஜாயத இதி, யஜ்ஞாதிநா விவிதிஷந்தீதி ஶாஸ்த்ரேண ப்ரதிபாத்யதே। அத: கர்மவத்ஸு க்ருஹஸ்தேஷு யஜ்ஞாதிநித்யநைமித்திகஸர்வகர்மாபேக்ஷா வித்யா।

*அஶ்வவத்* - யதா கமநஸாதநபூதோऽஶ்வ: ஸ்வபரிகரபந்தபரிகர்மாபேக்ஷ:, ஏவம் மோக்ஷஸாதநபூதாऽபி வித்யா நித்யநைமித்திககர்மபரிகராபேக்ஷா। ததிதமாஹ ஸ்வயமேவ பகவாந்,

*''யஜ்ஞதாநதப:கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத்।*
*யஜ்ஞோ தாநம் தபஶ்சைவ பாவநாநி மநீஷிணாம்॥''*(கீ.18-5[1],

*''யத: ப்ரவ்ருத்திர்பூதாநாம் யேந ஸர்வமிதம் ததம்।*
*ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவ:॥''*(கீ.18-16)[2] இதி॥26॥

இதி ஸர்வாபேக்ஷாதிகரணம் ॥ 5 ॥

(உபாயம் ஆகிற) ஜ்ஞாநம் என்பது வாக்யத்திலிருந்து வரும் அர்த்த-ஜ்ஞா-நத்தை விட வேறானது; த்யானம், உபாஸனம் முதலிய சொற்களால் சொல்லப்படு-வது; மிகவும் தெளிவான ப்ரத்யக்ஷம் போன்ற நிலையை அடைந்த ஸ்மரண (நினைவு) உருவானது; எல்லையற்ற ப்ரீதி-உருவிலானது; தினந்தினமும் பயிற்சி செய்வதால் சிறப்பு சேர்க்கப்பட வேண்டியது; இறுதி மரணம் வரை தொடர்வது; அதுவே மோக்ஷத்துக்கு காரணம் ஆவது என்று முன்பே நம்மால் (லகு-ஸித்தாந்தத்-தில்) சொல்லப்பட்டது; **''ஆவ்ருத்தி: அஸக்ருத் உபதேஶாத்''** (ஸூ 4-1-1) என்பது முதலியதால் (ஸூத்ரம் அருளிச் செய்த வ்யாசர்தாமே) சொல்லவும் போகிறார்.

இந்த உருவிலான த்யானம் என்பது, தினந்தினமும் செய்யப்படுபவையும் பரம-புருஷனுக்கு ஆராதனமாகவும் ஆகிற நித்ய-நைமித்திக-கர்மங்களால் பரம-புருஷனின் ப்ரீதி வழியாக உண்டாகும்; ஆகையால், ''யஜ்ஞும் முதலியதைக் கொண்டு அறிய விரும்புகிறான்'' என்று வேதத்தால் சொல்லப்படுகிறது.

ஆகையால் கர்மங்கள் உடைய க்ருஹஸ்தர்களிடம் வித்யை ஆனது, யஜ்ஞும் முதலிய நித்ய-நைமித்திகங்களான எல்லா கர்மங்களையும் எதிர்நோக்கியே ஆகும்.

**அஶ்வவத்** (குதிரை போல) - எப்படி பயணத்துக்கு கருவியான குதிரையா-னது, சாணம் கட்டுதல் எனும் (அலங்காரத்தை) தயாரெடுப்பின் தேவையு-டனே ஆகிறதோ, அப்படியே மோக்ஷத்துக்கு காரணமான வித்யையும் நித்ய-நைமித்திக-கர்மங்களை எதிர்நோக்கியே ஆகும்.

இதனை பகவான் தானே சொல்கிறார் -

- [1]**''யஜ்ஞும், தானம், தபஸ் முதலிய கர்மம் விடத் தக்கதல்ல; செய்யப்பட வேண்டியதுதான்; யஜ்ஞுமும் தானமும் தபஸ்ஸும் உபாஸனம் செய்பவர்-களை (பழைய முன்-பாபங்களை போக்குவதன் மூலம்) ஶுத்தமாக்குபவை.**
- [2]**''யாரால் இந்த பொருள்களின் செயல்பாடு ஆகிறதோ, யாரால் இது எல்லாம் (ஆள்வதற்காக) பரவப்பட்டதோ, அவனை தன் கர்ம-அனுஷ்டானத்தால் பூஜித்து மனிதன் சித்தி பெறுகிறான்''** என்று.

**ஸர்வாபேக்ஷாதிகரணம் முற்றிற்று**

# 114.ஶமதமாத்யதிகரணம்(3-4-6)

## முன் குறிப்பு

ப்ரஹ்ம-வித்யைக்கு யஜ்ஞம் முதலியது அங்கம் ஆகும் என்று போன அதிகரணத்தில் பார்த்தோம்; ஶமம், தமம் முதலியதும் அங்கம் ஆகும் என்று இந்த அதிகரணத்தில் சொல்கிறார்.

ஶமம் என்றால், அக இந்த்ரியமான மனதை அடக்குதல்; தமம் என்றால் புற இந்த்ரியங்களான கண் முதலியவற்றை அடக்குதல். (இதனை மாற்றியும் சொல்லலாம்).

பூர்வபக்ஷம் - க்ருஹஸ்தனுக்கு உபாஸனத்துக்கு அங்கமாக யஜ்ஞம் ஆகும்; யஜ்ஞத்தில், மனஸ் இந்த்ரியமும், கண், கை முதலிய இந்த்ரியங்களும் நன்கு செயல்பட வேண்டும்; எனவே, யஜ்ஞம் என்பது, இந்த்ரியங்களின் செயல்பாடு உருவம் ஆகும்; ஶமம், தமம் என்பதோ இந்த்ரியங்களின் செயல்பாடு இல்லாமை ஆகும்; இப்படி இரண்டும் நேரெதிராக இருக்கிறது; எனவே, க்ருஹஸ்தனுக்கு யஜ்ஞம்தான் அங்கம்; ஶமம்-தமம் அங்கமாக முடியாது.

ஸித்தாந்தம் - வேதத்தில் ஶமம், தமம் ஆகியவை உபாஸனத்துக்கு தேவை என்று தெளிவாக சொல்லியுள்ளது.

யஜ்ஞத்துக்கும், ஶமம்-தமம் ஆகியவற்றுக்கும் முரண்பாடு கிடையாது; ஏனெனில், சமம்-தமம் என்றால் ஒரு செயலையுமே செய்யாமல் இருத்தல் என்று அர்த்தம் இல்லை; வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மம் தவிர வேறு எதையும் செய்யாமல் இருத்தல் என்று அர்த்தம்; அதாவது வேதத்தில் விலக்கப்பட்ட கர்மங்களையும், அல்ப-ஸம்ஸார-பலனுக்கான கர்மங்களையும், வேறு பயனற்ற உலகச் செயல்களையும் செய்யாமல், இந்த்ரியங்களை அடக்குதல் ஆகும்; யஜ்ஞம் என்பது வேதத்தில் விதிக்கப்பட்ட யஜ்ஞத்தை செய்தல் ஆகும்; எனவே முரண்பாடு இல்லை.

மேலும், மனதை ப்ரஹ்மத்திடம் ஒருமைப்படுத்தி, உபாஸனம் செய்வதற்கு இந்த்ரியங்களின் அடக்கமும் மனஸ்-அடக்கமும் நன்கு பயன்படும் என்பது நமக்கே நேராகவே புரியும்; யஜ்ஞம் எப்படி உபாஸனத்துக்கு பயன்படும்? யஜ்ஞம் மூலம், பகவத்-ப்ரீதி உண்டாகும்; அதன் பலனாக பகவான் உபாஸனத்தை நடத்தித் தருவான். எனவே, சமம், தமம் ஆகியவை உபாஸனத்துக்கு நெருங்கிய உள்-அங்கம்; யஜ்ஞம் என்பது வெளி-அங்கம் ஆகும்.

(உதாஹரணமாக உண்ணுதல் எனும் செயலுக்கு உள் அங்கமாவது; வாயில் உணவை இடுதல்; வெளி அங்கமாவது, அதற்காக உணவை தயாரித்து எடுத்து வைத்துக் கொள்ளுதல்; அதுபோல உபாஸநம் நடப்தற்கு புலனடக்கம், யஜ்ஞம் எனும் இரண்டுமே தேவைதான்)

# ११४. शमदमाद्यधिकरणम् (३-४-६)

**४४५.शमदमाद्युपेतस्स्यात् तथापि तु तद्विधेस्तदङ्गतया तेषामप्यवश्यानुष्ठेयत्वात् (३-४-२७)**

गृहस्थस्य शमदमादीन्यप्यनुष्ठेयानि, उत नेति चिन्तायाम्,

आन्तरबाह्यकरणव्यापाररूपत्वात् कर्मानुष्ठानस्य, शमदमादीनां तद्विपरीतरूपत्वाच्चाननुष्ठेयानि इति प्राप्ते उच्यते,

यद्यपि गृहस्थः करणव्यापाररूपकर्मसु प्रवृत्तः, तथाऽपि स विद्वान् **शमदमाद्युपेतस्स्यात्।**

कुतः? **तदङ्गतया तद्विधेः** - विद्याङ्गतया तेषां विधेः, "**तस्मादेवंविच्छान्तो दान्त उपरतस्तितिक्षुः समाहितो भूत्वाऽऽत्मन्येवात्मानं पश्येत्**"(बृ.6-4-23)[1] इति। विद्योत्पत्तेश्चित्तसमाधानरूपत्वेन दृष्टपरिकरत्वाच्छमादीनाम्, विद्यानिर्वृत्तये तेषां शमादीनामप्यवश्यानुष्ठेयत्वाच्च तान्यप्यनुष्ठेयानि।

---

## 114. ஶமதமாத்யதிகரணம் (3-4-6)

**445.ஶமதமாத்யுபேதஸ்ஸ்யாத் ததாபி து தத்விதேஸ்ததங்கதயா தேஷாமப்யவஶ்யா நுஷ்டேயத்வாத் (3-4-27)**

க்ருஹஸ்தஸ்ய ஶமதமாதீந்யபி அநுஷ்டேயாநி, உத நேதி சிந்தாயாம்,

ஆந்தர-பாஹ்யகரணவ்யாபாரரூபத்வாத் கர்மாநுஷ்டாநஸ்ய, ஶமதமாதீநாம் தத்விபரீதரூபத்வாச்ச அநநுஷ்டேயாநி,

இதி ப்ராப்தே உச்யதே - யத்யபி க்ருஹஸ்த: கரணவ்யாபாரரூபகர்மஸு ப்ரவ்ருத்த:, ததாऽபி ஸ வித்வாந் *ஶமதமாத்யுபேத: ஸ்யாத்।*

குத:? ததங்கதயா தத்விதே: - வித்யாங்கதயா தேஷாம் விதே:, "*தஸ்மாதேவம்விச்சாந்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷு: ஸமாஹிதோ பூத்வாऽऽத்மந்யேவாமாநம் பஶ்யேத்*"(ப்ரு.6-4-23)[1] இதி। வித்யோத்பத்தே: சித்தஸமாதாநரூபத்வேந த்ருஷ்டபரிகரத்வாத் ஶமாதீநாம், வித்யாநிர்வ்ருத்தயே தேஷாம் ஶமாதீநாமபி அவஶ்யாநுஷ்டேயத்வாச்ச தாந்யபி அநுஷ்டேயாநி।

# 114.ஶமதமாத்யதிகரணம்(3-4-6)

**445.ஶமதமாத்யுபேத: ஸ்யாத் ததா அபி து தத்விதே: ததங்கதயா தேஷாம் அபி அவஶ்யாநுஷ்டேயத்வாத்(3-4-27)**

*அப்படியானாலும், ஶமம், தமம் முதலியதுடன் கூடியவனாக ஆவான்; அந்த வித்யைக்கு அங்கமாக அவற்றை விதிப்பதால், அவையும் கட்டாயம் அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியவை என்பதால்.*

**ஸந்தேஹம்**

க்ருஹஸ்தனுக்கு ஶமம் (அக-இந்த்ரியமான மனதை அடக்கியிருத்தல்), தமம் (புற இந்த்ரியங்களை அடக்கியிருத்தல்) முதலியவையும் கூட அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியவையா? அல்லது இல்லையா? என்று விசாரம் ஆகும்போது,

**பூர்வபக்ஷம்**

(க்ருஹஸ்தன் செய்ய வேண்டிய) கர்ம-அனுஷ்டானம் என்பது அக-இந்த்ரியமும் புற-இந்த்ரியங்களும் செயல்படுதல் ஆகும்; ஶமம், தமம் முதலியவை அதற்கு எதிரானவை ஆகும்; ஆகையால், அவை அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியவை அல்ல.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட, ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது.

**ததா அபி** (அப்படியானாலும்) - க்ருஹஸ்தன், இந்த்ரியங்களின் செயல்பாடு ஆகிற கர்மங்களைச் செய்பவன்தான்; ஆனாலும், ஜ்ஞாநியான அவன்

**ஶமதமாத்யுபேத: ஸ்யாத் -** ஶமம், தமம் முதலியதுடன் கூடியவனாக ஆவான்.

ஏன்?

**ததங்கதயா தத்விதே: -** அந்த வித்யைக்கு அங்கமாக அவற்றை விதிப்பதால் - **''ஆகையால் இப்படி அறிபவன் ஶமம் உடையவனாக, தமம் உடையவனாக, (காம்யகர்மங்களை) செய்வதை நிறுத்தியவனாய், பொறுமைசாலியாய் மனஸ்ஸமாதானம் உடையவனாய் இருந்து''** - என்று.

**தேஷாம் அபி அவஶ்யாநுஷ்டேயத்வாத் -** ஶமம் முதலியவை மனஸ்-சமாதான உருவாக இருப்பதால், உபாஸனம் உண்டாவதற்கு தேவையான அங்கமாக தெரிந்த நேரிடையான முறையில் ஆகிறது; ஆகையால், வித்யை உண்டாவதற்காக அவையும் கட்டாயம் அனுஷ்டானம் செய்யப்பட தகுந்தவை என்பதாலும், அவையும் அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியவையே.

न च करणव्यापारतद्विपर्ययरूपत्वेन कर्मणां शमदमादीनां च परस्परविरोधः, भिन्नविषयत्वात्; विहितेषु करणव्यापारः, अविहितेषु प्रयोजनशून्येषु च तदुपशम इति।

न च करणव्यापाररूपकर्मसु वर्तमानस्य वासनावशात् शमादीनामुपादेयत्वासम्भवः, विहितानां कर्मणां परमपुरुषाराधनतया तत्प्रसादद्वारेण निखिलविपरीतवासनोच्छेदहेतुत्वात्। अतो गृहस्थस्य शमदमादयोऽप्यनुष्ठेयाः॥ २७ ॥

इति शमदमाद्यधिकरणम् ॥ ६ ॥

---

ந ச கரணவ்யாபார-தத்விபர்யயரூபத்வேந கர்மணாம் ஶமதமாதீநாம் ச பரஸ்பரவிரோதः, பிந்நவிஷயத்வாத், விஹிதேஷு கரணவ்யாபார:, அவிஹிதேஷு ப்ரயோஜநஶூந்யேஷு ச ததுபஶம: இதி।

ந ச கரணவ்யாபாரரூபகர்மஸு வர்தமாநஸ்ய வாஸநாவஶாத் ஶமாதீ-நாமுபாதேயத்வாஸம்பவ:, விஹிதாநாம் கர்மணாம் பரமபுருஷாராதநதயா தத்ப்ரஸாதத்வாரேண நிகிலவிபரீதவாஸநோச்சேதஹேதுத்வாத்। அத: க்ருஹஸ்தஸ்ய ஶமதமாதயோऽபி அநுஷ்டேயா:॥ 27 ॥

இதி ஶமதமாத்யதிகரணம் ॥ 6 ॥

✎*(யஜ்ஞம் முதலியதால் புண்யம் (பகவத்ப்ரீதி) உண்டாகும், அதனால் பாபம் தொலையும்; அதனால் உபாஸனம் தொடர்ந்து நடக்கும்; இப்படி யஜ்ஞம் ஆனது, அத்ருஷ்ட-முறையில் வித்யைக்கு அங்கமாகிறது; புலனடக்கம், மனஸ் சமாதானம் முதலியது உபாஸனத்துக்கு நேரிடையாகவே தேவையாகும்; புண்யம் வழியாக பயன்படும் என்று சொல்ல வேண்டாம்).*✍

**ஶங்கை -** கர்மங்களும் ஶமம்-தமம் முதலியவையும், இந்த்ரியங்களின் செயல் உருவாகவும், அதற்கு எதிரான உருவாகவும் ஆவதால் ஒன்றுக்கொன்று முரண்பாடு வரும்

**பதில் -** முரண்பாடு வராது; ஏனெனில், அவை வெவ்வேறு விஷயத்தைப் பற்றியவை; (கட்டாயம் செய்யும்படி) விதிக்கப்பட்ட விஷயங்களில் இந்த்ரியங்களின் செயல்பாடு ஆகும்; (கட்டாயம் செய்யும்படி) விதிக்கப்படாதவையும் பயனற்றவையுமான செயல்களில் இந்த்ரியங்களின் அடக்கம் (செயலில்லாமை) ஆகும் என்று.

**ஶங்கை -** இந்த்ரியங்களின் செயல்பாடு ஆகிற கர்மங்களைச் செய்பவன், கர்ம-வாஸனாவுக்கு வசப்படுவதால், அவனுக்கு ஶமம் முதலியது உண்டாவது நடக்காது.

**பதில் -** அது கிடையாது; ஏனெனில், விதிக்கப்பட்ட கர்மங்கள் பரமபுருஷனுக்கு ஆராதனம் ஆனபடியால், அவனது ப்ரீதியின் வழியாக எல்லா விபரீத-வாஸனைகளும் ஒழிவதற்கு காரணமாகும்.

ஆகையால், க்ருஹஸ்தனுக்கு ஶமம், தமம் முதலியவையும் அனுஷ்டிக்கப் பட வேண்டியவையே.

***

**ஶமதமாத்யதிகரணம் முற்றிற்று**

# 115.ஸர்வாந்நாநுமத்யதிகரணம்(3-4-7)

## முன் குறிப்பு

இந்த்ரியங்களின் அடக்கம் தேவை என்னும்போது, முக்கியமாக நாக்கை அடக்க வேண்டும்; கண்ட உணவை சாப்பிடக்கூடாது என்று சொல்கிறார்.

பூர்வபக்ஷம் - ப்ராண-வித்யை அனுஷ்டானம் செய்பவன், எல்லா உணவையும் உண்ணலாம்; தோஷமில்லை என வேதம் சொல்கிறது; அல்ப-பலனைத் தரும் ப்ராண-வித்யைக்கே இத்தனை பெருமை இருக்கும்போது, மோக்ஷ-பலனைத் தரும் ப்ரஹ்ம-வித்யை பற்றி சொல்ல வேண்டுமா? ஆகையால், ப்ரஹ்ம-வித்யை அனுஷ்டானம் செய்பவனுக்கு உணவில் நியமம் தேவையில்லை.

ஸித்தாந்தம் - பொதுவாக உணவில் கட்டுப்பாடு தேவை; உயிருக்கே ஆபத்து நேரும் சமயத்தில், உயிரைக் காப்பதற்காக மட்டுமே நியமத்தை சற்றே மீறலாம்; இதை வேதத்தில் உஷஸ்தி என்பவரின் ஆசாரம் மூலம் அறியலாம்;

உஷஸ்தி என்ற ஒரு முனிவர் ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவர்; ஒருசமயம், பசியால் உயிர் போகும் நிலை வந்தபோது, ப்ரஹ்ம-வித்யை நடக்க வேண்டுமே என்பதற்காக, உயிர் பிழைக்க நினைத்தார்; அதற்காக, அங்கிருந்த ஒரு யானைப் பாகனிடம் அவன் உண்டுகொண்டிருந்த கொள் தான்யத்தை வாங்கி சாப்பிட்டார்; அப்போது, அவன் தீர்த்தமும் கொடுத்தபோது வாங்க மறுத்து விட்டார்; உயிர் போகும் நிலையில் இருந்ததால் கொள் சாப்பிட்டார்; பின், உயிர் பிழைத்தவுடன், சாஸ்த்ரப்படி அவன் கொடுத்ததை பருகக் கூடாது என்பதால் அதை ஏற்க மறுத்தார்.

இந்த கதை விரிவாகவே ஸ்ரீபாஷ்யத்தில் உள்ளது.

இப்படி ப்ரஹ்ம-வித்யை செய்பவருக்கே இத்தனை நியமம் இருக்கும்போது, ப்ராண-வித்யை செய்பவருக்குக் கேட்க வேண்டுமா? எனவே, அவர் எல்லாம் உண்ணலாம் என்று சொன்னது, ஆபத்து காலத்தில் எல்லாம் உண்ணலாம் என்ற கருத்தில் ஆகும்.

இன்னும் சில காரணங்களை ஸூத்ரங்களில் சொல்கிறார்

# ११५. सर्वान्नानुमत्यधिकरणम् (३-४-७)

## ४४६.सर्वान्नानुमतिश्च प्राणात्यये तद्दर्शनात् (३-४-२८)

वाजिनां छन्दोगानां च प्राणविद्यायाम्,

★ **''न ह वा अस्यानन्नं जग्धं भवति, नानन्नं परि(प्रति)गृहीतं भवति''**(बृ.8-1-14)[1],

★ **''न ह वा एवंविदि किञ्चन अनन्नं भवति''**(छा.5-2-1)[2] इति प्राणविदः सर्वान्नानुमतिः सङ्कीर्त्यते।

किमियं प्राणविद्यानिष्ठस्य सर्वान्नानुमतिः सर्वदा, उत प्राणात्ययापत्ताविति विशये,

विशेषानुपादानात् सर्वदा इति प्राप्ते,

उच्यते **प्राणात्यये** इति। चशब्दोऽवधारणे; प्राणात्ययापत्तावेवेत्यर्थः। कुतः? **तद्दर्शनात्।** दृश्यते ह्यन्यत्र ब्रह्मविदामपि प्राणात्ययापत्तावेव सर्वान्नाभ्यनुज्ञा; किंपुनः प्राणविदः।

---

# 115. ஸர்வாந்நாநுமத்யதிகரணம் (3-4-7)

## 446.ஸர்வாந்நாநுமதிஶ்ச ப்ராணாத்யயே தத்தர்ஶநாத் (3-4-28)

வாஜிநாம் ச̲ந்தோகாநாம் ச ப்ராணவித்யாயாம்,

★ *''ந ஹ வா அஸ்யாநந்நம் ஜக்தம் ப̲வதி, நாநந்நம் பரி(ப்ரதி)க்ருஹீதம் ப̲வதி''*(ப்ரு.8-1-14)[1],

★ *''ந ஹ வா ஏவம்விதி கிஞ்சந அநந்நம் ப̲வதி''*(சா.5-2-1)[2] இதி ப்ராணவித: ஸர்வாந்நாநுமதி: ஸங்கீர்த்யதே।

கிமியம் ப்ராணவித்யாநிஷ்டஸ்ய ஸர்வாந்நாநுமதி: ஸர்வதா, உத ப்ராணாத்யயாபத்தௌ இதி விஶயே,

விஶேஷாநுபாதாநாத் ஸர்வதா இதி ப்ராப்தே -

உச்யதே *ப்ராணாத்யயே* - இதி। ச ஶப்த: அவதாரணே, ப்ராணாத்யயாபத்தாவேவேத்யர்த:। குத:? *தத்தர்ஶநாத்।* த்ருஶ்யதே ஹி அந்யத்ர ப்ரஹ்மவிதாமபி ப்ராணாத்யயாபத்தாவேவ ஸர்வாந்நாப்̲யநுஜ்ஞா, கிம் புந: ப்ராணவித:।

# 115.ஸர்வாந்நாநுமத்யதிகரணம்(3-4-7)

## 446.ஸர்வாந்நாநுமதி: ச ப்ராணாத்யயே தத்தர்ஶநாத்(3-4-28)

*எல்லா உணவையும் அனுமதித்தது, ப்ராணன் தொலைய நேரிடும்போது மட்டுமே, அதனை வேதத்தில் காண்பதால்.*

**விஷயவாக்யம்**

வாஜிகளுடையவும் சந்தோகர்களுடையவும் ஆன ப்ராணவித்யையில் -

- [1]**''இவனுக்கு உண்ணக் கூடாதது (எதுவும்) உண்டதாக ஆகாது; (இவன் அதை உண்டாலும், அது உண்ணக் கூடாதது அல்ல) உண்ணக் கூடாதது, தானமாக ஏற்றுக் கொண்டதாக ஆகாது''**
- [2]**''இப்படி உபாஸனம் செய்பவனிடத்தில் எதுவுமே உண்ணக் கூடாதது ஆகாது''**

என்று ப்ராண-உபாஸனம் செய்பவனுக்கு எல்லா உணவுக்கும் அனுமதி சொல்லப்பட்டுள்ளது.

**ஸந்தேஹம்**

ப்ராண-உபாஸனம் செய்பவனுக்கு எல்லா உணவையும் அனுமதித்தல் ஆனது எப்போதும் ஆகலாமா? அல்லது ப்ராணன் போக நேரிடும்போது மட்டுமா? என்று ஸந்தேஹம் வரும்போது,

**பூர்வபக்ஷம்**

விஶேஷத்தை எடுத்து சொல்லாதபடியால், எப்போதும் ஆகலாம்

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **'ப்ராணாத்யயே'** என்று.

**'ச'** எனும் சொல், அவதாரணம் எனும் பொருளில் ஆகும்.

**ப்ராணாத்யயே ச -** ப்ராணன் போக நேரிடும்போது மட்டுமே என்று பொருள்.

ஏன்?

**தத்தர்ஶநாத்** (அதைக் காண்பதால் - வேதத்தில் சொல்லக் காண்பதால்) - ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவர்களுக்கும் கூட, ப்ராணன் முடிய நேரிடும்போது மட்டுமே எல்லா உணவையும் அனுமதித்திருப்பது வேறிடத்தில் காணப்படுகிறது. ப்ராண-உபாஸனம் செய்பவனுக்கு என்ன? (அவனுக்கும் அப்படியே).

उषस्तिः किल चाक्रायणो ब्रह्मविदग्रेसरो मटचीहतेषु कुरुषु दुर्भिक्षदूषितेषु इभ्यग्रामे वसन् अनशनेन प्राणसंशयमापन्नो ब्रह्मविद्यानिष्पत्तये प्राणानामनवसादमाकाङ्क्षमाणः

इभ्यं कुल्माषान् खादन्तं भिक्षमाणः, तेन च, **''उच्छिष्टेभ्योऽन्ये न विद्यन्ते''**(छा.1-10-2)[1] इति प्रत्युक्तः, पुनरपि, **''एतेषां मे देहि''**(छा.1-10-3)[2] इत्युक्त्वा तेन चेभ्येनोच्छिष्टेभ्य आदाय दत्तान् कुल्माषान् प्रतिगृह्य,

अनुपानप्रतिग्रहमिभ्येनार्थितः, **''उच्छिष्टं वै मे पीतं स्यात्''**(छा.1-10-4)[3] इति वदन् चाक्रायणः, (वदन्, चाक्रायण!?) किमेते कुल्माषा अनुच्छिष्टा इति इभ्येन पर्यनुयुक्तः, **''न वा अजीविष्यमिमान् अखादन्...कामो मे उदपानम्''**(छा.1-10-4)[4] इति कुल्माषाखादने स्वस्य प्राणसंशयापत्तेः तावन्मात्रखादनेन धृतप्राणस्य स्वस्योच्छिष्टोदकपानं कामकारितं निषिद्धं स्यादित्युक्त्वा,

स्वखादितशेषं जायायै दत्वा, तया च रक्षितान्, अपरेद्युर्याजनेनार्जिजीषया जिगमिषुः पुनरपि प्राणसंशयमापन्नः, तानेवेभ्योच्छिष्टान् स्वोच्छिष्टभूतान् पर्युषितांश्चखाद।

---

உஷஸ்தி: கில சாக்ராயணோ ப்ரஹ்மவிதக்ரேஸரோ மடசீஹதேஷு குருஷு துர்பிக்ஷதூஷிதேஷு இப்யக்ராமே வஸந் அநஶநேந ப்ராணஸம்ஶயமாபந்ந: ப்ரஹ்மவித்யாநிஷ்பத்தயே ப்ராணாநாமநவஸாதமாகாங்க்ஷமாண:,

இப்யம் குல்மாஷாந் காதந்தம் பிக்ஷமாண:, தேந ச, *''உச்சிஷ்டேப்யோऽந்யே ந வித்யந்தே''*(சா.1-10-2)[1] இதி ப்ரத்யுக்த:, புநரபி, *''ஏதேஷாம் மே தேஹி''*(சா.1-10-3)[2] இத்யுக்த்வா தேந ச இப்யேந உச்சிஷ்டேப்ய ஆதாய தத்தாந் குல்மாஷாந் ப்ரதிக்ருஹ்ய,

அநுபாநப்ரதிக்ரஹம் இப்யேநார்தித:, *''உச்சிஷ்டம் வை மே பீதம் ஸ்யாத்''*(சா.1-10-4)[3] இதி வதந் சாக்ராயண:, (வதந், சாக்ராயண!) கிமேதே குல்மாஷா அநுச்சிஷ்டா இதி இப்யேந பர்யநுயுக்த:, *''ந வா அஜீவிஷ்யமிமாந் அகாதந்...காமோ மே உதபாநம்''*(சா.1-10-4)[4] இதி குல்மாஷாகாதநே ஸ்வஸ்ய ப்ராணஸம்ஶயாபத்தே: தாவந்மாத்ரகாதநேந த்ருதப்ராணஸ்ய ஸ்வஸ்ய உச்சிஷ்டோதகபாநம் காமகாரிதம் நிஷித்தம் ஸ்யாத் இத்யுக்த்வா,

ஸ்வகாதிதஶேஷம் ஜாயாயை தத்வா, தயா ச ரக்ஷிதாந், அபரேத்யு: யாஜநேந அர்ஜிஜீஷயா ஜிகமிஷு: புநரபி ப்ராணஸம்ஶயமாபந்ந:, தாநேவ இப்யோச்சிஷ்டாந் ஸ்வோச்சிஷ்டபூதாந் பர்யுஷிதாந் சகாத।

சக்ரர் என்பவரின் புதல்வரான உஷஸ்தி என்பவர், ப்ரஹ்ம-ஜ்ஞாநிகளில் முன்-நிற்பவராக (சிறந்தவராக) இருந்தவர்,

குருதேசம் கல்மழையால் தாக்கப்பட்டதாய் பஞ்சத்தால் பாதிக்கப்பட்டபோது, யானைப் பாகன்களின் கிராமத்தில் வசிப்பவராய்

பட்டினியால், உயிர் பிழைக்குமோ என்ற ஸந்தேஹத்தை அடைந்தவராய்

ப்ரஹ்ம-உபாஸனம் நடப்பதற்காக ப்ராணன்கள் முடியக்கூடாது என விரும்பினவராய்,

கொள்ளு-தான்யங்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்த யானைப்பாகனை பிச்சை கேட்பவராய்,

[1]**''நான் உண்டுகொண்டிருப்பதில் மீதி போக வேறு (தனியாக எதுவும்) இல்லை''** என்று அவனால் பதில் உரைக்கப் பட்டவராய்,

மீண்டும், [2]**''அவற்றைத்தான் எனக்குக் கொடு''** என்று கேட்டு,

அந்த பாகனால், உண்ட மீதியிலிருந்து எடுத்துக் கொடுக்கப்பட்ட கொள்ளுகளை ஏற்றுக்கொண்டு,

அவனால், குடிநீர் ஏற்குமாறு கேட்டுக்கொள்ளப் பட்டவராய்,

[3]**''(பருகிய) மிகுதி என்னால் பருகப்படுவது ஆகிவிடும்''** என்று சொல்பவராய் (மறுப்பவராய்),

'இந்த கொள்ளுகள் உண்டமிகுதி (எச்சில்) இல்லையா என்ன?' என்று பாகனால் கேள்வி கேட்டப்பட்டவராய்,

[4]**''இவற்றை உண்ணாவிட்டால் உயிர்பிழைக்க மாட்டேன்; குடிநீர் என்பது விருப்பத்தினால் ஆவது ஆகும்''** என்று - கொள்ளுகள் உண்ணாவிட்டால், தனக்கு உயிர் பிழைக்குமா எனும் ஸந்தேகம் நேரிட்டதால், அந்தளவு மட்டும் உண்டதன் மூலம், உயிர் தரித்த தனக்கு மீதி எச்சில் நீரைப் பருகுதல் என்பது விருப்பத்தினடியாக செய்யப்படுவதாய் நிஷேதிக்கப்பட்டதாக (உண்ணக் கூடாததாக ஶாஸ்த்ரத்தில் கட்டளையிடப்பட்ட விஷயமாக) ஆகிவிடுகிறது என்று சொல்லி,

தான் உண்ட மீதியை மனைவிக்கு கொடுத்து,

மறுநாள் யாகம் செய்துவைத்து ஸம்பாதிக்கும் ஆசையால் போக விரும்பியவராய், மறுபடியும் உயிர் பிழைக்குமா எனும் ஸந்தேஹம் அடைந்தவராய், மனைவியால் பாதுகாக்கப் பட்டவையும், பாகன் உண்ட மிகுதியும், தான் உண்ட மீதியும், நாள் கடந்து பழையவையும் ஆனவற்றை உண்டார்.

अतो ब्रह्मविदामपि प्राणसंशय एव सर्वान्नानुमतिदर्शनादत्राविशेषेण कीर्तितमपि प्राणविदः सर्वान्नीनत्वं प्राणात्ययापत्तावेवेति निश्चीयते॥ २८ ॥

## ४४७.अबाधाच्च (३-४-२९)

**"आहारशुद्धौ सत्त्वशुद्धिः सत्त्वशुद्धौ ध्रुवा स्मृतिः"** (छा.7-26-2)[1] इति ब्रह्मविद्योत्पत्तावाहारशुद्धिविधानाबाधादपि ब्रह्मविदां सर्वान्नीनत्वमापद्विषयमवगम्यते। एवं ब्रह्मविदामतिशयितशक्तीनामपि सर्वान्नीनत्वस्यापद्विषयत्वात् प्राणविदोऽल्पशक्तेः सर्वान्नानुमतिरापद्विषयैव॥२९॥

## ४४८.अपि स्मर्यते (३-४-३०)

अपि च आपद्विषयमेव सर्वान्नीनत्वं ब्रह्मविदामन्येषां च स्मर्यते,

**"प्राणसंशयमापन्नो योऽन्नमत्ति यतस्ततः।**
**लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा॥"** (?)[2] इति॥ ३० ॥

---

அத: ப்ரஹ்மவிதாமபி ப்ராணஸம்ஶய ஏவ ஸர்வாந்நாநுமதிதர்ஶநாத் அத்ர அவிஶேஷேண கீர்திதமபி ப்ராணவித: ஸர்வாந்நீநத்வம் ப்ராணாத்யயாபத்தாவேவேதி நிஶ்சீயதே।। 28 ।।

## 447.அபாதாச்ச (3-4-29)

*"ஆஹாரஶுத்தௌ ஸத்த்வஶுத்தி: ஸத்த்வஶுத்தௌ த்ருவா ஸ்ம்ருதி:"* (சா.7-26-2)[1] இதி ப்ரஹ்மவித்யோத்பத்தௌ ஆஹாரஶுத்திவிதாநாபாதாதபி ப்ரஹ்மவிதாம் ஸர்வாந்நீநத்வம் ஆபத்விஷயமவகம்யதே। ஏவம் ப்ரஹ்மவிதாம் அதிஶயிதஶக்தீநாமபி ஸர்வாந்நீநத்வஸ்ய ஆபத்விஷயத்வாத் ப்ராணவிதோऽல்பஶக்தே: ஸர்வாந்நாநுமதி: ஆபத்விஷயைவ।।29।।

## 448.அபி ஸ்மர்யதே(3-4-30)

அபி ச ஆபத்விஷயமேவ ஸர்வாந்நீநத்வம் ப்ரஹ்மவிதாம் அந்யேஷாம் ச ஸ்மர்யதே,

*"ப்ராணஸம்ஶயமாபந்நோ யோऽந்நமத்தி யதஸ்தத:।*
*லிப்யதே ந ஸ பாபேந பத்மபத்ரமிவாம்பஸா।।"* (?)[2] இதி।। 30 ।।

ஆகையால், ப்ராண-உபாஸனம் செய்பவன் எல்லா உணவையும் உண்பவன் (ஆகலாம்) என்பது, விஶேஷ-குறிப்பு இல்லாமல் சொல்லப்பட்டிருந்தாலும், ப்ராண-ஸந்தேஹம் (உயிர் பிழைக்குமா எனும் ஸந்தேஹம்) நேரிடும்போது மட்டுமே என்பதாக நிச்சயிக்கப் படுகிறது. ஏனெனில், ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவர்களுக்குக் கூட ப்ராண-ஸந்தேஹம் (உயிர் பிழைக்குமா எனும் ஸந்தேஹம்) நேரிடும்போது மட்டுமே எல்லா உணவையும் அனுமதித்தல் காணப்படுகிறது என்பதால்.



## 447.அபாதாத் ச(3-4-29)

*[ஆஹார-ஶுத்தி விதித்திருப்பதை] மறுக்காததாலும்.*

[1]**''உணவு ஶுத்தமாக ஆனால், மனஸ் ஶுத்தமாகும்; மனஸ் ஶுத்தமானால், எப்போதும் நினைத்தல் (உபாஸனம்) ஆகும்''** என்று, ப்ரஹ்ம-உபாஸனம் உண்டாவதற்கு உணவு ஶுத்தமாக ஆவதை விதிக்கிறது; அதற்கு மறுப்பு இல்லாதபடியாலும், ப்ரஹ்ம-ஜ்ஞாநிகள் எல்லா உணவையும் உண்ணலாம் என்பது, ஆபத்து-நிலை பற்றியது என்பதாகத் தெரிகிறது.

இப்படி சிறப்புமிக்க ஶக்தியுடைய ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவர்களுக்கே எல்லா உணவையும் உண்பது, ஆபத்து-நிலையைப் பற்றியது என்பதால், குறைந்த ஶக்தி உடைய ப்ராண-உபாஸனம் செய்பவர்களுக்கு எல்லாம் உண்ண அனுமதித்தலானது, ஆபத்து நிலையைப் பற்றியதுதான்.

*✍(ப்ராண-உபாஸநத்தை விட ப்ரஹ்ம-உபாஸநம் மிகவும் சிறப்பு வாய்ந்தது; அது எல்லா பாபதங்களையும் போக்கி மோக்ஷம் தர வல்லது; அத்தகு ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவர்கள் கூட எல்லா உணவையும் எப்போதும் உண்ணலாம் என்பது கிடையாது; ஆபத்து காலத்தில்தான் உயிர் வாழ்வதற்காக அஶுத்த உணவை உண்ணலாம்; அவர்களுக்கே அப்படியானால், ப்ராண-உபாஸநம் செய்பவர்களுக்கு இந்த நியமம் கட்டாயம் உண்டு என்பது சொல்லாமல் தெரிந்து கொள்ளலாம்)✍*



## 448.அபி ஸ்மர்யதே(3-4-30)

*ஸ்ம்ருதியில் சொல்லப்படுகிறதும் கூட*

ப்ரஹ்ம-ஜ்ஞாநிகளுக்கும் மற்றவர்களுக்கும் கூட எல்லா உணவையும் உண்ணுதல் ஆனது, ஆபத்து-நிலையைப் பற்றியதாகவே ஸ்ம்ருதியில் சொல்லப் படுகிறது - [2]**''ப்ராண-ஸந்தேஹத்தை அடைந்த எவன், எந்த விதமாக உணவு உண்டாலும், தாமரையிலை தண்ணீருடன் ஒட்டாதது போல, அதனால் வரும் பாபத்துடன் ஒட்டுவதில்லை''** என்று.



## ४४९.शब्दश्चातोऽकामकारे (३-४-३१)

यतो ब्रह्मविदामन्येषां च सर्वान्नीनत्वमापद्विषयमेव; अत एव सर्वेषाम**कामकारे शब्दः** - कामकारस्य प्रतिषेधकः शब्दो वर्तते। अस्ति हि कठानां संहितायां कामकारस्य प्रतिषेधकः शब्दः, **"तस्माद्ब्राह्मणः सुरां न पिबति पाप्मना नोत्सृजा इति"**(का.सं.)[1] इति। पाप्मना संस्पृष्टो न भवानीति मत्वा ब्राह्मणः सुरां न पिबतीत्यर्थः॥ ३१ ॥

इति सर्वान्नानुमत्यधिकरणम्॥

## 449.ஶப்தஶ்சாதோऽகாமகாரே(3-4-31)

யதோ ப்ரஹ்மவிதாமந்யேஷாம் ச ஸர்வாந்நீநத்வம் ஆபத்விஷயமேவ; அத ஏவ ஸர்வேஷாம் *அகாமகாரே ஶப்த:* - காமகாரஸ்ய ப்ரதிஷேதக: ஶப்தோ வர்ததே। அஸ்தி ஹி கடாநாம் ஸம்ஹிதாயாம் காமகாரஸ்ய ப்ரதிஷேதக: ஶப்த:, *"தஸ்மாத்ப்ராஹ்மண: ஸுராம் ந பிபதி பாப்மநா நோத்ஸ்ருஜா இதி"*(கா.ஸம்)[1] இதி। பாப்மநா ஸம்ஸ்ப்ருஷ்டோ ந பவாநீதி மத்வா ப்ராஹ்மண: ஸுராம் ந பிபதீத்யர்த:।। 31 ।।

இதி ஸர்வாந்நாநுமத்யதிகரணம்।।7।।

## 449.ஶப்த: ச அத: அகாமகாரே(3-4-31)

**அதனால்தான், இஷ்டப்படி செய்வதை மறுக்கும் வேத-வாக்யம் உள்ளது**

**அத: ச** (அதனால் தான்) - எதனால், ப்ரஹ்ம-ஜ்ஞாநிகளுக்கும் மற்றவர்களுக்கும் கூட எல்லா உணவையும் உண்ணுதல் ஆனது, ஆபத்து-நிலையைப் பற்றியதாகவே ஆகுமோ, அதனால்தான் எல்லாருக்கும்

**அகாமகாரே** (இஷ்டப்படி செய்வது கூடாது என்பதில்) - இஷ்டப்படி செய்வதைத் தடுக்கும்

**ஶப்த:** - வாக்யம் உள்ளது; கட-சாகையினரின் ஸம்ஹிதையில், இஷ்டப்படி செய்வதைத் தடுக்கும் வாக்யம், [1]**"ஆகையால் ப்ராஹ்மணன் பாபத்துடன் சேரக் கூடாது என்பதால், கள் குடிக்க மாட்டான்"** என்கிறது. நான் பாபம் ஒட்டுபவனாக ஆக மாட்டேன் என்று எண்ணி ப்ராஹ்மணன் கள் குடிப்பது கிடையாது என்று அர்த்தம்.

*********************************************

**ஸர்வாந்நாநுமத்யதிகரணம் முற்றிற்று.**

# 116.விஹிதத்வாதிகரணம்(3-4-8)

## முன் குறிப்பு

வேதம் விதித்த கர்மங்களை நித்யம், அநித்யம் என இரு விதமாக சொல்லலாம்.

நித்யம் என்றால் கட்டாயம் செய்ய வேண்டும் என்று அர்த்தம்; அநித்யம் என்றால், பலனில் ஆசையிருந்தால் செய்யலாம்; இல்லாவிட்டால் செய்ய வேண்டாம் என்று அர்த்தம். இப்படி இரண்டுமாகவும் ஒரு கர்மம் ஆக முடியாது; அப்படியானால் முரண்பாடு வரும்.

**பூர்வபக்ஷம்** - அக்னிஹோத்ரம் என்பது நித்யகர்மம்; கட்டாயம் செய்ய வேண்டும்; ஆனால், மோக்ஷபலனுக்காக ப்ரஹ்ம-உபாஸனம் செய்யும் ஜ்ஞாநி ஆனவர், அந்த உபாஸனத்துக்கு அங்கமாக அக்னிஹோத்ரம் செய்வர்; அப்போது அநித்யம் ஆகிறது; மோக்ஷபலன் வேண்டுமானால் செய்யலாம் என்று ஆகிறது; இப்படி ஒரே கர்மமே இருவிதமாக ஆக முடியாது; எனவே, இந்த அக்நிஹோத்ரம் ஆனது, உபாஸநத்துக்கு அங்கம் என்று சொன்னால், நித்யமான கர்மாவாக ஆக முடியாது; அதனால், உபாஸநம் செய்யாத ஸாதாரணமானவர்கள் இதனைச் செய்யவேண்டாம் என்றாகும்.

இதற்காக, நித்யமான அக்னிஹோத்ரம் வேறு; ப்ரஹ்மவித்யைக்கு அங்கமான அக்னிஹோத்ரம் வேறு என்று சொன்னால் ப்ரஹ்மவித்யைக்கான அக்னிஹோத்ரம் செய்பவர், அது தவிர நித்யமான அக்னிஹோத்ரத்தை தனியாக செய்ய வேண்டும்.

**ஸித்தாந்தம்** - இரண்டும் ஒன்றுதான்; இரு வேறு வேதவாக்யங்கள் இருவிதமாக சொல்வதால், முரண்பாடு இல்லை; ஒரே வேதவாக்யம் இருந்தால், அது இரு விஷயத்தை விதிக்க முடியாது; ஒன்றை மட்டும் விதித்தால், மற்றொன்று வேறு ப்ரமாணத்தால் ஏற்படுமானால், இரண்டுக்கும் முரண்பாடு வரும்; ஆனால், இங்கே அப்படி இல்லை; இரு வேதவாக்யங்கள் இரு விஷயங்களை சொல்கின்றன. எனவே, முரண்பாடு இல்லை.

ப்ரஹ்மவித்யை செய்யாத சாதாரணமானவன், தினமும் நித்ய-அக்நிஹோத்ரம் செய்ய வேண்டும் என ஶாஸ்த்ரம் சொல்வதால், அதைச் செய்ய வேண்டும்; ப்ரஹ்மவித்யை செய்பவன் தினமும் அக்னிஹோத்ரம் செய்வான்; அது, நித்யம் ஆகும்; அதுவே, ப்ரஹ்மவித்யைக்கு அங்கமாகவும் ஆவதால், அநித்யமும் ஆகலாம்.

ஆனால் இரண்டு அக்னிஹோத்ரத்தையும் தனித்தனியாக இரண்டுமுறை செய்ய வேண்டும் என்பது கிடையாது; இரண்டுக்குமாக சேர்த்து ஒரே முறை செய்தால் போதும்.

எடுத்துக்காட்டாக, வேறொரு விஷயம் பார்க்கலாம். உயிர் வாழும் வரை அக்னிஹோத்ரம் செய்ய வேண்டும்'' என்று ஒரு வாக்யம் உள்ளது; ஸ்வர்க்கம் விரும்புபவன் அக்னிஹோத்ரம் செய்க'' என்று ஒரு வாக்யம்; முதல் வாக்யத்தின்படி அக்னிஹோத்ரம் செய்வதற்கு உயிர் வாழ்தல் என்பது தகுதி; இரண்டாவது வாக்யத்தின்படி ஸ்வர்க்கத்தில் விருப்பம் என்பது தகுதியாகும்; ஒரே அக்னிஹோத்ரமே இரண்டின் பொருட்டும் ஆகலாம்; வேதம் அப்படி தனித்தனியாக சொல்வதால் அப்படி ஆவதில் முரண்பாடு இல்லை.

அதுபோல, இங்கும் ஆஶ்ரம-கர்மங்கள் வித்யையின் பொருட்டும் ஆகலாம்; வாழ்தல் எனும் தகுதியை இட்டு நித்ய-கர்மம் ஆகவும் ஆகலாம்; அதில் முரண்பாடு இல்லை; ஏனெனில், அப்படி வேதமே இரு வாக்யங்களில் தனித்தனியாக விதிக்கிறபடியால்.

# ११६. विहितत्वाधिकरणम् (३-४-८)

## ४५०.विहितत्वाच्चाश्रमकर्मापि (३-४-३२)

यज्ञादिकर्माङ्गिका ब्रह्मविद्येत्युक्तम्। तानि च यज्ञादीनि कर्माणि अमुमुक्षुणा केवलाश्रमिणाऽप्यनुष्ठेयानि, उत नेति चिन्तायाम्,

विद्याङ्गानां सतां केवलाश्रम(मि)शेषत्वे नित्यानित्यसंयोगविरोधः प्रसज्यत इति यज्ञादीनां केवलाश्रम(मि)धर्मत्वं न सम्भवति,

इति प्राप्ते उच्यते - **आश्रमकर्मापि** इति। आश्रमस्य कर्मापि भवति। केवलाश्रमिणाऽपि अनुष्ठेयानीत्यर्थः। कुतः? "**यावज्जीवमग्निहोत्रं जुहोति**"(आ.श्रौ.सू.3-14-8)[1] इत्यादिना विहितत्वात्, जीवननिमित्ततया नित्यवद्विहितत्वादित्यर्थः॥ ३२ ॥

तथा विद्याङ्गतया च, "**तमेतं वेदानुवचनेन**"(बृ.6-4-22)[2] इत्यादिना विहितत्वात् विद्याशेषतयाऽप्यनुष्ठेयानीत्याह -

## ४५१.सहकारित्वेन च (३-४-३३)

---

# 116. விஹிதத்வாதிகரணம் (3-4-8)

## 450.விஹிதத்வாச்சாஶ்ரமகர்மாபி(3-4-32)

யஜ்ஞாதிகர்மாங்கிகா ப்ரஹ்மவித்யா இத்யுக்தம்। தாநி ச யஜ்ஞாதீநி கர்மாணி அமுமுக்ஷுணா கேவலாஶ்ரமிணாऽபி அநுஷ்டேயாநி, உத நேதி சிந்தாயாம்,

வித்யாங்காநாம் ஸதாம் கேவலாஶ்ரம(மி)ஶேஷத்வே நித்யாநித்யஸம்யோகவிரோதः ப்ரஸஜ்யத இதி யஜ்ஞாதீநாம் கேவலாஶ்ரம(மி)தர்மத்வம் ந ஸம்பவதி -

இதி ப்ராப்தே உச்யதே - *ஆஶ்ரமகர்மாபி* - இதி। ஆஶ்ரமஸ்ய கர்மாபி பவதி। கேவலாஶ்ரமிணாऽபி அநுஷ்டேயாநீத்யர்தः। குதः? "*யாவஞ்ஜீவமக்நிஹோத்ரம் ஜுஹோதி*"(ஆ.ஶ்ரௌ.ஸூ.3-14-8) இத்யாதிநா விஹிதத்வாத்; ஜீவநநிமித்ததயா நித்யவத்விஹிதத்வாதித்யர்தः।। 32 ।।

ததா வித்யாங்கதயா ச, "*தமேதம் வேதாநுவசநேந*"(ப்ரு.6-4-24)[2] இத்யாதிநா விஹிதத்வாத் வித்யாஶேஷதயாऽப்யநுஷ்டேயாநீத்யாஹ -

## 451.ஸஹகாரித்வேந ச (3-4-33)

# 116.விஹிதத்வாதிகரணம்(3-4-8)

## 450.விஹிதத்வாத் ச ஆஶ்ரமகர்ம அபி(3-4-31)

*விதிக்கப்பட்டபடியால், ஆஶ்ரமத்தின் [மோக்ஷபலனை விரும்பாமல், வெறும் ஆஶ்ரமத்தில் இருப்பவனுக்கும் செய்யவேண்டிய] கர்மமும் ஆகும்*

**ஸந்தேஹம்**

யஜ்ஞம் முதலிய கர்மங்களை அங்கமாகக் கொண்டது ப்ரஹ்ம-வித்யை என்று சொல்லப் பட்டது; அந்த யஜ்ஞம் முதலிய கர்மங்கள், மோக்ஷத்தை அடையும் விருப்பம் அற்றவனாய், வெறும் ஆஶ்ரமத்தில் இருப்பவனாலும் அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியவையா? அல்லது இல்லையா? என்று விசாரம்.

**பூர்வபக்ஷம்**

யஜ்ஞம் முதலியவை, (மோக்ஷ-விருப்பம் இல்லாமல்) வெறும் ஆஶ்ரமத்துக்கு மட்டுமான தர்மம் என்பதாக ஆகாது; ஏனெனில், வித்யைக்கு (உபாஸனத்துக்கு) அங்கமாக ஆகும் இவை, வெறும் (மோக்ஷ-விருப்பம் சேராத) ஆஶ்ரமத்துக்கும் அங்கமானால், நித்ய-அநித்ய-தொடர்பு எனும் முரண்பாடு வர நேரிடும்; ஆகையால், (இந்த) யஜ்ஞம் முதலியவை வெறும் ஆஶ்ரம-தர்மமாக ஆக முடியாது.

**ஸித்தாந்தம்**

இப்படி, பூர்வபக்ஷம் நேரிட, ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது -

**ஆஶ்ரமகர்ம அபி -** ஆஶ்ரமத்தின் கர்மமும் ஆகும்; வெறும் (மோக்ஷபலனில் விருப்பம் இல்லாமல்) ஆஶ்ரமத்தில் இருப்பவர்களுக்கும் அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியவையே என்று அர்த்தம்.

ஏன்?

**விஹிதத்வாத்** (விதிக்கப்பட்டபடியால்) - [1]**''வாழும்வரை அக்னிஹோத்ர ஹோமம் செய்ய வேண்டும்''** முதலியதால் விதிக்கப்பட்டபடியால் - ஜீவனத்தை நிமித்தமாகக் கொண்டு நித்யகர்மமாக விதிக்கப்பட்டபடியால் என்று அர்த்தம்.



அப்படியே வித்யைக்கு அங்கமாகவும் அவை அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியவை; ஏனெனில், [2]**''அவனை வேதமோதுதல் கொண்டு (யஜ்ஞம் கொண்டு) உபாஸனம் செய்ய விரும்புவர்''** என்பது முதலியதால், விதிக்கப்பட்டுள்ளது - என்று சொல்கிறார் -

## 451.ஸஹகாரித்வேந ச(3-4-33)

*[வித்யைக்கு] துணை புரியும் காரணமாகவும் [அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியவை]*

विद्योत्पत्तिद्वारेण विद्यासहकारितयाऽप्यनुष्ठेयानि। अग्निहोत्रादीनामिव जीवनाधिकार-स्वर्गाधिकारवत् विनियोगपृथक्त्वेनोभयार्थत्वं न विरुध्यत इत्यर्थः॥ ३३ ॥

तद्वदेव कर्मान्तरत्वमपि नास्तीत्याह -

## ४५२.सर्वथाऽपि त एवोभयलिङ्गात् (३-४-३४)

**सर्वथा** - विद्यार्थत्वे आश्रमार्थत्वेऽपि, **त एव** यज्ञादय इति प्रतिपत्तव्यम्; न कर्म-स्वरूपभेद इत्यर्थः। कुतः? **उभयलिङ्गात्** - उभयत्र श्रुतौ यज्ञादिशब्दैः प्रत्यभिज्ञाप्य विनियोगात्, कर्मस्वरूपभेदे प्रमाणाभावाच्च॥ ३४ ॥

## ४५३.अनभिभवं च दर्शयति (३-४-३५)

**''धर्मेण पापमपनुदति''**(तै.2.63-78)[1] इत्यादिभिश्च तानेव यज्ञादिधर्मान् निर्दिश्य तैर्विद्याया **अनभिभवं** पापकर्मभिरुत्पत्तिप्रतिबन्धाभावं **दर्शयति।** अहरहरनुष्ठीयमानैर्हि यज्ञादिभिर्विशुद्धेऽन्तःकरणे प्रत्यहं प्रकृष्यमाणा विद्या उत्पद्यते। अतस्त एवोभयत्र यज्ञादयः॥३५॥

इति विहितत्वाधिकरणम् ॥ ८ ॥

---

வித்யோத்பத்தித்வாரேண வித்யாஸஹகாரிதயாபி அநுஷ்டேயாநி। அக்நிஹோத்ராதீநாமிவ ஜீவநாதிகாரஸ்வர்காதிகாரவத் விநியோகப்ருதக்த்வேந உபயார்தத்வம் ந விருத்யத இத்யர்த:।। 33 ।।

தத்வதேவ கர்மாந்தரத்வமபி நாஸ்தீத்யாஹ -

## 452.ஸர்வதாऽபி த ஏவோபயலிங்காத்(3-4-34)

*ஸர்வதா* - வித்யார்தத்வே ஆஶ்ரமார்தத்வேऽபி, த ஏவ யஜ்ஞாதய: இதி ப்ரதிபத்தவ்யம்। ந காமஸ்வரூபபேத: இத்யர்த:। குத:? *உபயலிங்காத்* - உபயத்ர ஶ்ருதௌ யஜ்ஞாதிஶப்தை: ப்ரத்யபிஜ்ஞாப்ய விநியோகாத், கர்மஸ்வரூபபேதே ப்ரமாணாபாவாச்ச।। 34 ।।

## 453.அநபிபவம் ச தர்ஶயதி (3-4-35)

*"தர்மேண பாபமபநுததி"*(தை.2.63-78)[1] இத்யாதிபிஶ்ச தாநேவ யஜ்ஞாதிதர்மாந் நிர்திஶ்ய தைர்வித்யாயா *அநபிபவம்* பாபகர்மபி: உத்பத்திப்ரதிபந்தாபாவம் தர்ஶயதி। அஹரஹரநுஷ்டீயமாநைர்ஹி யஜ்ஞாதிபி: விஶுத்தேऽந்த:கரணே ப்ரத்யஹம் ப்ரக்ருஷ்யமாணா வித்யா உத்பத்யதே। அத: த ஏவோபயத்ர யஜ்ஞாதய:।। 35 ।।

இதி விஹிதத்வாதிகரணம் ।। 8 ।।

வித்யையை உண்டாக்குவதன் மூலம் வித்யைக்கு உதவும் துணைக் காரணமாகவும் (ஆஶ்ரம-கர்மங்கள்) அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியவை; வாழ்தல் எனும் தகுதி உடையதாகவும், ஸ்வர்க்கம் (ஸ்வர்க்கத்தில் விருப்பம்) எனும் தகுதி உடையதாகவும் விநியோகம் செய்து விதிக்கும் வேதவாக்யம் தனித் தனியாக இருப்பதால், அக்னிஹோத்ரம் முதலியவற்றுக்கு ஆவது போல, இரண்டின் பொருட்டும் ஆதல் முரண்படாது என்று பொருள்.



அதுபோலவே, வேறு கர்மம் என்பதும் கிடையாது என்கிறார் -

**452.ஸர்வதா அபி தே ஏவ உபயலிங்காத்(3-4-34)**

***எல்லா விதத்தாலும், அதே கர்மங்களே; இரண்டிடத்தும் உள்ள அடையாளத்தால்***

**ஸர்வதா -** வித்யையின் பொருட்டும் ஆஶ்ரமத்தின் பொருட்டும் ஆனாலும்,

**தே ஏவ -** அந்த யஜ்ஞம் முதலியவையே என்று அறிய வேண்டும்; கர்மஸ்வரூபம் வேறானது அல்ல என்று அர்த்தம்.

ஏன்?

**உபயலிங்காத் -** இரண்டிலும் வேதத்தில் 'யஜ்ஞம்' முதலிய சொற்களை இட்டு ஒன்றாக நினைவுறுத்தி (அததற்கு) அங்கமாக விதிப்பதால்.

மேலும் கர்ம-ஸ்வரூபத்தில் வேறுபாடு ஆவதில் ப்ரமாணம் இல்லாதபடியாலும்.



**453.அநபிபவம் ச தர்ஶயதி(3-4-34)**

***முடக்கம் இல்லாமையையும் வேதம் காண்பிக்கிறது***

[1]**''தர்மத்தால் பாபத்தை களைகிறான்''** முதலியவற்றால், அந்த யஜ்ஞம் முதலிய தர்மங்களையே குறிப்பிட்டு, அவற்றால், வித்யைக்கு (உபாஸனத்துக்கு) முடக்கமின்மை ஆகும் என்பதைக் காண்பிக்கிறது. வித்யை உண்டாவதற்கு பாபகர்மங்களால் நேரிடும் தடையானது, (யஜ்ஞம் முதலிய தர்மத்தால்) இல்லாதாகும் என காண்பிக்கிறது. தினந்தினமும் அனுஷ்டானம் செய்யப்படும் யஜ்ஞம் முதலியவற்றால் மனஸ் ஶுத்தமாகும்போது, ஒவ்வொரு நாளும் அதிகமாக வளரும் வித்யை உண்டாகும்.

ஆகையால், அதே யஜ்ஞம் முதலியவையே இரண்டு இடத்திலும் ஆகும்.

**விஹிதத்வாதிகரணம் முற்றிற்று.**

# 117.விதுராதிகரணம்(3-4-9)

## முன் குறிப்பு

விதுரர் என்றால், மனைவியை இழந்தவர் என்று அர்த்தம். எல்லா ஆச்ரமத்தவர்களும் அவரவரது ஆச்ரம-கர்மங்களைச் செய்துகொண்டு ப்ரஹ்ம-வித்யை அனுஷ்டானம் செய்யலாம் என சொல்லியாயிற்று; ஆனால், விதுரர்களுக்கு ஒரு ஆச்ரமமும் கிடை-யாது; அதேபோல, ப்ரஹ்மசாரியாக இருந்து ஸமாவர்தன வ்ரதமும் செய்தவன், பின்னர் விவாஹத்துக்கான பெண் கிடைக்காமல் போனால், அவனுக்கும் ஆச்ரமம் கிடையாது. இப்படி ஆச்ரமம் அற்றவர்கள் ப்ரஹ்ம-வித்யையைச் செய்ய முடியுமா என விசாரம்.

பூர்வபக்ஷம் - ஆச்ரமதர்மங்கள் ஆகிற அங்கங்கள் இல்லாதபடியால், அவர்கள் ப்ரஹ்-மவித்யையை செய்ய முடியாது, ; தகுதி கிடையாது.

ஸித்தாந்தம் - பீஷ்மர், ரைக்வர், ஸம்வர்த்தர் முதலியவர்கள் ஒரு ஆச்ரமத்தையும் சேராதவர்கள்; அவர்கள் ப்ரஹ்ம-வித்யையை அனுஷ்டானம் செய்தனர்; எனவே, அவர்களுக்கும் தகுதி உண்டு.

அவர்கள் ஜபம், உபவாஸம், தானம் முதலியதை அங்கமாக செய்துகொண்டு வித்-யையை அனுஷ்டானம் செய்வர்.

பீஷ்மர், விவாஹம் ஆன க்ருஹஸ்தர்; ஆனாலும், புத்ரனை பெற்றுக் கொள்ள மாட்-டேன் என்று சபதம் செய்திருந்தார்; பெண்-தொடர்பே இல்லாமல் இருந்ததால், ப்ரஹ்மசாரி என்று சொல்வர்; அவர் யஜ்ஞம் செய்பவர்தான்; ஆனாலும், க்ருஹஸ்த-ஆச்ரம-தர்மத்தை முழுமையாக அனுஷ்டானம் செய்யாத அவருக்கும் ப்ரஹ்ம-வித்யை அனுஷ்டானம் இருந்தது என்பது இங்கே கருத்து.

ஸம்வர்த்தர் வீட்டை விட்டு காட்டில் வசிக்க வேண்டிய துர்க்கதி நேரிட்டது; மனை-வியைப் பிரிந்து இருந்தாலும் ப்ரஹ்ம-வித்யை அனுஷ்டானம் செய்தார்.

ரைக்வர் சரிதம் உபநிஷத்தில் ஸம்வர்க்க வித்யையில் உள்ளது; அவர், ப்ரஹ்-மசர்ய-ஆச்ரமத்தை விட்டு, ஸமாவர்தனம் செய்துகொண்டவர்; அதனால், ஆச்ரமம் அற்றவர்; அப்போதே ப்ரஹ்ம-உபாஸனம் செய்து கொண்டிருந்தார்; பின்னர் கல்யா-ணம் ஆயிற்று - அபசூத்ராதிகரணம் காண்க 1-3-9.

ஆனால், மனிதன் முடிந்தவரை ஒரு ஆச்ரமத்தைப் பற்றி இருக்க வேண்டும்; அதுதான் உயர்ந்தது; அதுதான் சாஸ்த்ர முறையில் ஆகும்; அதற்கு முடியாமல், ஆபத்து காலமாக இருந்தால் ஆச்ரமம் இல்லாமலும் இருக்க நேரிடலாம்; அப்போது அது தவறு இல்லை. இதனைப் பற்றி விரிவாக கடைசி ஸூத்ரத்தில் காணலாம்.

# ११७.विधुराधिकरणम् (३-४-९)

## ४५४.अन्तरा चापि तु तद्दृष्टेः (३-४-३६)

चतुर्णामाश्रमिणां ब्रह्मविद्यायामधिकारोऽस्ति (इति?), विद्यासहकारिण आश्रमधर्मा इति चोक्तम्। ये पुनराश्रमान् अन्तरा वर्तन्ते विधुरादयः, तेषां ब्रह्मविद्यायामधिकारोऽस्ति, न वेति विशये,

आश्रमधर्मेतिकर्तव्यताकत्वात् विद्यायाः, अनाश्रमिणाञ्च आश्रमधर्माभावात् नास्त्य-धिकारः,

इति प्राप्ते उच्यते - **अन्तरा चापि तु** इति। तुशब्दः पक्षव्यावृत्त्यर्थः। **चशब्दोऽवधारणे। अन्तरा** वर्तमानानाम् - अनाश्रमिणामपि विद्यायामधिकारोऽस्त्येव। कुतः? **तद्दृष्टेः।** दृश्यते हि रैक्वभीष्मसंवर्तादीनामनाश्रमिणामपि ब्रह्मविद्यानिष्ठत्वम्।

न चाश्रमधर्मैरेव विद्यानुग्रह इति शक्यं वक्तुम्, **''यज्ञेन दानेन तपसाऽनाशकेन''** (बृ.6-4-22)[1] इति दानादीनाम् आश्रमेषु अनैकान्तिकानामप्यनुग्राहकत्वदर्शनात्।

---

# 117. விதுராதிகரணம் (3-4-9)

## 454.அந்தரா சாபி து தத்த்ருஷ்டே: (3-4-36)

சதுர்ணாமாஶ்ரமிணாம் ப்ரஹ்மவித்யாயாமதிகாரோऽஸ்தி (இதி), வித்யாஸஹகாரிண: ஆஶ்ரமதர்மா இதி சோக்தம்। யே புந: ஆஶ்ரமாந் அந்தரா வர்தந்தே விதுராதய:, தேஷாம் ப்ரஹ்மவித்யாயாமதிகாரோऽஸ்தி, ந வேதி விஶயே -

ஆஶ்ரமதர்மேதிகர்தவ்யதாகத்வாத் வித்யாயா:, அநாஶ்ரமிணாஞ்ச ஆஶ்ரமதர்மாபாவாத் நாஸ்த்யதிகார:,

இதி ப்ராப்தே உச்யதே - *அந்தரா சாபி து* இதி। துஶப்த: பக்ஷவ்யாவ்ருத்த்யர்த:। சஶப்த: அவதாரணே। அந்தரா வர்தமாநாநாம் - அநாஶ்ரமிணாமபி வித்யாயாமதிகார: அஸ்த்யேவ। குத:? *தத்த்ருஷ்டே:।* த்ருஶ்யதே ஹி ரைக்வபீஷ்மஸம்வர்தாதீநாம் அநாஶ்ரமிணாமபி ப்ரஹ்மவித்யாநிஷ்டத்வம்।

ந ச ஆஶ்ரமதர்மைரேவ வித்யாநுக்ரஹ: இதி ஶக்யம் வக்தும், *''யஜ்ஞேந தாநேந தபஸாऽநாஶகேந''*(ப்ரு.6-4-22)[1] இதி தாநாதீநாம் ஆஶ்ரமேஷு அநைகாந்திகாநாமபி அநுக்ராஹகத்வதர்ஶநாத்।

# 117.விதுராதிகரணம்(3-4-9)

## 454.அந்தரா ச அபி து தத்த்ருஷ்டே:(3-4-36)

*[ஆஶ்ரமங்களுக்கு] இடையில் [ஆஶ்ரமம் இன்றி] இருப்பவர்களுக்கும் ப்ரஹ்மவித்யையில் அதிகாரம் உண்டுதான்; அதைக் காண்பதால்.*

**ஸங்கதி - விஷயதொடர்பு & ஸந்தேஹம்**

நான்கு ஆஶ்ரமத்தவர்க்கும் ப்ரஹ்மவித்யையில் அதிகாரம் உண்டு என்றும் ஆஶ்ரமதர்மங்கள் வித்யைக்கு (உபாஸனத்துக்கு) உதவுபவை என்றும் சொல்லி-யாயிற்று; மனைவியை இழந்தவர் முதலியவராக, ஆஶ்ரமங்களுக்கு இடையில் (ஆஶ்ரமம் அற்றவராக) யார் உள்ளனரோ, அவர்களுக்கு ப்ரஹ்மவித்யையில் அதிகாரம் உண்டா இல்லையா என்று ஸந்தேஹம் வரும்போது,

**பூர்வபக்ஷம்**

அதிகாரம் இல்லை; ஏனெனில், வித்யைக்கு ஆஶ்ரமதர்மங்கள் அங்கமாக ஆகின்றன; ஆஶ்ரமம் அற்றவர்களுக்கோ ஆஶ்ரமதர்மங்கள் கிடையாது.

*(அங்கங்களான யாகங்கள் செய்து அவற்றின் மூலம் உபாஸனத்தை வளர்த்திக் கொள்-ளவேண்டும் என்று முன்பே சொல்லியாயிற்று. மனைவி இல்லாதவர்களுக்கு யாகங்கள் செய்ய முடியாதனபடியால், உபாஸநம் வளர வாய்ப்பில்லை; அங்கத்தை விட்டு உபாஸநம் செய்வதும் சரியில்லை; அதனால் அவர்களுக்கு உபாஸநம் செய்யும் தகுதி வராது.)*

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **அந்தரா ச அபி து** என்று.

**'து'** என்ற சொல் பூர்வபக்ஷத்தைக் களைவதன் பொருட்டு ஆகும்.

**'ச'** என்ற சொல் அவதாரணம் (அதுதான்) எனும் பொருளில் ஆகும்.

**அந்தரா அபி** - இடையில் இருப்பவர்களுக்கும் - ஆஶ்ரமம் அற்றவர்களுக்-கும், ப்ரஹ்மவித்யையில் அதிகாரம் உண்டுதான்.

ஏன்?

**தத்த்ருஷ்டே:** - ஆஶ்ரமம் அற்ற ரைக்வர், பீஷ்மர், ஸம்வர்தர் முதலியவர் ப்ரஹ்மவித்யை அனுஷ்டானம் செய்தவர்களாக காண்பதால்.

*(ரைக்வர் சரிதம் உபநிஷத்தில் உள்ளது; பீஷ்மர் மற்றும் ஸம்வர்த்தர் சரிதம் மஹாபார-தத்தில் உள்ளது; முன் குறிப்பில் காணலாம்.)*

ஆஶ்ரமதர்மங்களை இட்டுத்தான் வித்யைக்கு உதவுதல் ஆகும் என்பது கிடையாது; ஏனெனில், [1] **"யஜ்ஞத்தால், தானத்தால், உபவாஸ-தபஸ்ஸால்"** என்று ஆஶ்ரமங்களில் நியமமாக அல்லாத தானம் முதலியவையும் வித்யைக்கு உதவு-பவையாக ஆவது காணப்படுகிறது.

यथोध्वरेतस्सु विद्यानिष्ठत्वदर्शनादग्निहोत्रादिव्यतिरिक्तैरेव विद्यानुग्रहः क्रियते, तथाऽनाश्रमिष्वपि विद्यादर्शनादाश्रमानियतैः जपोपवासदानदेवताराधनादिभिर्विद्यानुग्रहः शक्यते कर्तुम्॥३६॥

## ४५५.अपि स्मर्यते (३-४-३७)

अपिच अनाश्रमिणामपि जपादिभिरेव विद्यानुग्रहः स्मर्यते, **''जप्येनापि च संसिद्ध्येत् ब्राह्मणो नात्र संशयः। कुर्यादन्यन्न वा कुर्यात् मैत्रो ब्राह्मण उच्यते''** (मनु.2-87)[1] इति। संसिद्ध्येत् - जपाद्यनुगृहीतया विद्यया सिद्धो भवतीत्यर्थः॥ ३७ ॥

## ४५६.विशेषानुग्रहश्च (३-४-३८)

न केवलं न्यायस्मृतिभ्यामयमर्थः साधनीयः; श्रूयते चानाश्रमनियतैर्धर्मविशेषैर्विद्यानुग्रहः, **''तपसा ब्रह्मचर्येण श्रद्धया विद्ययाऽऽत्मानमन्विष्य''** (प्र.1-10)[2] इति॥३८॥

---

யதா உத்வரேதஸ்ஸு வித்யாநிஷ்டத்வதர்ஶநாத் அக்நிஹோத்ராதி-வ்யதிரிக்தைரேவ வித்யாநுக்ரஹ: க்ரியதே, ததா அநாஶ்ரமிஷ்வபி வித்-யாதர்ஶநாத் ஆஶ்ரமாநியதை: ஜபோபவாஸதாநதேவதாராதநாதிபி: வித்-யாநுக்ரஹ: ஶக்யதே கர்தும்।। 36 ।।

## 455.அபி ஸ்மர்யதே (3-4-37)

அபிச அநாஶ்ரமிணாமபி ஜபாதிபிரேவ வித்யாநுக்ரஹ: ஸ்மர்யதே, *''ஜப்யேநாபி ச ஸம்ஸித்த்யேத் ப்ராஹ்மணோ நாத்ர ஸம்ஶய:। குர்யாதந்யந்ந வா குர்யாத் மைத்ரோ ப்ராஹ்மண உச்யதே।।* (மநு.2-87)[1] இதி। ஸம்ஸித்த்யேத்-ஜபாத்யநுக்ருஹீதயா வித்யயா ஸித்தோ பவதீத்யர்த:।।37।।

## 457.விஶேஷாநுக்ரஹஶ்ச (3-4-38)

ந கேவலம் ந்யாயஸ்ம்ருதிப்யாம் அயமர்த: ஸாதநீய:, ஶ்ரூயதே ச அநாஶ்ரமநியதை: தர்மவிஶேஷைர்வித்யாநுக்ரஹ:, *''தபஸா ப்ரஹ்மசர்யேண ஶ்ரத்தயா வித்யயாऽऽத்மாநமந்விஷ்ய(ஷ்யேத்)''*(ப்ர.1-10)[2] இதி।।38।।

ஸந்யாஸிகளிடம், ப்ரஹ்ம-வித்யை அனுஷ்டானம் காண்பதால், அக்னி-ஹோத்ரம் முதலியதை விட வேறானவற்றின் மூலம் வித்யைக்கு உதவி செய்யப்-படுகிறது; (இந்த விஷயம் முன்பே சொல்லப்பட்டது) அது எப்படியோ, அப்படியே, ஆஶ்ரமம் அற்றவர்களுக்கும் ப்ரஹ்மவித்யையை காண்பதால், ஆஶ்ரமத்துக்கு நியமமாக ஆகாத ஜபம், உபவாஸம், தானம், தேவ-ஆராதனம் முதலியவற்றைக் கொண்டும் வித்யைக்கு உதவி செய்வதற்கு முடியும்.



## 455.அபி ஸ்மர்யதே (3-4-37)

*ஸ்ம்ருதியில் சொல்லப்படுகிறதும் கூட*

மேலும், ஆஶ்ரமம் அற்றவர்களுக்கு ஜபம் முதலியவற்றைக் கொண்டே வித்யை ஸ்ம்ருதியில் சொல்லப்படுகிறது - [1]**''ப்ரஹ்மவித்யை அனுஷ்டானம் செய்-பவன் ஜபமந்த்ரத்தாலும் கூட பல-ஸித்தி பெறுவான்; இதில் ஸந்தேஹம் இல்லை; மற்றதை (யாகத்தை) செய்யலாம் அல்லது செய்யாமல் இருக்கலாம்; (உயிர்க-ளின்) நட்புடையவன் ப்ராஹ்மணன் ஆக சொல்லப் படுகிறான்''** என்று. ஸித்தி பெறுவான் - ஜபம் முதலியதால் உதவப்பெற்ற வித்யையால் ஸித்தி உடையவன் ஆவான் என்று பொருள்.

*(யாகம் செய்பவன் சில ப்ராணி-வதம் செய்ய வேண்டியுள்ளது; ஜபம் செய்பவன் அப்படியில்லாமல் எல்லா ப்ராணிகளுக்கும் நண்பன் ஆக இருக்கிறான் என்று சொல்கிறது; உண்மையில் யாகம் செய்யும்போதும் ப்ராணி-வதம் என்பது தோஷமாக ஆகாது என்று 3-1-25) ஸூத்ரத்தில் சொல்லியாயிற்று; ஆனாலும், இது ஜபத்தை புகழ்- வதற்காக சொன்னது)*



## 456.விஶேஷாநுக்ரஹ: ச(3-4-38)

*விஶேஷதர்மங்களால் [வித்யைக்கு] உதவியும் ஆகும்.*

இந்த விஷயமானது, ந்யாயத்தாலும் ஸ்ம்ருதியாலும் மட்டும் சாதிக்கப்பட வேண்டும் என்பது இல்லை; ஆஶ்ரமத்துக்கு நியமமாக ஆகாத விஶேஷ-தர்மங்-களால் வித்யைக்கு உதவியானது [2]**''தபஸ்ஸாலும், ப்ரஹ்மசர்யத்தாலும், ஶ்ரத்தை-யாலும் ஜீவ-வித்யையாலும் பரமாத்மாவை உபாஸனம் செய்து''** என்று வேதத்-திலும் ஓதப்படுகிறது.



## ४५७.अतस्त्वितरज्ज्यायो लिङ्गाच्च (३-४-३९)

तुशब्दोऽवधारणे। **अतः** - अनाश्रमित्वात्, **इतरत्** - आश्रमित्वमेव ज्यायः। अनाश्रमित्वमापद्विषयम्; शक्तस्य त्वाश्रमित्वमेवोपादेयमित्यर्थः; भूयोधर्मकाल्पधर्मकयोर-तुल्यकार्यत्वात्।

**लिङ्गाच्च** - स्मृतेरेवेत्यर्थः। स्मर्यते च शक्तं प्रति आश्रमस्योपादेयत्वम्, **''अनाश्रमी न तिष्ठेत्तु दिनमेकमपि द्विजः''** (दक्ष.1-10)[1] इत्यादिना। निवृत्तब्रह्मचर्यस्य मृतभार्यस्य च अवैराग्ये सति दारालाभः आपत्॥ ३९ ॥

इति विधुराधिकरणम् ॥ ९ ॥

---

## 458.அதஸ்த்விதரஜ்ஜ்யாயோ லிங்காச்ச (3-4-39)

**துஶப்த:** அவதாரணே। *அத:* - அநாஶ்ரமித்வாத், *இதரத்* - ஆஶ்ரமித்வமேவ ஜ்யாய:। அநாஶ்ரமித்வம் ஆபத்விஷயம், ஶக்தஸ்ய து ஆஶ்ரமித்வமேவ உபாதேயம் இத்யர்த:, பூயோதர்மகால்பதர்மகயோ: அதுல்யகார்யத்வாத்।

***லிங்காச்ச*** - ஸ்ம்ருதேரேவேத்யர்த:। ஸ்மர்யதே ச ஶக்தம் ப்ரதி ஆஶ்ரமஸ்யோபாதேயத்வம், *''அநாஶ்ரமீ ந திஷ்டேத்து திநமேகமபி த்விஜ:''*(தக்ஷ. 1-10)[1] இத்யாதிநா। நிவ்ருத்தப்ரஹ்மசர்யஸ்ய ம்ருதபார்யஸ்ய ச அவைராக்யே ஸதி தாராலாப: ஆபத்।। 36 ।।

இதி விதுராதிகரணம் ।। 9 ।।

## 457.அத: து இதரத் ஜ்யாய: லிங்காத் ச(3-4-39)

*இதை விட மற்றதே சிறந்தது; ஸ்ம்ருதியாலும் ஆகும்.*

**'து'** என்ற சொல் அவதாரணத்தில் (அது மட்டும் என்ற பொருளில்) ஆகும்.

**அத:** (இதைக் காட்டிலும்) - ஆஶ்ரமம் இன்றி இருப்பதைக் காட்டிலும்

**இதரத் து** (மற்றதுதான்) - ஆஶ்ரமத்தை உடையவனாய் இருப்பதுதான்

**ஜ்யாய: -** (சிறந்தது).

ஆஶ்ரமம் இன்றி இருப்பது ஆபத்தினைப் பற்றி ஆகும்; ஶக்தி உள்ளவருக்கு ஆஶ்ரமத்துடன் இருப்பதே விதிக்கப் படுவதாகும் என்று பொருள்; ஏனெனில், அதிக-தர்மங்களைக் கொண்டதும் குறைந்த தர்மங்களைக் கொண்டதும் சமான-மான பலனை உடையதாக ஆகாது.

**லிங்காத் ச** (ஸ்ம்ருதியாலேயே) - ஶக்தி உள்ளவனைக் குறித்து ஆஶ்ரமம் பற்றப்பட வேண்டியதாக ஸ்ம்ருதியிலும் சொல்லப்படுகிறது - [1]**''த்விஜன் (மூவர்ணதத்தவன்) ஆஶ்ரமம் அற்றவனாக ஒரு நாள் கூட இருக்கக் கூடாது''** முதலியதால்.

ஆபத்து என்பது, ப்ரஹ்மசர்யத்திலிருந்து (முடித்துவிட்டு) வெளிவந்தவனுக்-கும் மனைவியை இழந்தவனுக்கும் வைராக்யம் இல்லாதபோது மனைவி கிடைக்-காமல் இருத்தல் ஆகும்.

*✍(ப்ரஹ்மசாரியாக இருப்பவன், பிறகு, ஸமாவர்த்தன-வ்ரதம் மூலம் அந்த ஆஶ்ரமத்தை விடுவான்; உடனே, விவாஹம் மூலம் க்ருஹஸ்த-ஆஶ்ரமம் பற்ற வேண்டும்; அல்லது வைராக்-யத்தால் ஸந்யாஸ-ஆஶ்ரமம் பற்றலாம்; வைராக்யமும் இல்லாமல் விவாஹத்துக்கு பெண்ணும் கிடைக்காமல் போனால், அது அவனுக்கு தர்மஶாஸ்த்ரப்படி ஆபத்து காலம்.*

*மனைவியை இழந்தவனும் வைராக்யத்துடன் ஸந்யாஸ-ஆஶ்ரமம் பற்றலாம்; அல்லது மற்றோரு விவாஹம் செய்துகொள்ளலாம்; வைராக்யமும் இல்லாமல் பெண்ணும் கிடைக்காமல் போனால், அதுதான் ஆபத்துகாலம்.*

*இந்த ஆபத்து-காலத்தில் ஆஶ்ரமம் இல்லாமல் இருப்பது தவறில்லை. மீதி சமயங்களில் ஏதாவது ஒரு ஆஶ்ரமத்தை பற்றி இருக்க வேண்டும்).✍*

***

**விதுராதிகரணம் முற்றிற்று.**

# 118.தத்பூதாதிகரணம்(3-4-10)

## முன் குறிப்பு

ப்ரஹ்மசாரி, க்ருஹஸ்தன், வானப்ரஸ்தன், ஸந்யாஸி என நான்கு ஆஶ்ரமத்தவர்கள்; முன் ஆஶ்ரமத்திலிருந்து அடுத்தடுத்த ஆஶ்ரமம் போக வேண்டும்; மேலிலிருந்து கீழே இறங்கக்கூடாது; ஸந்யாஸி மீண்டும் க்ருஹஸ்தன் ஆகக் கூடாது; வானப்ரஸ்தன் காட்டை விட்டு வரக்கூடாது; இப்படி தவறி நடந்தால் பதிதர் என ஶாஸ்த்ரம் இகழ்கிறது; தர்மத்தின் பாதையிலிருந்து நழுவி தாழ்மையில் அதோகதியில் விழுந்தவர்கள் என்று அர்த்தம்; அவர்களை மிக மோசமாக தர்மஶாஸ்த்ரம் சொல்கிறது.

ப்ரஹ்மசாரிகள் இருவிதம் - 1. உபகுர்வாணர் - தற்போது ப்ரஹ்மசாரியானாலும் பின்னர் விவாஹம் செய்து கொள்ளும் எண்ணம் உடையவர். 2. நைஷ்டிகர் - இறுதி வரை விவாஹமே செய்து கொள்ளாமல், ப்ரஹ்மசாரியாகவே இருக்க வ்ரதம் பூண்டவர்; இந்த நைஷ்டிகர் கூட தன் வ்ரதத்தை விட்டு, பின்னர் விவாஹம் செய்து கொண்டால் பதிதர்தான்.

இந்த பதிதர்களுக்கு ப்ரஹ்ம-வித்யை செய்ய தகுதி கிடையாது.

கேள்வி - இவர்கள் செய்த தவறை ஶாஸ்த்ரத்தில் மிகவும் மோசமான மஹாபாதகமாக (மஹாபாபமாக) கணக்கிடவில்லை; எனவே, உபபாதகம் என்று கணக்கிடலாம்; பிராயச்-சித்தம் செய்து, இவர்கள் ஶுத்த- மாகலாம் எனலாமா?.

பதில் - இவர்களது பாபமானது மஹாபாதகமோ அல்லது உபபாதகமோ, எப்படி ஆனாலும், இவர்களுக்கு ப்ராயச்சித்தம் கிடையாது என ஶாஸ்த்ரம் தெளிவாக சொல்கிறது.

கேள்வி - ப்ரஹ்மசர்ய-ஆஶ்ரமத்திலிருந்து தவறிவனுக்கு ப்ராயச்சித்தம் சொல்லி-யுள்ளது.

பதில் - அது உபகுர்வாணன் ஆன ப்ரஹ்மசாரிக்கு சொன்னது; நைஷ்டிக-ப்ரஹ்-மசாரி தவறினால், ப்ராயச்சித்தம் கிடையாது.

மேலும் மஹான்களும் பதிதர்களை சேர்த்துக்கொள்வதில்லை; விலக்குகின்றனர்; ஆகவே, அவர்களுக்கு ப்ரஹ்ம-வித்யை கிடையாதுதான்.

# ११८. तद्भूताधिकरणम् (३-४-१०)

**४५८. तद्भूतस्य तु नातद्भावो जैमिनेरपि नियमात् तद्रूपाभावेभ्यः (३-४-४०)**

नैष्ठिकवैखानसपरिव्राजकाश्रमेभ्यः प्रच्युतानामपि ब्रह्मविद्यायामधिकारोऽस्ति, नेति चिन्तायाम्,

विधुरादिवत् अनाश्रमैकान्तैर्दानादिभिर्विद्यानुग्रहसम्भवादस्त्यधिकारः,

इति प्राप्ते उच्यते - **तद्भूतस्य तु नातद्भावः** इति। **तुशब्दः** पक्षव्यावृत्यर्थः। **तद्भूतस्य** - नैष्ठिकाद्याश्रमनिष्ठस्य, **न अतद्भावः** - अतथाभावः अनाश्रमित्वेनावस्थानं न सम्भवति।

कुतः? **तद्रूपाभावेभ्यो नियमात्** - तद्रूपाणि तेषां नैष्ठिकादीनां रूपाणि वेषाः, धर्मा इत्यर्थः, तेषामभावाः - तद्रूपाभावाः; तेभ्यः शास्त्रैर्नियमात्।

# 118. தத்பூதாதிகரணம் (3-4-10)

**458. தத்பூதஸ்ய து நாதத்பாவோ ஜைமிநேரபி நியமாத் தத்ரூபாபாவேப்ய: (3-4-40)**

நைஷ்டிக-வைகாநஸ-பரிவ்ராஜகாஶ்ரமேப்ய: ப்ரச்யுதாநாமபி ப்ரஹ்ம-வித்யாயாமதிகார: அஸ்தி, நேதி சிந்தாயாம் -

விதுராதிவத் அநாஶ்ரமைகாந்தை: தாநாதிபி: வித்யாநுக்ரஹஸம்பவாத் அஸ்த்யதிகார:,

இதி ப்ராப்தே உச்யதே - *தத்பூதஸ்ய து நாதத்பாவ:* - இதி। துஶப்த: பக்ஷவ்யாவ்ருத்யர்த:। தத்பூதஸ்ய - நைஷ்டிகாத்யாஶ்ரமநிஷ்டஸ்ய, ந அதத்பாவ: - அததாபாவ:, அநாஶ்ரமித்வேநாவஸ்தாநம் ந ஸம்பவதி।

குத:? *தத்ரூபாபாவேப்யோ நியமாத்।* தத்ரூபாணி = தேஷாம் நைஷ்டி-காதீநாம் ரூபாணி - வேஷா:, தர்மா இத்யர்த:, தேஷாமபாவா: - தத்ரூபா-பாவா:, தேப்ய: ஶாஸ்த்ரைர்நியமாத்।

# 118.தத்பூதாதிகரணம்(3-4-10)

## 458.தத்பூதஸ்ய து ந அதத்பாவ: ஜைமினே: அபி நியமாத் தத்ரூபாபாவேப்ய:(3-4-40)

*அந்த நைஷ்டிகம் முதலியதை அடைந்தவருக்கு அது இல்லாமை சரியல்ல; அந்த ஆஶ்ரமி-தர்மங்கள் அன்றி இருப்பதிலிருந்து ஶாஸ்த்ரங்களால் விலக்கப் படுவதால்; ஜைமினிக்கும் [இக்கருத்து] ஆகும்.*

**ஸந்தேஹம்**

நைஷ்டிகம், வானப்ரஸ்தம், ஸந்யாஸம் ஆகிய ஆஶ்ரமங்களிலிருந்து தவறினவர்களுக்கும ப்ரஹ்மவித்யையில் தகுதி உண்டா இல்லையா என்று விசாரம் ஆகும்போது,

**பூர்வபக்ஷம்**

தகுதி உண்டு; ஏனெனில், மனைவியை இழந்தவர் முதலியவர் போல ஆஶ்ரமங்களுக்கு நியமமாக ஆகாத தானம் முதலியவற்றைக் கொண்டு வித்யை வரலாம்.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட, ஸித்தாந்தம் சொல்லப் படுகிறது - **தத்பூதஸ்ய து ந அதத்பாவ:** என்று.

**'து'** என்ற சொல் பூர்வபக்ஷத்தை களைவதற்காக ஆகும்.

**தத்பூதஸ்ய -** நைஷ்டிகம் முதலிய ஆஶ்ரமத்தில் இருப்பவர்களுக்கு

**அதத்பாவ: -** அப்படி ஆகாமை; ஆஶ்ரமம் இல்லாதவராக இருத்தல்;

**ந -** ஆகாது;

ஏன்?

**தத்ரூபாபாவேப்ய:** (அந்த ஆஶ்ரமிகளின் தர்மங்கள் இல்லாமல் இருப்பதிலிருந்து) -

(தேஷாம் ரூபாணி தத்ரூபாணி; தேஷாம் அபாவா: தத்ரூபாபாவா:, தேப்ய: என்று ஸமாஸ-குறிப்பு)

- தேஷாம் - அவர்களின் - நைஷ்டிகர் முதலியவர்களின்,
- ரூபாணி - ரூபங்கள் - வேஷங்கள்; தர்மங்கள் என்று அர்த்தம்;
- தேஷாம் அபாவா: - அவற்றின் இல்லாமைதான் தத்ரூபாபாவங்கள்;
- தேப்ய: - அவற்றிலிருந்து

**நியமாத் -** ஶாஸ்த்ரங்களால் விலக்கப் படுவதால்.

नैष्ठिकाद्याश्रमप्रविष्टान् स्वाश्रमधर्मनिवृत्तिभ्यो नियच्छन्ति हि शास्त्राणि,

- **''ब्रह्मचार्याचार्यकुलवासी तृतीयोऽत्यन्तमात्मानमाचार्यकुलेऽवसादयन्''**(छा.2-23-1)[1] इति,
- **''अरण्यमियात्; ततो न पुनरेयात्''**(?)[2] इति,
- **''सन्न्यस्याग्निं न पुनरावर्तयेत्''**(?)[3] इति च।

अतो विधुरादिवत् नैष्ठिकादीनामनाश्रमित्वेनावस्थानासम्भवात् न तान् अधिकरोति ब्रह्मविद्या। **जैमिनेरपि** इति अविगानं दर्शयन् उक्तं स्वाभिमतं द्रढयति॥ ४० ॥

अथ स्यात् - नैष्ठिकादीनां ब्रह्मचर्यात्प्रच्युतानां प्रायश्चित्ताधिकारः सम्भवति। अस्ति च प्रायश्चित्तमधिकारलक्षणे निरूपितम्, **''अवकीर्णिपशुश्च तद्वत्''**(पू.मी.सू.6-8-4)[4] इति। अतः प्रच्युतब्रह्मचर्यस्य प्रायश्चित्तसम्भवात् कृतप्रायश्चित्तो ब्रह्मविद्यायामधिकरिष्यति इति। तत्राह -

**४५९.न चाऽऽधिकारिकमपि पतनानुमानात् तदयोगात् (३-४-४१)**

अधिकारलक्षणोक्तमपि प्रायश्चित्तं नैष्ठिकादीनां तद्भ्रष्टानां न सम्भवति, कुतः?

நைஷ்டிகாத்யாஶ்ரமப்ரவிஷ்டாந் ஸ்வாஶ்ரமதர்மநிவ்ருத்திப்யோ நியச்சந்தி ஹி ஶாஸ்த்ராணி,

- *''ப்ரஹ்மசார்யாசார்யகுலவாஸீ த்ருதீயோऽத்யந்தமாத்மாநமாசார்யகுலேऽவஸாதயந்''* (சா.2-23-1)[1] இதி,
- *''அரண்யமியாத், ததோ ந புநரேயாத்''*(?)[2] இதி,
- *''ஸந்ந்யஸ்யாக்நிம் ந புநராவர்தயேத்''*(?)[3] இதி ச।

அத: விதுராதிவத் நைஷ்டிகாதீநாம் அநாஶ்ரமித்வேநாவஸ்தாநாஸம்பவாத் ந தாந் அதிகரோதி ப்ரஹ்மவித்யா। ஜைமிநேரபி இதி அவிகாநம் தர்ஶயந் உக்தம் ஸ்வாபிமதம் த்ரடயதி।। 40 ।।

அத ஸ்யாத் - நைஷ்டிகாதீநாம் ப்ரஹ்மசர்யாத் ப்ரச்யுதாநாம் ப்ராயஶ்சித்தாதிகார: ஸம்பவதி। அஸ்தி ச ப்ராயஶ்சித்தம் அதிகாரலக்ஷணே நிரூபிதம், *''அவகீர்ணிபஶுஶ்ச தத்வத்''*(பூ.மீ.ஸூ.6-8-4)[4] இதி। அத: ப்ரச்யுதப்ரஹ்மசர்யஸ்ய ப்ராயஶ்சித்தஸம்பவாத் க்ருதப்ராயஶ்சித்த: ப்ரஹ்மவித்யாயாமதிகரிஷ்யதி-இதி। தத்ராஹ -

**459.ந சாऽऽதிகாரிகமபி பதநாநுமாநாத் ததயோகாத் (3-4-41)**

அதிகாரலக்ஷணோக்தமபி ப்ராயஶ்சித்தம் நைஷ்டிகாதீநாம் தத்ப்ரஷ்-

ஏனெனில், நைஷ்டிகம் முதலிய ஆஶ்ரமங்களில் நுழைந்தவர்களை தமது ஆஶ்ரமதர்மங்களை செய்யாமல் விடுவதிலிருந்து ஶாஸ்த்ரங்கள் தடுக்கின்றன -

- [1]**''மூன்றாவதான (நைஷ்டிக)ப்ரஹ்மசாரீ ஆசார்யகுலத்தில் தீர வசிப்பவனாய் ஶரீரத்தை ஆசார்யகுலத்தில் முடிப்பவன் ஆகிறான்** - என்று.
- (வானப்ரஸ்த-ஆஶ்ரமத்துக்கு) [2]**''காட்டுக்கு செல்; அங்கிருந்து திரும்பி வராதே''** - என்று,
- [3]**''ஸந்யாஸம் ஏற்று மீண்டும் அக்னியை திருப்பி ஏற்காதே''** - என்றும்.

ஆகையால், மனைவியை இழந்தவர் முதலியவர் (ஆபத்தில் ஆஶ்ரமம் அற்றவராய் இருப்பது) போல, நைஷ்டிகர் முதலியவர்க்கு ஆஶ்ரமம் அற்றவராய் இருப்பது சரியாகாது; ஆகையால், அவர்களை ப்ரஹ்ம-வித்யை தகுந்தவராக ஏற்காது.

**ஜைமினே: அபி** (ஜைமினி முனிவருக்கும்) - என்று (அவரது) சம்மதத்தை காண்பித்துக் கொண்டு சொல்லப்பட்ட தன் கருத்தை உறுதிப் படுத்துகிறார்.



**கேள்வி -** ப்ரஹ்மசர்யத்திலிருந்து தவறின நைஷ்டிகர் முதலியவருக்கு ப்ராயச்சித்தம் மூலம் தகுதி வரும்; (பூர்வமீமாம்ஸாவில் ஆறாவதான) அதிகார-அத்யாயத்தில் [4]**''ப்ரஹ்மசர்யத்திலிருந்து தவறின நைஷ்டிகருக்கு (கழுதைப்)பசு-யாகமாகிற ப்ராயச்சித்தம் அந்த உபநயனம் போல (லௌகிக-அக்னியில்) ஆகும்''** என்று நிரூபிக்கப்பட்ட ப்ராயச்சித்தம் உள்ளதும் கூட; அதனால், ப்ரஹ்மசர்யத்திலிருந்து தவறினவருக்கு ப்ராயச்சித்தம் ஆகுமாதலால், ப்ராயச்சித்தம் செய்தவன் ப்ரஹ்ம-வித்யையில் தகுதி பெறுவான் என்று ஆகட்டும்.

பதில் - அதற்கு பதில் சொல்கிறார் -

## 459.ந ச ஆதிகாரிகம் அபி பதநாநுமாநாத் ததயோகாத்(3-4-41)

***பதனத்தை ஸ்ம்ருதி சொல்வதால், அந்த ப்ராயச்சித்தம் வராது என்பதால் அதிகார அத்யாயத்தில் சொன்ன ப்ராயச்சித்தமும் கூட கிடையாதுதான்.***

**ஆதிகாரிகம் அபி -** அதிகார அத்யாயத்தில் சொன்ன ப்ராயச்சித்தமும் கூட

**ந ச** (கிடையாதுதான்) - நைஷ்டிகர் முதலியவராய் அதிலிருந்து தவறினவருக்கு வராது.

ஏன்?

**पतनानुमानात् तदयोगात्** - नैष्ठिकादीनां प्रच्युतानां पतनस्मृतेः तस्य प्रायश्चित्तस्यासम्भवात् -

**"आरूढो नैष्ठिकं धर्मं यस्तु प्रच्यवते द्विजः।**
**प्रायश्चित्तं न पश्यामि येन शुध्येत् स आत्महा"**(अग्नि.16-5-23)[1] इति।

अतोऽधिकारिलक्षणोक्तं प्रायश्चित्तमितरब्रह्मचारिविषयम्॥ ४१ ॥



## ४६०.उपपूर्वमपीत्येके भावमशनवत् तदुक्तम् (३-४-४२)

नैष्ठिकादीनां ब्रह्मचर्यप्रच्यवनम**उपपूर्वम्** - उपपातकम् महापातकेष्वपरिगणितत्वादिति, तत्र प्रायश्चित्तस्य **भावं** - विद्यमानतामप्ये**के** आचार्या मन्यन्ते, **अशनवत्**- यथा मध्वशनादिनिषेधः तत्प्रायश्चित्तश्च उपकुर्वाणस्य नैष्ठिकादीनां च समानम्।

**तदुक्तं** स्मृतिकारैः, **"उत्तरेषां चैतदविरोधि"**(गौ.ध.सू.1-3-4)[2] इति। गुरुकुलवासिनो यदुक्तम्, तत् स्वाश्रमाविरोधि उत्तरेषामप्याश्रमिणां भवतीत्यर्थः। तद्वदिहापि ब्रह्मचर्यप्रच्यवने प्रायश्चित्तसम्भ(सद्भा)वात् ब्रह्मविद्यायोग्यताऽप्यस्ति॥ ४२ ॥



டாநாம் ந ஸம்பவதி, குத:? *பதநாநுமாநாத் ததயோகாத்* - நைஷ்டிகாதீநாம் ப்ரச்யுதாநாம் பதநஸ்ம்ருதே: தஸ்ய ப்ராயஶ்சித்தஸ்யாஸம்பவாத் -

*"ஆருடோ நைஷ்டிகம் தர்மம் யஸ்து ப்ரச்யவதே த்விஜ:।*
*ப்ராயஶ்சித்தம் ந பஶ்யாமி யேந ஶுத்யேத் ஸ ஆத்மஹா।।"* (அக்நி.16-5-23)[1]

இதி। அத: அதிகாரிலக்ஷணோக்தம் ப்ராயஶ்சித்தம் இதரப்ரஹ்மசாரிவிஷயம்।। 41 ।।



## 460.உபபூர்வமபீத்யேகே பாவமஶநவத் தத்துக்தம் (3-4-42)

நைஷ்டிகாதீநாம் ப்ரஹ்மசர்யப்ரச்யவநம் *உபபூர்வம்* - உபபாதகம் மஹாபாதகேஷ்வபரிகணிதத்வாத் இதி, தத்ர ப்ராயஶ்சித்தஸ்ய *பாவம்* - வித்யமாநதாமபி ஏகே ஆசார்யா மந்யந்தே, *அஶநவத்* - யதா மத்வஶநாதிநிஷேத: தத்ப்ராயஶ்சித்தஞ்ச உபகுர்வாணஸ்ய நைஷ்டிகாதீநாம் ச ஸமாநம்।

*ததுக்தம்* ஸ்ம்ருதிகாரை:, *"உத்தரேஷாம் சைததவிரோதி"*(கௌ.த.ஸூ. 1-3-4)[2] இதி। குருகுலவாஸிநோ யதுக்தம், தத் ஸ்வாஶ்ரமாவிரோதி உத்தரேஷாமப்யாஶ்ரமிணாம் பவதீத்யர்த:। தத்வத் இஹாபி ப்ரஹ்மசர்யப்ரச்யவநே ப்ராயஶ்சித்தஸம்ப(ஸத்பா)வாத் ப்ரஹ்மவித்யாயோக்யதாऽப்யஸ்தி।।42।।



**பதநாநுமாநாத் -** தவறினவரான நைஷ்டிகர் முதலியவருக்கு பதனத்தை ஸ்ம்ருதி சொல்வதால்,

**தத்யோகாத் -** அந்த ப்ராயச்சித்தம் வராது என்பதால்.

[1] **''நைஷ்டிக தர்மத்தை ஏற்ற எந்த த்விஜன் (அதிலிருந்து) தவறுகிறானோ, தன்னையே அழித்துக் கொள்ளும் அவன், எதன் மூலம் சுத்தியடைவானோ, அப்படியான ப்ராயச்சித்தத்தை நான் காணவில்லை''** என்று (ஸ்ம்ருதி).

ஆகையால் அதிகார-அத்யாயத்தில் சொன்ன ப்ராயச்சித்தம் ஆனது மற்ற ப்ரஹ்மசாரிகளைப் பற்றியது ஆகும்.

*✍(நைஷ்டிகன் என்பவன், விவாஹம் செய்துகொள்ளாமல் ப்ரஹ்மசாரியாகவே இருக்க வ்ரதம் பூண்டவன்; அவன் அந்த நியமத்திலிருந்து தவறினால் பதிதன் ஆகிவிடுவான்; அவனுக்கு ப்ராயச்சித்தம் கிடையாது; அப்படி இல்லாமல், விவாஹம் செய்து கொள்ளலாம் என்று இருக்கும் ப்ரஹ்மசாரீ உபகுர்வாணன்; அவன் ப்ரஹ்மசர்ய தர்மத்தை மீறினால், ப்ராயச்சித்தம் சொல்லப் பட்டது)✍*



## 460.(பூ) உபபூர்வம் அபி இதி ஏகே பாவம் அமஸநவத் தத் உக்தம்(3-4-42)

*உபபாதகம் என்று மதுபானம் போல ப்ராயச்சித்தம் இருப்பதையும் சிலர் கருதுவர்; அது [ஸ்ம்ருதியில்] சொல்லப்பட்டது.*

நைஷ்டிகர் முதலியவர், ப்ரஹ்மசர்யத்திலிருந்து தவறுதல் என்பது,

**உபபூர்வம்** (உப என்ற சொல்லை முன்னிட்டதான பாதகம்) - உபபாதகம் ஆகும்; ஏனெனில், மஹாபாதகங்களில் கணக்கிடப் படவில்லை;

**பாவம் அபி -** ஆகையால் அங்கு ப்ராயச்சித்தம் இருப்பதையும்

**ஏகே -** சில ஆசார்யர்கள் கருதுகின்றனர்.

**அமஸநவத் -** மதுபானம் (கள் குடித்தல்) முதலியதை விலக்குதலும் அதற்கு ப்ராயச்சித்தமும் உபகுர்வாணனுக்கும் நைஷ்டிகர் முதலியவர்க்கும் சமமாக உள்ளது;

**தத் உக்தம் -** அது ஸ்ம்ருதி-நூல்களைச் செய்தவர்களால் சொல்லப் பட்டது., - [2]**''பின்னவருக்கும் இது முரண்படாதது''** என்று; குருகுலவாஸிக்கு எது சொல்லப்பட்டதோ, அது தன் ஆஶ்ரமத்துக்கு முரண்படாதது பின்னர் உள்ள ஆஶ்ரமவாசிகளுக்கும் ஆகும் என்று அர்த்தம்.

அது எப்படியோ, அப்படியே இங்கும் ஆகும்; ப்ரஹ்மசர்யம் தவறினால், ப்ராயச்சித்தம் வருமாதலால், ப்ரஹ்மவித்யையில் தகுதியும் உண்டு.

*✍(கௌதமதர்மஸூத்ரத்தில் ப்ரஹ்மசாரியின் தர்மங்களை சொல்ல ஆரம்பித்து, மதுபானம் முதலியன கூடாது என சொல்கிறார்; பின்னர், நைஷ்டிகர், க்ருஹஸ்தர் முதலியவர்களை*

## ४६१.बहिस्तूभयथाऽपि स्मृतेराचाराच्च (३-४-४३)

तुशब्दो मतान्तरव्यावृत्त्यर्थः। उपपातकत्वे महापातकत्वेऽप्येते **बहिर्भूता** एव ब्रह्मविद्याधिकारिभ्यः, ब्रह्मविद्यायामनधिकृता इत्यर्थः। कुतः? **स्मृतेः** - पूर्वोक्तात् पतनस्मरणात्।

यद्यपि कल्मषनिर्हरणाय कैश्चिद्वचनैः प्रायश्चित्ताधिकारो विद्यते, तथापि कर्माधिकारानुगुणशुद्धिहेतुप्रायश्चित्तं न सम्भवति, **''प्रायश्चित्तं न पश्यामि येन शुध्येत् स आत्महा''** (अग्नि.16-5-23)[1] इति स्मृतेरित्यर्थः।

**आचाराच्च** - शिष्टा हि नैष्ठिकादीन् भ्रष्टान् कृतप्रायश्चित्तानपि वर्जयन्ति। तेभ्यो ब्रह्मविद्यादिकं नोपदिशन्ति। अतः तेषां नास्ति ब्रह्मविद्यायामधिकारः॥ ४३ ॥

इति तद्भूताधिकरणम् ॥ १० ॥

---

## 461.பஹிஸ்தூபயதாऽபி ஸ்ம்ருதேராசாராச்ச (3-4-43)

துஶப்தோ மதாந்தரவ்யாவ்ருத்த்யர்த:। உபபாதகத்வே மஹாபாதகத்வேऽபி ஏதே **பஹிர்பூதா** ஏவ **ப்ரஹ்மவித்யாதிகாரிப்ய:,** **ப்ரஹ்மவித்யா**யாமநதிக்ருதா இத்யர்த:। குத:? *ஸ்ம்ருதே:* - பூர்வோக்தாத் பதநஸ்மரணாத்।

யத்யபி கல்மஷநிர்ஹரணாய கைஶ்சித்வசநை: ப்ராயஶ்சித்தாதிகாரோ வித்யதே, ததாபி கர்மாதிகாராநுகுணஶுத்திஹேதுப்ராயஶ்சித்தம் ந ஸம்பவதி, *''ப்ராயஶ்சித்தம் ந பஶ்யாமி யேந ஶுத்யேத் ஸ ஆத்மஹா''*(ஆக்நே. 16-5-23)[1] இதி ஸ்ம்ருதே: இத்யர்த:।

*ஆசாராச்ச* - ஶிஷ்டா ஹி நைஷ்டிகாதீந் ப்ரஷ்டாந் க்ருதப்ராயஶ்சித்தாநபி வர்ஜயந்தி। தேப்யோ **ப்ரஹ்மவித்யா**திகம் நோபதிஶந்தி। அத: தேஷாம் நாஸ்தி **ப்ரஹ்மவித்யா**யாமதிகார:।। 43 ।।

இதி தத்பூதாதிகரணம் ।। 10 ।।

சொல்கிறார்; அப்போது, ''முன் ப்ரஹ்மசாரிக்கு சொன்ன விஷயங்கள் முரண்படாதது பின்னவர்க்கும் உண்டு'' என்கிறார்; இதனால் முதலில் சொன்ன சாதாரண-ப்ரஹ்மசாரியும், பின் சொன்ன நைஷ்டிக-ப்ரஹ்மசாரியும் மதுபானம் செய்யக் கூடாது என இருவருக்கும் பொதுவான பாபமாக அது தெரிகிறது; அதனால், அதற்கான ப்ராயச்சித்தமும் இருவருக்கும் பொதுவாக ஆகும்; ப்ராயச்சித்தத்தை இந்த இடத்தில் சொல்லவில்லை; வேறிடத்தில் உள்ளது; ஆனாலும், பாபத்தைச் சொல்வதால், ப்ராயச்சித்தமும் பொதுவாக இங்கே நினைவுக்கு வரும் என்று கருத்து;

அதுபோல ப்ரஹ்மசர்யம் தவறினால் வரும் பாபமும் ப்ராயச்சித்தமும் இருவிதமான ப்ரஹ்மசாரிக்கும் உண்டு; அதனால், இருவரும் ப்ராயச்சித்தம் செய்து சுத்தியடைந்து ப்ரஹ்மவித்யையில் தகுதி பெறலாம் என்று பூர்வபக்ஷ-கருத்து)ஜ



## 461.பஹி: து உபயதா அபி ஸ்ம்ருதே: ஆசாராத் ச(3-4-43)

*இரண்டு விதமாகவும் அவர்கள் வெளியேதான் என்பது ஸ்ம்ருதியாலும் ஆசாரத்தாலும் [ஆகும்].*

**'து'** என்ற சொல் (முன் சொன்ன) வேறு மதத்தை மறுப்பதற்காக ஆகும்.

**உபயதா அபி** (இரண்டு விதமாக ஆனாலும்) - உபபாதகம் ஆனாலும், மஹாபாதகம் ஆனாலும்,

**பஹி:** - ப்ரஹ்மவித்யைக்கு தகுதி உடையவர்களை விட இவர்கள் வெளியானவர்கள்தாம்; ப்ரஹ்மவித்யையில் தகுதி அற்றவர்கள் என்று கருத்து.

ஏன்?

**ஸ்ம்ருதே:** - பதனம் அடைதலைப் பற்றி முன் சொன்ன ஸ்ம்ருதி-வசனத்தால்.

பாபம் போக்குவதற்காக, ப்ராயச்சித்த-தகுதியானது, சில வசனங்களின் படி உண்டு; ஆனாலும், கர்ம-அனுஷ்டானத்தில் தகுதிக்கு ஏற்ற ஶுத்திக்கு காரணமான ப்ராயச்சித்தம் வராது; ஏனெனில், [1]**''தன்னையே அழித்துக் கொள்ளும் அவன், எதன் மூலம் ஶுத்தியடைவானோ, அப்படியான ப்ராயச்சித்தத்தை நான் காணவில்லை''** என்று ஸ்ம்ருதி சொல்வதால் என்று அர்த்தம்.

**ஆசாராத் ச** (அனுஷ்டானத்தாலும்) - ப்ரஷ்டர்களான (வ்ரதத்திலிருந்து தவறிய) நைஷ்டிகர்களை ப்ராயச்சித்தம் செய்தவரையும் ஶிஷ்டர்கள் விட்டு விடுகின்றனர்; அவர்களுக்கு ப்ரஹ்மவித்யை முதலியதை உபதேசம் செய்வதில்லை; ஆகையால் அவர்களுக்கு ப்ரஹ்மவித்யையில் தகுதி இல்லை.

*************************************

**தத்பூதாதிகரணம் முற்றிற்று**

# 119.ஸ்வாம்யதிகரணம்(3-4-11)

## முன் குறிப்பு

யாகத்தில் உத்கீத உபாஸனம் பற்றி மேலும் ஒரு விசாரம் - உத்கீத-உபாஸனம் யார் செய்ய வேண்டும்? யாகம் செய்யும் யஜமானனா? அல்லது யாகம் செய்து தரும் ருத்விக்கா?

ஆத்ரேயர் மதம் - யஜமானன் செய்ய வேண்டும்; யார் ஶாஸ்த்ரத்தை அனுஷ்டானம் செய்கிறாரோ, அவருக்குதான் பலன் வரும் என்பது பொதுவான நியமம்; உத்கீத-உபா-ஸனத்தின் பலன் யாக-பலனில் தடையில்லாமை என்பது; அது யஜமானனுக்குத் தேவை; ஆகவே, அவர்தான் உபாஸனம் செய்ய வேண்டும்.

ஔடுலோமி மதம் - ரித்விக் செய்ய வேண்டும்; யாகத்தில் ஆரம்பத்தில் யஜமானன் ரித்விக்களை யாகத்தில் வரிப்பான்; ''நீங்கள் யாகம் முழுவதும் எல்லா அங்கங்களுடன் கூட நடத்தித் தர வேண்டும்'' என்று கேட்பான்; அவர்களும் அதை ஏற்பார்கள்; பின்னர் இறுதியில் அவர்களுக்கு உரிய தக்ஷிணை கொடுப்பான்; உலகில் குறிப்பிட்ட காலத்தில், குறிப்பிட்ட வேலையை முடித்து கொடுக்கும்படி சிலரை குத்தகை எடுப்பது போல இது; (லௌகிகமான உதாஹரணம் தந்ததற்கு க்ஷமிக்கவேணும்) எனவே, யாகத்தில் எல்லா செயலும் யஜமானனுக்காக ரித்விக்தான் செய்வார். பலன் யஜமானனுக்கு வரும்.

(உ.ம்) யாகத்தில் ப்ரணயனம் என்று ஒரு அங்கம்; ஜலத்தைக் கொண்டு வருதல் என்று அர்த்தம்; சமஸபாத்ரத்தால் இதனைச் செய்வர்; யாகம் செய்யும் யஜமானனுக்கு பசுச்செல்வம் எனும் பலன் கிடைக்க வேண்டுமானால், கோதோஹனம் எனும் பாத்ரத்தால் ப்ரணயனம் செய்யவேண்டும்; அந்த கோதோஹன-பாத்ரத்தை ரித்விக்தான் எடுப்பார்; பலன் யஜமானனுக்கு; அதுபோல, இங்கும் உத்கீத-உபாஸனமும் ரித்விக் செய்ய வேண்டும்; பலன் யஜமானனுக்கு.

கேள்வி - ரித்விக் ப்ரணயனம் செய்யும்போது, யஜமானன் அந்த பாத்ரத்தை எடுக்க முடியாது; எனவே, ரித்விக் எடுப்பார்; ஆனால், உத்கீதம் பாடும்போது, யஜமானன் அதைப்பற்றி உபாஸனம் செய்ய முடியும்; எனவே, அவரே செய்யலாகும்.

பதில் - யாருக்கு முடியும், யாருக்கு முடியாது என்பது பிரச்னை அல்ல; யார் செய்வது முறையாகும் என்பது முக்கியம்; யஜமானனுக்காக யாகம் செய்து தரும் பொறுப்பு ரித்விக்குக்கு உண்டு; அவர் அங்கங்களுடன் முழு யாகமும் செய்து தருவார்; அப்போது, அங்கத்தைப் பற்றிய உபாஸனமும் அவரே செய்வதுதான் தகும் என்பது ஸித்தாந்தம்.

# ११९. स्वाम्यधिकरणम् (३-४-११)

## ४६२.स्वामिनः फलश्रुतेरित्यात्रेयः (३-३-४४)

कर्माङ्गाश्रयाण्युद्गीथाद्युपासनानि किं यजमानकर्तृकाणि, उत ऋत्विक्कर्तृकाणीति चिन्तायाम्,

यजमानकर्तृकाणीत्यात्रेयो मन्यते; कुतः? **फलश्रुतेः** - वेदान्तविहितेषु दहराद्युपासनेषु फलोपासनयोरेकाश्रयत्वदर्शनात् इह च क्रतुफलाप्रतिबन्धरूपस्योद्गीथोपासनफलस्य यजमानाश्रयत्वश्रवणादित्यर्थः।

न च गोदोहनादिवत् अङ्गाश्रयत्वेन यजमानकर्तृकत्वासम्भवः; गोदोहनादिषु ह्यध्वर्युकर्तृकप्रणयनाश्रयगोदोहनोपादानमन्येनाशक्यम्; इह तूद्गातृकर्तृकेऽप्युद्गीथे तस्योद्गीथादेः रसतमत्वानुसन्धानं यजमानेनैव कर्तुं शक्यते॥४४॥

इति प्राप्तेऽभिधीयते -

## ४६३.आर्त्विज्यमित्यौडुलोमिस्तस्मै हि परिक्रीयते (३-४-४५)

# 119. ஸ்வாம்யதிகரணம் (3-4-11)

## 462.ஸ்வாமிந: பலஸ்ருதேரித்யாத்ரேய: (3-3-44)

கர்மாங்காஸ்ரயாணி உத்கீதாத்யுபாஸநாநி கிம் யஜமாநகர்த்ருகாணி, உத ருத்விக்கர்த்ருகாணி இதி சிந்தாயாம்,

யஜமாநகர்த்ருகாணி இதி ஆத்ரேயோ மந்யதே, குத:? *பலஸ்ருதே:* - வேதாந்தவிஹிதேஷு தஹராத்யுபாஸநேஷு பலோபாஸநயோ: ஏகாஸ்ரயத்வதர்ஸநாத் இஹ ச க்ரதுபலாப்ரதிபந்தரூபஸ்ய உத்கீதோபாஸநபலஸ்ய யஜமாநாஸ்ரயத்வஸ்ரவணாத் இத்யர்த:।

ந ச கோதோஹநாதிவத் அங்காஸ்ரயத்வேந யஜமாநகர்த்ருகத்வாஸம்பவ:, கோதோஹநாதிஷு ஹி அத்வர்யுகர்த்ருகப்ரணயநாஸ்ரயகோதோஹநோபாதாநம் அந்யேநாஸக்யம், இஹ து உத்காத்ருகர்த்ருகேऽப்யுத்கீதே தஸ்ய உத்கீதாதே: ரஸதமத்வாநுஸந்தாநம் யஜமாநேநைவ கர்தும் ஸக்யதே॥44॥

இதி ப்ராப்தேऽபிதீயதே-

## 463.ஆர்த்விஜ்யமித்யௌடுலோமிஸ்தஸ்மை ஹி பரிக்ரீயதே (3-4-45)

# 119.ஸ்வாம்யதிகரணம்(3-4-11)

**462.ஸ்வாமிந: பலஶ்ருதே: இதி ஆத்ரேய:(3-4-44)(பூ)**
*[உத்கீத-உபாஸனம் முதலியவை] யஜமானன் செய்பவை; யஜமானனுக்கே பலன் சொல்வதால் என்று ஆத்ரேயர் [கருதுகிறார்]*

**ஸந்தேஹம்**

(யாகம் முதலிய) கர்மங்களின் அங்கங்களைப் பற்றிய உத்கீதம் முதலியன பற்றிய உபாஸனங்கள் யஜமானனை செய்பவராக கொண்டவையா? அல்லது ரித்விக்கினை செய்பவராகக் கொண்டவையா? - என்னும் விசாரத்தில்,

**பூர்வபக்ஷம்**

**ஸ்வாமிந: இதி** (யஜமானன் செய்பவை) - யஜமானனை செய்பவராகக் கொண்டவை என

**ஆத்ரேய: -** ஆத்ரேயர் கருதுகிறார்;

ஏன்?

(ஸ்வாமிந:) **பலஶ்ருதே: -** வேதாந்தங்களில் விதிக்கப்பட்ட தஹரம் முதலிய உபாஸனங்களில் பலனும் உபாஸனமும் ஒருவரிடமே பற்றி இருப்பது காணப் படுகிறது; இங்கும், உத்கீத-உபாஸனத்தின் பலனான யாகபலனுக்கு தடையில்லாமை என்பது, யஜமானனிடம் இருப்பதாக வேதம் சொல்கிறது; அதனால் (உபாயமான உத்கீத-உபாஸனமும் யஜமானன் செய்ய வேண்டும்) என்று அர்த்தம்.

**உள்-ஶங்கை -** கோதோஹனம் முதலியது போல, அங்கத்தைப் பற்றி வருவதால், யஜமானன் செய்வதாக ஆகாது.

**உள்-ஸமாதானம் -** அது கிடையாது; அத்வர்யு செய்யும் ப்ரணயனத்தை ஆஶ்ரயமாகக் கொண்ட கோதோஹனத்தை எடுத்தல் என்பது வேறொருவரால் செய்ய முடியாது; இங்கோ, உத்காதா செய்யும் உத்கீதத்தில், அந்த உத்கீதம் முதலியதை ரஸதமமாக (மிகச் சிறந்த ரஸமாக) எண்ணுதல் என்பது யஜமானனாலும் செய்ய முடியும்.

*(முன் குறிப்பில் விளக்கம் காணலாம்)*



**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது -

**463.ஆர்த்விஜ்யம் இதி ஔடுலோமி: தஸ்மை ஹி பரிக்ரியதே(3-4-45)**
*உத்கீத-உபாஸனம் ரித்விக்கின் செயல் என்று ஔடுலோமி கருதுகிறார்; ஏனெனில், யாகத்தின் பொருட்டு பரிக்ரயணம் செய்யப்படுகிறார்*

**आर्त्विज्यम्** - ऋत्विजः कर्म उद्गीथाद्युपासनमित्यौडुलोमिराचार्यो मन्यते। कुतः? **तस्मै हि** प्रयोजनाय ऋत्विक् परिक्रीयते; फलसाधनभूतस्य साङ्गस्य क्रतोरुपादानायेत्यर्थः। कर्मविधिषु, **''ऋत्विजो वृणीते''**(तै.सं.6-3-2)[1], **''ऋत्विग्भ्यो दक्षिणां ददाति''** (कल्प.?)[2] इति ऋत्विक्कर्तृकत्वशास्त्रेण फलसाधनभूतं साङ्गं कर्म ऋत्विग्भिरनुष्ठेयमित्यवगम्यते; तदन्तर्गतानि कायिकानि मानसानि च कर्माणि ऋत्विक्कर्तृकाण्येव। न च शक्त्यशक्ती तस्य निबन्धनम्।

यद्यप्युद्गीथाद्युपासनं पुरुषार्थः, तथापि क्रत्वधिकृताधिकारत्वात् क्रतोश्च साङ्गस्य ऋत्विक्कर्तृकत्वात्, **''यदेव विद्यया करोति...तदेव वीर्यवत्तरम्''**(छा.1-1-10)[3] इति ऋत्विक्कर्तृकक्रियोपयोगित्वेन विद्यायास्तदेककर्तृकत्वश्रवणात् ऋत्विक्कर्तृकाण्येतानि।

दहरादिषूपासनेषु ऋत्विक्कर्तृकत्वाश्रवणात्, **''शास्त्रफलं प्रयोक्तरि''**(पू.मी.सू.3-7-18)[4] इति न्यायाच्च फलिकर्तृकत्वमेव॥४५॥

इति स्वाम्यधिकरणम्॥ ११ ॥

---

*ஆர்த்விஜ்யம்* - ருத்விஜ: கர்ம உத்கீதாத்யுபாஸநம் இதி *ஔடுலோமி*ராசார்யோ மந்யதே। குத:? *தஸ்மை ஹி* ப்ரயோஜநாய ருத்விக் *பரிக்ரீயதே;* பலஸாதநபூதஸ்ய ஸாங்கஸ்ய க்ரதோருபாதாநாயேத்யர்த:। கர்மவிதிஷு, *''ருத்விஜோ வ்ருணீதே''*(தை.ஸம்.6-3-2)[1], *''ருத்விக்ப்யோ தக்ஷிணாம் ததாதி''*(கல்ப.?)[2] இதி ருத்விக்கர்த்ருகத்வஶாஸ்த்ரேண பலஸாதநபூதம் ஸாங்கம் கர்ம ருத்விக்பிரநுஷ்டேயம் இத்யவகம்யதே, ததந்தர்கதாநி காயிகாநி மாநஸாநி ச கர்மாணி ருத்விக்கர்த்ருகாண்யேவ। ந ச ஶக்த்யஶக்தீ தஸ்ய நிபந்தநம்।

யத்யபி உத்கீதாத்யுபாஸநம் புருஷார்த:, ததாபி க்ரத்வதிக்ருதாதிகாரத்வாத் க்ரதோஶ்ச ஸாங்கஸ்ய ருத்விக்கர்த்ருகத்வாத், *''யதேவ வித்யயா கரோதி...ததேவ வீர்யவத்தரம்''*(சா.1-1-10)[3] இதி ருத்விக்கர்த்ருகக்ரியோபயோகித்வேந வித்யாயா: ததேககர்த்ருகத்வஶ்ரவணாத் ருத்விக்கர்த்ருகாண்யேதாநி।

தஹராதிஷூபாஸநேஷு ருத்விக்கர்த்ருகத்வாஶ்ரவணாத், *''ஶாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி''*(பூ.மீ.ஸூ.3-7-18)[4] இதி ந்யாயாச்ச பலிகர்த்ருகத்வமேவ॥45॥

இதி ஸ்வாம்யதிகரணம்॥ 11 ॥

உத்கீத-உபாஸனம் ஆனது,

**ஆர்த்விஜ்யம் -** ரித்விக்கின் செயல் (ரித்விக் செய்ய வேண்டிய செயல்)

**இதி ஔடுலோமி: -** என்று ஔடுலோமி ஆசார்யர் கருதுகிறார்.

ஏன்?

**ஹி -** ஏனெனில்,

**தஸ்மை -** அந்த பயனின் (யாகத்தின்) பொருட்டு; பலனுக்குக் காரணமான யாகத்தை அங்கத்துடன் கூட செய்வதன் பொருட்டு என்று அர்த்தம்.

**பரிக்ரீயதே -** ரித்விக் பரிக்ரயணம் செய்யப்படுகிறார்! (பரிக்ரயணம் - குறிப்பிட்ட வேலையை தனக்காக செய்து தரும்படி கேட்டு, தக்ஷிணை கொடுத்து வேலை வாங்கிக் கொள்ளுதல்) கர்ம-விதிகளில், [1]**''ரித்விக்களை வரிக்கிறான்''**, [2]**''ரித்விக்களுக்கு தக்ஷிணை கொடுக்கிறான்''** என்று ரித்விக்தான் செய்பவராக ஆக வேண்டும் எனும் ஶாஸ்த்ரத்தால், பலனுக்கு காரணமான கர்மம் அங்கங்களுடன் கூட ரித்விக்களால் செய்யப்பட வேண்டும் என்று தெரிகிறது. அதில் உட்படும் செயல்கள் உடலால் செய்யப்படுபவையும், மனதால் செய்யப் படுபவையும் (எல்லாம்) ரித்விக்கை செய்பவராகக் கொண்டவையே (ரித்விக் செய்பவையே); இதில் அவரால் முடியும்-முடியாது என்பது காரணம் ஆகாது.

உத்கீதம் முதலியதின் உபாஸனம் புருஷனின் பொருட்டு ஆகும் என்றாலும், இந்த உபாஸனங்கள் ரித்விக்கினை கர்த்தாவாக உடையவையே. (ரித்விக் செய்ய வேண்டியவையே); ஏனெனில், யாகம் செய்யும் அதிகாரியையே அதிகாரியாகக் (செய்பவராக) கொண்டவை இவை; அங்கத்துடன் கூடிய (முழு) யாகமும் ரித்விக் செய்து தருகிறார்; [3]**''எந்த யாகத்தை வித்யையுடன் செய்கிறானோ, அதுவே அதிக வீர்யமுடையது ஆகும்''** என்று வித்யையானது, ரித்விக் செய்யும் யாக-க்ரியைக்கு உபயோகப் படுவதாக ஆவதால் யாகத்துடன் ஒரே கர்த்தாவை உடையதாக சொல்கிறது;

*(எந்த யாகத்தை வித்யையுடன் செய்கிறானோ'' என்ற வேத-வாக்யத்தில், 'யாகத்தை' எனும் சொல்லானது, ரித்விக் செய்து தரும் யாகத்தையே குறிக்கும்! ஏனெனில், யாகத்தை ரித்விக்தானே செய்து தருவதாக ஏற்பாடு ஆகி அவர்தானே செய்கிறார்! ''யாகத்தை வித்யையுடன் செய்கிறான்'' என்று சொல்லும்போது யாகம் செய்து தரும் ரித்விக்கே அதனை வித்யையுடன் செய்து தருவார் என்று ஆகும்).*

தஹர-உபாஸனம் முதலியவற்றில், ரித்விக் கர்த்தாவாக ஆவதை வேதம் சொல்லவில்லை என்பதாலும், [4]**''ஶாஸ்த்ரத்தின் பலன் அதனைச் செய்பவரிடம்''** என்ற ந்யாயத்தாலும் பலனைப் பெறுபவர் கர்த்தா ஆக ஆவார் என்பதே ஆகும்.

******************************

**ஸ்வாம்யதிகரணம் முற்றிற்று**

# 120.ஸஹகார்யந்தரவித்யதிகரணம்(3-4-12)

## முன் குறிப்பு

வர்ணாஸ்ரம தர்மங்களும், புலனடக்கமும் ப்ரஹ்மவித்யைக்கு அங்கங்கள் என சொல்லியாயிற்று. இப்போது ப்ரஹ்மவித்யைக்கு வேறு மூன்று அங்கங்கள் சொல்கிறார்.

உபநிஷத்தில் ப்ரஹ்ம-வித்யைக்கு அங்கமாக மூன்று தேவை என சொல்கிறது - 1) பாண்டித்யம் - ப்ரஹ்மம் பற்றிய தெளிவான ஜ்ஞாநம்; இது பக்தியால் விளைவது. 2) பால்யம் - சிறுவன் போல் தன் பெருமையை வெளிக்காட்டாத அடக்கம் 3) மௌனம் - எப்போதும் ப்ரஹ்மத்தையே நினைக்கும் பாங்கு.

பூர்வபக்ஷம் - இங்கு மௌனத்தை விதிப்பதாக சொல்ல முடியாது; ''பிறகு, முனி (மௌனம் உடையவன்)'' என்று சொல்கிறதே தவிர கட்டளைச் சொல் எதுவும் இல்லை. மௌனம் என்பது பாண்டித்யம்தான்; அதையே திருப்பி சொல்கிறது.

ஸித்தாந்தம் - மௌனம் என்றால், வெறும் ஜ்ஞாநம் என்று அர்த்தம் இல்லை; எப்போதும் சிந்தித்து இருத்தல் என்று அர்த்தம்; உலகில் எல்லாரும் வசிஷ்டர் முதலியவர்களை 'முனி' என்று சொல்கிறோம்; ப்ரஹ்மத்தை எப்போதும் இடைவிடாமல் நினைப்பவர் என்ற அர்த்தத்தில் சொல்கிறோம்; அப்படி முனியாக இருத்தல்தான் மௌனம் எனப்படும். எப்போதும் ப்ரஹ்மத்தை சிந்திக்கும் பாங்கு வந்தால், பின்னர் த்யானம் செய்யலாம்.

ஶ்ரவணம் - ஆசார்யனிடம் வேதாந்த- அர்த்தங்களை கேட்டறிதல்.

மனனம் - அந்த அர்த்தத்தை ஆராய்ந்து திடப்படுத்திக் கொள்ளுதல்.

பாண்டித்யம் - பக்தி மூலம் ப்ரஹ்மம் பற்றிய சிறந்த ஜ்ஞாநம் பெறுதல்.

மௌனம் - ப்ரஹ்மத்தை எப்போதும் சிந்திக்கும் பாங்கு.

இந்த நான்கும் வெவ்வேறாகும்; முதல் இரண்டும் விதிக்க வேண்டிய அவஶ்யமில்லை; தானாகவே, மனிதன் அதில் ஈடுபடுவான்; அடுத்த இரண்டும் வித்யையின் அங்கங்களாக விதிக்கப்படுகின்றன. இங்கு விதிச்சொல் இல்லாவிட்டாலும், முன்னர் தெரியாத ஒரு புது விஷயத்தைச் சொல்வதால், விதிக்கப் படுவதாக ஏற்கலாம்.

முதலில் ஸந்யாஸி தர்மங்களைச் சொல்லிவிட்டு, பின்னர் இந்த மௌனத்தை சொல்கிறது; எனவே, இது ஸந்யாசிகளுக்கு உரியதாகாகும்; ஆனால், இது ஒரு எடுத்துக்காட்டுதான்; எல்லா ஆஸ்ரமத்திலும் ப்ரஹ்ம-வித்யை செய்வதற்கு இது தேவைதான்.

# १२०. सहकार्यन्तरविध्यधिकरणम् (३-४-१२)

## ४६४.सहकार्यन्तरविधिः पक्षेण तृतीयं तद्वतो विध्यादिवत् (३-४-४६)

**"तस्माद्ब्राह्मणः पाण्डित्यं निर्विद्य बाल्येन तिष्ठासेत्। बाल्यं च पाण्डित्यं च निर्विद्याथ मुनिः"**(बृ.5-5-1)[1] इत्यत्र बाल्यपाण्डित्यवत् मौनमपि विधीयते, उतानूद्यत इति विशये,

मौनपाण्डित्यशब्दयोः ज्ञानार्थत्वात्, **"पाण्डित्यं निर्विद्य"**(बृ.5-5-1)[2] इति विहितमेव ज्ञानम्, **"अथ मुनिः"**(बृ.5-5-1)[3] इत्यनूद्यते, विधिशब्दो न ह्यत्र श्रूयत इति,

एवं प्राप्ते ब्रूमः - **सहकार्यन्तरविधिः** इति। **तद्वतः** - विद्यावतः। **विध्यादिवत्।** विधीयते इति यज्ञादिः सर्वाश्रमधर्मः शमदमादिश्च विधिशब्देनोच्यते। आदिशब्देन श्रवणमनने गृह्येते। **सहकार्यन्तरविधि**रित्यत्रापि विधीयत इति विधिः; सहकार्यन्तरं विधिश्चेति सहकार्यन्तरविधिः।

---

# 120. ஸஹகார்யந்தரவித்₄யதி₄கரணம் (3-4-12)

## 464.ஸஹகார்யந்தரவிதி₄: பக்ஷேண த்ருதீயம் தத்₃வதோ வித்₄யாதி₃வத் (3-4-46)

*"தஸ்மாத்ப்ராஹ்மண: பாண்டித்யம் நிர்வித்₃ய பால்யேந திஷ்டாஸேத்। பால்யம் ச பாண்டித்யம் ச நிர்வித்₃யாத₂ முநி:"*(ப்ரு.5-5-1)[1] இத்யத்ர பால்யபாண்டித்யவத் மௌநமபி விதீ₄யதே, உத அநூத்₃யத இதி விஶயே,

மௌநபாண்டித்யஶப்₃த₃யோ: ஜ்ஞாநார்த₂த்வாத், *"பாண்டித்யம் நிர்வித்₃ய"*(ப்ரு.5-5-1)[2] இதி விஹிதமேவ ஜ்ஞாநம், *"அத₂ முநி:"* (ப்ரு.5-5-1)[3] இத்யநூத்₃யதே, விதி₄ஶப்₃தோ₃ ந ஹி அத்ர ஶ்ரூயதே இதி -

ஏவம் ப்ராப்தே ப்₃ரூம: - *ஸஹகார்யந்தரவிதி₄:*-இதி। *தத்₃வத:* - வித்₃யாவத:। *வித்₄யாதி₃வத்।* விதீ₄யதே இதி யஜ்ஞாதி₃: ஸர்வாஶ்ரமத₄ர்ம: ஶமத₃மாதி₃ஶ்ச விதி₄ஶப்₃தே₃ந உச்யதே। ஆதி₃ஶப்₃தே₃ந ஶ்ரவணமநநே க்₃ருஹ்யேதே। ஸஹகார்யந்தரவிதி₄ரித்யத்ராபி விதீ₄யத இதி விதி₄:, ஸஹகார்யந்தரம் விதி₄ஶ்சேதி ஸஹகார்யந்தரவிதி₄:।

# 120.ஸஹகார்யந்தரவித்யதிகரணம்(3-4-12)

**464.ஸஹகார்யந்தரவிதி: பக்ஷேண த்ருதீயம் தத்வத: வித்யாதிவத்(3-4-46)**

*அந்த வித்யையை உடையவனுக்கு விதிக்கப்படுவது [யாகம் முதலியது] போல, வேறொரு மூன்றாவது துணைக்காரணம் விதிக்கப்படுவது ஆகும்; ஆதரவினால் [சொல்வதால் மனனம்] ஆகும்.*

### விஷயவாக்யம்

[1]**"ஆகையால், ப்ராஹ்மணன் பாண்டித்யத்தைப் பெற்று பால்யத்துடன் உபாஸனம் செய்ய வேண்டும்; பால்யத்தையும் பாண்டித்யத்தையும் பெற்று பின்னர் மௌனம் உடையவன்"** என்று.

### ஸந்தேஹம்

இங்கு பால்யமும் பாண்டித்யமும் போல மௌனமும் விதிக்கப்படுகிறதா? அல்லது அனுவாதம் செய்யப் படுகிறதா? என்ற ஸந்தேஹத்தில்,

### பூர்வபக்ஷம்

மௌனம் பாண்டித்யம் ஆகிய இரு சொற்களும் ஜ்ஞாநம் எனும் பொருள் உடையன; அதனால், [2]**"பாண்டித்யத்தைப் பெற்று"** என்று விதிக்கப்பட்ட ஜ்ஞாநம்தான், [3]**"பின்னர் மௌனம் உடையவன்"** என்று அனுவாதம் செய்யப் படுகிறது; ஏனெனில், இங்கு விதிச் சொல் (கட்டளையைக் குறிக்கும் சொல்) எதுவும் சொல்லப்படவில்லை.

### ஸித்தாந்தம்

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்கிறோம் - **ஸஹகார்யந்தரவிதி:** என்று.

**தத்வத:** - அந்த வித்யையை உடையவனுக்கு

**வித்யாதிவத்** (விதிக்கப்படும் யாகம் முதலியது போல) - விதீயதே (அஸௌ) இதி விதி: (என்று வ்யாகரண குறிப்பு); விதிக்கப்படுகிறது என்று யஜ்ஞம் முதலிய எல்லா ஆஶ்ரமதர்மமும், சமம்-தமம் முதலியதும் விதி எனும் சொல்லால் சொல்லப்படுகிறது; 'ஆதி' (முதலியது) எனும் சொல்லால், ஶ்ரவணமும் மனனமும் எடுத்துக்கொள்ளப் படுகிறது.

**ஸஹகார்யந்தரவிதி:** (வேறொரு துணைக்காரணம் விதிக்கப்படுவது) - 'ஸஹகார்யந்தரவிதி:' என்னுமிடத்திலும் 'விதீயதே இதி விதி:, ஸஹகார்யந்தரம் (ச அஸௌ) விதி: ச ஸஹகார்யந்தரவிதி: (என்று இலக்கணக் குறிப்பு ஆகும்). (வேறொரு துணைக்காரணம் விதிக்கப்படுவதாக ஆகும் என்று அர்த்தம்).

एतदुक्तं भवति -

- यथा **"तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन"** (बृ.6-4-22)[1] इत्यादिना, **"शान्तो दान्तः"** (बृ.6-4-23)[2] इत्यादिना च सहकारी यज्ञादिः शमदमादिश्च विधीयते,
- यथा च **"श्रोतव्यो मन्तव्यः"** (बृ.4-4-5)[3] इति श्रवणमनने चार्थप्राप्ते विद्यासहकारित्वेन गृह्येते,
- तथा **"तस्माद्ब्राह्मणः पाण्डित्यं निर्विद्य"** (बृ.5-5-1)[4] इत्यादिना पाण्डित्यं बाल्यं मौनमिति त्रितयं विद्यायास्सहकार्यन्तरं विधीयते इति।

मौनं च पाण्डित्यादर्थान्तरमित्याह - **पक्षेणेति**। मुनिशब्दस्य पक्षेण प्रकृष्टमननशीले व्यासादौ प्रयोगदर्शनात् मौनं पाण्डित्यबाल्ययोर्द्वयोस्तृतीयम्।

यद्यपि **"अथ मुनिः"** (बृ.5-5-1)[5] इत्यत्र विधिप्रत्ययो न श्रूयते, तथापि मौनस्याप्राप्तत्वात् विधेयत्वमङ्गीकरणीयम्, अथ मुनिस्स्यात् इति। इदं च मौनं श्रवणप्रतिष्ठार्थान्मननादर्थान्तरभूतमुपासनालम्बनस्य पुनःपुनस्संशीलनं तद्भावनारूपम्।

तदेवं वाक्यार्थः - **ब्राह्मणः** - विद्यावान्। **पाण्डित्यं निर्विद्य** - उपास्यं ब्रह्मतत्त्वं

---

ஏததுக்தம் பவதி -

- யதா *"தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந"* (ப்ரு.6-4-22)[1] இத்யாதிநா, *"ஶாந்தோ தாந்த:"* (ப்ரு.6-4-23)[2] இத்யாதிநா ச ஸஹகாரீ யஜ்ஞாதி: ஶமதமாதிஶ்ச விதீயதே;
- யதா ச *"ஶ்ரோதவ்யோ மந்தவ்ய:"* (ப்ரு.4-4-5)[3] இதி ஶ்ரவணமநநே ச அர்தப்ராப்தே வித்யாஸஹகாரித்வேந க்ருஹ்யேதே -
- ததா *"தஸ்மாத்ப்ராஹ்மண: பாண்டித்யம் நிர்வித்ய"* (ப்ரு.5-5-1)[4] இத்யாதிநா பாண்டித்யம் பால்யம் மௌநமிதி த்ரிதயம் வித்யாயா: ஸஹகார்யந்தரம் விதீயதே - இதி।

மௌநம் ச பாண்டித்யாதர்தாந்தரமித்யாஹ - *பக்ஷேணேதி।* முநிஶப்தஸ்ய பக்ஷேண ப்ரக்ருஷ்டமநநஶீலே வ்யாஸாதௌ ப்ரயோகதர்ஶநாத் மௌநம் பாண்டித்ய-பால்யயோர்த்வயோ: த்ருதீயம்।

யத்யபி *"அத முநி:"* (ப்ரு.5-5-1)[5] இத்யத்ர விதிப்ரத்யயோ ந ஶ்ரூயதே, ததாபி மௌநஸ்யாப்ராப்தத்வாத் விதேயத்வமங்கீகரணீயம், அத முநி: ஸ்யாத் இதி। இதம் ச மௌநம் ஶ்ரவணப்ரதிஷ்டார்தாத் மநநாதர்தாந்தரபூதம் உபாஸநாலம்பநஸ்ய புந:புந: ஸம்ஶீலநம் தத்பாவநாரூபம்।

ததேவம் வாக்யார்த: - ப்ராஹ்மண: - வித்யாவாந்। பாண்டித்யம் நிர்-

இது சொன்னதாக ஆகிறது -

- [1]**''அவனை வேதானுவசனத்தின் மூலமும் யஜ்ஞத்தாலும், தானத்தாலும், ப்ராஹ்மணர்கள் உபாஸனம் செய்ய விரும்புகின்றனர்''** முதலியதாலும், [2]**''சமம் உடையவன், தமம் உடையவன்''** முதலியதாலும் (வித்யைக்கு) துணைக்காரணமான யஜ்ஞம் முதலியதும் சமம்-தமம் (புலனடக்கம்) முதலியதும் விதிக்கப்படுகிறது - என்பது எப்படியோ,
- [3]**''ஶ்ரவணம் செய்யப்பட வேண்டும், மனனம் செய்யப்பட வேண்டும்''** என்று (விதிக்கப் படாமல்) அர்த்தத்தால் ஏற்படும் ஶ்ரவணமும், மனனமும் வித்யைக்கு துணைக் காரணமாக எடுத்துக் கொள்ளப் படுகின்றன என்பது எப்படியோ, (விளக்கம் 1-1-1 - ஜிஜ்ஞாஸாதிகரணம் பக்கம் 33)
- அப்படியே, [4]**''ஆகையால், ப்ராஹ்மணன் பாண்டித்யத்தைப் பெற்று''** முதலியதால் பாண்டித்யம், பால்யம், மௌனம் எனும் மூன்றும் வித்யைக்கு உதவும் வேறு துணைக் காரணமாக விதிக்கப் படுகிறது.

மௌனம் என்பது பாண்டித்யத்தை விட வேறானது என்று சொல்கிறார் - 'பக்ஷேண' என்று.

**பக்ஷேண** (ஆதரவினால்) - 'முனி' என்னும் சொல்லை சிறந்த மனனம் செய்யும் பழக்கமுடைய வ்யாஸர் முதலியவரிடம் ஆதரவுடன் ப்ரயோகம் செய்வதைக் காண்பதால்,

**த்ருதீயம்** (மூன்றாவது) - மௌனம் என்பது பாண்டித்யம், பால்யம் ஆகிய இரண்டுக்கும் (அடுத்த) மூன்றாவது ஆகும்.

''பிறகு மௌனம் செய்பவன்'' என்னுமிடத்தில் கட்டளை-உருபு சொல்லப்படவில்லை என்றாலும், மனனம் என்பது முன்னர் (வேறு ப்ரமாணத்தால்) அறியக் கிடைக்காதபடியால், விதிக்கப்படுவதாக ஏற்கப்பட வேண்டும் - ''பிறகு மௌனம் (மனனம்) செய்பவனாக ஆக வேண்டும்'' என்று; இந்த மௌனம் என்பது ஶ்ரவணத்தை நிலைபெறச் செய்வதற்காக ஆகும் மனனத்தை விட வேறானது; உபாஸன-விஷயத்தை மீண்டும் மீண்டும் பழக்கிக் கொள்ளுதல்; அதனைத் தொடர்ந்து எண்ணுதல் என்பதாகும்.

ஆகையால் இப்படி (வேத)வாக்யத்தின் பொருள் -

[5]**''ஆகையால், ப்ராஹ்மணன் -** உபாஸனம் செய்பவன்,

**பாண்டித்யத்தைப் பெற்று -** உபாஸன-விஷயமான ப்ரஹ்ம-தத்த்வம் பரி-

परिशुद्धं परिपूर्णं च विदित्वा, श्रवणमननाभ्यामप्राप्तं (भ्यां प्राप्तं) वेदनं प्रतिलभ्येत्यर्थः। तच्च भगवद्भक्तिसहकृतसत्त्वविवृद्धिकृतम्; यथोक्तम्,

- **"नाहं वेदैः"** (गी.11-53)[1] इत्यारभ्य, **"भक्त्या त्वनन्यया शक्यः...ज्ञातुम्"** (गी.11-54)[2] इति।
- श्रुतिश्च, **"यस्य देवे परा भक्तिः"**(श्वे.6-23)[3],
- **"नायमात्मा प्रवचनेन लभ्यः"**(क.2-23)[4] इत्यादिका।

**बाल्येन तिष्ठासेत्।** बाल्यस्वरूपं चानन्तरमेव वक्ष्यते। **बाल्यं पाण्डित्यं च निर्विद्याथ मुनिस्स्यात्**(बृ.5-5-1)[5] - बाल्यपाण्डित्ये यथावदुपादाय परिशुद्धे परिपूर्णे ब्रह्मणि मननशीलो भवेत् निदिध्यासनरूपविद्यावाप्तये। एवमेव त्रितयोपादानेन लब्धविद्यो भवतीत्याह, **"अमौनं च मौनं च निर्विद्याथ ब्राह्मणः"**(बृ.5-5-1)[6] इति। अमौनं मौनेतरसहकारिकलापः; तं च मौनं च यथावदुपाददानो विद्याकाष्ठां तदेकनिष्पाद्यां लभेतेत्यर्थः।

**"स ब्राह्मणः केन स्यात्?"**(बृ.5-5-1)[7] इति उक्तादुपायात् किमन्योऽप्युपायोऽ-

---

வித்ய - உபாஸ்யம் ப்ரஹ்மதத்த்வம் பரிஶுத்தம் பரிபூர்ணம் ச விதித்வா, ஶ்ரவண-மநநாப்யாமப்ராப்தம் (ப்யாம் ப்ராப்தம்) வேதநம் ப்ரதிலப்யேத்-யர்த:। தச்ச பகவத்பக்திஸஹக்ருதஸத்த்வவிவ்ருத்திக்ருதம், யதோக்தம்,

- *"நாஹம் வேதை:"*(கீ.11-53)[1] இத்யாரப்ய, *"பக்த்யா த்வநந்யயா ஶக்ய:-...ஜ்ஞாதும்"*(கீ.11-54)[2] இதி।
- ஶ்ருதிஶ்ச, *"யஸ்ய தேவே பரா பக்தி:"*(ஶ்வே.6-23)[3],
- *"நாயமாத்மா ப்ரவசநேந லப்ய:"*(க.2-23)[4] இத்யாதிகா।

பால்யேந திஷ்டாஸேத்। பால்யஸ்வரூபம் ச அநந்தரமேவ வக்ஷ்யதே। *"பால்யம் பாண்டித்யம் ச நிர்வித்யாத முநி:ஸ்யாத்"*(ப்ரு.5-5-1)[5] பால்ய-பாண்டித்யே யதாவதுபாதாய பரிஶுத்தே பரிபூர்ணே ப்ரஹ்மணி மநநஶீலோ பவேத்; நிதித்யாஸநரூபவித்யாவாப்தயே। ஏவமேவ த்ரிதயோபாதாநேந லப்தவித்யோ பவதீத்யாஹ, *"அமௌநம் ச மௌநம் ச நிர்வித்யாத ப்ராஹ்மண:"* (ப்ரு.5-5-1)[6] இதி। அமௌநம் மௌநேதரஸஹகாரிகலாப:, தம் ச மௌநம் ச யதாவதுபாததாந: வித்யாகாஷ்டாம் ததேகநிஷ்பாத்யாம் லபேதேத்யர்த:।

*"ஸ ப்ராஹ்மண: கேந ஸ்யாத்"*(ப்ரு.5-5-1)[7] இதி உக்தாதுபாயாத் கிமந்-

ஶுத்தமானது, பரிபூர்ணமானது என்பதாக புரிந்துகொண்டு; ஶ்ரவணம், மனனம் என்றிவற்றால் பெற்ற ஜ்ஞாநத்தை விட வேறான (ஶ்ரவணம், மனனம் என்றிவற்றின் பயனாக பெறப் படுவதான) ஜ்ஞாநத்தை அடைந்து என்று அர்த்தம். அந்த ஜ்ஞாநம், பகவத்-பக்தியால் விளைந்த ஸத்த்வ-குணப்-பெருக்கால் விளைவதாகும். எப்படியாக -

* [1]**''நான் வேதங்களால் அறியப்பட முடியாதவன்''** என்று ஆரம்பித்து, [2]**''பயனை எதிர்பார்க்காத பக்தியால் மட்டுமே அறியப்பட முடிபவன்''** என்று (பெருமானால்) சொல்லப்பட்டதோ,
* வேதமும், [3]**''யாருக்கு தேவனிடம் உயர்ந்த பக்தி உள்ளதோ'',** (அவ-னுக்கே அர்த்தங்கள் புரியும்)
* [4]**''இந்த பரமாத்மா மனனத்தால் அடையப்பட முடியாதவன்''** *(விளக்கம் 1-1-1 - ஜிஜ்ஞாஸாதிகரணம் பக்கம் 37)*

என்பது முதலியது. .

**பால்யத்துடன் உபாஸனம் செய்ய வேண்டும்** - பால்யம் என்பதன் ஸ்வரூ-பம் அடுத்ததாகவே (அடுத்த அதிகரணத்தில்) சொல்லப்படப் போகிறது.

[5]**''பால்யத்தையும் பாண்டித்யத்தையும் பெற்று பின்னர் முனி ஆகக் கட-வன்''** - பால்யத்தையும் பாண்டித்யத்தையும் உள்ளபடி செய்துகொண்டு (எடுத்துக்கொண்டு), த்யானம் எனும் வித்யை பெறுவதற்காக, பரிஶுத்தமான பரிபூர்ணமான ப்ரஹ்மத்தை மனனம் செய்பவனாக ஆக வேண்டும்.

இந்த மூன்றையும் எடுத்துக் கொள்வதால், வித்யை பெற்றவனாக ஆவான் என்று சொல்கிறது - [6]**''அமௌனத்தையும், மௌனத்தையும் பெற்று பின்னர் ப்ராஹ்மணன்:''** என்று.

**அமௌனத்தையும்** - அமௌனம் என்பது மௌனத்தை விட வேறான துணைக் காரணக் குழு; அதையும் (பாண்டித்யம் முதலியதையும்)

**மௌனத்தையும் பெற்று** - மௌனத்தையும் உள்ளபடி எடுத்துக்கொள்ப-வன் (செய்துகொள்பவன்)

**பின் ப்ராஹ்மணன்** - அதனால் மட்டும் விளையக்கூடிய ப்ரஹ்ம-வித்யை-யின் உயர்ந்த நிலையை அடைவான் என்று அர்த்தம்.

[7]**''அவன் எந்த உபாயத்தால் ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவன் ஆவான்?''** - என்று இந்த உபாயத்தை விட வேறு உபாயம் உண்டா என்று கேட்கப்பட,

स्तीति पृष्टे, **''येन स्याद् तेनेदृश एव''** (बृ.5-5-1)[1] इति, 'येन मौनपर्यन्तेन ब्राह्मणस्स्यादित्युक्तम्, तेनैवेदृशस्स्यात्; न केनाप्यन्येनोपायेन' इति परिहृतम्।

अतः सर्वेष्वाश्रमेषु स्थितस्य विदुषो यज्ञादिस्वाश्रमधर्मवत् पाण्डित्यादिकं मौनतृतीयं विद्यायास्सहकार्यन्तरं विधीयते॥४६॥

अथ स्यात् - यदि सर्वेष्वाश्रमेषु स्थितानां विदुषां तत्तदाश्रमधर्मसहकारिणी मौनतृतीयसचिवा विद्या ब्रह्मप्राप्तिसाधनमुच्यते, कथं तर्हि छान्दोग्ये, **''अभिसमावृत्य कुटुम्बे शुचौ देशे''**(छा.8-15-1)[2] इत्यारभ्य, **''स खल्वेवं वर्तयन् यावदायुषं ब्रह्मलोकमभिसम्पद्यते; न च पुनरावर्तते''**(छा.8-15-1)[3] इति यावदायुषं गार्हस्थ्यधर्मेण स्थितिदर्शनमुपपद्यते, अत आह -

## ४६५.कृत्स्नभावात्तु गृहिणोपसंहारः (३-४-४७)

तुशब्दश्चोद्यं व्यावर्तयति। **कृत्स्नभावात्** - कृत्स्नेषु भावात्, कृत्स्नेष्वाश्रमेषु विद्यायाः सद्भावात् गृहिणोऽप्यस्तीति तेनोपसंहारः। तस्मात् सर्वाश्रमधर्मप्रदर्शनार्थो गृहिणोपसंहार इत्यभिप्रायः॥ ४७ ॥

யோऽப்யுபாயோऽஸ்தீதி ப்ருஷ்டே, *''யேந ஸ்யாத் தேநேத்ருஶ ஏவ''* (ப்ரு. 5-5-1)[1] இதி, யேந மௌநபர்யந்தேந ப்ராஹ்மண: ஸ்யாதித்யுக்தம், தேநைவேத்ருஶ: ஸ்யாத், ந கேநாப்யந்யேநோபாயேந இதி பரிஹ்ருதம்।

அத: ஸர்வேஷ்வாஶ்ரமேஷு ஸ்திதஸ்ய விதுஷோ யஜ்ஞாதிஸ்வாஶ்ரமதர்மவத் பாண்டித்யாதிகம் மௌநத்ருதீயம் வித்யாயா: ஸஹகார்யந்தரம் விதீயதே।। 46 ।।

அத ஸ்யாத் - யதி ஸர்வேஷ்வாஶ்ரமேஷு ஸ்திதாநாம் விதுஷாம் தத்ததாஶ்ரமதர்மஸஹகாரிணீ மௌநத்ருதீயஸசிவா வித்யா ப்ரஹ்மப்ராப்திஸாதநமுச்யதே, கதம் தர்ஹி சாந்தோக்யே, *''அபிஸமாவ்ருத்ய குடும்பே ஶுசௌ தேஶே''*(சா.8-15-1)[2] இத்யாரப்ய, *''ஸ கல்வேவம் வர்தயந் யாவதாயுஷம் ப்ரஹ்மலோகமபிஸம்பத்யதே, ந ச புநராவர்ததே''*(சா.8-15-1)[3] இதி யாவதாயுஷம் கார்ஹஸ்த்யதர்மேண ஸ்திதிதர்ஶநமுபபத்யதே, அத ஆஹ -

## 465.க்ருத்ஸ்நபாவாத்து க்ருஹிணோபஸம்ஹார:(3-4-47)

துஶப்த: சோத்யம் வ்யாவர்தயதி। *க்ருத்ஸ்நபாவாத்* - க்ருஸ்நேஷு பாவாத், க்ருத்ஸ்நேஷ்வாஶ்ரமேஷு வித்யாயா: ஸத்பாவாத் க்ருஹிணோऽப்யஸ்தீதி தேநோபஸம்ஹார:। தஸ்மாத் ஸர்வாஶ்ரமதர்மப்ரதர்ஶநார்த: க்ருஹிணா உபஸம்ஹார இத்யபிப்ராய:।। 47 ।।

[1]**''எதனால் ஆவானோ, அது இப்படிப்பட்டதுதான்''** - எந்த மௌனம் வரையிலான உபாயத்தால் ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவன் ஆவான் என்று சொல்லப்பட்டதோ, அதனாலேயே இப்படிப்பட்டவன் ஆவான்; வேறு எந்த உபாயத்தாலும் இல்லை என்று பரிஹாரம் செய்யப்பட்டது.

ஆகையால், எல்லா ஆஶ்ரமங்களிலும் இருக்கும் ப்ரஹ்ம-ஜ்ஞாநிக்கு (உபாஸனம் செய்பவனுக்கு) யஜ்ஞம் முதலிய தனது ஆஶ்ரம-தர்மம் போல மௌனத்தை மூன்றாவதாகக் கொண்ட பாண்டித்யம் முதலியதும் ப்ரஹ்ம-வித்யைக்கு வேறொரு துணைக் காரணமாக விதிக்கப் படுகிறது.



**கேள்வி -** எல்லா ஆஶ்ரமங்களிலும் இருக்கும் ப்ரஹ்ம-ஜ்ஞாநிகளுக்கு அவரவரது ஆஶ்ரம-தர்மங்களைத் துணையாகக் கொண்டதும் மௌனத்தை மூன்றாவதாகக் கொண்டவற்றை (பாண்டித்யம் முதலிய மூன்றை) அங்கமாகக் கொண்டதும் ஆன ப்ரஹ்ம-வித்யை ஆனது, ப்ரஹ்மத்தை அடைதலுக்கு உபாயமாகும் என்று சொல்லப் படுகிறது; அப்படியானால், சாந்தோக்யத்தில், [2]**''ஸமாவர்தனம் செய்து (குரு-பணிவிடை செய்தபின்) குடும்பத்தில் (க்ருஹஸ்த-ஆஶ்ரமத்தில்) ஶுத்தமான இடத்தில்''** என்று ஆரம்பித்து, [3]**''அவன் ஆயுள்-காலம் வரை இப்படியே இருந்துகொண்டு, ப்ரஹ்மலோகத்தை அடைகிறான்; மீண்டும் திரும்பி வருவதில்லை''** என்று ஆயுள்காலம் வரை க்ருஹஸ்த-தர்மத்துடன் இருப்பதைக் காண்பது எப்படி சரியாகும்?

**பதில் -** அதற்கு பதில் சொல்கிறார் -

**465.க்ருத்ஸ்நபாவாத் து க்ருஹிணா உபஸம்ஹார:(3-4-47)**

*எல்லா ஆஶ்ரமங்களிலும் [வித்யை] இருப்பதால், க்ருஹஸ்தனை இட்டு முடித்தல் ஆகும்.*

**'து'** எனும் சொல் கேள்வியை களைகிறது.

**க்ருத்ஸ்நபாவாத்** (எல்லாவற்றிலும் ஆவதால்) - எல்லா ஆஶ்ரமங்களிலும் வித்யை இருப்பதால்

**க்ருஹிணா உபஸம்ஹார: -** க்ருஹஸ்தனுக்கும் உண்டு என்பதால், அவனையிட்டு முடித்தல் ஆயிற்று; ஆகையால், க்ருஹஸ்தனை இட்டு முடித்தலானது, எல்லா ஆஶ்ரமங்களுடைய தர்மங்களையும் எடுத்துக் காட்டுவதற்காக (சொன்னது) ஆகும் என்று கருத்து.



तथैतस्मिन्नपि वाक्ये, **''ब्राह्मणः पुत्रैषणायाश्च वित्तैषणायाश्च लोकैषणायाश्च व्युत्थायाथ भिक्षाचर्यं चरन्ति''**(बृ.5-5-1)[1] इति पारिव्राज्यैकान्तधर्मं प्रतिपाद्य, **''तस्माद्ब्राह्मणः पाण्डित्यं निर्विद्य''**(बृ.5-5-1)[2] इत्यादिना पारिव्राज्यधर्मस्थितिहेतुक-मौनतृतीयसहकारिविधानं प्रदर्शनार्थमित्याह -

**४६६.मौनवदितरेषामप्युपदेशात् (३-४-४८)**

सर्वै(र्वे)षणाविनिर्मुक्तस्य भिक्षाचरणपूर्वकमौनोपदेशः सर्वेषामाश्रमधर्माणां प्रदर्शनार्थः। कुतः? एवंविधमौनोपदेशवत् इतरेषामाश्रमिणामपि, **''त्रयो धर्मस्कन्धाः''** (छा.2-23-1)[3] इत्यारभ्य **''ब्रह्मसंस्थोऽमृतत्वमेति''**(छा.2-23-1)[4] इति ब्रह्मप्राप्त्युपदेशात्। उपपादितश्च पूर्वमेव ब्रह्मसंस्थशब्दः सर्वाश्रमिसाधारण इति।

अतः सुष्ठूक्तम् - यज्ञादिसर्वाश्रमधर्मवत् मौनतृतीयः पाण्डित्यादिर्विद्यासहकारित्वेन विधीयते इति॥ ४८ ॥

इति सहकार्यन्तरविध्यधिकरणम्॥ १२ ॥

---

ததா ஏதஸ்மிந்நபி வாக்யே, *''ப்ராஹ்மணஃ புத்ரைஷணாயாஶ்ச வித்தைஷணாயாஶ்ச லோகைஷணாயாஶ்ச வ்யுத்தாயாத பிக்ஷாசர்யம் சரந்தி''*(ப்ரு. 5-5-1)[1] இதி பாரிவ்ராஜ்யைகாந்ததர்மம் ப்ரதிபாத்ய, *''தஸ்மாத்ப்ராஹ்மணஃ பாண்டித்யம் நிர்வித்ய''*(ப்ரு.5-5-1)[2] இத்யாதிநா பாரிவ்ராஜ்யதர்மஸ்திதி-ஹேதுகமௌநத்ருதீயஸஹகாரிவிதாநம் ப்ரதர்ஶநார்தமித்யாஹ -

**466.மௌநவதிதரேஷாமப்யுபதேஶாத்(3-4-48)**

ஸர்வை(வே)ஷணாவிநிர்முக்தஸ்ய பிக்ஷாசரணபூர்வகமௌநோபதேஶ: ஸர்வேஷாமாஶ்ரமதர்மாணாம் ப்ரதர்ஶநார்த:। குத:? ஏவம்விதமௌநோபதேஶவத் இதரேஷாமாஶ்ரமிணாமபி, *''த்ரயோ தர்மஸ்கந்தா:''*(சா.2-23-1)[3] இத்யாரப்ய *''ப்ரஹ்மஸம்ஸ்தோऽம்ருதத்வமேதி''*(சா.2-23-1)[4] இதி ப்ரஹ்மப்ராப்த்யுபதேஶாத்। உபபாதிதஶ்ச பூர்வமேவ ப்ரஹ்மஸம்ஸ்தஶப்த:, ஸர்வாஶ்ரமிஸாதாரண: இதி।

அத: ஸுஷ்டூக்தம் - யஜ்ஞாதிஸர்வாஶ்ரமதர்மவத் மௌநத்ருதீய: பாண்டித்யாதி: வித்யாஸஹகாரித்வேந விதீயதே இதி।। 49 ।।

இதி ஸஹகார்யந்தரவித்யதிகரணம்।। 12 ।।

அப்படியே இந்த வாக்யத்திலும், [1]**''ப்ராஹ்மணன் புத்ர-ஆசையிலிருந்தும், பணத்தாசையிலிருந்தும், உலக-ஆசையிலிருந்தும் வெளியேறி பிக்ஷை-எடுத்தலைச் செய்கிறான்''** என்று ஸந்யாஸிகளுக்கு மட்டுமான தர்மத்தை சொல்கிறது; பின்னர், [2]**''ஆகையால் ப்ராஹ்மணன் பாண்டித்யத்தைப் பெற்று''** என்பது முதலியதால், ஸந்யாஸ-தர்மத்தில் இருப்பதைக் காரணமாகக் கொண்ட மௌனத்தை மூன்றாவதாகக் கொண்ட துணைக் காரணங்களை விதிக்கிறது; இது (பிற ஆஶ்ரமங்களுக்கும்) எடுத்துக் காட்டுக்காக மட்டுமே என்று சொல்கிறார் -

## 466.மௌநவத் இதரேஷாம் அபி உபதேஶாத்(3-4-48)

*மௌனம் போல பிற ஆஶ்ரமிகளையும் உபதேசிப்பதால்*

எல்லா ஆசையும் விட்டவனுக்கு பிக்ஷா-எடுத்தலை முன்னிட்டு மௌனத்தை உபதேசம் செய்தது, எல்லா ஆஶ்ரமங்களின் தர்மங்களுக்கும் எடுத்துக் காட்டுவதற்காக ஆகும். ஏன்? இப்படியான மௌன-உபதேசம் போல பிற ஆஶ்ரமத்தை உடையவர்களுக்கும் ப்ரஹ்மத்தை அடைதலை உபதேசம் செய்கிறது - [3]**''மூன்று தர்மஸ்கந்தங்கள்''** என்று ஆரம்பித்து, [4]**''ப்ரஹ்மத்தில் நிலை பெற்றவனாய் மோக்ஷம் அடைவான்''** என்று; 'ப்ரஹ்மத்தில் நிலை பெற்றவன்' என்ற சொல்லானது, எல்லா ஆஶ்ரமிகளுக்கும் பொதுவானது என்று முன்பே (ஸூத்ரம் 3-4-19) விளக்கப் பட்டது;

**ப்ரயோஜனம்**

ஆகையால், யஜ்ஞம் முதலிய எல்லா ஆஶ்ரமங்களின் தர்மங்கள் போல மௌனத்தை மூன்றாவதாகக் கொண்ட பாண்டித்யம் முதலியது வித்யைக்கு துணைக்காரணமாக விதிக்கப் படுகிறது என்பது நன்கு சொல்லப் பட்டது.

**ஸஹகார்யந்தரவித்யதிகரணம் முற்றிற்று.**

# 121. அநாவிஷ்காராதிகரணம்(3-4-13)

## முன் குறிப்பு

ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவன் பால்யத்துடன் இருக்க வேண்டும் என்று வேதம் சொல்கிறது; பால்யம் என்றால் ஸம்ஸ்க்ருத-இலக்கணப்படி இரண்டு அர்த்தங்கள்; 1. சிறுவனின் வயது-நிலை; 2. சிறுவனின் செயல்; இதில் சிறுவனின் வயது-நிலை என்பது உபாஸனம் செய்யும் பெரியோர்களுக்கு வர முடியாது; எனவே, சிறுவனின் செயல் என்று அர்த்தம்.

பூர்வபக்ஷம் - சிறுவனின் செயல் என்றால், விருப்பப்படி நடத்தல், இஷ்டப்படி உண்-ணுதல், விளையாடுதல் முதலியன ஆகும்; உபாஸனம் செய்பவன் சிறுவன் போல, இதை-யெல்லாம் செய்தால் தவறில்லை; வித்யையின் மஹிமையால் எந்த பாபம் செய்தாலும், எல்லாம் தொலைந்து விடும்; பாபம் செய்யக்கூடாது எனும் ஶாஸ்த்ரங்கள் மற்றவருக்குத் தான்; வித்யையை செய்பவனுக்கு அல்ல.

ஸித்தாந்தம் - சிறுவனின் செயல் என்று இதனைச் சொல்லவில்லை; தற்பெருமை இல்லாமையைச் சொல்கிறது.

சிறுவர்கள், தம் பெருமையை வெளிக் காட்ட மாட்டார்கள்; நல்ல பண-வசதி, நல்ல குடிப்பிறப்பு முதலிய பெருமைகள் சிறுவர்களுக்குத் தெரியாது; தெரிந்தாலும் வெளியே காட்டிக் கொள்ளாமல் எல்லா சிறுவர்களுடனும் சமமாக பழகுவர்; அதுபோல, உபா-ஸனம் செய்பவர்களும் தம் பெருமையை வெளியில் காட்டிக் கொள்ளாமல் இருக்க வேண்டும்; தற்பெருமை முதலியதைத் தவிர்க்க வேண்டும் என்று அர்த்தம்.

சாதாரண மனிதனுக்கு இருக்கும் ஶாஸ்த்ர கட்டுப்பாடுகள் எல்லாம் ப்ரஹ்மவித்யை அனுஷ்டானம் செய்பவனுக்கும் உண்டு; மேலும், வித்யை அனுஷ்டானம் செய்பவ-னுக்கும் கூட அதிக நியமம் விசேஷமாக சொல்கிறது - ‘‘பாபம் செய்வதை நிறுத்தாதவன் ஜ்ஞாநத்தால் பரமாத்மாவை அடைய முடியாது’’ முதலியதாக; ஆகையால் அவன் விருப்பப்படி நடப்பது சரியல்ல.

ஆகையால், பால்யம் என்பது தற்பெருமை இல்லாமை ஆகும்.

ஆவிஷ்காரம் என்றால் வெளிப்பாடு; அனாவிஷ்குர்வன் - வெளிப் படுத்தாதவனாய் என்று அர்த்தம்.

# १२१. अनाविष्काराधिकरणम् (३-४-१३)

## ४६७.अनाविष्कुर्वन्नन्वयात् (३-४-४९)

**"तस्माद्ब्राह्मणः पाण्डित्यं निर्विद्य बाल्येन तिष्ठासेत्"** (बृ.5-5-1)[1] इत्यत्र विदुषा बाल्यमुपादेयतया श्रुतम्। बालस्य भावः, कर्म वा बाल्यम्। बालभावस्य वयोवस्थाविशेषस्यानुपादेयत्वात् कर्मैवेह गृह्यते।

तत्र किं बालस्य कर्म कामचारादिकं सर्वं विदुषोपादेयम्, उत डम्भादिरहितत्वमेवेति विशये,

विशेषाभावात् सर्वमुपादेयम्, नियमशास्त्राणि च विशेषविधिनाऽनेन बाध्यन्त इति,

एवं प्राप्तेऽभिधीयते - **अनाविष्कुर्वन्निति**। बालस्य यत् स्वभावानाविष्काररूपं कर्म, तदुपाददानो वर्तेत विद्वान्। कुतः? **अन्वयात्** - तस्यैवान्वयात्। **"बाल्येन तिष्ठासेत्"** (बृ.5-5-1)[2] इत्यस्मिन् विधौ तस्यैव ह्यन्वयसम्भवः, इतरेषां विद्याविरोधित्वश्रवणात्,

---

# 121. அநாவிஷ்காராதிகரணம் (3-4-13)

## 467.அநாவிஷ்குர்வந்நந்வயாத் (3-4-49)

*"தஸ்மாத்ப்ராஹ்மண: பாண்டித்யம் நிர்வித்ய பால்யேந திஷ்டாஸேத்"* (ப்ரு.5-5-1)[1] இத்யத்ர விதுஷா பால்யமுபாதேயதயா ஶ்ருதம்। பாலஸ்ய பாவ:, கர்ம வா பால்யம்। பாலபாவஸ்ய வயோவஸ்தாவிஶேஷஸ்ய அநுபாதேயத்வாத் கர்மைவேஹ க்ருஹ்யதே।

தத்ர கிம் பாலஸ்ய கர்ம காமசாராதிகம் ஸர்வம் விதுஷோபாதேயம், உத டம்பாதிரஹிதத்வமேவேதி விஶயே,

விஶேஷாபாவாத் ஸர்வமுபாதேயம், நியமஶாஸ்த்ராணி ச விஶேஷ-விதிநாऽநேந பாத்யந்த இதி,

ஏவம் ப்ராப்தேऽபிதீயதே - *அநாவிஷ்குர்வந்நிதி*। பாலஸ்ய யத் ஸ்வ-பாவாநாவிஷ்காரரூபம் கர்ம, தது பாததாநோ வர்தேத வித்வாந்। குத:? *அந்வயாத்* - தஸ்யைவ அந்வயாத்। *"பால்யேந திஷ்டாஸேத்"* (ப்ரு.5-5-1)[2] இத்யஸ்மிந் விதௌ தஸ்யைவ ஹி அந்வயஸம்பவ:, இதரேஷாம் வித்-யாவிரோதித்வஶ்ரவணாத்,

# 121.அநாவிஷ்காராதிகரணம்(3-4-13)

## 467.அநாவிஷ்குர்வந் அந்வயாத்(3-4-49)

[பெருமையை] வெளிக்காட்டாதவனாய் இருக்க வேண்டும்;
[அதுவே உபாஸனத்துக்கு] சேர்வதால்.

**விஷயவாக்யம்**

[1]**''ஆகையால், ப்ராஹ்மணன் பாண்டித்யத்தைப் பெற்று பால்யத்துடன் உபாஸனம் செய்ய வேண்டும்''** என்னுமிடத்தில் உபாஸனம் செய்பவனால் பால்யம் செய்ய வேண்டியதாக சொல்லப் பட்டது; பால்யம் என்றால் சிறுவனின் தன்மை அல்லது சிறுவனின் செயல் (என்று இரு அர்த்தம் உண்டு); சிறுவனின் தன்மை என்பது தனிப்பட்ட வயது-நிலை ஆகும்; அதனை செய்ய முடியாது (உபாஸனம் செய்யும் வயதில் அந்நிலை வராது); ஆகையால் சிறுவனின் செயல்தான் இங்கு எடுத்துக் கொள்ளப் படும்.

**ஸந்தேஹம்**

அதில் பாலனின் செயலான விருப்பப்படி நடத்தல் முதலிய எல்லாம் உபாஸ-னம் செய்பவனால் செய்யத் தக்கதா? அல்லது டம்பம் (தற்பெருமை பேசுதல்) முத-லியது இல்லாமை என்பது மட்டுமா? என்று ஸந்தேஹம் வரும்போது,

**பூர்வபக்ஷம்**

விஶேஷக் குறிப்பு இல்லாததால், எல்லாம் செய்யத் தக்கது; நியமத்தை சொல்-லும் ஶாஸ்த்ரங்கள் இந்த விஶேஷ-விதியினால் மறுக்கப் படுகின்றன.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப் படுகிறது - **'அநாவிஷ்-குர்வந்'** என்று.

**அநாவிஷ்குர்வந்** (வெளிப்படுத்தாதவனாய்) - ஸ்வபாவத்தை வெளிப்படுத்-தாமை என்பதாக பாலனுக்கு எந்த செயல் உண்டோ, அதனை செய்துகொண்டு உபாஸனம் செய்பவன் இருக்க வேண்டும்;

**அந்வயாத்** - அதுவே சேருமானபடியால்; [2]**''பால்யத்துடன் உபாஸனம் செய்ய வேண்டும்''** என்னும் இந்த விதியில் அதற்குதானே பொருந்திச் சேர்தல் வரும்! ஏனெனில், மற்றவை (விருப்பப்படி நடத்தல் முதலியவை) வித்யைக்கு விரோதியானவையாக வேதத்தில் சொல்லப் படுவன. -

* **"नाविरतो दुश्चरितान्नाशान्तो नासमाहितः। नाशान्तमानसो वापि प्रज्ञाने-नैनमाप्नुयात्॥"**(क.2-24)[1],
* **"आहारशुद्धौ सत्त्वशुद्धिः"**(छा.7-26-2)[2] इत्यादिषु॥

इति अनाविष्काराधिकरणम् ॥ १३ ॥

---

* *"நாவிரதோ துஶ்சரிதாந்நாஶாந்தோ நாஸமாஹித:। நாஶாந்தமாநஸோ வாபி ப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத்"*(க.2-24)[1],
* *"ஆஹாரஶுத்தெள ஸத்த்வஶுத்தி:"*(சா.7-26-2)[2] இத்யாதிஷு॥

இதி அநாவிஷ்காராதிகரணம் ॥ 13 ॥

* [1]**''பாபத்திலிருந்து ஓயாதவன் ஜ்ஞாநத்தால் இந்த பரமாத்மாவை அடைய மாட்டான்; புலனடக்கம் இல்லாதவனும் மாட்டான்; மனச்சாந்தி இல்லா-தவனும் அடைய மாட்டான்'',**

* [2]**''உணவு தூய்மையானால் மனம் தூய்மையாகும்''** என்று.

**அநாவிஷ்காராதிகரணம் முற்றிற்று**

# 122.ஐஹிகாதிகரணம்(3-4-14)

## முன் குறிப்பு

ப்ரஹ்மவித்யைக்கு தேவையான அங்கங்களை இதுவரை சொன்னார்; இப்போது அங்கியான ப்ரஹ்மவித்யை எப்போது உண்டாகும் எனும் விசாரம் இனி இரு அதிகரணங்களில் உள்ளது.

வித்யை இருவிதம் ஆகும் - ஐஹிகம், முக்திபலம் என்பதாக.

i. ஐஹிகம் - இந்த ப்ரக்ருதி மண்டலத்தில், ஸம்ஸார-பலனைக் கொடுக்கும் வித்யை. (இது பற்றிய விசாரம் இந்த அதிகரணத்தில்)

ii. முக்திபலம் - மோக்ஷபலனைக் கொடுக்கும் வித்யை. (இது பற்றிய விசாரம் அடுத்த அதிகரணத்தில்)

அப்யுதயம் என்றால், சிறப்பு, செழிப்பு என்று அர்த்தம்; மோக்ஷம் தவிர பிற சிறப்பான பலன்களை அப்யுதயம் என்று சொல்வர். ஐஹிகவித்யையை அப்யுதயபலனைத் தரும் வித்ய்ய என்று பாஷ்யத்தில் அருளுகிறார்.

எல்லாமே கர்ம-பலனாக விளைபவைதாம்! வித்யை எனும் உபாஸனம் கூட, அதற்கான புண்யகர்மத்தின் பலனாக உண்டாகிறது; புண்யகர்மம் வந்தவுடன் அதன் பலனாக உடனேயே வித்யை உண்டாகுமா? அல்லது தாமதம் ஆகலாமா? என்று விசாரம்.

உடனேயும் வித்யை உண்டாகலாம்; அல்லது தாமதம் ஆகலாம்; இதில் நியமம் சொல்ல முடியாது; ஒரு கர்மம் பலனைக் கொடுக்கும்போது, அதற்குத் தடையாக வேறொரு கர்மம் வரலாம்; அப்போது இதன் பலன் தாமதமாகும்; அந்த முறையில் வித்யையும் கூட தாமதம் ஆக உண்டாகும் வாய்ப்பு உண்டு.

இது பற்றி உத்கீத-உபாஸனத்தில் உள்ள குறிப்பினை 4-1-18 முதலிய ஸூத்ரங்களில் காணலாம்.

இந்த ஸூத்ரத்துக்கு சற்றே வித்யாசமான வேறொரு வ்யாக்யானம் பாவப்ரகாசிகா முதலிய உரைகளில் காண்கிறது; அது அங்கேயே காணத் தகும்.

# १२२.ऐहिकाधिकरणम् (३-४-१४)

## ४६८.ऐहिकमप्रस्तुतप्रतिबन्धे तद्दर्शनात् (३-४-५०)

द्विविधा विद्या - अभ्युदयफला मुक्तिफला च। तत्राभ्युदयफला स्वसाधनभूतैः पुण्यकर्मभिः पुण्यकर्मानन्तरमेव उत्पद्यते, उतानन्तरम्, कालान्तरे वेत्यनियम इति संशयः।

पूर्वकृतैः पुण्यकर्मभिर्हि विद्वान् जायते। यथोक्तं भगवता **''चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन''**(गी.7-16)[1] इति। साधने निर्वृत्ते विलम्बहेत्वभावादनन्तरमेव,

इति प्राप्ते उच्यते - **ऐहिकमप्रस्तुतप्रतिबन्धे** इति। **ऐहिकम्** - अभ्युदयफलमुपासनम् **अप्रस्तुतप्रतिबन्धे** - अप्रस्तुते प्रबलकर्मान्तरप्रतिबन्धे असति अनन्तरम्, प्रतिबन्धे सति तदुत्तरकालमित्यनियमः।

कुतः? **तद्दर्शनात्।** दृश्यते हि प्रबलकर्मान्तरेण कर्मफलप्रतिबन्धाभ्युपगमः श्रुतौ, **''यदेव विद्यया करोति श्रद्धयोपनिषदा तदेव वीर्यवत्तरम्''**(छा.1-1-10)[2] इत्युद्गीथविद्यायुक्तस्य कर्मणः फलाप्रतिबन्धश्रवणात्॥ ५० ॥

इति ऐहिकाधिकरणम् ॥ १४ ॥

# 122.ஐஹிகாதிகரணம் (3-4-14)

## 468.ஐஹிகமப்ரஸ்துதப்ரதிபந்தே தத்தர்ஶநாத் (3-4-50)

த்விவிதா வித்யா; அப்யுதயபலா முக்திபலா ச। தத்ர அப்யுதயபலா ஸ்வஸாதநபூதை: புண்யகர்மபி: புண்யகர்மாநந்தரமேவ உத்பத்யதே, உத அநந்தரம், காலாந்தரே வா இத்யநியம: இதி ஸம்ஶய:।

பூர்வக்ருதை: புண்யகர்மபிர்ஹி வித்வாந் ஜாயதே। யதோக்தம் பகவதா *''சதுர்விதா பஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோऽர்ஜுந''*(கீ.7-16)[1] இதி। ஸாதநே நிர்வ்ருத்தே விலம்பஹேத்வபாவாத் அநந்தரமேவ,

இதி ப்ராப்தே உச்யதே, *ஐஹிகமப்ரஸ்துதப்ரதிபந்தே* - இதி। *ஐஹிகம்* - அப்யுதயபலமுபாஸநம் *அப்ரஸ்துதப்ரதிபந்தே* - அப்ரஸ்துதே ப்ரபலகர்மாந்தரப்ரதிபந்தே அஸதி அநந்தரம், ப்ரதிபந்தே ஸதி தது‌த்தரகாலமிதி அநியம:।

குத:? தத்தர்ஶநாத்। த்ருஶ்யதே ஹி ப்ரபலகர்மாந்தரேண கர்மபலப்ரதிபந்தாப்யுபகம: ஶ்ருதௌ, *''யதேவ வித்யயா கரோதி ஶ்ரத்தயோபநிஷதா ததேவ வீர்யவத்தரம்''*(சா.1-1-10)[2] இதி உத்கீதவித்யாயுக்தஸ்ய கர்மண: பலாப்ரதிபந்தஶ்ரவணாத்.॥ 50 ॥

இதி ஐஹிகாதிகரணம் ॥ 14 ॥

# 122.ஐஹிகாதிகரணம்(3-4-14)

**468.ஐஹிகம் அப்ரஸ்துதப்ரதிபந்தே தத்தர்ஶநாத்(3-4-50)**

*இவ்வுலகப் பலனை உடைய வித்யை ஆனது தடை நேராதபோது உடனேயாகும்; அந்த தடையை வேதம் சொல்வதால்.*

**விஷயம்&ஸந்தேஹம்**

வித்யை இரண்டுவிதம் - அப்யுதயபலனை (மோக்ஷம் தவிர பிற பலனை) உடையது, மோக்ஷ-பலனை உடையது என்று. அதில் அப்யுதய-பலனை உடைய வித்யையானது, தனக்கு காரணமான புண்யகர்மங்களால் புண்யகர்மத்திற்குப் பிறகு உடனேயே உண்டாகுமா? அல்லது உடனேயோ, பிற்காலத்திலோ என்று நியமம் இல்லையா? என்று ஸந்தேஹம்.

**பூர்வபக்ஷம்**

முன் செய்த புண்யகர்மங்களால்தானே உபாஸனம் செய்பவனாக ஆகிறான்; எப்படி பகவானால் சொல்லப்பட்டது - [1] **''அர்ஜுனா, புண்யசாலிகளான மக்கள் நான்கு விதமானவர் என்னை பஜனம் (பக்தி) செய்கின்றனர்''** என்று; (வித்யை உண்டாகக்) காரணம் ஆனவுடன் தாமதத்துக்கு காரணம் இல்லாதபடியால், உடனேயே (வித்யை உண்டாகும்)

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **ஐஹிகம் அப்ரஸ்துதப்ரதிபந்தே** என்று.

**ஐஹிகம் -** அப்யுதயபலனை உடைய (ஸம்ஸாரபலனை) உபாஸனம்,

**அப்ரஸ்துதப்ரதிபந்தே -** அதிக வலிமையுடைய வேறொரு கர்மத்தால் தடை நேராதபோது உடனேயே ஆகும்; தடை இருக்கும்போது அதற்குப் பிற்காலத்தில் ஆகலாம் என்பதால் கால-நியமம் கிடையாது.

ஏன்?

**தத்தர்ஶநாத் -** ஏனெனில், கர்ம-பலனுக்கு அதிக வலிமையுடைய வேறொரு கர்மத்தால் தடையை வேதத்தில் ஏற்பது காணப்படுகிறது - [2] **''எதனை வித்யையுடன், ஶ்ரத்தையுடன், உபநிஷத்-ஜ்ஞாநத்துடன் செய்கிறானோ, அதுவே அதிக வீர்யம் உடையதாக ஆகும்''** என்று உத்கீதவித்யையுடன் கூடிய கர்மத்துக்கு பலனில் தடையின்மையை சொல்வதால்.

***************************************

**ஐஹிகாதிகரணம் முற்றிற்று.**

# 123. முக்திபலாநியமாதிகரணம் (3-4-15)

## முன் குறிப்பு

இது அதிதேச-அதிகரணம். அதாவது, போன அதிகரணத்தில் சொன்ன அதே விஷயத்தை இந்த அதிகரண-விஷயத்திலும் வைத்துக் கொள்ள வேண்டும்; ஸம்ஸார-பலனை அளிக்கும் வித்யையானது, புண்யகர்மத்தால் உடனே உண்டாகும் என சொல்ல முடியாது; சில சமயம், வேறு தடை இருந்தால், தாமதமாக வரலாம் என்று போன அதிகரணத்தில் சொன்னார்; அதே போல மோக்ஷ-பலனை அளிக்கும் வித்யையும் தாமதம் ஆக உண்டாகலாம்; அல்லது தடை இல்லாவிட்டால் உடனேயும் வரலாம்: இதில் கால-நியமம் கிடையாது.

அதிதேச-அதிகரணத்தில் அதிகப் படியான பூர்வபக்ஷம்-ஸித்தாந்தம் இருக்கும்; (காண்க - ப்ராணாதிகரணம் 1-1-9); இங்கும் அது உள்ளது.

பொதுவாக பிற கர்மங்களுக்கு பலன் வரத் தடை ஆகலாம்; ஆனால், மோக்ஷத்தை அளிக்கும் வித்யை உண்டாகக் காரணமான கர்மம் என்பது விசேஷ-புண்யம் ஆகும்; அதற்கு சாதாரண தடையெல்லாம் வர முடியாது; எனவே, அந்த வித்யைக்கு தாமதம் வராது என பூர்வபக்ஷம்.

ஸித்தாந்தம் - சாதாரண தடைகள் வராது; ஆனால், விசேஷமான தடை வரலாம்; பாகவத-அபசாரம் என்பது மிகப் பெரிய பாபம்; அது மோக்ஷபலனை அளிக்கும் வித்யையை உண்டாகாமல் தடுக்கும்; ஆகையால் அந்த வித்யையும் தாமதமாக வரலாம்.

ஸூத்ரத்தில் முக்தி-பல என்பதற்கு, மோக்ஷ-பலனை உடைய வித்யை என்று அர்த்தம்; ஒருவன் வித்யைக்கு அங்கமாக (வித்யை நடப்பதற்காக) யாகம் செய்தான்; அதன் பலனாக வித்யை அவனுக்கு தொடர்ந்து நடக்க வேண்டும்; ஆனாலும், பாகவத-அபசாரம் பட்டிருந்தால், அது அவனுக்கு தடையாகும்; வித்யை நடக்காது; தாமதம் ஆகும்.

ஸ்ரீதேசிகன், பெரிய ரஹஸ்யத்தில் இந்த ஸூத்ரத்தைக் குறிப்பிட்டு, "விலக்க வேண்டியதில் மிக முக்கியமானது பாகவத-அபசாரம் என்று சாதிக்கிறார். சரணாகதி செய்தவனும் கூட பெரிய அளவில் பாகவத-அபசாரப் பட்டால், மோக்ஷ பலனும் கூட தாமதமாகும்; கவனம் தேவை.

# १२३. मुक्तिफलाधिकरणम् (३-४-१५)

## ४६९. एवं मुक्तिफलानियमस्तदवस्थावधृतेस्तदवस्थावधृतेः (३-४-५१)

मुक्तिफलस्याप्युपासनस्य स्वसाधनभूतैरतिशयितकर्मभिरुत्पत्तौ एवमेव कालानियमः; तस्यापि पूर्ववत् प्रतिबन्धाभावप्रतिबन्धसमाप्तिरूपावस्थावगतेः - अत्रापि तस्य हेतोः समानत्वादित्यर्थः।

सर्वेभ्यः कर्मभ्यो मुक्तिफलविद्यासाधनस्य कर्मणः प्रबलत्वात् प्रतिबन्धासम्भव इत्यधिकाशङ्का॥ तत्रापि ब्रह्मविदपचाराणां पूर्वकृतानां प्रबलानां सम्भवात् प्रतिबन्धः सम्भवति (प्रतिबन्धसम्भव) इति परिहारः। द्विरुक्तिरध्यायपरिसमाप्तिं द्योतयति॥५१॥

इति मुक्तिफलाधिकरणम्॥ १५ ॥

इति श्रीभगवद्रामानुजविरचिते शारीरकमीमांसाभाष्ये तृतीयस्याध्यायस्य चतुर्थः पादः॥

---

# 123. முக்திப_லாதி_கரணம் (3-4-15)

## 469. ஏவம் முக்திப_லாநியமஸ்தத_வஸ்தா_வத்_ருதே_ஸ்தத_வஸ்தா_வத்_ருதே_:(3-4-51)

முக்திப_லஸ்யாபி உபாஸநஸ்ய ஸ்வஸாத_நபூ_தை: அதிஶயிதகர்மபி_: உத்பத்தௌ ஏவமேவ காலாநியம:, தஸ்யாபி பூர்வவத் ப்ரதிப_ந்தா_பா_வ-ப்ரதிப_ந்த_ஸமாப்திரூபாவஸ்தா_வகதே: - அத்ராபி தஸ்ய ஹேதோ: ஸமாநத்வாதி_த்யர்த_:।

ஸர்வேப்_ய: கர்மப்_ய: முக்திப_லவித்_யாஸாத_நஸ்ய கர்மண: ப்ரபலத்வாத் ப்ரதிப_ந்தா_ஸம்ப_வ: இதி அதி_காஶங்கா।। தத்ராபி ப்_ரஹ்மவித_பசாராணாம் பூர்வக்ருதாநாம் ப்_ரப_லாநாம் ஸம்ப_வாத் ப்ரதிப_ந்த_: ஸம்ப_வதி (ப்ரதிப_ந்த_ஸம்ப_வ) இதி பரிஹார:। த்_விருக்தி: அத்_யாயபரிஸமாப்திம் த்_யோதயதி।।

இதி முக்திப_லாதி_கரணம்।। 15 ।।

இதி ஸ்ரீப_கவத்ராமாநுஜவிரசிதே ஶாரீரகமீமாம்ஸாபா_ஷ்யே த்ருதீயஸ்யாத்_யாயஸ்ய சதுர்த_: பாத_:।। 3.4।।

ஸமாப்தஸ்த்ருதீயாத்_யாய:।।

# 469.முக்திபலாநியமாதிகரணம்(3-4-15)

**469.ஏவம் முக்திபலாநியம: ததவஸ்தாவத்ருதே: ததவஸ்தாவத்ருதே:(3-4-51)**

*மோக்ஷ-பலனை உடைய வித்யைக்கும் இப்படி [ கால ]நியமம் இல்லை; அந்த நிலைகள் தெரிவதால்.*

**விஷயம் & ஸங்கதி (விஷய-தொடர்பு)**

**ஏவம் முக்திபலாநியம: -** மோக்ஷ-பலனை உடைய உபாஸனத்துக்கும், தனக்கு காரணமான சிறந்த கர்மங்களால் உண்டாவதில், இப்படியே கால-நியமம் கிடையாது;

**ததவஸ்தாவத்ருதே: -** அதற்கும், முன்னதுபோல தடையின்மை, தடை-முடிவு எனும் நிலைகள் தெரிவதால்; அந்த காரணம் இங்கும் சமானம் ஆவதால் என்று அர்த்தம்.

**(அதிக)பூர்வபக்ஷம்**

எல்லா கர்மங்களை விட மோக்ஷ-பலனுடைய வித்யைக்குக் காரணமான கர்மம் அதிக வலிமையுடையது என்பதால் தடை வராது என்று அதிகக் கேள்வி.

**(அதிக)ஸித்தாந்தம்**

அங்கும் அதிக வலிமை உடையனவாக முன் செய்த ப்ரஹ்மவித்-அபசாரம் முதலியவை வரலாம் என்பதால், தடை வரலாம் என்று பரிஹாரம்.

(ஸூத்ரத்தில் கடைசி பதத்தை) இருமுறை சொன்னது அத்யாயம் முடிவதை உணர்த்துகிறது.

**முக்திபலாதிகரணம் முற்றிற்று.**

*இப்படியாக ஸ்ரீபகவத்ராமானுஜர் அருளிய ஶாரீரகமீமாம்ஸாபாஷ்யத்தில் மூன்றாவது அத்யாயத்தின் நான்காவது பாதம் (முற்றிற்று).*

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# ஸ்ரீபகவத் ராமானுஜர் அருளிய

# ஸ்ரீபாஷ்யம்

(தமிழாக்கத்துடன்)

## நான்காவது அத்யாயம்

**பல-அத்யாயம்**

**பாதங்கள் 4 (13-16)**

**அதிகரணங்கள் - 33 (124 - 156)**

**ஸூத்ரங்கள் - 76 (470 - 545)**

குறிப்பு: மூன்றாவது அத்யாயத்தில், ப்ரஹ்ம-வித்யையைப் பற்றி சொல்லி ஆயிற்று..

இனி நான்காவது அத்யாயத்தில் ப்ரஹ்மவித்யையின் பலன் பற்றி விசாரம் செய்யப் போகிறார். அதனால் இதற்கு பல-அத்யாயம் என்று பெயர்.

மோக்ஷம்தான் பலன்; மோக்ஷம் என்றால் கர்ம-பந்தத்திலிருந்து விடுபடுதல் என்று அர்த்தம்.

மோக்ஷம் பெறும் ஜீவன், உடலை விட்டு எப்படி வெளியேறுகிறான்? பரமபதம் செல்லும் வழி என்ன? சென்றபின் என்ன? முதலிய விஷயங்கள் இந்த அத்யாயத்தில் உள்ளன.

இந்த அத்யாயத்திலும் நான்கு பாதங்கள் -

1.ஆவ்ருத்தி பாதம் - புண்யபாபங்கள் விட்டுப் போகும் முறையை விளக்குவது.

2. உத்க்ராந்தி பாதம் - ஜீவன் சரீரத்தில் உள்ளிருந்து வெளியேறுதலை விளக்குவது.

3. கதிபாதம் - பரமபதம் போவதற்கான வழியை (அர்ச்சிராதிகதியை) விளக்குவது

4. மோக்ஷபாதம் - மோக்ஷத்தில் பெறும் பேறு என்ன என்பதை விளக்குவது.

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

## ஸ்ரீபகவத் ராமானுஜர் அருளிய

# ஸ்ரீபாஷ்யம்

(தமிழாக்கத்துடன்)

(4-1)

## நான்காவது அத்யாயம் - பலாத்யாயம்

## முதல் பாதம் - ஆவ்ருத்தி பாதம்

## அதிகரணங்கள் - 11 (124 - 134)

## ஸூத்ரங்கள் - 19 (470 - 488)

குறிப்பு: இந்த பாதத்தில் முதல் அதிகரணம் ஆவ்ருத்தி-அதிகரணம் ஆகும்; அதனால், அதையே அடையாளமாகக் கொண்டு ஆவ்ருத்தி பாதம் என்று பெயர்.

ப்ரஹ்மவித்யை எனப்படும் உபாஸநம் செய்பவனுக்கு முதலில் புண்யபாபங்கள் ஒழியும். அந்த பலனை இந்த பாதம் சொல்கிறது. இந்த பாதத்தில் முதல் ஆறு அதிகரணங்கள் உபாஸநம் என்னும் உபாயத்தையே விளக்குகின்றன. பின்னரே, பலன் பற்றி சொல்கிறது.

கேள்வி:- மூன்றாவது அத்யாயம், உபாயத்தைப் பற்றி சொல்கிறது; நான்காவது அத்யாயம் பலனைப் பற்றி விசாரம் செய்கிறது; அப்படிருக்க இந்த நான்காவது அத்யாயத்தில், முதல் ஆறு அதிகரணங்களில் உபாயம் பற்றி சொன்னது எப்படி பொருந்தும்?

பதில்:- இந்த உபாயத்துக்கு இந்த பலன் என்ற தொடர்பினை உறுதிப் படுத்துவதற்காக பலனைச் சொல்லும் இந்த அத்யாயத்தில்,உபாயத்தையும் முதலில் சற்றே சொன்னார். இங்கே விளக்கப்படும் சொல்லும் த்யானம் எனும் உபாயம்தான், மோக்ஷம் எனும் பலனுக்கான உபாயம் என்று இதன் மூலம் உணர்த்துகிறார்.

அத்வைதமதத்தில் மோக்ஷம் எனும் பலனுக்கு, உபாஸநம்(த்யானம்) என்பது நேர் உபாயமாகாது என்றனர்; அது தவறானது என்பது இதனால் தெரிய வரும்.

மேலும், உபாயம் என்பது இங்கு ப்ரஹ்மம் பற்றிய உபாஸநம் ஆகும்; பலன் என்பது ப்ரஹ்ம-அனுபவம் ஆகும்; இந்த உபாயமாகிற ப்ரஹ்ம-உபாஸனத்திலும் ப்ரஹ்ம-அனுபவம் ஆகிற பலன் நிறைய கலந்து இருக்கிறது; அதைக் குறிக்க பலனைப் பற்றிய இந்த நான்காவது அத்யாயத்தில் உபாயத்தையும் சேர்த்துச் சொல்லியுள்ளார்.

# 124. ஆவ்ருத்த்யதிகரணம் (4-1-1)

**முன் குறிப்பு**

ப்ரஹ்மம் பற்றிய ஜ்ஞாநம்தான் மோக்ஷத்துக்கு உபாயம்; மோக்ஷபலனுக்காக, அந்த ஜ்ஞாநம் ஒருமுறை வந்தால் போதுமா? அல்லது பலமுறை வர வேண்டுமா? என்று விசாரம்.

பூர்வபக்ஷம் - ஒருமுறை ஞானம் வந்தால் போதும். பொதுவாக, ஶாஸ்த்ரம்சொல்லும் எதையுமே ஒருமுறை செய்தால் போதும்; அதுதான் ஶாஸ்த்ரத்தின் கருத்து ஆகும். (உ.ம்) ''ஸ்வர்க்கம் விரும்புபவன் ஜ்யோதிஷ்டோம-யாகம் செய்க'' என்று ஒரு வேத-வாக்யம் விதிக்கிறது; அந்த யாகத்தை ஒருமுறை செய்தாலே போதும்; ஸ்வர்க்க பலன் கிடைத்து விடும்; பலமுறை செய்ய வேண்டியதாக வேதம் விதிக்கவில்லை; அதனால் பலமுறை செய்வது வேதத்தின் கருத்து இல்லை.

உள் கேள்வி - யாகத்தில், ''நெல் குத்த வேண்டும்'' என வேதம் விதிக்கிறது; அங்கு, அரிசி வரும்வரை தொடர்ந்து பலமுறை நெல் குத்துவர்; எனவே பல முறை செய்வதுதான் ஶாஸ்த்ரத்தின் கருத்து ஆகும்.

உள் பதில் - நெல் குத்துதலால் அரிசி உண்டாகும் முறையானது, நமக்கு கண்ணுக்கு நேராகத் தெரிகிறது; அதை அனுசரித்து வேதம் சொல்லாவிட்டாலும், அரிசி வரும்வரை பலமுறை நெல் குத்துகிறோம்; அதனால், பலமுறை குத்துதல்தான் வேதம் சொன்னதன் கருத்து என புரிந்து கொள்கிறோம்.

ஆனால், கண்ணுக்குத் தெரியாத விஷயத்தில் ஶாஸ்த்ரம் சொல்வதை அனுசரித்து ஒரு தடவை மட்டுமே செய்தால் போதுமானது.

முதலில் ப்ரஹ்மத்தை உபதேசம் மூலம் கேட்டு அறிய வேண்டும்; பின்னர், ப்ரஹ்மத்தை நேராகக் காண்பது போன்ற அபரோக்ஷமான ஜ்ஞாநம் உண்டாகும்; அத்தகு ஞானத்தை முதல் ஜ்ஞாநம் எப்படி உண்டாக்குகிறது என்பது நம் கண்ணுக்கு நேராகத் தெரியவில்லை; அதனால், கண்ணுக்குத் தெரியாத விஷயத்தில் பொதுவான ஶாஸ்த்ர-முறையை அனுசரித்து ஒருமுறை செய்தால் போதும்; அதாவது ஒருமுறை ப்ரஹ்மத்தை அறிந்தால் போதும் என பூர்வபக்ஷம்.

ஸித்தாந்தம்:- பலமுறை தொடர்ந்து வரும் ஜ்ஞாநம்தான் மோக்ஷத்துக்கு உபாயம் ஆகும். தொடர்ந்து இடைவிடாமல் பலமுறை ஜ்ஞாநம் வருவதுதான் த்யானம் ஆகும்.

மோக்ஷத்துக்கு உபாயம் வேதனம் (ஜ்ஞாநம்) என்று வேதம் சொல்கிறது; அந்த இடத்திலேயே, அதனை மீண்டும் குறிக்கும்போது, அதற்கு பதில், உபாஸநம் என்ற சொல்லையும் வேதமே சொல்கிறது; எனவே, உபாஸநம் ஆகிற ஜ்ஞாநம்தான் மோக்ஷ-உபாயம் என தெரிகிறது; உபாஸநம் என்பது மீண்டும் மீண்டும் இடைவிடாமல் நினைத்தல் ஆகும்.

ஒரே இடத்திலேயே ஒரே பொருளிலேயே 'வேதனம்' என்ற சொல்லையும், 'உபாஸநம்' என்ற சொல்லையும் வேதம் மாற்றிமாற்றி சொல்கிறது; அதற்கு உதாஹரணம் ஆக பல பல இடங்களை ஸ்ரீபாஷ்யத்தில் எடுத்து காண்பிக்கிறார்.

# १२४. आवृत्त्यधिकरणम् (४-१-१)

## ४७०. आवृत्तिरसकृदुपदेशात् (४-१-१)

तृतीयेऽध्याये साधनैः सह विद्या चिन्तिता। अथेदानीं विद्यास्वरूपविशोधनपूर्वकं विद्याफलं चिन्त्यते।

तत्र,

- **"ब्रह्मविदाप्नोति परम्"** (तै.1.आन.2)[1],
- **"तमेव विदित्वाऽति मृत्युमेति"** (श्वे.3-8)[2],
- **"ब्रह्म वेद ब्रह्मैव भवति"** (मु.3-2-9)[3],
- **"यदा पश्यः पश्यते रुक्मवर्णम्"** (मु.3-1-3)[4]

इत्यादिवेदान्तवाक्येषु ब्रह्मप्राप्तिसाधनतया विहितं वेदनं किं सकृत्कृतमेव शास्त्रार्थः, उतासकृदावृत्तमिति संशयः।

किं युक्तम्? सकृत्कृतमिति,

---

# 124. ஆவ்ருத்த்யதிகரணம் (4-1-1)

## 470. ஆவ்ருத்திரஸக்ருதுபதேஶாத் (4-1-1)

த்ருதீயேऽத்யாயே ஸாதநை: ஸஹ வித்யா சிந்திதா। அதேதாநீம் வித்யாஸ்வரூபவிஶோதநபூர்வகம் வித்யாபலம் சிந்த்யதே।

தத்ர,

- *"ப்ரஹ்மவிதாப்நோதி பரம்"* (தை.1.ஆந.2)[1],
- *"தமேவம் விதித்வாऽதி ம்ருத்யுமேதி"* (ஶ்வே.3-8)[2],
- *"ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி"* (மு.3-2-9)[3],
- *"யதா பஶ்ய: பஶ்யதே ருக்மவர்ணம்"* (மு.3-1-3)[4]

இத்யாதிவேதாந்தவாக்யேஷு ப்ரஹ்மப்ராப்திஸாதநதயா விஹிதம் வேதநம், கிம் ஸக்ருத்க்ருதமேவ ஶாஸ்த்ரார்த:, உத அஸக்ருதாவ்ருத்தமிதி ஸம்ஶய:।

கிம் யுக்தம்? ஸக்ருத்க்ருதமிதி;

# 124. ஆவ்ருத்த்யதிகரணம் (4-1-1)

## 470. ஆவ்ருத்தி: அஸக்ருத் உபதேஶாத் (4-1-1)

*[ப்ரஹ்ம-ஜ்ஞாநமானது] மீண்டும் மீண்டுமாக பலமுறை திருப்பி ஆக வேண்டும்; [த்யாநமாக] உபதேஶம் செய்வதால்.*

**ஸங்கதி (விஷய-தொடர்பு)**

மூன்றாவது அத்யாயத்தில் ப்ரஹ்ம-வித்யைக்கான் காரணங்களுடன் கூட ப்ரஹ்ம-வித்யை ஆராயப் பட்டது; பின்னர் இப்போது நான்காவது அத்யாயத்தில், ப்ரஹ்ம-வித்யையின் ஸ்வரூபத்தை முன்னர் ஆராய்ந்து, பின், வித்யையின் பலன் ஆராயப் படுகிறது.

**ஸம்சயம் (ஸந்தேகம்)**

அதில்,

- **[1] ''ப்ரஹ்மவித் ஆப்நோதி பரம்'', (ப்ரஹ்மத்தை அறிந்தவன் பரப்ரஹ்மத்தை அடைகிறான்)**
- **[2] ''தமேவ விதித்வா அதிம்ருத்யுமேதி'', (அந்த ப்ரஹ்மத்தை அறிந்து ஸம்ஸாரத்தைக் கடக்கிறான்)**
- **[3] ''ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி'', (ப்ரஹ்மத்தை அறிபவன் ப்ரஹ்மமாகவே ஆகிறான்)**
- **[4] ''யதா பச்ய: பச்யதே ருக்மவர்ணம்'' (எப்போது பார்ப்பவன் சிவந்த நிறத்தினனான புரமாத்மாவைக் காண்கிறானோ)**

முதலிய வேதாந்த-வாக்யங்களில், ப்ரஹ்மத்தை அடைதலுக்கு உபாயமானது, 'வேதநம்' (ப்ரஹ்மத்தை அறிதல்) ஆகும் என சொல்லப்பட்டது;

அந்த வேதநமானது ஒருமுறை செய்யப் படுவதே ஶாஸ்த்ரத்தின் கருத்தாகுமா? அல்லது பலமுறை திருப்பி செய்யப்படுவது ஶாஸ்த்ரத்தின் கருத்தாகுமா?

*(ப்ரஹ்மம் பற்றிய ஜ்ஞாநம் ஒருமுறை வந்தால் போதுமா? அல்லது பலமுறை ப்ரஹ்மத்தை சிந்திக்க வேண்டுமா? எது ஶாஸ்த்ர-கருத்து?)*

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்? ஒரு தடவை செய்யப் படுவது என்பது;

(कुतः?) **''ब्रह्म वेद ब्रह्मैव भवति''**(मु.3-2-9)[1] इति वेदनमात्रस्यैव विधानात् असकृदावृत्तौ प्रमाणाभावात्।

न चावघातादिवत् वेदनस्य ब्रह्मापरोक्ष्यं प्रति दृष्टोपायत्वात् यावत्कार्यमावृत्तिरिति शक्यं वक्तुम्; वेदनस्य दृष्टोपायत्वाभावात्।

ज्योतिष्टोमादिकर्माणि वेदान्तविहितं च वेदनं परमपुरुषाराधनरूपम्, आराधिताच्च परमपुरुषात् धर्मार्थकाममोक्षाख्यपुरुषार्थावाप्तिरिति हि, **''फलमत उपपत्तेः''**(ब्र.सू.3-2-37) इत्यत्र प्रतिपादितम्। अतो ज्योतिष्टोमादिवत् यथाशब्दं सकृत्कृतमेव शास्त्रार्थः -

इति प्राप्ते प्रचक्ष्महे - **आवृत्तिरसकृत्** इति। असकृदावृत्तमेव वेदनं शास्त्रार्थः।

कुतः? **उपदेशात्** - ध्यानोपासनपर्यायेण वेदनशब्देनोपदेशात्। तत्पर्यायत्वं च विद्युपास्तिध्यायतीनामेकस्मिन् विषये वेदनोपदेशपरवाक्येषु प्रयोगादवगम्यते।

तथा हि, **''मनो ब्रह्मेत्युपासीत''**(छा.3-18-1)[2] इत्युपासिनोपक्रान्तोऽर्थः, **''भाति**

---

(குத:?) *"ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி"* (மு.3-2-9)[1] இதி வேதந-மாத்ரஸ்யைவ விதாநாத் அஸக்ருதாவ்ருத்தௌ ப்ரமாணாபாவாத்।

ந ச அவகாதாதிவத் வேதநஸ்ய ப்ரஹ்மாபரோக்ஷ்யம் ப்ரதி த்ருஷ்-டோபாயத்வாத் யாவத்கார்யமாவ்ருத்தி: இதி ஶக்யம் வக்தும்; வேதநஸ்ய த்ருஷ்டோபாயத்வாபாவாத்।

ஜ்யோதிஷ்டோமாதிகர்மாணி வேதாந்தவிஹிதம் ச வேதநம் பரம-புருஷாராதநரூபம், ஆராதிதாச்ச பரமபுருஷாத் தர்மார்தகாமமோக்ஷாக்ய-புருஷார்தாவாப்திரிதி ஹி, *"பலமத உபபத்தே:"* (ப்ர.ஸூ.3-2-37) இத்யத்ர ப்ரதிபாதிதம்। அத: ஜ்யோதிஷ்டோமாதிவத் யதாஶப்தம் ஸக்ருத்க்ருத-மேவ ஶாஸ்த்ரார்த: -

இதி ப்ராப்தே ப்ரசக்ஷ்மஹே - *ஆவ்ருத்திரஸக்ருத்* - இதி। அஸக்ருதா-வ்ருத்தமேவ வேதநம் ஶாஸ்த்ரார்த:।

குத:? *உபதேஶாத்* - த்யாநோபாஸநபர்யாயேண வேதநஶப்தே-நோபதேஶாத்। தத்பர்யாயத்வம் ச வித்யுபாஸ்தித்யாயதீநாம் ஏகஸ்மிந் விஷயே வேதநோபதேஶபரவாக்யேஷு ப்ரயோகாதவகம்யதே।

ததா ஹி, *"மநோ ப்ரஹ்மேத்யுபாஸீத"* (சா.3-18-1)[2] இதி உபாஸிநா

ஏனெனில், [1] **''ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி'', (ப்ரஹ்மத்தை அறிபவன் ப்ரஹ்மமாகவே ஆகிறான்)** என்று அறிவதை மட்டுமே விதித்துள்ளது; அதை பலமுறை திருப்பித் திருப்பி செய்வதில் ப்ரமாணம் இல்லை.

**உள்கேள்வி -** (ப்ரஹ்மத்தை நேராகக் காண்பது போல் அபரோக்ஷமாக ஜ்ஞாநம் வர வேண்டும்; அத்தகு ஜ்ஞாநம் வருவதற்காக முதலில் ப்ரஹ்மத்தை அறிய வேண்டும்.) ப்ரஹ்மத்தை அறிதல் ஆனது, ப்ரஹ்மத்தை அபரோக்ஷமாக காண்பதற்கு உபாயமாகும்; அது உபாயமாவது நேராகக் காணப்படுகிறது; அதனால், நெல் குத்துதல் முதலியதில் (அரிசி வரும்வரை) பலமுறை செயல் ஆவது போல், இதிலும் பலன் வரும்வரை செயல் ஆகும்.

**மறுப்பு -** அப்படி சொல்ல முடியாது; ஏனெனில், ப்ரஹ்மத்தை அபரோக்ஷமாகக் காண்பதில், அறிதல் என்பது உபாயமாவது நாம் நேராகக் காணும் முறையில் அல்ல. (நமக்குக் கண்ணுக்குத் தெரியாதமுறையில் பரமபுருஷனின் அனுக்ரஹ-ஸங்கல்பம் மூலமாகவே அந்த பலன் கிடைக்கிறது).

ஜ்யோதிஷ்டோமம் (ஸோமயாகம்) முதலிய கர்மங்களும், வேதாந்தங்களில் விதிக்கப்பட்ட ஜ்ஞாநமும் பரமபுருஷனுக்கு ஆராதனம் ஆனவை; அவற்றால் ஆராதனம் செய்யப்பட்ட பரமபுருஷனிடமிருந்தே தர்ம-அர்த்த-காம-மோக்ஷங்கள் எனப்படும் புருஷார்த்தங்கள் கிடைக்கும்; இது **''பலமத உபபத்தே:''** என்னுமிடத்து சொல்லப்பட்டதுதானே! அதனால், ஜ்யோதிஷ்டோமம் முதலியது போல, வாக்யத்தில் உள்ளபடி, ஒருமுறை செய்தலே ஶாஸ்த்ர-கருத்து ஆகும்.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட, ஸித்தாந்தம் சொல்கிறோம் - **''ஆவ்ருத்தி: அஸக்ருத்''** என்று.

வேதநம் ஆனது (ப்ரஹ்மத்தை அறிதல் ஆனது) பலமுறை மீண்டும் மீண்டும் செய்யப்பட்டதாக ஆக வேண்டும் என்பதே ஶாஸ்த்ர-கருத்து;

ஏன்?

**உபதேஶாத் -** த்யாநம், உபாஸநம் ஆகியவற்றுடன் ஒரே பொருளில் ஆவதாக வேதநம் என்ற சொல்லின் மூலம் உபதேஶம் செய்திருப்பதால்.

ஒரே விஷயத்தைப் பற்றி அறிதலை உபதேஶம் செய்யும் வாக்யங்களில் வேதநம், உபாஸநம், த்யாநம் ஆகிய சொற்களைச் சொல்லியுள்ளது; அதனால், அது ஒரே பொருளில் ஆகும் என்பது தெரிகிறது.

அப்படித்தானே -

- [2] **மநோ ப்ரஹ்ம இத்யுபாஸீத'' (மனஸ்ஸினை ப்ரஹ்மமாக உபாஸநம் செய்யவும்)''** என்று 'உபாஸநம்' என்ற சொல்லால் ஆரம்பிக்கப்பட்டது;

**च तपति च कीर्त्या यशसा ब्रह्मवर्चसेन य एवं वेद**"(छा.3-18-3)[1] इति विदिनोपसंह्रियते;

तथा, "**यस्तद्वेद यत् स वेद स मयैतदुक्तः**"(छा.4-1-4)[2] इत्युपक्रमे विदिनोक्तं रैक्वस्य ज्ञानम्, "**अनु म एतां भगवो देवतां शाधि, यां देवतामुपास्से**"(छा.4-2-2)[3] इत्युपासिनोपसंह्रियते।

तथा "**ब्रह्मविदाप्नोति परम्**"(तै.1.आन.2)[4] इत्यादिवाक्यसमानार्थेषु वाक्येषु, "**आत्मा वा अरे द्रष्टव्यः श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः**"(बृ.4-4-5)[5], "**ततस्तु तं पश्यति निष्कलं ध्यायमानः**"(मु.3-1-8)[7] इत्यादिषु ध्यायतिना वेदनमभिधीयते।

ध्यानं च चिन्तनम्। चिन्तनं च स्मृतिसन्ततिरूपम्; न स्मृतिमात्रम्। उपास्तिरपि तदेकार्थः; एकाग्रचित्तवृत्तिनैरन्तर्ये प्रयोगदर्शनात्। तदुभयैकार्थ्यात् असकृदावृत्तसन्तत-स्मृतिरिह, "**ब्रह्म वेद ब्रह्मैव भवति**"(मु.3-2-9)[8], "**ज्ञात्वा देवं मुच्यते सर्वपाशैः**"(श्वे.1-8)[9] इत्यादिषु वेदनादिशब्दैरभिधीयते इति निश्चीयते॥ १ ॥



---

உபக்ராந்தோऽர்த:, "*பாதி ச தபதி ச கீர்த்யா யஶஸா ப்ரஹ்மவர்சஸேந ய ஏவம் வேத*" (சா.3-18-3)[1] இதி விதிநா உபஸம்ஹ்ரியதே;

ததா, "*யஸ்தத்வேத யத் ஸ வேத ஸ மயைததுக்த:*" (சா.4-1-4)[2] இத்யுபக்ரமே விதிநா உக்தம் ரைக்வஸ்ய ஜ்ஞாநம், "*அநு ம ஏதாம் பகவோ தேவதாம் ஶாதி; யாம் தேவதாமுபாஸ்ஸே*" (சா.4-2-2)[3] இதி உபாஸிநா உபஸம்ஹ்ரியதே।

ததா "*ப்ரஹ்மவிதாப்நோதி பரம்*" (தை.1.ஆந.2)[4] இத்யாதிவாக்யஸமாநார்தேஷு வாக்யேஷு, "*ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:*" (ப்ரு.4-4-5)[5], "*ததஸ்து தம் பஶ்யதி நிஷ்கலம் த்யாயமாந:*" (மு.3-1-8)[6] இத்யாதிஷு த்யாயதிநா வேதநமபிதீயதே।

த்யாநம் ச சிந்தநம்। சிந்தநம் ச ஸ்ம்ருதிஸந்ததிரூபம்; ந ஸ்ம்ருதிமாத்ரம்। உபாஸ்திரபி ததேகார்த:, ஏகாக்ரசித்தவ்ருத்தி-நைரந்தர்யே ப்ரயோகதர்ஶநாத்। ததுபயைகார்த்யாத் அஸக்ருதாவ்ருத்தஸந்ததஸ்ம்ருதிரிஹ, "*ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி*" (மு.3-2-9)[7], "*ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாஶை:*" (ஶ்வே.1-8)[8] இத்யாதிஷு வேதநாதிஶப்தை: அபிதீயதே இதி நிஶ்சீயதே॥ 1 ॥



அதே விஷயமானது, [1] **''பாதி ச தபதி ச கீர்த்யா யசஸா ப்ரஹ்மவர்சஸேந ய ஏவம் வேத'' (யார் இப்படி அறிகிறானோ, அவன் அறிவுப்புகழாலும், திறமைப்புகழாலும் விளங்குகிறான்; ப்ரஹ்ம-வர்சஸ்ஸினால் ப்ரகாசிக்கிறான்)''** என்று, 'வேத(அறிகிறானோ)' என்ற சொல்லைக் கொண்டு முடிக்கப் படுகிறது.

- அப்படியே, [2] **''யஸ் தத் வேத யத் ஸ வேத ஸ மயைததுக்த: (எதை அந்த ரைக்வர் அறிகிறாரோ, அதையே மற்றவரும் அறிவார்; அப்படிப்பட்ட ஜ்ஞானியான ரைக்வர் என்னால் குறிப்பிடப் பட்டார்)''** என்று ஆரம்பத்தில் ரைக்வருடைய ஜ்ஞாநமானது, 'வேத' எனும் சொல்லால் சொல்லப்பட்டது; அதுவே, [3] **''அனு ம ஏதாம் பகவோ தேவதாம் சாதி; யாம் தேவதாம் உபாஸ்ஸே'' (பகவானே, எந்த தேவனை உபாஸநம் செய்கிறீரோ அந்த தேவனை எனக்கு சொல்லித் தரவும்)''** என்று 'உபாஸநம்' என்ற சொல்லால் எடுத்து சொல்லப் படுகிறது.

- [4] **''ப்ரஹ்மவித் ஆப்நோதி பரம் (ப்ரஹ்மத்தை அறிபவன் பர-ப்ரஹ்மத்தை அடைவான்)''** முதலிய வாக்யங்களுக்கு சமானமான பொருளுடைய வாக்யங்கள் [5] **''பரமாத்மாவே கேட்கப்பட வேண்டியவன்; மனனம் செய்யப்பட வேண்டியவன்; த்யானம் செய்யப்பட வேண்டியவன்; காணப்பட வேண்டியவன்'', [6] ''அவயவம் அற்ற பரமாத்மாவை த்யானம் செய்பவன் அவன் அனுக்ரஹத்தின் மூலமாகவே அவனைக் காண்கிறான்''** முதலியவை; அவற்றில், அப்படியே வேதனம்(அறிதல்) ஆனது த்யானம் என்ற சொல்லால் சொல்லப்படுகிறது.

1. த்யாநம் என்பது சிந்தித்தல் ஆகும்; சிந்தித்தல் என்பது தொடர்ந்து நினைத்தல் ஆகும்; வெறிதே(ஒருமுறை) நினைப்பது எல்லாம் சிந்தித்தல் ஆகிவிடாது.

2. உபாஸநம் என்பதும் அதனுடன் ஒரே பொருளானது; ஏனெனில், இடைவிடாமல் ஒருமுகமாக மனஸ்ஸின் செயல் ஆவது எனனும் அர்த்தத்தைப் பற்றியே உபாஸநம் என்ற சொல்-வழக்கு உள்ளது.

3. இங்கு 'வேதநம்' (அறிதல்) முதலிய சொற்களால் சொல்லப்படுவதும், த்யானம், உபாஸநம் ஆகிய இந்த இரண்டுடன் ஒரே பொருளில் ஆக வேண்டும்; அதனால், [7] **''ப்ரஹ்மத்தை அறிபவன் ப்ரஹ்மமாகவே ஆகிறான்'', [8] ''தேவனை அறிந்து எல்லா கயிறுகளிலிருந்தும் விடுபடுகிறான்''** முதலியவற்றில் 'வேதநம் (அறிதல்)' முதலிய சொற்களால் சொல்லப்படுவது, பலமுறை மீண்டும் மீண்டும் ஆகும் தொடர்ந்த நினைவுதான் என தீர்மானிக்கப்படுகிறது.



## ४७१. लिङ्गाच्च (४-१-२)

**लिङ्गं - स्मृतिः। स्मृतेश्चायमर्थोऽवगम्यते। स्मर्यते हि मोक्षसाधनभूतं वेदनं स्मृतिसन्ततिरूपम्,**

**''तद्रूपप्रत्यये चैका सन्ततिश्चान्यनिस्स्पृहा।**
**तद्ध्यानं प्रथमैः षड्भिरङ्गैर्निष्पाद्यते तथा॥''** (वि.पु.6-7-91)[1] इति। तस्मादसकृदावृत्तमेव वेदनं शास्त्रार्थः॥२॥



इति आवृत्त्यधिकरणम् ॥ १ ॥

---

## 471. லிங்காச்ச (4-1-2)

லிங்கம் - ஸ்ம்ருதி:। ஸ்ம்ருதேஶ்ச அயமர்தோऽவகம்யதே। ஸ்மர்யதே ஹி மோக்ஷஸாதநபூதம் வேதநம் ஸ்ம்ருதிஸந்ததிரூபம்,

*''தத்ருபப்ரத்யயே சைகா ஸந்ததிஶ்சாந்யநிஸ்ஸ்ப்ருஹா।*
*தத் த்யாநம் ப்ரதமை: ஷட்பிரங்கைர்நிஷ்பாத்யதே ததா।।''* (வி.பு.6-7-91)[1]

இதி। தஸ்மாத் அஸக்ருதாவ்ருத்தமேவ வேதநம் ஶாஸ்த்ரார்த:।। 2 ।।



இதி ஆவ்ருத்த்யதிகரணம் ।। 1 ।।



# 471. லிங்காத் ச (4-1-2)

*ஸ்ம்ருதியாலும்*

லிங்கம் என்றால் ஸ்ம்ருதி-நூல் என்று பொருள்; ஸ்ம்ருதி நூலினாலும் இந்த பொருள் தெரிய வருகிறது; மோக்ஷத்துக்குக் காரணமான வேதநம் (ஜ்ஞாநம்) என்பது தொடர்ந்து நினைத்தல் ஆகும் என்பதாக ஸ்ம்ருதி-நூலில் சொல்லப்படுகிறதும் கூட - [1] **''ப்ரஹ்மம் பற்றிய ஜ்ஞாநத்தில் வேறு விஷயத்தைப் பற்றாததான ஒரே ஒரே நினைவு-வரிசை ஆகும்; அந்த த்யாநமானது யமம், நியமம் முதலிய முதல் ஆறு அங்கங்களால் உண்டாகிறது''**- என்று.

**ப்ரயோஜநம் (பலன்)**

எனவே, வேதநம் (ஜ்ஞாநம்) என்பது, பலமுறை மீண்டும் மீண்டும் ஆவதாகும் என்பதே ஶாஸ்த்ர-கருத்து.

**************************

ஆவ்ருத்த்யதிகரணம்முற்றிற்று



# 125. ஆத்மத்வோபாஸநாதிகரணம் (4-1-2)

## முன் குறிப்பு

உபாஸநம் செய்யும் ஒருவன் ப்ரஹ்மத்தை எந்தமுறையில் உபாஸநம் செய்ய வேண்டும்? ''தன்னை விட ப்ரஹ்மம் வேறானது என்பதாக உபாஸநம் செய்ய வேண்டுமா? அல்லது ஶரீர-ஶரீரி-தொடர்பை இட்டு, தானாகவே ப்ரஹ்மத்தை எண்ணி 'நான்' என்று உபாஸநம் செய்ய வேண்டுமா?'' என்பது விசாரம்.

பூர்வபக்ஷம் - ஜீவாத்மாவும் பரமாத்மாவும் வெவ்வேறு என்று முன்பே பலமுறை சொல்லியிருப்பதால் வேறானதாக உபாஸநம் செய்ய வேண்டும்.

ஸித்தாந்தம் - தானாகவே பரமாத்மாவை எண்ணி, 'நான்' என்றே உபாஸநம் செய்ய வேண்டும்.

ஜீவனும் பரமாத்மாவும் ஸ்வரூபத்தில் வேறானவர்கள்தாம்! ஆனாலும், பரமாத்மா-வுக்கு ஜீவன் ஶரீரம் ஆகிறான்; பரமாத்மா ஜீவனுக்கு ஆத்மாவாக இருக்கிறான்.

ஶரீரமும் ஆத்மாவும் வெவ்வேறாக இருந்தாலும், ஶரீரத்தைக் குறிக்கும் சொல்லையிட்டு அதன் ஆத்மாவைச் சொல்வதுண்டு; (உ.ம்) ''நான் மனிதன்' என்கிறோம்; மனிதன் என்பது ஶரீரத்தைக் குறிக்கும் சொல்; நான் என்பது ஆத்மாவினைக் குறிக்கும் சொல்; இரண்டையும் ஒன்றாக ஆக்கி, 'நான் மனிதன்' என்றே அறிகிறோம்; சொல்கிறோம்.

அதேபோல, ஜீவனும் பரமாத்மாவும் ஸ்வரூபத்தில் வேறானவர்கள் ஆனாலும், ஶரீரமான ஜீவனையும், அவனுக்குள் ஆத்மாவாக இருக்கும் பரமாத்மாவையும் சேர்த்து ஒன்றாக்கி, 'நான் ப்ரஹ்மம்' என்று எண்ணுவது தவறல்ல.

அப்படியே எண்ண வேண்டும்; அதுவே சரியாகும். இப்படி ஜீவன் ஶரீரமாகவும் பரமன் ஆத்மாவாகவும் ஆவதை எண்ணுவதால், இருவருக்கும் ஸ்வரூபம் வெவ்வேறானது என்பதும் திடம் ஆகிறது. ஶரீரமும் ஆத்மாவும் ஸ்வரூபத்தில் வேறாகும் என்பது உலகம் அறிந்த உண்மைதான்! அதே முறையில் ஜீவன் பரமாத்மாவின் ஶரீரம் ஆவதால், இருவ-ரும் ஸ்வரூபத்தில் வேறானவர்கள் என்பதே திடமாக ஆகும்.

அதே சமயம் இருவரையும் சேர்த்துக் கூட்டி ஒன்றாகவே சொல்வதும் முறையா-னதாக ஆகும்.

# १२५. आत्मत्वोपासनाधिकरणम् (४-१-२)

## ४७२.आत्मेति तूपगच्छन्ति ग्राहयन्ति च (४-१-३)

इदमिदानीं चिन्त्यते - किमुपास्यं ब्रह्म उपासितुरन्यत्वेनोपास्यम्, उतोपासितुरात्मत्वेनेति।

किं युक्तम्? अन्यत्वेनेति। कुतः? उपासितुः प्रत्यगात्मनोऽर्थान्तरत्वात् ब्रह्मणः। अर्थान्तरत्वञ्च -

* **''अधिकं तु भेदनिर्देशात्''**(ब्र.सू.2-1-22),
* **''अधिकोपदेशात्''** (ब्र.सू. 3-4-8),
* **''नेतरोऽनुपपत्तेः''**(ब्र.सू.1-1-17)

इत्यादिषूपपादितम्।

यथावस्थितञ्च ब्रह्म उपास्यम्; अयथोपासने हि ब्रह्मप्राप्तिरप्ययथाभूता स्यात्; **''यथाक्रतुरस्मिन् लोके पुरुषो भवति तथेतः प्रेत्य भवति''**(छा.3-14-1)[1] इति न्यायात्। अतोऽन्यत्वेनोपास्यमिति।

---

# 125. ஆத்மத்வோபாஸநாதிகரணம் (4-1-2)

## 472. ஆத்மேதி தூபகச்சந்தி க்ராஹயந்தி ச (4-1-3)

இதமிதாநீம் சிந்த்யதே - கிம் உபாஸ்யம் ப்ரஹ்ம உபாஸிதுரந்யத்வேந உபாஸ்யம், உத உபாஸிது: ஆத்மத்வேநேதி।

கிம் யுக்தம்? அந்யத்வேநேதி। குத:? உபாஸிது: ப்ரத்யகாத்மந: அர்தாந்தரத்வாத் ப்ரஹ்மண:। அர்தாந்தரத்வம் ச -

* *''அதிகம் து பேதநிர்தேஶாத்''* (ப்ர.ஸூ.2-1-22),
* *''அதிகோபதேஶாத்''* (ப்ர.ஸூ.3-4-8),
* *''நேதரோऽநுபபத்தே:''* (ப்ர.ஸூ.1-1-17)

இத்யாதிஷூபபாதிதம்।

யதாவஸ்திதஞ்ச ப்ரஹ்ம உபாஸ்யம்; அயதோபாஸநே ஹி ப்ரஹ்மப்ராப்திரபி அயதாபூதா ஸ்யாத்; *''யதாக்ரதுரஸ்மிந் லோகே புருஷோ பவதி ததேத: ப்ரேத்ய பவதி''*(சா.3-14-1)[1] இதி ந்யாயாத்। அத: அந்யத்வேநோபாஸ்யம் இதி।

# 125. ஆத்மத்வோபாஸநாதிகரணம் (4-1-2)

**472. ஆத்மா இதி து உபகச்சந்தி க்ராஹயந்தி ச**

*ஆத்மா என்பதாகவே உபாஸநம் செய்கின்றனர்; அப்படியே ஶாஸ்த்ரங்கள் விளக்குகின்றன.*

**ஸம்சயம் (சந்தேகம்)**

இது இப்போது ஆராயப் படுகிறது - உபாஸநம் செய்யப்படும் ப்ரஹ்மம் ஆனது, உபாஸநம் செய்பவனை விட வேறானதாக உபாஸநம் செய்யப்பட வேண்டுமா? அல்லது உபாஸநம் செய்பவனின் ஆத்மாவாக (நான் ப்ரஹ்மம் ஆகிறேன் என்பதாக) உபாஸநம் செய்யப்பட வேண்டுமா? - என்று.

*(ஜீவன் ஆனவன், ப்ரஹ்மத்தை விட வேறானவன்; ஆனால், ப்ரஹ்மத்தின் ஶரீரம் ஆனவன்; இந்த விஷயங்கள் எல்லாம் முன்பே தெளிவாக சொல்லியாற்று; இப்போது செய்யும் விசாரம் - ஜீவன் ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்யும்போது, தானகவே ப்ரஹ்மத்தை எண்ணி 'நான் ப்ரஹ்மம்' என்பதாக உபாஸநம் செய்வது சரியாகுமா? அல்லது சரியாகாதா? என்பது;*

*இது சரியாகாது; என்னை விட வேறானவன் ப்ரஹ்மம் என்றே உபாஸநம் செய்ய வேண்டும் என பூர்வபக்ஷம்; அப்படி 'நான் ப்ரஹ்மம்' என்று உபாஸநம் செய்வதே சரியாகும் என ஸித்தாந்தம்)*

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்? வேறானதாக என்பது;

ஏன்?

உபாஸநம் செய்யும் ஜீவனை விட ப்ரஹ்மம் வேறானது என்பதால்.

ப்ரஹ்மம் ஆனது ஜீவனை விட வேறானது என்பது,

- **"அதிகம் து பேத-நிர்தேசாத்" (2-1-22),**
- **"அதிகோபதேசாத் (3-4-8)"**
- **"நேதரோநுபபத்தே: (1-1-17):"**

முதலியவற்றில் விளக்கப்பட்டது.

ப்ரஹ்மம் ஆனது, எப்படி இருக்கிறதோ, அப்படியே உபாஸநம் செய்யப்பட வேண்டும்; வேறுவிதமாக உபாஸநம் செய்தால், ப்ரஹ்மத்தை அடைதலும் வேறு-விதமாக ஆகிவிட நேரிடும்; ஏனெனில், [1] **"இந்த உலகில் எப்படி உபாஸநம் செய்-பவனாக மனிதன் ஆகிறானோ, அப்படியே இங்கிருந்து போனபின்பும் ஆகிறான்"** என்னும் தத்க்ரது-ந்யாயம் இருக்கிறது; ஆகவே, வேறானதாகவே உபாஸநம் செய்ய வேண்டும்.

एवं प्राप्तेऽभिधीयते - **आत्मेति तु** इति। तुशब्दोऽवधारणे। उपासितुरात्मेत्येवोपास्यम्। उपासिता प्रत्यगात्मा स्वशरीरस्य स्वयं यथा आत्मा, तथा स्वात्मनोऽपि परं ब्रह्म (आत्मेति) आत्मेत्येवोपासीतेत्यर्थः।

कुतः? एवं ह्युपगच्छन्ति पूर्वे उपासितारः, **''त्वं वा अहमस्मि भगवो देवते अहं वै त्वमसि''** (वारा.2-34)[1] इति।

उपासितुरर्थान्तरभूतं ब्रह्म उपासितारोऽहमिति कथमभ्युपगच्छन्तीत्यत्राह - **ग्राहयन्ति च** इति। इममर्थमविरुद्धमुपासितॄन् ग्राहयन्ति शास्त्राणि - तान् प्रत्युपपादयन्तीत्यर्थः॥

* **''य आत्मनि तिष्ठन् आत्मनोऽन्तरः, यमात्मा न वेद, यस्याऽऽत्मा शरीरम्, य आत्मानमन्तरो यमयति, स त आत्माऽन्तर्याम्यमृतः''** (बृ.मा.5-7-22)[2] इति, तथा,
* **''सन्मूलाः सोम्येमाः सर्वाः प्रजाः सदायतनाः सत्प्रतिष्ठाः''** (छा.6-8-4)[3]
* **''ऐतदात्म्यमिदं सर्वम्''** (छा.6-8-7)[4],
* **''सर्व खल्विदं ब्रह्म तज्जलानिति''** (छा.3-14-1)[5] इति च।

---

ஏவம் ப்ராப்தேऽபிதீயதே - *ஆத்மேதி து* - இதி। து ஶப்த: அவதாரணே। உபாஸிதுராத்மேத்யேவ உபாஸ்யம்। உபாஸிதா ப்ரத்யகாத்மா ஸ்வஶரீரஸ்ய ஸ்வயம் யதா ஆத்மா, ததா ஸ்வாத்மநோऽபி பரம் ப்ரஹ்ம (ஆத்மேதி) ஆத்மேத்யேவோபாஸீதேத்யர்த:।

குத:? ஏவம் ஹி உப*கச்சந்தி* பூர்வே உபாஸிதார:, *''த்வம் வா அஹமஸ்மி பகவோ தேவதே அஹம் வை த்வமஸி''* (வாரா.2-34)[1] இதி। உபாஸிதுரர்தாந்தரபூதம் ப்ரஹ்ம உபாஸிதார: அஹமிதி கதமப்யுபகச்சந்தி இத்யத்ராஹ - *க்ராஹயந்தி ச* இதி। இமமர்தம் அவிருத்தம் உபாஸித்ரூந் க்ராஹயந்தி ஶாஸ்த்ராணி - தாந் ப்ரத்யுபபாதயந்தி இத்யர்த:॥

* *''ய ஆத்மநி திஷ்டந் ஆத்மநோऽந்தர:, யமாத்மா ந வேத, யஸ்யாऽऽத்மா ஶரீரம், ய ஆத்மாநமந்தரோ யமயதி, ஸ த ஆத்மாऽந்தர்யாம்யம்ருத:''* (ப்ரு.5-7-22)[2] இதி, ததா,
* *''ஸந்மூலா: ஸோம்யேமா: ஸர்வா: ப்ரஜா: ஸதாயதநா: ஸத்ப்ரதிஷ்டா:''* (சா.6-8-4)[3],
* *''ஐததாத்ம்யமிதம் ஸர்வம்''* (சா.6-8-7)[4],
* *''ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி''* (சா.3-14-1)[5] இதி ச।

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட, ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **ஆத்மா இதி து'' ''(ஆத்மா என்பதாகவே)''** என்று. து என்ற சொல் 'அதுவாகவே' என்கிற அவதாரண-பொருளில் ஆகும் (வேறு விதமாக உபாஸநம் செய்யக் கூடாது என கருத்து).

உபாஸநம் செய்பவனது ஆத்மா என்பதாகவே (நான் ப்ரஹ்மம் என்பதாக) ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்ய வேண்டும்; உபாஸநம் செய்யும் ஜீவாத்மா ஆனவன், தனது ஶரீரத்துக்கு தான் எப்படி ஆத்மாவோ, அப்படியே (ஜீவனாகிற) தனக்கும் பர-ப்ரஹ்மம் ஆத்மாவாகும் என்பதாகவே (அந்தர்யாமியாகவே) உபாஸநம் செய்ய வேண்டும் என்று பொருள்.

ஏன்?

**உபகச்சந்தி** (அறிகின்றனர்) - உபாஸநம் செய்பவரான முன்னோர்கள் இப்படித்தானே [1]**''த்வம் வா அஹமஸ்மி பகவோ தேவதே அஹம் வை த்வமஸி பகவோ தேவதே'' (பகவானே, தெய்வமே, நான் நீயாக உள்ளேன்; நீ நானாக உள்ளாய்)''** என்று உபாஸநம் செய்கின்றனர்.

**கேள்வி -** உபாஸநம் செய்யும் ஜீவனை விட ப்ரஹ்மம் வேறு பொருளாகும்; அந்த ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்பவர், (தானே ஆவதாக) 'நான்' என்பதாக எப்படி ஏற்கின்றனர்?

**பதில் -** இப்படியாகிற இந்த கேள்விக்கு பதில் சொல்கிறார் -

**''க்ராஹயந்தி ச''** (அறிவிக்கின்றன) என்று; இந்த பொருள் முரண்படாததாக உபாஸநம் செய்பவரைக் குறித்து ஶாஸ்த்ரங்கள் அறிவிக்கின்றன; அவர்களைக் குறித்து விளக்குகின்றன என்று பொருள்.

★ [2]**''யார் ஜீவாத்மாவில் இருக்கிறானோ, ஆத்மாவுக்கு உள் இருக்கிறானோ, யாரை ஆத்மா அறியானோ, யாருக்கு ஜீவாத்மா ஶரீரம் ஆகிறானோ, யார் ஜீவாத்மாவை உள்ளிருந்து ஆள்கிறானோ, அவன்தான் உனது அந்தர்யா-மியான தோஷமற்ற ஆத்மா''** என்றும், அப்படியே,

★ [3]**''அழகனே, இந்த மக்கள் எல்லாம் ஸத்-ப்ரஹ்மத்திலிருந்து தோன்றியவர்-கள்; ஸத்தில் இருப்பவர்கள்; ஸத்தில் நிலை(லயம்) பெறுபவர்கள்;**

★ [4]**''இது எல்லாம் அந்த ஸத்தினை ஆத்மாவாகக் கொண்டது''**

★ [5]**''ப்ரஹ்மத்திலிருந்து உண்டாகி அதிலேயே அழிந்து அதிலேயே வாழ்-வதால் எல்லாமே அந்த ப்ரஹ்மம்தானே!''** - என்றும்

'सर्वस्य चिदचिद्वस्तुनः तज्जत्वात् तल्लत्वात् तदनत्वात् तन्नियाम्यत्वात् तच्छरीरत्वाच्च सर्वस्यायमात्मा। अतः स ते आत्मा। अतो यथा प्रत्यगात्मनः स्वशरीरं प्रति आत्मत्वात् 'देवोऽहम्' 'मनुष्योऽहम्' इत्यनुसन्धानम्, तथा प्रत्यगात्मनोऽप्यात्मत्वात्परमात्मनः तस्याप्यहमित्येवानुसन्धानं युक्तम्' इति।

एवं शास्त्रैरुपपादितं सर्वबुद्धीनां ब्रह्मैकनिष्ठत्वेन सर्वशब्दानां ब्रह्मैकनिष्ठत्वमभ्युपगच्छन्तः, **"त्वं वा अहमस्मि भगवो देवते अहं वै त्वमसि भगवो देवते"** (वा.रा.2-34)[1] इति व्यतिकरेणोक्तवन्तः। एवं च,

* **"अथ योऽन्यां देवतामुपास्ते अन्योऽसावन्योऽहमस्मीति न स वेद"** (बृ.3-4-10)[2],
* **"अकृत्स्नो ह्येषः... आत्मेत्येवोपासीत"** (बृ.3-4-7)[3],
* **"सर्वं तं परादात्, योऽन्यत्राऽऽत्मनः सर्वं वेद"** (बृ.6-5-7)[4]

इत्यात्मत्वाननुसन्धाननिषेधः,

* **"पृथगात्मानं प्रेरितारञ्च मत्वा"** (श्वे.1-6)[5]

इति पृथक्त्वानुसन्धानविधानं चाविरुद्धम्।

'अह'मिति स्वात्मतयाऽनुसन्धानादन्यत्वानुसन्धाननिषेधो रक्षितः।

---

ஸர்வஸ்ய சிதசித்வஸ்துந: தஜ்ஜத்வாத் தல்லத்வாத் ததநத்வாத் தந்நியாம்யத்வாத் தச்சரீத்வாச்ச ஸர்வஸ்ய அயமாத்மா। அத: ஸ தே ஆத்மா। அத: யதா ப்ரத்யகாத்மந: ஸ்வஶரீரம் ப்ரதி ஆத்மத்வாத் 'தேவோऽஹம்' 'மநுஷ்யோऽஹம்' இத்யநுஸந்தாநம், ததா ப்ரத்யகாத்மநோऽப்யாத்மத்வாத் பரமாத்மந: தஸ்யாபி அஹமிதயேவாநுஸந்தாநம் யுக்தம் இதி।

ஏவம் ஶாஸ்த்ரைருபபாதிதம் ஸர்வபுத்தீநாம் ப்ரஹ்மைகநிஷ்டத்வேந ஸர்வஶப்தாநாம் ப்ரஹ்மைகநிஷ்டத்வம் அப்யுபகச்சந்த:, *"த்வம் வா அஹமஸ்மி பகவோ தேவதே அஹம் வை த்வமஸி பகவோ தேவதே"* (வாரா. 2-34)[1] இதி வ்யதிகரேணோக்தவந்த:। ஏவம் ச,

* *"அத யோऽந்யாம் தேவதாமுபாஸ்தே அந்யோऽஸாவந்யோऽஹ- மஸ்மீதி ந ஸ வேத"* (ப்ரு.3-4-10)[2],
* *"அக்ருத்ஸ்நோ ஹ்யேஷ:... ஆத்மேத்யேவோபாஸீத"* (ப்ரு.3-4-7)[3],
* *"ஸர்வம் தம் பராதாத் யோऽந்யத்ராऽऽத்மந: ஸர்வம் வேத"* (ப்ரு.6-5-7)[4]

இதி ஆத்மத்வாநநுஸந்தாநநிஷேத:,

* *"ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச மத்வா"* (ஶ்வே.1-6)[5]

இதி ப்ருதக்த்வாநுஸந்தாநவிதாநம் ச அவிருத்தம்।

அஹமிதி ஸ்வாத்மதயாऽநுஸந்தாநாத் அந்யத்வாநுஸந்தாநநிஷேத: ரக்ஷித:।

எல்லா சேதந-அசேதந-பொருளும் அந்த பரமாத்மாவிடமிருந்து உண்டாவது; அவனிடம் லயம் அடைவது; அவனால் உயிர் வாழ்வது; அவனால் ஆளப்படுவது; அவனது ஶரீரம் ஆவது; எனவே,எல்லாவற்றுக்கும் இவன் ஆத்மா; அதனால், உனக்கும் அவன் ஆத்மா; அதனால், ஜீவன் ஆனவன், தன் ஶரீரத்தைக் குறித்து ஆத்மாவாக ஆவதால், 'நான் தேவன்', 'நான் மனிதன்' என்று எப்படி எண்ணுகிறானோ, அப்படி, ஜீவனுக்கும் பரமாத்மா ஆத்மா ஆவதால், அவனைப் பற்றியும் 'நான்' என்றே எண்ணுதல் சரியாகும் என (விளக்குகின்றன).

இப்படியாக எல்லா ஜ்ஞாநங்களும் ப்ரஹ்மத்தை மட்டுமே பற்றியவை; அதனால் எல்லா சொற்களும் ப்ரஹ்மத்தை மட்டும் சொல்பவை; ஶாஸ்த்ரங்களால் இப்படி விளக்கப்படும் பொருளை ஏற்பவர்கள், **''த்வம் வா அஹமஸ்மி பகவோ தேவதே அஹம் வை த்வமஸி பகவோ தேவதே'' (பகவானே, தெய்வமே, நான் நீயாக உள்ளேன்; நீ நானாக உள்ளாய்)''** என்று மாற்றி சொன்னார்கள்.

(தானே ப்ரஹ்மம் என எண்ணாமல்) தன்னை விட வேறானவனாக ப்ரஹ்மத்தை எண்ணுவது கூடாது என்பதை

★ **தன்னை விட வேறான தேவனை, அவன் வேறு நான் வேறு என்று யார் எண்ணுகிறானோ, அவன் சரியாக அறியவில்லை.**

★ **அவன் முழுமை பெறாதவன்; ஆத்மா என்றே உபாஸநம் செய்யவும்.**

★ **ஆத்மாவை விட்டுப் பிரிந்ததாக எல்லாவற்றையும் யார் அறிகிறானோ, அவனை எல்லாம் ஒடுக்கும்''**

என்று சொல்லியுள்ளது.

தன்னை விட வேறானவனாக ப்ரஹ்மத்தை எண்ண வேண்டும் என்பதை,

★ **தன்னையும் ஆளுபவனான பரமாத்மாவையும் வேறாக எண்ணி''**

என்று விதிக்கிறது;

இப்படி (இருவிதமாக) சொன்னதும் இப்படி முரண்பாடு இல்லாமல் ஆகும்.

1. (வேதத்தில்) பரமாத்மாவை வேறாக எண்ணுவது கூடாது என மறுப்பதும் காக்கப்பட்டது. எப்படியெனில், பரமாத்மாவை, 'நான்' என்பதாக, தனது ஆத்மாவாக எண்ணுவது ஆகும்.

स्वशरीरात् स्वात्मनोऽधिकत्वानुसन्धानवत् स्वात्मनो(तो)ऽपि परमात्मनोऽधिकत्वानुसन्धानात् पृथक्त्वानुसन्धानविधानं च रक्षितम्। अधिकस्य ब्रह्मणः प्रत्यगात्मन आत्मत्वात् तस्य च ब्रह्मशरीरत्वात् निषेधवाक्ये, **''अकृत्स्नो ह्येषः''**(बृ.3-4-7) इत्युक्तम्।

अत उपासितुरात्मत्वेन ब्रह्म उपास्यमिति स्थितम्॥ ३ ॥



इति आत्मत्वोपासनाधिकरणम् ॥ २ ॥

ஸ்வஶரீராத் ஸ்வாத்மாநோऽதிகத்வாநுஸந்தாநவத் ஸ்வாத்மநோ-(தோ)ऽபி பரமாத்மந: அதிகத்வாநுஸந்தாநாத் ப்ருதக்த்வாநுஸந்தாந-விதாநம் ச ரக்ஷிதம்। அதிகஸ்ய ப்ரஹ்மண: ப்ரத்யகாத்மந ஆத்மத்வாத் தஸ்ய ச ப்ரஹ்மஶரீரத்வாத் நிஷேதவாக்யே, *''அக்ருத்ஸ்நோ ஹ்யேஷ:''* (ப்ஃவே.3-4-7) இத்யுக்தம்।

அத: உபாஸிதுராத்மத்வேந ப்ரஹ்ம உபாஸ்யமிதி ஸ்திதம்।।3।।



இதி ஆத்மத்வோபாஸநாதிகரணம் ।। 2 ।।



2. 'வேறானதாக எண்ண வேண்டும்'' என்று விதித்திருப்பதும் காப்பாற்றப் பட்டது; ஏனெனில், (ஜீவன் ஆனவன்) தனது ஶரீரத்தை விட தானாகும் ஆத்மா வேறானவன் என எண்ணுவதுபோல், தானான ஜீவனை விட பரமாத்மா வேறானவன் என எண்ணுவது ஆகும்.

3. ஜீவனை விட வேறானவனான ப்ரஹ்மம் ஆனது, ஜீவனுக்கும் ஆத்மா ஆகிறது; அந்த ஜீவனும் ப்ரஹ்மத்தின் ஶரீரம் ஆகிறது; அதையிட்டு நிஷேதவாக்யத்தில், **''அக்ருத்ஸ்நோ ஹ்யேஷ:'' (ஜீவனையும் ப்ரஹ்மத்தையும் வெவ்வேறாக அறிபவன் முழுமையடையாதவன்)** என்று சொல்லப்பட்டது.

**ப்ரயோஜநம் (அதிகரணபலன்)**

எனவே, உபாஸநம் செய்பவனது ஆத்மாவாகவே ப்ரஹ்மம் உபாஸநம் செய்யப்பட வேண்டும் என்று ஆயிற்று.

**ஆத்மத்வோபாஸநாதிகரணம் முற்றிற்று**



# 126. ப்ரதீகாதிகரணம் (4-1-3)

**முன் குறிப்பு**

ப்ரதீகம் என்றால் பொதுவாக அவயவம் என்று அர்த்தம்; இங்கு விசிஷ்ட-ப்ரஹ்மத்தின் அவயவமாக அதாவது ஶரீரமாக இருக்கும் உலகப் பொருள் எல்லாம் ப்ரஹ்மத்தின் ப்ரதீகம் ஆகும்; அந்த உலகப் பொருளை ப்ரஹ்மமாக எண்ணி உபாஸநம் செய்தல் ப்ரதீக-உபாஸநம் எனப்படும். இப்படி உபாஸநம் செய்யச் சொல்லி வேதம் சில இடங்களில் விதிக்கிறது; ''மனஸ்தான் ப்ரஹ்மம் என உபாஸநம் செய்யவும்'' முதலியது.

இது தவறான உபாஸநம் ஆகும்; உலகப் பொருள் எல்லாம் ப்ரஹ்மத்தை விட வேறானது; அது எதுவும் ப்ரஹ்மம் அல்ல; ஆனால், அதை ப்ரஹ்மமாக உபாஸநம் செய்தல் தவறுதானே!

ஆனாலும் அப்படி உபாஸநம் செய்தால் பலன் உண்டு; ஏனெனில், தாழ்ந்த ஒருவரை உயர்ந்தவராக கருதினால், அவர் அதை உகந்து நல்ல பலன் தருவார்; அதுபோல இது. இது உலக-பலனுக்காக சொல்லப்பட்ட காம்ய-உபாஸநம் ஆகும்; மோக்ஷ-பலனுக்கான உபாஸநம் அல்ல.

போன அதிகரணத்தில், ப்ரஹ்ம-உபாஸனத்தில் ப்ரஹ்மத்தை நமக்கு ஆத்மாவாக உபாஸநம் செய்ய வேண்டும் என்று சொன்னார். இப்போது ப்ரதீக-உபாஸனத்தில் அப்படி ஆத்மாவாக கருதி உபாஸநம் செய்ய வேண்டுமா என்பது இங்கு விசாரம்.

பூர்வபக்ஷம் - இதுவும் கூட ப்ரஹ்மம் பற்றிய உபாஸநம்தான்; ப்ரஹ்மத்தை மனஸ் முதலிய ப்ரதீகமான பொருளாக உபாஸநம் செய்யச் சொல்லியுள்ளது; உபாஸநம் செய்யப்படும் விஷயம் ப்ரஹ்மம் ஆகும்; அந்த ப்ரஹ்மம் நமக்கு ஆத்மா ஆவதால், ஆத்மாவாக உபாஸநம் செய்ய வேண்டும்.

ஸித்தாந்தம் - இது ப்ரஹ்மம் பற்றிய உபாஸநம் அல்ல; இது ப்ரதீகம் பற்றிய உபாஸநம் ஆகும்; இங்கு, ப்ரஹ்மத்தை ப்ரதீக-பொருளாக உபாஸநம் செய்ய சொல்லவில்லை; மாறாக ப்ரதீகத்தை ப்ரஹ்மமாக உபாஸநம் செய்யச் சொல்கிறது; ஆகையால் இங்கு உபாஸநம் செய்யப்படும் விஷயம் ப்ரதீகம்தான்; அது நமக்கு ஆத்மா அல்ல; ஆகையால், ஆத்மாவாக உபாஸநம் செய்ய வேண்டாம்.

# १२६. प्रतीकाधिकरणम् (४-१-३)

## ४७३. न प्रतीके न हि सः (४-१-४)

* **"मनो ब्रह्मेत्युपासीत"** (छा.3-18-1)[1],
* **"स यो नाम ब्रह्मेत्युपास्ते"** (छा.7-1-5)[2]

इत्यादिप्रतीकोपासनेष्वप्यात्मत्वानुसन्धानं कार्यम्, उत नेति चिन्तायाम्,

**"मनो ब्रह्मेत्युपासीत"** (छा.3-18-1)[3] इति ब्रह्मोपासनत्वसाम्याद्ब्रह्मणश्चोपासितुरात्मत्वादात्मेत्येवोपासीतेत्येवं प्राप्तेऽभिधीयते -

**न प्रतीके** इति। प्रतीके नाऽऽत्मत्वानुसन्धानं कार्यम्।

**न हि सः** - न ह्युपासितुरात्मा प्रतीकः। प्रतीकोपासनेषु प्रतीक एवोपास्यः; न ब्रह्म। ब्रह्म तु तत्र दृष्टिविशेषणमात्रम्। प्रतीकोपासनं हि नाम अब्रह्मणि ब्रह्मदृष्ट्याऽनुसन्धानम्; तत्रोपास्यस्य प्रतीकस्योपासितुरात्मत्वाभावान्न तथाऽनुसन्धेयम्॥ ४ ॥

नन्वत्रापि ब्रह्मैवोपास्यम्; ब्रह्मण उपास्यत्वसम्भवे मनआदीनामचेतनानामल्पशक्तीनां

---

# 126. ப்ரதீகாதிகரணம் (4-1-3)

## 473. ந ப்ரதீகே ந ஹி ஸ: (4-1-4)

* *"மநோ ப்ரஹ்மேத்யுபாஸீத"* (சா.3-18-1)[1],
* *"ஸ யோ நாம ப்ரஹ்மேத்யுபாஸ்தே"* (சா.7-1-5)[2]

இத்யாதிப்ரதீகோபாஸநேஷ்வபி ஆத்மத்வாநுஸந்தாநம் கார்யம், உத நேதி சிந்தாயாம்,

*"மநோ ப்ரஹ்மேத்யுபாஸீத"* (சா.3-18-1)[3] இதி ப்ரஹ்மோபாஸநத்வஸாம்யாத் ப்ரஹ்மணஶ்ச உபாஸிதுராத்மத்வாத் ஆத்மேத்யேவோபாஸீத இதி ஏவம் ப்ராப்தேऽபிதீயதே -

*ந ப்ரதீகே* - இதி। ப்ரதீகே ந ஆத்மத்வாநுஸந்தாநம் கார்யம்।

*ந ஹி ஸ:* - ந ஹி உபாஸிது: ஆத்மா ப்ரதீக:। ப்ரதீகோபாஸநேஷு ப்ரதீக ஏவோபாஸ்ய:; ந ப்ரஹ்ம। ப்ரஹ்ம து தத்ர த்ருஷ்டிவிஶேஷணமாத்ரம்। ப்ரதீகோபாஸநம் ஹி நாம அப்ரஹ்மணி ப்ரஹ்மத்ருஷ்ட்யாऽநுஸந்தாநம்; தத்ரோபாஸ்யஸ்ய ப்ரதீகஸ்ய உபாஸிதுராத்மத்வாபாவாத் ந ததாऽநுஸந்தேயம்।। 4 ।।

நநு அத்ராபி ப்ரஹ்மைவோபாஸ்யம்; ப்ரஹ்மண உபாஸ்யத்வஸம்-

# 126. ப்ரதீகாதிகரணம் (4-1-3)

## 473. ந ப்ரதீகே, ந ஹி ஸ: (4-1-4)

*ப்ரதீகத்தில் ஆத்மாவாக எண்ணுதல் கிடையாது; ஏனெனில், அது ஆத்மா அல்ல.*

**ஸம்சயம் (சந்தேஹம்)**

- [1] **மனஸ் ப்ரஹ்மம் என உபாஸநம் செய்யவும்.**
- [2] **யார் நாமம் ப்ரஹ்மம் என உபாஸநம் செய்கிறானோ,**

முதலியவை ப்ரதீக-உபாஸநங்கள் ஆகும்; இவற்றிலும் ஆத்மாவாக எண்ணுதல் செய்யப்பட வேண்டுமா? அல்லது வேண்டாமா? என்பது விசாரம்.

**பூர்வபக்ஷம்**

[3]**"மனஸ் ப்ரஹ்மம் என உபாஸநம்செய்யவும்"** என்பதும் ப்ரஹ்ம-உபாஸநம் ஆகும்; ப்ரஹ்மம் பற்றிய உபாஸநம் என்பது சமமாக உள்ளது; அந்த ப்ரஹ்மமானது உபாஸநம் செய்யும் ஜீவனுடைய ஆத்மா ஆகும்; அதனால், ஆத்மா என்பதாகவே இங்கும் உபாஸநம் செய்ய வேண்டும்.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **'ந ப்ரதீகே'** என்று; ப்ரதீக-உபாஸநத்தில் ஆத்மாவாக எண்ணுதல் செய்யப்பட வேண்டியதில்லை.

**ந ஹி ஸ:** - ஏனெனில், அந்த ப்ரதீகம் ஆனது உபாஸநம் செய்பவனின் ஆத்மா அல்ல.

ப்ரதீக-உபாஸநங்களில் உபாஸநம் செய்யப்படும் விஷயம் ப்ரதீகம்தான்; ப்ரஹ்மம் அல்ல; ப்ரஹ்மம் ஆனது த்ருஷ்டி-விசேஷணம் மட்டுமே; (மனஸ்ஸினை ப்ரஹ்மம் ஆக எண்ணி த்யாநம் செய்யும்போது மனஸ்ஸினையே த்யாநம் செய்கிறார்; ப்ரஹ்மத்தை அல்ல; மனஸ்-ஐ எப்படி காண்கிறார்? ப்ரஹ்மம் ஆக காண்கிறார் என்பதால், காணும் முறையில் விஶேஷணம் ஆகவே ப்ரஹ்மம் உள்ளது; காணப்படும் விஷயமாக இல்லை) ப்ரதீக-உபாஸநம் என்பது ப்ரஹ்மம் ஆகாததை ப்ரஹ்மமாகக் காண்பதாகிற எண்ணம் ஆகும்; அதில் உபாஸநம் செய்யப்படுவது ப்ரதீகம்தான்; அது உபாஸநம் செய்யும் ஜீவனின் ஆத்மா அல்ல; எனவே, அப்படி ஆத்மாவாக எண்ணக் கூடாது.



**கேள்வி** - இங்கும் ப்ரஹ்மம்தான் உபாஸநம் செய்யப்படும் விஷயம்; ஏனெனில், ப்ரஹ்மம் உபாஸநம் செய்யப்படும் விஷயமாக ஆகும்போது, (அதை விட்டு) அல்ப-சக்தி கொண்டவையும் அசேதந-பொருள்களும் ஆன மனஸ் முதலியவை

चोपास्यत्वाश्रयणस्यान्याय्यत्वात्। अतो मनआदिदृष्ट्या ब्रह्मैवोपास्यमिति ; अत आह -

**४७४.ब्रह्मदृष्टिरुत्कर्षात् (४-१-५)**

मनआदिषु ब्रह्मदृष्टिरेव युक्ता। न ब्रह्मणि मनआदिदृष्टिः; ब्रह्मणो मनआदिभ्य उत्कर्षात्; तेषां च विपर्ययात्। उत्कृष्टे हि राजनि भृत्यदृष्टिः प्रत्यवायकरी; भृत्ये तु राजदृष्टिरभ्युदयाय॥ ५ ॥

इति प्रतीकाधिकरणम् ॥ ३ ॥

---

பவே மநஆதீநாமசேதநாநாம் அல்பஶக்தீநாம் சோபாஸ்யத்வாஶ்ரயணஸ்ய அந்யாய்யத்வாத்। அத: மநஆதித்ருஷ்ட்யா ப்ரஹ்மைவோபாஸ்யம் இதி; அத ஆஹ -

**474. ப்ரஹ்மத்ருஷ்டிருத்கர்ஷாத் (4-1-5)**

மநஆதிஷு ப்ரஹ்மத்ருஷ்டிரேவ யுக்தா। ந ப்ரஹ்மணி மநஆதித்ருஷ்டி:; ப்ரஹ்மணோ மநஆதிப்ய உத்கர்ஷாத்; தேஷாம் ச விபர்யயாத்। உத்க்ருஷ்டே ஹி ராஜநி ப்ருத்யத்ருஷ்டி: ப்ரத்யவாயகரீ; ப்ருத்யே து ராஜத்ருஷ்டி: அப்யுதயாய॥ 5 ॥

இதி ப்ரதீகாதிகரணம் ॥ 3 ॥



உபாஸநம் செய்யப்படுபவை என்று ஏற்பது சரியல்ல; ஆகையால், ப்ரஹ்மம்தான் மனஸ் முதலியதாக உபாஸநம் செய்யப்படும் விஷயம் ஆகும்.

**பதில் -** அதற்கு பதில் சொல்கிறார் -

**474. ப்ரஹ்மத்ருஷ்டி: உத்கர்ஷாத் (4-1-5)**

*[ப்ரஹ்மம்] உயர்ந்ததானபடியால், ப்ரஹ்மமாகக் காணுதல் ஆகும்*

மனஸ் முதலியவற்றை ப்ரஹ்மமாகக் காண்பதுதான் சரியாகும்; ப்ரஹ்மத்தை மனஸ் முதலியதாகக் காண்பது சரியல்ல; ஏனெனில், ப்ரஹ்மம் ஆனது, மனஸ் முதலியதை விட உயர்ந்தது; அந்த மனஸ் முதலியவையோ நேர் எதிராகத் தாழ்ந்தவை ஆகும்.

உயர்ந்தவனான அரசனை வேலையாளாக காண்பது பாபம் உண்டாக்கும்; வேலையாளை அரசனாகக் காண்பது நற்பலனுக்கு ஆகும்.

**ப்ரதீகாதிகரணம் முற்றிற்று.**



# 127. ஆதித்யாதிமத்யதிகரணம் (4-1-4)

## முன் குறிப்பு

போன அதிகரணத்தைத் தொடர்ந்து ஒரு உபாஸநத்தில் ஒரு விசாரம் செய்கிறார் இந்த அதிகரணத்தில்.

யாகத்தில் கானமாக ஓதப்படும் ஸாமவேதத்தில் ஐந்து பாகங்கள் உண்டு; அதில் உத்கீதம் என்று ஒரு முக்கியபாகம்; அந்த உத்கீதத்தை உபாஸநம் செய்ய வேண்டும் என்று ஒரு வேதவாக்யம் சொல்கிறது. ''உத்கீதத்தை ஸூர்யனை உபாஸநம் செய்யவும்'' என்று அந்த வேதவாக்யம் உள்ளது. இங்கு உத்கீதத்தை ஸூர்யனாக உபாஸநம் செய்ய வேண்டுமா? அல்லது ஸூர்யனை உத்கீதமாக உபாஸநம் செய்ய வேண்டுமா என்று விசாரம்.

தாழ்ந்ததான ஒரு பொருளை உயர்ந்த பொருளாக நினைப்பது நல்லது என்று போன அதிகரணத்தில் சொல்லியாயிற்று. இதில், உத்கீதம், ஸூர்யன் ஆகிய இரண்டில் எது உயர்ந்தது? எது தாழ்ந்தது என்பது புரிந்தால் தாழ்ந்ததை உயர்ந்ததாக உபாஸநம் செய்யலாம். எனவே எது தாழ்ந்தது? எது உயர்ந்தது? என இப்போது விசாரம்.

பூர்வபக்ஷம் - யாகத்துக்கு அங்கமான உத்கீதமே உயர்ந்தது; யாகம்தானே பலனுக்கு காரணம் ஆகிறது; அந்த யாகத்துக்கு அங்கமான உத்கீதமே உயர்ந்தது. ஆகவே, தாழ்ந்தவனான ஸூர்யனை உத்கீதமாக எண்ணி உபாஸநம் செய்ய வேண்டும்.

ஸித்தாந்தம் - யாகத்தை விட தேவர்கள் உயர்ந்தவர்கள்; யாகம் நேராக பலன் அளிக்காது; ஸூர்யன் முதலிய தேவர்கள்தாம் யாகம் மூலம் பூஜிக்கப்பட்டு பலன் அளிக்கின்றனர்; ஆகையால் அவரே உயர்ந்தவர்; ஆகையால், தாழ்ந்ததான உத்கீதத்தை ஸூர்யனாக எண்ணி உபாஸநம் செய்ய வேண்டும். அதுவே சரியாகும்.

இதேபோல இன்னும் பல வாக்யங்கள் உள்ளன. அங்கெல்லாம் இதே போல நிர்ணயம் செய்துகொள்ள வேண்டும்.

# १२७. आदित्यादिमत्यधिकरणम् (४-१-४)

## ४७५. आदित्यादिमतयश्चाङ्ग उपपत्तेः (४-१-६)

**''य एवासौ तपति तमुद्गीथमुपासीत''**(छा.1-3-1)[1] इत्यादिषु कर्माङ्गाश्रयेषु उपासनेषु संशयः - किमुद्गीथादौ कर्माङ्गे आदित्यादिदृष्टिः कर्तव्या, उतादित्यादिषूद्गीथादिदृष्टिः इति।

उत्कृष्टदृष्टिर्निकृष्टे कर्तव्येति न्यायात्, उद्गीथादीनां च फलसाधनभूतकर्माङ्गत्वेनाफलेभ्य आदित्यादिभ्यः उत्कृष्टत्वादादित्यादिषूद्गीथादिदृष्टिः इति प्राप्तेऽभिधीयते -

**आदित्यादिमतयश्चाङ्गे** इति। चशब्दोऽवधारणे। क्रत्वङ्गे उद्गीथादावादित्यादिदृष्टय एव कार्याः। कुतः? **उपपत्तेः**; आदित्यादीनामेवोत्कृष्टत्वोपपत्तेः; आदित्यादिदेवताराधनद्वारेण हि कर्मणामपि फलसाधनत्वम्। अतस्तद्दृष्टिरुद्गीथाद्यङ्गे॥ ६ ॥

इति आदित्यादिमत्याधिकरणम् ॥ ४ ॥

# 127. ஆதித்யாதிமத்யதிகரணம் (4-1-4)

## 475. ஆதித்யாதிமதயஶ்சாங்க உபபத்தே: (4-1-6)

*''ய ஏவாஸௌ தபதி தமுத்கீதமுபாஸீத''*(சா.1-37-1)[1] இத்யாதிஷு கர்மாங்காஶ்ரயேஷு உபாஸநேஷு ஸம்ஶய: - கிம் உத்கீதாதௌ கர்மாங்கே ஆதித்யாதித்ருஷ்டி: கர்தவ்யா, உத ஆதித்யாதிஷு உத்கீதாதித்ருஷ்டி: - இதி।

உத்க்ருஷ்டத்ருஷ்டிர்நிக்ருஷ்டே கர்தவ்யா இதி ந்யாயாத், உத்கீதாதீநாம் ச பலஸாதநபூதகர்மாங்கத்வேந அபலேப்ய ஆதித்யாதிப்ய: உத்க்ருஷ்டத்வாத் ஆதித்யாதிஷு உத்கீதாதித்ருஷ்டி: இதி ப்ராப்தேऽபிதீயதே -

*ஆதித்யாதிமதயஶ்சாங்கே* இதி। ச ஶப்த: அவதாரணே। க்ரத்வங்கே உத்கீதாதௌ ஆதித்யாதித்ருஷ்டய ஏவ கார்யா:। குத:?, உபபத்தே: ஆதித்யாதீநாமேவ உத்க்ருஷ்டத்வோபபத்தே:; ஆதித்யாதிதேவதாராதநத்வாரேண ஹி கர்மணாமபி பலஸாதநத்வம்। அத: தத்த்ருஷ்டி: உத்கீதாத்யங்கே।।6।।

இதி ஆதித்யாதிமத்யதிகரணம் ।। 4 ।।

# 127. ஆதித்யாதிமத்யதிகரணம் (4-1-4)

**474. ஆதித்யாதிமதய: ச அங்கே உபபத்தே: (4-1-6)**

*[யாகத்தின்] அங்கத்தை ஆதித்யன் முதலியதாக எண்ணுவதே; அவர் உயர்ந்தவர் ஆவது தகுமாதலால்;*

**விஷய-வாக்யம்**

**''யாரிவன் தபிக்கிறானோ (சுடுகிறானோ), அவனை (ஆதித்யனை) உத்-கீதத்தை உபாஸநம் செய்க''** - முதலியவை யாக-கர்மத்துக்கு அங்கமான உபாஸ-நங்கள்.

**ஸம்சயம் (ஸந்தேஹம்)**

இவற்றில் ஸந்தேஹம் - கர்மத்துக்கு அங்கமான உத்கீதம் முதலியதை ஆதித்-யன் முதலியதாகக் காண்பது செய்யப்பட வேண்டுமா? அல்லது ஆதித்யன் முத-லியவரை உத்கீதம் முதலியதாகக் காண்பதா? என்று .

**பூர்வபக்ஷம்**

தாழ்ந்தவனை உயர்ந்தவனாகக் காண்பது செய்யப்பட வேண்டும் என்னும் நெறிமுறை உள்ளது; உத்கீதம் முதலியவை பலனுக்குக் காரணமான கர்மத்தின் அங்கங்கள்; ஆதித்யன் முதலியவர் பலன் அற்றவர்; எனவே, ஆதித்யன் முதலிய-வரை விட உத்கீதம் முதலியது உயர்ந்தது; எனவே, ஆதித்யன் முதலியவரை உத்கீ-தம் முதலியதாகக் காண்பது தகும்.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **ஆதித்யாதி-மதய: ச அங்கே''** என்று.

**'ச'** என்ற சொல் 'அதுதான்' எனும் உறுதியைக் குறிக்கிறது.

**அங்கே (அங்கத்தில்)** - யாகத்துக்கு அங்கமான உத்கீதம் முதலியதை

**அதித்யாதிமதய:** - ஆதித்யன் முதலியதாகக் காணும் உபாஸநங்கள்தாம் செய்யப்பட வேண்டியவை;

ஏன்?

**உபபத்தே: (தகுமாதலால்)** - ஆதித்யன் முதலியவரே உயர்ந்தவர் ஆவது தகுமாதலால்; ஆதித்யன் முதலிய தேவர்களது ஆராதனத்தை இடையிட்டுதானே யாகம் முதலிய கர்மங்கள் பலனுக்கு காரணம் ஆகின்றன; எனவே, உத்கீதம் முதலிய அங்கத்தை அந்த ஆதித்யன் முதலியதாகக் காண்பது சரியாகும்.

**ஆதித்யாதிமத்யதிகரணம் முற்றிற்று**

# 128. ஆஸீநாதிகரணம் (4-1-5)

## முன் குறிப்பு

உபாஸநம் செய்பவன் உட்கார்ந்து கொண்டு செய்ய வேண்டுமா? அல்லது நியமம் இல்லாமல் நின்றுகொண்டோ, அமர்ந்துகொண்டோ படுத்துக்கொண்டோ எப்படி வேண்டுமானாலும் செய்யலாமா? என்று விசாரம்.

உபாஸநம் செய்வதற்கு மனதை ஒருமுகப் படுத்த வேண்டும்; அதற்கு உட்கார்ந்த நிலைதான் ஏற்றது; உட்கார்ந்த நிலையில்தாம் மனதை ஒருமுகப் படுத்த முடியும்.

நின்றுகொண்டு த்யானம் செய்வதானால், நிற்பதற்கான முயற்சி தேவையாக இருப்பதால், மனதை அதிலும் கவனம் செலுத்த வேண்டி வரும். மனதை ஒருமுகப்படுத்த முடியாது. படுத்துக் கொண்டு த்யானம் செய்வதானால், தூக்கம் வரலாம்; அதனால், இரண்டு நிலையும் ஏற்றதல்ல; அமர்ந்த நிலையே த்யானத்துக்கு ஏற்றது.

உபாஸனம் எந்த இடத்தில் செய்ய வேண்டும்? எந்த காலத்தில் செய்ய வேண்டும்? எந்த நிலையில் செய்ய வேண்டும்?

வேதத்தில் பார்த்தால், தனிப்பட்ட இடத்தையோ காலத்தையோ குறிக்கவில்லை; இந்த இடத்தில் இந்த காலத்தில் செய்ய வேண்டும் என கட்டாயப் படுத்தவில்லை; மாறாக மனதை ஒருமுகப்படுத்துவதுதான் முக்கியமாக சொல்லியுள்ளது; அதற்கு ஏற்றதான இடமும் காலமும் ஆக வேண்டும்.

அதேபோல, எந்த நிலையில் உபாஸநம் செய்ய வேண்டும் என்பதையும் நாம் புரிந்து கொள்ளலாம்; மனதை ஒருமுகப்படுத்துவது முக்கியம். அதற்கு ஏற்ற நிலை என்பது அமர்ந்த நிலைதான்; ஆகவே, அமர்ந்து கொண்டுதான் உபாஸநம் செய்ய வேண்டும் என புரிந்து கொள்ளலாம். இது கடைசி ஸூத்ரத்தின் அர்த்தம்.

# १२८. आसीनाधिकरणम् (४-१-५)

## ४७६.आसीनः सम्भवात् (४-१-७)

मोक्षसाधनतया वेदान्तशास्त्रैर्विहितं ज्ञानं ध्यानोपासनादिशब्दवाच्यमसकृदावृत्तं सन्ततस्मृतिरूपमित्युक्तम्। तदनुतिष्ठन् आसीनः शयानः तिष्ठन् गच्छंश्च विशेषाभावादनियमेनानुतिष्ठेत् -

इति प्राप्ते उच्यते - **आसीनः** इति। **आसीन** उपासनमनुतिष्ठेत्। कुतः? **सम्भवात्** - आसीनस्यैव ह्येकाग्रचित्ततासम्भवः; स्थितिगत्योः प्रयत्नसापेक्षत्वात्, शयने च निद्रासम्भवात्। पश्चार्धधारणप्रयत्ननिवृत्तये सापाश्रये आसीनः कुर्यात्॥ ७ ॥

## ४७७.ध्यानाच्च (४-१-८)

"**निदिध्यासितव्यः**" (बृ.6-5-6)[1] इति ध्यानरूपत्वादुपासनस्य, एकाग्रचित्तताऽवश्यम्भाविनी। ध्यानं हि विजातीयप्रत्ययान्तराव्यवहितमेकचिन्तनमित्युक्तम्॥ ८ ॥

---

# 128. ஆஸீநாதிகரணம் (4-1-5)

## 476. ஆஸீநः ஸம்பவாத் (4-1-7)

மோக்ஷஸாதநதயா வேதாந்தஶாஸ்த்ரைர்விஹிதம் ஜ்ஞாநம் த்யாநோபாஸநாதிஶப்தவாச்யம் அஸக்ருதாவ்ருத்தம் ஸந்ததஸ்ம்ருதிரூபம் இத்யுக்தம்। ததநுதிஷ்டந் ஆஸீநः ஶயாநः திஷ்டந் கச்சம்ஶ்ச விஶேஷாபாவாத் அநியமேநாநுதிஷ்டேத் -

இதி ப்ராப்தே உச்யதே - *ஆஸீநः* இதி। ஆஸீநः உபாஸநமநுதிஷ்டேத்। குதः? *ஸம்பவாத்* - ஆஸீநஸ்யைவ ஹி ஏகாக்ரசித்ததாஸம்பவः; ஸ்திதிகத்யோः ப்ரயத்நஸாபேக்ஷத்வாத், ஶயநே ச நித்ராஸம்பவாத்। பஶ்சார்த஧ாரணப்ரயத்நநிவ்ருத்தயே ஸாபாஶ்ரயே ஆஸீநः குர்யாத்।। 7 ।।

## 477. த்யாநாச்ச (4-1-8)

*"நிதித்யாஸிதவ்யः"* (ப்ரு.6-5-6)[1] இதி த்யாநரூபத்வாதுபாஸநஸ்ய, ஏகாக்ரசித்ததா அவஶ்யம்பாவிநீ। த்யாநம் ஹி விஜாதீயப்ரத்யயாந்தராவ்யவஹிதம் ஏகசிந்தநம் இத்யுக்தம்।। 8 ।।

# 128. ஆஸீநாதிகரணம் (4-1-5)

## 476. ஆஸீந: ஸம்பவாத் (4-1-7)

*மனம் ஒருமுகமாக ஆதல் வருமாதலால், அமர்ந்தவனாக [உபாஸநம் செய்ய வேணும்]*

**ஸங்கதி, ஸம்சயம் & பூர்வபக்ஷம்**

மோக்ஷத்துக்கு உபாயமாக வேதாந்த-ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படும் ஜ்ஞாநமானது, த்யாநம், உபாஸநம் முதலிய சொற்களால் சொல்லப்படுவது; பல-முறை திருப்பி செய்யப்படுவது; தொடர்ந்து ஆகும் நினைவு உருவிலாவது என்று சொல்லப்பட்டது;

அதை அனுஷ்டானம் செய்பவன் அமர்ந்தவன் ஆகவோ, கிடப்பவன், நிற்ப-வன், செல்பவன் ஆகவோ நியமம் இல்லாமல் செய்யலாம்; ஏனெனில், விசேஷ-குறிப்பு எதுவும் இல்லை.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **ஆஸீந:** என்று.

**ஆஸீந: -** அமர்ந்தவன் ஆகவே உபாஸநம் செய்ய வேண்டும்.

ஏன்?

**ஸம்பவாத் -** அமர்ந்திருப்பவனுக்கே மனது ஒருமுகமாக ஆகும் என்பதால்; ஏனெனில், நிற்பதுக்கும் செல்வதற்கும் முயற்சி தேவையாகிறது; கிடந்தால், உறக்கம் நேரிடும்; ஆகவே, உடலின் பின்பகுதியை தாங்குவதற்கான முயற்சியை தவிர்ப்பதற்காக சாய்மானத்தில் அமர்ந்தவனாக உபாஸநம் செய்ய வேண்டும்.



## 477. த்யாநாத் ச (4-1-8)

*த்யாநமாக ஆவதாலும்*

[1]**"நிதித்யாஸிதவ்ய:"** என்று உபாஸநம் த்யாந-உருவாக ஆகும் என்பதால், மனது ஒருமுகமாக ஆதல் கட்டாயம் ஆக வேண்டும்; ஏனெனில், த்யாநம் என்பது, வேறுபட்ட வேறொரு ஜ்ஞாநம் இடையிடாமல் ஒரே விஷயத்தை சிந்தித்தல் ஆகும் என்று சொல்லியாயிற்று.



## ४७८.अचलत्वं चापेक्ष्य (४-१-९)

निश्चलत्वं चा(ह्य) पेक्ष्य पृथिव्यन्तरिक्षादिषु ध्यानवाचोयुक्तिर्दृश्यते, **''ध्यायतीव पृथिवी, ध्यायतीवान्तरिक्षम्, ध्यायतीव द्यौः, ध्यायन्तीवापः, ध्यायन्तीव पर्वताः''** (छा.7-6-1)[1] इति। अतः पृथिवीपर्वतादिवत् एकाग्रचित्ततया निश्चलत्वमुपासकस्यासीनस्यैव सम्भवेत्॥९॥

## ४७९.स्मरन्ति च (४-१-१०)

स्मरन्ति चासीनस्यैव ध्यानम्,

**''शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः।**
**नात्युच्छ्रितं नातिनीचं चेलाजिनकुशोत्तरम्॥** (गी.6-11)[2]
**तत्रैकाग्रं मनः कृत्वा यतचित्तेन्द्रियक्रियः।**
**उपविश्याऽऽसने युञ्ज्यात् योगमात्मविशुद्धये॥''**(गी.6-12)[3] इति॥१०॥

---

## 478. அசலத்வம் சாபேக்ஷ்ய (4-1-9)

நிஶ்சலத்வம் சா(ஹ்ய)பேக்ஷ்ய ப்ருதிவ்யந்தரிக்ஷாதிஷு த்யாநவாசோயுக்திர்த்ருஶ்யதே, *''த்யாயதீவ ப்ருதிவீ, த்யாயதீவாந்தரிக்ஷம், த்யாயதீவ த்யௌ:, த்யாயந்தீவாப:, த்யாயந்தீவ பர்வதா:''* (சா.7-6-1)[1] இதி। அத: ப்ருதிவீ-பர்வதாதிவத் ஏகாக்ரசித்ததயா நிஶ்சலத்வம் உபாஸகஸ்ய ஆஸீநஸ்யைவ ஸம்பவேத்।।9

## 479. ஸ்மரந்தி ச (4-1-10)

ஸ்மரந்தி ச ஆஸீநஸ்யைவ த்யாநம்,

*''ஶுசௌ தேஶே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரமாஸநமாத்மந:।*
*நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சேலாஜிநகுஶோத்தரம்।।''* (கீ.6-11)[2]
*''தத்ரைகாக்ரம் மந: க்ருத்வா யதசித்தேந்த்ரியக்ரிய:।*
*உபவிஶ்யாऽऽஸநே யுஞ்ஜ்யாத் யோகமாத்மவிஶுத்தயே।।''* (கீ.6-12)[3]
இதி।।10।।

## 478. அசலத்வம் ச அபேக்ஷ்ய (4-1-9)

*அசையாதிருப்பதை வைத்து [த்யாநம் செய்வதாக சொல்வதால்]*

பூமி, அந்தரிக்ஷம் முதலியவை, அசையாமல் இருப்பதை வைத்து, அவை த்யாநம் செய்வதாக சொல்வது காணப்படுகிறது - [1]**''பூமி த்யாநம் செய்கிறாள் போலும்; அந்தரிக்ஷம் த்யாநம் செய்கிறது போலும்; விண்ணுலகம் த்யாநம் செய்கிறது போலும்; (குளத்தில்) ஜலம் த்யாநம் செய்வது போலும்; மலைகள் த்யாநம் செய்கின்றன போலும்''** என்று.

ஆகவே, பூமி, மலை முதலியது போல அசையாதிருத்தல் ஆனது, மனது ஒரு முகமாவதன் மூலம் ஆவதாய், அது, உபாஸநம் செய்பவன் அமர்ந்திருப்பவனாக ஆனால்தான் வரும்.



## 479. ஸ்மரந்தி ச (4-1-10)

*ஸ்ம்ருதியிலும் சொல்கின்றனர்.*

அமர்ந்திருப்பவனாகவே த்யாநம் செய்வதை ஸ்ம்ருதிகளிலும் சொல்கின்றனர் - [2]**''சுத்தமான இடத்தில் அதிக உயரமும் அதிக தாழ்வும் ஆகாததும், வஸ்த்ரம், அஜிநம், தர்ப்பம் (துணி,மான்தோல்,தர்ப்பபுல்) ஆகியவற்றை மேன்மேலாகக் கொண்டதும் ஆன நிலையான ஆசனத்தை வைத்து'',**

[3]**''அந்த ஆசனத்தில் அமர்ந்து, மனதை ஒருமுகமாக ஆக்கி, மனம் மற்றும் இந்த்ரியங்களின் செயல்களை அடக்கியவனாய், ஆத்ம-சுத்தியாகிற மோக்ஷம் பெறுவதற்காக யோகம் செய்ய வேண்டும்''** என்று.

*(நிலையான ஆஸநத்துக்காக மரத்தால் ஆன மனையில் அமர வேண்டும்; அதற்கு மேல் மிருதுவாக வஸ்த்ரம்; அதற்கு சுத்தத்துக்காக மான் தோல்; அதற்கு மேல் சுத்திக்காக தர்ப்பம் என்று வரிசை.*

*அல்லது, தர்ப்பத்துக்கு மேல் மான்தோல், அதற்கு மேல் வஸ்த்ரம் என்று ஆகலாம்; மேன் மேல் மிருதுவாக ஆஸநம் அமையும்.*

*எப்படி வேண்டுமானாலும் ஆகலாம் என்று சிலர் சொல்கின்றனர்.*

*விரிவாக ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தின் வ்யாக்யாநமான தாத்பர்யசந்திரிகாவில் காணலாம்)*



## ४८०.यत्रैकाग्रता तत्राविशेषात् (४-१-११)

एकाग्रतातिरिक्तदेशकालविशेषाश्रवणात् एकाग्रतानुकूलो यो देशः कालश्च, स एवोपासनस्य देशः कालश्च। "**समे शुचौ शर्करावह्निवालुकाविवर्जिते**"(श्वे.2-10)[1] इति वचनमेकाग्रतैकान्तदेशमाह, न तु देशं नियच्छति; "**मनोऽनुकूले**"(श्वे.2-10)[2] इति वाक्यशेषात्॥११॥

इति आसीनाधिकरणम् ॥ ५ ॥

## 480. யத்ரைகாக்ரதா தத்ராவிஶேஷாத் (4-1-11)

ஏகாக்ரதாதிரிக்ததேஶகாலவிஶேஷாஶ்ரவணாத் ஏகாக்ரதாநுகூலோ யோ தேஶ: காலஶ்ச, ஸ ஏவோபாஸநஸ்ய தேஶ: காலஶ்ச। *"ஸமே ஶுசௌ ஶர்கராவஹ்நிவாலுகாவிவர்ஜிதே"* (ஶ்வே.2-10)[1] இதி வசநம் ஏகாக்ரதைகாந்ததேஶமாஹ; ந து தேஶம் நியச்சதி; *"மநோऽநுகூலே"* (ஶ்வே.2-10)[2] இதி வாக்யஶேஷாத்।। 11 ।।

இதி ஆஸீநாதிகரணம் ।। 5 ।।



## 480. யத்ர ஏகாக்ரதா தத்ர அவிசேஷாத் (4-1-11)

**எங்கு ஒருமுகமாதல் வருமோ அங்கு வேறு விசேஷம் சொல்லாதபடியால்**

மனம் ஒருமுகமாதல் தவிர வேறு விசேஷமான இடமோ காலமோ சொல்லப்படவில்லை; அதனால், ஒருமுகமாவதற்கு ஏற்றதான இடமும் காலமும் எதுவோ, அதுவேதான் உபாஸநத்துக்கான இடமும் காலமும் ஆகும்.

[1]**''கல், சூடு, மணல் இல்லாமல் சமமான சுத்தமான இடத்தில்''** என்ற வாக்யம் ஆனது, ஒருமுகமாதலுக்கு ஏற்ற இடத்தை சொல்கிறது; இடம் இப்படியே ஆக வேண்டும் என கட்டாயப் படுத்தவில்லை; ஏனெனில், [2]**''மனதுக்கு ஏற்ற இடத்தில்''** என்று வாக்ய-மிகுதியில் சொல்கிறது.

**ஆஸீநாதிகரணம் முற்றிற்று**



# 129. ஆப்ரயாணாதிகரணம் (4-1-6)

## முன்குறிப்பு

ப்ரஹ்ம-ஜ்ஞாநம் என்பது ஒருதடவை வந்தால் போதாது; தொடர்ந்து பலமுறை வருவதாக த்யான-வடிவில் ஆக வேண்டும் என்பதை முதன்முதலில் ஆவ்ருத்த்யதிகர-ணத்தில் சொல்லியாயிற்று. அந்த உபாஸநம் என்பதை சில நாட்கள் மட்டும் செய்தால் போதுமா? அல்லது இறுதி-மரணம் வரை செய்துகொண்டே இருக்க வேண்டுமா? என விசாரம்.

பூர்வபக்ஷம் - த்யானம் செய்ய வேண்டும் என்றுதான் வேதம் சொல்லியுள்ளது; அதை ஒருதடவை செய்தால் போதும்; வேதம் சொன்ன அந்த ஶாஸ்த்ரத்தைக் கடைப்பிடித்ததாக ஆகிவிடும். கடைசி மரணம் வரை செய்ய வேண்டாம்.

ஸித்தாந்தம் - மரணம் வரை தொடர்ந்து உபாஸநம் செய்ய வேண்டும். அப்படி வேதமே தெளிவாக சொல்லியுள்ளது.

**''குடும்பத்தில் வேதம் ஓதிக்கொண்டு யாகம் முதலிய தர்மகார்யங்கள் செய்து-கொண்டு ..... இப்படி ஆயுள் முடியும் வரை இருப்பவன், ப்ரஹ்மலோகத்தை அடைகிறான்; திரும்பி வருவதில்லை''** என்கிறது வேதவாக்யம். அதாவது ப்ரஹ்ம-வித்யைக்கு அங்கமாக தர்மானுஷ்டானம் செய்துகொண்டு இருப்பவன் அந்த ப்ரஹ்ம-வித்யையின் பலனாக ப்ரஹ்மலோகம் அடைவான் என்று கருத்து.

ப்ராரப்தகர்மம் முடியும் இறுதி மரணம் வரை உபாஸநம் செய்ய வேண்டும்; ப்ராரப்-தகர்மம் ஆனது சிலருக்கு இந்த ஜன்மத்திலேயே தொலையும்; சிலருக்கு அடுத்த பிறவி-யிலும் தொடரலாம்; அப்படியானால், அதுவரை உபாஸநம் தொடர வேண்டும் என்று கருத்து.

# १२९. आप्रयाणाधिकरणम् (४-१-६)

## ४८१.आप्रयाणात् तत्रापि हि दृष्टम् (४-१-१२)

तदिदमपवर्गसाधनमुक्तलक्षणमुपासनमेकाह एव सम्पाद्यम्, उत आप्रयाणात् प्रत्यहमनुवर्तनीयमिति विशये।

एकस्मिन्नेवाहनि शास्त्रार्थस्य कृतत्वात् तावतैव परिसमापनीयमिति प्राप्ते उच्यते -

**आप्रयाणात्** इति। आमरणादनुवर्तनीयम्; कुतः? **तत्रापि हि दृष्टम्** - उपासनोद्योगप्रभृति आप्रयाणान्मध्ये यः कालः, तत्र सर्वत्रापि दृष्टमुपासनम् **''स खल्वेवं वर्तयन् यावदायुषं ब्रह्मलोकमभिसम्पद्यते''** (छा.8-15-1)[1] इति॥ १२ ॥

इति आप्रयाणाधिकरणम्॥ ६ ॥

---

# 129. ஆப்ரயாணாதிகரணம் (4-1-6)

## 481.ஆப்ரயாணாத் தத்ராபி ஹி த்ருஷ்டம் (4-1-12)

ததிதம் அபவர்கஸாதநம் உக்தலக்ஷணமுபாஸநம் ஏகாஹ ஏவ ஸம்பாத்யம், உத ஆப்ரயாணாத் ப்ரத்யஹமநுவர்தநீயம் இதி விஶயே।

ஏகஸ்மிந்நேவாஹநி ஶாஸ்த்ரார்தஸ்ய க்ருதத்வாத் தாவதைவ பரிஸமாபநீயம் இதி ப்ராப்தே உச்யதே -

*ஆப்ரயாணாத்* - இதி। ஆமரணாதநுவர்தநீயம்; குத:? *தத்ராபி ஹி த்ருஷ்டம்* - உபாஸநோத்யோகப்ரப்ருதி ஆப்ரயாணாத் மத்யே ய: கால:, தத்ர ஸர்வத்ராபி த்ருஷ்டமுபாஸநம் *''ஸ கல்வேவம் வர்தயந் யாவதாயுஷம் ப்ரஹ்மலோகமபிஸம்பத்யதே''* (சா.8-15-1)[1] இதி।। 12 ।।

இதி ஆப்ரயாணாதிகரணம்।। 6 ।।



# 129. ஆப்ரயாணாதிகரணம் (4-1-6)

## 481. ஆப்ரயாணாத் தத்ர அபி ஹி த்ருஷ்டம் (4-1-12)

*[உபாஸநம் ஆனது] மரணம் வரை ஆகும்; ஏனெனில், அப்போதும் ஆவதை வேதம் சொல்கிறது.*

**ஸம்ஶயம் (சந்தேஹம்)**

மோக்ஷத்துக்கு உபாயமாக முன் சொன்னபடியாக ஆகும் இந்த உபாஸநம் ஆனது, ஒருநாளில் மட்டும் செய்யப்பட வேண்டுமா? அல்லது மரணம் வரை தினமும் தொடரப்பட வேண்டுமா? என்று சந்தேஹம்.

**பூர்வபக்ஷம்**

ஒரே நாளிலேயே ஶாஸ்த்ர-பொருள் செய்யப்பட்டதாக ஆகிவிடும்; அதனால், அவ்வளவிலேயே முடிக்கப்பட வேண்டும்

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **'ஆப்ரயாணாத்'** என்று. மரணம் வரை தொடர்ந்து செய்யப்பட வேண்டும்; ப்ராரப்த கர்மம் முடியும் இறுதி ஶரீரமரணம் வரை என்று கருத்து. (காண்க -அதிகரணம் (4-1-11)

ஏன் ? **தத்ர அபி ஹி த்ருஷ்டம்** - உபாஸநம் ஆரம்பித்தது முதல் மரணம் வரை நடுவில் எந்த காலமோ, அப்போதும் உபாஸநம் செய்வது வேதத்தில் காணப்படுகிறது - [1]**''அவன் ஆயுள் வரை இப்படியே இருப்பவனாய் ப்ரஹ்ம-லோகத்தை அடைகிறான்''** என்று.

**ஆப்ரயாணாதிகரணம் முற்றிற்று**



# 130. ததிகமாதிகரணம் (4-1-7)

## முன்குறிப்பு

இதுவரை உபாயம் ஆன ப்ரஹ்ம-வித்யையைப் பற்றி சொன்னார். இனி ப்ரஹ்ம-வித்யையயின் பலன் பற்றி விசாரம் செய்யப் போகிறார்.

உபாயத்தைப் பற்றி மூன்றாவது அத்யாயத்தில் சேர்க்க வேண்டும்; ஆனால், இந்த நான்காவது அத்யாயத்தில் பலனைச் சொல்லும்போது அதனையும் சேர்த்திருக்கிறார். அதற்கு என்ன காரணம் என்பதை இந்த பாதத்தின் முன்குறிப்பில் காணலாம்.

ப்ரஹ்மவித்யை என்பது ப்ரஹ்மம் பற்றிய உபாஸநம் ஆகும்; அந்த உபாயம் கைகூடும்போது, அதுவரை செய்த முன் பாபங்கள் அழியும்; இனி பின்னர் செய்யப்-போகும் பாபங்கள் ஒட்டாது. இதனை வேதம் சொல்கிறது. அது பற்றிய விசாரம் இங்கு.

பூர்வபக்ஷம் - பாபங்கள் அனுபவம் மூலமாகவே அழியும்; அல்லது ப்ராயச்சித்தம் மூலம் அழியலாம்; வேறு வழியில் அழியாது; அப்படி இருக்க ப்ரஹ்மவித்யையால் பாபங்கள் எப்படி அழியும்?

ஸித்தாந்தம் - ப்ரஹ்மவித்யை என்பது, பாபங்களை அழிக்கும் ப்ராயச்சித்தம் ஆகும்; அதனால், அதன் மூலம் பாபம் அழியலாம்.

கேள்வி:- ப்ரஹ்மவித்யை என்பது மோக்ஷபலனுக்கான உபாயம் ஆகும்; அது எப்படி ப்ராயச்சித்தம் ஆக முடியும்?

பதில்:- அது ப்ராயச்சித்தம்தான்; தனியொரு உபாயம் அல்ல; மோக்ஷ-பலனுக்கு உபாயம் தேவையில்லை; அது தானாகவே வரும்; அந்த பலனை நாம் நம் பாபத்தால் தடுத்து நிற்கிறோம்; அந்த தடையைப் போக்கினால் போதும்; மோக்ஷம் தானாக வரும்; மடையைத் திறந்தபின் நீர் தானாக வெளிவருவதுபோல இது ஆகும்.

ஸூத்ரத்தின் கருத்து:- ப்ரஹ்மவித்யை என்பது ப்ரஹ்மம் பற்றிய உபாஸநம் ஆகும்; அதைச் செய்ய ஆரம்பித்து நல்ல பழக்கம் ஆனவுடன் ப்ரஹ்மத்தை நேராகக் காண்பது போன்ற நிலையில் ஞாந-முதிர்ச்சி வரும்; இந்த நிலையைப் பெற்றால் ப்ரஹ்ம-வித்-யையைப் பெற்றதாகும்; அப்போது இவனுக்கு முன் செய்த பாபங்கள் அழியும்; செய்யப் போகும் பாபங்கள் ஒட்டாது.

அதாவது அப்போது, பரமாத்மாவானவன் ஒரு ஸங்கல்பம் செய்கிறான் - 'உபாஸநம் செய்யும் இவன் இறுதி வரை செய்வானானால் இறுதியில், புண்யபாபங்களை நான் அழிப்பேன்; இனி செய்யப் போகும் பாபங்களையும் பலன் ஒட்டாதபடி ஆக்குவேன்'' என்று.

பின்னர் இதே நிலையில் தொடர்ந்து மரணம் வரை உபாஸநம் செய்ய வேண்டும்; இறுதியில் பரமாத்மா இவனது பாபங்களை ஒழிப்பான்; அதனால், தடையின்றி இவன் மோக்ஷம் பெறுவான். குறிப்பாக சரணாகதி என்னும் உபாயம் செய்தவுடன் அப்போதே முன்-பாபங்கள் தொலையும்; தன்னை அறியாமல் நேரிடும் பின்-பாபங்களும் ஒட்டாது - என்கிற விஷயத்தை இந்த அதிகரணம் உணர்த்தும் என்று ஸ்ரீஸ்ருதப்ரகாஸிகையில் அருளுகிறார்.

# १३०. तदधिगमाधिकरणम् (४-१-७)

## ४८२.तदधिगम उत्तरपूर्वाघयोरश्लेषविनाशौ तद्व्यपदेशात् (४-१-१३)

एवं विद्यास्वरूपं विशोध्य विद्याफलं चिन्तयितुमारभते।

ब्रह्मविद्याप्राप्तौ पुरुषस्योत्तरपूर्वाघयोरश्लेषविनाशौ श्रूयेते -

★ **''तद्यथा पुष्करपलाश आपो न श्लिष्यन्ते, एवमेवंविदि पापं कर्म न श्लिष्यते''** (छा.4-14-3)[1],

★ **''तस्यैवाऽऽत्मा(व स्यात्) पदवित् तं विदित्वा। न कर्मणा लिप्यते पापकेन''** (तै.का.3-12-18)(बृ.6-4-23)[2] इत्युत्तराघाश्लेषः,

★ **''तद्यथेषीकातूलमग्नौ प्रोतं प्रदूयेत, एवं हास्य सर्वे पाप्मानः प्रदूयन्ते''** (छा.5-24-3)[3],

★ **''क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे''** (मु.2-2-5)[4] इति पूर्वाघविनाशः।

एतावश्लेषविनाशौ विद्याफलभूतावुपपद्येते, नेति संशयः।

किं युक्तम्? नोपपद्येते इति। कुतः? **''नाभुक्तं क्षीयते कर्म कल्पकोटिशतैरपि''**[5]

---

# 130. ததுதிகமாதிகரணம் (4-1-7)

## 482. ததுதிகம உத்தரபூர்வாகயோரஶ்லேஷவிநாஶௌ தத்வ்யபதேஶாத் (4-1-13)

ஏவம் வித்யாஸ்வரூபம் விஶோத்ய வித்யாபலம் சிந்தயிதுமாரபதே; ப்ரஹ்மவித்யாப்ராப்தௌ புருஷஸ்ய உத்தரபூர்வாகயோரஶ்லேஷவிநாஶௌ ஶ்ரூயேதே,

★ *''தத்யதா புஷ்கரபலாஶ ஆபோ ந ஶ்லிஷ்யந்தே, ஏவமேவம்விதி பாபம் கர்ம ந ஶ்லிஷ்யதே''* (சா.4-14-3)[1],

★ *''தஸ்யைவாऽऽத்மா (வ ஸ்யாத்) பதவித் தம் விதித்வா ந கர்மணா லிப்யதே பாபகேந''* (தை.கா.3-12-18)(ப்ரு.6-4-23)[2] இதி உத்தராகாஶ்லேஷ:,

★ *''தத்யதேஷீகாதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத, ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே''* (சா.5-24-3)[3],

★ *''க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே''* (மு.2-2-8)[4] இதி பூர்வாகவிநாஶ:।

ஏதாவஶ்லேஷவிநாஶௌ வித்யாபலபூதௌ உபபத்யேதே, நேதி ஸம்ஶய:।

கிம் யுக்தம்? நோபபத்யேதே இதி। குத:? *''நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்*[5]-

# 130. ததிகமாதிகரணம் (4-1-7)

**482. ததிகமே உத்தரபூர்வாகயோ: அஶ்லேஷவிநாசெள தத்வ்யபதேஶாத் (4-1-13)**

*அந்த வித்யையைப் பெறும்போது பின்-முன்-பாபங்களுக்கு ஒட்டாமையும் அழிவும் வரும்; அதைச் சொல்வதால்.*

**ஸங்கதி (விஷய-தொடர்பு)**

இப்படியாக ப்ரஹ்ம-வித்யையின் ஸ்வரூபத்தை ஆராய்ந்தபின் வித்யையின் பலனைப் பற்றி விசாரம் செய்ய ஆரம்பிக்கிறார்.

**விஷயவாக்யம்**

ப்ரஹ்ம-வித்யையை பெற்றவுடன் மனிதனுக்கு, அதற்குப் பின்செய்யும் பாபங்கள் ஒட்டாது என்பதும், முன் செய்த பாபங்கள் அழியும் என்பதும் வேதத்தில் சொல்லப்பட்டது -

★ [1]**தாமரை-இலையில் தண்ணீர் எப்படி ஒட்டாதோ அப்படி இதை உபாஸநம் செய்பவனிடம் பாப-செயல் ஒட்டாது.**

★ [2]**அந்த பரமாத்மாவின் ஸ்வரூபத்தை உபாஸநம் செய்பவன் ஆகவே இருக்கும் ஜீவன், அந்த ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்து பாப-செயலினால் ஒட்டுவதில்லை.**

என்று பிந்தைய-பாபம் ஒட்டாது என சொல்லப்பட்டது.

*(அதாவது ப்ரஹ்ம உபாஸநம் செய்பவன், அதற்குப் பின் புன்ய-பாபங்கள் செய்தாலும் அவற்றின் பலன் ஒட்டாது என்று அர்த்தம்)*

★ [3]**தீயினில் இட்ட முஞ்ஜம் எனும் புல்லினுடைய பஞ்சு ஆனது எப்படி பொசுங்குமோ, அப்படியே இவனுடைய,(வைஶ்வாநர வித்யையின் அங்கமாக ப்ராண-அக்நிஹோத்ரம் செய்பவனுடைய) எல்லா பாபங்களும் பொசுங்கும்.**

★ [4]**பராவரன் ஆன அவன் காணப்படும்போது இவனது பாபங்கள் அழியும்.''**

என்று முந்தைய-பாபம் அழியும் என சொல்லப்பட்டது.

**ஸம்ஶயம் (ஸந்தேஹம்)**

முன் பாபங்களின் ஒட்டாமையும், பின் பாபங்கள் அழிவதும் ஆன இவை இரண்டும் வித்யையின் பலனாக ஆகுமா? ஆகாதா? என்று ஸந்தேஹம்.

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்? வித்யையின் பலனாக இவை ஆகாது என்பது; ஏன்? [5]**''நூற்றுக் கணக்கான கோடி கல்பங்கள் ஆனாலும், அனுபவிக்கப்படாத (புண்ய-பாப)கர்மம்**

(ब्र.वै.प्र.ख.26-70) इत्यादिशास्त्रविरोधात्। अश्लेषविनाशव्यपदेशस्तु मोक्षसाधनभूत-विद्याविधायिवाक्यशेषगतः कथञ्चिद्विद्यास्तुतिप्रतिपादनेनाप्युपपद्यते।

न च विद्या पूर्वोत्तराघयोः प्रायश्चित्ततया विधीयते; येन प्रायश्चित्तेनाघविनाश उच्यते। विद्या हि, **''ब्रह्मविदाप्नोति परम्''** (तै.1.आन.2)[1], **''ब्रह्म वेद ब्रह्मैव भवति''** (मु.3-2-9)[2] इति ब्रह्मप्राप्त्युपायतया विधीयते। अतो विद्यार्थवादोऽयमघविनाशाश्लेषव्यपदेश इति।

एवं प्राप्तेऽभिधीयते - **तदधिगमे** इति। विद्याप्राप्तौ पुरुषस्य विद्यामाहात्म्यादुत्तर-पूर्वाघयोरश्लेषविनाशावुपपद्येते। कुतः? एवंविधं हि विद्यामाहात्म्यमवगम्यते,

★ **''एवंविदि पापं कर्म न श्लिष्यते''** (छा.4-14-3)[3],

★ **''एवं हास्य सर्वे पाप्मानः प्रदूयन्ते''** (छा.5-24-3)[4] इत्यादिव्यपदेशात्।

न च, **''नाभुक्तं क्षीयते कर्म''** (ब्र.वै.प्र.ख.26-70)[5] इत्यनेन शास्त्रेणास्य विरोधः; भिन्नविषयत्वात्।

---

*பகோடிஶதைரபி''* (ப்ர.வை.ப்ர.க.26-70) இத்யாதிஶாஸ்த்ரவிரோதாத்। அஶ்-லேஷ-விநாஶ-வ்யபதேஶஸ்து மோக்ஷஸாதநபூதவித்யாவிதாயிவாக்ய-ஶேஷகத: கதஞ்சித்வித்யாஸ்துதிப்ரதிபாதநேநாபி உபபத்யதே।

ந ச வித்யா பூர்வோத்தராகயோ: ப்ராயஶ்சித்ததயா விதீயதே; யேந ப்ராயஶ்சித்தேந அகவிநாஶ உச்யதே। வித்யா ஹி, *''ப்ரஹ்மவிதாப்நோதி பரம்''* (தை.1. ஆந.2)[1], *''ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி''* (மு.3-2-9)[2] இதி ப்ரஹ்மப்ராப்த்யுபாயதயா விதீயதே। அத: வித்யார்தவாதோऽயம் அகவி-நாஶாஶ்லேஷவ்யபதேஶ இதி।

ஏவம் ப்ராப்தேऽபிதீயதே - *தததிகமே* - இதி। வித்யாப்ராப்தௌ புரு-ஷஸ்ய வித்யாமாஹாத்ம்யாத் உத்தரபூர்வாகயோ: அஶ்லேஷவிநாஶௌ உபபத்யேதே। குத:? ஏவம்விதம் ஹி வித்யாமாஹாத்ம்யமவகம்யதே,

★ *''ஏவம்விதி பாபம் கர்ம ந ஶ்லிஷ்யதே''* (சா.4-14-3)[3],

★ *''ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே''* (சா.5-24-3)[4] இத்யாதி வ்யபதேஶாத்।

ந ச, *''நாபுக்தம் க்ஷீயதே கர்ம''* (ப்ர.வை.ப்ர.க.26-70)[5] இத்யநேந ஶாஸ்த்-ரேண அஸ்ய விரோத:; பிந்நவிஷயத்வாத்।

**அழியாது''** முதலிய ஶாஸ்த்ரங்கள் உள்ளன; அவற்றுடன் முரண்படுவதால், (வித்யையால் கர்மம் அழியும் என்பதும் ஒட்டாது என்பதும் வராது).

ஒட்டாமையையும் அழிவதையும் வேதம் சொன்னதானது, மோக்ஷத்துக்கான உபாயமாக வித்யையை விதிக்கும் வாக்யத்தின் மிகுதியில் உள்ளது; அதனால், வித்யையைப் புகழ்வதைச் சொல்வதாக எப்படியாவது சரியாகும். (அதிகப்படியாக சொல்லி புகழ்கிறதே தவிர உண்மையல்ல).

(**உள்கேள்வி -** வித்யை என்பது ப்ராயச்சித்தம் ஆகும்; அதனால், ப்ராயச்சித்தத்தால் புண்யபாபங்கள் அழிவது ஆகும்.)

**உள்மறுப்பு -** எந்த ப்ராயச்சித்தத்தால் பாபம் அழிவதாக சொல்லப்படுகிறதோ, அப்படியாக முன்-பின் பாபங்களுக்கு ப்ராயச்சித்தமாக வித்யை விதிக்கப்படவில்லை ஏனெனில், [1]**''ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்பவன் பரப்ரஹ்மத்தை அடைவான்'',** [2]**''ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்பவன் ப்ரஹ்மமாகவே ஆகிறான்''** என்று ப்ரஹ்மத்தை அடைதலுக்கு உபாயமாக வித்யை விதிக்கப்படுகிறது. (ஒன்றைக் குறித்து உபாயமாக ஆவது, மற்றொன்றுக்கு ப்ராயச்சித்தமாக ஆகாது).

அதனால், பாபம் ஒட்டாமையையும் அழிவதையும் வேதம் சொன்னதானது, வித்யையின் அர்த்தவாதம் ஆகும் (அதில் சொன்ன பொருளை அப்படியே எடுத்துக்கொள்ளக் கூடாது).

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **'தததிகமே (அந்த ப்ரஹ்மவித்யையை அடையும்போது)'** என்று.

அந்த ப்ரஹ்ம-வித்யையை அடையும்போது மனிதனுக்கு வித்யையின் பெருமையால், முன்-பின்-பாபங்கள் ஒட்டாமையும் அழிவதும் வருவதாகும்.

ஏன்? (**தத்வ்யபதேசாத் -** அதைச் சொல்வதால்)

* [3]**''இதை உபாஸநம் செய்பவனிடம் பாப-செயல் ஒட்டாது'',**
* [4]**''இவனது எல்லா பாபங்களும் பொசுங்கும்''**

என்று சொல்லியிருப்பதால்; இப்படியாகத்தானே வித்யையின் பெருமை தெரிகிறது.

**கேள்வி -** [5]**''அனுபவிக்கப்படாத கர்மம் அழியாது''** முதலிய ஶாஸ்த்ரத்துடன் இதற்கு முரண்பாடு வரும்.

**பதில் -** இரண்டும் வெவ்வேறு விஷயம் பற்றி ஆவதால், முரண்பாடு வராது.

*(அந்த ஶாஸ்த்ரமானது, கர்மங்களின் திறன் பற்றியது; இந்த ஶாஸ்த்ரமானது, வித்யையின் திறன் பற்றியது; முன் சொன்ன அந்த கர்மங்களின் திறனை அழிக்கும் திறன் வித்யைக்கு உண்டு என்கிறது)*

तद्धि कर्मणां फलजननसामर्थ्यद्रढिमविषयम्; एतत्तु उत्पन्नाया विद्यायाः प्राक्कृतानां पाप्मनां फलजननशक्तिविनाशसामर्थ्यम्, उत्पत्स्यमानानां च फलजननशक्त्युत्पत्ति-प्रतिबन्धकरणसामर्थ्यञ्च प्रतिपादयतीति द्वयोर्विषयो भिद्यते। यथा अग्निजलयोरौष्ण्यतन्निवा-रणसामर्थ्यविषययोर्द्वयोः प्रमाणयोरपि विषयभेदात् प्रामाण्यम्, एवमत्रापीति न कश्चिद्विरोधः।

अघस्याश्लेषकरणं - वैदिककर्मायोग्यतावासनाप्रत्यवायहेतुशक्त्युत्पत्तिप्रतिबन्ध-करणम्। अघानि हि कृतानि पुरुषस्य वैदिककर्मायोग्यताम्, सजातीयकर्मान्तरारम्भरुचिम्, प्रत्यवायं च कुर्वन्ति। अघस्य विनाशकरणम् - उत्पन्नायास्तच्छक्तेर्विनाशकरणम्। शक्तिरपि परमपुरुषाप्रीतिरेव।

तदेवं विद्या वेदितुर्वेद्यात्यर्थप्रियत्वेन स्वयमपि निरतिशयप्रिया सती वेद्यभूत-परमपुरुषाराधनस्वरूपा पूर्वकृताघसञ्चयजनितपरमपुरुषाप्रीतिं विनाशयति; सैव विद्या स्वोत्पत्त्युत्तरकालभाव्यघनिमित्तपरमपुरुषाप्रीत्युत्पत्तिं च प्रतिबध्नाति॥

---

தத்தி கர்மணாம் பலஜநநஸாமர்த்யத்ரடிமவிஷயம்; ஏதத்து உத்பந்நாயா வித்யாயா: ப்ராக்க்ருதாநாம் பாப்மநாம் பலஜநந-ஶக்தி-விநாஶ-ஸாமர்த்யம், உத்பத்ஸ்யமாநாநாம் ச பலஜநந-ஶக்த்யுத்பத்திப்ரதிபந்த-கரணஸாமர்த்யஞ்ச ப்ரதிபாதயதீதி த்வயோர்விஷயோ பித்யதே। யதா அக்நிஜலயோ: ஔஷ்ண்ய-தந்நிவாரணஸாமர்த்யவிஷயயோ: த்வயோ: ப்ரமாணயோரபி விஷயபேதாத் ப்ராமாண்யம், ஏவமத்ராபீதி ந கஶ்சித் விரோத:।

அகஸ்யாஶ்லேஷகரணம் - வைதிககர்மாயோக்யதா-வாஸநா-ப்ரத்யவாயஹேதுஶக்யுத்பத்திப்ரதிபந்தகரணம்। அகாநி ஹி க்ருதாநி புருஷஸ்ய வைதிககர்மாயோக்யதாம், ஸஜாதீயகர்மாந்தராரம்பருசிம், ப்ரத்யவாயம் ச குர்வந்தி। அகஸ்ய விநாஶகரணம் - உத்ப்பந்நாயா: தச்சக்தே: விநாஶகரணம்। ஶக்திரபி பரமபுருஷாப்ரீதிரேவ।

ததேவம் வித்யா வேதிது: வேத்யாத்யர்தப்ரியத்வேந ஸ்வயமபி நிரதிஶயப்ரியா ஸதீ வேத்யபூதபரமபுருஷாராதநஸ்வரூபா பூர்வக்ருதாக-ஸஞ்சயஜநிதபரமபுருஷாப்ரீதிம் விநாஶயதி; ஸைவ வித்யா ஸ்வோத்பத்த்-யுத்தரகாலபாவ்யகநிமித்தபரமபுருஷாப்ரீத்யுத்பத்திம் ச ப்ரதிபத்நாதி।

- புண்ய-பாப-கர்மங்களுக்கு, பலனை உண்டாக்கும் திறன் திடமாக கட்டாயம் உண்டு என்பதைப் பற்றி அந்த ஶாஸ்த்ரம் ஆகிறது.
- முன் செய்த பாபங்களுக்கு, பலனை உண்டாக்கும் திறன் உண்டு; அந்த திறனை அழிக்கும் திறன், உண்டாகும் வித்யைக்கு உண்டு என இந்த ஶாஸ்த்ரம் சொல்கிறது; அப்படியே இனி வரப்போகும் கர்மங்களுக்கு பலனை உண்டாக்கும் திறன் உண்டாவதைத் தடுக்கும் திறன் வித்யைக்கு உண்டு என அறிவிக்கிறது.

அதனால், இரண்டுக்கும் விஷயம் வெவ்வேறு ஆகும்.

(உ.ம்) அக்நிக்கு சுடும் திறன் உண்டு; ஜலத்துக்கு சூட்டினை அழிக்கும் திறன் உண்டு என இரு திறன்களைப் பற்றிய இரு ப்ரமாணங்கள் உள்ளன; இரண்டும் சரியான ப்ரமாணம் ஆகும்; ஏனெனில், இரண்டுக்கும் விஷயம் வெவ்வேறு ஆகும். அது எப்படியோ, அப்படியே இங்கும் ஆகும் என்பதால் ஒரு முரண்பாடும் இல்லை.

மனிதன் செய்த பாபச் செயல்கள் -

1. மனிதனுக்கு வைதிககர்மங்களில் தகுதியின்மையை உண்டாக்கும்.
2. அதே வகையிலான மற்றொரு பாபத்தை செய்வதில் ஆசையை உண்டாக்கும்.
3. பாபத்தையும்(துன்பத்தையும்) உண்டாக்கும்.

எனவே, பாபத்தை ஒட்டாமல் பண்ணுதல் என்பது - வைதிககர்மங்களில் தகுதியின்மை, வாசனை, குறை (துன்பம்) ஆகிய இவற்றை உண்டாக்கும் திறன் பாபங்களுக்கு வரப்போவதைத் தடுத்தல் ஆகும்.

பாபத்தை அழித்தல் என்பது - ஏற்கனவே உண்டாகியிருக்கும் அந்த திறனை அழித்தல் ஆகும்; பாபங்களின் திறன் என்பதும் பரமபுருஷனின் ப்ரீதியின்மைதான்.

வித்யை மூலம் உபாஸநம் செய்யப்படும் பகவான் மிகவும் ப்ரியமானவனாக இருக்கிறான்; அதனால், வித்யைதானும், அளவற்ற அன்பு என்பதாகவே உள்ளது; அது உபாஸநம் செய்யப்படும் பரமபுருஷனுக்கு (ப்ரீதியை உண்டாக்கும்) ஆராதநம் ஆகிறது; எனவே, இப்படியான வித்யை ஆனது, ஜீவன் முன்னர் செய்த பாபக் கூட்டத்தால் பரமபுருஷனுக்கு உண்டான ப்ரீதியின்மையை அழிக்கிறது; அதே வித்யையே தான் உண்டானபின் மனிதன் செய்யப்போகும் பாபத்தால் பரமபுருஷனுக்கு வரக்கூடிய ப்ரீதியின்மை உண்டாவதைத் தடுக்கிறது.

तदिदमश्लेषवचनं प्रामादिकविषयं मन्तव्यम्; **"नाविरतो दुश्चरितात्"** (क.2-24)[1] इत्यादिभिः शास्त्रैराप्रयाणादहरहरुत्पद्यमानायाः उत्तरोत्तरातिशयभागिन्याः विद्यायाः दुश्चरितविरतिनिष्पाद्यत्वावगमात्॥ १३ ॥

इति तदधिगमाधिकरणम् ॥ ७ ॥

---

ததிதம் அஶ்லேஷவசநம் ப்ராமாதிகவிஷயம் மந்தவ்யம், *"நாவிரதோ துஶ்சரிதாத்"*(க.2-24)[1] இத்யாதிபி: ஶாஸ்த்ரை: ஆப்ரயாணாத் அஹரஹருத்-பத்யமாநாயா: உத்தரோத்தராதிஶயபாகிந்யா: வித்யாயா: துஶ்சரிதவிரதி-நிஷ்பாத்யத்வாவகமாத்।। 13 ।।

இதி தததிகமாதிகரணம் ।। 7 ।।



ஒட்டாமையைச் சொன்ன இந்த வாக்யமானது அறியாமல் நேரிடும் புண்ய-பாபம் பற்றியது; ஏனெனில், வித்யை ஆனது, மரணம் வரை தினம்தினம் உண்டாகி மேன்மேலும் சிறப்பு பெறப்போவது; பாப-செயல்களை செய்வதை நிறுத்தினாலே அந்த வித்யை உண்டாகும்; இது **"பாப-செயல்களிலிருந்து ஓயாதவன், உபா-ஸநம் மூலம் பகவானை அடைய முடியாது"** முதலிய ஶாஸ்த்ரங்களால் தெரி-கிறது.

*(எனவே, வித்யைக்கு பின்னர், அறியாமல் நேரிடும் புண்ய-பாபங்கள் ஒட்டாது; அறிந்தே புண்ய-பாபம் செய்தால், அது கட்டாயம் ஒட்டும் என்று கருத்து).*

**ததிகமாதிகரணம் முற்றிற்று.**



# 131.இதராதிகரணம் (4-1-8)

## முன் குறிப்பு

இது அதிதேஶமுறையில் வந்த அதிகரணம்.

அதிதேஶம் என்றால், முன் கையாண்ட முறையையே பின்னரும் பின்பற்றச் சொல்லுதல் ஆகும்.

போன அதிகரணத்தில் சொன்ன முறையில் இங்கும் பூர்வபக்ஷமும் ஸித்தாந்தமும் வைத்துக் கொள்ள வேண்டும்.

போன அதிகரணத்தில் சொன்ன விஷயம் என்ன? ப்ரஹ்மவித்யைக்கு முன் செய்த பாபங்கள் அழியும்; பின் செய்யப்போகும் பாபங்கள் ஒட்டாது என்பதுதான்.

பாபங்கள் அழிந்தும் ஒட்டாமலும் ஆவது போல, புண்யங்களும் ஆகும்; வித்யைக்கு முன் செய்த புண்யங்கள் அழியும்; பின் செய்யும் புண்யங்கள் ஒட்டாது என்பதை இந்த அதிகரணத்தில் தெரிவிக்கிறார்.

கேள்வி- போன அதிகரணத்தில் சொன்ன அதே முறையில் பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் இங்கும் வரும். அப்படியானால், தனி அதிகரணம் எதற்கு?

பதில்- அதிகமான ஒரு கேள்விக்கு பதில் சொல்வதற்காக என்று வைத்துக் கொள்ளவும். அதிதேசமுறையில் அதிகரணம் வருவதானால், அதிகப்படியாக ஒரு கேள்வி-பதில் இருக்கும்.

அதிகமான கேள்வி:- பாபத்தை யாரும் விரும்புவதில்லை; அதனால், அது அழியட்டும்; அல்லது ஒட்டாமல் போகட்டும்; ஆனால், புண்யத்தை எல்லாரும் விரும்புவர்; புண்யத்தை செய்யச் சொல்லி ஶாஸ்த்ரமே கட்டளை இடுகிறது; எனவே, அது வித்யைக்கு முரண் பட்டதல்ல; அதனால், புண்யம் அழிவதாகச் சொல்ல வேண்டாம்.

பதில்:- புண்யமும் கூட மோக்ஷத்துக்கு விரோதிதான்! அதனால் அதையும் ஒழிக்க வேண்டும்; வேதமானது, புண்யத்தையும் பாபம் என்றே குறிப்பிடுகிறது.

மோக்ஷம் எனும் பலன்தானே முக்கியமானது! அதற்குத் தடையாக பாபம் ஆவது போல், புண்யமும் ஆகும்; அதனால், அதையும் பாபம் என்கிறது.

வேண்டாததான தீங்கான ஒரு பலனைத் தருவது பாபம்; புண்யமும் கூட நமக்கு வேண்டாததான ஸம்ஸாரபலனைத் தான் தருகிறது; அதனால், அதையும் பாபம் என்று சொல்வதில் தவறில்லை.

வித்யைக்கு தேவையாக செய்த புண்யங்களில் சில அந்தந்த பலனை அளிப்பதன் மூலம், வித்யையை உண்டாக்குவதற்காக உபயோகப்படும்; அவை தவிர மீதி இருக்கு-மானால் அவை ஶரீரம் விழுந்த பின்னர் அழியும்

# १३१. इतराधिकरणम् (४-१-८)

## ४८३.इतरस्याप्येवमसंश्लेषः पाते तु (४-१-१४)

उत्तरपूर्वाघयोर्विद्यया अश्लेषविनाशावुक्तौ।

**इतरस्य** - पुण्यस्यापि, **एवम्** - उक्तेन न्यायेनाश्लेषविनाशौ विद्यया स्याताम्, विद्याफलविरोधित्वसामान्यात्; व्यपदेशाच्च। भवति च व्यपदेशः उभे सुकृतदुष्कृते निर्दिश्य,

- **"सर्वे पाप्मानोऽतो निवर्तन्ते"**(छा.8-4-1)[1] इति,
- **"तत् सुकृतदुष्कृते धूनुते"**(कौ.1-4)[2] इति च।

मुमुक्षोरनिष्टफलत्वात् सुकृतस्यापि पाप्मशब्देन व्यपदेशः।

सुकृतस्यापि शास्त्रीयत्वात् तत्फलस्य केषाञ्चिदिष्टत्वदर्शनाच्च विद्यया अविरोधशङ्कां निवर्तयितुमतिदेशः॥

---

# 131. இதராதிகரணம் (4-1-8)

## 483. இதரஸ்யாப்யேவமஸம்ஸ்லேஷ: பாதே து (4-1-14)

உத்தரபூர்வாகயோ: வித்யயா அஶ்லேஷவிநாஶௌ உக்தௌ;

இதரஸ்ய - புண்யஸ்யாபி, ஏவம் - உக்தேந ந்யாயேந அஶ்லேஷ-விநாஶௌ வித்யயா ஸ்யாதாம்; வித்யாபலவிரோதித்வஸாமாந்யாத்; வ்யபதேஶாச்ச। பவதி ச வ்யபதேஶ: உபே ஸுக்ருததுஷ்க்ருதே நிர்திஶ்ய,

- *"ஸர்வே பாப்மாநோऽதோ நிவர்தந்தே"* (சா.8-4-1)[1] இதி,
- *"தத் ஸுக்ருததுஷ்க்ருதே தூநுதே"* (கௌ.1-4)[2] இதி ச।

முமுக்ஷோ: அநிஷ்டபலத்வாத் ஸுக்ருதஸ்யாபி பாப்மஶப்தேந வ்யபதேஶ:।

ஸுக்ருதஸ்யாபி ஶாஸ்த்ரீயத்வாத் தத்பலஸ்ய கேஷாஞ்சிதிஷ்டத்வ-தர்ஶநாச்ச வித்யயா அவிரோதஶங்காம் நிவர்தயிதும் அதிதேஶ:।।

# 131.இதராதிகரணம் (4-1-8)

## 483. இதரஸ்ய அபி ஏவம் அஸம்ப்லேஷ: பாதே து (4-1-14)

*மற்றொன்றான புண்யத்துக்கும் இந்த முறையில்ஒட்டாமை ஆகும்; ஶரீரம் விழும்போதுதான் [ப்ரஹ்மவித்யைக்கான புண்யங்கள் அழியும்].*

**ஸங்கதி (விஷயத்தொடர்பு)**

வித்யையினால் முன்-பாபங்கள் அழிவதும், பின்-பாபங்கள் ஒட்டாததும் சொல்லப்பட்டன.

**இதரஸ்ய அபி -** மற்றொன்றான புண்யத்துக்கும்

**ஏவம் -** இப்படி முன் சொன்ன முறையால்,

**அஸம்ப்லேஷ: -** ஒட்டாமையும் அழிவும் ப்ரஹ்மவித்யையால் வரும்;

ஏனெனில், ப்ரஹ்மவித்யையின் பலனான மோக்ஷத்துக்கு முரண்பட்டதாக இருத்தல் என்பது பாபத்துக்கும் புண்யத்துக்கும் சமம் ஆகும்;

மேலும்,(முன் ஸூத்ரத்தில் சொன்ன முறையில்) வேதத்தில் அப்படி சொன்ன-படியாலும் ஆகும்; வேதத்தில், புண்யம், பாபம் என்ற இரண்டையும் குறிப்பிட்டு, பின்னர்,

★ [1]**''எல்லா பாபங்களும் அதனால் தொலைகின்றன''** என்று சொல்கிறது;

★ [2]**''அப்போது புண்ய-பாபங்களை விடுகிறான்''** என்றும் சொல்கிறது.

மோக்ஷம் விரும்புபவனுக்கு புண்யத்தின் பலனும் விரும்பப் படுவதில்லை; அதனால், புண்யத்தையும் 'பாபம்' என்ற சொல்லால் சொல்கிறது. (புண்யமும் மோக்ஷத்துக்கு தடையாவதால், அதை பாபம் எனலாம்).

**பூர்வபக்ஷம்**

புண்யமானது செய்ய வேண்டியதாக ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டது ஆகும்; அந்த புண்யத்தின் பலன் சிலருக்கு விருப்பப் பட்டதாகவும் காண்கிறது; அதனால், வித்யையுடன் இது முரண்படாது என்ற கேள்வி வரலாம்;

**ஸித்தாந்தம்**

இந்த கேள்வியை மறுப்பதற்காகவே இந்த அதிகரணம் அதிதேஶமாக ஆகும்.

*✍(மோக்ஷ-பலனை விரும்பும் மனிதனுக்கு, புண்யமும் கூட வித்யையுடன் முரண்-படுவதுதான்; ஏனெனில், அது அவனது விருப்பத்துக்கு எதிராக ஸம்ஸார-பலனையே தரும்; மேலும், வித்யையால் புண்யம் அழிவதாக வேதம் சொல்கிறதும் கூட; அதனால் பாபம் போல் புண்யமும் அழியும் என்பது பதில்).✍*

ननु विदुषोऽपि सेतिकर्तव्यताकोपासननिर्वृत्तये वृष्ट्यन्नादिफलानीष्टान्येव; कथं तेषां विरोधाद्विनाश उच्यते;

तत्राह - **पाते तु** इति। शरीरपाते तु तेषां विनाशः। शरीरपातादूर्ध्वं तु विद्यानुगुणदृष्टफलानि सुकृतानि नश्यन्तीत्यर्थः॥ १४ ॥



इति इतराधिकरणम् ॥ ८ ॥

நநு வி**து**ஷோऽபி ஸேதிகர்தவ்யதாகோபாஸநநிர்வ்ருத்தயே வ்ருஷ்ட்யந்நாதி<u>ப</u>லாநி இஷ்டாந்யேவ; கதம் தேஷாம் விரோ**தா**த்விநாஶ உச்யதே,

தத்ராஹ - *பாதே து* இதி। ஶரீரபாதே து தேஷாம் விநாஶ:। ஶரீரபாதா**தூ**ர்த்**வ**ம் து வித்யாநுகுணத்ருஷ்ட<u>ப</u>லாநி ஸுக்ருதாநி நஶ்யந்தீத்யர்த:॥14॥



இதி இதரா**தி**கரணம் ॥ 8 ॥



**கேள்வி -** உபாஸநம் செய்பவனுக்கும் கூட, அங்கங்களுடன் கூடிய உபாஸநம் சித்திப்பதற்காக மழை, உணவு முதலிய பலன்கள் விரும்பப் படுபவையே; அவை வித்யைக்கு முரண்படுவதால் அழிவதாக எப்படி சொல்லப்படுகிறது?

**பதில் -** அதற்கு பதில் சொல்கிறார் -

**பாதே து (விழும்போதுதான்)** - ஶரீரம் விழும்போதுதான் அவற்றுக்கு அழிவு வரும்; ஶரீரம் விழுந்த பின்னரே வித்யைக்கு தேவையான த்ருஷ்ட-பலன்-களைத் தரும் புண்யங்கள் அழிகின்றன என்று பொருள்.

*(விளக்கம் முன் குறிப்பில் காணவும்)*

******************************

**இதராதிகரணம் முற்றிற்று**



# 132. அநாரப்தகார்யாதிகரணம் (4-1-9)

## முன் குறிப்பு

ப்ரஹ்மவித்யை ஆகிற உபாஸநம் வந்தவுடன் முன் வினைகள் (புண்யபாபங்கள்) அழிந்து விடும் என்று சொன்னார்.

முன் வினைகள் இருவிதம் - ப்ராரப்தம், ஸஞ்சிதம் என்று. ப்ராரப்தம் என்பது நமக்கு இப்பிறவியில் பலனைத் தர ஆரம்பித்து விட்ட புண்யபாபம்; ஸஞ்சிதம் என்பது பலன் தர ஆரம்பிக்காமல் மூட்டை மூட்டையாக குவிந்திருக்கும் புண்யபாபம்.

இந்த இரண்டில், ஸஞ்சிதம் மட்டுமே உபாஸனத்தால் தொலையும்; அதாவது பலன் தர ஆரம்பிக்காத முன் வினைகள் மட்டுமே தொலையும்; ப்ராரப்தம் தொலையாது; அதாவது, இப்பிறவியில் பலன் தர ஆரம்பித்த புண்யபாபங்கள் வித்யையால் தொலையாது.

மொத்தமாக எல்லாம் தொலைவதானால், உடனேயே மோக்ஷம் கிடைக்க வேண்டும்; ஆனால், வேதம் சொல்கிறது, 'உபாஸநம் செய்பவனுக்கு ஶரீரத்திலிருந்து விடுபடும் காலம் வரை காலதாமதம் ஆகும்; பின்னரே ப்ரஹ்மத்தை அடைவான்'' என்று. ஆகையால், பலன் தர ஆரம்பித்த புண்யபாபங்கள் வித்யையினால் தொலையாது என ஆகிறது.

அத்வைதமதக் கருத்து - இந்த ஶரீரம் இருக்கும்போதே புண்யபாபங்கள் மொத்தமாக தொலையும்.

மறுப்பு - அப்படியானால், ஶரீரம் தொடர்ந்து இருக்க முடியாதே! காரணமான புண்யபாபம் அழிந்து விட்டால், ஶரீரம் எப்படி தொடரும்?

அத்வைதமதக் கருத்து - புண்யபாபங்கள் தொலைந்தாலும், அவற்றின் ஸம்ஸ்காரவசத்தால் ஶரீரம் தொடரும்; மண்பானை செய்யும் குயவன், ஒரு சக்ரத்தை சுற்றி விடுவான்; பின்னர் அவன் கையெடுத்த பின்பும் வெகுநேரம் அந்த சக்ரம் சுற்றிக் கொண்டிருக்கும். அது வேகம் எனும் ஸம்ஸ்காரத்தால் ஆகும்; அதுபோல பாபத்தால் முதலில் ஶரீரம் உண்டாகும்; பின்னர், அந்த பாபம் அழிந்தாலும், அந்த ஸம்ஸ்காரத்தால், அந்த ஶரீரம் தொடர்ந்து இருக்கும்.

மறுப்பு - அது தவறு; அப்படி ஸம்ஸ்காரம் என்று ஒன்று தொடர்ந்து இருப்பதாக சொல்வதில் ப்ரமாணம் இல்லை.

# १३२. अनारब्धकार्याधिकरणम् (४-१-९)

## ४८४. अनारब्धकार्ये एव तु पूर्वे तदवधेः (४-१-१५)

ब्रह्मविद्योत्पत्तेः पूर्वोत्तरभाविनोः सुकृतदुष्कृतयोरश्लेषविनाशावुक्तौ ; ततः पूर्वभाविनोः सुकृतदुष्कृतयोः किमविशेषेण विनाशः, उतानारब्धकार्ययोरेवेति विशये,

**''सर्वे पाप्मानः प्रदूयन्ते''**(छा.5-24-3)[1] इति विद्याफलस्याविशेषश्रवणात्, विद्योत्पत्त्युत्तरकालभाविन्याश्च शरीरस्थितेः कुलालचक्रभ्रमणादिवत् संस्कारवशादप्युपपत्तेरविशेषेण,

इति प्राप्ते उच्यते - **अनारब्धकार्ये एव तु पूर्वे** इति। विद्योत्पत्तेः पूर्वे सुकृतदुष्कृते **अनारब्धकार्ये** - अप्रवृत्तफले एव विद्यया विनश्यतः; कुतः? **तदवधेः** - **''तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्ये; अथ सम्पत्स्ये''**(छा.6-14-3)[2] इति शरीरपातविलम्बावधिश्रुतेः। न च पुण्यापुण्यकर्मजन्यभगवत्प्रीत्यप्रीतिव्यतिरेकेण शरीरस्थितिहेतुभूतसंस्कारसद्भावे प्रमाणमस्ति॥ १५ ॥

इति अनारब्धकार्याधिकरणम् ॥ ९ ॥

# 132. அநாரப்₄த₄கார்யாதி₄கரணம் (4-1-9)

## 484. அநாரப்₄த₄கார்யே ஏவ து பூர்வே தத₃வதே₄: (4-1-15)

ப்₃ரஹ்மவித்₃யோத்பத்தே: பூர்வோத்தரபா₄விநோ: ஸுக்ருதது₃ஷ்க்ருதயோ: அஶ்லேஷவிநாஶாவுக்தௌ, தத: பூர்வபா₄விநோ: ஸுக்ருத து₃ஷ்க்ருதயோ: கிம் அவிஶேஷேண விநாஶ:, உத அநாரப்₄த₄கார்யயோரேவ இதி விஶயே,

*''ஸர்வே பாப்மாந: ப்ரதூ₃யந்தே''*(சா.5-24-3)[1] இதி வித்₃யாப₂லஸ்ய அவிஶேஷஶ்ரவணாத், வித்₃யோத்பத்த்யுத்தரகாலபா₄விந்யாஶ்ச ஶரீரஸ்தி₂தே: குலாலசக்ரப்₄ரமணாதி₃வத் ஸம்ஸ்காரவஶாத₃ப்யுபபத்தே: அவிஶேஷேண,

இதி ப்ராப்தே உச்யதே - *அநாரப்₄த₄கார்யே ஏவ து பூர்வே* இதி। வித்₃யோத்பத்தே: பூர்வே ஸுக்ருதது₃ஷ்க்ருதே அநாரப்₄த₄கார்யே அப்ரவ்ருத்தப₂லே ஏவ வித்₃யயா விநஶ்யத:; குத:? *தத₃வதே₄:* - *''தஸ்ய தாவதே₃வ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே; அத₂ ஸம்பத்ஸ்யே''* (சா.6-14-3)[2] இதி ஶரீரபாதவிலம்பா₃வதி₄ஶ்ருதே:। ந ச புண்யாபுண்யகர்மஜந்யப₄க₃வத்ப்ரீத்ய-ப்ரீதிவ்யதிரேகேண ஶரீரஸ்தி₂திஹேதுபூ₄தஸம்ஸ்காரஸத்₃பா₄வே ப்ரமாணமஸ்தி।। 15 ।।

இதி அநாரப்₄த₄கார்யதி₄கரணம் ।। 9 ।।

# 132. அநாரப்தகார்யாதிகரணம் (4-1-9)

## 484. அநாரப்தகார்யே ஏவ து பூர்வே ததவதே: (4-1-15)

*பலன் தர ஆரம்பிக்காத முன் புண்ய-பாபங்கள் மட்டுமே அழியும்; அது [பலன் தர ஆரம்பித்த கர்மத்தின் பலன் என்பது] கால-எல்லையாவதால்*

**ஸங்கதி (விஷயதொடர்பு)&ஸந்தேஹம்**

ப்ரஹ்மவித்யை உண்டாவதற்கு பின் வரும் புண்ய-பாபங்கள் ஒட்டாததும், முன் ஆகும் புண்ய-பாபங்கள் அழிவதும் சொல்லப்பட்டன;

அதற்கு (ப்ரஹ்மவித்யை உண்டாவதற்கு) முன் ஆகும் புண்ய-பாபங்களில் வேறுபாடின்றி எல்லா புண்ய-பாபங்களுக்கும் அழிவு ஆகுமா? அல்லது செயல்-பட ஆரம்பிக்காத (பலன் தர ஆரம்பிக்காத - ஸஞ்சிதமான) புண்ய-பாபங்களுக்கு மட்டும் அழிவு ஆகுமா? என்று ஸந்தேகம்.

**பூர்வபக்ஷம்**

ப்ரஹ்மவித்யையின் பலனில் வேறுபாடு இல்லை; ஏனெனில், [1]**''எல்லா பாபங்களும் பொசுங்கும்''** என்பதாக வித்யாசம் இன்மையை வேதம் சொல்கிறது; (எனவே, ப்ரஹ்மவித்யை உண்டானவுடனேயே எல்லா பாபங்களும் அழியும்); வித்யை உண்டானபின் பிற்காலத்தில் ஶரீரம் இருப்பதானது, குயவன் சக்ரத்தை சுற்றுவது முதலியதில் ஆவதுபோல ஸம்ஸ்காரத்தால் ஆகும்.

**ஸித்தாந்தம்**

இப்படியாக பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **''அநா-ரப்தகார்யே ஏவ து பூர்வே''** என்று;

**பூர்வே -** ப்ரஹ்மவித்யை உண்டாவதற்கு முன் இருக்கும் புண்ய-பாபங்கள்,

**அநாரப்தகார்யே ஏவ -** பலன் தர ஆரம்பிக்காதவை மட்டுமே வித்யையால் அழிகின்றன.

ஏன்?

**ததவதே: (அது எல்லை ஆவதால்) -** ஏனெனில், காலதாமதத்தின் எல்லை-யாக (பலன் தர ஆரம்பித்த கர்மத்தின் பலனான) ஶரீரம் விழுதல் என்பதை வேதம் சொல்கிறது - [2]**''உபாஸநம் செய்பவனுக்கு ஶரீரத்திலிருந்து விடுபடும் வரை அவ்வளவே காலதாமதம்; பின்னர் ப்ரஹ்மத்தை அடைவான்''** என்று.

மேலும், புண்ய-பாப-செயல்களால் பகவானுக்கு ப்ரீதி மற்றும் அப்ரீதி உண்-டாகும்; (அதுதான் பலனைக் கொடுக்கிறது.) இது தவிர, ஶரீரம் நிலைபெறுவதற்கு காரணமாக வேறு ஒரு ஸம்ஸ்காரம் உள்ளது என்பதில் ப்ரமாணம் எதுவும் இல்லை.

*********************************

**அநாரப்தகார்யாதிகரணம் முற்றிற்று**

# 133. அக்நிஹோத்ராத்யதிகரணம் (4-1-10)

## முன்குறிப்பு

உபாஸநம் செய்பவன், தினமும் அக்னிஹோத்ரம் முதலிய கர்ம-அனுஷ்டானத்தை செய்வான்; இதன் பலனாக இவனுக்கு உபாஸநம் நடக்கும் என்று முன்பே 3-4 பாதத்தில் சொல்லியாயிற்று.

இதில் இப்போது ஒரு விசாரம்.

பூர்வபக்ஷம் - உபாஸனம் செய்பவனுக்கு புண்யபலன் ஒட்டாது என்று முன் இதர-அதிகரணத்தில் சொன்னார். அப்படியானால், புண்ய-அனுஷ்டானம் செய்ய வேண்டாமே என்று ஒரு கேள்வி பிறக்கும். நித்யகர்மங்கள் உட்பட எந்த புண்யகர்மமும் செய்ய வேண்டிய தேவையில்லை என்று ஆகும்.

ஸித்தாந்தம் - முன் சொன்ன பூர்வபக்ஷம் தவறு.

அக்னிஹோத்ரம் முதலிய புண்யகர்மங்களின் பலன் ஒட்டாது என்பது கிடையாது; ஏனெனில், உபாஸநம் செய்பவன், அந்த உபாஸநம் தொடர்ந்து நடக்க வேண்டும் என்பதற்காகவே அக்னிஹோத்ரம் முதலியதை செய்கிறான்; ஆகவே, அவனுக்கு அந்த பலன் கிடைக்கும்; அதாவது தொடர்ந்து உபாஸநம் செய்தல் எனும் பலன் கிடைக்கும்.

உபாஸநம் செய்பவர் அக்னிஹோத்ரம் முதலியதன் மூலம் உபாஸநத்தை நடத்திக் கொள்வர் என்று வேதம் சொல்கிறது. ஆகவே, இந்த பலன் கிடைக்கும்; இது தவிர வேறு புண்ய-பலன்கள் ஒட்டாது என்றுதான் கருத்து.

உபாஸநமோ, மரணம் வரை விடாமல் செய்யப்பட வேண்டியதாக இருக்கிறது; அதனால், அத்தகு உபாஸநம் இறுதிவரை வர வேண்டும் என்பதற்காக நித்யகர்ம-அனுஷ்டானமும் இறுதி வரை செய்ய வேண்டியதுதான்.

அக்னிஹோத்ரம் முதலியவை செய்ய வேண்டியவையே என்பது பற்றி மூன்று அதிகரணங்கள் உள்ளன. மூன்று விதமான கேள்விகளுக்கு பதில்கள் ஆக அவை வந்தவை.

1. உபாஸநம் செய்பவர்களில் ஸந்யாஸ-ஆஸ்ரமத்தைச் சேர்ந்தவர்கள், அக்னி-ஹோத்ரம் செய்ய வேண்டாம்; அவர்களுக்கு அக்னிஹோத்ரம் செய்யாவிட்டாலும் உபாஸநம் நடக்கும். அப்படியானால், அதுபோல, க்ருஹஸ்தனுக்கும் அக்னி-ஹோத்ரம் செய்யாமலேயே உபாஸநம் நடக்கலாமே என்ற கேள்வி வரும்; அதற்கு பதில் 'ஸர்வாபேக்ஷாதிகரணத்தில்'.
2. அக்னிஹோத்ரம் நித்ய-கர்மாவாக ஆக முடியாது; ஏனெனில், ஒரே கர்மமே நித்ய-கர்மா ஆகவும், உபாஸனத்துக்கு அங்கமாகவும் இரு விதமாகவும் ஆக முடியாது எனும் கேள்விக்கு பதில் விஹிதத்வாதிகரணத்தில்.
3. உபாஸநம் செய்பவனுக்கு புண்யத்தின் பலன் ஒட்டாது என்று சொல்லியிருப்பதால், அக்னிஹோத்ரம் எனும் புண்யம் செய்ய வேண்டியதில்லை எனும் கேள்விக்கு பதில் இந்த அதிகரணம்.

# १३३. अग्निहोत्राद्यधिकरणम् (४-१-१०)

## ४८५. अग्निहोत्रादि तु तत्कार्यायैव तद्दर्शनात् (४-१-१६)

**''इतरस्याप्येवमसंश्लेषः''**(ब्र.सू.4-1-14) इति विद्याबलात् सुकृतस्याप्यसंश्लेष उक्तः। अग्निहोत्रादीनां नित्यनैमित्तिकानां स्वाश्रमधर्माणामपि सुकृतत्वसामान्येन तत्फलस्याश्लेषादनिच्छतोऽननुष्ठाने प्राप्ते,

उच्यते - **अग्निहोत्रादि तु** इति। तु शब्दः सुकृतान्तरेभ्यो विशेषणार्थः; अग्निहोत्राद्याश्रमधर्माः फलाश्लेषासम्भवादनुष्ठेया एव। तदसम्भवश्च तत्कार्यार्थत्वात् तेषाम्। विद्याख्यकार्यायैव हि विदुषोऽग्निहोत्राद्यनुष्ठानम्।

कथमिदमवगम्यते? **तद्दर्शनात्।** दृश्यते हि, **''तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसाऽनाशकेन''** (बृ.6-4-22)[1] इत्यादिनाऽग्निहोत्रादीनां विद्यासाधनत्वम्।

---

# 133. அக்நிஹோத்ராத்யதிகரணம் (4-1-10)

## 485. அக்நிர்ஹோத்ராதி து தத்கார்யாயைவ தத்தர்ஶநாத்(4-1-16)

*''இதரஸ்யாப்யேவமஸம்ஶ்லேஷ:''* (ப்ர.ஸூ.4-1-14) இதி வித்யாபலாத் ஸுக்ருதஸ்யாப்யஸம்ஶ்லேஷ: உக்த:। அக்நிஹோத்ராதீநாம் நித்யநைமித்திகாநாம் ஸ்வாஶ்ரமதர்மாணாமபி ஸுக்ருதத்வஸாமாந்யேந தத்பலஸ்யாஶ்லேஷாத் அநிச்சத: அநநுஷ்டாநே ப்ராப்தே,

உச்யதே - *அக்நிஹோத்ராதி து* - இதி। *து* ஶப்த: ஸுக்ருதாந்தரேப்யோ விஶேஷணார்த:; அக்நிஹோத்ராத்யாஶ்ரமதர்மா: பலாஶ்லேஷாஸம்பவாத் அநுஷ்டேயா ஏவ। ததஸம்பவஶ்ச தத்கார்யார்தத்வாத் தேஷாம்। வித்யாக்யகார்யாயைவ ஹி விதுஷ: அக்நிஹோத்ராத்யநுஷ்டாநம்।

கதமிதமவகம்யதே? *தத்தர்ஶநாத்।* த்ருஶ்யதே ஹி, *''தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸாऽநாஶகேந''* (ப்ரு.6-4-22)[1] இத்யாதிநா அக்நிஹோத்ராதீநாம் வித்யாஸாதநத்வம்।

# 133. அக்நிஹோத்ராத்யதிகரணம் (4-1-10)

## 485. அக்நிஹோத்ராதி து தத்கார்யாய ஏவ தத்தர்சநாத் (4-1-16)

*அக்நிஹோத்ரம் முதலியதோ, அந்த வித்யை ஆகிற பலனுக்காகவே ஆகும்; அதை வேதத்தில் காண்பதால்.*

**ஸங்கதி (விஷயதொடர்பு) & பூர்வபக்ஷம்**

**''இதரஸ்யாபி ஏவம் அஸம்ஶ்லேஷ:''** என்று ப்ரஹ்மவித்யையின் வலிமையால் புண்யமும் ஒட்டாது என சொல்லப்பட்டது; நித்ய-நைமித்திகங்கள் ஆகிற தனது ஆச்ரம-தர்மங்கள் ஆகிற அக்நிஹோத்ரம் முதலிய கர்மங்களும் கூட புண்ய-செயல்களே; அதனால், புண்யம் என்பது பொதுவாக ஆவதால், அவற்றின் பலனும் ஒட்டாது என ஆகும்; அதனால், அதை விரும்பாதவர், அவற்றை அனுஷ்டானம் செய்ய வேண்டாம்.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **''அக்நிஹோத்-ராதி து''** என்று;

**'து'** என்ற சொல்லானது பிற புண்ய-செயல்களை விட வேறாக இந்த அக்னி-ஹோத்ரம் முதலிய நித்யநைமித்திககர்ம அனுஷ்டானம் ஆவதைக் குறிப்பதற்காக ஆகும்.

அக்நிஹோத்ரம் முதலிய ஆச்ரம-தர்மங்களின் பலன் ஒட்டாது என்பது கிடையாது; அதனால், அவை அனுஷ்டானம் செய்யப்பட வேண்டியவையே.

பலன் ஒட்டாததாக ஆகாது என்பது, அந்த பலனுக்காகவே அவை ஆவதால் ஆகும். உபாஸநம் செய்பவன், வித்யை (உபாஸநம்) எனும் பலனுக்காகத்தானே அக்நிஹோத்ரம் முதலியதை செய்கிறான்!

அது எப்படி தெரிய வருகிறது? **தத்தர்சநாத் (அதை வேதம் சொல்வதால்) -** [1]**''வேதாநுவசனம் மூலமும், யஜ்ஞத்தாலும், தானத்தாலும், தன்னை அழிக்காத தபஸ்ஸினாலும் ப்ராஹ்மணர்கள் அந்த ப்ரஹ்மம் பற்றிய உபாஸநம் பெற விரும்பு கின்றனர்''** முதலிய வாக்யத்தால், அக்நிஹோத்ரம் முதலியவை ப்ரஹ்ம-வித்-யைக்கு காரணமானவை என்பது வேதத்தில் தெரிகிறது.

✍ *(வித்யை உண்டாவதற்காக செய்யப்படும் புண்யகர்மங்கள் ஒட்டும்; அவை வித்-யையை உண்டாக்க உதவும்; இவை தவிர மீதி புண்யகர்மங்களாதாம் ஒட்டாது.)* ✍

विद्यायाश्च आप्रयाणादभ्यासाधेयातिशयाया अहरहरुत्पाद्यत्वात् तदुत्पत्त्यर्थमाश्रम-कर्माप्यहरहरनुष्ठेयमेव। अन्यथाऽऽश्रमकर्मलोपे दूषितान्तःकरणस्य विद्योत्पत्तिरेव न स्यात्॥ १६ ॥



यदि - अग्निहोत्रादिसाधुकृत्याः विद्योत्पत्त्यर्थाः; विद्योत्पत्तेः प्राचीनं च सुकृतम् **''यावत्सम्पातमुषित्वा''** (छा.5-10-5)[1], **''प्राप्यान्तं कर्मणः''** (बृ.6-4-6)[2] इति अनुभवेन विनष्टम्; भुक्तशिष्टं च प्रारब्धफलम्; **''सुहृदः साधुकृत्याम्''** (शाठ्या.?)[3] इत्यस्य को विषयः? तत्राह -

## ४८६. अतोऽन्याऽपि ह्येकेषामुभयोः (४-१-१७)

**अतः** अग्निहोत्रादिसाधुकृत्यायाः विद्योत्पत्त्यर्थायाः **अन्याऽपि** विद्याधिगमात्पूर्वोत्तर-योरुभयोरपि पुण्यकर्मणोः प्रबलकर्मप्रतिबद्धफला साधुकृत्याऽनन्ता सम्भवत्येव; तद्विष-

---

வித்₃யாயாஶ்ச ஆப்ரயாணாத் அப்₄யாஸாதே₄யாதிஶயாயா: அஹரஹ-ருத்பாத்₃யத்வாத் தது₃த்பத்த்யர்த₂ம் ஆஶ்ரமகர்மாபி அஹரஹரநுஷ்டே₂ய-மேவ। அந்யதா₂ ஆஶ்ரமகர்மலோபே தூ₃ஷிதாந்த:கரணஸ்ய வித்₃யோத்-பத்திரேவ ந ஸ்யாத்।। 16 ।।



யதி₃ - அக்₃நிஹோத்ராதி₃ஸாது₄க்ருத்யா: வித்₃யோத்பத்த்யர்தா₂:; வித்₃-யோத்பத்தே: ப்ராசீநம் ச ஸுக்ருதம், *''யாவத்ஸம்பாதமுஷித்வா''* (சா.5-10-5)[1], *''ப்ராப்யாந்தம் கர்மண:''* (ப்ரு.6-4-6)[2] இதி அநுப₄வேந விநஷ்டம்; பு₄க்தஶிஷ்-டம் ச ப்ராரப்₃த₄ப₂லம்; *''ஸுஹ்ருத₃: ஸாது₄க்ருத்யாம்''* (சாட்ய)[3] இத்யஸ்ய கோ விஷய:? தத்ராஹ-

## 486. அதோऽந்யாऽபி ஹ்யேகேஷாமுப₄யோ: (4-1-17)

அத: அக்₃நிஹோத்ராதி₃ஸாது₄க்ருத்யாயா: வித்₃யோத்பத்த்யர்தா₂யா: அந்யாऽபி வித்₃யாதி₄க₃மாத் பூர்வோத்தரயோருப₄யோரபி புண்யகர்மணோ: ப்ரப₃லகர்மப்ரதிப₃த்₃த₄ப₂லா ஸாது₄க்ருத்யா அநந்தா ஸம்ப₄வத்யேவ; தத்₃வி-

மேலும் ப்ரஹ்ம-வித்யை ஆனது, மரணம் வரை மீண்டும் மீண்டும் செய்வதன் மூலம் சிறப்பூட்டப்பட வேண்டியதாக உள்ளது; அதனால், தினம்தினம் உண்டாக்கப்பட வேண்டியதாக உள்ளது; எனவே, அந்த ப்ரஹ்ம-வித்யை உண்டாவதற்காக ஆச்ரம-கர்மமும் தினம்தினம் செய்யப்பட வேண்டியதே; இல்லாவிட்டால், ஆச்ரம-கர்மம் விட்டுப்போனால், மனம் தோஷமுடையதாக ஆவதால், வித்யை உண்டாவதே வராது. (சுத்தமான மனதில்தான் வித்யை உண்டாக முடியும்).



**கேள்வி -** *(உபாஸநம் செய்தவன் இறக்கும்போது, அவனது புண்யத்தை அவனது நண்பர்கள் பெறுகின்றனர் என்று வேதம் சொல்கிறது; எந்த புண்யத்தை பெறுகின்றனர்? எதுவுமே அவனிடம் மீதம் இருக்காதே!)*

- அக்நிஹோத்ரம் முதலிய புண்ய-செயலானது ப்ரஹ்மவித்யை உண்டாவதற்காக ஆகும்; (எனவே, அது வித்யையை உண்டாக்கி விடுவதால், அந்த புண்யம் மீதி இருக்காது).
- ப்ரஹ்மவித்யை உண்டாவதற்கு முன்னர் இருந்த புண்யமும் அனுபவிப்பதன் மூலம் அழிந்து விட்டது; ஏனெனில், [1]**''கர்மம் இருக்கும் வரை அங்கு மேலுலகில் வசித்துவிட்டு'',** [2]**''கர்மத்தின் முடிவை அடைந்துவிட்டு (பின்னர் இவ்வுலகில் பிறக்கிறான்)''** என்று சொல்லியுள்ளது.
- அனுபவித்தது போக மீதி இருக்கும் புண்யமானது, பலன் தர ஆரம்பித்து விட்டது (அது ப்ராரப்த-கர்மம் ஆகும்; அதன் பலனை இவன் அனுபவித்தே தீர வேண்டும்).

அப்படி இருக்கும்போது, [3]**''உபாஸநம் செய்பவனது புண்யத்தை நண்பர்கள் பெறுகின்றனர்''** என்று சொன்னது எந்த புண்யத்தைப் பற்றியது?

**பதில் -** அதற்கு பதில் சொல்கிறார் -

## 486. அத: அந்யா அபி ஹி ஏகேஷாம் உபயோ: (4-1-17)

***இரண்டிலும் அதை விட வேறானதாகவும் இருப்பதுபற்றி சில பாகையினரின் வாக்யம் ஆகும்.***

**உபயோ: (இரண்டிலும்) -** முன்-பின் புண்யங்கள் இரண்டிலும்

**அத: (அதைவிட) -** வித்யை உண்டாவதற்காக ஆன அக்நிஹோத்ரம் முதலிய புண்யத்தை விட

**அந்யா அபி -** வேறானதாகவும் புண்யம் உண்டு.

வித்யை உண்டாவதற்கு முன்பும் பின்பும் ஆன இரு புண்யங்களில் அதிக பலம் வாய்ந்த கர்மத்தால் பலன் தடைபட்டதான புண்யம் எண்ணற்றது இருக்கக் கூடும்தான்!

यमिदमेकेषां शाखिनां वचनम्, **"तस्य पुत्रा दायमुपयन्ति; सुहृदः साधुकृत्याम्"** (शाट्या.?)[1] इति। विद्यया अश्लेषविनाशश्रुतिश्च तद्विषया॥ १७ ॥

अनुष्ठितस्यापि कर्मणः फलप्रतिबन्धसम्भवं पूर्वोक्तं स्मारयति -

## ४८७.यदेव विद्ययेति हि (४-१-१८)

**"यदेव विद्यया करोति...तदेव वीर्यवत्तरम्"**(छा.1-1-10)[2] इति उद्गीथविद्यायाः क्रतुफलाप्रतिबन्धफलत्ववचनेन अनुष्ठितस्यापि कर्मणः फलप्रतिबन्धः सूच्यते हि। अतो विदुषोऽनुष्ठितप्रतिबद्धफलविषयम्, **'सुहृदः साधुकृत्याम्'**(शाट्या.?)[3] इति शाट्यायनिकम्॥१८॥

इति अग्निहोत्राद्यधिकरणम् ॥ १० ॥

---

ஷயமிதம் ஏகேஷாம் ஶாகிநாம் வசநம், *"தஸ்ய புத்ரா தாயமுபயந்தி; ஸுஹ்ருதః ஸாதுக்ருத்யாம்"* (சாட்யா)[1] இதி। வித்யயா அஶ்லேஷவிநாஶஶ்ருதிஶ்ச தத்விஷயா।। 17 ।।

அநுஷ்டிதஸ்யாபி கர்மணः பலப்ரதிபந்தஸம்பவம் பூர்வோக்தம் ஸ்மாரயதி -

## 487. யதேவ வித்யயேதி ஹி (4-1-18)

*"யதேவ வித்யயா கரோதி...ததேவ வீர்யவத்தரம்"*(சா.1-1-10)[2] இதி உத்கீதவித்யாயா: க்ரதுபலாப்ரதிபந்தபலத்வவசநேந அநுஷ்டிதஸ்யாபி கர்மண: பலப்ரதிபந்தः ஸூச்யதே ஹி। அத: விதுஷோऽநுஷ்டித-ப்ரதிபத்தபல-விஷயம், *"ஸுஹ்ருதः ஸாதுக்ருத்யாம்"*(சாட்யா)[3] இதி ஶாட்யாயநிகம் ।।18।।

இதி அக்நிஹோத்ராத்யதிகரணம் ।। 10 ।।



**ஏகேஷாம் (சிலரது)-** சில ஶாகைகளைச் சேர்ந்தவர்களின் வாக்யம் ஆன [1]**''உபாஸநம் செய்பவனது புத்ரர்கள் உரிமையான சொத்து-பங்கினை அடைகின்றனர்; நண்பர்கள் அவனது புண்யத்தை அடைகின்றனர்; எதிரிகள் பாபத்தை பெறுகின்றனர்''** என்பது, அந்த புண்யங்களைப் பற்றியது ஆகும்.

மேலும், ப்ரஹ்மவித்யையால் கர்மங்கள் ஒட்டாது என்றும் அழியும் என்றும் சொல்லும் வேதவாக்யமும் இந்த புண்யங்களைப் பற்றியது ஆகும்.



செய்த கர்மத்துக்கும் பலன் தடைபடுதல் வரக்கூடும் என்பதாக முன்னர் (3-3-41 ஸூத்ரத்தில்) சொன்னதை நினைவுறுத்துகிறார் -

### 487. யத் ஏவ வித்யயா இதி ஹி (4-1-18)

*''யதேவ வித்யயா'' என்று சொன்னதுதானே!*

யாகத்தில் செய்யும் உத்கீத-உபாஸநத்துக்கு பலன், 'யாகத்தின் பலனைத் தடை செய்யாமை' ஆகும்; இதை வேதம் சொல்கிறது - [2]**''எதையே (எந்த யாக-கர்மத்தை) வித்யையுடன் செய்கிறானோ, அதுவே அதிக வீர்யம் கூடியதாக ஆகும்''** என்று; (வீர்யம் கூடியது என்றால் தடைபடாமல் பலன் அளிப்பது என்று அர்த்தம்). இதனால், செய்த கர்மத்துக்கும் பலன் தடைபடலாம் என்பது மறைமுகமாக உணர்த்தப்படுகிறதுதானே!

ஆகவே, [3]**''உபாஸநம் செய்பவனது நண்பர்கள், அவனது புண்யத்தை பெறுகின்றனர்''** எனும் ஶாட்யாயந-ஶாகையினரின் வசனம் ஆனது, உபாஸநம் செய்பவன் அனுஷ்டானம் செய்து பின் பலன் தடைபட்ட புண்ய-கர்மத்தைப் பற்றியதாக ஆகும். (பலன் தடைபட்ட அவனது புண்யத்தை அவனது நண்பர்கள் பெறுவர் என்று அர்த்தம்)

***

**அக்னிஹோத்ராத்யதிகரணம் முற்றிற்று**



# 134. இதரக்ஷபணாதிகரணம் (4-1-11)

## முன்குறிப்பு

உபாஸநம் செய்பவன் எப்போது ப்ரஹ்மத்தை அடைய முடியும்? அந்த ஶரீரத்தின் முடிவிலேயே அந்த பலன் கிடைத்து விடுமா? அல்லது பின்னரும் ஶரீரங்கள் எடுத்த பின்னரே கிடைக்குமா?

ஸஞ்சிதகர்மமானது வித்யையால் தொலைந்து விடும்; ஆனால், ப்ராரப்தகர்மம் தொலையாது; அதை அநுபவித்தே தொலைக்க வேண்டும்; அது ஒழித்தபின்னரே ப்ரஹ்மப்ராப்தி ஆகிற பலன் கிடைக்கும்; இதை முன்பே அநாரப்தகார்யாதிகரணத்தில் சொல்லியாயிற்று.

ஆனால், அந்த ப்ராரப்தகர்மம் ஆனது அந்த ஶரீரத்திலேயே அநுபவிக்கப்பட்டு தொலைந்து விடுமா? அல்லது அடுத்து மேலும் சில ஶரீரங்கள் எடுக்க வேண்டியிருக்குமா என்று விசாரம்.

பூர்வபக்ஷம் - வேதத்தில் ஒரு வாக்யம் உள்ளது - ''உபாஸநம் செய்பவனுக்கு விடு-படாத காலம் வரையே காலதாமதம்; பின்னர் உடனேயே ப்ரஹ்மத்தை அடைகிறான்'' என்று. ஆகையால், ஶரீரத்திலிருந்து விடுபடும் காலம் வரையே காலதாமதம் என்று சொல்லியிருப்பதால், அந்த ஶரீரத்திலிருந்து விடுபட்டவுடன் ப்ரஹ்மப்ராப்தி ஆகிற பலன் வரும்.

ஸித்தாந்தம் - இந்த வாக்யத்தில் 'ஶரீரத்திலிருந்து விடுபடாத காலம்' என்று சொல்-லவில்லை; 'விடுபடாத காலம் வரை' என்றுதான் சொல்லியிருக்கிறது; புண்யபாபங்-களிலிருந்து விடுபடாத காலம் வரையே தாமதம் என்று அர்த்தம்; புண்யபாபங்களிலிருந்து விடுபட்ட உடனேயே ப்ரஹ்மப்ராப்தி ஆகிற பலன் கிடைக்கும். புண்யபாபங்களிலிருந்து முழுதுமாக விடுபடுதல் என்பது அந்த ஶரீரத்தின் முடிவிலும் ஆகலாம்; அல்லது சிலருக்கு அடுத்தடுத்த பிறவிகளிலும் ஆகலாம்; அப்படியானால், அடுத்த பிறவிகள் எடுத்து ப்ராரப்த-கர்மபலனை அநுபவித்து அதை ஒழித்தபின்னரே ப்ரஹ்மத்தை அடைவான்.

அப்படி ப்ராரப்தகர்மத்திலிருந்து விடுபடுதல்தான் மோக்ஷம் ஆகும்; மோக்ஷம் என்றால் விடுபடுதல் என்று அர்த்தம்.

ஒரு விசேஷம் - பக்தியோகம் செய்பவருக்கே இந்த விஷயம்; நம்மைப் போல் சரணாகதி செய்பவர், 'இந்த ஶரீரத்தின் முடிவிலேயே ப்ரஹ்மத்தை அடைய வேண்டும்' என்று வேண்டி சரணாகதி செய்தால், அப்படியே அந்த ஶரீரமுடிவிலேயே பலன் கிடைக்கும்.

# १३४ इतरक्षपणाधिकरणम् (४-१-११)

## ४८८.भोगेन त्वितरे क्षपयित्वाऽथ सम्पद्यते (४-१-१९)

ययोः पुण्यपापयोरश्लेषविनाशावुक्तौ, ताभ्यामितरे आरब्धकार्ये पुण्यपापे किं विद्यायोनिशरीरवसाने, उत तच्छरीरावसाने शरीरान्तरावसाने वेत्यनियमः इति संशये -

"**तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्ये, अथ सम्पत्स्ये**"(छा.6-4-13)[1] इति तच्छरीर-विमोक्षावसानत्वश्रवणात् तदवसाने,

इति प्राप्ते उच्यते - **भोगेन तु** इति। **तु** शब्दः पक्षव्यावृत्त्यर्थः। **इतरे** आरब्धकार्ये पुण्यपापे स्वारब्धफल**भोगेन क्षपयित्वा(अथ?)** तत्फलभोगसमाप्यनन्तरं ब्रह्म **सम्पद्यते**; ते च पुण्यपापे एकशरीर(रोप)भोग्यफले चेत्, तच्छरीरावसाने सम्पद्यते; अनेकशरीरभोग्य-फले चेत्, तदवसाने सम्पद्यते; भोगेनैव क्षपयितव्यत्वादारब्धफलयोः कर्मणोः।

---

# 134. இதரக்ஷபணாதிகரணம் (4-1-11)

## 488. போகேந த்விதரே க்ஷபயித்வாऽத ஸம்பத்யதே (4-1-19)

யயோ: புண்யபாபயோ: அஶ்லேஷவிநாஶாவுக்தௌ, தாப்யாமிதரே ஆரப்தகார்யே புண்யபாபே கிம் வித்யாயோநிஶரீரவஸாநே, உத தச்சரீ-ராவஸாநே ஶரீராந்தராவஸாநே வா இத்யநியம: இதி ஸம்ஶயே -

*"தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே; அத ஸம்பத்ஸ்யே"* (சா.6-4-13)[1] இதி தச்சரீரவிமோக்ஷாவஸாநத்வஶ்ரவணாத் ததவஸாநே,

இதி ப்ராப்தே உச்யதே - **போகேந** *து* - இதி। *து*ஶப்**த:** பக்ஷவ்யா-வ்ருத்த்யர்த:। இதரே - ஆரப்தகார்யே புண்யபாபே ஸ்வாரப்தபலபோகேந க்ஷபயித்வா (அத?) தத்பலபோகஸமாப்யநந்தரம் ப்ரஹ்ம ஸம்பத்யதே; தே ச புண்யபாபே ஏகஶரீர(ரோப)போக்யபலே சேத், தச்சரீராவஸாநே ஸம்பத்யதே; அநேகஶரீரபோக்யபலே சேத், ததவஸாநே ஸம்பத்யதே, **போகே**நைவ க்ஷபயிதவ்யத்வாத் ஆரப்தபலயோ: கர்மணோ:।

# 134. இதரக்ஷபணாதிகரணம் (4-1-11)

## 488. போகேந து இதரே க்ஷபயித்வா அத ஸம்பத்யதே (4-1-19)

*வேறான ப்ராரப்தகர்மங்கள் இரண்டையும் பல-அனுபவத்தின் மூலம் கழித்து பின்னர் ப்ரஹ்மத்தை அடைகிறான்.*

**ஸங்கதி (விஷயதொடர்பு) & ஸந்தேஹம்**

எந்த புண்ய-பாபங்களுக்கு (ஸஞ்சிதகர்மங்களுக்கு) ஒட்டாமையும் அழிவும் முன்னர் சொல்லப்பட்டதோ, அவற்றை விட வேறானவை பலன் தர ஆரம்பித்த புண்ய-பாபங்கள்; (ப்ராரப்த-கர்மங்கள் என்று பெயர்); அவை உபாஸநம் ஆரம்பித்த அந்த ஶரீரத்தில் முடிவு கொண்டவையா? அல்லது, அந்த ஶரீரத்தில் முடிபவையாகவோ வேறு ஶரீரத்தில் முடிபவையாகவோ ஆகலாம் என்று நியமம் இல்லையா? என்று ஸந்தேஹம்

**பூர்வபக்ஷம்**

[1]**''அவனுக்கு விடுபடாத காலம் எவ்வளவோ, அவ்வளவே காலதாமதம்''** என்று அந்த ஶரீரத்திலிருந்து விடுபடுதலே இறுதி-காலமாக வேதம் சொல்கிறது; அதனால், அந்த ஶரீரம் முடிவில் ப்ராரப்த-புண்யபாபங்கள் அழியும்.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **'போகேந து'** என்று.

**'து'** என்ற சொல்லானது பூர்வபக்ஷத்தைக் களைவதற்காக ஆகும்.

**இதரே (வேறான இரண்டை)** - பலன் தர ஆரம்பித்த புண்ய-பாபங்கள் இரண்டையும்

**போகேந** - தன்னால் தர ஆரம்பிக்கப்பட்ட பலனை அனுபவிப்பதன் மூலம்

**க்ஷபயித்வா** - கழித்துவிட்டு,

**அத** - அந்த பலனை அனுபவிப்பது முடிந்தபின்னர்,

**ஸம்பத்யதே** - ப்ரஹ்மத்தை அடைகிறான்.

அந்த புண்ய-பாபங்கள் இரண்டும் ஒரே ஶரீரத்தில் அனுபவிக்க வேண்டிய பலனை உடையவை என்றால், அந்த ஶரீர-முடிவில் (ப்ரஹ்மத்தை) அடைகிறான்; பல ஶரீரங்களில் அனுபவிக்க வேண்டிய பலன் உடையவை என்றால், அந்த பல ஶரீரங்களின் முடிவில் அடைகிறான்; ஏனெனில், பலன் தர ஆரம்பித்த ப்ராரப்த-கர்மங்கள் அனுபவத்தால் மட்டுமே கழிக்கப்பட வேண்டியவை.

**''तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्ये''** (छा.6-4-13)[1] इति च भोगेन तयोः कर्मणोः विमोक्ष उच्यते; देहावधिनियमाश्रवणात्।

तदेवं ब्रह्मविद्यायाः प्रागनुष्ठितमभुक्तफलमनारब्धफलं पुण्यपापरूपं कर्म अनादिकालसञ्चितमनन्तं विद्यामाहात्म्याद्विनश्यति; विद्यारम्भोत्तरकालमनुष्ठितं च न श्लिष्यति; तत्र पुण्यरूपं सर्वं विदुषः सुहृदो गृह्णन्ति, पापं च द्विषन्त इति निरवद्यम्॥११॥

इति इतरक्षपणाधिकरणम् ॥ ११ ॥

इति श्रीभगवद्रामानुजविरचिते शारीरकमीमांसाभाष्ये चतुर्थस्याध्यायस्य प्रथमः पादः॥ १ ॥

---

*"தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே"* (சா.6-4-13)[1] இதி ச போகேந தயோ: கர்மணோ: விமோக்ஷ உச்யதே; தேஹாவதிநியமாஶ்ரவணாத்।

ததேவம் ப்ரஹ்மவித்யாயா: ப்ராகநுஷ்டிதம் அபுக்தபலம் அநாரப்தபலம் புண்யபாபரூபம் கர்ம அநாதிகாலஸஞ்சிதம் அநந்தம் வித்யாமாஹாத்ம்யாத் விநஶ்யதி, வித்யாரம்போத்தரகாலமநுஷ்டிதம் ச ந ஶ்லிஷ்யதி; தத்ர புண்யரூபம் ஸர்வம் விதுஷ: ஸுஹ்ருதோ க்ருஹ்ணந்தி, பாபம் ச த்விஷந்த இதி நிரவத்யம்।।11।।

இதி இதரக்ஷபணாதிகரணம் ।। 11 ।।

இதி ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசிதே ஶாரீரகமீமாம்ஸாபாஷ்யே சதுர்தஸ்யாத்யாயஸ்ய ப்ரதம: பாத:।। 1 ।।



[1]**"அந்த உபாஸநம் செய்பவனுக்கு, விடுபடாத காலம் வரை அவ்வளவே கால-தாமதம் (பின்னர் ப்ரஹ்மத்தை அடைவான்)"** என்று (வேதம் சொல்கிறது;) பலனை அனுபவிப்பதால் அந்த புண்ய-பாப-கர்மங்கள் இரண்டும் விடுபடுவது இங்கு சொல்லப்படுகிறது. ஏனெனில், அந்த ஶரீரம் விடுபடாத காலம் வரை என்கிற நியமம் சொல்லப்படவில்லை.

*(இந்த வேத வாக்யத்தில் ப்ராரப்த-புண்யபாபங்களிலிருந்து விடுபடாத வரையே காலதாமதம் என்று அர்த்தம்; எந்த ஶரீரத்தில் இருக்கிறானோ, அந்த ஶரீரத்திலிருந்து விடுபடாதவரை என்று அர்த்தம் இல்லை. ஏனெனில் அப்படி குறிப்பிட்டு வேதம் சொல்லவில்லை).*

எனவே, இப்படியாக, ப்ரஹ்ம-வித்யைக்கு முன் செய்ததும், பலன் அனுபவிக்கப்படாததும், பலன் தர ஆரம்பிக்காததும் ஆன புண்ய-பாபம் ஆகிற கர்மம் ஆனது, அநாதி-காலமாக சேர்த்து வைக்கப்பட்டது; அளவற்றது; அது ப்ரஹ்ம-வித்யையின் பெருமையால் அழிகிறது; ப்ரஹ்ம-வித்யை ஆரம்பித்த பின் செய்யப்படும் புண்ய-பாப-கர்மம் ஆனது ஒட்டுவதில்லை; அதில், புண்யமாகிற எல்லாவற்றையும், ப்ரஹ்ம-வித்யை செய்பவனின் நண்பர்கள் எடுத்துக் கொள்கின்றனர்; பாபத்தை அவனது எதிரிகள் எடுத்துக் கொள்கின்றனர்; ஆகையால், ஒரு தோஷமும் இல்லை.

**இதரக்ஷபணாதிகரணம் முற்றிற்று.**

*ஸ்ரீபகவத்ராமானுஜர் அருளிய ஸ்ரீபாஷ்யத்தில் நான்காவது அத்யாயத்தின் முதல் பாதம் முற்றிற்று*



ஸ்ரீமதே ராமானுஜாய நம:

## ஸ்ரீபகவத் ராமானுஜர் அருளிய

# ஸ்ரீபாஷ்யம்

(தமிழாக்கத்துடன்)

(4-2)

## நான்காவது அத்யாயம் - பலாத்யாயம்

### இரண்டாம் பாதம் - உத்க்ராந்தி பாதம்

### அதிகரணங்கள் - 11 (135-145)

### ஸூத்ரங்கள் - 20 (489-508)

உத்க்ராந்தி என்றால் ஶரீரத்தில் உள்ளிலிருந்து வெளியேறுதல் என்று அர்த்தம். மோக்ஷம் பெறும் ஜீவன் ஆனவன், மரணம் அடையும்போது உடலை விட்டு வெளியேறுகிறான். அவன் எப்படி வெளியேறுகிறான் என்பதை இந்த பாதம் விளக்குகிறது.

மரணத் தருவாயில் முதலில் வாக் முதலிய இந்த்ரியங்கள் மனஸ்ஸில் சேர்கின்றன; அந்த மனஸ் ப்ராணவாயுவில் சேர்க்கிறது; அது ஜீவனில் சேர்கிறது; இவற்றுடன் கூடிய ஜீவன், பஞ்சபூதங்களில் சேர்கிறான்; அவை பரமாத்மாவில் சேர்கின்றன. இவை எல்லாம் உடலுக்குள்ளேயே நடக்கும்.

பிறகு உடலிலிருந்து வெளியேற வேண்டும்; பல நாடிகள் உள்ளன. அதில் ஏதாவது ஒன்றைப் பற்றிக்கொண்டு ஏதாவது த்வாரம் வழியாக ஜீவன் வெளியேறுவான். இது பொதுவாக நடக்கும் சங்கதி.

இதில், மோக்ஷம் பெறும் ஜீவனுக்கு தனி வழி உள்ளது. ஹ்ருதயத்தில் 101 நாடிகளில் ஒரு நாடியானது நடுமண்டைக்கு போகிறது; அந்த நாடியின் நுனியில் சிறு வெளிச்சத்தை பரமாத்மா உண்டாக்குவான்; அதன் மூலம் அந்த நாடி-வழியை ஜீவனுக்கு புரிய வைப்பான்; இப்படி பரமாத்மாவின் அனுக்ரஹத்தால் அந்த நாடியைப் பற்றிக்கொண்டு, நடுமண்டை வழியாக இந்த ஜீவன் வெளியேறுவான்.

பின்னர் ஸூர்யனது கிரணங்களைப் பற்றிக்கொண்டு மேலே செல்வான். செல்லும் பாதை பற்றி அடுத்த பாதத்தில் உள்ளது.

# 135. வாகதிகரணம் (4-2-1)

## முன் குறிப்பு

கை, கால் முதலியது போல, வாக் என்பது ஒரு இந்த்ரியம்; இதுபேச உதவும் இந்த்ரியம் ஆகும். மனஸ் என்பதும் ஒரு இந்த்ரியம்.

''மரணம் அடையும் மனிதனுடைய வாக் ஆனது மனஸ்ஸில் சேர்கிறது'' என்று ஒரு வேதவாக்யம் சொல்கிறது. இங்கே மரணத் தறுவாயில், வாக் எனும் இந்த்ரியமே மனஸ்ஸில் சேர்கிறதா? அல்லது வாக்-இந்த்ரியத்தின் செயல் மனஸ்ஸில் சேர்கிறதா என்பது விசாரம்.

பூர்வபக்ஷம்- வாக் இந்த்ரியத்தின் செயல் மனஸ்ஸில் ஒன்றி சேர்கிறது என்று சொல்ல வேண்டும். மனஸ்ஸுக்குக் கட்டுப்பட்டுத்தான் எல்லா இந்த்ரியங்களும் செயல் புரிகின்றன. அதனால் இந்த்ரியங்களின் செயல்பாட்டுக்கு மனஸ்தான் காரணம்; இறக்கும் தருவாயில், வாக் இந்த்ரியத்தின் செயல்பாடு மனஸ்ஸில் சேர்கிறது என்றுகருத்து.

ஸித்தாந்தம் - வாக் இந்த்ரியம்தான் மனஸ்ஸில் சேர்கிறது; அப்படியே வேதம் சொல்கிறது. அப்படியே நாம் காண்கிறோம். மரணத் தருவாயில், முதலில் பேச்சு நின்று விடுகிறது; அப்போதும் மனஸ் செயல்படுகிறது; ஆகவே, வாக்தான் மனஸ்ஸில் சேர்கிறது.

கேள்வி - வாக்-இந்த்ரியம்தான் மனஸ்ஸில் சேர்கிறது என்று சொல்ல முடியாது; ஏனெனில், மனஸ் ஆனது வாக்-இந்த்ரியத்தின் காரணம் அல்ல; பொதுவாக கார்ய-பொருள் ஆனது அழியும்போது காரணப் பொருளோடு ஒன்றிச் சேரும்; உதாஹரணமாக, பானை ஆனது, அழியும்போது, மண்ணில் சேரும்; ஆனால், மனஸ் ஆனது, வாக் இந்த்ரியத்தின் காரணப் பொருள் அல்ல. எனவே, அதில் வாக் இந்த்ரியம் சேருவதாக எப்படி சொல்ல முடியும்?

பதில் - வேதவாக்யத்தில், சேர்கிறது என்று மட்டுமே சொல்லியுள்ளது; ஒன்றி லயமடைகிறது என்று சொல்லவில்லை. எனவே, கார்ய-பொருள் காரணப் பொருளில் ஒன்றிச் சேர்வதான சேர்க்கையை இங்கே சொல்லவில்லை. ஒன்றிப் போகாமல் தனித்தனியாக இரு பானைகள் ஸம்யோகஸம்பந்தம் கொண்டு சேர்வதுண்டு. உதாஹரணமாக கையும் கையும் சேர்த்து வைத்தால், சேர்கிறது. அதுபோல, வாக் இந்த்ரியம் மனஸ்ஸில் சேர்கிறது என்று கருத்து.

# १३५. वागधिकरणम् (४-२-१)

## ४८९.वाङ्मनसि दर्शनाच्छब्दाच्च (४-२-१)

इदानीं विदुषो गतिप्रकारं चिन्तयितुमारभते। प्रथमं तावत् उत्क्रान्तिश्चिन्त्यते।

तत्रेदमाम्नायते, "**अस्य सोम्य पुरुषस्य प्रयतो वाङ्मनसि सम्पद्यते; मनः प्राणे; प्राणस्तेजसि; तेजः परस्यां देवतायाम्**"(छा.6-8-6)[1] इति।

अत्र 'वाङ्मनसि सम्पद्यते' इति वाचो मनसि सम्पत्तिश्रुतिः किं वाग्वृत्तिमात्रविषया, उत वाग्विषयेति विशये -

वृत्तिमात्रविषयेति युक्तम्। कुतः? मनसो वाक्प्रकृतित्वाभावात् तत्र वाक्स्वरूप-सम्पत्त्यसम्भवात्। वागादिवृत्तीनां मनोऽधीनत्वेन वृत्तिसम्पत्तिश्रुतिः कथञ्चिदुपपद्यत इत्येवं प्राप्ते -

अभिधीयते **वाङ्मनसि** इति। वाक्स्वरूपमेव मनसि सम्पद्यते। कुतः? **दर्शनात्।** दृश्यते हि वागिन्द्रिये उपरतेऽपि मनःप्रवृत्तिः।

---

# 135. வாகதிகரணம் (4-2-1)

## 489. வாங்மநஸி தர்ஶநாச்சப்தாச்ச (4-2-1)

இதாநீம் விதுஷோ கதிப்ரகாரம் சிந்தயிதுமாரபதே। ப்ரதமம் தாவத் உத்க்ராந்திஶ்சிந்த்யதே।

தத்ரேதமாம்நாயதே, *"அஸ்ய ஸோம்ய புருஷஸ்ய ப்ரயதோ வாங்மநஸி ஸம்பத்யதே; மந: ப்ராணே; ப்ராணஸ்தேஜஸி; தேஜ: பரஸ்யாம் தேவதாயாம்"* (சா.6-8-6)இதி।

அத்ர *"வாங்மநஸி ஸம்பத்யதே"* இதி வாசோ மநஸி ஸம்பத்திஶ்ருதி:, கிம் வாக்வ்ருத்திமாத்ரவிஷயா, உத வாக்விஷயேதி விஶயே -

வ்ருத்திமாத்ரவிஷயேதி யுக்தம்। குத:? மநஸோ வாக்ப்ரக்ருதித்வாபாவாத், தத்ர வாக்ஸ்வரூபஸம்பத்த்யஸம்பவாத்। வாகாதிவ்ருத்தீநாம் மநோऽதீநத்வேந வ்ருத்திஸம்பத்திஶ்ருதி: கதஞ்சிதுபபத்யத இத்யேவம் ப்ராப்தே -

அபிதீயதே - *வாங்மநஸி* இதி। வாக்ஸ்வரூபமேவ மநஸி ஸம்பத்யதே। குத:? *தர்ஶநாத்।* த்ருஶ்யதே ஹி வாகிந்த்ரியே உபரதேऽபி மந:ப்ரவ்ருத்தி:।

# 135. வாகதிகரணம் (4-2-1)

## 489. வாக் மனஸி தர்ஶநாத் ஶப்தாத் ச (4-2-1)

*வாக் ஆனது மனஸ்ஸில் சேரும்; அப்படி காண்பதாலும் வேதம் சொல்வதாலும்.*

**ஸங்கதி (விஷயதொடர்பு)**

ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவன் (மோக்ஷம் பெற்று) செல்லும் முறையை இப்போது விசாரம் செய்ய ஆரம்பிக்கிறார்.

முதலில் உத்க்ராந்தி (ஶரீரத்திலிருந்து மேலே ஜீவன் வெளியேறுதல்) விசாரிக்கப் படுகிறது.

**விஷயவாக்யம்**

அதைப் பற்றி இது ஓதப்படுகிறது - [1]**''அழகனே, மரணமடையும் இந்த மனிதனுடைய வாக் ஆனது மனஸ்ஸில் சேர்கிறது; மனஸ் ஆனது ப்ராணனில்; ப்ராணன் ஆனது தேஜஸ்ஸில்; தேஜஸ் ஆனது பர-தெய்வத்தில் (சேர்கிறது)''**

**ஸம்சயம் (ஸந்தேகம்)**

இங்கு **''வாங்மநஸி ஸம்பத்யதே''** என்று, வாக் மனஸ்ஸில் சேர்வதாக வேதம் சொல்வதானது, வாக்கின் செயலை மட்டும் பற்றியதா? அல்லது வாக்கினைப் பற்றியதா? என்று ஸந்தேஹம். (வாக் இந்த்ரியத்தின் செயலானது மனஸ்ஸுடன் ஒன்றி சேர்கிறதா? அல்லது வாக்-இந்த்ரிய ஸ்வரூபமே மனஸ்ஸுடன் சேர்கிறதா?)

**பூர்வபக்ஷம்**

வாக்கின் செயலை மட்டும் பற்றியது இந்த வேத-வாக்யம் என்பது சரியாகும்; ஏன்? ஏனெனில் வாக் ஸ்வரூபம் ஆனது மனஸ்ஸில் சேர்வதாக ஆகாது; அது ஏனெனில், மனஸ் ஆனது வாக்-இந்த்ரியத்தின் உபாதான-காரணம் அல்ல.

(வாக்-இந்த்ரியத்தின்) செயலானது மனஸ்ஸில் சேர்வதாக வேதம் சொன்னது எப்படியாவது பொருந்தும்; ஏனெனில், வாக் முதலிய இந்த்ரியங்களின் செயல்கள் மனஸ்ஸுக்கு கட்டுப்பட்டு இருப்பவை.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **''வாக் மனஸி''** என்று.

**வாக் -** வாக்-ஸ்வரூபம்தான்

**மனஸி -** மனஸ்ஸில் சேர்கிறது;

ஏன்?

**தர்ஶநாத் -** வாக்-இந்த்ரியம் செயல் இழந்தபின்பும் மனஸ் செயல்படுவதைக் காண்பதால்.

वृत्तिमात्रसम्पत्त्यापि तदुपपद्यत इति चेत्, तत्राह - **शब्दाच्चेति**। 'वाङ्मनसि सम्पद्यत' इति वाक्स्वरूपसम्पत्तावेव हि शब्दः; न वृत्तिमात्रसम्पत्तौ। न हि तदानीं वृत्त्युपरमे वागिन्द्रियं प्रमाणान्तरेणोपलभ्यते; येन वृत्तिमात्रमेव सम्पद्यत इत्युच्येत।

यदुक्तं मनसो वाक्प्रकृतित्वाभावात् वाचो मनसि सम्पत्तिर्नोपपद्यते इति तत्, 'वाङ्मनसि सम्पद्यते' इति वचनात् मनसा वाक् संयुज्यते; न तु तत्र लीयत इति परिहर्तव्यम्॥ १ ॥

## ४९०.अत एव सर्वाण्यनु (४-२-२)

यतो वाचो मनसा संयोगमात्रं सम्पत्तिः; न तु लयः, **अत एव वाचमनु सर्वेषामिन्द्रियाणां मनसि सम्पत्तिश्रुतिरुपपद्यते, "तस्मादुपशान्ततेजाः पुनर्भवमिन्द्रियैर्मनसि सम्पद्यमानैः"** (प्र.3-9)[1] इति ॥ २ ॥

इति वागधिकरणम् ॥ १ ॥

---

வ்ருத்திமாத்ரஸம்பத்த்யாபி ததுபபத்யதே இதி சேத் - தத்ராஹ - *ஶப்தாச்ச* இதி। *'வாங்மநஸி ஸம்பத்யதே'* இதி வாக்ஸ்வரூபஸம்பத்தாவேவ ஹி ஶப்த:; ந வ்ருத்திமாத்ரஸம்பத்தௌ। ந ஹி ததாநீம் வ்ருத்த்யுபரமே வாகிந்த்ரியம் ப்ரமாணாந்தரேணோபலப்யதே; யேந வ்ருத்திமாத்ரமேவ ஸம்பத்யத இத்யுச்யேத।

யதுக்தம் மநஸோ வாக்ப்ரக்ருதித்வாபாவாத் வாசோ மநஸி ஸம்பத்தி: நோபபத்யதே இதி - தத், *'வாங்மநஸி ஸம்பத்யதே'* இதி வசநாத் மநஸா வாக் ஸம்யுஜ்யதே; ந து தத்ர லீயத இதி பரிஹர்தவ்யம்।।1।।

## 490. அத ஏவ ஸர்வாண்யநு (4-2-2)

யத: வாச: மநஸா ஸம்யோகமாத்ரம் ஸம்பத்தி:; ந து லய: - அத ஏவ வாசமநு ஸர்வேஷாமிந்த்ரியாணாம் மநஸி ஸம்பத்திஶ்ருதி: உபபத்யதே, *"தஸ்மாதுபஶாந்ததேஜா: புநர்பவமிந்த்ரியைர்மநஸி ஸம்பத்யமாநை:"* (ப்ர.3-9)[1] இதி।।2।।

இதி வாகதிகரணம்।।1।।

கேள்வி:- செயல் மட்டும் சேர்வதானாலும், அதை இட்டும் அது சரியாகும் அதற்கு பதில் சொல்கிறார் - **''ஸப்தாத் ச''** என்று.

**''வாங்மனஸி ஸம்பத்யதே''** என்று வாக்-ஸ்வரூபம் சேர்வதைப் பற்றியே வேத-வாக்யம் உள்ளது; (வாக்கின்) செயல் மட்டும் சேர்வதைப் பற்றியதாக வாக்-யம் இல்லை.

அப்போது, மரணசமயத்தில், வாக்கின் செயல் ஓயும்போது, வாக்-இந்த்ரியம் (இருப்பதாக) வேறு ப்ரமாணத்தால் தெரியவில்லை; அப்படி தெரிவதானால், அதை வைத்து வாக்கின் செயல் மட்டுமே சேர்கிறது என சொல்லப்படலாம்.

*(மரண ஸமயத்தில் வாக்கினால் பேச முடியாத நிலையிலும், மனஸ் வேலை செய்கிறது; அதனால், வாக் ஆனது மனஸ்ஸுடன் சேர்ந்துவிட்டது என்று தெரிந்துக் கொள்ளலாம் என்று ஸித்தாந்தம்.*

*கேள்வி - வாக் சேரவில்லை: வாக்-இந்த்ரியத்தின் செயல்தான் சேர்ந்தது என்பதாகக் கூட ஆகலாம்; அதனால், இதனை வைத்து வாக் சேர்ந்ததாக சொல்ல முடியாது.*

*பதில் - வாக் சேர்வதாக வேதம் சொல்கிறது; வாக் சேரவில்லை என்றும் செயல் மட்டுமே சேர்ந்துள்ளது என்றும் சொல்வதற்கு காரணம் ஒன்றும் இல்லை.)*

**கேள்வி -** மனஸ் ஆனது வாக்கின் உபாதாந-காரணம் அல்ல; அதனால், வாக்-ஸ்வரூபம் ஆனது அதில் சேர்வது சரியாகாது என்று சொல்லப்பட்டது.

**பதில் - ''வாங்மனஸி ஸம்பத்யதே''** என்று சொல்லியிருப்பதால், மனஸ்ஸுடன் வாக்-இந்த்ரியமானது ஸம்யோக-தொடர்பு கொள்கிறது என்பது மட்டுமே; அதில் ஒன்றி லயம் அடைவது கிடையாது; இப்படியாக அக்கேள்விக்கு பரிஹாரம் சொல்லப்பட வேண்டும்.

*(லயம் அடைவதானால், அது காரணப் பொருளில் மட்டுமே லயம் அடையும்; மற்ற பொருள்களில் லயம் வராது; ஆனால், இங்கு லயம் அடைவதில்லை; வாக் ஆனது மனஸ்ஸில் சென்று சேர்கிறது என்பது மட்டுமே)*



## 490. அத: ஏவ ஸர்வாணி அனு (4-2-2)

***அதனாலேயே எல்லா இந்த்ரியங்களும் அதனுடன் கூட ஆகின்றன.***

சேர்தல் என்பது, வாக்-ஆனது மனஸ்ஸுடன் ஸம்யோக-தொடர்பு கொள்ளுதல் மட்டுமே ஆகும்; மனஸ்ஸில் ஒன்றி லயம் அடைவது அல்ல; அது எதனாலோ, அதனால்தான் வாக்-இந்த்ரியத்துடன் கூட[1] எல்லா இந்த்ரியங்களும் மனஸ்ஸில் சேர்வதாக வேதம் சொல்வது பொருந்தும் **''உடல் சூடும் அடங்கியவன் மறுபிறப்பைக் குறித்து மனஸ்ஸில் சேரும் இந்த்ரியங்களுடன் கூட (ப்ராணனைச் சென்றடைகிறான்)''** என்று வேதம் சொல்கிறது.

**வாகதிகரணம் முற்றிற்று.**

# 136. மனோऽதிகரணம் (4-2-2)

## முன் குறிப்பு

மனிதன் மரணம் அடையும்போது எல்லா இந்த்ரியங்களும் மனஸ்ஸில் சேர்கின்றன என்கிற விஷயத்தை போன அதிகரணத்தில் சொல்லி ஆயிற்று. வேதவாக்யம் சொல்வதை அடிப்படையாக வைத்து, அந்த விஷயம் சொல்லப்பட்டது.

அப்படி எல்லா இந்த்ரியங்களுடன் கூடிய அந்த மனஸ் ஆனது, ப்ராணவாயுவில் சேர்கிறது என்பதை இந்த அதிகரணத்தில் சொல்கிறார். இதனையும் முன் சொன்ன வேதவாக்யத்துக்கு அடுத்த வேதவாக்யமே சொல்வதால், ஏற்க வேண்டும் என்கிறார்.

இது அதிதேச-அதிகரணம்; அதாவது,போன அதிகரணத்தில் சொன்ன அதே நெறி-முறையை இங்கும் கையாள்கிறார். அப்படியானால், தனியாக இந்த அதிகரணம் ஏன் சொல்ல வேண்டும்? என்றால், அதிகப்படியான கேள்வி-பதில் இங்கே இருப்பதால் தனி அதிகரணம் ஆகிறது.

அதிககேள்வி - ஒரு வேதவாக்யமானது மனஸ்ஸினை 'அன்னமயம்' என்கிறது; மனஸ் என்பது ப்ருதிவீ-ஸ்வரூபம் என்று அர்த்தம். அடுத்த வேதவாக்யமானது ப்ராணனை ''ஆபோமய:'' என்கிறது. ப்ராணன் என்பது ஜலஸ்வரூபம் என்று அர்த்தம். ப்ருதிவீக்கு காரணமான பொருள் ஜலம் ஆகும்; ஆகையால் ப்ருதிவீ ஆனது ஜலத்தில் லயம் அடையும்; அந்த முறையில் ப்ருதிவீ ஆன மனஸ் ஆனது, ஜலமாகிற ப்ராணனில் லயம் அடையலாம் (ஒன்றிச் சேரலாம்).

அதிக பதில் - 'அன்னமயம் மன:' என்றால், மனஸ் ப்ருதிவீஸ்வரூபம் என்று அர்த்தம் அல்ல; மனஸ் ஆனது ப்ருதிவீயால் போஷணம் செய்யப்படுவது என்று அர்த்தம். அது போல, ஆபோமய: ப்ராண: என்றால், ப்ராணவாயு ஆனது, ஜலத்தால் போஷணம் செய்யப்படுவது என்று அர்த்தம்.

ஆகையால் காரணத்தில் லயம் அடைதல் என்கிற முறை இங்கு கிடையாது. எனவே, போன அதிகரணத்தில் சொன்ன முறையில், மனஸ் ப்ராணனுடன் சேர்கிறது என்பது மட்டுமே.

# १३६. मनोऽधिकरणम् (४-२-२)

## ४९१. तन्मनः प्राण उत्तरात् (४-२-३)

**तत्** - सर्वेन्द्रियसंयुक्तं **मनः**, **प्राणे सम्पद्यते** - प्राणेन संयुज्यते ; न मनोवृत्तिमात्रम्। कुतः? **उत्तरात्**। "**मनः प्राणे**" (छा.6-8-6)[1] इति वाक्यात्।

अधिकाशङ्का तु - "**अन्नमयं हि सोम्य मनः**" (छा.6-2-4)[2] इति वचनात् मनसोऽन्नप्रकृतित्वमवगम्यते ; अन्नस्य च, "**ता अन्नमसृजन्त**" (छा.6-6-5)[3] इति अम्मयत्वं सिद्धम्। "**आपोमयः प्राणः**" (छा.6-6-5)[4] इति च अप्प्रकृतित्वं प्राणस्यावगम्यते। अतो मनः प्राणे सम्पद्यत इत्यत्र प्राणशब्देन प्राणप्रकृतिभूता अपो निर्दिश्य तासु मनस्सम्पत्तिप्रतिपादने परम्परया स्वकारणे लय इति सम्पत्तिवचनमुपपन्नं भवति इति॥

परिहारस्तु "**अन्नमयं हि सोम्य मनः**" (छा.6-2-4)[5], "**आपोमयः प्राणः**" (छा.6-6-5)[6] इति मनःप्राणयोरन्नेनाद्भिश्चाप्यायनमुच्यते ; न तत्प्रकृतित्वम् ; आहङ्कारिकत्वान्मनसः, आकाशविकारत्वाच्च प्राणस्य। प्राणशब्देनापां लक्षणा च स्यात् इति॥ ३ ॥

इति मनोधिकरणम् ॥ २ ॥

# 136. மநோऽதிகரணம் (4-2-2)

## 491. தந்மந: ப்ராண உத்தராத் (4-2-3)

*தத்* - ஸர்வேந்த்ரியஸம்யுக்தம், மந: ப்ராணே ஸம்பத்யதே - ப்ராணேந ஸம்யுஜ்யதே; ந மநோவ்ருத்திமாத்ரம்। குத:? உத்தராத் - *"மந: ப்ராணே"* (சா.6-8-6)[1] இதி வாக்யாத்।

அதிகாஶங்கா து - *"அந்நமயம் ஹி ஸோம்ய மந:"* (சா.6-2-4)[2] இதி வசநாத் மநஸ: அந்நப்ரக்ருதித்வமவகம்யதே; அந்நஸ்ய ச, *"தா அந்நமஸ்ருஜந்த"* (சா.6-6-5)[3] இதி அம்மயத்வம் ஸித்தம்। *"ஆபோமய: ப்ராண:"* (சா.6-6-5)[4] இதி ச அப்ப்ரக்ருதித்வம் ப்ராணஸ்யாவகம்யதே। அத: மந: ப்ராணே ஸம்பத்யத இத்யத்ர ப்ராணஶப்தேந ப்ராணப்ரக்ருதிபூதா: அபோ நிர்திஶ்ய தாஸு மந: ஸம்பத்திப்ரதிபாதநே பரம்பரயா ஸ்வகாரணே லய இதி ஸம்பத்திவசநம் உபபந்நம் பவதி - இதி॥

பரிஹாரஸ்து - *"அந்நமயம் ஹி ஸோம்ய மந:"* (சா.6-2-4)[5], *"ஆபோமய: ப்ராண:"* (சா.6-6-5)[6] இதி மந:ப்ராணயோ: அந்நேந அத்பிஶ்ச ஆப்யாயநமுச்யதே; ந தத்ப்ரக்ருதித்வம்; ஆஹங்காரிகத்வாந்மநஸ:, ஆகாஶவிகாரத்வாச்ச ப்ராணஸ்ய; ப்ராணஶப்தேந அபாம் லக்ஷணா ச ஸ்யாத் - இதி॥ 3 ॥

இதி மநோதிகரணம் ॥2 ॥

# 136. மனோऽதிகரணம் (4-2-2)

## 499. தத் மன: ப்ராணே உத்தராத் (4-2-3)

*அந்த மனஸ் ஆனது ப்ராணனில் சேர்கிறது; பின்னர் உள்ள வாக்யத்தால்*

**தத் மன: -** எல்லா இந்த்ரியங்களுடன் சேர்ந்த அந்த மனஸ் (ஸ்வரூபம்) ஆனது,

**ப்ராணே (ஸம்பத்யதே) -** ப்ராணவாயுவுடன் சேர்கிறது; மனஸ்ஸின் செயல் மட்டும் சேர்கிறது என்பது கிடையாது.

ஏன்?

**உத்தராத் -** பின்னர் உள்ள **"மன: ப்ராணே"** எனும் வாக்யத்தால் (இது தெரிய வரும்).

அதிகப்படியான கேள்வி - **"அழகனே, மனஸ் அன்னமயம் ஆனது"** என வேதம் சொல்கிறது; அதனால் மனஸ் ஆனது ப்ருதிவியை காரணமாகக் கொண்டது எனத் தெரிகிறது; ப்ருதிவியானது ஜலத்தினை காரணமாகக் கொண்டது; இது, **"அந்த ஜலம் ப்ருதிவியை படைத்தது"** எனும் வேத-வாக்யத்தால் தெரிகிறது; மேலும் ப்ராணவாயுவானது, ஜலத்தினை காரணமாகக் கொண்டது; இது **"ப்ராணன் ஆபோமயம் ஆனது"** என்பதால் தெரிகிறது. ஆகையால், **"மன: ப்ராணே"** எனும் வாக்யத்தில், ப்ராணன் எனும் சொல்லால் ப்ராணவாயுவின் காரணமான ஜலத்தினைக் குறிப்பிடுகிறது; அதில் மனஸ் சேர்வதாக சொல்கிறது; அது மனஸ் ஆனது தனக்கு பரம்பரைக்-காரணமான ப்ராணனில் லயம் அடைவதாகும்; இப்படியாக சேர்வதைச் சொல்லும் வாக்யம் சரியாகப் பொருந்தும் - என்று.

பரிஹாரம் - **"அழகனே, மனஸ் அன்னமயம் ஆனது; ப்ராணன் ஆபோமயம் ஆனது",** என்று மனஸ்ஸும் ப்ராணனும் ப்ருதிவியாலும் ஜலத்தாலும் போஷணம் பெறுவது சொல்லப்படுகிறது. அவற்றைக் காரணமாகக் கொண்டதாக சொல்லப்படவில்லை; ஏனெனில், மனஸ் ஆனது அஹங்கார-தத்த்வத்திலிருந்து உண்டானதாகும்; ப்ராணவாயுவானது, ஆகாசத்தின் மாற்றம் ஆகும்.

மேலும், (பூர்வபக்ஷத்தின்படி 'மனஸ் ப்ராணனில் சேர்கிறது' எனும் வாக்யத்தில்) ப்ராணன் என்ற சொல்லுக்கு ஜலம் எனும் பொருளில் லக்ஷணையும் ஆக நேரிடும். *(முக்கிய-பொருளை விட்டுவிட்டு வேறு பொருளைச் சொல்வதால் லக்ஷணை எனும் தோஷம் ஆகும்; ஆகையால், அப்படி பொருள் சொல்லக்கூடாது).*

**மனோதிகரணம் முற்றிற்று**

✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱

# 137. அத்யக்ஷாதிகரணம் (4-2-3)

## முன் குறிப்பு

அத்யக்ஷன் என்றால் வழிநடத்தும் தலைவன்; ஜீவன்தான் இந்த்ரியங்களை நடத்தும் தலைவன் என்பதால் அத்யக்ஷன் எனப்படுகிறான்.

இறுதிக் காலத்தில் ஶரீரத்திலிருந்து ஜீவன் வெளியேறும் விதத்தை வேதம் சொல்கிறது. அதில் தொடர்ந்து நான்கு குறிப்புகள் உள்ளன -

i. வாக் மனஸ்ஸில் சேர்க்கிறது.

ii. மனஸ் ப்ராணனில் (சேர்கிறது).

iii. ப்ராணன் தேஜஸ்ஸில் (சேர்கிறது).

iv. தேஜஸ் பரதேவதையில் (ப்ரஹ்மத்தில் சேர்கிறது).

இதில் முதல் விஷயம் பற்றிய விசாரம் வாகதிகரணத்தில் பார்த்தோம். இரண்டாவது விஷயம் பற்றிய விசாரம் மனோதிகரணத்தில் பார்த்தோம்.

அடுத்த மூன்றாவது விஷயம் பற்றிய விசாரம் இப்போது இந்த அதிகரணத்தில்.

பூர்வபக்ஷம் - ப்ராணன் தேஜஸ்ஸில் சேர்கிறது என்று வேதம் சொல்கிறது. அதை அப்படியே ஏற்க வேண்டும்.

ஸித்தாந்தம் - ப்ராணன் ஜீவனிடம் சேர்கிறது; வேதம் தரும் சில தகவல்கள் -

i. ப்ராணன் ஜீவனைச் சென்றடைகிறது.

ii. ஜீவன் ஶரீரத்திலிருந்து வெளியேறும்போது ப்ராணன் ஜீவனைத் தொடர்கிறது.

iii. பொதுவாகவே ப்ராணன் எப்போதும் ஜீவனுடன் நிலை பெற்று இருகிறது.

இம்மூன்றையும் வேதம் சொல்கிறது. சென்றடைதல், கூட வெளியேறுதல், கூடவே நிலை பெறுதல் ஆகிய காரணங்களை வைத்துப் பார்த்தால், இறுதிக் காலத்திலும் ப்ராணன் ஜீவனுடன் சேர்கிறது என்றே நாம் அறிந்து கொள்ளலாம்.

கேள்வி - அப்படியானால் ப்ராணன் தேஜஸ்ஸில் சேர்கிறது என்று வேதம் சொன்னது எப்படி சரியாகும்?

பதில் - ப்ராணன் ஜீவனுடன் சேர்கிறது; அப்படி ஜீவனுடன் சேர்ந்த அந்த ப்ராணன் ஆனது, பின்னர் தேஜஸ்ஸில் சேர்கிறது.அதையே வேதம் அப்படி சொல்கிறது.

ஒரு உதாஹரணம் - யமுனையானது கங்கையுடன் சேர்ந்து பின்னர் கடலில் கலக்கிறது; ஆனாலும், யமுனை கடலில் கலக்கிறது என்று சொன்னால் தவறில்லை. அது போல இதுவும்.

# १३७.अध्यक्षाधिकरणम् (४-२-३)

## ४९२.सोऽध्यक्षे तदुपगमादिभ्यः (४-२-४)

यथा **''वाङ्मनसि सम्पद्यते, मनः प्राणे''**(छा.6-8-6)[1] इति वचनानुरोधेन मनःप्राणयोरेव वाङ्मनसयोः सम्पत्तिः, तथा **''प्राणस्तेजसि''**(छा.6-8-6)[2] इति वचनात् तेजस्येव प्राणः सम्पद्यते -

इति प्राप्ते उच्यते - **सोऽध्यक्षे** इति। **सः** प्राणः, **अध्यक्षे** करणाधिपे जीवे सम्पद्यते। कुतः? **तदुपगमादिभ्यः** -

* प्राणस्य जीवोपगमस्तावच्छ्रूयते, **''एवमेवेममात्मानमन्तकाले सर्वे प्राणा अभिसमायन्ति''**(बृ.6-3-38)[3] इति;
* तथा जीवेन सह प्राणस्योत्क्रान्तिः श्रूयते, **''तमुत्क्रामन्तं प्राणोऽनूत्क्रामति''**(बृ.6-4-2)[4] इति।
* प्रतिष्ठा च जीवेन सह श्रूयते, **''कस्मिन् उत्क्रान्ते उत्क्रान्तो भविष्यामि, कस्मिन् वा प्रतिष्ठिते प्रतिष्ठास्यामि''** (प्र.6-3)[5] इति।

---

# 137 . அத்₃யக்ஷாதி₄கரணம் (4-2-3)

## 492. ஸோऽத்₄யக்ஷே தது₃பகமாதி₃ப்₄ய: (4-2-4)

யதா₂ *''வாங்மநஸி ஸம்பத்₃யதே, மந: ப்ராணே''*(சா.6-8-6)[1] இதி வசநாநு-ரோதே₄ந மந:-ப்ராணயோரேவ வாங்மநஸயோ: ஸம்பத்தி:; ததா₂ *''ப்ராணஸ்தேஜஸி''*(சா.6-8-6)[2] இதி வசநாத் தேஜஸ்யேவ ப்ராண: ஸம்பத்₃யதே -

இதி ப்ராப்தே உச்யதே - *ஸோऽத்₄யக்ஷே* - இதி। ஸ: ப்ராண:, அத்₄யக்ஷே கரணாதி₄பே ஜீவே ஸம்பத்₃யதே। குத:? *தது₃பகமாதி₃ப்₄ய:* -

* ப்ராணஸ்ய ஜீவோபகமஸ்தாவச்ச்₂ரூயதே, *''ஏவமேவேமமாத்மாநமந்தகாலே ஸர்வே ப்ராணா அபி₄ஸமாயந்தி''*(சா.6-3-38)[3] இதி;
* ததா₂ ஜீவேந ஸஹ ப்ராணஸ்ய உத்க்ராந்தி: ஶ்ரூயதே, *''தமுத்க்ராமந்தம் ப்ராணோऽநூத்க்ராமதி''* (சா.6-4-2)[4] இதி।
* ப்ரதிஷ்டா₂ ச ஜீவேந ஸஹ ஶ்ரூயதே, *''கஸ்மிந் உத்க்ராந்தே உத்க்ராந்தோ ப₄விஷ்யாமி, கஸ்மிந் வா ப்ரதிஷ்டி₂தே ப்ரதிஷ்டா₂ஸ்யாமி''* (ப்ர.6-3)[5] இதி।

# 137. அத்யக்ஷாதிகரணம் (4-2-3)

## 492. ஸ: அத்யக்ஷே தது பகமாதிப்ய: (4-2-4)

*அந்த ப்ராணன் ஆனது, தலைவனான ஜீவனிடம் சேர்கிறது; அதை சென்றடைதல் முதலியவற்றால்.*

**ஸங்கதி - பூர்வபக்ஷம்**

[1]**"வாக் மனஸ்ஸில் சேர்கிறது; மனஸ் ப்ராணனில் (சேர்கிறது)"** என்ற வாக்யத்தைப் பின்பற்றி, மனஸ், ப்ராணன் என்றிவற்றில் வாக், மனஸ் என்றிவை சேர்வதானது எப்படி ஆகுமோ, அப்படி [2]**"ப்ராணன் தேஜஸ்ஸில்"** என்று வேத வாக்யம் சொல்வதால், ப்ராணன் ஆனது தேஜஸ்ஸில்தான் சேர்கிறது.

*(வாக் இந்த்ரியமானது மனஸ்ஸில் சேர்கிறது; வாக்குடன் சேர்ந்த அந்த மனஸ் ஆனது, ப்ராணவாயுவில் சேர்கிறது என்று முன் அதிகரணங்களில் சொல்லப்பட்டது; அது எப்படி ஆகுமோ, அப்படியே ப்ராணன் தேஜஸ்ஸில் சேர்கிறது என்று பூர்வபக்ஷம்; ஏனெனில் "ப்ராணன் தேஜஸ்ஸில் சேர்கிறது" என வேதம் சொல்கிறது. இங்கு தேஜஸ் என்பது பஞ்சபூதங்களின் ஸூக்ஷ்ம-நிலைகளைக் குறிக்கும்)*

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **"ஸ: அத்யக்ஷே"** என்று.

**ஸ:** - அந்த ப்ராணன் ஆனது,

**அத்யக்ஷே** - இந்த்ரியங்களின் தலைவனான ஜீவனிடம் சேர்கிறது.

ஏன்?

**தது பகமாதிப்ய:** - (அதைச் சென்றடைதல் முதலியவற்றால்)

- ப்ராணன் ஜீவனைச் சென்றடைதல் வேதத்தில் சொல்லப்படுகிறது - [3]**"இறுதிக் காலத்தில், இப்படி இந்த ஆத்மாவை எல்லா ப்ராணங்களும் சென்றடைகின்றன"** என்று.
- அப்படியே, ஜீவனுடன் கூட ப்ராணன் வெளியேறுவதும் வேதத்தில் சொல்லப்படுகிறது - [4]**"வெளியேறும் அந்த ஜீவனைப் பின்பற்றி ப்ராணன் வெளியேறுகிறது"** என்று.
- மேலும் ஜீவனுடன் கூடவே ப்ராணன் நிலைபெறுவதும் வேதத்தில் சொல்லப்படுகிறது - [5]**"யார் (ஜீவன்) வெளியேறினால் நான் (ப்ராணன்) வெளியேறியவனாக ஆவேனோ, யார் நிலைபெற்றால், நானும் நிலை பெறுவேனோ"** என்று.

एवं जीवेन संयुज्य तेन सह तेजस्सम्पत्तिरिह, **"प्राणस्तेजसि"** (छा.6-8-6)[1] इत्युच्यते; यथा यमुनायाः गङ्गया संयुज्य सागरगमनेऽपि, 'यमुना सागरं गच्छति' इति वचो न विरुध्यते तद्वत्॥ ४ ॥



इति अध्यक्षाधिकरणम् ॥ ३ ॥

---

ஏவம் ஜீவேந ஸம்யுஜ்ய தேந ஸஹ தேஜஸ்ஸம்பத்தி: இஹ, *"ப்ராணஸ்தேஜஸி"* (சா.6-8-6)[1] இத்யுச்யதே; யதா யமுநாயா: கங்கயா ஸம்யுஜ்ய ஸாகரகமநேऽபி, 'யமுநா ஸாகரம் கச்சதி' இதி வசோ ந விருத்யதே தத்வத் ॥4॥



இதி அத்யக்ஷாதிகரணம் ॥ 3 ॥



இப்படி ஜீவன் ஆனது ப்ராணனுடன் சேர்ந்து (ஸம்யோக-தொடர்பு பெற்று), அதனுடன் கூட தேஜஸ்ஸினை அடைகிறது; அதுதான், [1]**''ப்ராணன் தேஜஸ்ஸில் சேர்கிறது''** என வேதத்தில் சொல்லப்படுகிறது.

யமுனையானது கங்கையுடன் சேர்ந்து, கடலை அடைந்தாலும், 'யமுனை கடலைச் சென்றடைகிறது' என்று சொல்வது முரண்படாது. அது எப்படியோ, அது போல, இதுவும் ஆகும்.

**அத்யக்ஷாதிகரணம் முற்றிற்று**



# 138. பூதாதிகரணம் (4-2-4)

## முன் குறிப்பு

இங்கு பூதம் என்கிற சொல்லுக்கு பஞ்சபூதங்கள் என்று அர்த்தம்.

மரணகாலத்தில் ஜீவன் ஶரீரத்திலிருந்து வெளியேறும் விதத்தை விசாரம் செய்து கொண்டு வருகிறார். அதில், இந்த்ரியங்களுடன் கூடிய மனஸ்ஸுடன் சேர்ந்த ப்ராணன்ஆனது ஜீவனுடன் சேர்கிறது என்று போன அதிகரணத்தில் சொன்னார்.

ஜீவனுடன் சேர்ந்த அந்த ப்ராணவாயு ஆனது, தேஜஸ்ஸில் சேர்கிறது; ஏனெனில் அந்த ப்ராணன் தேஜஸ்ஸில் சேர்கிறது என வேதவாக்யம் சொல்கிறது.

இங்கு ஸந்தேஹம் - தேஜஸ்ஸில் மட்டும் சேர்கிறதா? அல்லது பஞ்சபூதங்களில் சேர்கிறதா? என்று.

பூர்வபக்ஷம் - ''ப்ராணன் தேஜஸ்ஸில் சேர்கிறது'' என்று வேதம் சொல்கிறது. அதன் படி தேஜஸ்ஸில் மட்டும் சேர்கிறது என்று சொல்வதே பொருந்தும்.

ஸித்தாந்தம் - பஞ்சபூதங்கள் ஐந்தும் கலந்திருக்கின்றன. அந்த ஐந்திலும் ப்ராணன் சேர்கிறது. ஏனெனில் ஸஞ்சாரம் செய்யும் ஜீவன் ஆனவன் பஞ்சபூதமயன் என்று வேதம் விளக்குகிறது. ஐந்து பூதங்களுடனும் சேர்ந்தவனாக இருப்பவன் என்று அர்த்தம்.

கேள்வி - இங்கு இந்த இடத்தில் மனஸ் தேஜஸ்ஸில் சேர்கிறது என்று மட்டும்தானே வேதம் சொல்லியுள்ளது.

பதில் - பஞ்சபூதங்களில் எதுவுமே தனித்தனியாக இருக்கும்போது பயனற்றது ஆகும்; ஆகையால்தான், முதலில் பெருமான் ஸ்ருஷ்டி செய்யம்போது, பஞ்சபூதங்கள் ஐந்தையும் கலந்து பஞ்சீகரணம் செய்கிறார்.

ஆகையால், எப்போதும் பூதங்கள் ஐந்தும் கலந்திருக்கும்; அதில் ப்ராணன் சேர்கிறது என்பதே பொருந்தும்.

பஞ்சபூதங்களில் தேஜஸ் என்பதும் கலந்திருப்பதால், அதை வைத்து ஒரு குறிப்பாக வேதம் தேஜஸ்ஸினை மட்டும் சொல்கிறது. அந்த குறிப்பை அடிப்படையாகக் கொண்டு பஞ்ச பூதங்களையும் சொன்னதாக நாம் வைத்துக் கொள்ள வேண்டும்.

# १३८.भूताधिकरणम् (४-२-४)

## ४९३.भूतेषु तच्छ्रुतेः (४-२-५)

‘‘**प्राणस्तेजसि**’’ (छा.6-8-6)[1] इति जीवसंयुक्तस्य प्राणस्य तेजसि सम्पत्तिरुक्ता। सा सम्पत्तिः किं तेजोमात्रे, उत संहतेषु सर्वेषु भूतेष्विति विशये -

तेजोमात्रश्रवणात् तेजसीति प्राप्ते उच्यते -

**भूतेषु** इति। भूतेषु सम्पद्यते। कुतः? **तच्छ्रुतेः** - ‘‘**पृथिवीमय आपोमयः तेजोमयः**’’ (बृ.6-4-5)[2] इति जीवस्य सञ्चरतः सर्वभूतमयत्वश्रुतेः॥ ५ ॥

ननु तेजःप्रभृतिष्वेकैकस्मिन् क्रमेण सम्पत्तावपि, पृथिवीमयः इत्यादिका श्रुतिरुपपद्यते; अत आह -

## ४९४.नैकस्मिन् दर्शयतो हि (४-२-६)

---

# 138. பூதாதிகரணம் (4-2-4)

## 593. பூதேஷு தச்ச்ருதே: (4-2-5)

*‘‘ப்ராணஸ்தேஜஸி’’* (சா.6-8-6)[1] இதி ஜீவஸம்யுக்தஸ்ய ப்ராணஸ்ய தேஜஸி ஸம்பத்தி: உக்தா। ஸா ஸம்பத்தி: கிம் தேஜோமாத்ரே, உத ஸம்ஹதேஷு ஸர்வேஷு பூதேஷ்விதி விஶயே -

தேஜோமாத்ரஶ்ரவணாத் தேஜஸீதி ப்ராப்தே உச்யதே -

**பூ**தேஷு - இதி। **பூ**தேஷு ஸம்பத்யதே। குத:? *தச்ச்ருதே: - ‘‘ப்ருதிவீமய: ஆபோமய: தேஜோமய:....’’* (ப்ரு.6-4-5)[2] இதி ஜீவஸ்ய ஸஞ்சரத: ஸர்வபூதமயத்வஶ்ருதே:॥5 ॥

நநு தேஜ:ப்ரப்ருதிஷு ஏகைகஸ்மிந் க்ரமேண ஸம்பத்தாவபி, ப்ருதிவீமய: இத்யாதிகா ஶ்ருதிருபபத்யதே; அத ஆஹ -

## 494. நைகஸ்மிந் தர்ஶயதோ ஹி (4-2-6)

# 138. பூதாதிகரணம் (4-2-4)

## 493. பூதேஷு தச்ச்ருதே: (4-2-5)

*பூதங்களில் [ப்ராணன் சேர்கிறது]; அதை [எல்லா பூதங்களும் ஆவதை] வேதம் சொல்வதால்.*

**ஸங்கதி & ஸம்சயம்**

**''ப்ராணன் தேஜஸ்ஸில் (சேர்கிறது)''** என்று ஜீவனுடன் சேர்ந்த ப்ராணன் தேஜஸ்ஸில் சேர்வது சொல்லப்பட்டது; அந்த சேர்தல் ஆனது தேஜஸ்ஸில் மட்டுமா? அல்லது சேர்ந்திருக்கும் எல்லா பூதங்களிலுமா? என்று சந்தேஹம்.

**பூர்வபக்ஷம்**

தேஜஸ் மட்டும்தான் வேதவாக்யத்தில் சொல்லப்படுகிறது; அதனால் தேஜஸ்ஸில் மட்டுமே சேர்கிறது.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **பூதேஷு** என்று.

**பூதேஷு** - பூதங்களில் (சேர்கிறது)

ஏன்?

**தச்ச்ருதே:** - (அதை வேதம் சொல்வதால்)

ஸஞ்சரிக்கும் ஜீவன் ஆனவன், எல்லா பூதங்களுமாக ஆவதை, **''ப்ருதிவீமயன், ஆபோமயன், தேஜோமயன்''** என்று வேதம் சொல்வதால்.

✍(*ப்ருதிவீமயன் என்றால் ப்ருதிவியை அதிகமாகக் கொண்டவன் என்று பொருள்; மிகச் சிறிய அணு அளவில் ஆன ஜீவன் ஶரீரத்தில் இருக்கும்போது, ஶரீரத்தின் பஞ்ச-பூத-பாகங்களே அதிகமாக இருப்பதால் அதை வைத்து ப்ருதிவீமயன், ஜலமயன் என்றெல்லாம் வேதம் சொல்கிறது*). ✍



**கேள்வி** - தேஜஸ் முதலியவற்றில் ஒவ்வொன்றில் ஜீவன் வரிசையாக சேர்கிறான் என்று வைத்துக்கொண்டாலும், **''ப்ருதிவீமயன்''** முதலிய வேத-வாக்யம் பொருந்தும். ✍(*அதனால், முதலில் தேஜஸ்ஸில்தான் ப்ராணன் சேர்கிறது; பின்னர் வரிசையாக பஞ்சபூதங்கள் ஐந்திலும் சேர்கிறது என்று சொல்லலாம்; ஏனெனில், தேஜஸ்ஸில் சேர்வதாகத்தானே வேதம் சொல்கிறது*).✍

அதற்கு பதில் சொல்கிறார் -

## 494. ந ஏகஸ்மின் தர்ஶயத: ஹி (4-2-6)

*ஒன்றில் சேர்வது என்பது கிடையாது; ஏனெனில் வேதமும் ஸ்ம்ருதியும் காண்பிக்கின்றன.*

**नैकस्मिन्**; एकैकस्य कार्याक्षमत्वात्। दर्शयतो ह्यक्षमत्वं श्रुतिस्मृती, **''अनेन जीवेनाऽऽत्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि, तासां त्रिवृतं त्रिवृतमेकैकां करवाणि''** (छा.6-3-2,3)[1] इति, नामरूपव्याकरणयोग्यत्वाय त्रिवृत्करणमुपदिश्यते -

**''नानावीर्याः पृथग्भूताः ततस्ते संहतिं विना।**
**नाशक्नुवन् प्रजाः स्रष्टुमसमागम्य कृत्स्नशः॥**
**समेत्यान्योन्यसंयोगं परस्परसमाश्रयाः।**
**महदाद्याः विशेषान्ता ह्यण्डमुत्पादयन्ति ते॥''** (वि.पु.1-2-52,53)[2] इति।

अतः **''प्राणस्तेजसि''** (छा.6-8-6)[3] इति तेजश्शब्देन भूतान्तरसंसृष्टमेव तेजोऽभिधीयते। अतो भूतेष्वेव सम्पत्तिः॥ ६ ॥

इति भूताधिकरणम् ॥ ४ ॥

---

நைகஸ்மிந்; ஏகைகஸ்ய கார்யாக்ஷமத்வாத் தர்ஶயதோ ஹி அக்ஷமத்வம் ஶ்ருதிஸ்ம்ருதீ, *''அநேந ஜீவேநாऽऽத்மநாऽநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி'', ''தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருதமேகைகாம் கரவாணி''* (சா.6-3-2,3)[1] இதி - நாமரூபவ்யாகரணயோக்யத்வாய த்ரிவ்ருத்கரணமுபதிஶ்யதே -

*''நாநாவீர்யாஃ ப்ருதக்பூதாஃ ததஸ்தே ஸம்ஹதிம் விநா।*
*நாஶக்நுவந் ப்ரஜாஃ ஸ்ரஷ்டுமஸமாகம்ய க்ருத்ஸ்நஶஃ॥*
*ஸமேத்யாந்யோந்யஸம்யோகம் பரஸ்பரஸமாஶ்ரயாஃ।*
*மஹதாத்யாஃ விஶேஷாந்தா ஹ்யண்டமுத்பாதயந்தி தே॥''* (வி.பு.1-2-52,53)[2] இதி।

அத: *''ப்ராணஸ்தேஜஸி''* (சா.6-8-6)[3] இதி தேஜ: ஶப்தேந பூதாந்தரஸம்ஸ்ருஷ்டமேவ தேஜோऽபிதீயதே। அத: பூதேஷ்வேவ ஸம்பத்தி:॥ 6 ॥

இதி பூதாதிகரணம் ॥4 ॥



**ந ஏகஸ்மின் -** (தேஜஸ் எனும்) ஒன்றில் மட்டும் சேர்கிறது என்பது கிடையாது; ஏனெனில், ஒவ்வொன்றும் தனியாக செயலைச் செய்ய வல்லதல்ல.

**தர்ஶயத: ஹி -** (ஏனெனில், வேதமும் ஸ்ம்ருதியும் காண்பிக்கின்றன); ஏனெனில், ஒவ்வொன்றும் தனியாக செயலைச் செய்ய வல்லதல்ல என்பதை வேதமும் ஸ்ம்ருதியும் காண்பிக்கின்றன.

(வேதத்தில்) [1]**''இந்த ஜீவனாகிற (ஜீவனுக்கு அந்தர்யாமியாகிற) ஆத்மாவால் உட்புகுந்து நாம-ரூபங்களுடன் கூடியதாக ஆக்குவேன்; (அதற்காக) அவற்றில் ஒவ்வொன்றையும் மூன்றுடன் கலந்ததாக ஆக்குவேன்''** என்று, நாம-ரூபங்களுடன் கூடியதாக ஆக்க தகுதி பெறுவதற்காக ஒவ்வொன்றையும் மூன்று-கலந்ததாக ஆக்குவது உபதேஶம் செய்யப்படுகிறது.

(ஸ்ம்ருதியிலும்), [2]**''பல திறன் கொண்ட அவை தனித்தனியாக இருந்தன; அதனால், அவை சேராமல் முழுவதுமாக கலக்காமல் பொருள்களைப் படைக்க முடியவில்லை; மஹத்-தத்த்வம் முதல் பஞ்ச-பூத-விசேஷங்கள் வரையான அவை ஒன்றுக்கொன்று தொடர்பு பெற்று, ஒன்றுக்கொன்று கலந்து அண்டத்தை உண்டாக்குகின்றன''** என்று உள்ளது.

அதனால், [3]**''ப்ராணன் தேஜஸ்ஸில் (சேர்கிறது)''** என்று, **'தேஜஸ்'** எனும் சொல்லால் பிற பூதங்களுடன் சேர்ந்த தேஜஸ் சொல்லப்படுகிறது.

**ப்ரயோஜனம் (பலன்)** -

ஆகவே, (பஞ்ச)பூதங்களில்தான் ப்ராணன் சேர்வதாகும்.

**பூதாதிகரணம் முற்றிற்று.**



# 139. ஆஸ்ருத்த்யுபக்ரமாதிகரணம் (4-2-5)

## முன் குறிப்பு

ஜீவன் மரணமாகும் காலத்தில் ஶரீரத்திலிருந்து வெளியேறும் முறையை சொல்லியா-யிற்று. இந்த வெளியேற்றம் ஆனது, எல்லாருக்கும் பொதுவாக உண்டா? அல்லது ப்ரஹ்மத்தை உபாஸனம் (த்யானம்) செய்யாதவனுக்கு மட்டுமா? என்று விசாரம்.

இது எல்லாருக்கும் பொதுவானது; உபாஸநம் செய்பவனுக்கும் உண்டு..

''ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவன் ஸுஷும்நா எனும் நாடியைப் பற்றிக்கொண்டு, நடுமண்டை வழியாக வெளியேறி, மோக்ஷம் பெறுகிறான்'' என்று வேதம் சொல்கிறது. எனவே, ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவனும் ஶரீரத்திலிருந்து வெளியேறுவான் என்பது தெரிகிறது.

இதில் எந்த நாடி வழியாக வெளியேறுகிறான் என்பதில் வித்யாசம் உண்டு; அதற்கு முன் வரை, வித்யாசம் இல்லை. அதாவது, முன் சொன்னபடி பஞ்சபூதங்களில் சேர்வது வரை எல்லா மனிதர்களுக்கும் பொதுவானது.

பூர்வபக்ஷம் - ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்தவனுக்கு இந்த வெளியேற்றம் என்பது கிடையாது. அவன் வெளியேறிப் போக வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில், அவன் இங்கேயே அம்ருதன் ஆகிறான் என்றும் இங்கேயே ப்ரஹ்மத்தை அனுபவிப்பான் என்றும் வேதம் சொல்கிறது. எனவே, பலன் இங்கேயே கிடைத்து விடுவதால், அவன் எங்கும் வெளியேறிப் போக வேண்டியதில்லை. எனவே, இதுவரை சொன்ன வெளியேறும் முறையானது ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்யாத சாதாரணமான மனிதனுக்கு மட்டுமே.

ஸித்தாந்தம் - உபாஸநம் செய்பவனுக்கு இங்கேயே மோக்ஷம் கிடைக்காது; ஆனால், மோக்ஷம் போன்ற ஒரு நிலை வாய்க்கும்; அதாவது, இங்கேயே அவனுக்கு புண்யபாபங்-கள் கழியும்; மேலும் ப்ரஹ்மம் பற்றிய த்யானம் என்பதே ஒரு ப்ரஹ்ம-அனுபவம் ஆகும். அதனால் மோக்ஷத்தின் பலனான ப்ரஹ்ம-அனுபவமும் ஒருவிதத்தில் சற்றே இங்கே பெறலாம். அதைத்தான் வேதம் சொல்கிறது.

ஆனால், இதெல்லாம் போதாது; முழுமையான மோக்ஷமும் ப்ரஹ்ம-அனுபவமும்தான் பலன் ஆகும். அது ஶரீரத்திலிருந்து வெளியேறி, அர்ச்சிராதி வழியாக சென்று பரமபதத்தை அடைந்தாலே வரும். எனவே, ப்ரஹ்மத்தை உபாஸனம் செய்பவனும் பரமபதம் செல்வ-தற்காக இறுதியில் ஶரீரத்திலிருந்து வெளியேறுகிறான்.

(அர்த்தக் குறிப்பு -

வித்வான் - ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்பவன்;

உத்க்ராந்தி - ஶரீரத்தின் உள்ளிலிருந்து ஜீவன் வெளியேறுதல்;

ஆ-ஸ்ருதி-உபக்ரமாத் - கதி ஆரம்பிக்கும் வரை.

கதி - ஶரீரத்திலிருந்து வெளியேறிச் செல்லுதல்.).

# १३९.आसृत्युपक्रमाधिकरणम् (४-२-५)

## ४९५.समाना चाऽऽसृत्युपक्रमादमृतत्वं चानुपोष्य (४-२-७)

इयमुत्क्रान्तिः किं विद्वदविदुषोः समाना, उताविदुष एवेति चिन्तायाम् -

अविदुष एवेति प्राप्तम्। कुतः? विदुषोऽत्रैवामृतत्ववचनादुत्क्रान्त्यभावात्। विदुषो ह्यत्रैवामृतत्वं श्राव्यते, **"यदा सर्वे प्रमुच्यन्ते कामा येऽस्य हृदि स्थिताः। अथ मर्त्योऽमृतो भवत्यत्र ब्रह्म समश्नुते"**(क.6-14)[1] इति।

एवं प्राप्तेऽभिधीयते - **समाना चाऽऽसृत्युपक्रमात्।** विदुषोऽपि आसृत्युपक्रमादुत्क्रान्तिः समाना। **आसृत्युपक्रमात्** आगत्युपक्रमात्, नाडीप्रवेशात्प्रागित्यर्थः।

विदुषोऽपि हि नाडीविशेषेणोत्क्रम्य गतिः श्रूयते, **"शतं चैका च हृदयस्य नाड्यस्तासां मूर्धानमभिनिस्सृतैका। तयोर्ध्वमायन् अमृतत्वमेति विष्वङ्ङन्या उत्क्रमणे भवन्ति"**(कठ.6.16)[2] इति।

---

# 139.ஆஸ்ருத்யுபக்ரமாதிகரணம் (4-2-5)

## 495. ஸமாநா சாऽऽஸ்ருத்யுபக்ரமாதம்ருதத்வம் சாநுபோஷ்ய (4-2-7)

இயம் உத்க்ராந்தி: கிம் வித்வதவிதுஷோ: ஸமாநா, உத அவிதுஷ ஏவேதி சிந்தாயாம் -

அவிதுஷ ஏவேதி ப்ராப்தம். குத:? விதுஷ: அத்ரைவாம்ருதத்வவசநாத் உத்க்ராந்த்யபாவாத். விதுஷோ ஹி அத்ரரைவாம்ருதத்வம் ஶ்ராவ்யதே, *"யதா ஸர்வே ப்ரமுச்யந்தே காமா யேऽஸ்ய ஹ்ருதி ஸ்திதா:। அத மர்த்யோऽம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம ஸமஶ்நுதே"* (க.6-14)[1] இதி।

ஏவம் ப்ராப்தேऽபிதீயதே - *ஸமாநா சாऽऽஸ்ருத்யுபக்ரமாத்* - இதி। விதுஷோऽபி ஆஸ்ருத்யுபக்ரமாத் உத்க்ராந்தி: ஸமாநா। ஆ ஸ்ருத்யுபக்ரமாத் - ஆ கத்யுபக்ரமாத்। நாடீப்ரவேஶாத் ப்ராக் இத்யர்த:।

விதுஷோऽபி ஹி நாடீவிஶேஷேணோத்க்ரம்ய கதி: ஶ்ரூயதே, *"ஶதம் சைகா ச ஹ்ருதயஸ்ய நாட்யஸ்தாஸாம் மூர்தாநமபிநிஸ்ஸ்ருதைகா। தயோர்த்வமாயந் அம்ருதத்வமேதி விஷ்வங்ஙந்யா உத்க்ரமணே பவந்தி"* (க.6-16)[2] இதி।

# 139. ஆஸ்ருத்த்யுபக்ரமாதிகரணம் (4-2-5)

## 495. ஸமாநா ச ஆஸ்ருத்த்யுபக்ரமாத் அம்ருதத்வம் ச அநுபோஷ்ய (4-2-7)

*வித்வானுக்கும் கதி-ஆரம்பம் வரை இந்த உத்க்ராந்தி சமானமானது; ஶரீரத்தை பொசுக்காமலேயே வரும் அம்ருத-தன்மை [சொல்லப்படுகிறது]*

**ஸம்சயம் (ஸந்தேஹம்)**

இந்த உத்க்ராந்தியானது வித்வானுக்கும் வித்வான் ஆகாத மற்றவனுக்கும் சமானம் ஆனதா? அல்லது வித்வான் ஆகாதவனுக்கு மட்டுமா? என்று விசாரம் செய்யும்போது, *(ப்ரஹ்ம-உபாஸநம் செய்யும் வித்வானும் கூட இறுதியில் ஶரீரத்தை விட்டு வெளியேறுவானா? அல்லது உபாஸநம் செய்யாதவர் மட்டும் வெளியேறுவாரா?)*

**பூர்வபக்ஷம்**

வித்வான் ஆகாதவனுக்கு மட்டுமே என்று பூர்வபக்ஷம் நேரிடுகிறது. ஏன்? ப்ரஹ்ம-உபாஸநம் செய்யும் வித்வான் ஆனவன் இங்கேயே அம்ருதன் ஆவதாக சொல்லியுள்ளது; அதனால், அவனுக்கு உத்க்ராந்தி கிடையாது.

வித்வான் ஆனவன் இங்கேயே அம்ருதன் ஆவது வேதத்தில் சொல்லப்படுகிறது - [1]**''எப்போது இவனுக்கு மனதில் இருக்கும் காமங்கள் எல்லாம் விடுபடுகின்றனவோ, உடன் மனிதன் அம்ருதன் ஆகிறான்; இங்கேயே ப்ரஹ்மத்தை அனுபவிக்கிறான்''**

✍ *(அம்ருதத்தன்மை என்பது மோக்ஷம்; அது இங்கேயே வந்துவிடும் என்பதால், ஶரீரத்தை விட்டு மேலே வெளியேறிப் போக வேண்டியதில்லை என்று பூர்வபக்ஷம்).* ✍

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **'ஸமாநா ச ஆஸ்ருத்த்யுபக்ரமாத்'** என்று.

**ஆஸ்ருத்த்யுபக்ரமாத் -** கதி ஆரம்பிக்கும்வரை; நாடியில் நுழைவதற்கு முன்னம் வரை என்று பொருள். (அதுவரை வித்வானுக்கும் மற்றவனுக்கும் உத்க்ராந்தி ஸமானம் என்று பொருள்)

வித்வானும் கூட ஒரு விஶேஷமான நாடி வழியாக மேலே கிளம்பி வெளியேறிச் செல்வது வேதத்தில் சொல்லப்படுகிறது - [2]**''ஹ்ருதயத்தில் முக்கியமான நாடிகள் நூற்றியொன்று உள்ளன; அவற்றில் ஒன்று தலையை நோக்கிப் போகிறது; அதன் மூலம் மேல் செல்பவனாய் மோக்ஷதன்மையைப் பெறுகிறான்; மீதி நாடிகள் சுற்றிலும் ஸம்ஸாரவழியில் செல்வதற்காக ஆகின்றன''** என்று.

एवं नाडीविशेषेण गतिश्रवणात् विदुषोऽप्युत्क्रान्तिरवर्जनीया। सा च नाडीप्रवेशात्प्राक् विशेषाश्रवणात् समाना।

तत्प्रवेशदशायां च विशेषः श्रूयते, **''तेन प्रद्योतेनैष आत्मा निष्क्रामति चक्षुषो वा मूर्ध्नो वा अन्येभ्यो वा शरीरदेशेभ्यः''**(बृ.6-4-2)[1] इति। **''शतं चैका च हृदयस्य''** (क.6-16)[2] इत्यनया श्रुत्या ऐकार्थ्यात् मूर्ध्नो निष्क्रमणं विद्वद्विषयम्; इतरत् अविद्वद्विषयम्।

यदुक्तम् - विदुषोऽत्रैवामृतत्वं श्राव्यते इति, तत्रोच्यते **अमृतत्वं चानुपोष्य** इति। चशब्दोऽवधारणे। **अनुपोष्य** - शरीरेन्द्रियादिसम्बन्धमदग्ध्वैव, **यदमृतत्वम्** - उत्तरपूर्वाघयोरश्लेषविनाशरूपं प्राप्यते, तदुच्यते **''यदा सर्वे प्रमुच्यन्ते''**(क.6-14)[3] इत्यादिकया श्रुत्येत्यर्थः। **''अत्र ब्रह्म समश्नुते''**(क.6-14)[4] इति च उपासनवेलायां यो ब्रह्मानुभवः; तद्विषयमित्यभिप्रायः॥७॥

## ४९६.तदापीतेः संसारव्यपदेशात् (४-२-८)

अवश्यं च **तत्** - अमृतत्वम् अदग्धदेहसम्बन्धस्यैवेति विज्ञेयम्। कुतः? **आपीतेः**

---

ஏவம் நாடீவிஶேஷேண கதிஶ்ரவணாத் விதுஷோऽபி உத்க்ராந்திரவர்ஜநீயா। ஸா ச நாடீப்ரவேஶாத்ப்ராக் விஶேஷாஶ்ரவணாத் ஸமாநா।

தத்ப்ரவேஶதஶாயாம் ச விஶேஷ: ஶ்ரூயதே, *''தேந ப்ரத்யோதேநைஷ ஆத்மா நிஷ்க்ராமதி சக்ஷுஷோ வா மூர்த்நோ வா அந்யேப்யோ வா ஶரீரதேஶேப்ய:''* (ப்ரு.4-4-2)[1] இதி। *''ஶதம் சைகா ச ஹ்ருதயஸ்ய''*(க.6-16)[2] இத்யநயா ஶ்ருத்யா ஐகார்த்யாத் மூர்த்நோ நிஷ்க்ரமணம் வித்வத்விஷயம்; இதரத் அவித்வத்விஷயம்।

யதுக்தம் - விதுஷ: அத்ரைவாம்ருதத்வம் ஶ்ராவ்யதே இதி - தத்ரோச்யதே - *அம்ருதத்வம் சாநுபோஷ்ய* இதி। *ச* ஶப்தோऽவதாரணே। *அநுபோஷ்ய*- ஶரீரேந்த்ரியாதிஸம்பந்தமதக்த்வைவ, யத் அம்ருதத்வம் - உத்தரபூர்வாகயோரஶ்லேஷவிநாஶரூபம் ப்ராப்யதே, ததுச்யதே *''யதா ஸர்வே ப்ரமுச்யந்தே''* (க.6-14)[3] இத்யாதிகயா ஶ்ருத்யா இத்யர்த:। *''அத்ர ப்ரஹ்ம ஸமஶ்நுதே''* (க.6-14)[4] இதி ச உபாஸநவேலாயாம் யோ ப்ரஹ்மாநுபவ:; தத்விஷயம் இத்யபிப்ராய:।।7।।

## 496. ததாபீதே: ஸம்ஸாரவ்யபதேஶாத் (4-2-8)

அவஶ்யம் ச *தத்* - அம்ருதத்வம் அதக்ததேஹஸம்பந்தஸ்யைவேதி

இப்படி வித்வான் ஆனவன், ஒரு விஶேஷ-நாடி வழியாக போவது வேதத்தில் சொல்லியுள்ளபடியால், வித்வானுக்கும் உத்க்ராந்தி தவிர்க்க முடியாதது; நாடியில் நுழைவதற்கு முன் வித்யாசம் எதுவும் சொல்லாதபடியால், அதுவரையான அந்த உத்க்ராந்தி ஆனது, எல்லாருக்கும் ஸமானமானது;

அந்த நாடியில் நுழையும்போது வித்யாசம் வேதத்தில் சொல்லப்படுகிறது - [1]**''அந்த வெளிச்சத்தால், இந்த ஜீவன் கண்ணிலிருந்தோ, தலையிலிருந்தோ, வேறு உடல்-பாகங்களிலிருந்தோ (ஏதாஒரு வழியாக) வெளியேறுகிறான்''** என்று.

[2]**''ஹ்ருதயத்தின் முக்கிய நாடிகள் நூற்றியொன்று''** எனும் வேத-வாக்யத்துடன் இது ஒரே பொருளில் ஆக வேண்டும்; அதனால், தலை வழியாக வெளியேறுதல் ஆனது, வித்வானைப் பற்றியது; பிற வழியானது வித்வான் ஆகாதவனைப் பற்றியது ஆகும்..

**கேள்வி -** வித்வான் ஆனவன் இங்கேயே அம்ருதன் ஆகிறான் என்று வேதத்தில் சொல்லப்பட்டது.

**பதில் -** இப்படி பூர்வபக்ஷத்தில் சொன்னது எதுவோ, அதற்கு பதில் சொல்லப்படுகிறது - **''அம்ருதத்வம் ச அநுபோஷ்ய''** என்று.

**'ச'** என்ற சொல், அப்படித்தான் என்ற உறுதியைக் குறிக்கிறது.

**அநுபோஷ்ய -** ஶரீரம் இந்த்ரியம் முதலியவற்றின் தொடர்பை எரித்துப் பொசுக்காமலேயே,

**அம்ருதத்வம் -** பின்-பாபங்கள் ஒட்டாமையும் முன்-பாபங்கள் அழிவதும் ஆகிற அம்ருதத்தன்மையானது (உபாஸநம் ஆகிற உபாயத்தால்) அடைவிக்கப் படுகிறது; அதுவே, [3]**''எப்போது காமங்கள் விடுபடுமோ (உடன் அம்ருதன் ஆகிறான்)''** முதலிய வேதவசனத்தால் சொல்லப்படுகிறது என்று பொருள்.

[4]**''இங்கேயே ப்ரஹ்மத்தை அனுபவிக்கிறான்''** என்பது, உபாஸநம் செய்யும் சமயத்தில் எந்த ப்ரஹ்ம-அனுபவம் உள்ளதோ, அதைப் பற்றியது என்று கருத்து.



## 496. தத் ஆ அபீதே: ஸம்ஸாரவ்யபதேசாத் (4-2-8)

*ப்ரஹ்மத்தை அடைவது வரை ஸம்ஸாரம் இருப்பதாக சொல்வதால், முன் சொன்ன அதுவே அம்ருத-தன்மை ஆகும்.*

**தத் -** அந்த அம்ருத-தன்மையானது, ஶரீர-தொடர்பு பொசுக்கப் படாதவனுக்கே என்பது கட்டாயம் அறியப் பட வேண்டும்..

**संसारव्यपदेशात्। अपीतिः** - अप्ययः, ब्रह्मप्राप्तिः। सा चार्चिरादिना मार्गेण देशविशेषं गत्वेति वक्ष्यते। आ तदवस्थाप्राप्तेः संसारः देहसम्बन्धलक्षणो हि व्यपदिश्यते,

- **''तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्येऽथ सम्पत्स्ये''** (छा.6-14-2)[1] इति,
- **''अश्व इव रोमाणि विधूय पापं चन्द्र इव राहोर्मुखात् प्रमुच्य। धूत्वा शरीरमकृतं कृतात्मा ब्रह्मलोकमभिसम्भवामि''** (छा.8-13-1)[2] इति च॥ ८ ॥

## ४९७.सूक्ष्मं प्रमाणतश्च तथोपलब्धेः (४-२-९)

इतश्च विदुषोऽपि बन्धो नात्र दग्धः; यतः सूक्ष्मं शरीरमनुवर्तते। कुत इदमवगम्यते? **प्रमाणतस्तथोपलब्धेः।** उपलभ्यते हि देवयानेन पथा गच्छतो विदुषः, **''तं प्रतिब्रूयात्''** (कौ.1-51)[3] **''सत्यं ब्रूयात्''** (कौ.1-56)[4] इति चन्द्रमसा संवादवचनेन शरीरसद्भावः। अतः सूक्ष्मशरीरमनुवर्तते। अतश्च बन्धो न दग्धः॥ ९ ॥

## ४९८.नोपमर्देनातः (४-२-१०)

விஜ்ஞேயம்; குத:? *ஆபீதே: ஸம்ஸாரவ்யபதேஶாத்। அபீதி:*-அப்யய:, ப்ரஹ்மப்ராப்தி:। ஸா ச அர்சிராதிநா மார்கேண தேஶவிஶேஷம் கத்வேதி வக்ஷ்யதே; ஆ தத³வஸ்தா²ப்ராப்தே: ஸம்ஸார: தே³ஹஸம்ப³ந்த⁴லக்ஷணோ ஹி வ்யபதி³ஶ்யதே,

- *''தஸ்ய தாவதே³வ சிரம் யாவந்ந விமோக்ஷ்யேऽத² ஸம்பத்ஸ்யே''* (சா. 6-14-2)[1] இதி,
- *''அஶ்வ இவ ரோமாணி விதூ⁴ய பாபம் சந்த்³ர இவ ராஹோர்முகா²த் ப்ரமுச்ய। தூ⁴த்வா ஶரீரமக்ருதம் க்ருதாத்மா ப்³ரஹ்மலோகமபி⁴ஸம்ப⁴வாமி''* (சா.8-13-1) இதி ச॥8 ॥

## 497. ஸூக்ஷ்மம் ப்ரமாணதஶ்ச ததோ²பலப்³தே⁴: (4-2-9)

இதஶ்ச விது³ஷோऽபி ப³ந்தோ⁴ நாத்ர த³க்³த⁴:; யத: *ஸூக்ஷ்மம் ஶரீரமநு*வர்ததே। குத இதமவகம்யதே? *ப்ரமாணத: ததோ²பலப்³தே⁴:।* உபலப்⁴யதே ஹி தே³வயாநேந பதா² கச்ச²தோ விது³ஷ:, *''தம் ப்ரதிப்³ரூயாத்''*(கௌ.1-51)[3], *''ஸத்யம் ப்³ரூயாத்''*(கௌ.1-56)[4] இதி சந்த்³ரமஸா ஸம்வாதவசநேந ஶரீரஸத்³பா⁴வ:। அத: ஸூக்ஷ்மஶரீரமநுவர்ததே। அதஶ்ச ப³ந்தோ⁴ ந த³க்³த⁴: ॥ 9 ॥

## 498. நோபமர்தே³நாத: (4-2-10)

ஏன்?

**ஆ அபீதே: ஸம்ஸாரவ்யபதேசாத் -** (அபீதி வரை ஸம்ஸாரம் ஆக சொல்வதால்)

**அபீதி: -** லயம்; அதாவது, ப்ரஹ்மத்தை அடைதல்; அது அர்சிராதி-மார்க்கத்-தால், விசேஷமான ஒரு தேசத்துக்கு (பரமபதத்துக்கு) சென்ற பின்பே ஆகும் என சொல்லப்படப் போகிறது; அந்த நிலையை அடைவதுவரை ஶரீர-தொடர்பு ஆகிற ஸம்ஸாரம் சொல்லப்படுகிறது -

- [1]**''அவனுக்கு எவ்வளவு காலம் விடுபடவில்லையோ, அவ்வளவே கால-தாமதம்; பின்னர் அடைவான்''** என்றும்,
- [2]**''உபாயம் செய்து முடித்த நான், குதிரை உரோமங்களை உதறுவது போல பாபங்களை உதறிவிட்டு, ராஹுவின் வாயிலிருந்து சந்திரன் விடுபடுவது போல் ஶரீரத்தை உதறி விட்டு, நித்யமான ப்ரஹ்மலோகத்தை அடைவேன்''** என்றும்.



**497. ஸூக்ஷ்மம் ப்ரமாணத: ச ததா உபலப்தே: (4-2-9)**

*ப்ரமாணத்தால் அப்படி தெரிவதால் ஸூக்ஷ்ம-ஶரீரம் இருப்பதாலும் [ஸம்ஸாரபந்தம் விடவில்லை]*

இதனாலும், வித்வானுக்கு ஸம்ஸார-பந்தமானது இங்கே எரித்துப் பொசுக்-கப்படவில்லை; ஏனெனில், ஸூக்ஷ்மமான ஶரீரம் தொடர்ந்து உள்ளது.

இது எப்படி தெரிய வந்தது? **ப்ரமாணத: ததா உபலப்தே:** (ப்ரமாணங்களால் அப்படி தெரிவதால்).

தேவயானம் ஆகிற வழியில் செல்லும் வித்வான் சந்த்ரனுடன் பேச்சுவார்த்தை செய்வதை வேதம் சொல்கிறது - [3]**''அந்த சந்த்ரனுக்கு பதில் சொல்வான்'' ......** [4]**''ஸத்யம் (எல்லாமான ப்ரஹ்மம்)'' என்று சொல்வான்''** என்று; ஆகையால், அவனுக்கு ஶரீரம் இருப்பது தெரிகிறது.

ஆகையால், ஸூக்ஷ்மமான ஶரீரம் தொடர்கிறது; ஆகையாலும் ஸம்ஸார-பந்தம் பொசுக்கப்படவில்லை.



**498. ந உபமர்தேந அத: (4-2-10)**

*அதனால் [ஸ்தூல-ஶரீரம் இருப்பதால்], ஸம்ஸார-பந்தத்தை அழிப்பதன் மூலம் வரும் அம்ருத-தன்மை [இங்கு சொல்லப்பட] இல்லை.*

**अतः, ''यदा सर्वे प्रमुच्यन्ते कामा येऽस्य हृदि स्थिताः। अथ मर्त्योऽमृतो भवत्यत्र ब्रह्म समश्नुते''** (क.6-14)[1] इति वचनं न बन्धोपमर्देनामृतत्वं वदति॥१०॥

## ४९९.अस्यैव चोपपत्तेरूष्मा (४-२-११)

**अस्य** - सूक्ष्मशरीरस्य क्वचिद्विद्यमानत्वोपपत्तेर्विदुषः प्रक्रान्तमरणस्य मरणात्प्राक् ऊष्मा स्थूले शरीरे क्वाचित्क उपलभ्यते ; न च स्थूलस्यैव शरीरस्यायमूष्मा, अन्यत्रानुपलब्धेः। ततश्चोष्मणः क्वचिदुपलब्धिर्विदुषः सूक्ष्मशरीरस्योत्क्रान्तिनिबन्धनेति गम्यते। तस्मात् विदुषोऽप्यासृत्युपक्रमात् समाना उत्क्रान्तिरिति सुष्ठूक्तम्॥ ११ ॥

पुनरपि विदुष उत्क्रान्तिर्न सम्भवतीत्याशङ्क्य परिह्रियते -

## ५००.प्रतिषेधादिति चेन्न शारीरात् स्पष्टो ह्येकेषाम् (४-२-१२)

*அத:, ''யதா ஸர்வே ப்ரமுச்யந்தே காமா யே஽ஸ்ய ஹ்ருதி ஸ்தி்தா:। அத மர்த்யோ஽ம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம ஸமஶ்நுதே''* (க.6-14)[1] இதி வசநம் ந பந்தோபமர்தேந அம்ருதத்வம் வததி।। 10 ।।

## 499. அஸ்யைவ சோபபத்தேரூஷ்மா (4-2-11)

*அஸ்ய* - ஸூக்ஷ்மஶரீரஸ்ய க்வசித்வித்யமாநத்வோபபத்தே: விதுஷ: ப்ரக்ராந்தமரணஸ்ய மரணாத் ப்ராக் ஊஷ்மா ஸ்தூலே ஶரீரே க்வாசித்க உபலப்யதே; ந ச ஸ்தூலஸ்யைவ ஶரீரஸ்ய அயமூஷ்மா, அந்யத்ராநுபலப்தே:। ததஶ்ச ஊஷ்மண: க்வசிதுபலப்தி: விதுஷ: ஸூக்ஷ்மஶரீரஸ்யோத்க்ராந்திநிபந்தநேதி கம்யதே। தஸ்மாத் விதுஷோ஽பி ஆஸ்ருத்யுபக்ரமாத் ஸமாநா உத்க்ராந்தி: இதி ஸுஷ்டூக்தம்।।11 ।।

புநரபி விதுஷ உத்க்ராந்திர்ந ஸம்பவதீத்யாஶங்க்ய பரிஹ்ரியதே -

## 500. ப்ரதிஷேதாதிதி சேந்ந ஶாரீராத் ஸ்பஷ்டோ ஹ்யேகேஷாம் (4-2-12)

ஆகையால், [1]**"இவனது மனதில் உள்ள காமங்கள் எப்போது விடுபடுகின்றனவோ, அதன் பின்னர் மனிதன் அம்ருத-தன்மை கொண்டவன் ஆகிறான்; இங்கேயே ப்ரஹ்மத்தை அனுபவிக்கிறான்"** என்கிற வாக்யமானது, ஸம்ஸார-பந்தத்தை ஒழிப்பதன் மூலம் வரும் அம்ருத-தன்மையைச் சொல்லவில்லை.

*(உபாஸநம் செய்பவன், ஸம்ஸாரத்தில் இருக்கும்போதே, அவனுக்கு புண்ய- பாப-கர்மங்கள் பெருமளவு தொலையும்; உபாஸனத்தில் பர-ப்ரஹ்ம-அனுபவம் வரும்; அப்படி மோக்ஷம் போன்ற அம்ருத-தன்மை இங்கேயே கிடைக்கும் என்பதை சொல்கிறது.*

*இங்கேயே மோக்ஷம் கிடைக்கிறது என்று அர்த்தம் இல்லை; இங்கேயே மோக்ஷம் போன்ற நிலையில் அனுபவம் வாய்க்கிறது என்று அர்த்தம்).*



## 499. அஸ்ய ஏவ ச உபபத்தே: ஊஷ்மா (4-2-11)

*இந்த ஸூக்ஷ்மஶரீரம் இருப்பதால்தான் உஷ்ணம் தெரிகிறது*

**அஸ்ய** - இந்த ஸூக்ஷ்மஶரீரத்துக்கு

**உபபத்தே:** - ஒரு இடத்தில் இருப்பது சரியாவதால்தான்

**ஊஷ்மா** - மரணம் அடைய ஆரம்பித்த வித்வானுக்கு, மரணத்துக்கு முன் ஸ்தூல-ஶரீரத்தில் ஒரு இடத்தில் உஷ்ணம் (சூடு) இருப்பதாக தெரிகிறது.

இந்த உஷ்ணமானது, ஸ்தூல-ஶரீரத்தின் சூடு என சொல்ல முடியாது; ஏனெனில், ஶரீரத்தில் வேறிடத்தில் இது தெரிவதில்லை; ஆகவே, ஒரு இடத்தில் உஷ்ணம் தெரிவதானது, வித்வானுடைய ஸூக்ஷ்ம-ஶரீரம் மேலே வெளியேறுவதால் உருவானது என தெரிகிறது.

*(ஸ்தூல-ஶரீரத்தின் உஷ்ணம் ஆனது உடல் முழுவதும் பரவி இருக்கும்; அப்படி இல்லாமல் மரண சமயத்தில் உடலில் ஒரு இடத்தில் மட்டும் உஷ்ணம் தெரிகிறது; எனவே, அந்த இடத்தில் இருக்கும் ஸூக்ஷ்ம-ஶரீரத்தின் உஷ்ணம் ஆகும் என அறியலாம்; ஸ்தூலஶரீரத்தில் இருந்த உஷ்ணம் ஆனது கொஞ்சம்கொஞ்சமாக சுருங்கி அந்த ஸூக்ஷ்மஶரீரத்தில் சேர்கிறது)*

அதனால், வித்வானுக்கும் கதி ஆரம்பிக்கும் வரை உத்க்ராந்தி சமானமானது என்று சரியாக சொல்லப்பட்டது.



மீண்டும், வித்வானுக்கு உத்க்ராந்தி வராது என கேள்வி கேட்டு, பரிஹாரம் செய்யப்படுகிறது -

## 500. ப்ரதிஷேதாத் இதி சேத் ந, சாரீராத், ஸ்பஷ்டோ ஹி ஏகேஷாம் (4-2-12)

*[வேதம்] மறுப்பதால், வித்வானுக்கு உத்க்ராந்தி கிடையாது என்றால், அதல்ல; ஆத்மாவை விட்டு [வெளியேறுவதையே மறுக்கிறது]; சிலரது வேத-சாகையில் இது தெளிவு.*

यदुक्तम् - विदुषोऽप्युत्क्रान्तिः समानेति, तन्नोपपद्यते; विदुष उत्क्रान्तिप्रतिषेधात्। तथा हि, **"स एतास्तेजोमात्राः समभ्याददानो हृदयमेवान्वप(व)क्रामति"** (बृ.6-4-1)[1] इत्युपक्रम्य,

**"तेन प्रद्योतेनैष आत्मा निष्क्रामति। तमुत्क्रामन्तं प्राणोऽनूत्क्रामति"** (बृ.6-4-2)[2] इत्यविदुष उत्क्रान्तिप्रकारमभिधाय,

**"अन्यन्नवतरं कल्याणतरं रूपं कुरुते"** (बृ.6-4-4)[3] इति देहान्तरपरिग्रहं चाभिधाय,

**"प्राप्यान्तं कर्मणस्तस्य यत्किञ्चेह करोत्ययम्। तस्माल्लोकात् पुनरेत्यस्मै लोकाय कर्मणे इति तु कामयमानः"** (बृ.6-4-6)[4] इति अविद्वद्विषयं परिसमाप्य,

**"अथाकामयमानः योऽकामो निष्काम आप्तकाम आत्मकामः, न तस्य प्राणा उत्क्रामन्ति; ब्रह्मैव सन् ब्रह्माप्येति"** (बृ.6-4-6)[5] इति विदुष उत्क्रान्तिः प्रतिषिध्यते। तथा पूर्वत्र आर्तभागप्रश्नेऽपि विदुष उत्क्रान्तिप्रतिषेधो दृश्यते,

**"अप पुनर्मृत्युं जयति"** (बृ.5-2-10)[6] इति विद्वांसं प्रस्तुत्य,

**"याज्ञवल्क्येति होवाच यत्रायं पुरुषो म्रियते उदस्मात् प्राणाः क्रामन्ति, आहो न"** (बृ.5-2-11)[7] इति पृष्टः

---

யதுக்தம் - விதுஷோऽபி உத்க்ராந்தி: ஸமாநேதி, தந்நோபபத்யதே; விதுஷ: உத்க்ராந்திப்ரதிஷேதாத்।

* ததா ஹி, *"ஸ ஏதாஸ்தேஜோமாத்ரா: ஸமப்யாததாநோ ஹ்ருதயமேவாந்வ-ப(வ)க்ராமதி"* (ப்ரு.4-4-1)[1] இத்யுபக்ரம்ய,
* *"தேந ப்ரத்யோதேநைஷ ஆத்மா நிஷ்க்ராமதி। தமுத்க்ராமந்தம் ப்ராணோऽநூத்க்ராமதி"* (ப்ரு.4-4-2)[2] இத்யவிதுஷ உத்க்ராந்திப்ரகாரமபிதாய,
* *"அந்யந்நவதரம் கல்யாணதரம் ரூபம் குருதே"* (ப்ரு.4-4-4)[3] இதி தேஹாந்-தரபரிக்ரஹம் சாபிதாய,
* *"ப்ராப்யாந்தம் கர்மணஸ்தஸ்ய யத்கிஞ்சேஹ கரோத்யயம்। தஸ்மால்லோகாத் புநரேத்யஸ்மை லோகாய கர்மணே இதி து காமயமாந:"* (ப்ரு.4-4-6)[4] இதி அவித்வத்விஷயம் பரிஸமாப்ய,
* *"அதாகாமயமாந: யோऽகாமோ நிஷ்காம ஆப்தகாம ஆத்மகாம:, ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி; ப்ரஹ்மைவ ஸந் ப்ரஹ்மாப்யேதி"* (ப்ரு.4-4-6)[5] இதி விதுஷ உத்க்ராந்தி: ப்ரதிஷித்யதே। ததா பூர்வத்ர ஆர்தபாகப்ரஶ்நேऽபி விதுஷ உத்க்ராந்திப்ரதிஷேதோ த்ருஶ்யதே,
* *"அப புநர்ம்ருத்யும் ஜயதி"* (ப்ரு.3-2-10)[6] இதி வித்வாம்ஸம் ப்ரஸ்துத்ய,
* *"யாஜ்ஞவல்க்யேதி ஹோவாச யத்ராயம் புருஷோ ம்ரியதே உதஸ்மாத் ப்ராணா: க்ராமந்தி, ஆஹோ ந"* (ப்ரு.3-2-11)[7] இதி ப்ருஷ்ட:

**வாதம் -** (பிற மனிதர்களைப் போல) வித்வானுக்கும் உத்க்ராந்தி சமமானது என்று சொன்னது எதுவோ அது சரியாகாது; ஏனெனில், வித்வானுக்கு உத்க்ராந்தி கிடையாது என மறுக்கப் பட்டிருக்கிறது. அப்படித்தானே -

* [1]**''அந்த ஜீவன் இந்த பூத-ஸூக்ஷ்ம-அம்சங்களை எடுத்துக் கொண்டு ஹ்ருதயத்திலேயே (வழி தெரியாமல்) சுற்றிக் கொண்டிருக்கிறான்''** என்று சொல்ல ஆரம்பித்து,

* [2]**''அந்த வெளிச்சத்தால், இந்த ஜீவன் வெளியேறுகிறான். வெளியேறும் அவனை தொடர்ந்து ப்ராணன் வெளியேறுகிறது''** என்று, ப்ரஹ்ம-ஜ்ஞாநி ஆகாதவன் ஶரீரத்திலிருந்து வெளியேறும் முறையைச் சொல்லி, (இது பூர்வ-பக்ஷ கருத்து)

* [3]**''வேறொரு புதிய மங்களமான ஶரீரத்தை செய்கிறான்''** என்று வேறொரு ஶரீரத்தை எடுத்துக் கொள்வதைச் சொல்லி,

* [4]**''இங்கு இவன் என்ன செய்கிறானோ, அந்த கர்மத்தின் முடிவை (பலனை) அடைந்துவிட்டு, அந்த மேல்-உலகிலிருந்து இவ்வுலகுக்கு கர்மம் செய்வ-தற்காக மீண்டும் வருகிறான்; இவ்வாறு பலனை விரும்புபவன் ஆகிறான்''** என்று ஜ்ஞானியாக ஆகாதவனது விஷயத்தைச் சொல்லி முடித்து விட்டு,

* [5]**''இனி பலனை விரும்பாதவன் சொல்லப்படுகிறான்; ஆசை அற்றவன்; பழைய விருப்பங்களை ஒழித்தவன்; அடுத்த விருப்பங்கள் வரப்பெறாத-வன்; ஆத்மாவையே விரும்புபவன்; அப்படிப்பட்டவன் யாரோ, அவனுக்கு ப்ராணன்கள் வெளிக் கிளம்புவதில்லை; அவன் ப்ரஹ்மமாகவே இருந்து கொண்டு ப்ரஹ்மத்தைச் சேர்கிறான்''** என்று ப்ரஹ்மஜ்ஞாநி ஆனவனுக்கு உத்க்ராந்தி ஆனது (ஶரீரத்திலிருந்து வெளியேறிப் போதல் ஆனது) மறுக்கப்- பட்டு உள்ளது.

அப்படியே, முன்பும் ஆர்தபாகர் என்பவர் யாஜ்ஞவல்க்யரிடம் கேள்வி கேட்டு அறிவதாக வரும் வேத-பாகத்தில், ப்ரஹ்மஜ்ஞாநி ஆனவனுக்கு உத்க்-ராந்தி மறுக்கப்பட்டு இருப்பது காணப்படுகிறது -

* [6]**''ம்ருத்யுவை (ஸம்ஸாரத்தை) வெல்கிறான்''** என்று ப்ரஹ்மஜ்ஞாநியைப் பற்றி சொல்ல ஆரம்பித்து,

* [7]**''யாஜ்ஞவல்க்யரே, எப்போது இந்த ஜீவன் மரணம் அடைகிறானோ, அவ-னிடமிருந்து ப்ராணங்கள் வெளிக் கிளம்புகின்றனவா? இல்லையா?''** என்று கேட்க,

★ **''नेति होवाच याज्ञवल्क्यः अत्रैव समवनीयन्ते स उच्छवयत्याध्मायति आध्मातो मृतः शेते''**(बृ.5-2-11)[1] इति। अतो विद्वानिहैवामृतत्वं प्राप्नोतीति चेत् -

तन्न; **शारीरात्** - प्रत्यगात्मनः प्राणानामुत्क्रान्तिर्ह्यत्र प्रतिषिध्यते, न शरीरात्। **''न तस्य प्राणा उत्क्रामन्ति''**(बृ.6-4-6)[2] इत्यत्र तच्छब्देन **''अथाकामयमानः''** (बृ.6-4-6)[3] इति प्रकृतः शारीर एव परामृश्यते; नाश्रुतं शरीरम्॥

''तस्य'' इति षष्ठ्या प्राणानां सम्बन्धित्वेन शारीरो निर्दिष्टः; न तूत्क्रान्त्यपादानत्वेन। उत्क्रान्त्यपादानं तु शरीरमेवेति चेत्, न; अपादानापेक्षायाम् अश्रुताच्छरीरात्, सम्बन्धितया श्रुतस्याऽऽत्मन एव सन्निहितत्वेनापादानतयाऽपि ग्राह्यत्वात्।

किञ्च प्राणानां जीवसम्बन्धितयैव प्रज्ञातानां तत्सम्बन्धकथने प्रयोजनाभावात् सम्बन्धमात्रवाचिन्या षष्ठ्या अपादानमेव विशेष इति निश्चीयते। यथा **''नटस्य श्रृणोति''**(का.वृ.1-4-29)[4] इति।

---

★ *''நேதி ஹோவாச யாஜ்ஞவல்க்ய: அத்ரைவ ஸமவநீயந்தே ஸ உச்சவயத்யாத்மாயதி ஆத்மாதோ ம்ருத: ஶேதே''* (ப்ரு.3-2-11)[1] இதி। அத: வித்வாந் இஹைவ அம்ருதத்வம் ப்ராப்நோதீதி சேத் -

தந்ந; *ஶாரீராத்* - ப்ரத்யகாத்மந: ப்ராணாநாமுத்க்ராந்திர்ஹி அத்ர ப்ரதிஷித்யதே; ந ஶரீராத்। *''ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி''*(ப்ரு.4-4-6)[2] இத்யத்ர தச்சப்தேந *''அதாகாமயமாந:''*(ப்ரு.4-4-6)[3] இதி ப்ரக்ருத: ஶாரீர ஏவ பராம்ருஶ்யதே; ந அஶ்ருதம் ஶரீரம்।।

'தஸ்ய' இதி ஷஷ்ட்யா ப்ராணாநாம் ஸம்பந்தித்வேந ஶாரீரோ நிர்திஷ்ட:; ந தூத்க்ராந்த்யபாதாநத்வேந। உத்க்ராந்த்யபாதாநம் து ஶரீரமேவேதி சேத் - ந; அபாதாநாபேக்ஷாயாம் அஶ்ருதாத் ஶரீராத், ஸம்பந்திதயா ஶ்ருதஸ்ய ஆத்மந ஏவ ஸந்நிஹிதத்வேந அபாதாநதயாऽபி க்ராஹ்யத்வாத்।

கிஞ்ச ப்ராணாநாம் ஜீவஸம்பந்திதயைவ ப்ரஜ்ஞாதாநாம் தத்ஸம்பந்தகதநே ப்ரயோஜநாபாவாத் ஸம்பந்தமாத்ரவாசிந்யா ஷஷ்ட்யா அபாதாநமேவ விஶேஷ இதி நிஶ்சீயதே। யதா *''நடஸ்ய ஶ்ருணோதி''* (காஶி.1-4-29)[4] இதி।

★ [1]**''இல்லை என்று யாஜ்ஞுவல்க்யர் சொன்னார்; இவனிடமே ப்ராணங்கள் சேர்க்கப் படுகின்றன; இந்த ஶரீரம் ஊதிப் பெருக்கிறது; வெளிக்காற்று நிரம்பியதாக ஆகிறது; மரணம் அடைந்தவன் அப்படி காற்று நிரம்பியவ-னாய் கிடக்கிறான்''** என்றார்.

ஆகையால், வித்வான் ஆனவன் இங்கேயே அம்ருத-தன்மையை அடைகி-றான் என்றால்,

**மறுப்பு - ந** - அதல்ல;

**ஶாரீராத் -** ஶரீரத்தை உடைய ஜீவாத்மாவிடமிருந்து ப்ராணங்கள் வெளிக் கிளம்புவதுதானே இங்கே மறுக்கப்படுகிறது; ஶரீரத்திலிருந்து ப்ராணங்கள் வெளி-யேறுவது மறுக்கப்படவில்லை; [2]**''அவனுக்கு ப்ராணங்கள் வெளிக்கிளம்புவதில்லை''** என்னும் வாக்யத்தில் 'அவன்' என்ற சொல்லால், ஶாரீரன் ஆன ஜீவன்தான் கருதப்-படுகிறான்; ஏனெனில், ஜீவன்தானே, [3]**''இனி பலனை விரும்பாதவன் சொல்லப்-படுகிறான்''** என்று முன்னர் சொல்ல ஆரம்பிக்கப் பட்டான்! ஶரீரமானது முன்பு சொல்லப்படவில்லை; எனவே, அது இங்கே கருதப்படவில்லை.

*(இங்கே முதல் வேத-வாக்யத்தில், ''இனி பலனை விரும்பாதவன்'' என்று ஜீவனைத்-தான் சொல்லியுள்ளது; ஶரீரத்தைப் பற்றி எதுவும் சொல்லவில்லை; அடுத்த வாக் யத்தில், ''அவனுக்கு ப்ராணங்கள் வெளிக்கிளம்புவதில்லை'' என்று சொல்லும் போது, அவன் என்பது ஜீவனையே குறிக்கும்).*

**வாதம் - ''அவனுடைய ப்ராணங்கள் வெளிக்கிளம்புவதில்லை''** எனும் வாக்யத்தில், 'அவனுடைய' என்று ஆறாம் வேற்றுமை உள்ளது; அவனது தொடர்-புடைய (ப்ராணங்கள்) 'என்று அர்த்தம்; எனவே, இங்கு ப்ராணனுடன் தொடர்பு உடையவனாகவே ஜீவன் குறிப்பிடப் படுகிறான்; உத்க்ராந்திக்கு அபாதானமாக (வெளிக் கிளம்பும் இடமாக) ஜீவன் குறிப்பிடப்படவில்லை; உத்க்ராந்திக்கு அபாதானமாவது (வெளிக் கிளம்பும் இடமாவது) ஶரீரம்தான் என்றால்,

*('ஜீவனிடமிருந்து ப்ராணங்கள் வெளியேறுவதில்லை' என்று இந்த வாக்யம் சொல்ல-வில்லை; 'ஜீவனுடைய ப்ராணங்கள் வெளியேறுவதில்லை' என்றுதானே சொல்கிறது! அதனால், ஜீவனது ப்ராணங்கள் ஶரீரத்திலிருந்து வெளியேறுவதில்லை' என்று அர்த்தம் கொள்ளலாம்)*

**மறுப்பு -** 'ப்ராணங்கள் வெளியேறுவதில்லை' என வேத-வாக்யம் சொல்லும்-போது, 'எங்கிருந்து வெளியேறுவதில்லை?' என்பதை அறியும் தேவை இருக்கிறது; அப்போது இங்கே சொல்லப்படாத ஶரீரமானது நம் அறிவில் தோன்றாது; அதை-விட, இங்கே தொடர்புடையதாக சொல்லப்பட்ட ஜீவன்தான் நம் அறிவில் நெருங்கி உள்ளான்; அதனால், ஜீவனையே அபாதானமாக எடுத்துக் கொள்ள வேண்டும். (ஜீவனிடமிருந்து வெளியேறுவதில்லை என்று கருத்து).

மேலும், ப்ராணங்கள் ஜீவனுடன் தொடர்பு உடையனவாகவே நன்கு அறி-யப்பட்டவை; அந்த தொடர்பை இங்கே சொல்வதில் எந்த பயனும் இல்லை (நன்கு தெரிந்த விஷயத்தை சொல்ல வேண்டிய தேவையில்லை); அதனால், பொதுவாக எல்லா தொடர்பையும் குறிக்கும் ஆறாம் வேற்றுமையைக் கொண்டு, இங்கே அபா-தானம் என்பதே விசேஷ-தொடர்பு என தீர்மானிக்கப் படுகிறது. உதாஹரணமாக,

न चात्र विवदितव्यम् - **स्पष्टो ह्येकेषाम्** - माध्यन्दिनानामाम्नाये शारीरो जीव एवापादानमिति, **''योऽकामो निष्काम आप्तकामो आत्मकामः, न तस्मात् प्राणा उत्क्रामन्ति''**(बृ.मा.4-4-6)[1] इति॥

शारीरात् प्राणानामुत्क्रान्तिप्रसङ्गाभावात् तन्निषेधो नोपपद्यत इति चेत्, न; **''तस्य तावदेव चिरम्''**(छा.6-14-2)[2] इति विदुषः शरीरवियोगकाले ब्रह्मसम्पत्तिवचनेन प्राणानामपि तस्मिन् काले शारीराद्विदुषो वियोगः प्रसज्यते। ततश्च देवयानेन पथा ब्रह्मसम्पत्तिर्नोपपद्यत इति, **''न तस्य प्राणा उत्क्रामन्ति''**(बृ.4-4-6)[3] देवयानेन पथा ब्रह्मप्राप्तेः प्राक् जीवाद्विदुषोऽपि प्राणा न विश्लिष्यन्तीत्युच्यते।

आर्तभागप्रश्नोऽपि यदा विद्वद्विषयः, तदा अयमेव परिहारः। स त्वविद्वद्विषयः; तत्र प्रश्नप्रतिवचनयोः ब्रह्मविद्याप्रसङ्गादर्शनात्। तत्र हि ग्रहातिग्रहरूपेणेन्द्रियेन्द्रियार्थ-स्वभावः, अपामग्न्यन्नत्वम्, म्रियमाणस्य जीवस्य प्राणापरित्यागः, मृतस्य नामवाच्य कीर्त्यनुवृत्तिः, तस्य च पुण्यपापानुगुणगतिप्राप्तिरित्येतेऽर्थाः प्रश्नपूर्वकं प्रत्युक्ताः। तत्र च, **''अप पुनर्मृत्युं जयति''**(बृ.5-2-10)[4] इति अपामग्न्यन्नत्वज्ञानादग्निजय एव मृत्युजय उच्यते। अतो नात्र विदुषः प्रसङ्गः।

---

ந சாத்ர விவதிதவ்யம் - *ஸ்பஷ்டோ ஹ்யேகேஷாம்* - மாத்யந்திநாநாம் ஆம்நாயே ஶாரீரோ ஜீவ ஏவாபாதாநமிதி, *''யோऽகாமோ நிஷ்காம ஆப்தகாமோ ஆத்மகாம:, ந தஸ்மாத் ப்ராணா உத்க்ராமந்தி''*(ப்ரு.மா.4-4-6)[1] இதி।

ஶாரீராத் ப்ராணாநாமுத்க்ராந்திப்ரஸங்காபாவாத் தந்நிஷேதோ நோபபத்யத இதி சேத் - ந; *''தஸ்ய தாவதேவ சிரம்''* (ப்ரு.6-14-2)[2] இதி விதுஷ: ஶரீரவியோககாலே ப்ரஹ்மஸம்பத்திவசநேந ப்ராணாநாமபி தஸ்மிந் காலே ஶாரீராத் விதுஷோ வியோக: ப்ரஸஜ்யதே। ததஶ்ச தேவ-யாநேந பதா ப்ரஹ்மஸம்பத்தி: நோபபத்யத இதி, *''ந தஸ்ய ப்ராணா உத்க்ரா-மந்தி''*(ப்ரு.4-4-6)[3] தேவயாநேந பதா ப்ரஹ்மப்ராப்தே: ப்ராக் ஜீவாத்விது-ஷோऽபி ப்ராணா ந விஶ்லிஷ்யந்தீத்யுச்யதே।

ஆர்தபாகப்ரஶ்நோऽபி யதா வித்வத்விஷய:, ததா அயமேவ பரிஹார:। ஸ து அவித்வத்விஷய:; தத்ர ப்ரஶ்ந-ப்ரதிவசநயோ: ப்ரஹ்மவித்யா-ப்ரஸங்காதர்ஶநாத்। தத்ர ஹி க்ரஹாதிக்ரஹரூபேண இந்த்ரியேந்த்ரியார்-தஸ்வபாவ:, அபாம் அக்ந்யந்நத்வம், ம்ரியமாணஸ்ய ஜீவஸ்ய ப்ராணா-பரித்யாக:, ம்ருதஸ்ய நாமவாச்ய கீர்த்யநுவ்ருத்தி:, தஸ்ய ச புண்யபாபா-நுகுணகதிப்ராப்தி: இத்யேதேऽர்தா: ப்ரஶ்நபூர்வகம் ப்ரத்யுக்தா:। தத்ர ச, *''அப புநர்மத்யும் ஜயதி''*(ப்ரு.3-2-10)[4] இதி அபாம் அக்ந்யந்நத்வஜ்ஞாநாத் அக்நிஜய ஏவ ம்ருத்யுஜய உச்யதே। அதோ நாத்ர விதுஷ: ப்ரஸங்க:।

'நடனக் கலைஞனிடமிருந்து கேட்கிறான்' என்ற பொருளில், [4]**''நடனக் கலைஞுனுடைய கேட்கிறான்''** என்ற வழக்கு (ஸம்ஸ்க்ருதத்தில்) உள்ளது.

இதில் விவாதம் வேண்டாம்;

**ஸ்பஷ்ட: ஹி ஏகேஷாம்'' (சிலரது வேத- ஶாகையில் தெளிவாக உள்ளது)** - மாத்யந்தின-ஶாகையினரின் வேதத்தில், ஶாரீரன் ஆன ஜீவன்தான் அபாதானம் (வெளிக் கிளம்பும் இடம்) என்பது தெளிவாக உள்ளது - [1]**''ஆசை அற்றவன்; பழைய விருப்பங்களை ஒழித்தவன்; அடுத்த விருப்பங்கள் வரப் பெறாதவன்; ஆத்மாவையே விரும்புபவன்; யாரோ, அவனிடமிருந்து ப்ராணன்கள் வெளிக் கிளம்புவதில்லை''** என்று.

**கேள்வி** - ஶாரீரனான ஜீவனிடமிருந்து ப்ராணங்கள் வெளியேறும் வாய்ப்பு இல்லை; அதனால் அதை மறுப்பது சரியாகாது - என்றால்,

**பதில்** - அதல்ல; [2]**''மோக்ஷம் பெறும் அவனுக்கு ஶரீரம் விடுமளவு அத்தனை காலம் மட்டுமே தாமதம்''** என்று வித்வான் ஆனவன், ஶரீரத்தைப் பிரியும் காலத்தில் ப்ரஹ்மத்தை அடைவதாக வேதம் சொல்கிறது; அதை வைத்து ப்ராணன்களும் அந்த சமயத்தில் வித்வானான ஜீவனை விட்டுப் பிரிவதாக நேருகிறது; அப்படியானால், அர்சிராதி-மார்க்கம் வழியாக ப்ரஹ்மத்தை அடைவது முடியாமல் போகும்; அதனால், [3]**''அவனுக்கு ப்ராணங்கள் வெளியேறுவதில்லை''** - அர்சிராதி-மார்க்கம் வழியாக ப்ரஹ்மத்தை அடைவதற்கு முன் வித்வான் ஆன ஜீவனிடமிருந்தும் ப்ராணங்கள் பிரிவதில்லை என சொல்லப்படுகிறது.

ஆர்த்தபாகருடைய கேள்வியும் வித்வானைப் பற்றியதாக ஆகுமானால், அப்போது இதுவே பரிஹாரம்; ஆனால் அது வித்வான்-ஆகாதவனைப் பற்றியது; ஏனெனில், கேள்வியிலும் பதிலிலும் ப்ரஹ்ம-வித்யை பற்றிய பேச்சே காணப்படவில்லை; அங்கு, க்ரஹ-பாத்ர-உரு போன்ற இந்த்ரியங்களின் தன்மைகள், க்ரஹ-பாத்ரங்களில் இருக்கும் அதிக்ரஹ-பொருள்கள் போன்ற இந்த்ரிய-விஷயங்களின் தன்மைகள், அக்நியானது ஜலத்தின் உணவாக ஆதல் (எண்ணுதல்), இறக்கின்ற ஜீவன் ப்ராணனை விடாமை, இறந்தவனுக்கு நாமம் எனப்படும் புகழ் தொடர்தல், அவன் புண்ய-பாபத்துக்கு ஏற்ற கதியை அடைதல் ஆகிய இந்த விஷயங்கள்தாமே கேள்வியை முன்னிட்டு பதிலுரைக்கப் பட்டன!

அதில், அக்நியானது ஜலத்தின் உணவாக ஆவதை அறிந்து உபாஸநம் செய்வதால், (அதன் பலனாக) அக்னியை வெல்வான்; அப்படி அக்னியை வெல்வது-தான், [4]**''அவன் ம்ருத்யுவை வெல்கிறான்''** என்று ம்ருத்யுவை வெல்வதாக சொல்லப்படுகிறது. ஆகையால், (ப்ரஹ்ம-உபாஸநம் செய்யும்) வித்வானைப் பற்றிய பேச்சே இல்லை;

अविदुषस्तु प्राणानुत्क्रान्तिवचनम्; स्थूलदेहवत् प्राणा न मुञ्चन्ति, अपि तु भूतसूक्ष्मवत् जीवं परिष्वज्य गच्छन्तीति प्रतिपादयतीति निरवद्यम्॥ १२ ॥

## ५०१.स्मर्यते च (४-२-१३)

स्मर्यते च विदुषोऽपि मूर्धन्यनाड्योत्क्रान्तिः, **''ऊर्ध्वमेकः स्थितस्तेषां यो भित्त्वा सूर्यमण्डलम्। ब्रह्मलोकमतिक्रम्य तेन याति परां गतिम्॥''** (याज्ञ.167.) इति॥१३॥

इति आसृत्युपक्रमाधिकरणम् ॥ ५ ॥

---

அவிதுஷஸ்து ப்ராணாநுத்க்ராந்திவசநம்; ஸ்தூலதேஹவத் ப்ராணா ந முஞ்சந்தி, அபி து பூதஸூக்ஷ்மவத் ஜீவம் பரிஷ்வஜ்ய கச்சந்தீதி ப்ரதிபாதயதீதி நிரவத்யம்.।12 ।।

## 501. ஸ்மர்யதே ச (4-2-13)

ஸ்மர்யதே ச விதுஷோऽபி மூர்தந்யநாட்யா உத்க்ராந்தி:,

*"ஊர்த்வமேக: ஸ்திதஸ்தேஷாம் யோ பித்த்வா ஸூர்யமண்டலம்। ப்ரஹ்மலோகமதிக்ரம்ய தேந யாதி பராம் கதிம்।।"*(யாஜ்ஞ.167) இதி।।13 ।।

இதி ஆஸ்ருத்யுபக்ரமாதிகரணம் ।।5 ।।



வித்வான் ஆகாதவனுக்கு (இறக்கும்போது) ப்ராணன் விடுவதில்லை என்கிறது; ஸ்தூல-ஶரீரம் எப்படி விட்டுப் பிரிகிறதோ, அப்படி ப்ராணங்கள் ஜீவனை விடுவதில்லை; மாறாக, ஸூக்ஷ்ம-பூதங்கள் போல், ஜீவனை அணைத்துக்கொண்டு போகின்றன என அது அறிவிக்கிறது; ஆகையால், அதுவும் தவறில்லை.



## 501. ஸ்மர்யதே ச (4-2-13)

*ஸ்ம்ருதியிலும் சொல்லப்படுகிறது*

வித்வானும் மண்டை-நாடி வழியாக வெளியேறுவது ஸ்ம்ருதியிலும் சொல்லப்படுகிறது - **''அந்த நாடிகளில் எந்த ஒன்று உயர உள்ளதோ, அதன் மூலம், ஸூர்ய-மண்டலத்தைப் பிளந்து நான்முகனது உலகத்தைக் கடந்து உயர்ந்த பரமபத-கதியை அடைகிறான்''** என்று.

**ஆஸ்ருத்த்யுபக்ரமாதிகரணம் முற்றிற்று**



# 140.பரஸம்பத்த்யதிகரணம் (4-2-6)

## முன் குறிப்பு

பரஸம்பத்தி என்றால், பரமாத்மாவை சேர்தல் என்று அர்த்தம்.

வேதம் சொல்கிறது, ''மரணம் அடையும்போது, வாக் மனஸ்ஸில் சேர்கிறது; மனஸ் ப்ராணனில் சேர்கிறது; ப்ராணன் தேஜஸ்ஸில் சேர்கிறது; தேஜஸ் பரதெய்வத்தில் சேர்கிறது'' என்று.

இதில், தேஜஸ் என்பது பஞ்சபூதங்களையும் குறிக்கும் என்று சொல்லியாயிற்று. அந்த பஞ்சபூதங்களுடன் கூடிய ஜீவன் பரதெய்வத்தில் சேர்வது பற்றி இப்போது விசாரம். (பரதெய்வம் - உயர்ந்த தெய்வமான பரப்ரஹ்மம்; பரமாத்மா)

பூர்வபக்ஷம் - பஞ்சபூதங்கள் பரமாத்மாவுடன் சேர்வதால் ஒரு தனிப் பயனும் இல்லை. அவை சிலருக்கு புண்யபாபகர்மங்களுக்கு ஏற்ப அடுத்த உடலைக் கொடுக்கும்; அல்லது சிலருக்கு ப்ரஹ்மவித்யைக்கு ஏற்ப ஏதாவது உடலைக் கொடுக்கப் போகலாம். இப்படி ஒரு பலனுக்காக போகலாம். இது தவிர பரதெய்வத்தில் போவதில்லை.

வேதத்தில் பரதெய்வத்தில் அவை சேர்வதாக சொல்லியிருப்பதானது, பொதுவாக சொன்னதாகும்; எல்லா பொருளுமே எப்போதுமே பரதெய்வத்தில் சேர்ந்திருப்பதால் அப்படி சொன்னது. இங்கே மரணசமயத்தில் தனிப்பட்டதாக பரதெய்வத்தில் சேர்வதால் பயனில்லை; ஆதலால், அதனைச் சொல்லவில்லை.

ஸித்தாந்தம் - பஞ்சபூதங்களும் பரதெய்வத்தில் சேர்கின்றன; அதனை வேதம் சொல்கிறது. வேதம் சொல்வதை அப்படியே ஏற்க வேண்டும்.

அதற்கு என்ன பயன் என்பதையும் நாம் ஊகித்துக் கொள்ள முடியும்.

உதாஹரணமாக நாம் உறங்கும்போது பரமாத்மாவில் சேர்வதாக வேதம் சொல்கிறது. அதனை அப்படியே எல்லா மதத்தினரும் ஒப்புக் கொள்கிறோம்; உறங்கும்போது பரமாத்மாவைச் சேர்வதால் என்ன பலன் என்பதையும் நாமே ஊகித்துக் கொள்கிறோம். களைப்பாறுதல் தான் பலன் ஆகும். அதுபோல் இங்கும் ஒருவிதமாக களைப்பாறுகிறான் என்று பலனை ஊகித்துக் கொள்ளலாம்.

பரமாத்மாவிடம் ஜீவன் களைப்பாறுதல் என்பது மூன்று விதம் -

1. உறக்கத்தில் - பாரம் சுமப்பவன் அந்த பாரத்துடனேயே தடியை ஊன்றிக்கொண்டு களைப்பாறுவது போல உறக்கத்தில் உடலைச் சுமந்துகொண்டே பரமாத்மாவிடம் களைப்பாறுகிறான்.
2. ப்ரளயத்தில் - பாரத்தை இறக்கி விட்டு களைப்பாறுவது போல உடலை விட்டுவிட்டு பிரளயத்தில் களைப்பாறுகிறான். இது லயம் ஆகும். பரமாத்மாவை விட்டு பிரித்து அறிய முடியாதபடி அவனுடன் ஜீவன் ஒன்றிவிடுகிறான்.
3. மரணத்தில் - ஸூக்ஷ்மமான பஞ்சபூதங்களுடன் கூடிய ஜீவன், பரமாத்மாவில் சேர்ந்து களைப்பாறுகிறான். இது லயம் அல்ல; பரமாத்மாவுடன் சேர்கிறான் என்பது மட்டுமே.

# १४०.परसम्पत्त्यधिकरणम् (४-२-६)

## ५०२.तानि परे तथा ह्याह (४-२-१४)

सकरणग्रामः सप्राणः करणाध्यक्षः प्रत्यगात्मा उत्क्रान्तिवेलायां तेजःप्रभृतिभूतसूक्ष्मेषु सम्पद्यत इत्युक्तम्। सैषा सम्पत्तिर्विदुषो न विद्यत इत्याशङ्क्य परिहृतम्।

तानि पुनर्जीवपरिष्वक्तानि भूतसूक्ष्माणि किं यथाकर्म यथाविद्यं च स्वकार्याय गच्छन्ति, उत परमात्मनि सम्पद्यन्त इति विशये -

मध्ये परमात्मसम्पत्तौ सुखदुःखोपभोगरूपकार्यादर्शनात् तदुपभोगानुगुण्येन यथाकर्म यथाविद्यं च गच्छन्ति इति प्राप्ते उच्यते -

**तानि परे** इति। तानि परस्मिन् आत्मनि सम्पद्यन्ते। कुतः? **तथा ह्याह** श्रुतिः, "**तेजः परस्यां देवतायाम्**" (छा.6-8-6)[1] इति। यथाऽऽह श्रुतिः, तदनुगुणं कार्यं कल्प्यमित्यर्थः। सुषुप्तिप्रलययोर्यथा परमात्मसम्पत्त्या सुखदुःखोपभोगायासविश्रमः; तद्वदिहापि॥

इति परसम्पत्त्यधिकरणम् ॥ ६ ॥

---

# 140. பரஸம்பத்த்யதிகரணம் (4-2-6)

## 502. தாநி பரே ததா ஹ்யாஹ (4-2-14)

ஸகரணக்ராம: ஸப்ராண: கரணாத்யக்ஷ: ப்ரத்யகாத்மா உத்க்ராந்தி-வேலாயாம் தேஜ:ப்ரப்ருதிபூதஸூக்ஷ்மேஷு ஸம்பத்யத இத்யுக்தம்। ஸைஷா ஸம்பத்தி: விதுஷோ ந வித்யத இத்யாஶங்க்ய பரிஹ்ருதம்।

தாநி புநர்ஜீவபரிஷ்வக்தாநி பூதஸூக்ஷ்மாணி கிம் யதாகர்ம யதாவித்-யம் ச ஸ்வகார்யாய கச்சந்தி, உத பரமாத்மநி ஸம்பத்யந்த இதி விஶயே -

மத்யே பரமாத்மஸம்பத்தௌ ஸுகது:கோபபோகரூபகார்யாதர்ஶ-நாத் ததுபபோகாநுகுண்யேந யதாகர்ம யதாவித்யம் ச கச்சந்தி - இதி ப்ராப்தே உச்யதே -

*தாநி பரே* இதி। தாநி பரஸ்மிந் ஆத்மநி ஸம்பத்யந்தே। குத:? *ததா ஹ்யாஹ* ஶ்ருதி:, "*தேஜ: பரஸ்யாம் தேவதாயாம்*" (சா.6-8-6)[1] இதி। யதா஽஽ஹ ஶ்ருதி:, ததநுகுணம் கார்யம் கல்ப்யமித்யர்த:। ஸுஷுப்தி-ப்ரலயயோ: யதா பரமாத்மஸம்பத்த்யா ஸுக-து:கோபபோகாயாஸவிஶ்ரம:, தத்வதிஹாபி॥

இதி பரஸம்பத்த்யதிகரணம் ॥ 6 ॥

# 140.பரஸம்பத்த்யதிகரணம் (4-2-6)

## 502.தாநி பரே ததா ஹி ஆஹ (4-2-14)

*அவை பரமாத்மாவில் சேர்கின்றன; ஏனெனில், அப்படித்தானே வேதம் சொல்கிறது*

**ஸங்கதி & ஸம்சயம்**

இந்த்ரியங்களின் தலைவனான ஜீவாத்மாவானவன் இந்த்ரிய-குழுவுடனும், ப்ராணனுடனும் கூடியவனாய் உத்க்ராந்தி-சமயத்தில் தேஜஸ் முதலிய ஸூக்ஷ்ம-பூதங்களில் சேருகிறான் என சொல்லப்பட்டது; இந்த சேர்க்கையானது ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவனுக்குக் கிடையாது என்று கேள்வி எழுப்பி பரிகாரமும் சொல்லப்பட்டது;

ஜீவனால் அணைக்கப்பட்ட இந்த ஸூக்ஷ்ம-பூதங்கள் புண்ய-பாப-கர்மங்களுக்கு ஏற்பவும் ப்ரஹ்ம-வித்யைக்கு ஏற்பவும் தன் செயலுக்காக போகின்றனவா? அல்லது பரமாத்மாவில் சேர்கின்றனவா? - என்று ஸந்தேஹம்

**பூர்வபக்ஷம்**

ஸூக்ஷ்ம-பூதங்கள், இடையில் பரமாத்மாவைச் சேருவதால் சுக-துக்கம்-அனுபவித்தல் ஆகிற பலன் இருப்பதாகத் தெரியவில்லை; ஆகையால், அந்த சுக-துக்க-அனுபவத்துக்காக, (ஜீவனது) புண்ய-பாப-கர்மங்களுக்கு ஏற்பவும் ப்ரஹ்ம-வித்யைக்கு ஏற்பவும் போகின்றன.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது -

**'தாநி பரே -** அவை பரப்ரஹ்மத்தில் சேர்கின்றன - என்று.

ஏன்?

**ததா ஹி ஆஹ -** அப்படித்தானே - [1]**''தேஜஸ் பரதேவதையில் சேர்கிறது''** என்று வேதம் சொல்கிறது.

வேதம் எப்படி சொல்கிறதோ அதற்கு ஏற்ப செயலை ஊகித்துக் கொள்ள வேண்டும் என்று பொருள்;

உதாஹரணமாக, உறக்கத்திலும் ப்ரளயத்திலும் பரமாத்மாவைச் சேர்வதால் சுக-துக்கம் அனுபவித்த களைப்பு ஆறுதல் (பலனாக) ஆகிறது; அது எப்படியோ, அது போல் இங்கேயும்.

*(பரமாத்மாவைச் சேர்கிறான் என வேதம் சொல்கிறது; அப்படி சேர்வதால் வரும் பலனை நாம் ஊகித்துக் கொள்ள வேண்டும்; களைப்பு-ஆறுதல்தான் அந்த பலன் ஆகும்).*

*******************************

**பரஸம்பத்த்யதிகரணம் முற்றிற்று.**

# 141. அவிபாகாதிகரணம் (4-2-7)

## முன் குறிப்பு

மரணம் அடையும் ஜீவன் பற்றி வேதம் சொல்லும் வாக்யம் இது -

"1. மரணம் அடைபவனுக்கு வாக் மனஸ்ஸில் சேர்கிறது;

2. மனஸ் ப்ராணனில்,

3. ப்ராணன் தேஜஸ்ஸில்

4. தேஜஸ் பரதெய்வத்தில்" என்று..

முதல் வாக்யத்தில் உள்ள சேர்கிறது எனும் சொல்லை பின்னர் உள்ள எல்லா வாக்யங்களிலும் சேர்த்துக் கொள்ள வேணும். இதில் கடைசியில் உள்ள வாக்யம், "தேஜஸ் பரதெய்வத்தில் (சேர்கிறது)" என்பதாகும். ஸூக்ஷ்மமான பஞ்சபூதங்களுடன் கூடிய ஜீவன் பரமாத்மாவில் சேர்கிறான் என்று அர்த்தம் முன் அதிகரணங்களில் சொல்லியாயிற்று.

இந்த சேர்தல் என்பது என்ன? சேர்தல் என்பது இரு விதம் ஆகலாம்.

1) கார்யப்பொருள் காரணப்பொருளில் ஒன்றிச் சேர்கிறது. ஒரே பொருளாக ஆகிறது. உதாஹரணமாக பானை உடைந்து போனால், மண்ணாகவே ஆகி விடுகிறது.

2) ஒரே பொருளாக ஒன்றாமல், தனித்தனியாக இரு பொருள்களாக இருந்து கொண்டே, ஒட்டிச் சேரும் எனலாம். (உ.ம்) கையில் எண்ணெய் ஒட்டி சேர்கிறது.

பூர்வபக்ஷம் - பரமாத்மா எல்லா பொருளுக்கும் காரணம் ஆனவன்; ஆகையால், பரமாத்மாவில் சேர்தல் என்றால் காரணப் பொருளுடன் ஒன்றிவிடுதல் என்று அர்த்தம்.

ஸித்தாந்தம் - இங்கே 'சேர்கிறது' என்கிற சொல்லானது முதல் வாக்யத்தில் மட்டுமே உள்ளது; பின் அடுத்துள்ள வாக்யங்களில் 'அந்த சொல் இல்லை; ஆனாலும், முதல் வாக்யத்தில் உள்ள அந்த சொல்லையே பின்னரும் கூட்டிசேர்த்து அர்த்தம் சொல்கிறோம். முதல் வாக்யத்தில் "வாக் மனஸ்ஸில் சேர்கிறது என்னும்போது, 'சேர்கிறது' என்றால், காரணப் பொருளுடன் ஒன்றுதல் என்ற அர்த்தம் கிடையாது; தொடர்பு உடையதாக ஆகிறது என்றே அர்த்தம். எனவே, பின்னர் உள்ள வாக்யத்திலும் அந்த அர்த்தம்தான் கிடைக்கும்.

முதல் வாக்யத்தில் உள்ள சொல்லை அடுத்தடுத்த வாக்யத்தில் இறக்கி வைத்துக்கொண்டு அர்த்தம் சொல்லும்போது, முதலில் சொன்ன அர்த்தம்தான் கிடைக்கும்; வேறு அர்த்தம் சொல்வதானால், அதற்கு தேவையான ப்ரமாணம் ஏதாவது திடமாக இருந்தால் மட்டுமே சொல்லலாம்; இல்லாவிட்டால், வேறு அர்த்தம் சொல்வது சரியல்ல.

எனவே, சேர்கிறது என்றால், தொடர்பு உடையதாக ஆகிறது என்றே அர்த்தம். பரமாத்மாவை விட்டு பிரித்து சொல்ல முடியாதபடியான தொடர்பு வருகிறது. பொதுவாக எப்போதுமே பரமாத்மா ஆதாரமாக இருப்பதால் தொடர்பு நிலையாக இருக்கிறது என்றாலும், இது ஒரு தனிப்பட்ட விசேஷமான தொடர்பு என்று நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

# १४१. अविभागाधिकरणम् (४-२-७)

## ५०३. अविभागो वचनात् (४-२-१५)

सेयं परमात्मनि सम्पत्तिः किं प्राकृतलयवत् कारणापत्तिरूपा, उत "**वाङ्मनसि**" (छा.6-8-6)[1] इत्यादिवदविभागरूपेति चिन्तायाम् -

परमात्मनः सर्वेषां योनिभूतत्वात् कारणापत्तिरूपेति प्राप्ते उच्यते -

**अविभागः** इति। अपृथग्भावः - पृथग्व्यवहारानर्हसंसर्ग इत्यर्थः। कुतः? **वचनात्।** "**तेजः परस्यां देवतायाम्**" (छा.6-8-6)[2] इत्यत्रापि, "**वाङ्मनसि सम्पद्यते**" (छा.6-8-6)[3] इत्यतः सम्पद्यत इति वचनस्यानुषङ्गात्; तस्य च संसर्गविशेषवाचित्वात् अनुषक्तस्याभिधानवैरूप्ये प्रमाणाभावात्; उत्क्रान्तिवेलायां कारणापत्तिप्रयोजनाभावात्; पुनस्तत्राव्यक्तादिसृष्ट्यवचनाच्च॥

इति अविभागाधिकरणम्॥ ७ ॥

---

# 141. அவிபாகாதிகரணம் (4-2-7)

## 503. அவிபாகோ வசநாத் (4-2-15)

ஸேயம் பரமாத்மநி ஸம்பத்தி: கிம் ப்ராக்ருதலயவத் காரணாபத்திரூபா, உத *"வாங்மநஸி"* (சா.6-8-6)[1] இத்யாதிவத் அவிபாகரூபா இதி சிந்தாயாம் -

பரமாத்மந: ஸர்வேஷாம் யோநிபூதத்வாத் காரணாபத்திரூபேதி ப்ராப்தே உச்யதே -

*அவிபாக:* - இதி। அப்ருதக்பாவ: - ப்ருதக்வ்யவஹாராநர்ஹஸம்ஸர்க: இத்யர்த:। குத:? வசநாத்। *"தேஜ: பரஸ்யாம் தேவதாயாம்"* (சா.6-8-6)[2] இத்யத்ராபி, *"வாங்மநஸி ஸம்பத்யதே"* (சா.6-8-6)[3] இத்யத: ஸம்பத்யத இதி வசநஸ்யாநுஷங்காத்; தஸ்ய ச ஸம்ஸர்கவிஶேஷவாசித்வாத் அநுஷக்தஸ்ய அபிதாநவைரூப்யே ப்ரமாணாபாவாத்; உத்க்ராந்திவேலாயாம் காரணாபத்திப்ரயோஜநாபாவாத்; புநஸ்தத்ர அவ்யக்தாதிஸ்ருஷ்ட்யவசநாச்ச॥15॥

இதி அவிபாகாதிகரணம்॥7 ॥

# 141. அவிபாகாதிகரணம் (4-2-7)

## 503. அவிபாக: வசநாத் (4-2-15)

*[பரமாத்மாவில் சேருதல் என்பது] பிரிவின்மை ஆகும்; அதைச் சொல்லும் சொல்லினால்.*

**ஸங்கதி & ஸம்சயம்**

(உத்க்ராந்தி சமயத்தில் ஜீவனால் அணைக்கப்பட்ட ஸூக்ஷ்ம-பூதங்கள் பரமாத்மாவில் சேர்கின்றன என்று சொல்லி ஆயிற்று). பரமாத்மாவில் சேர்தல் என்கிற இது, ப்ராக்ருத-ப்ரளயத்தில் ஆவது போல் காரண-பொருளாக ஆதலா? அல்லது [1]**''வாக் மனஸ்ஸில் சேர்கிறது''** முதலியதில் ஆவது போல் அவிபாக-உருவானதா (பிரிவின்மையா?)?

**பூர்வபக்ஷம்**

பரமாத்மாவானவன் எல்லா பொருளுக்கும் உபாதாந-காரணம் ஆனவன்; அதனால், பரமாத்மாவில் சேர்தல் என்பது காரண-பொருளாக ஆதல் ஆகும்.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **அவிபாக:** என்று;

**அவிபாக: (பிரிவின்மை) -** தனியாக ஆகாமை; (பரமாத்மாவை விட்டு) பிரித்து சொல்ல முடியாதபடியான தொடர்பு என்று அர்த்தம்.

ஏன்?

**வசநாத் -** ஏனெனில், [3]**''வாக் ஆனது மனஸ்ஸில் சேர்கிறது''** என்ற வேத-வாக்யத்திலிருந்து 'சேர்கிறது' என்ற சொல்லானது, [2]**''தேஜஸ் பர-தெய்வத்தில்''** என்ற வாக்யத்திலும் அனுஷங்கமாக தொடர்கிறது; முதல் வாக்யத்தில் உள்ள 'சேர்கிறது' எனும் அந்த சொல்லானது, விசேஷ-தொடர்பையே பொருளாக சொல்லும்; முன்-வாக்யத்திலிருந்து அடுத்த வாக்யத்தில் தொடரும் சொல்லுக்கு வேறுபட்ட பொருள் ஆவதில் ப்ரமாணம் இல்லை. (இதன் விளக்கத்தை முன் குறிப்பில் காணலாம்)

மேலும், உத்க்ராந்தி சமயத்தில், (பூத-ஸூக்ஷ்மங்களுடன் கூடிய ஜீவன்) உபாதான-காரண-பொருளாக ஆவதால் பலன் எதுவும் இல்லை.

*(ப்ரளய-காலத்தில் பரமாத்மாவுடன் ஒன்றிச் சேர்வது ஶரீர-சுமையை விட்டு நீண்டகால ஒய்வு எடுப்பதற்காக; ஆனால், இப்போது மோக்ஷம் பெற்று பரமபதம் செல்பவன் ப்ரளயம் போல ஒன்றிச் சேர்ந்து நீண்டகாலம் ஒய்வு எடுக்கவேண்டியதில்லை; அதனால் பூதஸூக்ஷ்மத்துடன் கூடி.வனாக பரமாத்மாவுடன் சேர்ந்திருந்து ஶ்ரமம் இல்லாமல், மேலே போகிறான்.).*

மேலும், மீண்டும் அந்த காரண-பொருளிலிருந்து அவ்யக்தம் முதலிய ஸ்ருஷ்டி நடப்பதாகச் சொல்லவில்லை. (எனவே, இங்கு லயம் அடைவதைச் சொல்லவில்லை)

**அவிபாகாதிகரணம் முற்றிற்று.**

# 142. ததோகோऽதிகரணம் (4-2-8)

## முன் குறிப்பு

மரணம் அடையும் ஜீவன், ஶரீரத்திலிருந்து வெளியேறுவதற்கு முன் இந்த்ரியங்கள், மனஸ், ப்ராணன், ஜீவன், பஞ்சபூதங்கள் ஆகியவை ஒன்று சேர, எல்லாவற்றுடன் கூடிய ஜீவன், பரமாத்மாவில் சேர்கிறான்.

இவையெல்லாம் உடலுக்குள் நடக்கும் விஷயங்கள். இவை எல்லா மனிதருக்கும் பொதுவானவை. இதுவரை ஶரீரத்திலிருந்து வெளியே புறப்படுவதற்கான ஏற்பாடு ஆகும்.

இனி புறப்பட்டு, உடலிலிருந்து வெளியேறி, மேலே செல்ல வேண்டும். இதில் மனிதர்களுக்கிடையே வித்யாசம் உண்டு.

உடலிலிருந்து வெளியே வருவதற்கு வாகாக, கண், காது, வாய் முதலிய த்வாரங்கள் உள்ளன. ஹ்ருதயத்திலிருந்து இந்த த்வாரங்களை இணைக்கும் நாடிகள் 101 உள்ளன. அவற்றில் ஏதாவது ஒன்றைப் பற்றிக்கொண்டு, அதன் மூலமாக ஶரீரத்தில் ஏதாவது த்வாரம் வழியாக ஜீவன் வெளியேறுவான்.

ஆனால், வித்வானுக்காக (ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவனுக்காக) சிறப்பு வழி உள்ளது. ஹ்ருதயத்தில் உள்ள நூறு நாடிகள் உடலில் பக்கவாட்டில் ஏதாவது ஒரு த்வாரத்தில் கொண்டுவிடும்; ஆனால், 101 வது நாடியானது, மேலே, நடுமண்டைக்கு செல்கிறது; அதற்கு மூர்தன்ய-நாடி (நடுமண்டை நாடி), ப்ரஹ்மநாடி என்றெல்லாம் பெயர்; அதன் வழியாக இந்த ஜீவன் வெளியேறி, மேலே உயர செல்கிறான்.

அந்த நாடியை இவன் எப்படி அடையாளம் கண்டுபிடித்து வெளியேறுவான்? இவனால் கண்டுபிடிக்க முடியுமா என்பது விசாரம்.

அந்த நாடியை இவன் கண்டுபிடிக்கும்படி ஹ்ருதயத்தில் இருக்கும் பரமாத்மா இவனுக்கு அனுக்ரஹம் செய்கிறான். ஏனெனில், இவன் செய்த உபாஸநம் என்பது, அந்த பரமாத்மாவுக்கு ஆராதனமாக அமைந்தது; மேலும் இவன் உபாஸநம் செய்யும்போது அதற்கு அங்கமாக கதி-சிந்தனம் செய்திருப்பான்; ஶரீரத்திலிருந்து வெளியேறி பரமபதம் செல்லும் அர்ச்சிராதி வழியையும் நினைத்து த்யானம் செய்திருப்பான். (3-3-32 மற்றும் 4-2-20 ஸூத்ரங்கள் காண்க); அதனால் ப்ரீதி அடையும் பகவான் அந்த பலனை அவனுக்கு அமைத்துத் தருகிறான்.

அந்த ஜீவனது இருப்பிடமான ஹ்ருதயத்தின் நுனியில் வெளிச்சம் ஒன்றை உண்டாக்குகிறான்; அதன் மூலம் அந்த நாடியை கண்டிபிடித்துக் கொண்டு ஜீவன் வெளியேறுவான்.

"தத்-ஓக:" - அந்த ஜீவனது இருப்பிடமான ஹ்ருதயம் என்று அர்த்தம்; அது நுனியில் ஒளியுடன் கூடியதாக ஆகும் என்று ஸூத்ரத்தில் ஸாதிக்கிறார்.

# १४२. तदोकोऽधिकरणम् (४-२-८)

**५०४. तदोकोऽग्रज्वलनं तत्प्रकाशितद्वारो विद्यासामर्थ्यात् तच्छेषगत्यनुस्मृतियोगाच्च हार्दानुगृहीतः शताधिकया (४-२-१६)**

एवं गत्युपक्रमावधि विद्वदविदुषोः समानाकारः उत्क्रान्तिप्रकार उक्तः, इदानीं विदुषो विशेष उच्यते।

तत्रेदमाम्नायते - **"शतं चैका च हृदयस्य नाड्यस्तासां मूर्धानमभिनिस्सृतैका। तयोर्ध्वमायन् अमृतत्वमेति विष्वङ्ङन्या उत्क्रमणे भवन्ति"**(क.6-16)[1] इति।

'अनया नाडीनां शताधिकया मूर्धन्यनाड्यैव विदुषो गमनम्, अन्याभिरेव चाविदुषो गमनम्' इत्ययं नियम उपपद्यते, नेति संशयः।

किं युक्तम्? नियमो नोपपद्य इति। कुतः? नाडीनां भूयस्त्वादतिसूक्ष्मत्वाच्च दुर्विवेचतया पुरुषेणोपादातुमशक्यत्वात्। **"तयोर्ध्वमायन्नमृतत्वमेति विष्वङ्ङन्या उत्क्रमणे भवन्ति"** (क.6-16)[2] इति यादृच्छिकीमुत्क्रान्तिमनुवदतीति युक्तमिति॥

---

## 142. ததோகோதிகரணம் ॥4-2-8॥

**503. ததோகோऽக்ரஜ்வலநம் தத்ப்ரகாஶிதத்வாரோ வித்யாஸாமர்த்யாத் தச்சேஷகத்யநுஸ்ம்ருதியோகாச்ச ஹார்தாநுக்ருஹீத: ஶதாதிகயா॥4-2-16॥**

ஏவம் கத்யுபக்ரமாவதி வித்வதவிதுஷோ: ஸமாநாகார: உத்க்ராந்தி-ப்ரகார உக்த:, இதாநீம் விதுஷோ விஶேஷ உச்யதே।

தத்ரேதமாம்நாயதே - *"ஶதம் சைகா ச ஹ்ருதயஸ்ய நாட்யஸ்தாஸாம் மூர்தாநமபிநிஸ்ஸ்ருதைகா। தயோர்த்வமாயந் அம்ருதத்வமேதி விஷ்வங்ஙந்யா உத்க்ரமணே பவந்தி"* (க.6-16)[1] இதி।

'அநயா நாடீநாம் ஶதாதிகயா மூர்தந்யநாட்யைவ விதுஷோ கமநம், அந்யாபிரேவ ச அவிதுஷோ கமநம்' இத்யயம் நியம உபபத்யதே, நேதி ஸம்ஶய:।

கிம் யுக்தம்? நியமோ நோபபத்யதே இதி। குத:? நாடீநாம் பூயஸ்த்வாத் அதிஸூக்ஷ்மத்வாச்ச துர்விவேசதயா புருஷேணோபாதாதுமஶக்யத்வாத்। *"தயோர்த்வமாயந்நம்ருதத்வமேதி விஷ்வங்ஙந்யா உத்க்ரமணே பவந்தி"* (க.6-16)[2] இதி யாத்ருச்சிகீமுத்க்ராந்திமநுவததீதி யுக்தமிதி॥

# 142. ததோகோऽதிகரணம் (4-2-8)

**504. ததோக: அக்ரஜ்வலநம் தத்ப்ரகாசிதத்வார: வித்யாஸாமர்த்யாத் தச்சேஷகத்யனுஸ்ம்ருதி-யோகாத் ச ஹார்தானுக்ருஹீத: ஶதாதிகயா (4-2-16)**

*வித்வான் ஆனவன், உபாஸநத்தின் திறனாலும் அதற்கு சேஷமான கதி-சிந்தநம் எனும் யோகத்தாலும் ஹ்ருதயத்தில் இருக்கும் ப்ரஹ்மத்தால் அனுக்ரஹிக்கப் படுகிறான்; அவனது இருப்பிடமான ஹ்ருதயமானது நுனியில் வெளிச்சம் உள்ளதாக ஆகிறது; அந்த அனுக்ரஹத்தால், வெளிச்சம் பெற்ற வாயிலை அறிபவனாய், நூற்றியொன்றாவதான நாடி மூலமாகவே [வெளிக் கிளம்புகிறான்].*

**ஸங்கதி (விஷய-தொடர்பு)**

இப்படியாக, கதி ஆரம்பிக்கும் வரை, வித்வானுக்கும் வித்வான் ஆகாதவனுக்கும் சமானமாக ஆகும் உத்க்ராந்தி முறை சொல்லப்பட்டது; இப்போது வித்வானுக்கு (ப்ரஹ்ம-உபாஸநம் செய்தவனுக்கு) உள்ள தனி-முறை சொல்லப்படுகிறது.

**விஷயவாக்யம்**

அதில் இது ஓதப்படுகிறது - [1]**''ஹ்ருதயத்தில் முக்கியமான நாடிகள் நூற்றியொன்று உள்ளன; அவற்றில் ஒன்று தலையை நோக்கிப் போகிறது; அதன் மூலம், மேல் செல்பவனாய் மோக்ஷ-தன்மையைப் பெறுகிறான்; மீதி நாடிகள் சுற்றிலும் ஸம்ஸார-வழியில் செல்வதற்காக ஆகின்றன''** என்று.

**ஸம்ஶயம் (ஸந்தேஹம்)**

இந்த நூற்றி ஒன்றாவது நாடியான மண்டை-நாடி மூலமாகத்தான் வித்வான் வெளியே போகிறான் என்பதும், வித்வான் ஆகாதவன் பிற நாடிகளின் மூலமாகப் போகிறான் என்பதும் ஆன இந்த வரையறையானது சரியாகுமா? சரியாகாதா? என்று ஸந்தேஹம்.

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்? வரையறை வராது என்பது; ஏன்? நாடிகள் மிக அதிகமாகவும் ஸூக்ஷ்மமாகவும் உள்ளன; அதனால், அவற்றைப் பிரித்து தெரிந்து கொள்வது கடினம்; அதனால், மனிதன் மண்டை-நாடியை சரியாகத் தேர்ந்தெடுப்பது முடியாது. [2]**''அந்த மண்டை-நாடி மூலம், மேல் செல்பவனாய் மோக்ஷ-தன்மையைப் பெறுகிறான்; மீதி நாடிகள் சுற்றிலும் ஸம்ஸார-வழியில் செல்வதற்காக ஆகின்றன''** என்ற வாக்யமானது, தற்செயலாக மண்டை-நாடி மூலமாகவும் வெளியே செல்வதை அனுவாதம் செய்கிறது என்பதே பொருந்தும்.

एवं प्राप्ते प्रचक्ष्महे - **शताधिकयेति।** विद्वान् शताधिकया मूर्धन्ययैव नाड्योत्क्रामति। न चास्याः विदुषो दुर्विवेचत्वम्, विद्वान् हि परमपुरुषाराधनभूतात्यर्थप्रियविद्यासामर्थ्यात् विद्याशेषभूततयाऽऽत्यर्थप्रियगत्यनुस्मरणयोगाच्च प्रसन्नेन हार्देन परमपुरुषेणानुगृहीतो भवति;

ततश्च **तदोकः** तस्य जीवस्य स्थानं हृदयम्, **अग्रज्वलनं** भवति। अग्रे ज्वलनं प्रकाशनं यस्य तदिदमग्रज्वलनम्। परमपुरुषप्रसादात् प्रकाशितद्वारो विद्वान् तां नाडीं विजानातीति तया विदुषो गतिरुपपद्यते॥ १६ ॥

इति तदोकोऽधिकरणम् ॥ ८ ॥

---

ஏவம் ப்ராப்தே ப்ரசக்ஷ்மஹே - *ஶதாதிகயேதி*। வித்வாந் ஶதாதிகயா மூர்தந்யயைவ நாட்யா உத்க்ராமதி। ந சாஸ்யா: விதுஷோ துர்விவேசத்வம், வித்வாந் ஹி பரமபுருஷாராதநபூதாத்யர்தப்ரியவித்யாஸாமர்த்யாத் வித்யாஶேஷபூததயா அத்யர்தப்ரியகத்யநுஸ்மரணயோகாச்ச ப்ரஸந்நேந ஹார்தேந பரமபுருஷேண அநுக்ருஹீதோ பவதி;

ததஶ்ச *ததோக:* - தஸ்ய ஜீவஸ்ய ஸ்தாநம் ஹ்ருதயம், *அக்ரஜ்வலநம்* பவதி। அக்ரே ஜ்வலநம் ப்ரகாஶநம் யஸ்ய ததிதம் அக்ரஜ்வலநம்। பரமபுருஷப்ரஸாதாத் ப்ரகாஶிதத்வாரோ வித்வாந் தாம் நாடீம் விஜாநாதீதி தயா விதுஷோ கதிருபபத்யதே।। 16 ।।

இதி ததோகோதிகரணம் ।।8 ।।



**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்கிறோம் -

**சதாதிகயா -** (நூற்றுக்கு அதிகமான நூற்றியொன்றாவது நாடி மூலமாக) - வித்வான் ஆனவன், நூற்றியொன்றாவதான மண்டை-நாடி மூலமாகவே வெளிக் கிளம்புகிறான்; இந்த நாடியை வித்வான் தெரிந்து கொள்ள முடியாது என்பது கிடையாது.

(வித்வான் ஆனவன், ப்ரஹ்மவித்யை எனப்படும் உபாஸநம் செய்கிறான்; அந்த ப்ரஹ்ம-வித்யைக்கு அங்கமாக அர்சிராதி-கதியை சிந்தித்தல் எனும் சிந்தனையும் செய்கிறான்) பரமபுருஷனுக்கு ஆராதனமாகவும் மிகமிக ப்ரியமானதும் ஆகும் ப்ரஹ்ம-வித்யையின் திறனாலும், வித்யைக்கு சேஷமாக தனக்கு மிகவும் ப்ரியமான (அர்சிராதி-கதியை) சிந்தித்தல் எனும் யோகத்தாலும் வித்வானுடைய ஹ்ருதயத்துக்குள் இருக்கும் பரமபுருஷன் ப்ரஸன்னன் ஆகிறான்; அந்த பரமபுருஷனால் அனுக்ரஹிக்கப் பட்டவனாக வித்வான் ஆகிறான்.

அந்த அனுக்ரஹத்தால்,

**ததோக: -** அந்த ஜீவனது இருப்பிடமான ஹ்ருதயம் ஆனது,

**அக்ர-ஜ்வலனம்-** நுனியில் ஒளியுடன் கூடியதாக ஆகிறது; 'அக்ரே ஜ்வலனம் யஸ்ய தத் அக்ரஜ்வலனம்' என்று ஸமாஸ-குறிப்பு.

**தத்ப்ரகாசித-த்வார: -** பரமபுருஷனது அனுக்ரஹத்தால் வெளிச்சம் பெற்ற வாயிலை உடைய வித்வான் ஆனவன்,

அந்த மண்டை-நாடியை அறிவான்; அதனால், அதன் மூலம் வித்வான் செல்வது சரியாகிறது.

********************************

**ததோகோதிகரணம் முற்றிற்று**



# 143. ரஶ்ம்யநுஸாராதிகரணம் (4-2-9)

**முன் குறிப்பு**

வேதம் சொல்கிறது - ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவன், இந்த ஶரீரத்திலிருந்து வெளி-யேறி, ஸூர்யனது ஒளிக் கதிர்களைக் கொண்டு மேலே உயர செல்கிறான்'' என்று.

விசாரம் - ஸூர்யனது ஒளிக்கதிர்களைக் கொண்டே செல்கிறான் என்கிற நியமம் வருமா? அல்லது நியமம் இல்லாமல் அப்படியும் செல்லலாம் என்பதா?

பூர்வபக்ஷம் - நியமம் கிடையாது; இரவில் ஸூர்யனது ஒளிக்கதிர்கள் இருக்காது. எனவே, இரவில் மரணம் அடைபவன் அவற்றைப் பற்றிக் கொண்டு போக முடியாது; பகலில் மரணம் அடைந்தால் மட்டுமே அப்படி போக முடியும்; அதைத்தான் வேதம் சொல்கிறது.

ஸித்தாந்தம் - வேதம் சொன்ன நியமம் உண்டு; ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவன், ஸூர்யனது ஒளிக் கதிர்களைப் பற்றிக்கொண்டு உயர செல்கிறான்.

இரவிலும் கூட அப்படி போக முடியும்; ஏனெனில், இரவிலும் ஸூர்யனது ஒளிக் கதிர்-கள் இருக்கும். அதனால்தான் கோடைக் காலத்தில் இரவிலும் கூட வெப்பம் தெரிகிறது.

ஆனால் இரவில் ஸூர்யனது அந்த ஒளிக் கதிர்கள் மிகக் குறைவாக இருக்கும் என்ப-தால் இருளை அகற்ற போதுமாகவில்லை.

ஒரு இடத்தில் நெருப்பு இருந்து, பின்னர் அதனை அகற்றினால், அதன் பின்னரும் சூடு இருக்கும்; ஏனெனில், நெருப்பின் சிறு ஸூக்ஷ்மமான அம்சங்கள் இருக்கும். அது-போல இது.

எனவே, இரவிலோ பகலிலோ எப்போது மரணம் ஆனாலும் சரி, ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவர் எல்லாருமே ஸூர்யனது ஒளிக்கதிர்களைப் பற்றிக்கொண்டு மேலே செல்வர் என்பது சரியாகும்.

# १४३. रश्म्यनुसाराधिकरणम् (४-२-९)

## ५०५. रश्म्यनुसारी (४-२-१७)

विदुषो हृदयात् शताधिकया मूर्धन्यनाड्या निर्गतस्याऽऽदित्यरश्मीन् अनुसृत्याऽऽदित्यमण्डलगतिः श्रूयते - **"अथ यत्रैतदस्माच्छरीरादुत्क्रामति, अथैतैरेव रश्मिभिरूर्ध्वमाक्रमते"** (छा.8-6-5)[1] इति।

तत्र रश्म्यनुसारेणैवेत्ययं गतिनियमः सम्भवति, नेति चिन्तायाम् -

निशि मृतस्य विदुषो रश्म्यनुसारासम्भवादनियमः। वचनं तु पक्षप्राप्तविषयमिति प्राप्ते उच्यते -

**रश्म्यनुसारी** इति। रश्म्यनुसार्येव विद्वानूर्ध्वं गच्छति; कुतः? **"अथैतैरेव रश्मिभिः"** (छा.8-6-5)[2] इत्यवधारणात्; पाक्षिकत्वे ह्येवकारोऽनर्थकस्स्यात्।

यदुक्तम् - निशि मृतस्य रश्म्यसम्भवात् रश्मीननुसृत्य गमनं नोपपद्यते इति, तन्न; निश्यपि सूर्यरश्म्यनुसारः सम्भवति; लक्ष्यते हि निश्यपि निदाघसमये ऊष्मोपलब्ध्या

---

# 143. ரஶ்ம்யநுஸாராதிகரணம் (4-2-9)

## 505. ரஶ்ம்யநுஸாரீ (4-2-17)

விதுஷோ ஹ்ருதயாத் ஶதாதிகயா மூர்தந்யநாட்யா நிர்கதஸ்ய ஆதித்யரஶ்மீந் அநுஸ்ருத்ய ஆதித்யமண்டலகதி: ஶ்ரூயதே - *"அத யத்ரைததஸ்மாச்சரீராதுத்க்ராமதி, அதைதைரேவ ரஶ்மிபிரூர்த்வமாக்ரமதே"* (சா.8-6-5)[1] இதி।

தத்ர ரஶ்ம்யநுஸாரேணைவேத்யயம் கதிநியம: ஸம்பவதி, நேதி சிந்தாயாம் -

நிஶி ம்ருதஸ்ய விதுஷோ ரஶ்ம்யநுஸாராஸம்பவாதநியம:। வசநம் து பக்ஷப்ராப்தவிஷயமிதி ப்ராப்தே உச்யதே -

*ரஶ்ம்யநுஸாரீ* இதி। ரஶ்ம்யநுஸார்யேவ வித்வாந் ஊர்த்வம் கச்சதி; குத:? *"அதைதைரேவ ரஶ்மிபி:"* (சா.8-6-5)[2] இத்யவதாரணாத்; பாக்ஷிகத்வே ஹி ஏவகார: அநர்தக: ஸ்யாத்।

யதுக்தம் - நிஶி ம்ருதஸ்ய ரஶ்ம்யஸம்பவாத் ரஶ்மீநநுஸ்ருத்ய கமநம் நோபபத்யதே இதி, தந்ந; நிஶ்யபி ஸூர்யரஶ்ம்யநுஸார: ஸம்பவதி;

# 143. ரஶ்ம்யநுஸாராதிகரணம் (4-2-9)

## 505. ரஶ்ம்யநுஸாரீ (4-2-17)

*ஸூர்யனது ஒளிக்கதிர்களைப் பின்பற்றியே [ஜ்ஞானி ஆனவன் உயர செல்கிறான்]*

**ஸங்கதி (விஷயதொடர்பு) & விஷயவாக்யம்**

ஹ்ருதயத்திலிருந்து நூற்றியொன்றாவதான மண்டை-நாடி மூலமாக வெளி-யேறும் வித்வான் ஆனவன், ஸூர்யனது ஒளிக்கதிர்களைப் பின்பற்றி ஸூர்ய-மண்டலத்தை அடைவது வேதத்தில் சொல்லப் படுகிறது - [1]**"எப்போது இந்த ஶரீரத்-திலிருந்து வெளியேறுகிறானோ, அப்போது இந்த (ஸூர்யனது) ஒளிக்கதிர்க-ளின் மூலமாகவே உயர செல்கிறான்"** - என்று.

**ஸம்ஶயம்**

இதில், ஒளிக்கதிர்கள் மூலமாகவே (செல்கிறான்) என்கிற இந்த நியமம் வருமா? அல்லது வராதா? என்று விசாரம் செய்யும்போது,

**பூர்வபக்ஷம்**

இரவில் மரணமடையும் ஜ்ஞானி ஆனவன் ஸூர்யனது ஒளிக்கதிர்களைப் பின்பற்றுவது நடக்காது; ஆனபடியால், நியமம் வராது; இந்த வேத-வாக்யமானது, அப்படியும் ஆகலாம் என்பதைப் பற்றியது. (பகலில் மரணமடைபவன் ஸூர்யனது ஒளிக்கதிர்களைப் பின்பற்றுவான்; அப்படியும் ஆகலாம் என்பதை சொல்கிறது)

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட, ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது -

**'ரஶ்ம்யநுஸாரீ' -** ஒளிக்கதிர்களைப் பின்பற்றியே ஜ்ஞானி ஆனவன் உயர செல்கிறான்.

ஏன்? ஏனெனில், [2]**"இந்த ஒளிக்கதிர்களின் மூலமாகவே"** என்று தீர்மானமாக வேதம் சொல்கிறது; சில சமயம் மட்டும் நடக்கும் முறை பற்றி வேதம் சொல்வதா-னால், 'ஒளிக்கதிர்களின் மூலமாகவே' என்று 'ஏ' என்று சொன்னது வீணாகி விடும்.

**கேள்வி -** இரவில் மரணமடைபவனுக்கு ஸூர்யனது ஒளிக்கதிர்கள் இருக்-காதானபடியால், ஒளிக்கதிர்களைப் பின்பற்றியே செல்வது வராது.

**பதில் -** அப்படி சொன்னது எதுவோ அது கிடையாது; இரவிலும் ஸூர்யனது ஒளிக்கதிர்களைப் பின்பற்றுவது நடக்கும். (ஏனெனில், இரவிலும் ஸூர்யனது ஒளிக்கதிர்கள் உள்ளன.)

रश्मिसद्भावः; हेमन्तादौ तु हिमाभिभवाद् दुर्दिन इवोष्मानुपलम्भः; श्रूयते च नाडीरश्मीनां सर्वदाऽन्योन्यान्वयः, **"तद्यथा महापथ आततः उभौ ग्रामौ गच्छति इमं चामुं च, एवमेवैते आदित्यस्य रश्मय उभौ लोकौ गच्छन्तीमं चामुं च। अमुष्मादादित्यात् प्रतायन्ते; ताः आसु नाडीषु सृप्ताः। आभ्यो नाडीभ्यः प्रतायन्ते; तेऽमुष्मिन्नादित्ये सृप्ताः"** (छा.8-6-2)[1] इति।

तस्मान्निश्यपि रश्मिसम्भवान्निशि मृतानामपि विदुषां रश्म्यनुसारेणैव ब्रह्मप्राप्तिरस्त्येव॥१७॥



इति रश्म्यनुसाराधिकरणम् ॥ ९ ॥

லக்ஷ்யதே ஹி நிஶ்யபி நிதாகஸமயே ஊஷ்மோபலப்த்யா ரஶ்மிஸத்பாவ:। ஹேமந்தாதௌ து ஹிமாபிபவாத் துர்திநே இவ ஊஷ்மாநுபலம்ப:। ஶ்ரூயதே ச நாடீரஶ்மீநாம் ஸர்வதா அந்யோந்யாந்வய:, *"தத்யதா மஹாபத ஆதத: உபௌ க்ராமௌ கச்சதி இமம் சாமும் ச, ஏவமேவைதே ஆதித்யஸ்ய ரஶ்மய உபௌ லோகௌ கச்சந்தீமம் சாமும் ச। அமுஷ்மாதாதித்யாத் ப்ரதாயந்தே; தா: ஆஸு நாடீஷு ஸ்ருப்தா:। ஆப்யோ நாடீப்ய: ப்ரதாயந்தே; தேऽமுஷ்மிந்நாதித்யே ஸ்ருப்தா:"* (சா.8-6-2)[1] இதி। தஸ்மாத் நிஶ்யபி ரஶ்மிஸம்பவாத் நிஶி ம்ருதாநாமபி விதுஷாம் ரஶ்ம்யநுஸாரேணைவ ப்ரஹ்மப்ராப்திரஸ்த்யேவ ॥17 ॥



இதி ரஶ்ம்யநுஸாராதிகரணம் ॥9 ॥



கோடைகாலத்தில் இரவிலும் சூடு தெரிவதால், ஒளிக்கதிர்கள் இருப்பது ஊகிக்கப் படுகிறதுதானே! பனிக்காலம் முதலியதில் இரவில் பனியால் மூடப்படு-வதால் சூடு தெரிவதில்லை; மேகமூட்டமான துர்தின-நாளில் (பகலில் கூட) சூடு தெரியாதது போல ஆகிறது.

மேலும், நாடிகளுக்கும் ஒளிக்கதிர்களுக்கும் எப்போதும் ஒன்றுக்கொன்று தொடர்பு இருப்பது வேதத்தில் சொல்லப்படுகிறது - [1]**''ஒரு பெரிய பாதையானது பரந்து எப்படி இரு கிராமங்களுக்கு போகிறதோ, அப்படியே ஸூர்யனது இந்த ஒளிக்கதிர்கள் இந்த உலகம் மற்றும் மேல்-உலகம் எனும் இரு உலகங்களுக்கும் செல்கின்றன; அந்த ஸூர்யனிடமிருந்து பரவுபவையாய் அவை இந்த நாடிக-ளில் தொடர்புடையவை ஆகின்றன; இந்த நாடிகளிலிருந்து பரவுபவையாய் அவை அந்த ஸூர்யனிடம் தொடர்புடையவை ஆகின்றன''** என்று.

**ப்ரயோஜனம் (அதிகரண-பலன்)**

ஆகவே, இரவிலும் ஸூர்ய-ஒளிக்கதிர்கள் இருக்கும் என்பதால், இரவில் மரணமடையும் ஜ்ஞானிகளுக்கும் ஒளிக்கதிர்களைப் பின்பற்றியே ப்ரஹ்மத்தை அடைதல் என்பது நிச்சயமாக உண்டு.

**ரஶ்ம்யநுஸாராதிகரணம் முற்றிற்று.**



# 144. நிஶாதிகரணம் (4-2-10)

**முன் குறிப்பு**

ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்பவன், ஸூர்யனது ஒளிக்கதிர்களைப் பற்றிக்கொண்டு உயர செல்கிறான்; இரவில் மரணமானால் கூட ஸூர்யனது கிரணங்கள் ஸூக்ஷ்மமாக இருக்குமாதலால், அவற்றைப் பற்றிக்கொண்டு உயர செல்லலாம் என்று சொல்லியாயிற்று.

இப்போது, இரவில் மரணம் அடைபவனைப் பற்றி வேறொரு விசாரம்.

பூர்வபக்ஷம் - இரவில் ஸூர்யகிரணங்கள் இருந்தாலும், இரவில் மரணம் அடைபவன் மோக்ஷம் போக முடியாது. ஏனெனில், இரவில் மரணம் என்பது இகழ்வானது என ஶாஸ்த்ரம் சொல்கிறது. பகலில் மரணம் அடைதல் உயர்வானது என்றும் சொல்கிறது. அதனால், இரவில் மரணம் அடைபவன் உயர்ந்த நல்ல கதிக்கு செல்ல மாட்டான் என தெரிகிறது. அப்படி இருக்கும்போது இரவில் மரணம் அடைபவன் எப்படி பரமபதம் செல்ல முடியும்?

ஸித்தாந்தம் - ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவனுக்கு அதன் பலனாக புண்யபாபகர்மங்கள் தொலைகின்றன; அப்படி தொலைந்தபின், உடனேயே அவன் மோக்ஷம் பெறுவான் என வேதம் சொல்கிறது; எனவே, வேறு கால விளம்பம் கிடையாது என்றும் சொல்கிறது; எனவே, இரவு பகல் முதலிய காலக் கணக்கு எதுவும் இவனை கட்டுப்படுத்தாது. இவன் பகலிலோ இரவிலோ எப்போது மரணம் அடைந்தாலும், உடனேயே மோக்ஷம் பெறுவான்.

இரவில் மரணம் இழிவானது என்று ஶாஸ்த்ரம் சொல்வதன் கருத்து வேறு; அது ப்ரஹ்ம-உபாஸநம் செய்யாத மற்றவருக்குத்தான்; உபாஸநம் செய்யாதவர், இரவில் மரணம் அடைந்தால் அது சற்றே இழிவானது; அவருக்கு நல்ல உயர்ந்த கதி கிடைக்காது; ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவரை இது கட்டுப் படுத்தாது.

பின்குறிப்பு: - சரணாகதியும் ப்ரஹ்ம-வித்யைகளில் ஒன்றானபடியால், சரணாகதி செய்தவனுக்கும் இதேபோல, இரவில் மரணம் அடைந்தாலும் மோக்ஷகதி உண்டு.

# १४४. निशाधिकरणम् (४-२-१०)

**५०६. निशि नेतिचेन्न सम्बन्धस्य यावद्देहभावित्वात् दर्शयति च (४-२-१८)**

इदमिदानीं चिन्त्यते - विदुषो निशि मृतस्य ब्रह्मप्राप्तिरस्ति, नेति।

यद्यपि निशायां सूर्यरश्मिसम्भवात् रश्म्यनुसारेण गतिर्निशायामपि सम्भवति - तथापि निशामरणस्य शास्त्रेषु गर्हितत्वात् परमपुरुषार्थलक्षणब्रह्मप्राप्तिर्निशामृतस्य न सम्भवति। शास्त्रेषु दिवामरणं प्रशस्तम्, विपरीतं निशामरणम्

**''दिवा च शुक्लपक्षश्च उत्तरायणमेव च।**
**मुमूर्षतां प्रशस्तानि विपरीतं तु गर्हितम्॥''** (म.अनु.22-31)[1] इति।

दिवामरणनिशामरणयोः प्रशस्तत्वविपरीतत्वे चोत्तमाधमगतिहेतुत्वेन स्याताम्। अतो निशि मरणमधोगतिहेतुत्वान्न ब्रह्मप्राप्तिहेतुरिति चेत् -

तन्न; विदुषः कर्मसम्बन्धस्य यावद्देहभावित्वात्।

---

## 144. நிஶாதிகரணம் (4-2-10)

**506. நிஶி நேதிசேந்ந ஸம்பந்தஸ்ய யாவத்தேஹபாவித்வாத் தர்ஶயதி ச (4-2-18)**

இதமிதாநீம் சிந்த்யதே - விதுஷோ நிஶி ம்ருதஸ்ய ப்ரஹ்மப்ராப்தி-ரஸ்தி, நேதி।

யத்யபி நிஶாயாம் ஸூர்யரஶ்மிஸம்பவாத் ரஶ்ம்யநுஸாரேண கதி: நிஶாயாமபி ஸம்பவதி - ததாபி நிஶாமரணஸ்ய ஶாஸ்த்ரேஷு கர்ஹித-த்வாத் பரமபுருஷார்தலக்ஷணப்ரஹ்மப்ராப்தி: நிஶாம்ருதஸ்ய ந ஸம்பவதி। ஶாஸ்த்ரேஷு திவாமரணம் ப்ரஶஸ்தம், விபரீதம் நிஶாமரணம்;

*''திவா ச ஶுக்லபக்ஷஶ்ச உத்தராயணமேவ ச।*
*முமூர்ஷதாம் ப்ரஶஸ்தாநி விபரீதம் து கர்ஹிதம்॥''* (ம.அ.22-31)[1] இதி।

திவாமரண-நிஶாமரணயோ: ப்ரஶஸ்தத்வ-விபரீதத்வே ச உத்த-மாதமகதிஹேதுத்வேந ஸ்யாதாம்। அத: நிஶிமரணம் அதோகதிஹேது-த்வாத் ந ப்ரஹ்மப்ராப்திஹேது: இதி சேத் -

தந்ந; விதுஷ: கர்மஸம்பந்தஸ்ய யாவத்தேஹபாவித்வாத்।

# 144. நிஶாதிகரணம் (4-2-10)

## 506.நிஶி ந இதி சேத் ந ஸம்பந்தஸ்ய யாவத்-தேஹபாவித்வாத் தர்ஶயதி ச (4-2-18)

*இரவில் [மரணம் அடைபவனுக்கு ப்ரஹ்மப்ராப்தி] கிடையாது என்றால் அதல்ல; ஶரீரம் உள்ளவரையே கர்ம-ஸம்பந்தம் ஆவதால்; வேதமும் காண்பிக்கிறது.*

**ஸம்ஶயம் (ஸந்தேஹம்)**

இப்போது இது விசாரம் செய்யப்படுகிறது - இரவில் மரணம் அடையும் வித்வானுக்கு ப்ரஹ்ம-ப்ராப்தி உண்டா? இல்லையா? என்று.

(ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவன் இரவில் மரணம் அடைந்தால் ப்ரஹ்மத்தை அடைவது உண்டா? கிடையாதா?) என்று.

**ஸங்கதி & பூர்வபக்ஷம்**

(போன அதிகரணத்தில் சொன்னபடி ப்ரஹ்ம-உபாஸநம் செய்யும் வித்வான் ஆனவன், இரவில் மரணம் அடைந்தாலும்) இரவில் ஸூர்யனது ஒளிக்கதிர்கள் இருக்கலாமாதலால், ஒளிக்கதிரைப் பின்பற்றி செல்வது இரவிலும் ஏற்படலாம்;

ஆனாலும், இரவில் மரணம் என்பது ஶாஸ்த்ரங்களில் இகழப்பட்டுள்ளது; ஆகையால் மிக உயர்ந்த புருஷார்த்தமாகிற ப்ரஹ்ம-ப்ராப்தியானது இரவில் மரணமடைபவனுக்கு வராது; ஶாஸ்த்ரங்களில் பகல்-மரணம் புகழப் பட்டுள்ளது; நேரெதிராக இரவு-மரணம் இகழப்பட்டுள்ளது- [1] **''மரணம் பெறுபவருக்கு பகலும், சுக்ல-பக்ஷமும், உத்தராயணமும் சிறந்தவை; மாறாக ஆனவை இகழப்படுபவை''** - என்று.

பகல்-மரணம் புகழப்படுவதானது, அது உயர்ந்த கதிக்கு காரணமாவதால் ஆகும்; இரவு-மரணம் மாறாக இகழப் படுவதும், அது தாழ்ந்த கதிக்குக் காரணமாவதால் ஆகும்; ஆகையால், இரவில் மரணம் என்பது தாழ்ந்த கதிக்குக் காரணம் ஆவதால், ப்ரஹ்மத்தை அடைதலுக்குக் காரணமாக ஆகாது. - என்றால்,

**ஸித்தாந்தம்**

அதல்ல; ஏனெனில், கர்ம-ஸம்பந்தம் என்பது ஶரீரம் உள்ள வரையே இருப்பதாகும்.

एतदुक्तं भवति - अनारब्धकार्याणामधोगतिहेतुभूतानां कर्मणां विद्यासम्बन्धेनैव विनाशात्, उत्तरेषां चाश्लेषात्, प्रारब्धकार्यस्य च चरमदेहावधित्वात्, बन्धहेत्वभावात् विदुषो निशामृतस्यापि ब्रह्मप्राप्तिः सिद्धैव।

दर्शयति च श्रुतिः, **''तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्ये, अथ सम्पत्स्ये''**(छा.6-14-2)[1] इति।

**''दिवा च शुक्लपक्षश्च''** (म.अ.22-31)[2] इत्यादिवचनमविद्वद्विषयम्॥१८॥



इति निशाधिकरणम् ॥ १० ॥

---

ஏதத்துக்தம் பவதி - அநாரப்தகார்யாணாம் அதோகதிஹேதுபூதாநாம் கர்மணாம் வித்யாஸம்பந்தேநைவ விநாஶாத், உத்தரேஷாம் ச அஶ்லேஷாத் ப்ராரப்தகார்யஸ்ய ச சரமதேஹாவதித்வாத் பந்தஹேத்வ-பாவாத் விதுஷோ நிஶாம்ருதஸ்யாபி ப்ரஹ்மப்ராப்தி: ஸித்தைவ।

தர்ஶயதி ச ஶ்ருதி:, *''தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே; அத ஸம்பத்ஸ்யே''* (சா.6-12-2)[1] இதி।

*''திவா ச ஶுக்லபக்ஷஶ்ச''*(ம.அ.22-31)[2] இத்யாதிவசநம் அவித்வத்-விஷயம்।।18।।

இதி நிஶாதிகரணம் ।।10 ।।



இது சொன்னதாக ஆகிறது - தாழ்ந்த கதிக்குக் காரணமான கர்மங்களில் -

- பலனளிக்க ஆரம்பிக்காதவை ப்ரஹ்ம-வித்யையின் தொடர்பாலேயே அழிந்து விடுகின்றன;
- ப்ரஹ்ம-வித்யைக்குப் பின்னால் வரும் பாபங்கள் ஒட்டுவதில்லை;
- பலன் தர ஆரம்பித்த கர்மமானது கடைசி-ஶரீரம் உள்ள வரையே இருக்கும்;

ஆதலால், ஸம்ஸார-பந்தத்துக்குக் காரணமான கர்மம் எதுவும் இல்லை-யாதலால், இரவில் மரணமடையும் வித்வானும் ப்ரஹ்மத்தை அடைகிறான் என்பது உண்டுதான்.

**தர்ஶயதி ச -** இதை வேதம் காண்பிக்கிறது [1]**''ப்ரஹ்ம-உபாஸநம் செய்யும் அவனுக்கு எவ்வளவு காலம் ஶரீரத்திலிருந்து விடுபடவில்லையோ, அவ்வளவே தாமதம்; பின்னர் உடனே ப்ரஹ்மத்தை அடைவான்''** என்று.

[2]**''பகலும் சுக்லபக்ஷமும்''** என்று ஆரம்பித்து சொன்ன ஶாஸ்த்ர-வசனம் ஆனது, வித்வான் ஆகாதவர்களைப் பற்றியது. (ப்ரஹ்ம-ஜ்ஞானி ஆகாத மற்றவ-ருக்கு மரணம் அடைய அந்த காலங்கள் சிறந்தவை; ப்ரஹ்ம-ஜ்ஞானிக்கோ எல்லா காலமும் சிறந்ததே).

***********************************************

**நிஶாதிகரணம் முற்றிற்று.**



# 145. தக்ஷிணாயனாதிகரணம் (4-2-11)

## முன் குறிப்பு

உபாஸநம் செய்பவன் இரவில் மரணம் அடைந்தால் ப்ரஹ்மத்தை அடைவானா என்ற விசாரம் ஆயிற்று. இப்போது அதே போல தக்ஷிணாயனத்தில் மரணம் அடைபவன் ப்ரஹ்மத்தை அடைவானா என்பது விசாரம்.

கேள்வி - உத்தராயணத்தில் மரணம் என்பது உயர்வானது; தக்ஷிணாயனத்தில் மரணம் இழிவானது என ஶாஸ்த்ரம் சொல்வதால் தக்ஷிணாயனத்தில் மரணம் அடைந்தால் பரமபதம் கிடைக்காது.

பதில் - ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவனுக்கு அதன் மூலம் புண்யபாபகர்மங்கள் அழிந்து விடுவதால், அவன் உடனேயே மோக்ஷ பலனைப் பெறுவான். அவனுக்கு வேறு காலதாமதம் கிடையாது என வேதம் சொல்கிறது. மரணகாலத்தில் உயர்வு தாழ்வெல்லாம் ப்ரஹ்ம-உபாஸநம் செய்யாதவர்களுக்கு சொன்ன கணக்கு ஆகும்.

இது அதிதேஶ அதிகரணம்; அதாவது போன அதிகரணத்தில் சொன்ன முறையிலேயே இந்த விஷயத்தை அறியலாம். ஆனாலும், அதிகப்படியான கேள்வி பதில் இருப்பதால் தனி அதிகரணம் அமைகிறது..

அதிக கேள்வி - ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவரில், தக்ஷிணாயனத்தில் மரணம் அடைபவன் சந்த்ரனிடம் செல்கிறான் என்று ஒரு ஒரு வேதவாக்யம்; சந்த்ரனிடம் செல்பவன் மறுபிறவி எடுக்கிறான் என்று மற்றொரு வேதவாக்யம்; எனவே, அவன் மோக்ஷம் அடைய மாட்டான். மேலும் ப்ரஹ்ம-உபாஸநம் செய்துவந்த பீஷ்மர் தக்ஷிணாயனத்தில் மரணம் அடைவதைத் தவிர்த்தார்; உத்தராயணத்துக்காக காத்திருந்து பின்னர் மரணம் அடைந்தார் என்று மஹாபாரதம் தெரிவிக்கிறது; அதனால், உபாஸநம் செய்பவர் கூட தக்ஷிணாயனத்தில் மரணம் அடைந்தால் மோக்ஷம் கிடைக்காது எனத் தெரிகிறது.

பதில் - அப்படியல்ல; ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவரில் தக்ஷிணாயனத்தில் மரணம் அடைபவர் சந்த்ரனிடம் செல்கிறார்; பின்னர் அங்கிருந்து பரமபதம் போகிறார் என்றும் தொடர்ந்து வேதமே சொல்கிறது. ப்ரஹ்ம-உபாஸநம் செய்யாதவர்தான் சந்த்ரனிடம் போய்விட்டு, மறுபிறவி எடுப்பார்.

பீஷ்மர், தன் விருப்பப்படி மரணகாலத்தை முடிவு செய்யும் வரம் பெற்றிருந்தார். அதனால், உத்தராயணம் உயர்ந்தது என்பதை மற்றவருக்கு உணர்த்துவதற்காக அப்படி காத்திருந்தார்; அதனால்தான் பரமபதம் பெற்றார் என்பது கிடையாது. அவரைப் பொறுத்தவரை ப்ரஹ்ம-உபாஸநம் செய்தவர் ஆனபடியால், எப்போது மரணம் அடைந்தாலும் பரமபதம் உண்டுதான்.

# १४५. दक्षिणायनाधिकरणम् (४-२-११)

## ५०७.अतश्चायनेऽपि दक्षिणे (४-२-१९)

निशि मृतस्यापि विदुषो ब्रह्मप्राप्तौ यो हेतुरुक्तः, तत एव हेतोर्दक्षिणेऽप्ययने मृतस्य ब्रह्मप्राप्तिः सिद्धा॥

अधिकाशङ्का तु - "**अथ यो दक्षिणे प्रमीयते, पितृणामेव महिमानं गत्वा चन्द्रमस्सायुज्यं गच्छति**"(तै.2.64-79)[1] इति दक्षिणायने मृतस्य चन्द्रप्राप्तिश्रवणात्, चन्द्रं प्राप्तानां च "**तेषां यदा तत्पर्यवैति**"(बृ.8-2-16)[2], "**अथैतमेवाध्वानं पुनर्निवर्तन्ते**" (छा.5-10-5)[3] इति पुनरावृत्तिश्रवणात्, भीष्मादीनां च ब्रह्मविद्यानिष्ठानामुत्तरायणप्रतीक्षादर्शनात् दक्षिणायने मृतस्य ब्रह्मप्राप्तिर्न सम्भवति इति।

परिहारस्तु - अविदुषां पितृयाणेन पथा चन्द्रं प्राप्तानामेव पुनरावृत्तिः; विदुषस्तु चन्द्रं प्राप्तस्यापि, "**तस्माद्ब्रह्मणो महिमानमाप्नोति**"(तै.2.64-79)[4] इति वाक्यशेषात् तस्य दक्षिणायनमृतस्य चन्द्रप्राप्तिः ब्रह्म प्रेप्सतो (प्रपित्सतो) विश्रमहेतुमात्रमिति गम्यते। वाक्यशेषाभावेऽपि पूर्वोक्तादेव बन्धहेत्वभावात् विदुषश्चन्द्रं प्राप्तस्यापि ब्रह्मप्राप्तिः

---

# 145. தக்ஷிணாயநாதிகரணம் (4-2-11)

## 507. அதப்ச்சாயநேऽபி தக்ஷிணே (4-2-19)

நிஶி ம்ருதஸ்யாபி விதுஷோ ப்ரஹ்மப்ராப்தௌ யோ ஹேதுருக்த:, தத ஏவ ஹேதோ: தக்ஷிணேऽப்யயநே ம்ருதஸ்ய ப்ரஹ்மப்ராப்தி: ஸித்தா।

அதிகாஶங்கா து - *"அத யோ தக்ஷிணே ப்ரமீயதே, பித்ருணாமேவ மஹிமாநம் கத்வா சந்த்ரமஸ்ஸாயுஜ்யம் கச்சதி"*(தை.2-80)[1] இதி தக்ஷிணாயநே ம்ருதஸ்ய சந்த்ரப்ராப்திஶ்ரவணாத் சந்த்ரம் ப்ராப்தாநாம் ச *"தேஷாம் யதா தத்பர்யவைதி"* (ப்ரு.8-2-16)[2], *"அதைதமேவாத்வாநம் புநர்நிவர்தந்தே"* (சா.5-10-5)[3] இதி புநராவ்ருத்திஶ்ரவணாத, பீஷ்மாதீநாம் ச ப்ரஹ்மவித்யாநிஷ்டாநாம் உத்தராயணப்ரதீக்ஷாதர்ஶநாத் தக்ஷிணாயநே ம்ருதஸ்ய ப்ரஹ்மப்ராப்தி: ந ஸம்பவதி - இதி।

பரிஹாரஸ்து - அவிதுஷாம் பித்ருயாணேந பதா சந்த்ரம் ப்ராப்தாநாமேவ புநராவ்ருத்தி:; விதுஷஸ்து சந்த்ரம் ப்ராப்தஸ்யாபி, *"தஸ்மாத்ப்ரஹ்மணோ மஹிமாநமாப்நோதி"* (தை.2-80)[4] இதி வாக்யஶேஷாத் தஸ்ய தக்ஷிணாயநம்ருதஸ்ய சந்த்ரப்ராப்தி: ப்ரஹ்ம ப்ரேப்ஸதோ (ப்ரபித்ஸதோ) விஶ்ரமஹேதுமாத்ரமிதி கம்யதே। வாக்யஶேஷாபாவேऽபி பூர்வோக்தாதேவ பந்தஹேத்வபாவாத் விதுஷ: சந்த்ரம் ப்ராப்தஸ்யாபி ப்ரஹ்மப்ராப்தி: அநிவார்யா।

# 145. தக்ஷிணாயனாதிகரணம் (4-2-11)

## 507. அத: ச அயனே அபி தக்ஷிணே (4-2-19)

*அதனாலேயே தக்ஷிணாயனத்திலும் ஆகும்.*

**ஸங்கதியும் அதிகரணமும்**

ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவன், இரவில் மரணம் அடைபவனும் கூட ப்ரஹ்மத்தை அடைகிறான் என்பதில் எந்த காரணம் சொல்லப்பட்டதோ, அதே காரணத்தாலேயே தக்ஷிணாயனத்தில் மரணம் அடையபவனும் கூட ப்ரஹ்மத்தை அடைகிறான் என்பது ஏற்படும்.

**பூர்வபக்ஷம்**

அதிகப்படியான கேள்வி - [1]**''யார் தக்ஷிணாயனத்தில் மரணம் அடைகிறானோ, அவன் பித்ருக்களின் பெருமையை அடைந்து, பின்னர் சந்த்ரனுடன் சமானமான போகம் பெறுகிறான்''** என்று தக்ஷிணாயனத்தில் மரணம் அடைபவன் சந்த்ரனை அடைவதாக வேதம் சொல்கிறது; சந்த்ரனை அடைந்தவர்கள் மீண்டும் திரும்புவதாகவும் வேதம் சொல்கிறது - [2]**''சந்த்ரனை அடையும் அவர்களுக்கு அந்த கர்மம் ஆனது எப்போது தீர்கிறதோ, (அப்போதே திரும்புவர்)''** என்றும், [3]**''(கர்மம் தீரும்வரை இருந்து விட்டு) பின்னர் இதே வழியிலேயே மீண்டும் திரும்புவர்''** என்றும் சொல்கிறது. மேலும், ப்ரஹ்ம-உபாஸநம் செய்து கொண்டிருந்தவரான பீஷ்மர் முதலியவர்கள் (மரணம் அடைவதற்காக) உத்தராயண-காலத்தை எதிர்நோக்கி காத்திருந்ததாக காண்கிறது; அதனால், தக்ஷிணாயனத்தில் மரணம் அடைபவன் ப்ரஹ்மத்தை அடைவது வராது - என்று.

**ஸித்தாந்தம்**

அதிகப்படியான பரிஹாரம் - ப்ரஹ்ம-வித்யையை செய்யாதவர்களாய் பித்ருயானம் வழியாக சந்திரனை அடைந்தவர்கள்தாம் திரும்பி வருகின்றனர்; ப்ரஹ்ம-வித்யையை செய்யும் வித்வானோ, சந்திரனை அடைந்தவன் ஆனாலும், [4]**''அங்கிருந்து ப்ரஹ்மத்தின் பெருமையை அடைகிறான்''** என்று வாக்யத்தின் மிகுதி பாகம் உள்ளது; அதனால், தக்ஷிணாயனத்தில் மரணமடையும் அந்த வித்வான் ஆனவன், சந்த்ரனை அடைதல் ஆனது, ப்ரஹ்மத்தை அடையப் போகும் அவனுக்கு ஒய்வுக்குக் காரணமாக மட்டுமே ஆகும் என்று தெரிகிறது.

வாக்யத்தின் மிகுதி-பாகம் இல்லை என்று வைத்துக் கொண்டாலும், அவனுக்கு ஸம்ஸாரபந்தத்துக்கு காரணமான கர்மம் இல்லை என்று முன்பே சொன்னபடியாலேயே, வித்வான் ஆனவன் சந்த்ரனை அடைந்தாலும், ப்ரஹ்மத்தை அடைதல் தடுக்க முடியாதது ஆகும்.

अनिवार्या। भीष्मादीनां योगप्रभावात् स्वच्छन्दमरणानां धर्मप्रवर्तनाय उत्तरायणप्राशस्त्य-प्रदर्शनार्थस्तथाविधाचारः॥ १९ ॥

ननु च विदुषो मुमूर्षून् प्रति पुनरावृत्तिहेतुत्वेन कालविशेषविधिर्दृश्यते,

**''यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः।**
**प्रयाता यान्ति तं कालं वक्ष्यामि भरतर्षभ॥**
**अग्निर्ज्योतिरहश्शुक्लः षण्मासा उत्तरायणम्।**
**तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः॥**
**धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम्।**
**तत्र चान्द्रमसं ज्योतिर्योगी प्राप्य निवर्तते॥**
**शुक्लकृष्णे गती ह्येते जगतः शाश्वते मते।**
**एकया यात्यनावृत्तिमन्ययाऽऽवर्तते पुनः॥''** (गी.8-23,24,25,26)[1] इति,

तत्राह -

## ५०८.योगिनः प्रति स्मर्येते स्मार्ते चैते (४-२-२०)

नात्र मुमूर्षून् प्रति मरणकालविशेषोपादानं स्मर्यते, अपितु **योगिनः** योगनिष्ठान्

பீஷ்மாதீநாம் யோகப்ரபாவாத் ஸ்வச்சந்தமரணாநாம் தர்மப்ரவர்தநாய உத்தராயணப்ராஶஸ்த்யப்ரதர்ஶநார்த: ததாவிதாசார:।।19।।

நநு ச விதுஷோ முமூர்ஷூந் ப்ரதி புநராவ்ருத்திஹேதுத்வேந காலவிஶேஷவிதிர்த்ருஶ்யதே,

*''யத்ர காலே த்வநாவ்ருத்திமாவ்ருத்திம் சைவ யோகிந:।*
*ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப।।*
*அக்நிர்ஜ்யோதிரஹஶ்ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணம்।*
*தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநா:।।*
*தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணாயநம்।*
*தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர்யோகீ ப்ராப்ய நிவர்ததே।।*
*ஶுக்ல-க்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத: ஶாஶ்வதே மதே।*
*ஏகயா யாத்யநாவ்ருத்திமந்யயாऽऽவர்ததே புந:।।''* (கீ.8-23,24,25,26)[1] இதி,

தத்ராஹ-

## 508. யோகிந: ப்ரதி ஸ்மர்யேதே ஸ்மார்தே சைதே (4-2-20)

நாத்ர முமூர்ஷூந் ப்ரதி மரணகாலவிஶேஷோபாதாநம் ஸ்மர்யதே,

பீஷ்மர் முதலியவர், யோகத்தின் பெருமையால், தன் விருப்பப்படியான மரணம் பெறக் கூடியவராக இருந்தவர்கள்; அவர்கள் (உலகில்) தர்மத்தை நடத்தி வைப்பதற்காக, உத்தராயணம் உயர்ந்தது என காண்பிப்பதன் பொருட்டு அப்படி நடந்து கொண்டது (மரணத்துக்கு உத்தராயணம் வரை காத்திருந்தது) ஆகும்.



**கேள்வி -** மரணம் அடையப் போகும் ப்ரஹ்ம-ஜ்ஞானிகளைக் குறித்து அவர்கள் மோக்ஷத்திலிருந்து மீண்டும் திரும்பி வருதலுக்கும் மீண்டும் திரும்பி வராமைக்கும் காரணமாக விசேஷ-காலங்களை விதித்திருப்பது காணப்படுகிறது -

- [1] **''அர்ஜுனா, மரணம் அடையும் யோகிகள் எந்த காலத்தில் திரும்பி வராமையையும் திரும்பி வருதலையும் அடைகின்றனரோ, அந்த காலத்தை சொல்லப்போகிறேன்;**
- **அக்நி-ஒளி, பகல், சுக்லபக்ஷம், உத்தராயண-ஆறுமாதம், என்று இவற்றை அடையும் ப்ரஹ்ம-ஜ்ஞானிகள் ப்ரஹ்மத்தை அடைகின்றனர்;**
- **புகை, இரவு, தக்ஷிணாயன-ஆறுமாதம், என்று இவற்றை அடையும் யோகீ ஆனவன், சந்த்ரனது ஒளியை அடைந்து திரும்புகிறான்;**
- **சுக்ல-கதி, கிருஷ்ண-கதி என்ற இந்த இரு கதிகள் மக்களுக்கு நிலையானவையாக கருதப் படுகின்றன; ஒரு கதியினால் (ஸம்ஸாரத்துக்கு) திரும்பி வராமையை அடைகிறான்; மற்றொன்றால் செல்பவன் மீண்டும் திரும்பி வருகிறான்''** என்று.

அதற்கு பதில் சொல்கிறார் -

## 508.யோகிந: ப்ரதி ஸ்மர்யேதே ஸ்மார்தே ச ஏதே (4-2-20)

***உபாஸநம் செய்பவரைக் குறித்து அவர்கள் சிந்திக்க வேண்டிய இந்த இரு கதிகள் ஸ்ம்ருதியில் சொல்லப்படுகின்றன.***

இங்கு மரணம் அடையப் போகுமவரைக் குறித்து மரணத்துக்கான விசேஷ-காலத்தை எடுப்பது ஸ்ம்ருதியில் சொல்லப்படவில்லை; மாறாக,

**யோகிந: ப்ரதி -** யோகம் (உபாஸநம்) செய்பவரைக் குறித்து

**ஸ்மார்தே -** நினைவில் விஷயமானவையான, சிந்திக்கப்பட வேண்டியவையான தேவயானம், பித்ருயானம் எனும் இரு கதிகள்

**ஸ்மர்யேதே -** ஸ்ம்ருதியில் சொல்லப்படுகின்றன.

**प्रति स्मार्ते** स्मृतिविषयभूते स्मर्तव्ये देवयानपितृयाणाख्ये गती **स्मर्येते**; योगाङ्गतयाऽनुदिनं स्मर्तुम्। तथा ह्युपसंहारः

**''नैते सृती पार्थ जानन् योगी मुह्यति कश्चन।**
**तस्मात् सर्वेषु कालेषु योगयुक्तो भवार्जुन॥''**(गी.8-27)[1] इति।

'अग्निर्ज्योतिः','धूमो रात्रिः' इति च देवयानपितृयाणे प्रतिभिज्ञायेते। उपक्रमे च, ''यत्र काले तु'' इति कालशब्दः कालाभिमानिदेवताऽऽतिवाहिकपरः, अग्न्यादेः कालत्वासम्भवात्। अतः, **''तेऽर्चिषमभिसम्भवन्ति''** (बृ.8-2-25)[2] इति विहितदेवयानानुस्मृतिरत्र विद्यानिष्ठान् प्रति विधीयते, न मुमूर्षून् प्रति मरणकालविशेषः॥२०॥



इति दक्षिणायनाधिकरणम् ॥ ११ ॥

इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीशारीरकमीमांसाभाष्ये चतुर्थस्याध्यायस्य द्वितीयः पादः॥ २ ॥

---

அபிது யோகிந: யோகநிஷ்டா்ந் ப்ரதி *ஸ்மார்தே* ஸ்ம்ருதிவிஷயபூதே ஸ்மர்தவ்யே தேவயாநபித்ருயாணாக்யே கதீ ஸ்மர்யேதே - யோகாங்கதயா அநுதிநம் ஸ்மர்தும்। ததா ஹ்யுபஸம்ஹார:

*''நைதே ஸ்ருதீ பார்த ஜாநந் யோகீ முஹ்யதி கஸ்சந।*
*தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ பவார்ஜுந॥''*(கீ.8-27)[1] இதி।

''அக்நிர்ஜ்யோதி:'', ''தூமோ ராத்ரி:'' இதி ச தேவயாநபித்ருயாணே ப்ரதிபிஜ்ஞாயேதே। உபக்ரமே ச, ''யத்ர காலே து'' இதி காலஶப்த: காலாபிமாநிதேவதாதிவாஹிகபர:, அக்ந்யாதே: காலத்வாஸம்பவாத்। அத:, *''தேऽர்சிஷமபிஸம்பவந்தி''* (சா.8-2-15)[2] இதி விஹிததேவயாநாநுஸ்ம்ருதி: அத்ர வித்யாநிஷ்டாந் ப்ரதி விதீயதே, ந முமூர்ஷூந் ப்ரதி மரணகாலவிஶேஷ:॥20॥



இதி தக்ஷிணாயநாதிகரணம் ॥11॥

இதி ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசிதே ஸ்ரீஶாரீரகமீமாம்ஸாபாஷ்யே சதுர்தஸ்யாத்யாயஸ்ய த்விதீய: பாத:॥2॥



யோகத்தின் அங்கமாக தினமும் நினைப்பதற்காக இந்த இரு கதிகள் சொல்லப்படுகின்றன; அப்படித்தானே முடிவுரை உள்ளது - [1]**''அர்ஜுனா, இந்த இரு கதிகளை சிந்தனை செய்யும் யோகியான யாரும் அஜ்ஞானம் பெறுவதில்லை; அதனால், அர்ஜுனா, எல்லா காலங்களிலும் (கதி-சிந்தனை என்னும்) யோகம் செய்பவனாக இரு''** என்று.

'அக்னி-ஒளி', என்பதால் தேவயானமும், 'புகை, இரவு' என்பதால் பித்ரு-யானமும் நினைவுக்கு வருகின்றன; அவையேதாம் இவை என்று தெரிகின்றன; ஆரம்பத்திலும், 'எந்த காலத்தில்' என்று காலம் என்ற சொல்லானது, காலத்தை அபிமானம் செய்திருக்கும் தேவனான ஆதிவாஹிகனைக் குறிப்பதில் நோக்கம் உடையது; ஏனெனில், அக்னி முதலியது காலமாக ஆகாது; தேவயான-வழியானது, [2]**''அந்த ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவர்கள் அக்னியை அடைகின்றனர்''** என்று (வேதத்தில்) விதிக்கப்பட்டதாகும். ஆகையால், அந்த தேவயான-வழியை சிந்திக்க வேண்டும் என்பது, இங்கே ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவர்களைக் குறித்து, விதிக்கப் படுகிறது; மரணம் அடையப் போகுமவர்களைக் குறித்து மரணத்துக்-கான விசேஷ-காலம் இங்கே விதிக்கப்படவில்லை.

**தக்ஷிணாயனாதிகரணம் முற்றிற்று.**

*ஸ்ரீபகவத்ராமானுஜர் அருளிய ஸ்ரீபாஷ்யத்தில் நான்காவது*
*அத்யாயத்தின் இரண்டாம்பாதம் முற்றிற்று*



ஸ்ரீமதே ராமானுஜாய நம:

## ஸ்ரீபகவத் ராமானுஜர் அருளிய

# ஸ்ரீபாஷ்யம்

(தமிழாக்கத்துடன்)

(4-3)

## நான்காவது அத்யாயம் - பலாத்யாயம்

## மூன்றாம் பாதம் - கதி பாதம்

## அதிகரணங்கள் - 5 (146 - 150)

## ஸூத்ரங்கள் - 15 (509 - 523)

மோக்ஷம் பெறும் ஜீவன், மரணம் அடைந்து பரமபதம் சென்று மோக்ஷபலனை அனுபவிப்பான். அதில் ஜீவன் உடலிலிருந்து வெளியேறி பரமபதம் செல்வது பற்றி மூன்று விஷயங்கள்-

1. மரணசமயத்தில் ஜீவன் ஶரீரத்தின் உள்ளே உயரக் கிளம்புவது உத்க்ராந்தி எனப்படும்.

2. பின்னர் ப்ரஹ்மநாடி எனும் நாடிக்குள் நுழைந்து, வெளியேறப் புறப்படுகிறான். இதற்கு கத்யுபக்ரமம் (புறப்பாடு) என்று பெயர்.

3. பின்னர், வெளியேறியபின் அர்சிராதி-மார்க்கம் எனப்படும் வழியில் மேலே சென்று ஸ்ரீவைகுண்டம் அடைகிறான். இதற்கு கதி (செல்லுதல்) என்று பெயர்.

இதில் முதல் இரண்டு விஷயங்களை போன பாதத்தில் பார்த்தோம். இந்த பாதத்தில் மூன்றாவது விஷயமான கதி (செல்லுதல்) பற்றி பார்க்கலாம்.

அதனால் இதற்கு கதிபாதம் என்றே பெயர்.

இதில் க்ரம-நிர்ணயம் (வரிசை முறையை முடிவு செய்தல்) என்பது முக்கிய விசாரமாக உள்ளது. இதனை முடிவு செய்யும் வழிமுறையை பூர்வ-மீமாம்ஸாஶாஸ்த்ரம் ஐந்தாவது அத்யாயம் சொல்கிறது. க்ரமம் (வரிசைமுறை) பற்றிய அத்யாயம் அது; அதனைப் புரிந்து கொள்ள உதவியாக, பின்-இணைப்பில் ஒரு கட்டுரை உள்ளது.

# 146.அர்சிராத்யதிகரணம் (4-3-1)

## முன் குறிப்பு

மோக்ஷம் பெற்று மேலே பரமபதம் செல்லும் ஜீவன் எந்த வழியில் செல்கிறான் என்பதை வேதம் சொல்கிறது. முதலில் அர்சிஷ்-லோகம் (அக்னி-லோகம்) செல்கிறான்; அங்கிருந்து மேலும் பல லோகங்கள் வழியாக மேலே செல்கிறான். அதனால், இந்த வழிக்கு அர்ச்சிராதி மார்க்கம் (அர்சிஷ் முதலிய வழி) என்று பெயர்.

இந்த வழியைப் பற்றி வேதம் சொல்லும்போது பலவிதமாக குறிப்புகள் உள்ளன. அதனால் சந்தேகம் வருகிறது. இது எல்லாம் ஒரே வழிதானா? அல்லது வெவ்வேறு வழியா?

வேதம் எல்லா இடத்திலும் சொன்னது ஒரே வழிதான் என்றால் அந்த ஒரே வழியி-லேயே ஜீவன் போகிறான் என்பது ஆகும்; வெவ்வேறு வழிகளை வேதம் சொல்கிறது என்றால் அந்த பல வழிகளில் நியமம் இல்லாமல் ஏதாவது ஒரு வழியில் ஜீவன் போகிறான் என்று ஆகும்.

இதில் எது சரியானது என்று இந்த அதிகரணத்தில் விசாரம்.

ஒரே வழியில் ஜீவன் போகிறான் என்பதே சரியாகும் என ஸித்தாந்தம்.

ஏனென்றால், வேதம் ஒரே வழியைத் தான் சொல்கிறது.

வேதம் சொன்ன வழிக் குறிப்புகளில் சிற்சில வித்தியாசங்களே உள்ளன. பெரும்பா-லானவை ஒன்றிப் போகின்றன. அதனால், ஒரு வேத-பாகத்தில் சொன்ன வழியைப் படிக்கும்போதே, இதே போன்று மற்றொரு வேத-பாகத்தில் சொன்ன வழி நமக்கு நினை-வுக்கு வரும்; அந்த வழியையே இங்கும் சொல்கிறது என்பதும் புரியும்.

உலகில் கூட ஒரு ஊருக்குப் போகும் ஒரே வழியையே பல பேரிடம் கேட்டால் பல-விதமாக சொல்வார்கள். ஒரே வழிதான்; ஆனால், அதைச் சொல்வதில் பல குறிப்புகள் இருக்கும். ஒருவர் சொன்ன குறிப்புகளில் ஒன்றிரண்டை மற்றவர் விட்டுவிடலாம்; அவர் வேறொரு குறிப்பு தரலாம். அதனால் ஒன்றும் முரண்பாடு இல்லை. எல்லாம் ஒரே வழி-தான் என்பதை கூட்டிக் கழித்து புரிந்து கொள்கிறோம். அதுபோலவே இங்கும்.

# १४६. अर्चिराद्यधिकरणम् (४-३-१)

## ५०९.अर्चिरादिना तत्प्रथितेः (४-३-१)

विदुष उत्क्रान्तस्य नाडीविशेषेण हार्दानुग्रहाद् गत्युपक्रम उक्तः। तस्य गच्छतो मार्ग इदानीं निर्णीयते।

तत्र श्रुतिषु मार्गप्रकाराः बहुधा आम्नायन्ते; छान्दोग्ये तावत्, **"यथा पुष्करपलाश आपो न श्लिष्यन्ते, एवमेवंविदि पापं कर्म न श्लिष्यते"**(छा.4-14-3)[1] इत्युपक्रम्य ब्रह्मविद्यामुपदिश्याऽऽम्नायते, **"अथ यदु चैवास्मिन् शव्यं कुर्वन्ति यदु च न, अर्चिषमेवाभिसम्भवन्ति अर्चिषोऽहः अह्न आपूर्यमाणपक्षम् आपूर्यमाणपक्षात् यान् षडुदङ्ङेति मासांस्तान्, मासेभ्यः संवत्सरं संवत्सरादादित्यमादित्याच्चन्द्रमसं चन्द्रमसो विद्युतम्, तत्पुरुषोऽमानवः। स एनान् ब्रह्म गमयत्येष देवपथो ब्रह्मपथः। एतेन प्रतिपद्यमाना इमं मानवमावर्तं नावर्तन्ते"**(छा.4-15-5,6)[2] इति। तथाऽत्रैवाष्टमे, **"अथैतैरेव रश्मिभिरूर्ध्वमाक्रमते"**(छा.8-6-5)[3] इति।

---

# 146. அர்சிராத்யதிகரணம் (4-3-1)

## 509.அர்சிராதிநா தத்ப்ரதிதே: (4-3-1)

விதுஷ உத்க்ராந்தஸ்ய நாடீவிஶேஷேண ஹார்தாநுக்ரஹாத் கத்யுபக்ரம உக்த:। தஸ்ய கச்சதோ மார்க இதாநீம் நிர்ணீயதே।

தத்ர ஶ்ருதிஷு மார்கப்ரகாரா: பஹுதா ஆம்நாயந்தே; சாந்தோக்யே தாவத், *"யதா புஷ்கரபலாஶே ஆபோ ந ஶ்லிஷ்யந்தே, ஏவமேவம்விதி பாபம் கர்ம ந ஶ்லிஷ்யதே"* (சா.4-14-3)[1] இத்யுபக்ரம்ய ப்ரஹ்மவித்யாமுபதிஶ்ய ஆம்நாயதே, *"அத யது சைவாஸ்மிந் ஶவ்யம் குர்வந்தி, யது ச ந, அர்சிஷமேவாபிஸம்பவந்தி அர்சிஷோऽஹ: அஹ்ந ஆபூர்யமாணபக்ஷம் ஆபூர்யமாணபக்ஷாத் யாந் ஷடுதங்ஙேதி மாஸாம்ஸ்தாந், மாஸேப்ய: ஸம்வத்ஸரம் ஸம்வத்ஸராதாதித்யம் ஆதித்யாச்சந்த்ரமஸம் சந்த்ரமஸோ வித்யுதம், தத்புருஷோऽமாநவ:। ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயத்யேஷ தேவபதோ ப்ரஹ்மபத:। ஏதேந ப்ரதிபத்யமாநா இமம் மாநவமாவர்தம் நாவர்தந்தே"*(சா.4-15-5,6)[2] இதி। ததாऽத்ரைவாஷ்டமே, *"அதைதைரேவ ரஶ்மிபிரூர்த்வமாக்ரமதே"*(சா.8-6-5)[3] இதி।

# 146.அர்சிராத்யதிகரணம் (4-3-1)

## 509.அர்சிராதினா தத்-ப்ரதிதே:(4-3-1)

*அர்சிஷ் முதலியதாலேயே [செல்கிறான்]; அதுவே தெரிவதால்.*

**ஸங்கதி (விஷய-தொடர்பு)**

ஶரீரத்திலிருந்து மரணசமயத்தில் உயரக் கிளம்பும் ப்ரஹ்ம-ஜ்ஞானி ஆனவன் ஹ்ருதயத்தில் இருக்கும் பரமபுருஷனின் அனுக்ரஹத்தால் ஒரு குறிப்பிட்ட நாடியின் மூலமாக (வெளியேறிச்) செல்ல ஆரம்பிப்பது சொல்லப்பட்டது. அப்படி போகும் அவனது வழி இப்போது தீர்மானிக்கப் படுகிறது.

**விஷயவாக்யம்**

அதில் வேதங்களில் பலவிதமாக வழிகளின் முறைகள் ஓதப் படுகின்றன -

I. சாந்தோக்யத்தில், [1] **''எப்படி தாமரை-இலையில் தண்ணீர் ஒட்டாதோ, அப்படி முன் சொன்ன முறையில் ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவனிடம் பாப-கர்மம் ஒட்டாது''** என்று ஆரம்பித்து, ப்ரஹ்ம-வித்யையை உபதேஶம் செய்து, பின்னர் ஓதப்படுகிறது - [2] **''இவன் விஷயத்தில், இறந்த உடலுக்குத் தக்க ஸம்ஸ்காரத்தை செய்கிறார்களோ அல்லது செய்யவில்லையோ, (எப்படியானாலும் அந்த ப்ரஹ்மஜ்ஞாநிகள்) அர்ச்சிஷ்ஷையே அடைகின்றனர்; அர்சிஷ்ஷிலிருந்து பகலையும், பகலிலிருந்து ஶுக்லபக்ஷத்தையும், ஶுக்லபக்ஷத்திலிருந்து ஸூர்யன் எந்த ஆறு மாதங்கள் மேலே உயர போகிறானோ அந்த உத்தராயண-மாதங்களையும், மாதங்களிலிருந்து ஆண்டையும், ஆண்டிலிருந்து ஸூர்யனையும், ஸூர்யனிலிருந்து சந்த்ரனையும், சந்த்ரனிடமிருந்து மின்னலையும் அடைகின்றனர்; பெருமானின் தாஸன் ஆன அந்த மின்னல்-புருஷன் அமானவன் (மனித இனத்தவன் அல்லன்); அவன் இவர்களை ப்ரஹ்மத்திடம் செல்ல வைக்கிறான்; இது தேவ-மார்க்கம் (தேவர்களால் அழைத்துச் செல்லப்படும் வழி; அல்லது உயர்ந்த தேவாதி-தேவனான ஸ்ரீநாராயணனை அடைவிக்கும் வழி); இதுவே ப்ரஹ்ம-மார்க்கம் (ப்ரஹ்மத்தை அடைவிக்கும் வழி); இந்த வழியால் அடைபவர்கள் மனிதனதான இந்த ஸம்ஸாரசுழற்சியில் திரும்பி வருவதில்லை''** என்று;

அதே சாந்தோக்யத்திலேயே எட்டாவது அத்யாயத்தில், [3] **''பின்னர் இந்த ஸூர்யனது ஒளிக்கதிர்களைக் கொண்டே மேலே செல்கிறான்''** என்று ஓதப்படுகிறது. (இங்கு ஸூர்யனை அடைவதான ஒரு குறிப்பு மட்டும் உள்ளது; வேறு அர்ச்சிஷ் முதலியவர்களின் பெயர் சொல்லவில்லை)

कौषीतकिनश्च देवयानमार्गमन्यथाऽधीयते, **"स एतं देवयानं पन्थानमापद्याग्निलोकमागच्छति, स वायुलोकं स वरुणलोकं स आदित्यलोकं स इन्द्रलोकं स प्रजापतिलोकं स ब्रह्मलोकम्"**(कौ.1-3)[1] इति।

तथा बृहदारण्यके, **"य एवमेतद्विदुर्ये चेमे अरण्ये श्रद्धां सत्यमुपासते, तेऽर्चिषमभिसम्भवन्ति अर्चिषोऽहरह्न आपूर्यमाणपक्षमापूर्यमाणपक्षात् यान् षण्मासान् उदङ्ङादित्य एति, मासेभ्यो देवलोकं देवलोकादादित्यम्, आदित्याद्वैद्युतं वैद्युतात्पुरुषो मानसः स एत्य ब्रह्मलोकान् गमयति"**(बृ.8-2-15)[2] इति।

तत्रैव पुनरन्यथा, **"यदा वै पुरुषोऽस्माल्लोकात् प्रैति, स वायुमागच्छति। तस्मै स तत्र विजिहीते, यथा रथचक्रस्य खम्। तेन स ऊर्ध्वमाक्रमते। स आदित्यमागच्छति। तस्मै स तत्र विजिहीते, यथा आडम्बरस्य खम्। तेन स ऊर्ध्वमाक्रमते; स चन्द्रमसमागच्छति। तस्मै स तत्र विजिहीते, यथा दुन्दुभेः खम्"**(बृ.7-10-1)[3] इत्यादि।

तत्र संशयः - किमर्चिरादिरेक इव मार्ग आभिः श्रुतिभिः प्रतिपाद्यत इति तेनैव ब्रह्म गच्छति विद्वान्; उत तस्मादन्येऽन्यत्र मार्गाः इति तैर्वाऽनेन वेत्यनियमः इति।

---

கௌஷீதகிநஶ்ச **தே**வயாநமார்கம் அந்யதா²ऽதீ⁴யதே, "ஸ ஏதம் **தே**வயாநம் பந்தா²நமாபத்³யாக்³நிலோகமாக³ச்ச²தி, ஸ வாயுலோகம் ஸ வருணலோகம் ஸ ஆதி³த்யலோகம் ஸ இந்த்³ரலோகம் ஸ ப்ரஜாபதிலோகம் ஸ ப்³ரஹ்மலோகம்" (கௌ.1-3)[1] இதி।

ததா² ப்³ருஹதா³ரண்யகே, "ய ஏவமேதத்³விது³ர்யே சேமே அரண்யே ஶ்ரத்³தா⁴ம் ஸத்யமுபாஸதே, தேऽர்சிஷமபி⁴ஸம்ப⁴வந்தி அர்சிஷோऽஹரஹ்ந ஆபூர்யமாணபக்ஷமாபூர்யமாணபக்ஷாத் யாந் ஷண்மாஸாந் உத³ங்ஙாதி³த்ய ஏதி, மாஸேப்⁴யோ தே³வலோகம் தே³வலோகாதா³தி³த்யம், ஆதி³த்யாத்³வைத்³யுதம் வைத்³யுதாத்புருஷோ மாநஸ: ஸ ஏத்ய ப்³ரஹ்மலோகாந் க³மயதி" (ப்³ரு.8-2-15)[2] இதி।

தத்ரைவ புநரந்யதா², "யதா³ வை புருஷோऽஸ்மால்லோகாத் ப்ரைதி, ஸ வாயுமாக³ச்ச²தி। தஸ்மை ஸ தத்ர விஜிஹீதே, யதா² ரத²சக்ரஸ்ய க²ம்। தேந ஸ ஊர்த்⁴வமாக்ரமதே। ஸ ஆதி³த்யமாக³ச்ச²தி। தஸ்மை ஸ தத்ர விஜிஹீதே, யதா² ஆட³ம்ப³ரஸ்ய க²ம்। தேந ஸ ஊர்த்⁴வமாக்ரமதே; ஸ சந்த்³ரமஸமாக³ச்ச²தி। தஸ்மை ஸ தத்ர விஜிஹீதே, யதா² து³ந்து³பே⁴: க²ம்"(ப்³ரு.7-10-1)[3] இத்யாதி³।

தத்ர ஸம்ஶய: - கிம் அர்சிராதி³: ஏக ஏவ மார்க³: ஆபி⁴: ஶ்ருதிபி⁴: ப்ரதிபாத்³யத இதி தேநைவ ப்³ரஹ்ம க³ச்ச²தி வித்³வாந்; உத தஸ்மாத³ந்யேऽந்யத்ர மார்கா³: இதி தைர்வா அநேந வேதி அநியம: இதி।

II. கௌஷீதகீ-ஶாகையினர் வேறு முறையில் தேவமார்க்க-வழியை ஓதுகின்றனர் - [1]**"அவன் இந்த தேவயான-வழியை அடைந்து, அக்நிலோகத்தை அடைகிறான்; அவன் வாயுலோகத்தை, அவன் வருணலோகத்தை, அவன் ஆதித்யலோகத்தை, அவன் இந்த்ரலோகத்தை, அவன் ப்ரஜாபதிலோகத்தை; அவன் ப்ரஹ்மலோகத்தை (அடைகிறான்)".**

III. அப்படியே ப்ருஹதாரண்யக-உபநிஷத்தில், [2]**"யார் இப்படி பஞ்சாக்நிவித்யை முறையில் ஜீவனை உபாஸநம் செய்கின்றனரோ, மேலும் யார் காட்டில் ஶ்ரத்தையுடன் ஸத்ய-ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்கின்றனரோ, அவர்கள் அர்ச்சிஷ்-ஷையே அடைகின்றனர்; அர்சிஷ்ஷிலிருந்து பகலையும், பகலிலிருந்து சுக்லபக்ஷத்தையும், சுக்லபக்ஷத்திலிருந்து ஸூர்யன் எந்த ஆறு மாதங்கள் வடக்கே போகிறானோ (அந்த உத்தராயண-மாதங்களையும்), மாதங்களிலிருந்து தேவலோகத்தையும், தேவலோகத்திலிருந்து ஸூர்யனையும், ஸூர்யனிலிருந்து மின்னலையும் அடைகின்றனர்; பரமாத்மாவின் தாஸனான அந்த மின்னல்-புருஷன் பர-ப்ரஹ்மத்தால் மனதால் படைக்கப்பட்டவன்; அவனே வந்து மின்னல்-புருஷனுக்குப் (தனக்கு)பிறகு இவர்களை ப்ரஹ்மத்திடம் செல்ல வைக்கிறான்"** - என்று;

IV. அதே ப்ருஹதாரண்யக-உபநிஷத்திலேயே மீண்டும் வேறு விதமாக - [3]**"எப்போது மனிதன் இந்த உலகத்திலிருந்து போகிறானோ, அப்போது அவன் வாயுவை அடைகிறான்; அவனுக்கு அந்த வாயுவானவன் தேர்-சக்கரத்தின் இடைவெளி எவ்வளவோ அவ்வளவு விலகி இடம் அளிக்கிறான்; அதன் மூலம் அவன் மேலே செல்கிறான்; அவன் ஸூர்யனை அடைகிறான்; அவனுக்கு அந்த ஸூர்யனானவன் ஆடம்பரம் எனும் வாத்யத்தின் இடைவெளி எவ்வளவோ அவ்வளவு விலகி இடம் அளிக்கிறான்; அதன் மூலம் அவன் மேலே செல்கிறான்; அவன் சந்த்ரனை அடைகிறான்; அவனுக்கு அந்த சந்த்ரனானவன் துந்துபி எனும் வாத்யத்தின் இடைவெளி எவ்வளவோ, அவ்வளவு விலகி இடம் அளிக்கிறான்"** - முதலியது ஓதப்படுகிறது.

**ஸம்சயம் (ஸந்தேஹம்)**

அதில் ஸந்தேஹம் - i) இந்த வேதங்களால் அர்சிஷ் முதலியதாக ஒரே ஒரு வழிதான் சொல்லப்படுகிறது; அதனால், அந்த வழி மூலமாகவே ப்ரஹ்ம-ஜ்ஞானியானவன் (ப்ரஹ்ம-உபாஸநம் செய்பவன்) ப்ரஹ்மத்திடம் செல்கிறான் என்பதா? அல்லது, ii) இந்த ஒருங்கிணைக்கப்பட்ட ஒன்றேயான அர்சிராதி-மார்க்கத்தை விட வேறு மார்க்கங்கள் வேறு (பலவிதமான அர்சிராதி) ப்ரஹ்மவித்யைகளில் ஆகும்; அதனால், அவற்றின் மூலமாகவோ, இந்த அர்சிராதி மார்க்கம் மூலமாகவோ செல்கிறான் என்பதில் நியமம் கிடையாது என்பதா? - என்று.

किं युक्तम्? अनियम इति। कुतः? अनेकरूपत्वान्नैरपेक्ष्याच्चेति।

एवं प्राप्तेऽभिधीयते - **अर्चिरादिना** इति। अर्चिरादिरेक एव मार्गः सर्वत्र प्रतिपाद्यते। अतोऽर्चिरादिनैव गच्छति। कुतः? **तत्प्रथितेः** - तस्यैव सर्वत्र प्रथितेः। **प्रथितिः** - प्रसिद्धिः; तस्यैव सर्वत्र प्रत्यभिज्ञानादित्यर्थः। प्रत्यभिज्ञानात् स एव मार्गः सर्वत्र न्यूनाधिकभावेन प्रतिपाद्यत इति विद्यागुणोपसंहारवत् अन्यत्रोक्तानामन्यत्रोपसंहारः क्रियते।

छान्दोग्ये तावत् उपकोसलविद्यायां पञ्चाग्निविद्यायां चैकरूप एवाम्नायते। वाजसनेयके च पञ्चाग्निविद्यायां तथैवार्चिरादिः अल्पान्तरः आम्नायते।

अतस्तत्रापि स एवेति प्रतीयते। अन्यत्रापि सर्वत्राग्न्यादित्यादयः प्रत्यभिज्ञायन्ते॥१॥

इति अर्चिराद्यधिकरणम् ॥१

---

கிம் யுக்தம்? அநியம: இதி। குத:? அநேகரூபத்வாத் நைரபேக்ஷ்யாச்சேதி।

ஏவம் ப்ராப்தேऽபி₄தீ₄யதே - *அர்சிராதி₃நா* - இதி। அர்சிராதி₃: ஏக ஏவ மார்க₃: ஸர்வத்ர ப்ரதிபாத்₃யதே। அத: அர்சிராதி₃நைவ க₃ச்ச₂தி। குத:? *தத்ப்ரதி₂தே:* - தஸ்யைவ ஸர்வத்ர ப்ரதி₂தே:। *ப்ரதி₂தி:* - ப்ரஸித்₃தி₄:; தஸ்யைவ ஸர்வத்ர ப்ரத்யபி₄ஜ்ஞாநாத் இத்யர்த₂:। ப்ரத்யபி₄ஜ்ஞாநாத் ஸ ஏவ மார்க₃: ஸர்வத்ர ந்யூநாதி₄கபா₄வேந ப்ரதிபாத்₃யத இதி வித்₃யாகு₃ணோபஸம்ஹாரவத் அந்யத்ரோக்தாநாம் அந்யத்ரோபஸம்ஹார: க்ரியதே।

சாந்தோ₃க்₃யே தாவத் உபகோஸலவித்₃யாயாம் பஞ்சாக்₃நிவித்₃யாயாம் சைகரூப ஏவாம்நாயதே। வாஜஸநேயகே ச பஞ்சாக்₃நிவித்₃யாயாம் தத₂ைவ அர்சிராதி₃: அல்பாந்தர: ஆம்நாயதே।

அத: தத்ராபி ஸ ஏவேதி ப்ரதீயதே। அந்யத்ராபி ஸர்வத்ர அக்₃ந்யாதி₃த்யாத₃ய: ப்ரத்யபி₄ஜ்ஞாயந்தே।। 1 ।।

இதி அர்சிராத்₃யதி₄கரணம் ।।1।।



**பூர்வபக்ஷம்**

எது தகும்? நியமம் கிடையாது என்பது; ஏன்? மார்க்கங்கள் பலவிதமாக ஆவதாலும், ஒன்றுக்கொன்று மற்றொன்றின் தேவை இல்லாதபடியாலும்.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது – **'அர்ச்சிராதினா (அர்சிஷ் முதலியதாலேயே)'** என்று.

அர்சிஷ் முதலியதான ஒரே ஒரு மார்க்கம்தான் எல்லா இடத்திலும் சொல்லப்படுகிறது; அதனால், அர்சிஷ் முதலியதான வழியாலேயே செல்கிறான்;

ஏன்?

**தத்ப்ரதிதே: –** அதுவே எல்லா இடத்திலும் தெரிவதால்;

**'ப்ரதிதி'** என்றால் **'ப்ரஸித்தி'** என்று பொருள்; அதாவது, அதுவே எல்லாவிடத்திலும் நினைவுக்கு வந்து ஒன்றாகவே தெரிவதால் என்று அர்த்தம். ஒன்றாகவே தெரிவதால், அந்த ஒரே மார்க்கம்தான் எல்லாவிடத்திலும், குறைத்தும் கூட்டியும் சொல்லப்படுகிறது; அதனால், ப்ரஹ்ம-வித்யையில் குணங்களை சேர்த்துக் கொள்வது போல், வேறு இடத்தில் சொன்னவற்றை வேறு இடத்தில் சேர்த்துக் கொள்வது செய்யப்படுகிறது.

I. சாந்தோக்யத்தில், உபகோஸலவித்யையிலும் பஞ்சாக்நி-வித்யையிலும் ஒரே மாதிரியாகவே ஓதப்படுகிறது;

III. ப்ருஹதாரண்யகத்தில் பஞ்சாக்நி-வித்யையில் அப்படியே அர்சிஷ் முதலியதே, கொஞ்சம் வித்யாசத்துடன் ஓதப்படுகிறது; அதனால், அங்கும் இதுவேதான் என்பது தெரிகிறது.

II&IV. மீதி எல்லா இடங்களிலும் கூட அக்நி, ஸூர்யன் முதலியவர் ஒருவராகவே நினைவுக்கு வருகின்றனர்.

****************************************

**அர்சிராத்யதிகரணம் முற்றிற்று**



# 147.வாய்வதிகரணம்(4-3-2)

## முன் குறிப்பு

அர்ச்சிராதி வழியைப் பற்றி பலவிதமாக வேதத்தில் குறிப்புகள் உள்ளன. இவற்றை ஒருங்கிணைத்து ஒரு வழியாக நிர்ணயம் செய்யப் போகிறார்.

வேதத்தில் உள்ள அந்த பலவிதமான குறிப்புகளை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். அதனை, பின் இணைப்பில் ஒரு அட்டவணையில் காணலாம்.

எதற்குப் பின்னர் எது என்பதை முடிவு செய்ய வேண்டும். முடிவு செய்யும் முறை பற்றியும் பின் இணைப்பில் க்ரமம் என்னும் கட்டுரையில் காணலாம்.

இந்த இரண்டும் புரிந்தால்தான், இந்த அதிகரணங்களின் விசாரம் புரியும்.

முதலில் அர்சிஷ் (அக்நிலோகம்), பிறகு, வரிசையாக, அஹஸ்(பகல்), சுக்லபக்ஷம் (வளர்பிறை பக்ஷம்), உத்தராயணம், ஸம்வத்ஸரம் (ஆண்டு) என்று வரிசை வரும். இதில் விசாரம் இல்லை; ஏனெனில், காலங்களில் குறைந்த கால-அளவுக்குப் பிறகு அதிக கால-அளவு என்கிற முறையில் இது உள்ளது.

அதற்குப் பின்னர் தேவலோகம் போகிறான் என்பதாக ஒரு வேதம் குறிக்கிறது; வாயுவிடம் போகிறான் என்பதாக வேறொரு குறிப்பும் வேதத்தில் உள்ளது.

இதில் விசாரம் - இந்த தேவலோகம் என்பதும் வாயு என்பதும் ஒன்றுதானா? அல்லது வெவ்வேறா?

ஒன்றுதான் என்றால், தேவலோகம் ஆகிற வாயுவை அடைகிறான் என்று ஆகும். வெவ்வேறு என்றால், தேவலோகம், வாயு என இரண்டையும் தனித்தனியே அடைகிறான் என்று ஆகும்; இந்த இரண்டில் தன் விருப்பப்படி ஏதாவது ஒன்றை முதலில் அடைந்து பின்னர் மற்றொன்றை அடைவான் என்பதால் இந்த வரிசையில் நியமம் கிடையாது என்று ஆகும்.

ஸித்தாந்தம் - தேவலோகம், வாயு என்று சொல்லப்பட்ட இரண்டும் ஒன்றுதான்; வாயுதான் தேவர்கள் வசிக்கும் இடம் என வேதம் சொல்கிறது; அதனால், வாயுவையே தேவலோகம் என்று சொல்லலாம்; அவனையே வாயுலோகம் என்றும் வேதம் சொல்கிறது; வாயுவாகிற உலகம் என்று அர்த்தம் வைத்துக் கொள்ள வேணும்.

அதனால் வாயுவிடம் செல்கிறான் என்பது சரியாகும். பின்னர் ஆதித்யன் (ஸூர்ய-லோகம்) செல்கிறான்.

# १४७. वाय्वधिकरणम् (४-३-२)

## ५१०.वायुमब्दादविशेषविशेषाभ्याम् (४-३-२)

अर्चिरादिनैव गच्छन्ति विद्वांस इत्युक्तम्।

तत्रार्चिरादिके मार्गे छन्दोगाः मासादित्ययोरन्तराले संवत्सरमधीयते, **''मासेभ्यः संवत्सरं संवत्सरादादित्यम्''**(छा.4-15-5)[1] इति। वाजसनेयिनस्तु तयोरेवान्तराले देवलोकम्, **''मासेभ्यो देवलोकं देवलोकादादित्यम्''**(बृ.8-2-15)[2] इति।

उभयत्रापि मार्गस्यैकत्वादुभावभयत्रोपसंहार्यौ। तत्र मासादूर्ध्वमभिहितयोः संवत्सर-देवलोकयोः पञ्चम्याऽभिहितस्य श्रौतक्रमस्य तुल्यत्वेऽपि, **''अर्चिषोऽहरह्न आपूर्यमाण-पक्षमापूर्यमाणपक्षात् यान् षडुदङ्ङेति मासांस्तान्''**(छा.4-15-5)[3] इति अधिककालानां न्यूनकालेभ्य उत्तरोत्तरत्वेन निवेशदर्शनात् संवत्सरस्यैव मासादनन्तरं बुद्धौ विपरिवृत्तेः संवत्सर एव मासादूर्ध्वं निवेशयितव्य इति तत ऊर्ध्वं देवलोक इति निश्चीयते।

अन्यत्र वाजसनेयिनः, **''यदा वै पुरुषोऽस्माल्लोकात् प्रैति स वायुमागच्छति**

---

# 147. வாய்வதிகரணம் (4-3-2)

## 510.வாயுமப்தாதவிஶேஷவிஶேஷாப்யாம் (4-3-2)

அர்சிராதிநைவ கச்சந்தி வித்வாம்ஸ இத்யுக்தம்।

தத்ர அர்சிராதிகே மார்கே சந்தோகா: மாஸாதித்யயோ: அந்தராலே ஸம்வத்ஸரமதீயதே, *''மாஸேப்ய: ஸம்வத்ஸரம் ஸம்வத்ஸராதாதித்யம்''* (சா.4-15-5)[1] இதி। வாஜஸநேயிநஸ்து தயோரேவாந்தராலே தேவலோகம், *''மாஸேப்ய: தேவலோகம் தேவலோகாதாதித்யம்''*(ப்ரு.8-2-15)[2] இதி।

உபயத்ராபி மார்கஸ்யைகத்வாத் உபௌ உபயத்ரோபஸம்ஹார்யௌ। தத்ர மாஸாதூர்த்வமபிஹிதயோ: ஸம்வத்ஸரதேவலோகயோ: பஞ்சம்யாऽபிஹிதஸ்ய ஶ்ரௌதக்ரமஸ்ய துல்யத்வேऽபி, *''அர்சிஷோऽஹரஹ்ந ஆபூர்யமாண- பக்ஷமாபூர்யமாணபக்ஷாத் யாந் ஷடுதங்ஙேதி மாஸாம்ஸ்தாந்''* (சா.4-15-5)[3] இதி அதிககாலாநாம் ந்யூநகாலேப்ய: உத்தரோத்தரத்வேந நிவேஶதர்ஶநாத் ஸம்வத்ஸரஸ்யைவ மாஸாதநந்தரம் புத்தௌ விபரிவ்ருத்தே:, ஸம்வத்ஸர ஏவ மாஸாதூர்த்வம் நிவேஶயிதவ்ய இதி, தத ஊர்த்வம் தேவலோக இதி நிஶ்சீயதே।

அந்யத்ர வாஜஸநேயிந:, *''யதா வை புருஷோऽஸ்மால்லோகாத் ப்ரைதி ஸ*

# 147.வாய்வதிகரணம்(4-3-2)

## 510.வாயும் அப்தாத் அவிஶேஷ-விஶேஷாப்யாம்(4-3-2)

*ஆண்டிலிருந்து வாயுவை அடைகிறான்; பொதுவாகவும் குறிப்பாகவும் [வாயுவை சொல்லியிருப்பதால்]*

**ஸங்கதி (விஷய-தொடர்பு)&விஷயவாக்யம்**

ப்ரஹ்ம-ஜ்ஞானிகள் அர்சிராதி-மார்க்கத்தாலேயே செல்கின்றனர் என்று சொல்லியாயிற்று; அந்த அர்சிராதி-மார்க்கத்தில் -

I. சாந்தோக்யத்தினர், [1]**''மாஸங்களிலிருந்து ஸம்வத்ஸரத்தையும்; ஸம்வத்ஸரத்திலிருந்து ஆதித்யனையும் (அடைகின்றனர்)''** என்று மாஸங்களுக்கும் ஸூர்யனுக்கும் இடையில் ஸம்வத்ஸரத்தை (ஆண்டினை) ஓதுகின்றனர்.

II. ப்ருஹதாரண்யகத்தினரோ அதே இரண்டுக்கும் இடையில் தேவலோகத்தை ஓதுகின்றனர் - [2]**''மாஸங்களிலிருந்து தேவலோகத்தையும், தேவலோகத்திலிருந்து ஆதித்யனையும் (அடைகின்றனர்)''** என்று.

இரண்டு வேதங்களிலும் ஒரே மார்க்கம்தான் என்பதால், இரண்டும் இரண்டு இடத்திலும் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும். அதில் மாஸங்களுக்கு மேல் சொல்லப்பட்டவை ஆண்டும், தேவலோகமும்; இரண்டுக்கும் வேத-பாடத்தில் ஐந்தாவது வேற்றுமையால் சொல்லப்பட்ட ஶ்ரௌதக்ரமம் (வேதத்தில் ஒரு சொல்லின் மூலம் காட்டப்பட்ட வரிசை முறை) என்பது ஸமமானது; ஆனாலும், [3]**''அர்சிஷ்ஷிலிருந்து பகலையும், பகலிலிருந்து சுக்லபக்ஷத்தையும், சுக்லபக்ஷத்திலிருந்து ஸூர்யன் எந்த ஆறு மாதங்கள் உயர போகிறானோ அந்த உத்தராயண-மாதங்களையும் (அடைகின்றனர்)''** என்று குறைந்த-காலங்களுக்கு அடுத்தடுத்த படியாக அதிக-காலங்களை வைத்திருப்பதைக் காணலாம்; அதனால், உத்தராயண மாஸங்களுக்குப் பிறகு ஆண்டுதான் மனதில் தோன்றும்; அதனால், ஆண்டுதான் மாஸங்களுக்குப் பிறகு வைக்கப்பட வேண்டும்; அதனால், அதற்குப் பிறகே தேவலோகம் என தீர்மானிக்கப் படுகிறது.

I. வேறொரு இடத்தில் ப்ருஹதாரண்யகத்தினர் [4]**''எப்போது மனிதன் இந்த உலகத்திலிருந்து போகிறானோ, அப்போது அவன் வாயுவை அடைகிறான்; அவனுக்கு அந்த வாயுவானவன் தேர்-சக்கரத்தின் இடைவெளி எவ்வளவோ**

**तस्मै स तत्र विजिहीते यथा रथचक्रस्य खम्। तेन स ऊर्ध्वमाक्रमते स आदित्यमागच्छति**''(बृ.7-10-1)[4] इत्यादित्यात्पूर्वं वायुमधीयते।

कौषीतकिनस्तु, ''**स एतं देवयानं पन्थानमापद्याग्निलोकमागच्छति स वायुलोकम्**''(कौ.1-3)[1] इत्यग्निलोकशब्दनिर्दिष्टादर्चिषः परं वायुमधीयते। तत्र कौषीतकिनां पाठक्रमेणार्चिषः परत्वेन प्राप्तस्य वायोर्वाजसनेयिनाम्, ''**तेन स ऊर्ध्वमाक्रमते स आदित्यमागच्छति**''(बृ.7-10-1)[2] इत्यूर्ध्वशब्दनिर्दिष्टश्रौतक्रमेण पाठक्रमाद्बलीयसा आदित्यात्पूर्वं प्रवेशो निश्चीयते। अत आदित्यात्पूर्वं संवत्सरादूर्ध्वं देवलोको वायुश्च प्राप्तौ।

तत्रेदं चिन्त्यते - किं देवलोको वायुश्चार्थान्तरभूतौ यथेष्टक्रमेण विद्वान् अभिगच्छेत्, उत अनर्थान्तरत्वेन संवत्सरादूर्ध्वं देवलोकं सन्तं वायुमभिगच्छेत् इति।

किं युक्तम्? भिन्नार्थत्वम्; प्रसिद्धेः। भिन्नार्थत्वे चोर्ध्वशब्देन पञ्चम्या चोभयोः संवत्सरादित्यान्तराले श्रुतिक्रमेण प्राप्तत्वात्, विशेषाभावाच्च यथेष्टम्

इति प्राप्ते - उच्यते, **वायुमब्दात्** इति। वायुं संवत्सरादूर्ध्वमभिगच्छेत्। कुतः?

---

*வாயுமாகச்சதி தஸ்மை ஸ தத்ர விஜிஹீதே யதா ரதசக்ரஸ்ய கம்। தேந ஸ ஊர்த்வமாக்ரமதே ஸ ஆதித்யமாகச்சதி*''(ப்ரு.7-10-1)[4] இதி ஆதித்யாத்பூர்வம் வாயுமதீயதே।

கௌஷீதகிநஸ்து, ''*ஸ ஏதம் தேவயாநம் பந்தாநமாபத்யாக்நிலோகமாகச்சதி ஸ வாயுலோகம்*'' (கௌ.1-3)[1] இதி அக்நிலோகஶப்தநிர்திஷ்டாத் அர்சிஷ: பரம் வாயுமதீயதே। தத்ர கௌஷீதகிநாம் பாடக்ரமேண அர்சிஷ: பரத்வேந ப்ராப்தஸ்ய வாயோ: வாஜஸநேயிநாம், ''*தேந ஸ ஊர்த்வமாக்ரமதே ஸ ஆதித்யமாகச்சதி*''(ப்ரு.7-10-1)[2] இதி ஊர்த்வஶப்தநிர்திஷ்டஶ்ரௌதக்ரமேண பாடக்ரமாத்பலீயஸா ஆதித்யாத்பூர்வம் ப்ரவேஶோ நிஶ்சீயதே। அத: ஆதித்யாத்பூர்வம் ஸம்வத்ஸராதூர்த்வம் தேவலோகோ வாயுஶ்ச ப்ராப்தௌ।

தத்ரேதம் சிந்த்யதே - கிம் தேவலோக: வாயுஶ்ச அர்தாந்தரபூதௌ யதேஷ்டக்ரமேண வித்வாந் அபிகச்சேத், உத அநர்தாந்தரத்வேந ஸம்வத்ஸராதூர்த்வம் தேவலோகம் ஸந்தம் வாயுமபிகச்சேத் - இதி।

கிம் யுக்தம்? பிந்நார்தத்வம்; ப்ரஸித்தே:। பிந்நார்தத்வே ச ஊர்த்வஶப்தேந பஞ்சம்யா ச உபயோ: ஸம்வத்ஸராதித்யாந்தராலே ஶ்ருதிக்ரமேண ப்ராப்தத்வாத், விஶேஷாபாவாச்ச யதேஷ்டம்

இதி ப்ராப்தே - உச்யதே - *வாயுமப்தாத்* - இதி। வாயும் ஸம்வத்ஸரா-

**அவ்வளவு விலகி இடம் அளிக்கிறான்; அதன் மூலம் அவன் மேலே செல்கிறான்; அவன் ஸூர்யனை அடைகிறான்''** என்று ஸூர்யனுக்கு முன்பாக வாயுவை ஓதுகின்றனர்;

II. கௌஷீதகி-ஶாகையினரோ, [1]**''அவன் இந்த தேவயான-வழியை அடைந்து, அக்நிலோகத்தை அடைகிறான்; அவன் வாயுலோகத்தை (அடைகிறான்)''** என்று ஓதுகின்றனர்; அக்நிலோகம் எனும் சொல்லால் அர்சிஷ் குறிப்பிடப்படுகிறது; அந்த அர்சிஷ்ஷுக்குப் பின்னர் வாயுவை ஓதுகின்றனர்.

கௌஷீதகி-ஶாகையினரின் பாட-க்ரமப்படி (வரிசை-முறைப்படி) அர்சிஷ்ஷுக்குப் பின்னர் வாயு ஆக நேரிடுகிறது; ப்ருஹதாரண்யகத்தினர், [2]**''அந்த வாயு கொடுத்த இடைவெளி மூலம் அந்த ப்ரஹ்ம-ஜ்ஞானி மேலே செல்கிறான்; அவன் ஸூர்யனை அடைகிறான்''** என்று 'மேலே' என்ற சொல்லால் குறிப்பிடப்பட்ட ஶ்ரௌத-க்ரமத்தால் ஸூர்யனுக்கு முன் வாயு ஆகிறது; ஶ்ரௌத-க்ரமமானது, பாடக்ரமத்தை விட வலுவானது; (வரிசையாக பல பொருள்களை சொல்வதன் மூலம் உணர்த்தப்படும் வரிசை முறையை விட, வேதத்தில் வரிசையைக் குறிக்கும் ஒரு சொல்லைச் சொல்லி, அதன் மூலம் எடுத்துரைக்கப்பட்ட வரிசை முறையானது உயர்ந்தது). அதனால், ஸூர்யனுக்கு முன்னர்தான் வாயுவை வைப்பது என தீர்மானிக்கப் படுகிறது.

ஆகவே, ஸூர்யனுக்கு முன்னர், ஆண்டுக்கு பின்னர் தேவலோகம், வாயு என இரண்டும் வர நேரிடுகிறது.

**ஸம்சயம் (ஸந்தேஹம்)**

அதில் இது விசாரிக்கப் படுகிறது - ப்ரஹ்ம-ஜ்ஞானி ஆனவன், வெவ்வேறு பொருள்களான தேவலோகம், வாயு என்ற இந்த இரண்டையும் தன் விருப்பப்படியான வரிசை-முறையில் அடைகிறானா? அல்லது இரண்டும் ஒரே பொருள் ஆவதால், ஆண்டுக்குப் பின் தேவலோகம் ஆகிற வாயுவை அடைகிறானா? என்று.

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்? வெவ்வேறு பொருள் என்பது; ஏனெனில், இரண்டும் வெவ்வேறாகவே ப்ரஸித்தமாக இருப்பதால்.

இரண்டும் வெவ்வேறாகும்போது, 'மேலே' என்ற சொல்லாலும் ஐந்தாவது வேற்றுமையாலும் இரண்டுமே ஶ்ருதி-க்ரமம் மூலம் ஆண்டுக்கும் ஸூர்யனுக்கும் இடையில் ஆக நேரிடுகிறது; ஒரு வித்யாசமும் இல்லை; ஆகையால், விருப்பப்படி செல்வான்.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **''வாயும் அப்தாத்''** என்று.

**अविशेषविशेषाभ्यां** वायोरेव निर्दिष्टत्वात्। देवलोकशब्दो हि **अविशेषेण** - सामान्येन 'देवानां लोक' इत्यनेन रूपेण वायुमभिधत्ते। **''स वायुमागच्छति तस्मै स तत्र''** (बृ.7-10-1)[1] इति वायुशब्दो विशेषेण वायुमभिधत्ते। अतो देवलोकवायुशब्दाभ्याम् अविशेष-विशेषाभ्यां वायुरेवाभिधीयत इति संवत्सरादूर्ध्वं वायुमेवाभिगच्छेत्।

कौषीतकिनां वायुलोकशब्दश्चाग्निलोकशब्दवत् वायुश्चासौ लोकश्चेति व्युत्पत्त्या वायुमेवाभिधत्ते। वायुश्च देवानामावासभूत इति अन्यत्र श्रूयते, **''योऽयं पवते एष(एव) देवानां गृहाः''** (जै.उपनि.ब्रा.3-1)[2] इति॥ २ ॥

इति वाय्वधिकरणम् ॥ २ ॥

---

**தூர்த்வமபிகச்சேத்**। குத:? *அவிஶேஷவிஶேஷாப்யாம்* வாயோரேவ நிர்திஷ்-டத்வாத்। **தேவலோகஶப்தோ** ஹி அவிஶேஷேண - ஸாமாந்யேந தேவா-நாம் லோக: இத்யநேந ரூபேண வாயுமபிதத்தே। *''ஸ வாயுமாகச்சதி தஸ்மை ஸ தத்ர''*(ப்ரு.7-10-1)[1] இதி வாயுஶப்தோ விஶேஷேண வாயுமபிதத்தே। அத: தேவலோகவாயுஶப்தாப்யாம் அவிஶேஷவிஶேஷாப்யாம் வாயுரே-வாபிதீயத இதி ஸம்வத்ஸராதூர்த்வம் வாயுமேவாபிகச்சேத்।

கௌஷீதகிநாம் வாயுலோகஶப்தஶ்ச அக்நிலோகஶப்தவத் வாயுஶ்-சாஸௌ லோகஶ்சேதி வ்யுத்பத்த்யா வாயுமேவாபிதத்தே। வாயுஶ்ச தேவாநாமாவாஸபூத இதி அந்யத்ர ஶ்ரூயதே, *''யோऽயம் பவதே ஏஷ(ஏவ) தேவாநாம் க்ருஹா:''* (ஜைஉ.உபநி.ப்ரா.3-1)[2] இதி॥ 2 ॥

இதி வாய்வதிகரணம் ॥ 2 ॥



**அப்தாத் -** ஆண்டுக்குப் பின்னர்

**வாயும் -** வாயுவை அடைவான்;

ஏன்?

**அவிஶேஷவிஶேஷாப்யாம் -** பொதுவாகவும் குறிப்பாகவும் வாயுவையே உணர்த்துவதால்.

'தேவலோகம்' என்ற சொல்லானது தனிக்குறிப்பு இல்லாமல் பொதுவாக 'தேவர்களது உலகம்' என்னும் பொருள்-உருவையிட்டு வாயுவைச் சொல்கிறது; [1]**''அவன் வாயுவை அடைகிறான்; அவனுக்கு அங்கு அவன் (இடமளிக்கிறான்)''** என்று, 'வாயு' என்ற சொல்லானது, தனிக் குறிப்பாக வாயுவைச் சொல்கிறது; ஆகவே, 'தேவலோகம்' 'வாயு' எனும் இரு சொற்களாலும் பொதுவாகவும், குறிப்பாகவும் வாயுதான் சொல்லப் படுகிறது; அதனால், ஆண்டுக்குப் பின்னர் வாயுவையே அடைவான்.

கௌஷீதகி-ஶாகையினரின் 'வாயுலோகம்' என்ற சொல்லானது, வாயுவாகிற உலகம் என்ற பொருளில் வாயுவையே சொல்கிறது; (வாயுவின் உலகம் என்ற பொருள் அல்ல); 'அக்நிலோகம்' என்ற சொல் போல இது ஆகும்; ''வாயு: ச அஸௌ லோக: ச'' என்று ஸமாஸ-இலக்கணக் குறிப்பு; வாயுவானது தேவர்களின் வசிப்பிடம் ஆகும் என வேறொரு இடத்தில் வேதத்தில் சொல்லப்படுகிறது - [2]**''யாரவன் வீசுகிறானோ, அவன் தேவர்களின் வீடு ஆகிறான்''** என்று.

*✍(ஆக, இங்கு 'தேவலோகம்' என்றால், தேவர்களின் வசிப்பிடமான வாயு என்று பொருள்; வாயுலோகம் என்றால், வாயுவாகிற இருப்பிடம் என்று பொருள்; எல்லாமே வாயுவையே குறிக்கிறது).✍*

**வாய்வதிகரணம் முற்றிற்று**



# 148.வருணாதிகரணம்(4-3-3)

## முன் குறிப்பு

இதிலும் அர்சிராதி மார்க்கத்தில் வரிசை முறை பற்றிய விசாரம்.

கௌஷீதகீ ஶாகையில் வாயு, வருணன், ஆதித்யன் என்ற வரிசை சொல்லியுள்ளது.

ப்ருஹதாரண்யகத்தில் வாயுவிலிருந்து ஆதித்யனை அடைகிறான் என்று சொல்லி-யுள்ளது.

இதில் ப்ருஹதாரண்யகம் சொன்னபடி வாயுவிலிருந்து ஆதித்யன் என்பதே ஏற்கத் தக்கது. ஏனெனில், பாட-க்ரமத்தை விட ச்ருதக்ரமம் முக்கியமானது (பின்-இணைப்பில் க்ரமம் பற்றி காணவும்)

வருணனை எங்கே சேர்ப்பது என்பது பற்றி இங்கு விசாரம்.

**பூர்வபக்ஷம்** - வாயுவுக்குப் பின் சேர்க்கலாம். ஏனெனில், கௌஷீதகீ சாகையில் வாயு, வருணன், ஆதித்யன் என்று வரிசைக் குறிப்பு உள்ளது; இப்படி சொன்னால், வாயு- விலிருந்து ஆதித்யன் என்று சொன்ன முறை தவறிவிடலாம்; ஆனால், வேறு வழியில்லை.

**ஸித்தாந்தம்** - கடைசியில் உள்ள மின்னலுக்கு (வித்யுத்-புருஷனுக்கு) பின்னர் வருணன் ஆகலாம்; ஏனெனில், மின்னலுக்கும் வருணனுக்கும் தொடர்பு உள்ளது. வெறும் சொற்களை வைத்துப் பார்க்காமல், அர்த்தத்தை வைத்தும் வரிசையை முடிவு செய்ய வேண்டும்; அந்த முறையில் மின்னலுடன் சேர்த்து வருணனை சொல்வதே சரியாகும்.

மேலும், ஒரு வரிசை நடந்து கொண்டிருக்கும்போது, புதியதாக வருபவர் கடைசியில் இணைய வேண்டும் என்பதே முறையாகும்! நடுவில் அவர் வரிசையைப் பிளந்து உள்ளே இணைவது சரியல்ல.

**கேள்வி** - வித்யுத் புருஷன்தான் (நேரிடையாக அழைத்துப்போய்) ப்ரஹ்மத்திடம் அடைவிப்பவர் என்று வேதம் சொல்கிறது. எனவே, அவர்தான் கடைசியானவர்; அதனை மாற்றி, அவருக்குப் பின் வருணனிடம் போவதாக சொல்ல முடியுமா?

**பதில்** - வித்யுத்புருஷன்தான் ஜீவனை அழைத்துக்கொண்டு போய் ப்ரஹ்மத்திடம் கொண்டு சேர்க்கிறார்; கூடவே, வருணன் இணைந்து கொள்கிறார்.

இப்படி வருணனை இங்கே சொன்னபடியால், கூடவே இந்த்ரன் ப்ரஜாபதி ஆகிய இருவரையும் கூட இங்கேயே சேர்த்துக் கொள்ள வேணும்.

# १४८. वरुणाधिकरणम् (४-३-३)

## ५११.तटितोऽधि वरुणः सम्बन्धात् (४-३-३)

कौषीतकिनाम्, **''स एतं देवयानं पन्थानमापद्याग्निलोकमागच्छति ; स वायुलोकं स वरुणलोकं स आदित्यलोकं स इन्द्रलोकं स प्रजापतिलोकं स ब्रह्मलोकम्''**(कौ.1-3)[1] इत्यत्राग्निलोकशब्दस्यार्चिःपर्यायत्वेन प्राथम्यमविगीतम्। वायोश्च संवत्सरादूर्ध्वं निवेश उक्तः। आदित्यस्याप्यत्रप्राप्तपाठक्रमबाधेन, **''देवलोकादादित्यमादित्याद्वैद्युतम्''** (बृ.8-2-15)[2] इति वाजसनेयकोक्तश्रुतिक्रमात् देवलोकशब्दाभिहिताद्वायोरुपरि निवेशः सिद्धः। इदानीं वरुणेन्द्रादिषु चिन्ता।

किमेते वरुणादयो यथापाठं वायोरूर्ध्वं निवेशयितव्याः, आहोस्विद्विद्युतोऽधीति विशये -

अर्चिःप्रभृतिषु सर्वेषु **''अर्चिषोऽहः''**(छा.4-15-5)[3] इत्यादिश्रुतिक्रमोपरोधात्, विद्युतः परस्ताच्च, **''तत्पुरुषोऽमानवः। स एनान् ब्रह्म गमयति''**(छा.4-15-5,6)[4] इति विद्युत्पुरुषस्य ब्रह्मगमयितृत्वश्रवणाच्च सर्वत्रावकाशाभावेनाप्राप्तौ

# 148. வருணாதிகரணம் (4-3-3)

## 511. தடிதோऽதி வருண: ஸம்பந்தாத் (4-3-3)

கௌஷீதகிநாம், *''ஸ ஏதம் தேவயாநம் பந்தாநமாபத்யாக்நிலோகமாகச்சதி; ஸ வாயுலோகம் ஸ வருணலோகம் ஸ ஆதித்யலோகம் ஸ இந்த்ரலோகம் ஸ ப்ரஜாபதிலோகம் ஸ ப்ரஹ்மலோகம்''*(கௌ.1-3)[1] இத்யத்ர அக்நிலோகஶப்தஸ்ய அர்சி:பர்யாயத்வேந ப்ராதம்யம் அவிகீதம்। வாயோஶ்ச ஸம்வத்ஸராதூர்த்வம் நிவேஶ: உக்த:। ஆதித்யஸ்யாப்யத்ர ப்ராப்தபாடக்ரமபாதேந, *''தேவலோகாதாதித்யமாதித்யாத்வைத்யுதம்''*(ப்ரு.8-2-15)[2] இதி வாஜஸநேயகோக்தஶ்ருதிக்ரமாத் தேவலோகஶப்தாபிஹிதாத் வாயோருபரி நிவேஶ: ஸித்த:। இதாநீம் வருணேந்த்ராதிஷு சிந்தா।

கிமேதே வருணாதய: யதாபாடம் வாயோரூர்த்வம் நிவேஶயிதவ்யா:, ஆஹோஸ்வித் வித்யுதோऽதீதி விஶயே -

அர்சி:ப்ரப்ருதிஷு ஸர்வேஷு *''அர்சிஷோऽஹ:''*(சா.4-15-5)[3] இத்யாதிஶ்ருதிக்ரமோபரோதாத், வித்யுத: பரஸ்தாச்ச, *''தத்புருஷோऽமாநவ: ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதி''*(சா.4-15-5,6)[4] இதி வித்யுத்புருஷஸ்ய ப்ரஹ்மகமயித்ருத்வஶ்ரவணாச்ச ஸர்வத்ராவகாஶாபாவேந அப்ராப்தௌ ச உபதே-

# 148.வருணாதிகரணம்(4-3-3)

## 511.தடித: அதி வருண: ஸம்பந்தாத்(4-3-3)

*மின்னலுக்கு அடுத்து வருணன் ஆவான்; தொடர்பு இருப்பதால்*

**ஸங்கதி (விஷய-தொடர்பு)**

[1]**"அவன் இந்த தேவயான-வழியை அடைந்து, அக்நிலோகத்தை அடைகிறான்; அவன் வாயுலோகத்தை, அவன் வருணலோகத்தை, அவன் ஆதித்ய-லோகத்தை, அவன் இந்த்ரலோகத்தை, அவன் ப்ரஜாபதிலோகத்தை; அவன் ப்ரஹ்மலோகத்தை (அடைகிறான்)"** என்று கௌஷீதகீ-ஶாகையினரின் வாக்யம்.

- இதில், அக்நிலோகம் என்ற சொல்லானது அர்சிஷ் என்ற சொல்லுடன் ஒரே பொருளில் ஆவது; அதனால், அந்த அர்சிஷ் ஆனது, முதலில் ஆவதில் கருத்து வேற்றுமை இல்லை;
- வாயுவையும் ஆண்டுக்குப் பின் வைக்க வேண்டியதாக சொல்லியாயிற்று;
- ஆதித்யனுக்கு இங்கு சொன்ன பாடக்ரமத்தை (சொன்ன வரிசை முறையை) பாதிக்க வேண்டும்; [2]**"தேவலோகத்திலிருந்து ஆதித்யனையும், ஆதித்யனி-லிருந்து மின்னலையும் அடைகின்றனர்"** என்று ப்ருஹதாரண்யகத்தில், சொன்ன ஶ்ருதிக்ரமப்படி தேவலோகம் எனப்படும் வாயுவுக்குப் பின்னர் (ஆதித்யனை) வைக்க வேண்டும்; இப்படி வைப்பது தெரிந்த விஷயமே (பாடக்ரமத்தை விட ஶ்ருதிக்ரமம் வலுவானது என்பதால் இதில் விசாரம் தேவையில்லை);

இப்போது வருணன், இந்த்ரன் முதலியவர்களைப் பற்றி விசாரம்.

**ஸம்சயம் (ஸந்தேஹம்)**

இந்த வருணன் முதலியவர்கள் பாடவரிசைப்படி வாயுவுக்குப் பின்னர் வைக்-கப்பட வேண்டியவரா? அல்லது, மின்னலுக்குப் பின்னரா? என்று ஸந்தேஹம்.

**பூர்வபக்ஷம்**

- அர்சிஷ் முதலிய எல்லாவற்றிலும் இவர்களுக்கு இடமில்லை; ஏனெனில், [3]**"அர்சிஷ்ஷிலிருந்து பகலை ...... அடைகின்றனர்"** முதலியதாக ஶ்ருதி-க்ரமம் உள்ளது; (வேதமே சொன்ன வரிசை-முறை உள்ளது); அதற்கு பாதிப்பு வந்துவிடும்;
- மின்னல்-புருஷனுக்கு பின்னரும் இடமில்லை; ஏனெனில், **"அந்த மின்னல்-புருஷன் அமானவன்; அவன் இவனை ப்ரஹ்மத்திடம் சேர்க்கிறான்"** என்று மின்னல்-புருஷனே ப்ரஹ்மத்திடம் அடைவிப்பதாக வேதம் சொல்கிறது.

அதனால், எங்கும் இடமில்லாதபடியால், இவர்கள் இங்கு வரவே முடியாது என்றாகும்; அப்படியானால், இவர்களைப் பற்றிய வேத-உபதேஶம் வீணாகி விடும்;

चोपदेशावैयर्थ्यायावश्यं कस्यचिद्बाध्यत्वे, पाठक्रमानुरोधेन वायोरनन्तरं वरुणो निवेशयितव्यः। वाय्वादित्ययोः क्रमस्य बाधितत्वेनेन्द्रप्रजापति अपि ह्यत्रैव निवेशयितव्यौ

इति प्राप्ते उच्यते - **तटितोऽधि वरुणः** इति। वरुणस्तावत् विद्युत उपरिष्टान्निवेशयितव्यः। कुतः? **सम्बन्धात्** - मेघोदरवर्तित्वात् विद्युतो वरुणेन सम्बन्धो लोकवेदयोः प्रसिद्धः।

एतदुक्तं भवति - वरुणादीनामुपदेशावैयर्थ्याय क्वचिन्निवेशयितव्यत्वे सति पाठक्रमादर्थक्रमस्य बलीयस्त्वात् विद्युतोऽधि वरुणो निवेशयितव्यः; ततश्च अमानवस्य गमयितृत्वं व्यवधानसहमित्यवगम्यते। तस्य च व्यवधानसहत्वादिन्द्रादेश्चोपदिष्टस्यावश्यनिवेशयितव्यस्य वरुणादुपर्युपदिष्टत्वात् आगन्तूनामन्ते निवेशयितव्यत्वाच्च वरुणादुपरीन्द्रादिर्निवेशयितव्य इति॥ ३ ॥

इति वरुणाधिकरणम्॥ ३ ॥

---

ஶாவையர்த்யாய அவஶ்யம் கஸ்யசித்பாத்யத்வே, பாடக்ரமாநுரோதேந வாயோரநந்தரம் வருணோ நிவேஶயிதவ்ய:। வாய்வாதித்யயோ: க்ரமஸ்ய பாதிதத்வேந இந்த்ரப்ரஜாபதி அபி ஹி அத்ரைவ நிவேஶயிதவ்யௌ

இதி ப்ராப்தே உச்யதே - *தடிதோऽதி வருண:* இதி। வருணஸ்தாவத் வித்யுத உபரிஷ்டாந்நிவேஶயிதவ்ய:। குத:? *ஸம்பந்தாத்* - மேகோதரவர்தித்வாத் வித்யுத: வருணேந ஸம்பந்தோ லோகவேதயோ: ப்ரஸித்த:।

ஏததுக்தம் பவதி - வருணாதீநாமுபதேஶாவையர்த்யாய க்வசிந்நிவேஶயிதவ்யத்வே ஸதி பாடக்ரமாதர்தக்ரமஸ்ய பலீயஸ்த்வாத் வித்யுதோऽதிவருணோ நிவேஶயிதவ்ய:; ததஶ்ச அமாநவஸ்ய கமயித்ருத்வம் வ்யவதாநஸஹம் இத்யவகம்யதே। தஸ்ய ச வ்யவதாநஸஹத்வாத் இந்த்ராதேஶ்ச உபதிஷ்டஸ்ய அவஶ்யநிவேஶயிதவ்யஸ்ய வருணாதுபர்யுபதிஷ்டத்வாத் ஆகந்தூநாம் அந்தே நிவேஶயிதவ்யத்வாச்ச வருணாதுபரி இந்த்ராதிர்நிவேஶயிதவ்ய: இதி।। 3 ।।

இதி வருணாதிகரணம்।। 3 ।।



அப்படி ஆகக் கூடாது; அதனால், கட்டாயம் எதையாவது பாதித்தே ஆக வேண்டும்; அப்போது, பாடக்ரமத்தை (கௌஷீதகீ வேதம் சொன்ன வரிசை முறையைப்) பின்பற்றி வாயுவுக்குப் பின் வருணன் வைக்கப்பட வேண்டியவன் ஆகிறான்; வாயுவுக்கும் ஆதித்யனுக்கும் ஆன வரிசை-முறை இப்போது பாதிக்கப்பட்டு விட்-டது; அதனால், இந்த்ரனும் ப்ரஜாபதியும் கூட இங்கேயே வைக்கப்பட வேண்டிய-வர்கள் ஆகின்றனர்.

*(வேறிடத்தில் இவர்களை நுழைத்தால் அங்கும் வரிசை-முறையை பாதிக்க வேண்டி வரும்; பல இடங்களில் வரிசையை பாதிப்பதை விட ஏற்கனவே பாதிக்கப்பட்ட ஒரே இடத்தில் இவர்களையும் சேர்த்து விடுவது நல்லது).*

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **''தடிதோதி வருண:''** என்று.

**வருண: -** வருணன் ஆனவன்,

**தடித: அதி -** மின்னலுக்கு பின்னர் வைக்கப்பட வேண்டியவன்.

ஏன்?

**ஸம்பந்தாத் -** (தொடர்பு இருப்பதால்) மின்னல் என்பது மேகத்தின் நடுவில் இருப்பது; அதனால், வருணனுடன் தொடர்பு இருப்பது உலகிலும் வேதத்திலும் தெரிந்த விஷயமே.

இது சொன்னதாக ஆகிறது - வேத-உபதேசம் வீணாகக் கூடாது என்பதற்காக வருணன் முதலியவரை எங்காவது வைத்தே ஆக வேண்டும்; அப்போது, பாட-க்ர-மத்தை விட அர்த்த-க்ரமம் வலுவானது என்பதால், மின்னலுக்கு பின்னர் வருணன் வைக்கப்பட வேண்டியவன் ஆகிறான்.

*(சொன்ன வரிசையை விட பொருள் மூலம் புரிந்து கொள்ளப்படும் வரிசையே வலு-வானது; இங்கு மின்னல், வருணன் என்ற இரண்டுக்கும் தொடர்பு இருப்பதால், இரண்டையும் ஒன்றுக்குப் பின் ஒன்றாக வரிசையாக அமைக்கலாம் என்று அப்பொருள் மூலம் புரிந்து கொள்கிறோம்).*

ஆகையால், அமானவன் ஆன மின்னல்-புருஷன் ப்ரஹ்மத்தை அடைவிப்-பதானது பிற-இடையீட்டை சகித்துக் கொள்ளும் என தெரிகிறது. இந்த்ரன் முதலிய-வரைப் பற்றி உபதேசம் செய்யப்பட்டுள்ளது; அதனால், அவர் எங்காவது கட்டா-யம் வைக்கப்பட வேண்டியவர்.

வருணனுக்கு பின்னர் இந்த்ரன் முதலியவர் வைக்கப்பட வேண்டியவர் ஆகி-றார். ஏனெனில்,

- மின்னல்-புருஷன் ப்ரஹ்மத்தை அடைவிப்பதானது பிற-இடையீட்டுடன் (வருணனை இடையிட்டு) ஆவதாலும்,
- இந்த்ரன் முதலியவரை வருணனுக்கு பின்னர் உபதேசம் செய்திருப்பதாலும்,
- வந்து சேர்பவர் கடைசியில் வைக்கப்பட வேண்டியவர் என்பதாலும்.

************************************

**வருணாதிகரணம் முற்றிற்று**

# 149. ஆதிவாஹிகாதிகரணம் (4-3-4)

## முன் குறிப்பு

ஆதிவாஹிகர் என்றால், அழைத்து வருவதற்காக நியமிக்கப் பட்டவர்கள் என்று அர்த்தம்.

மோக்ஷம் பெறும் ஜீவன், அர்சிராதி மார்க்கத்தில் பரமபதம் போகிறான். அந்த மார்க்-கத்தில் அர்சிஷ், அஹஸ் (பகல்) முதலிய குறிப்புகள் உள்ளன. இந்த அர்சிஷ் முதலியவை என்ன ? என்பது விசாரம்.

**பூர்வபக்ஷம்** - அர்சிஷ் முதலியவை வழி அடையாளங்கள்; மரம், குளம், மலை முதலி-யவற்றை வழி அடையாளமாக சொல்வது போல், இவை வழி அடையாளங்கள் எனலாம்.

அல்லது, இவை போக-நிலங்கள்; அதாவது, அர்சிர்-லோகம், அஹர்லோகம் முதலிய உலகங்களில் சென்று அந்த வழியாக பரமபதம் செல்கிறான்.

**ஸித்தாந்தம்** - அர்சிஷ் முதலியவர்கள் ஆதிவாஹிகர்கள்; மோக்ஷம் பெற்று பரமபதம் செல்பவர்களை அதற்கான வழியில் அழைத்து செல்வதற்காக, பரப்ரஹ்மம் ஆன பகவான், இவர்களை நியமனம் செய்துள்ளான்.

அர்சிஷ் (அக்னி), அஹஸ் (பகல்) என்று சொல்லும்போது, வெறும் பொருள்கள் அல்ல அவை; அவர்கள் தேவர்கள்; (உ.ம்) அஹஸ் என்றால் பகல் காலத்தை அபிமானம் செய்து இருக்கும் ஒரு தேவன் என்று அர்த்தம்.

இதில் கடைசியில் வித்யுத் புருஷன் உள்ளார்; அவர்தான் ஜீவனை ப்ரஹ்மத்திடம் கொண்டு சேர்க்கிறார். அப்போது அவருடன் கூட வருணன், இந்த்ரன், ப்ரஜாபதி ஆகிய மூவர் இணைந்து கொள்கின்றனர்.

இதில் மேலும் பல விஷயங்களை ஸ்ரீ தேசிகன் அருளிய பரமபதஸோபானம் நூலில் சேவித்து அறியலாம்.

# १४९. आतिवाहिकाधिकरणम् (४-३-४)

## ५१२.आतिवाहिकास्तल्लिङ्गात् (४-३-४)

इदमिदानीं चिन्त्यते, किमर्चिरादयो मार्गचिह्नभूताः, उत भोगभूमयः, अथवा विदुषां ब्रह्म प्रेप्सतामतिवोढारः इति।

किं तावत् युक्तम्? मार्गचिह्नभूता इति। कुतः? उपदेशस्य तथाविधत्वात्। दृश्यते हि लोके ग्रामादीन् प्रति गन्तॄणामेवंविधो दैशिकैरुपदेशः 'इतो निष्क्रम्य, अमुकं वृक्षममुकां नदीममुकं च पर्वतपार्श्वं गत्वाऽमुकं ग्रामं गच्छ' इति।

अथवा भोगभूमय एताः स्युः, कालविशेषतया प्रसिद्धानामहरादीनां मार्गचिह्नत्वानुपपत्तेः। अन्यस्य च मार्गचिह्नभूतस्यैतेषामनभिधायकत्वात्। भोगभूमित्वं च, "**एत एव लोकाः यदहोरात्राण्यर्धमासा मासा ऋतवः संवत्सराः**"(?)[1] इत्यहरादीनां लोकत्ववचनादुपपद्यते। अत एव च कौषीतकिनः, "**अग्निलोकमागच्छति**"(कौ.1-3)[2] इत्यादिना लोकशब्दानुविधानेनार्चिरादीन् पठन्तीति।

# 149. ஆதிவாஹிகாதிகரணம் (4-3-4)

## 512.ஆதிவாஹிகாஸ்தல்லிங்காத் (4-3-4)

இதமிதாநீம் சிந்த்யதே, கிம் அர்சிராதய: மார்கசிஹ்நபூதா:, உத போக-பூமய:, அதவா விதுஷாம் ப்ரஹ்ம ப்ரேப்ஸதாம் அதிவோடார: இதி।

கிம் தாவத் யுக்தம்? மார்கசிஹ்நபூதா: இதி। குத:? உபதேஶஸ்ய ததா-விதத்வாத்। த்ருஶ்யதே ஹி லோகே க்ராமாதீந் ப்ரதி கந்த்ரூணாம் ஏவம்-விதோ தைஶிகைருபதேஶ: - 'இதோ நிஷ்க்ரம்ய, அமுகம் வ்ருக்ஷமமு-காம் நதீமமுகம் ச பர்வதபார்ஶ்வம் கத்வாऽமுகம் க்ராமம் கச்ச' இதி।

அதவா போகபூமய ஏதா:ஸ்யு:, காலவிஶேஷதயா ப்ரஸித்தாநாம் அஹராதீநாம் மார்கசிஹ்நத்வாநுபபத்தே:। அந்யஸ்ய ச மார்கசிஹ்நபூதஸ்ய ஏதேஷாமநபிதாயகத்வாத்। போகபூமித்வம் ச, "*ஏத ஏவ லோகா: யதஹோ-ராத்ராண்யர்தமாஸா மாஸா ருதவ: ஸம்வத்ஸரா:*" (?)[1] இதி அஹராதீநாம் லோக-த்வவசநாதுபபத்யதே। அத ஏவ ச கௌஷீதகிந:, "*அக்நிலோகமாகச்சதி*" (கௌ.1-3)[2] இத்யாதிநா லோகஶப்தாநுவிதாநேந அர்சிராதீந் படந்தீதி।

# 149.ஆதிவாஹிகாதிகரணம்(4-3-4)

## 512.ஆதிவாஹிகா: தல்லிங்காத்(4-3-4)

*அழைத்து வருதல் எனும் அந்த அடையாளம் சொல்லியிருப்பதால் ஆதிவாஹிகர்கள் [அழைத்து வர நியமிக்கப் பட்டவர்கள் ஆவர்].*

**ஸம்சயம் (ஸந்தேஹம்)**

இது இப்போது விசாரிக்கப் படுகிறது - அர்சிஷ் முதலியவை வழி-அடையாளம் ஆனவையா? போகத்துக்கான நிலங்களா? அல்லது ப்ரஹ்மத்தை அடைய விரும்பும் ஜ்ஞானிகளுக்கு ஆதிவாஹிகர்களா (ஜ்ஞானிகளை அழைத்து வருவதற்காக நியமிக்கப் பட்டவர்களா)? - என்று.

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்? வழி-அடையாளங்கள் ஆனவை என்பது; ஏன்? உபதேஶம் அப்படி இருப்பதால்; உலகில் க்ராமம் முதலியவற்றைக் குறித்து செல்பவர்களுக்கு இதே போன்று பெரியோர்களின் உபதேஶம் காணப்படுகிறது - 'இங்கிருந்து வெளியே போய், இந்த மரத்தையும், இந்த நதியையும், இந்த மலை-பக்கத்தையும் சென்று (கடந்து), இந்த கிராமம் செல்' என்று.

*✍(அந்த உபதேஶம் போல இந்த அர்சிராதி-உபதேஶம் இருப்பதால், அங்கே சொல்லப்பட்ட மலை நதி முதலிய அடையாளங்கள் போல, இங்கே சொல்லப்படும் அர்சிஷ் முதலியவையும் வழிக்கான அடையாளங்களே).✍*

அல்லது இவை போக-நிலங்கள் ஆகலாம்; பகல் முதலியவை கால-விஶேஷங்கள்; அதனால், அவை வழி-அடையாளங்களாக ஆக முடியாது; வழி-அடையாளமாக வேறு ஏதாவது இருந்தாலும் அதை இந்த சொற்கள் சொல்லாதவை; [1]**''பகல்-இரவுகள், பக்ஷங்கள், மாஸங்கள், ருதுக்கள், வர்ஷங்கள் என்று இவையே உலகங்கள்''** என்று பகல் முதலியவற்றை உலகங்கள் என்று சொல்வதால், இவை போக-நிலங்கள் என்பது சரியாகிறது; அதனால்தான், கௌஷீதகி-ஶாகையினர் [2]**''அக்னி-லோகத்தை அடைகிறான்''** முதலியதால், 'லோக' எனும் சொல்லைச் சேர்த்து அர்சிஷ் முதலியவற்றை ஓதுகின்றனர்.

एवं प्राप्ते ब्रूमः - **आतिवाहिकाः** इति। विदुषामतिवाहे परमपुरुषेण नियुक्ताः आतिवाहिकाः देवताविशेषा एतेऽर्चिरादयः। कुतः? **तल्लिङ्गात्** अतिवहनलिङ्गात्। **अतिवहनं** हि गन्तॄणां गमयितृत्वम्। गमयितृत्वं च **''तत्पुरुषोऽमानवः। स एनान् ब्रह्म गमयति''** (छा.4-15-5,6)[1] इति उपसंहारे श्रूयमाणं पूर्वेषामप्यविशेषश्रुतानां स एव सम्बन्ध इति गमयति। वदन्ति चार्चिरादयः शब्दाः अर्चिराद्यात्मभूतान् अभिमानिदेवताविशेषान्, **''तं पृथिव्यब्रवीत्''**(तै.सं.5-5-2)[2] इतिवत्॥



यद्येवम्, **''तत्पुरुषोऽमानवः। स एनान् ब्रह्म गमयति''**(छा.4-15-5,6)[3] इति वैद्युतस्यैव पुरुषस्य ब्रह्मगमयितृत्वश्रुतेर्विद्युतः परेषां वरुणादीनां कथमातिवाहिकत्वेनान्वय इत्यत्राह -

## ५१३.वैद्युतेनैव ततस्तच्छ्रुतेः (४-३-५)

ஏவம் ப்ராப்தே ப்ரூம: - *ஆதிவாஹிகா:* இதி। விதுஷாமதிவாஹே பரம-புருஷேண நியுக்தா: ஆதிவாஹிகா: தேவதாவிஶேஷா ஏதே அர்சிராதய:। குத:? *தல்லிங்காத்* அதிவஹநலிங்காத்। அதிவஹநம் ஹி கந்த்ரூணாம் கமயித்ருத்வம்। கமயித்ருத்வம் ச *''தத்புருஷோऽமாநவ: ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதி''*(சா.4-15-5,6)[1] இதி உபஸம்ஹாரே ஶ்ரூயமாணம் பூர்வேஷாமபி அவிஶேஷஶ்ருதாநாம் ஸ ஏவ ஸம்பந்த இதி கமயதி। வதந்தி சார்சிரா-தய: ஶப்தா: அர்சிராத்யாத்மபூதாந் அபிமாநிதேவதாவிஶேஷாந், *''தம் ப்ருதிவ்யப்ரவீத்''*(தை.ஸம்.5-5-2)[2] இதிவத்.।4।।

யத்யேவம், *''தத்புருஷோऽமாநவ: ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதி''*(சா.4-15-5,6)[3] இதி வைத்யுதஸ்யைவ புருஷஸ்ய ப்ரஹ்மகமயித்ருத்வஶ்ருதே: வித்யுத: பரேஷாம் வருணாதீநாம் கதம் ஆதிவாஹிகத்வேநாந்வய இத்யத்ராஹ-

## 513.வைத்யுதேநைவ ததஸ்தச்ச்ருதே: (4-3-5)

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்கிறோம் - **''ஆதிவாஹிகா:''** என்று.

ப்ரஹ்ம-ஜ்ஞானிகளை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு (அழைத்து) வருவதற்காக பரமபுருஷனால் நியமனம் செய்யப்பட்ட சில விஶேஷ-தேவர்களே இந்த அர்சிஷ் முதலியவர்கள்.

எப்படி ஆகும்?

**தல்லிங்காத் -** அழைத்து வருகின்றனர் எனும் காரணத்தால் ஆகும்.

அதிவஹநம் செய்தல் என்றால், செல்பவர்களை செல்ல வைப்பவராக ஆதல் என்று அர்த்தம்; செல்ல வைத்தல் என்பது கடைசியில் வேதத்தில் சொல்லப்படுகிறது - [1]**''அந்த மின்னல்-புருஷன் அமானவன் ஆவான்; அவன் இவர்களை ப்ரஹ்மத்திடம் செல்ல வைக்கிறான்''** என்று; மின்னல்-புருஷனுக்கு முன்னர் இருப்பவரும், விஶேஷ-குறிப்பு இன்றி இதேபோல ஓதப்படுகின்றனர்; இறுதியில் மின்னல்-புருஷன் அழைத்துச் செல்வதாகச் சொன்னதானது, முன்னர் இருப்பவர்களுக்கும் அழைத்துச் செல்லுதல் எனும் இதே தொடர்புதான் என தெரிய வைக்கிறது;

மேலும், 'அர்சிஷ்' முதலிய சொற்கள் அர்சிஷ் (அக்நி) முதலியவற்றின் அபிமானிகளாக இருக்கும் விஶேஷ-தேவர்களை சொல்கின்றன; [2]**''அவனை பூமி சொன்னது''** முதலியது போல இது ஆகும்.

*✍(பூமி சொன்னது என்றால் பூமித் தேவன் சொன்னான்' என்று அர்த்தம்; அதுபோல இங்கும் அர்சிஷ் முதலிய சொற்கள் அந்தந்த தேவர்களைக் குறிக்கும்)✍*



**கேள்வி -** இப்படியானால், மின்னலுக்குப் பின்னர் ஆகும் வருணன் முதலியவர், ஆதிவாஹிகராக (அழைத்து செல்பவராக) சேர்வது எப்படியாகும்? ஏனெனில், [3]**''அந்த மின்னல்-புருஷன் அமானவன்; அவன் இவர்களை ப்ரஹ்மத்திடம் செல்ல வைக்கிறான்''** என்று மின்னல்-புருஷன் மட்டுமே ப்ரஹ்மத்திடம் அழைத்துப் போவதாக வேதம் சொல்கிறது!

**பதில் -** இப்படி கேள்வி வருமிடத்து பதில் சொல்கிறார் -

> **513.வைத்யுதேன ஏவ தத: தச்ச்ருதே:(4-3-5)**
>
> ***அவனுக்குப் பின் மின்னல்-புருஷனைக் கொண்டே [செல்கின்றனர்]; அதை வேதம் சொல்வதால்.***

**ततः** विद्युत उपरि, **वैद्युतेनामानवेनैवातिवाहिकेन** विदुषामाब्रह्मप्राप्तेर्गमनम्। कुतः? **तच्छ्रुतेः। "स एनान् ब्रह्म गमयति"**(छा.4-15-6)[1] इति तस्यैव गमयितृत्वश्रुतेः। वरुणादयस्त्वनुग्राहका इति तेषामप्यातिवाहिकत्वेनान्वयो विद्यत एव॥ ५ ॥

इति आतिवाहिकाधिकरणम् ॥ ४ ॥

---

*ததः* வித்யுத உபரி, வைத்யுதேநாமாநவேநைவ ஆதிவாஹிகேந விதுஷாம் ஆப்ரஹ்மப்ராப்தேர்கமநம்। குத:? *தச்ச்ருதே: "ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதி"* (சா.4-15-6)[1] இதி தஸ்யைவ கமயித்ருத்வஶ்ருதே:। வருணாதயஸ்து அநுக்ராஹகா இதி தேஷாமபி ஆதிவாஹிகத்வேநாந்வயோ வித்யத ஏவ॥5॥

இதி ஆதிவாஹிகாதிகரணம் ॥ 4 ॥



**தத: -** அந்த மின்னல்-புருஷனுக்குப் பின்

**வைத்யுதேன ஏவ -** அழைத்துப் போகும் அமானவன் ஆன மின்னல்-புருஷனைக் கொண்டே

ஜ்ஞானிகள் ப்ரஹ்மத்தை அடையும்வரை போகின்றனர்;

ஏன்?

**தச்ச்ருதே: -** (அதை வேதம் சொல்வதால்) - [1]**''அவன் இவர்களை ப்ரஹ்மத்திடம் செல்ல வைக்கிறான்''** என்று அந்த மின்னல்-புருஷனே அழைத்துச் செல்வதாக வேதம் சொல்வதால்.

வருணன் முதலியவரோ, (மின்னல்-புருஷனுடன் கூட இருந்து) அனுக்ரஹம் செய்பவர் என்பதால், அழைத்துச் செல்பவராக அவர்களுக்கும் இதில் தொடர்பு உண்டுதான்.

********************************************************

**ஆதிவாஹிகாதிகரணம் முற்றிற்று.**



# 150.கார்யாதிகரணம்(4-3-5)

## முன் குறிப்பு

அர்சிஷ் முதலிய தேவர்கள் பரமபதத்துக்கு அழைத்து செல்வர் என்று சொல்லி-யாயிற்று. யாரை அழைத்துச் செல்வர் என்பதில் ஒரு விசாரம்

பாதரிமுனிவரின் மதம் - நான்முகனை உபாஸநம் செய்பவர்களை அவனுடைய லோகத்துக்கு அழைத்துச் செல்வர். அந்தவழிதான் அர்ச்சிராதி கதி ஆகும். நான்முகனுக்கும் ப்ரஹ்ம என்று ஒரு பெயர் உண்டு. எனவே ப்ரஹ்மத்தை அடைகிறார் என்பது சரி; பர-ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்பவருக்கு அர்ச்சிராதிகதி தேவையில்லை.

ஜைமினி முனிவர் மதம் - பரப்ரஹ்மத்தை உபாஸநம் செய்பவரை மட்டுமே அர்ச்சிராதி தேவர்கள் பரமபதம் அழைத்து செல்வர். வேறு யாரையும் அல்ல.

பாதராயணர் மதம் (ஸித்தாந்தம்) - பரப்ரஹ்மத்தை உபாஸநம் செய்பவருக்கு அர்ச்சி-ராதிகதி உண்டு; அது மட்டுமல்ல; பரப்ரஹ்மத்தின் ஶரீரமாக, ஜீவாத்மாவை உபாஸநம் செய்பவருக்கும் அர்ச்சிராதி கதி உண்டு. வேறு யாருக்கும் கிடையாது.

ஸூத்ரத்தில் ப்ரதீக-உபாஸநம் செய்பவர்களைத் தவிர மற்றவர்களுக்கு அர்ச்சிராதி கதி உண்டு என்கிறது; ப்ரதீக உபாஸநம் செய்பவர் என்பது ப்ரஹ்மத்தின் ஶரீரமான சேதந-அசேதநங்களை உபாஸநம் செய்பவர்; அவருக்கு அர்ச்சிராதி கதி கிடையாது; மற்றவருக்கு உண்டு; அதாவது ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்பவருக்கு உண்டு; அதே ஸமயம் பஞ்சாக்நிவித்யைப்படி ஜீவனை ப்ரஹ்மத்தின் ஶரீரமாக உபாஸநம் செய்வது என்பது ப்ரதீக உபாஸநம் அல்ல; அது ப்ரஹ்ம-உபாஸநம் ஆகும்; அதற்கும் அர்ச்சிராதி வழியாக ப்ரஹ்மத்தை அடையும் பலன் உண்டு.

**அர்ச்சிராதி கதி பெற முடியாதவர்கள் மூன்று விதம் -**

1. அசேதன பொருளை அப்படியே உபாஸநம் செய்பவர்கள்.
2. அசேதன-பொருளையே ப்ரஹ்மம் ஆக த்ருஷ்டி-உபாஸநம் செய்பவர்கள்.
3. (பரமாத்மாவை விட்டுவிட்டு) வெறும் ஜீவனை உபாஸநம் செய்பவர்கள்.

**ஜீவாத்மாவை உபாஸநம் செய்வதில் மூன்று விதம் உள்ளது.**

1. ஶரீரத்துடன் கூடிய ஜீவனை உபாஸநம் செய்தால் ஶரீர-அனுபவமே பலன்.
2. ஶரீரம் அற்ற ஜீவ-ஸ்வரூபத்தை (ப்ரஹ்மத்தின் தொடர்பு இல்லாமல்) உபாஸநம் செய்தால், கைவல்யம் எனும் பலன் கிடைக்கும். இது மோக்ஷம் அன்று.
3. ப்ரஹ்மத்தின் ஶரீரமாக ஜீவனை உபாஸநம் செய்தால், அர்ச்சிராதி கதி வழியாக பரம-பதம் ஆகிற மோக்ஷம் கிடைக்கும். இதனை வேதமே சொல்கிறது.

அப்படி, ப்ரஹ்மத்தின் ஶரீரமாக ஜீவனை உபாஸநம் செய்வது பஞ்சாக்னி வித்யை-யில் ஆகும்; அதனால்தான் அங்கே அந்த வித்யையில் அர்ச்சிராதி கதியும் ப்ரஹ்மத்தை அடைதலும் பலன் என வேதம் சொல்கிறது.

இந்த அதிகரணத்தில், முதல் ஐந்து ஸூத்ரங்களில் பாதரி மதம்; அடுத்த மூன்று ஸூத்-ரங்களில் ஜைமினி மதம்; கடைசி இரண்டு ஸூத்ரங்களில் பாதராயணர் மதம்; அதுதான் ஸித்தாந்தம்.

# १५०. कार्याधिकरणम् (४-३-५)

## ५१४.कार्यं बादरिरस्य गत्युपपत्तेः (४-३-६)

अर्चिरादिनैव गच्छति विद्वान्; अर्चिरादिरमानवान्तश्च गणः आतिवाहिको विद्वांसं ब्रह्म गमयतीत्युक्तम्।

इदमिदानीं चिन्त्यते। किमयमर्चिरादिको गणः कार्यं हिरण्यगर्भमुपासीनान्नयति, उत परमेव ब्रह्मोपासीनान्, अथ परं ब्रह्म उपासीनान् प्रत्यगात्मानं ब्रह्मात्मकतयोपासीनांश्च इति विशये -

**कार्य**मुपासीनानेव गमयतीति **बादरि**राचार्यो मन्यते। कुतः? **अस्य** -हिरण्यगर्भमुपासीनस्यैव **गत्युपपत्तेः**। न हि परिपूर्णं सर्वज्ञं सर्वगतं सर्वात्मभूतं परं ब्रह्मोपासीनस्य तत्प्राप्तये देशान्तरगतिरुपपद्यते; प्राप्तत्वादेव। नित्यप्राप्तपरब्रह्मविषयाविद्यानिवृत्तिमात्रमेव हि परविद्याकार्यम्। कार्यं तु हिरण्यगर्भरूपं ब्रह्मोपासीनस्य परिच्छिन्नदेशवर्तिप्राप्यप्राप्त्यर्थं गमनमुपपद्यते। अतोऽर्चिरादिरातिवाहिकगणस्तमेव नयति॥ ६ ॥

---

# 150. கார்யாதிகரணம் (4-3-5)

## 514.கார்யம் பாதரிரஸ்ய கத்யுபபத்தே: (4-3-6)

அர்சிராதிநைவ கச்சதி வித்வாந்; அர்சிராதி: அமாநவாந்தஶ்ச கண: ஆதிவாஹிகோ வித்வாம்ஸம் ப்ரஹ்ம கமயதீத்யுக்தம்।

இதமிதாநீம் சிந்த்யதே। கிம் அயமர்சிராதிகோ கண: கார்யம் ஹிரண்யகர்பமுபாஸீநாந் நயதி, உத பரமேவ ப்ரஹ்மோபாஸீநாந், அத பரம் ப்ரஹ்ம உபாஸீநாந் ப்ரத்யகாத்மாநம் ப்ரஹ்மாத்மகதயா உபாஸீநாம்ஶ்ச - இதி விஶயே -

*கார்ய*முபாஸீநாநேவ கமயதி இதி **பாத**ரிராசார்யோ மந்யதே। குத:? *அஸ்ய* - ஹிரண்யகர்பமுபாஸீநஸ்யைவ கத்யுபபத்தே:। ந ஹி பரிபூர்ணம் ஸர்வஜ்ஞம் ஸர்வகதம் ஸர்வாத்மபூதம் பரம் ப்ரஹ்மோபாஸீநஸ்ய தத்ப்ராப்தயே தேஶாந்தரகதி: உபபத்யதே; ப்ராப்தத்வாதேவ। நித்யப்ராப்தபரப்ரஹ்மவிஷயாவித்யாநிவ்ருத்திமாத்ரமேவ ஹி பரவித்யாகார்யம்। கார்யம் து ஹிரண்யகர்பரூபம் ப்ரஹ்மோபாஸீநஸ்ய பரிச்சிந்நதேஶவர்திப்ராப்யப்ராப்த்யர்தம் கமநமுபபத்யதே। அத: அர்சிராதிராதிவாஹிககண: தமேவ நயதி।। 6 ।।

# 150.கார்யாதிகரணம்(4-3-5)

**514.(ஸூ) கார்யம் பாதரி: அஸ்ய கத்யுபபத்தே: (4-3-6)**

*படைக்கப்படுபவனை [நான்முகனை] உபாஸநம் செய்பவனை அழைத்துச் செல்வதாக பாதரி கருதுகிறார்; ஏனெனில், அவனுக்கே செல்லுதல் பொருந்தும்.*

**ஸங்கதி (விஷய-தொடர்பு) & ஸம்ஶயம் (ஸந்தேஹம்)**

அர்சிராதி-வழியாலேயே ஜ்ஞானி செல்கிறான்; அர்சிஷ் முதல் அமானவன் வரையிலான குழுவானது அழைத்துச் செல்பவராய் ஜ்ஞானியை ப்ரஹ்மத்திடம் செல்ல வைக்கிறது என்று சொல்லியாயிற்று; இப்போது இது விசாரம் செய்யப் படுகிறது; இந்த அர்சிராதி-குழுவானது -

- ''படைக்கப் படுபவனான ஹிரண்யகர்ப்பனை (நான்முகனை) உபாஸநம் செய்பவர்களை அழைத்துப் போகிறதா?
- அல்லது பர-ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்பவரை மட்டும் அழைத்துச் செல்-கிறதா?
- அல்லது, பர-ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்பவரையும், ப்ரஹ்மத்தை ஆத்மா-வாகக் கொண்டதாக ஜீவாத்மாவை உபாஸநம் செய்பவரையும் அழைத்துச் செல்கிறதா? - என்று ஸந்தேஹம்.

**பூர்வபக்ஷம்**

படைக்கப் படுபவனான ஹிரண்யகர்ப்பனை (நான்முகனை) உபாஸநம் செய்பவர்களை அழைத்துப் போகிறது என்று ஆசார்யர் பாதரி கருதுகிறார். ஏன்? இந்த ஹிரண்யகர்ப்பனை உபாஸநம் செய்பவருக்கே, கதி (செல்லுதல்) என்பது சரியாக வரும்.

பர-ப்ரஹ்மமோ பரிபூர்ணமானது; ஸர்வஜ்ஞன் ஆவது; எல்லா இடத்திலும் இருப்பது, எல்லாருக்கும் ஆத்மாவானது; அதை உபாஸநம் செய்பவர், அதை அடைவதற்காக வேறு உலகத்துக்குச் செல்கின்றனர் என்பது பொருந்தாது; ஏனெனில், அது எப்போதும் அடையப்பட்டதாகவே (இங்கேயே) இருக்கிறது; எப்போதுமே அடையப்பட்டதாக (எங்கும்) இருக்கும் பரப்ரஹ்மம் பற்றிய அஜ்ஞாநத்தை ஒழிப்பது மட்டும்தானே பரவித்யையாகிற உபாஸனத்தின் பலன்! ✍*(ப்ரஹ்மத்தை அடைதல் என்பது உபாஸநத்தின் பலன் அல்ல; அது வேதாந்தஶாஸ்த்ரத்தின் நோக்கம் அல்ல; ஏனெனில், ப்ரஹ்மம் எல்லா இடத்திலும் இருக்கிறபடியால் அதை நாம் வேறொரு இடம் தேடிச் சென்று அடைய வேண்டிய அவசியமில்லை; மாறாக, ப்ரஹ்மம் பற்றிய அஜ்ஞாநத்தை ஒழிப்பதற்குதான் ஶாஸ்த்ரம்; அதற்காகவே உபாயம் ஆகும்)*✍

படைக்கப் படுபவனான ஹிரண்யகர்ப்பனை (நான்முகனை) உபாஸநம் செய்-பவர்களுக்கோ, அடையப்படும் பலன் ஆனது, ஒரு குறிப்பிட்ட அளவுடைய இடத்-தில் இருக்கிறது; அதனால், அதை அடைவதற்காக செல்கிறான் என்பது பொருந்தும். ஆகவே, அர்சிஷ் முதலிய ஆதிவாஹிக-குழுவானது அவனையே (ஹிரண்யகர்ப்-பனை உபாஸநம் செய்பவனையே) அழைத்துச் செல்லும்.



## ५१५.विशेषितत्वाच्च (४-३-७)

**"पुरुषो मानस एत्य ब्रह्मलोकान् गमयति"**(बृ.8-2-15)[1] इति लोकशब्देन, बहुवचनेन च लोकविशेषवर्तिनं हिरण्यगर्भमुपासीनमेवामानवो गमयतीति विशेष्यते। किञ्च **"प्रजापतेः सभां वेश्म प्रपद्ये"**(छा.8-14-1)[2] इति कार्यस्य हिरण्यगर्भस्य समीपगमनमर्चिरादिना गतः प्रत्यभिसन्धत्ते॥ ७ ॥

नन्वेवम्, **"तत्पुरुषोऽमानवः। स एनान् ब्रह्म गमयति"**(छा.4-15-5,6)[3] इत्ययं निर्देशो नोपपद्यते। हिरण्यगर्भनयने हि, 'स एनान् ब्रह्माणं गमयति' इति निर्देष्टव्यं स्यात्, अत आह -

## ५१६.सामीप्यात् तु तद्व्यपदेशः (४-३-८)

**"यो ब्रह्माणं विदधाति"**(श्वे.6-18)[4] इति हिरण्यगर्भस्य प्रथमजत्वेन ब्रह्मसामीप्यात् तस्य ब्रह्मशब्देन व्यपदेश इति गत्यनुपपत्तिविशेषणादिभिरुक्तैर्हेतुभिर्निश्चीयत इत्यर्थः॥८॥

---

## 514. விஶேஷிதத்வாச்ச (4-3-7)

*"புருஷோ மாநஸ ஏத்ய ப்ரஹ்மலோகாந் கமயதி"*(ப்ரு.9-2-12)[1] இதி லோகஶப்தேந, பஹுவசநேந ச லோகவிஶேஷவர்திநம் ஹிரண்யகர்பமுபாஸீநமேவ அமாநவோ கமயதீதி விஶேஷ்யதே। கிஞ்ச *"ப்ரஜாபதேः ஸபாம் வேஶ்ம ப்ரபத்யே"*(சா.8-14-1)[2] இதி கார்யஸ்ய ஹிரண்யகர்பஸ்ய ஸமீபகமநம் அர்சிராதிநா கத: ப்ரத்யபிஸந்தத்தே।। 7 ।।

நந்வேவம், *"தத்புருஷோऽமாநவ: ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதி"*(சா.4-15-5,6)[3] இத்யயம் நிர்தேஶோ நோபபத்யதே। ஹிரண்யகர்பநயநே ஹி, 'ஸ ஏநாந் ப்ரஹ்மாணம் கமயதி' இதி நிர்தேஷ்டவ்யம் ஸ்யாத்-அத ஆஹ-

## 516. ஸாமீப்யாத் து தத்வ்யபதேஶ: (4-3-8)

*"யோ ப்ரஹ்மாணம் விததாதி"*(ஶ்வே.6-18)[4] இதி ஹிரண்யகர்பஸ்ய ப்ரதமஜத்வேந ப்ரஹ்மஸாமீப்யாத் தஸ்ய ப்ரஹ்மஶப்தேந வ்யபதேஶ இதி கத்யநுபபத்திவிஶேஷணாதிபி: உக்தைர்ஹேதுபிர்நிஶ்சீயதே இத்யர்த:।।8।।

## 515.(ஸூ) விஶேஷிதத்வாத் ச (4-3-7)

*தனிப்படுத்தி சொல்வதாலும்*

[1]**''மானஸ-புருஷனான அவன் வந்து ப்ரஹ்ம-லோகங்களுக்கு அழைத்து செல்கிறான்''** என்று 'லோகம்' என்ற சொல்லும், பஹுவசனமும் (பன்மையும்) உள்ளது; அதன் மூலம், தனி-உலகத்தில் இருப்பவனான ஹிரண்யகர்ப்பனை உபாஸநம் செய்பவனை மட்டுமே அமானவ-புருஷன் அழைத்துச் செல்கிறான் என்பது தனிப்படுத்தி குறிப்பிடப் படுகிறது;

*(ப்ரஹ்மலோகங்கள் என்கிற சொல்லுக்கு ப்ரஹ்மம் ஆகிற உலகம் என்ற அர்த்தம் வராது; ஏனெனில், ப்ரஹ்மம் ஒன்றேயானபடியால், பன்மை பொருந்தாது; எனவே, ப்ரஹ்மத்தின் உலகங்கள் என்றே அர்த்தம் சொல்லவேண்டும்; அது தனிப்பட்ட உலகங்களை உடைய நான்முகனுக்கே பொருந்தும்; எல்லா இடத்திலும் இருக்கும் பரப்ரஹ்மத்துக்கு பொருந்தாது).*

மேலும், அர்சிராதி-வழியாக செல்பவன், படைக்கப்படுபவனான ஹிரண்யகர்ப்பனுக்கு அருகில் செல்வதை எண்ணுகிறான் - [2]**''ப்ரஜாபதியின் ஸபை ஆகிற இல்லத்தை அடைகிறேன்''** என்று. (ப்ரஜாபதி என்று நான்முகனைக் குறிக்கிறது)



**கேள்வி -** அப்படியானால், [3]**''அந்த புருஷன் அமானவன்; அவன் இவர்களை ப்ரஹ்மத்திடம் அழைத்து செல்கிறான்''** எனும் இந்த குறிப்பு சரியாகாமல் போக நேரிடும்; ஹிரண்யகர்ப்பனிடம் அழைத்து செல்வதானால், 'அவன் இவர்களை ப்ரஹ்மாவிடம் அழைத்து செல்கிறான்'' என்றே குறிப்பிடப் பட்டிருக்க வேண்டும்.

*(நான்முகனைக் குறிப்பதானால், 'ப்ரஹ்மாணம்' என்று சொல்ல வேண்டும்; பரப்ரஹ்மத்தைக் குறிப்பதானால் 'ப்ரஹ்ம' என்று ஆகும்; இங்கே 'ப்ரஹ்ம' என்ற சொல், எப்படி நான்முகனைக் குறிக்கும்?)*

**பதில் -** அதற்கு பதில் சொல்கிறார் -

## 516.(ஸூ) ஸாமீப்யாத் து தத்வ்யபதேஶ: (4-3-8)

*ப்ரஹ்மத்தின் அருகில் இருப்பதால் அந்த ப்ரஹ்மத்தின் சொல் ஆகிறது.*

[4]**''யார் ப்ரஹ்மாவைப் படைத்தானோ''** என்று சொல்வதால், ப்ரஹ்ம-தேவனான ஹிரண்யகர்ப்பன் பர-ப்ரஹ்மத்திலிருந்து முதலில் உண்டானவன்; அதனால், பர-ப்ரஹ்மத்தை அடுத்திருப்பவன்; அதனால் 'ப்ரஹ்ம' என்ற சொல்லால் அவனைச் சொல்கிறது. கதி (செல்லுதல்) வர நேராது என்றும், விஶேஷித்து சொல்லுதல் என்றும் இது முதலிய முன் (ஸூத்ரங்களில்) சொன்ன காரணங்களைக் கொண்டு, இப்படி தீர்மானிக்கப் படுகிறது என்று பொருள்.

*(இங்கே 'ப்ரஹ்ம' என்ற சொல்லானது, ப்ரஹ்மத்திலிருந்து தோன்றிய நான்முகனைக் குறிக்கிறது; இது நேர்ப் பொருள் அல்ல; லக்ஷணையால் கிடைக்கும் பொருள் ஆகும்).*



अथ स्यात् - अर्चिरादिना हिरण्यगर्भप्राप्तौ,

★ **''एष देवपथो ब्रह्मपथः एतेन प्रतिपद्यमाना इमं मानवमावर्तं नावर्तन्ते''** (छा.4-15-6)[1],

★ **''तयोर्ध्वमायन्नमृतत्वमेति''** (क.6-16)[2]

इत्यमृतत्वप्राप्त्यपुनरावृत्तिव्यपदेशो नोपपद्यते; हिरण्यगर्भस्य कार्यभूतस्य द्विपरार्धकालावसाने विनाशशास्त्रात्, **''आ ब्रह्मभ(भु)वनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन''** (गी.8-16)[3] इति वचनात् हिरण्यगर्भं प्राप्तस्य पुनरावृत्तेरवर्जनीयत्वात् इति, अत्राह -

**५१७.कार्यात्यये तदध्यक्षेण सहातः परमभिधानात् (४-३-९)**

**कार्यस्य** - ब्रह्मलोकस्यात्यये, **तदध्यक्षेण** - हिरण्यगर्भेणाऽऽधिकारिकेणावसिताधिकारेण विदुषा **सह** स्वयमपि तत्राधिगतविद्यः **अतः** - कार्याद्ब्रह्मलोकात् **परं** ब्रह्म प्राप्नोतीति, अर्चिरादिना गतस्यामृतत्वप्राप्त्यपुनरावृत्त्य**भिधानात्**, **''ते ब्रह्मलोके तु परान्तकाले परामृतात् परिमुच्यन्ति सर्वे''**(तै.2. 10-24)[4] इति वचनाच्चावगम्यते॥ ९ ॥

---

அத ஸ்யாத்-அர்சிராதிநா ஹிரண்யகர்பப்ராப்தௌ,

★ *''ஏஷ தேவபதோ ப்ரஹ்மபத: ஏதேந ப்ரதிபத்யமாநா இமம் மாநவமாவர்தம் நாவர்தந்தே''*(சா.4-15-6)[1],

★ *''தயோர்த்வமாயந்நம்ருதத்வமேதி''*(க.6-16)[2]

இதி அம்ருதத்வப்ராப்த்யபுநராவ்ருத்திவ்யபதேஶ: நோபபத்யதே, ஹிரண்யகர்பஸ்ய கார்யபூதஸ்ய த்விபரார்தகாலாவஸாநே விநாஶஶாஸ்த்ராத், *''ஆ ப்ரஹ்மபுவநால்லோகா: புநராவர்திநோऽர்ஜுந''*(கீ.8-16)[3] இதி வசநாத் ஹிரண்யகர்பம் ப்ராப்தஸ்ய புநராவ்ருத்தேரவர்ஜநீயத்வாத் - இதி-அத்ராஹ -

**517. கார்யாத்யயே ததத்யக்ஷேண ஸஹாத: பரமபிதாநாத் (4-3-9)**

*கார்யஸ்ய* - ப்ரஹ்மலோகஸ்ய அத்யயே, *ததத்யக்ஷேண* - ஹிரண்யகர்பேண ஆதிகாரிகேண அவஸிதாதிகாரேண விதுஷா *ஸஹ* ஸ்வயமபி தத்ராதிகதவித்ய: *அத:* - கார்யாத் ப்ரஹ்மலோகாத் பரம் ப்ரஹ்ம ப்ராப்நோதீதி, அர்சிராதிநா கதஸ்ய அம்ருதத்வப்ராப்த்யபுநராவ்ருத்த்யபிதாநாத்[4] *''தே ப்ரஹ்மலோகே து பராந்தகாலே பராம்ருதாத் பரிமுச்யந்தி ஸர்வே''*(தை.2.10-24) இதி வசநாச்சாவகம்யதே॥ 9 ॥

**கேள்வி -**

- [1]**"இது தேவ-மார்க்கம்; ப்ரஹ்ம-மார்க்கம்; இந்த வழியால் அடைபவர்கள் மனிதனதான இந்த ஸம்ஸார-சுழற்சியில் திரும்பி வருவதில்லை",**
- [2]**"இந்த வழியால் மேலே செல்பவன் அம்ருத-நிலையை அடைகிறான்"**

என்று மரணமற்ற அம்ருத-நிலையை அடைதலையும், திரும்பி வாராமையையும் சொல்கிறது; அர்சிராதி வழியால், ஹிரண்யகர்ப்பனை அடைவதானால், இப்படி சொன்னது பொருந்தாமல் போகும்; ஏனெனில், படைக்கப் படுபவனான ஹிரண்ய-கர்ப்பன் இரண்டு பரார்த்த-வருஷ-காலம் முடிவில் அழிவதாக ஶாஸ்த்ரம் உள்ளது; [3]**"அர்ஜுனா, ப்ரஹ்மாவின் உலகம் வரை உலகங்கள் மீண்டும் அழிந்து தோன்று-பவை"** என்று வசனம் உள்ளது; அதனால் ஹிரண்யகர்ப்பனை அடைபவர்க்கு திரும்பி ஸம்ஸாரம் வருதல் என்பது தவிர்க்க முடியாதது ஆகும்.

**பதில் -** அதற்கு பதில் சொல்கிறார் -

## 517.(பூ) கார்யாத்யயே ததத்யக்ஷேண ஸஹ அத: பரம் அபிதாநாத்(4-3-9)

*ப்ரஹ்மலோகம் அழியும்போது அதன் தலைவனான நான்முகனுடன் கூட அங்கிருந்து பரப்ரஹ்மத்தை அடைகிறான்; அப்படி சொல்வதால்.*

**கார்யாத்யயே -** படைக்கப்படும் ப்ரஹ்மலோகம் (நான்முகனின் உலகம்) அழி-யும்போது,

**ததத்யக்ஷேண ஸஹ -** அதன் தலைவனான ஹிரண்யகர்ப்பனுடன் கூட

**அத: -** படைக்கப்பட்ட இந்த ப்ரஹ்மலோகத்திலிருந்து

**பரம் -** பரப்ரஹ்மத்தை அடைகிறான்;

ஒரு அதிகாரத்தில் நியமிக்கப்பட்ட நான்முகன் அப்போது அதிகாரம் முடிந்த-வனாக இருப்பான்; ப்ரஹ்ம-உபாஸநம் செய்தவனாக இருப்பான்; இவன்தானும் ப்ரஹ்ம-வித்யை ஆகிற உபாஸநத்தை முடித்தவனாக இருப்பான்; (அதனால், அவனுடன் கூட இந்த ஜ்ஞானியும் அங்கிருந்து பரப்ரஹ்மத்தை அடைகிறான்).

**அபிதாநாத் -** அர்சிராதி வழியால் செல்பவன் அம்ருத-தன்மையை அடை-வதையும் திரும்பி வாராமையையும் சொல்வதாலும், மேலும், [4]**"ப்ரஹ்மலோ-கத்திலோ, அவர்கள் எல்லாரும், பர-காலத்தின் முடிவில், உயர்ந்த அம்ருதமான பர-ப்ரஹ்மத்தை அடைந்து மோக்ஷம் அடைகின்றனர்"** என்று வேதவசனம் சொல்-வதாலும் இப்படி தெரிகிறது.

## ५१८.स्मृतेश्च (४-३-१०)

**स्मृतेश्चायमर्थोऽवगम्यते -**

**''ब्रह्मणा सह ते सर्वे संप्राप्ते प्रतिसञ्चरे।**
**परस्यान्ते कृतात्मानः प्रविशन्ति परं पदम्''**(कू.पु.पू.12-269)[1] इति।

अतः कार्यमुपासीनमेवार्चिरादिको गणो नयतीति बादरेर्मतम्॥ १० ॥

अत्र जैमिनिः पक्षान्तरपरिग्रहेण प्रत्यवतिष्ठते -

## ५१९.परं जैमिनिर्मुख्यत्वात् (४-३-११)

**परं** ब्रह्म उपासीनानर्चिरादिर्नयतीति **जैमिनिराचार्यो** मन्यते, कुतः? **मुख्यत्वात्।** **''तत्पुरुषोऽमानवः। स एनान् ब्रह्म गमयति''**(छा.4-15-5,6)[2] इति ब्रह्मशब्दस्य परस्मिन्नेव ब्रह्मणि मुख्यत्वात्। प्रमाणान्तरेण कार्यत्वनिश्चये सत्येव हि लाक्षणिकत्वं युक्तम्।

न च गमनानुपपत्तिः प्रमाणम्; परस्य ब्रह्मणः सर्वगतत्वेऽपि विदुषो विशिष्टदेशगतस्यैवाविद्यानिवृत्तिशास्त्रात्। यथा हि विद्योत्पत्तिर्वर्णाश्रमधर्मशौचाचारदेशकालाद्यपेक्षा,

## 518. ஸ்ம்ருதேஶ்ச (4-3-10)

ஸ்ம்ருதேஶ்ச அயமர்தோऽவகம்யதே -

*''ப்ரஹ்மணா ஸஹ தே ஸர்வே ஸம்ப்ராப்தே ப்ரதிஸஞ்சரே।*
*பரஸ்யாந்தே க்ருதாத்மாந: ப்ரவிஶந்தி பரம் பதம்।।''*(கூ.பு.பூ.2-269)[1] இதி।

அத: கார்யமுபாஸீநமேவார்சிராதிகோ கணோ நயதீதி பாதரேர்மதம்।।10।।

அத்ர ஜைமிநி: பக்ஷாந்தரபரிக்ரஹேண ப்ரத்யவதிஷ்டதே -

## 519. பரம் ஜைமிநிர்முக்யத்வாத் (4-3-11)

*பரம்* ப்ரஹ்ம உபாஸீநாந் அர்சிராதிர்நயதீதி ஜைமிநிராசார்யோ மந்யதே, குத:? *முக்யத்வாத்। ''தத்புருஷோऽமாநவ: ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதி''* (சா.4-15-5,6)[2] இதி ப்ரஹ்மஶப்தஸ்ய பரஸ்மிந்நேவ ப்ரஹ்மணி முக்யத்வாத்। ப்ரமாணாந்தரேண கார்யத்வநிஶ்சயே ஸத்யேவ ஹி லாக்ஷணிகத்வம் யுக்தம்।

ந ச கமநாநுபபத்தி: ப்ரமாணம்; பரஸ்ய ப்ரஹ்மண: ஸர்வகதத்வேऽபி விதுஷோ விஶிஷ்டதேஶகதஸ்யைவ அவித்யாநிவ்ருத்திஶாஸ்த்ராத்।

## 518.(பூ) ஸ்ம்ருதே: ச (4-3-10)

*ஸ்ம்ருதியாலும்*

[1]**''பர-காலத்தின் முடிவில் ப்ரளயம் நேரிடும்போது அவர்கள் எல்லாரும் செய்ய வேண்டிய உபாஸநத்தை செய்தவராய் நான்முக-ப்ரஹ்மனுடன் கூட பரம-பதத்தை அடைகின்றனர்''** என்கிற ஸ்ம்ருதி-வசனத்தாலும் இந்த விஷயம் தெரிய வருகிறது.

ஆகையினால் படைக்கப்படுபவனான நான்முகனை உபாஸநம் செய்பவர்-களை மட்டுமே அர்ச்சிராதி-குழு அழைத்துச் செல்கிறது என்பது பாதரிமுனிவரின் கருத்து ஆகும்.



இங்கு ஜைமினி ஆனவர் வேறொரு பக்ஷத்தை எடுத்துக் கொண்டு கேட்கிறார் -

## 519.(பூ) பரம் ஜைமினி: முக்யத்வாத் (4-3-11)

*['ப்ரஹ்ம' என்ற சொல்லானது, பரப்ரஹ்மம் எனும் பொருளை] முக்கிய நேர்பொருளாக கொண்டுள்ளதால், பரப்ரஹ்மத்தை உபாஸநம் செய்பவர்களை மட்டுமே [அர்ச்சிராதி குழு அழைத்துச் செல்வதாக] ஜைமிநி கருதுகிறார்.*

**பரம் -** பர-ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்பவர்களையே அர்சிராதியான ஆதி-வாஹிக-குழு அழைத்து செல்கிறது என

**ஜைமினி: -** ஆசார்யர் ஜைமினி கருதுகிறார்;

ஏன்?

**முக்யத்வாத் -** [2]**''அந்த மின்னல்-புருஷன் அமானவன்; அவன் இவர்களை ப்ரஹ்மத்திடம் அழைத்து செல்கிறான்''** என்று 'ப்ரஹ்ம' என்ற சொல்லானது, பர-ப்ரஹ்மத்தையே முக்கிய நேர்ப்பொருளாக கொண்டுள்ளதால்.

வேறு ப்ரமாணத்தின் மூலம் அது படைக்கப்படும் பொருளாக உறுதியாகத் தெரிந்தால்தானே (முக்ய-பொருளை விட்டு) லக்ஷணை-பொருளை உடையதாக சொல்வது சரியாகும்! (இங்கு வேறு ப்ரமாணம் எதுவும் இல்லை).

பர-ப்ரஹ்மத்தை அடைவதானால், கதி (செல்லுதல்) வர நேராது என்பது ப்ர-மாணம் ஆகாது; ஏனெனில், பர-ப்ரஹ்மம் ஆனது எல்லாவிடத்திலும் இருப்பதா-னாலும், தனித்த ஒரு தேசத்தில் இருக்கும் ஜ்ஞானிக்குதான் அவித்யை ஒழிவதாக ஶாஸ்த்ரம் சொல்கிறது.

ப்ரஹ்ம-வித்யை(உபாஸநம்) உண்டாவதானது, வர்ணாஶ்ரமதர்மங்கள், ஶுத்தி, ஆசாரம், தேசம், காலம் முதலியவற்றின் தேவையைக் கொண்டே ஆகிறது;

**''तमेतं वेदानुवचनेन''** (बृ.6-4-22) इत्यादिशास्त्रादवगम्यते, तथा निश्शेषाविद्यानिवर्तनरूपविद्यानिष्पत्तिरपि विशिष्टदेशगतिसापेक्षेति गतिशास्त्रादवगम्यते। विदुष उत्क्रान्तिप्रतिषेधादि तु पूर्वमेव परिहृतम्।

यत्तु **''ब्रह्मलोकान्''** (बृ.8-2-15) इति लोकशब्दबहुवचनाभ्यां विशेषणात् कार्यभूतहिरण्यगर्भप्रतीतिरिति, तदयुक्तम्; निषादस्थपतिन्यायेन ब्रह्मैव लोको ब्रह्मलोक इति कर्मधारयस्यैव युक्तत्वात्। अर्थस्य चैकत्वे निश्चिते बहुवचनस्य **''अदितिः पाशान्''** (पू.मी.सू.9-3-5) इतिवदुपपत्तेः।

परस्य ब्रह्मणः परिपूर्णस्य सर्वगतस्य सत्यसङ्कल्पस्य स्वेच्छापरिकल्पिताः स्वासाधारणा अप्राकृताश्च लोका नात्यन्ताय न सन्ति; श्रुतिस्मृतीतिहासपुराणप्रामाण्यात् ॥११॥

## ५२०.दर्शनाच्च (४-३-१२)

दर्शयति च श्रुतिः मूर्धन्यनाड्या निष्क्रम्य देवयानेन गतस्य परब्रह्मप्राप्तिम्, **''एष संप्रसादोऽस्माच्छरीरात् समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते''** (छा.8-3-4) इति॥ १२ ॥

---

யதா ஹி வித்யோத்பத்தி: வர்ணாஶ்ரமதர்மஶௌசாசாரதேஶகாலாத்யபேக்ஷா, *''தமேதம் வேதாநுவசநேந''* (6-4-22)[1] இத்யாதிஶாஸ்த்ராதவகம்யதே, ததா நிஶ்ஶேஷாவித்யாநிவர்தநரூபவித்யாநிஷ்பத்திரபி விஶிஷ்டதேஶகதிஸாபேக்ஷேதி கதிஶாஸ்த்ராதவகம்யதே। விது்ஷ உத்க்ராந்திப்ரதிஷேதாதி து பூர்வமேவ பரிஹ்ருதம்।

யத்து *''ப்ரஹ்மலோகாந்''* (ப்ரு.8-2-15)[2] இதி லோகஶப்தபஹுவசநாப்யாம் விஶேஷணாத் கார்யபூதஹிரண்யகர்பப்ரதீதிரிதி - ததயுக்தம், நிஷாதஸ்தபதிந்யாயேந ப்ரஹ்மைவ லோகோ ப்ரஹ்மலோக இதி கர்மதாரயஸ்யைவ யுக்தத்வாத்। அர்தஸ்ய சைகத்வே நிஶ்சிதே பஹுவசநஸ்ய *''அதிதி: பாஶாந்''* (பூ.மீ.9-3-5)[3] இதிவதுபபத்தே:।

பரஸ்ய ப்ரஹ்மண: பரிபூர்ணஸ்ய ஸர்வகதஸ்ய ஸத்யஸங்கல்பஸ்ய ஸ்வேச்சாபரிகல்பிதா: ஸ்வாஸாதாரணா: அப்ராக்ருதாஶ்ச லோகா நாத்யந்தாய ந ஸந்தி; ஶ்ருதி-ஸ்ம்ருதீதிஹாஸபுராண-ப்ராமாண்யாத்।। 11 ।।

## 520. தர்ஶநாச்ச (4-3-12)

*தர்ஶயதி ச* ஶ்ருதி: மூர்தந்யநாட்யா நிஷ்க்ரம்ய தேவயாநேந கதஸ்ய பரப்ரஹ்மப்ராப்திம், *''ஏஷ ஸம்ப்ரஸாதோऽஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே''* (சா.8-1-4)[4] இதி।। 12 ।।

அது [1] **''அந்த பரமாத்மாவை வேதானுவசநம் கொண்டும் ...''** முதலிய ஶாஸ்த்ரத்-தால் தெரிகிறது; அது எப்படியோ, அப்படியே, மீதியில்லாமல் அவித்யையை ஒழிப்-பதாகிற ப்ரஹ்ம-வித்யையின் மலர்ச்சியும் (பலன் அளிக்கத்தக்க நிலையும்), தனித்த ஒரு தேசத்துக்கு செல்வதின் தேவையைக் கொண்டே ஆகும் என்பதும் அர்சிராதி-கதியைச் சொல்லும் ஶாஸ்த்ரத்தாலேயே தெரிகிறது.

ஜ்ஞானிக்கு உத்க்ராந்தியை (உயர செல்வதை) வேதம் மறுக்கிறது முதலிய வாதம் முன்பே (4-2-5. ஆஸ்ருத்த்யுபக்ரமாதிகரணத்தில்) பரிஹாரம் செய்யப்பட்டது.

**வாதம் -** [2]**'ப்ரஹ்ம-லோகான் (ப்ரஹ்ம-உலகங்களை)'** என்று 'லோக' என்ற சொல், பன்மை ஆகிய இரண்டைக் கொண்டும் பிரித்து சொல்வதால், படைக்கப்-படும் ஹிரண்யகர்ப்பன்தான் இங்கே தெரிகிறான் என்று சொல்லியாயிற்று.

**மறுப்பு -** அப்படி சொன்னது எதுவோ அது சரியில்லை; நிஷாத-ஸ்தபதி-ந்யாய-முறையைக் கொண்டு ப்ரஹ்மம் ஆகிற லோகம் ப்ரஹ்மலோகம் என்று கர்மதாரய-ஸமாஸமே சரியாகும்; பொருள் ஒன்றுதான் என தீர்மானம் ஆனபின்பு, பன்மை-யானது, [3]**''அதிதி: பாஶான்''** என்ற இடத்தில் வருவதுபோல ஆகும்.

பரிபூர்ணனும் எல்லாவிடத்திலும் இருப்பவனும், ஸத்யஸங்கல்பனும் ஆன பர-ப்ரஹ்மத்துக்கு தனது ஸங்கல்பத்தால் உண்டாக்கப் பட்டவையும் தனக்கு மட்-டுமே ஆனவையும் ஆன அப்ராக்ருதங்களான உலகங்கள் பல இல்லை என்பது அடியோடு ஆகாது; (உண்டு என்றே ஆகும்); ஏனெனில், வேதம், ஸ்ம்ருதி, இதிஹாஸம், புராணம் ஆகியவை ப்ரமாணங்கள் ஆவதால்.

*✍(யாக-பசுவின் கயிற்றை அவிழ்க்கும் மந்த்ரம், ''அதிதிதேவன் கயிறுகளை அவிழ்க்கட்-டும்'' என்று உள்ளது; ஒரே யாகப்பசு இருக்கும்போது கயிறுகளை எனும் பன்மை பொருந்-தாது; அப்போது, பன்மையைக் கருத்தில் கொள்ளக் கூடாது என மீமாம்ஸாஶாஸ்த்ரம்; அதே முறையில் இங்கும் 'ப்ரஹ்ம-உலகங்களை' என்று சொல்லும்போது, பன்மையைக் கருத்தில் கொள்ளவேண்டாம் என்பது ஒரு பதில்; அல்லது ப்ரஹ்மத்துக்கே பல உலகங்கள் உண்டு என்பதால், பன்மை பொருந்தும் என்ற பதில் ஆகலாம்)✍*



## 520.(பூ) தர்ஶநாத் ச (4-3-12)

***வேதத்தில் காண்பதாலும்***

மண்டை-நாடி வழியாக வெளியேறி தேவயான-வழியாக செல்பவன் பர-ப்ரஹ்-மத்தை அடைவதை வேதம் காண்பிக்கிறதும் கூட - [4]**''இந்த ஜீவன் இந்த ஶரீரத்தி-லிருந்து வெளியேறி, பர-ப்ரஹ்மத்தை அடைந்து தன் இயல்பான ஸ்வரூபத்து-டன் வெளிப்படுகிறான்''** என்று.



यदुक्तम् - **''प्रजापतेः सभां वेश्म प्रपद्ये''**(छा.8-14-1)[1] इत्यर्चिरादिना गतस्य कार्ये प्रत्यभिसन्धिर्दृश्यत इति, तत्रोत्तरम् -

**५२१.न च कार्ये प्रत्यभिसन्धिः (४-३-१३)**

**न चायं प्रत्यभिसन्धिः कार्ये** हिरण्यगर्भे, अपि तु परस्मिन्नेव ब्रह्मणि ; वाक्यशेषे, **''यशोऽहं भवामि ब्राह्मणानाम्''**(छा.8-14-1)[2] इति तस्याभिसन्धातुः सर्वाविद्याविमोकपूर्वकसर्वात्मभावाभिसन्धानात् ; **''अश्व इव रोमाणि विधूय पापं चन्द्र इव राहोर्मुखात् प्रमुच्य। धूत्वा शरीरमकृतं कृतात्मा ब्रह्मलोकमभिसम्भवामि''**(छा.8-13-1)[3] इति अभिसम्भाव्यस्य ब्रह्मलोकस्याकृतत्वश्रवणात् ; सर्वबन्धविनिर्मोकस्य च साक्षाच्छ्रवणात्। अतः, परमेव ब्रह्मोपासीनमर्चिरादिरातिवाहिको गणो नयतीति जैमिनेर्मतम्॥ १३ ॥

**५२२.अप्रतीकालम्बनान्नयतीति बादरायण उभयथा च दोषात् तत्क्रतुश्च (४-३-१४)**

---

யதுக்தம் - *''ப்ரஜாபதேः ஸபாம் வேஶ்ம ப்ரபத்யே''*(சா.8-14-1)[1] இத்யர்சிராதிநா கதஸ்ய கார்யே ப்ரத்யபிஸந்திர்த்ருஶ்யத இதி - தத்ரோத்தரம்-

**521. ந ச கார்யே ப்ரத்யபிஸந்திः (4-3-13)**

*ந ச அயம் ப்ரத்யபிஸந்திः கார்யே* ஹிரண்யகர்பே; அபி து பரஸ்மிந்நேவ ப்ரஹ்மணி; வாக்யஶேஷே, *''யஶோऽஹம் பவாமி ப்ராஹ்மணாநாம்''* (சா.8-14-1)[2] இதி தஸ்யாபிஸந்தாதுः ஸர்வாவித்யாவிமோகபூர்வகஸர்வாத்மபாவாபிஸந்தாநாத், *''அஶ்வ இவ ரோமாணி விதூய பாபம் சந்த்ர இவ ராஹோர்முகாத் ப்ரமுச்ய। தூத்வா ஶரீரமக்ருதம் க்ருதாத்மா ப்ரஹ்மலோகமபிஸம்பவாமி''* (சா.8-13-1)[3] இதி அபிஸம்பாவ்யஸ்ய ப்ரஹ்மலோகஸ்யாக்ருதத்வஶ்ரவணாத், ஸர்வபந்தவிநிர்மோகஸ்ய ச ஸாக்ஷாச்ச்ரவணாத். அதः, பரமேவ ப்ரஹ்மோபாஸீநம் அர்சிராதிः ஆதிவாஹிகோ கணோ நயதீதி ஜைமிநேர்மதம்।। 13 ।।

இதாநீம் பாதராயணஸ்து பகவாந் ஸ்வமதேந ஸித்தாந்தமாஹ -

**522.அப்ரதீகாலம்பநாந்நயதீதி பாதராயண உபயதா ச தோஷாத் தத்க்ரதுஶ்ச (4-3-14)**

सम्प्रति भगवान् बादरायणः स्वमतेन सिद्धान्तमाह -

**५३०.एवमप्युपन्यासात् पूर्वभावादविरोधं बादरायणः (४-४-७)**

**एवमपि** - विज्ञानमात्रस्वरूपत्वप्रतिपादने सत्यपि, सत्यकामत्वादीनां पूर्वोक्तानां गुणानामविरोधं **बादरायण** आचार्यो मन्यते। कुतः? **उपन्यासात् पूर्वभावात्** - औपनिषदात् **''य आत्माऽपहतपाप्मा''**(छा.8-7-1)[1] इत्याद्युपन्यासात्प्रमाणात् **पूर्वेषाम्** अपहतपाप्मत्वसत्यकामत्वादीनामपि **भावात्** विद्यमानत्वात्। तुल्यप्रमाणकानामितरेतरबाधो न युज्यत इत्यर्थः।

न च वस्तुविरोधादपहतपाप्मत्वादीनामविद्यापरिकल्पितत्वं न्याय्यम्; 'विशेषाभावात् विपरीतं कस्मान्न भवति' इति न्यायात्। तुल्यबलत्वे ह्यशक्यस्यावधारणस्यान्यपरत्वमेव न्याय्यम्॥

एवमप्यविरोधः इति अभ्युपगम्य वदन् ज्ञानमात्रमेवास्य स्वरूपम्, नान्यत् किञ्चिदस्तीत्ययमर्थः, **''विज्ञानधन एव''**(बृ.4-4-12)[2] इत्यादिभिर्न प्रतिपाद्यत इति मन्यते।

---

ஸம்ப்ரதி பகவாந் பாதராயண: ஸ்வமதேந ஸித்தாந்தமாஹ-

**530.ஏவமப்யுபந்யாஸாத் பூர்வபாவாதவிரோதம் பாதராயண: (4-4-7)**

*ஏவமபி* - விஜ்ஞாநமாத்ரஸ்வரூபத்வப்ரதிபாதநே ஸத்யபி, ஸத்யகாமத்வாதீநாம் பூர்வோக்தாநாம் குணாநாமவிரோதம் பாதராயண ஆசார்யோ மந்யதே। குத:? *உபந்யாஸாத் பூர்வபாவாத்* - ஔபநிஷதாத் *''ய ஆத்மாऽபஹதபாப்மா''*(சா.8-7-1)[1] இத்யாத்யுபந்யாஸாத்ப்ரமாணாத் பூர்வேஷாம் அபஹதபாப்மத்வஸத்யகாமத்வாதீநாமபி பாவாத் - வித்யமாநத்வாத்। துல்யப்ரமாணகாநாம் இதரேதரபாதோ ந யுஜ்யத இத்யர்த:।

ந ச வஸ்துவிரோதாத் அபஹதபாப்மத்வாதீநாம் அவித்யாபரிகல்பிதத்வம் ந்யாய்யம்; 'விஶேஷாபாவாத் விபரீதம் கஸ்மாந்ந' பவதி இதி ந்யாயாத்। துல்யபலத்வே ஹி அஶக்யஸ்யாவதாரணஸ்ய அந்யபரத்வமேவ ந்யாய்யம்।।

ஏவமப்யவிரோத: இதி அப்யுபகம்ய வதந் ஜ்ஞாநமாத்ரமேவாஸ்ய ஸ்வரூபம், நாந்யத் கிஞ்சிதஸ்தீத்யயமர்த:, *''விஜ்ஞாநகந ஏவ''*(ப்ரு.4-4-12)[2] இத்யாதிபிர்ந ப்ரதிபாத்யத இதி மந்யதே।

**ஸித்தாந்தம்**

இப்போது பகவான் பாதராயண-வ்யாஸர், தன் மதத்தின்படி ஸித்தாந்தம் சொல்கிறார்-

**530.ஏவம் அபி உபந்யாஸாத் பூர்வபாவாத் அவிரோதம் பாதராயண:(4-4-7)**

*இப்படியானாலும், உபந்யாஸத்தால் முன்னவையும் இருப்பதால், முரண்பாடு இல்லாமையை வ்யாஸர் கருதுகிறார்.*

**ஏவம் அபி (இப்படியானாலும்)** - ஜ்ஞாநம் மட்டுமே ஸ்வரூபம் என்பது சொல்லியிருந்தாலும்,

**அவிரோதம் (முரண்பாடு-இன்மையை)** - முன் சொன்ன ஸத்ய-காம-தன்மை முதலிய குணங்களுக்கு முரண்பாடு இல்லை என்பதை

**பாதராயண:** - ஆசார்யர் பாதராயண-வ்யாஸர் கருதுகிறார்.

ஏன்?

**உபந்யாஸாத் பூர்வபாவாத்** -

**உபந்யாஸாத்** - உபநிஷத்தில் உள்ள [1]**''ய ஆத்மா அபஹத-பாப்மா'** முதலியதான உபந்யாஸம் ஆகிற ப்ரமாணத்தின் மூலம்,

**பூர்வேஷாம் (முன்னவையும்)** - முன் சொன்ன அபஹத-பாப்ம-தன்மை, ஸத்ய-ஸங்கல்ப-தன்மை முதலியவையும்

**பாவாத்** - இருப்பதால்.

சமமான ப்ரமாணம் உடைய அர்த்தங்களில் ஒன்றையொன்று பாதிப்பது சரியாகாது என்று பொருள்.

**வாதம்** - பொருள் முரண்பாடு இருப்பதால், அபஹத-பாப்ம-தன்மை முதலியவை அவித்யையால் கற்பனை செய்யப்பட்டவை என (அவை பொய்யானவை என ஔடுலோமி-மத-கருத்து).

**மறுப்பு** - இது சரியானதல்ல; ஏனெனில், வேறுபாடு இல்லையெனில் விபரீதமாக ஏன் ஆகக் கூடாது என்கிற ந்யாய-முறை உள்ளது. (அபஹத-பாப்ம-தன்மை முதலியவை உண்மையானவை என்றும் ஜ்ஞாந-தன்மை பொய்யானது எனவும் ஏன் ஆகக் கூடாது?); இரண்டும் சமமான பலம் உடையதாக இருக்கும்போது ஏதாவது ஒன்றைத் தீர்மானிக்க முடியாமல் ஆகிறது; அப்படி ஆவதற்கு வேறொரு கருத்து சொல்வதுதான் சரியாகும்.

ஏவமபி அவிரோத: (இப்படியானாலும் முரண்பாடில்லை) என ஸூத்ரத்தில் வ்யாஸர் சொல்கிறார்; ஔடுலோமி-மதத்தை ஏற்றுக்கொண்டதாக வைத்துக்கொண்டு சொன்னதாகும்; (உண்மையில் அம்மத-கருத்தை ஏற்கவில்லை); 'ஜ்ஞாநம் மட்டுமே ஜீவனின் ஸ்வரூபம், வேறெதுவும் கிடையாது' என்கிற இந்த அர்த்தமானது [2]**''விஜ்ஞாநகந ஏவ''** முதலியவற்றால் அறிவிக்கப் படவில்லை என்று கருதுகிறார்.

कस्तर्हि **''विज्ञानघन एव''** (बृ.4-4-12)[1] इत्यवधारणस्यार्थः? कृत्स्नोऽप्यात्मा जडव्यावृत्त-स्वप्रकाशः, नान्यायत्तप्रकाशः स्वल्पोऽपि प्रदेशोऽस्तीत्ययमर्थो वाक्यादेव सुव्यक्तः, **''स यथा सैन्धवघनोऽनन्तरोऽवाह्यः कृत्स्नो रसघन एव, एवं वा अरे अयमात्माऽनन्तरोऽबाह्यः कृत्स्नः प्रज्ञानघन एव''** (बृ.6-5-13)[2] इति।

न चैवं प्रत्यगात्मनो धर्मिस्वरूपस्य कृत्स्नस्य विज्ञानघनत्वेऽप्यपहतपाप्मत्व-सत्यसङ्कल्पत्वादिधर्मसम्बन्धो वाक्यान्तरावगतो विरुध्यते; यथा सैन्धवघनस्य कृत्स्नस्य रसघनत्वे रसनेन्द्रियावगते चक्षुराद्यवगताः रूपकाठिन्यादयो न विरुध्यन्ते।

इदमत्र वाक्यतात्पर्यम् - यथा रसवत्सु आम्रफलादिषु त्वगादिप्रदेशभेदेन रसभेदे सत्यपि सैन्धवघनस्य सर्वत्रैकरसत्वम्, तथाऽऽत्मनोऽपि सर्वत्र विज्ञानस्वरूपत्वम्; स्वप्रकाशत्वरूपत्वमित्यर्थः॥ ७ ॥

इति ब्राह्माधिकरणम् ॥ ३ ॥

---

கஸ்தர்ஹி *''விஜ்ஞாநகந ஏவ''*(ப்ரு.4-4-12)[1] இத்யவதாரணஸ்யார்த:? க்ருத்ஸ்நோऽப்யாத்மா ஜடவ்யாவ்ருத்தஸ்வப்ரகாஶ:, ந அந்யாயத்தப்ரகாஶ: ஸ்வல்போऽபி ப்ரதேஶோऽஸ்தி இத்யயமர்தோ வாக்யாதேவ ஸுவ்யக்த:, *''ஸ யதா ஸைந்தவகநோऽநந்தரோऽபாஹ்ய: க்ருத்ஸ்நோ ரஸகந ஏவ, ஏவம் வா அரே அயமாத்மாऽநந்தரோऽபாஹ்ய: க்ருத்ஸ்ந: ப்ரஜ்ஞாநகந ஏவ''*(ப்ரு.6-5-13)[2] இதி।

ந சைவம் ப்ரத்யகாத்மநோ தர்மி-ஸ்வரூபஸ்ய க்ருத்ஸ்நஸ்ய விஜ்ஞாநகநத்வேபி அபஹதபாப்மத்வஸத்யஸங்கல்பத்வாதிதர்மஸம்பந்தோ வாக்யாந்தராவகதோ விருத்யதே; யதா ஸைந்தவகநஸ்ய க்ருத்ஸ்நஸ்ய ரஸகநத்வே ரஸநேந்த்ரியாவகதே சக்ஷுராத்யவகதா: ரூபகாடிந்யாதயோ ந விருத்யந்தே।

இதமத்ர வாக்யதாத்பர்யம் - யதா ரஸவத்ஸு ஆம்ரபலாதிஷு த்வகாதிப்ரதேஶபேதேந ரஸபேதே ஸத்யபி ஸைந்தவகநஸ்ய ஸர்வத்ரைகரஸத்வம், ததாऽऽத்மநோऽபி ஸர்வத்ர விஜ்ஞாநஸ்வரூபத்வம்; ஸ்வப்ரகாஶத்வரூபத்வமித்யர்த:॥ 7 ॥

இதி ப்ராஹ்மாதிகரணம் ॥ 3 ॥



**கேள்வி -** அப்படியானால், [1]**''விஜ்ஞாநகந ஏவ''** என்று அவதாரணம் சொன்னதற்கு என்ன பொருள்? (ஜ்ஞாநம் மட்டுமே என்று சொல்லியுள்ளதால், பிற குணம் கிடையாது என்று ஆகும்; அது தவிர வேறென்ன பொருள் சொல்வது?)

**பதில் -** ஆத்மா முழுவதும் ஜடப் பொருளை விட வேறாக ஸ்வயம்-ப்ரகாஶமாக (தானே தெரியக் கூடியதாக) உள்ளது; வேறொன்றால் தெரிய வேண்டிய பாகம் துளியும் இல்லை எனும் இந்த பொருள், [2]**''உப்பு-கட்டியானது புறத்தும் அகத்தும் முழுவதும் உப்பு-சுவை-மயமாகவே இருப்பது எப்படியோ, அப்படியே, இந்த ஆத்மா புறத்தும் அகத்தும் முழுவதும் ஜ்ஞாநமயமாகவே உள்ளது''** எனும் இந்த வாக்யத்திலிருந்தே மிக தெளிவாகும். (முன் குறிப்பில் விளக்கம் காண்க)

தன்மைகளை உடைய ஜீவாத்ம-ஸ்வரூபம் முழுதும் இப்படி ஜ்ஞாந-ஸ்வரூபமாக இருந்தாலும், அதில் அபஹத-பாப்ம-தன்மை, ஸத்ய-ஸங்கல்ப-தன்மை முதலிய தன்மைகள் சேர்ந்திருப்பதாக வேறு வாக்யத்தால் தெரிய வருவது முரண்படாது. எப்படியாக, உப்புக்கட்டி முழுவதும் ரஸ-கனமாக நாவினால் தெரிந்தாலும், கண் முதலியவற்றால் தெரிபவையான நிறம், கடினத்தன்மை முதலியவை முரண்படுவதில்லையோ, அப்படி இதுவும் ஆகும்.

இது இங்கு வாக்யத்தின் கருத்து - சுவையுடைய மாம்பழம் முதலியவற்றில் தோல் முதலிய வெவ்வேறு பாகத்தில் வெவ்வேறு சுவை உள்ளது; ஆனாலும்,, உப்புக்கட்டி எல்லா பாகத்திலும் ஒரே சுவையுடையதாக உள்ளது; அதுபோல, ஆத்மா எல்லா பாகத்திலும் ஜ்ஞாந-ஸ்வரூபம்தான்; ஸ்வப்ரகாஶ-ஸ்வரூபம்தான் என்று அர்த்தம்.

**ப்ராஹ்மாதிகரணம் முற்றிற்று**



# 154.ஸங்கல்பாதிகரணம்(4-4-4)

## முன் குறிப்பு

மோக்ஷம் பெற்றவன் ஸத்ய-ஸங்கல்பன் ஆகிறான்; அதாவது எதை விரும்பினாலும் அதை அவனால் பெற முடியும். அவன் விரும்பினால், பிதா- மாதா முதலிய உறவினர்களையும் பெறலாம் என வேதம் சொல்கிறது.

இதில் விசாரம் - இவன் வெறும் ஸங்கல்பத்தால் மட்டுமே இப்படி விரும்பியதைப் பெற முடியுமா? அல்லது முயற்சியும் கூட செய்தாலே பெற முடியுமா? என்பது.

**பூர்வபக்ஷம்** - கூடவே முயற்சியும் செய்தாலே இவற்றைப் பெற முடியும். ஸத்ய-ஸங்கல்பன் என்றால் முயற்சி இல்லாமலேயே விருப்பத்தால் மட்டுமே பலனைப் பெறக் கூடியவன் என்று அர்த்தம் இல்லை; விரும்பிய பலனை முயற்சி செய்து பெறக் கூடியவன் என்று அர்த்தம். எடுத்துக்காட்டாக அரசர்கள் ஸத்யஸங்கல்பர்கள் என்கிறோம்; அவர்கள் நினைத்த கார்யத்தில் முயற்சி செய்து பெறுவர் என்றுதானே அர்த்தம்! முயற்சியே இல்லாமல் வெறும் நினைவாலேயே எல்லாம் அவர்களால் பெற முடியாது. ஸாதாரண மனிதர்கள் நினைத்த கார்யத்தை நடத்த முடியாமல் அவதிப்படுவர்; அரசர்கள் அப்படி அவதிப்பட மாட்டார்கள் என்று அர்த்தம். அதுபோல இங்கேயும்.

**ஸித்தாந்தம்** - இவன் விரும்பினால், இவனது ஸங்கல்பத்தாலேயே பிதா, மாதா முதலியவர்கள் உண்டாவர் என்று வேதம் சொல்கிறது. ஸங்கல்பத்தாலேயே என்று சொல்லியிருப்பதால் வேறு முயற்சி தேவையில்லை என்று ஆகிறது.

**பூர்வபக்ஷம்** - 'அதுவே' என்று சொன்னால் இரு அர்த்தங்கள் வரலாம் - 1) அது தவிர வேறு கிடையாது. 2) வேறு இருந்தாலும், அது இல்லாமல் இருக்காது. போன அதிகரணத்தில் ''ஜ்ஞாநஸ்வரூபம்தான்' என்கிற சொல்லுக்கு இரண்டாவது அர்த்தம் சொல்லப்பட்டது. அதுபோல இங்கும் சொல்லலாம். ஸங்கல்பத்தாலேயே - ஸங்கல்பம் தவிர வேறு முயற்சி இருந்தாலும் ஸங்கல்பம் இல்லாமல் இருக்காது; அதாவது விரும்பாதது நடக்காது என அர்த்தம் சொல்லலாம்.

**ஸித்தாந்தம்** - ஸங்கல்பம் தவிர வேறு முயற்சி தேவை என்பதை உணர்த்தும் வேதவாக்யம் எதுவும் இல்லை; எனவே, அந்த அர்த்தம் இங்கு சொல்லக் கூடாது. போன அதிகரணத்தில், 'ஜ்ஞாநஸ்வரூபன்தான்' என்னும்போது, அது தவிர வேறு குணங்களும் உண்டு என்று சொல்லும் வேதவாக்யங்கள் பல உள்ளன; எனவே, அதை அனுசரித்து, இரண்டாவது அர்த்தம் சொல்லப் பட்டது.

# १५४. सङ्कल्पाधिकरणम् (४-४-४)

## ५३१. सङ्कल्पादेव तच्छ्रुतेः (४-४-८)

मुक्तः परं ब्रह्मोपसम्पद्य ज्ञानस्वरूपोऽपहतपाप्मत्वादिसत्यसङ्कल्पत्वपर्यन्तगुणक आविर्भवतीत्युक्तम्। तमधिकृत्य सत्यसङ्कल्पत्वप्रयुक्ताः व्यवहाराः श्रूयन्ते, **"स तत्र पर्येति जक्षत् क्रीडन् रममाणः स्त्रीभिर्वा यानैर्वा ज्ञातिभिर्वा"** (छा.8-12-3)[1] इति।

किमस्य ज्ञात्यादिप्राप्तिः प्रयत्नान्तरसापेक्षा, उत परमपुरुषस्येव सङ्कल्पमात्रादेव भवतीति विशये - लोके राजादीनां सत्यसङ्कल्पत्वेन व्यवह्रियमाणानां कार्यनिष्पादने प्रयत्नान्तरसापेक्षत्वदर्शनादस्यापि तत्सापेक्षा इति प्राप्ते -

उच्यते - **सङ्कल्पादेव** इति। कुतः? **तच्छ्रुतेः।** **"स यदि पितृलोककामो भवति सङ्कल्पादेवास्य पितरः समुत्तिष्ठन्ति"** (छा.8-2-1)[2] इति हि सङ्कल्पादेव पित्रादीनां समुत्थानं श्रूयते। न च प्रयत्नान्तरसापेक्षत्वाभिधायि श्रुत्यन्तरं दृश्यते; येनास्य **"सङ्कल्पादेव"** इत्यवधारणस्य "विज्ञानघन एव" इतिवत् व्यवस्थापनं क्रियते ॥८॥

---

# 154. ஸங்கல்பாதிகரணம் (4-4-4)

## 531. ஸங்கல்பாதேவ தச்ச்ருதே: (4-4-8)

முக்த: பரம் ப்ரஹ்மோபஸம்பத்ய ஜ்ஞாநஸ்வரூப: அபஹதபாப்ம-
த்வாதிஸத்யஸங்கல்பத்வபர்யந்தகுணக: ஆவிர்பவதீத்யுக்தம்। தமதிக்-
ருத்ய ஸத்யஸங்கல்பத்வப்ரயுக்தா: வ்யவஹாரா: ஶ்ரூயந்தே, *"ஸ தத்ர
பர்யேதி ஜக்ஷத் க்ரீடந் ரமமாண: ஸ்த்ரீபிர்வா யாநைர்வா ஜ்ஞாதிபிர்வா"* (சா.8-12-3)[1] இதி।

கிமஸ்ய ஜ்ஞாத்யாதிப்ராப்தி: ப்ரயத்நாந்தரஸாபேக்ஷா, உத பரமபுரு-
ஷஸ்யேவ ஸங்கல்பமாத்ராதேவ பவதீதி விஶயே - லோகே ராஜாதீநாம்
ஸத்யஸங்கல்பத்வேந வ்யவஹ்ரியமாணாநாம் கார்யநிஷ்பாதநே ப்ரயத்-
நாந்தரஸாபேக்ஷத்வதர்ஶநாத் அஸ்யாபி தத்ஸாபேக்ஷா - இதி ப்ராப்தே

உச்யதே - *ஸங்கல்பாதேவ*-இதி। குத:? *தச்ச்ருதே:* *"ஸ யதி பித்ருலோக-
காமோ பவதி ஸங்கல்பாதேவஸ்ய பிதர: ஸமுத்திஷ்டந்தி"* (சா.8-2-1)[2] இதி ஹி
ஸங்கல்பாதேவ பித்ராதீநாம் ஸமுத்தாநம் ஶ்ரூயதே। ந ச ப்ரயத்நாந்தர-
ஸாபேக்ஷத்வாபிதாயி ஶ்ருத்யந்தரம் த்ருஶ்யதே; யேநாஸ்ய *"ஸங்கல்பா-
தேவ"* இத்யவதாரணஸ்ய "விஜ்ஞாநகந ஏவ" இதிவத் வ்யவஸ்தாபநம்
க்ரியதே।। 8 ।।

# 154.ஸங்கல்பாதிகரணம்(4-4-4)

## 531.ஸங்கல்பாத் ஏவ தச்ச்ருதே:(4-4-8)

*ஸங்கல்பத்தால் மட்டுமே ஆகும்; அதை வேதம் சொல்வதால்.*

**ஸங்கதி (விஷய-தொடர்பு) & விஷயவாக்யம்**

முக்தன் ஆனவன் பர-ப்ரஹ்மத்தை அடைந்து ஜ்ஞாந-ஸ்வரூபனாக, அபஹத-பாப்ம-தன்மை முதல் ஸத்ய-ஸங்கல்ப-தன்மை வரையிலான குணங்களை உடையவனாய் வெளிப்படுகிறான் என்று சொல்லியாயிற்று; அவனுக்கு ஸத்ய-ஸங்கல்ப-தன்மையால் விளையும் செயல்களும் (இருப்பதாக) அவனைக் குறித்து வேதத்தில் சொல்லப் படுகின்றன - [1]**''அவன் அங்கு உண்பவனாய், விளையாடுபவனாய், பெண்களுடனோ வண்டிகளுடனோ உறவினருடனோ ஆனந்தப் படுபவனாய் அங்கு ப்ரஹ்மத்தை சுற்றிலும் அனுபவிக்கிறான்''** என்று.

**ஸம்சயம் (ஸந்தேஹம்)**

இவன் உறவினர் முதலியவற்றை அடைதலானது, ஸங்கல்பம் தவிர வேறொரு முயற்சியின் தேவைகொண்டு ஆகிறதா? அல்லது பரம-புருஷன் போல் ஸங்கல்பத்தால் மட்டுமே ஆகுமா? என்று ஸந்தேஹம்.

**பூர்வபக்ஷம்**

உலகில் ஸத்ய-ஸங்கல்பர்களாக (விரும்பியதை தடையின்றி முடிக்க வல்லவர்களாக) சொல்லப்படும் அரசர் முதலியவர்களுக்கு, கார்யங்களை உண்டாக்குவதில் ஸங்கல்பம் தவிர வேறொரு முயற்சியின் தேவை இருப்பதாகக் காண்கிறோம்; அதனால், இந்த முக்தனுக்கும் அந்த தேவை உண்டு.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்லப்படுகிறது - **''ஸங்கல்பாத் ஏவ''** என்று.

**ஸங்கல்பாத் ஏவ** - ஸங்கல்பத்தால் மட்டுமே ஆகும்.

ஏன்?

**தச்ச்ருதே: (அதை வேதம் சொல்வதால்) -**

[2]**''அவன் பித்ருலோகத்தை (அனுபவிக்கப் படும் தந்தையை/பித்ருவர்கத்தை) விரும்புபவனாக ஆனால், இவனது ஸங்கல்பத்தாலேயே பித்ருக்கள் உண்டாகின்றனர்''** என்று ஸங்கல்பத்தாலேயே பித்ருக்கள் முதலியவர் உண்டாவது வேதத்தில் சொல்லப்படுகிறது.

ஸங்கல்பம் தவிர வேறொரு முயற்சியின் தேவை இருப்பதாக சொல்லும் வேறொரு வேத-வாக்யம் காணப்படவில்லை; அப்படி இருக்குமானால், ஸங்கல்பத்தாலேயே என்ற அவதாரணத்துக்கு 'விஜ்ஞாந-கநம்தான்' என்பதுபோல் வரையறை செய்யப் படலாம்.

## ५३२. अत एव चानन्याधिपतिः (४-४-९)

यतो मुक्तः सत्यसङ्कल्पः; **अत एवानन्याधिपतिश्च**। अन्याधिपतित्वं हि विधिनिषेधयोग्यत्वम्। विधिनिषेधयोग्यत्वे हि प्रतिहतसङ्कल्पत्वं भवेत्। अतः सत्यसङ्कल्पत्वश्रुत्यैवानन्याधिपतित्वं च सिद्धम्। अत एव, **"स स्वराड्भवति"**(छा.7-25-2)[1] इत्युच्यते॥९॥

इति सङ्कल्पाधिकरणम् ॥ ४ ॥

## 532. அத ஏவ சாநந்யாதிபதி: (4-4-9)

யதோ முக்த: ஸத்யஸங்கல்ப:, அத ஏவாநந்யாதிபதிஶ்ச। அந்யாதிபதித்வம் ஹி விதிநிஷேதயோக்யத்வம்। விதிநிஷேதயோக்யத்வே ஹி ப்ரதிஹதஸங்கல்பத்வம் பவேத்। அத: ஸத்யஸங்கல்பத்வஶ்ருத்யைவ அநந்யாதிபதித்வம் ச ஸித்தம்। அத ஏவ, *"ஸ ஸ்வராட்பவதி"* (சா.7-25-2)[1] இத்யுச்யதே।। 9 ।।

இதி ஸங்கல்பாதிகரணம் ।। 4 ।।



✍(ஆத்மா ‘விஜ்ஞாந-கநம்தான்’ என்று வேதம் சொல்கிறது; விஜ்ஞாநம் தவிர வேறு கிடையாது என்று அர்த்தம் இல்லை; விஜ்ஞாந-ஸ்வரூபம் ஆகாமல் இருக்காது என்று அர்த்தம்; அதாவது கட்டாயம் விஜ்ஞாந-ஸ்வரூபமாக இருக்கும்; மாறாது என்று அர்த்தம்; கூடவே வேறு பல குணங்களும் இருக்கலாம்; இப்படி போன அதிகரணத்தில் பார்த்தோம்.

இங்கு, ‘‘ஸங்கல்பத்தாலேயே பித்ருக்கள் உண்டாகின்றனர்’’ என்று சொல்கிறது; ஸங்கல்பம் தவிர வேறு தேவை கிடையாது என்று அர்த்தம்.

முன் சொன்னது போல் அர்த்தம் இங்கு சொல்ல வேண்டிய அவசியம் இல்லை; ஏனெனில், ஆத்மா ‘விஜ்ஞாந-கநம்தான்’ என்று வேதம் சொல்லும்போது, அதேபோல, ஆத்மாவுக்கு வேறு பல குணங்களைச் சொல்லும் வாக்யங்கள் உள்ளன; அவற்றுக்கு முரண்படாமல் அந்த பொருள் சொல்லப்பட்டது; ஆனால், இங்கோ, ‘‘ஸங்கல்பத்தாலேயே பித்ருக்கள் உண்டாகின்றனர்’’ என்று சொல்லும்போது ஸங்கல்பம் தவிர வேறு முயற்சியாலும் பித்ருக்கள் உண்டாவதாக வேத-வாக்யம் எதுவும் சொல்லவில்லை; அதனால் அப்பொருள் இல்லை.)✍



## 532.அத: ஏவ ச அநந்யாதிபதி:(4-4-9)

**அதனாலேயே வேறு அதிபதி அற்றவனாகவும் ஆகிறான்.**

முக்தன் ஸத்ய-ஸங்கல்பன் என்பது எதனால் ஆகிறதோ, அதனாலேயே அவன் அநந்யாதிபதி ஆகிறான்; (அந்ய-அதிபதி அற்றவனாக - ப்ரஹ்மம் தவிர வேறு தலைவன் அற்றவனாக ஆகிறான் என்று அர்த்தம்); வேறு தலைமை உடைதல் என்பது விதி-நிஷேதங்களுக்கு தகுந்தவன் ஆதல் ஆகும்; இவன் விதி-நிஷேதங்களுக்கு தகுந்தவனாக ஆவானானால், அதாவது பிறரால் கட்டளையிடப் படவோ, தடுக்கப்படவோ ஏற்றவனாக ஆவானானால், இவனது ஸங்கல்பம் தடைபடும்; (அப்போது, இவன் ஸத்யஸங்கல்பனாக - தடையற்ற ஸங்கல்பம் கொண்டவனாக ஆக முடியாது); ஆகையால், இவனை ‘ஸத்யஸங்கல்பன்’ என வேதம் சொல்வதாலேயே வேறு தலைவன் அற்றவன் என்பது ஏற்படுகிறது; அதனால்தான் [1]**‘‘அவன் ஸ்வராட் ஆகிறான்’’** (அவன் சுதந்திரமாக ஆகிறான்) என சொல்லப்படுகிறது.

✍(முக்தனை ‘ஸ்வராட்’ என்று வேதம் சொல்கிறது; ஸ்வராட் என்றால் சுதந்திரமானவன் என்று அர்த்தம்; அதாவது, கர்மத்துக்கு வசப்படாதவன்; வேறு கட்டளை மூலமாகவோ, மறுப்பது மூலமாகவோ அவனது விருப்பத்தை தடை செய்ய முடியாது; கட்டளையிடப்படவோ அல்லது மறுக்கப்படவோ ஏற்றவன் அல்லன் என்று அர்த்தம்.

அப்படி சொன்னபடியால் அவன் ஸத்ய-ஸங்கல்பன் என்பது ஆகிறது; ஸத்ய-ஸங்கல்பன் என்றால் விருப்பம் தடைபடாதவன் என்றுதானே அர்த்தம்; வேறு கட்டளை-மறுப்புகளுக்கு வசப்படுபவனாக இருந்தால், இவனது விருப்பம் தடைபடும்; இவன் ஸத்ய-ஸங்கல்பன் ஆக முடியாது; ஆகவே வேறு தலைவன் அற்றவன் என்று சொன்னதாலும் இவன் ஸத்ய-ஸங்கல்பன் என்பது ஆகிறது).✍

************************************

**ஸங்கல்பாதிகரணம் முற்றிற்று**

# 155.அபாவாதிகரணம்(4-4-5)

## முன் குறிப்பு

மோக்ஷம் பெற்று ஸ்ரீவைகுண்ட உலகில் இருப்பவனுக்கு, ஶரீரம், இந்த்ரியம் முதலியவை உண்டா கிடையாதா என்பது விசாரம்.

பாதரி முனிவர் கருத்து - ஶரீரம் முதலியவை கிடையாது; ஶரீரத்தை விட்டால்தானே மோக்ஷம் கிடைத்ததாகும்!

ஜைமினி முனிவர் கருத்து - ஶரீரம் மோக்ஷத்தில் கட்டாயம் உண்டு; வேதத்தில், "முக்தி பெற்றவன் ஒருவனாக ஆகிறான்; மூன்றாக, ஐந்தாக ஆகிறான் ... " என்று சொல்லியுள்ளது. ஒரே ஆத்மாவே பல பேராக ஆக முடியாது; எனவே, பலவாக ஆகிறான் என்று சொன்னால், பல ஶரீரங்களை எடுத்துக் கொள்கிறான் என்று அர்த்தம்.

ஸ்ரீவ்யாஸர் ஸித்தாந்தம் - இரு விதமாகவும் ஆகலாம்; விரும்பினால், ஶரீரம் எடுத்துக் கொள்ளலாம்; இல்லையென்றால், ஶரீரம் இல்லாமலும் இருக்கலாம்.

மோக்ஷம் என்பது புண்யபாப கர்மத்தால் வரும் ஶரீரத்தை விடுதல் ஆகும்; அந்த ஶரீரம் மோக்ஷத்தில் கிடையாது; ஆனால், அங்கே, தன் விருப்பப்படி தானே ஶரீரம் ஏற்பான்; அந்த ஶரீரம் கர்மவசத்தால் வந்ததல்ல; அது அப்ராக்ருதமானது, திவ்யமானது.

ஒரு உதாஹரணம் - யாகங்களில் அஹீநம் என்று ஒருவகை; 'யாகம் செய்க' முதலியதாக வேதம் விதிப்பவை; இந்த அஹீந-யாகங்களை ஒருவரோ அல்லது பல பேரோ செய்யலாம்; ஆனால், ஸங்கல்பம் செய்து யாகம் செய்பவரும், செய்து வைக்கும் ரித்விக்கும் வேறுவேறானவர் ஆக வேண்டும்; யாகங்களில் ஸத்ரம் என்பது மற்றொரு வகை; இவற்றை குறைந்தபக்ஷம் 17 பேராவது சேர்ந்து பண்ண வேண்டும்; "சென்று சேர்க" முதலியதாக வேதம் விதிக்கும்; இதில் ஸங்கல்பம் செய்து யாகம் செய்பவர்களான அவர்களே பரஸ்பரம் செய்து வைத்துக் கொள்வர்; இதில் த்வாதஶாஹம் எனும் ஒரு யாகம் வேதவிதிப்படி ஸத்ரமும் ஆகலாம்; அஹீனமும் ஆகலாம்; ஏனெனில் இரு விதமாகவும் வேதக் கட்டளை உள்ளது. அப்போது, அதைச் செய்பவன், தன் ஸங்கல்பத்தை அனுசரித்து அதனை ஸத்ரமாகவோ அல்லது அஹீனமாகவோ செய்யலாம்.

அதுபோல, முக்தி பெற்றவன், தன் ஸங்கல்பத்தை அனுசரித்து (விருப்பப்படி) ஶரீரத்துடனோ அல்லது ஶரீரம் இல்லாமலோ ஆகலாம்.

ஶரீரத்துடன் இருக்கும் நிலையிலும் இரு விதம் உண்டு -

1. தன் ஸங்கல்பம் இல்லாவிட்டாலும், பரமாத்மா ஸங்கல்பம் மூலம் ஒரு ஶரீரத்தை கொடுக்க, அதனை ஏற்று இருப்பான்.

2. தானே ஸங்கல்பம் செய்து, ஶரீரத்தை படைத்துக் கொள்ளுவான். அப்போதும் பரமாத்மாவின் ஸங்கல்பத்துக்கு இணங்கவே இவனது ஸங்கல்பம் இருக்கும்.

# १५५. अभावाधिकरणम् (४-४-५)

## ५३३.अभावं बादरिराह ह्येवम् (४-४-१०)

किं मुक्तस्य देहेन्द्रियाणि न सन्ति, उत सन्ति, अथवा यथासङ्कल्पं सन्ति न सन्ति चेति विशये -

शरीरेन्द्रियाणामभावं **बादरिराचार्यो** मन्यते, कुतः? **आह ह्येवम्। "न हवै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्ति। अशरीरं वा व सन्तं न प्रियाप्रिये स्पृशतः"**(छा.8-12-1)[1] इति शरीरसम्बन्धे दुःखस्यावर्जनीयत्वमभिधाय, **"अस्माच्छरीरात्समुत्थाय परं ज्योतिरुपसम्पद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते"**(छा.८-१२-२)[2] इति मुक्तस्याशरीरत्वं ह्याह श्रुतिः॥ १० ॥

## ५३४.भावं जैमिनिर्विकल्पामननात् (४-४-११)

मुक्तस्य शरीरेन्द्रियभावं **जैमिनिराचार्यो** मन्यते। कुतः? **विकल्पामननात्** - विविधः कल्पो विकल्पः, वैविध्यमित्यर्थः। **"स एकधा भवति त्रिधा भवति पञ्चधा। सप्तधा"**(छा.7-26-2)[3] इत्यादिश्रुतेः। आत्मन एकस्याच्छेद्यस्यानेकधाभावासम्भवात्

# 155. அபாவாதிகரணம் (4-4-5)

## 533.அபாவம் பாதரிராஹ ஹ்யேவம் (4-4-10)

கிம் முக்தஸ்ய தேஹேந்த்ரியாணி ந ஸந்தி, உத ஸந்தி, அதவா யதா-ஸங்கல்பம் ஸந்தி ந ஸந்தி ச இதி விஶயே -

ஶரீரேந்த்ரியாணாமபாவம் **பாதரிராசார்யோ** மந்யதே, குத:? *ஆஹ ஹ்யேவம்। "ந ஹவை ஸஶரீரஸ்ய ஸத: ப்ரியாப்ரியயோரபஹதிரஸ்தி। அஶரீரம் வா வ ஸந்தம் ந ப்ரியாப்ரியே ஸ்ப்ருஶத:"*(சா.8-2-1)[1] இதி ஶரீரஸம்பந்தே து:க-ஸ்யாவர்ஜநீயத்வமபிதாய, *"அஸ்மாச்சரீராத்ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்-பத்ய ஸ்வேந ருபேணாபிநிஷ்பத்யதே"*(8-12-2)[2] இதி முக்தஸ்ய அஶரீரத்வம் ஹி ஆஹ ஶ்ருதி:।। 10 ।।

## 534.பாவம் ஜைமிநிர்விகல்பாமநநாத் (4-4-11)

முக்தஸ்ய ஶரீரேந்த்ரியபாவம் **ஜைமிநிராசார்யோ** மந்யதே। குத:? *விகல்பாமநநாத்* - விவித: கல்போ விகல்ப:, வைவித்யமித்யர்த:। *"ஸ ஏகதா பவதி த்ரிதா பவதி பஞ்சதா। ஸப்ததா"*(சா.7-26-2)[3] இத்யாதிஶ்ருதே:। ஆத்மந ஏகஸ்ய அச்சேத்யஸ்ய அநேகதாபாவாஸம்பவாத் த்ரிதாபாவாதய: ஶரீர-

# 155.அபாவாதிகரணம்(4-4-5)

## 533.(பூ) அபாவம் பாதரி: ஆஹ ஹி ஏவம்(4-4-10)

*முக்தனுக்கு ஶரீர-இந்த்ரியங்கள் இல்லாமையை பாதரி கருதுகிறார்; ஏனெனில், அப்படி வேதம் சொல்கிறது.*

**ஸம்சயம் (ஸந்தேஹம்)**

முக்தி பெற்றவனுக்கு ஶரீரம் மற்றும் இந்த்ரியங்கள் இல்லையா? அல்லது உண்டா? அல்லது விருப்பப்படி உண்டு என்றும் இல்லை என்றும் ஆகலாமா என்று ஸந்தேஹம்.

**பூர்வபக்ஷம்**

**அபாவம் பாதரி** - ஶரீரம் மற்றும் இந்த்ரியங்கள் இல்லை என ஆசார்யர் பாதரி கருதுகிறார்.

ஏன்?

**ஆஹ ஹி ஏவம்** - அப்படியே வேதம் சொல்வதால்.

[1]**''ஶரீரத்துடன் இருப்பவனுக்கு சுக-துக்கங்கள் விடுவதில்லை; ஶரீரமற்றவனாக இருப்பவனையோ சுக-துக்கங்கள் தீண்டுவதில்லை''** என்று ஶரீர-தொடர்பு இருந்தால் துக்கம் தவிர்க்க முடியாதது என்பதைச் சொல்லி, [2]**''இந்த ஶரீரத்திலிருந்து மேலேறி பர-ப்ரஹ்மத்தை அடைந்து தன் ஸ்வரூபத்துடன் கூடியவனாக ஆகிறான்''** என்று மோக்ஷம் பெற்றவன் ஶரீரம் இல்லாமல் இருப்பதை வேதம் சொல்கிறதுதானே!



## 534.(பூ) பாவம் ஜைமிநி: விகல்பாமநநாத்(4-4-11)

*முக்தன் பலவிதமாக ஆவதை வேதம் சொல்வதால் ஶரீர-இந்த்ரியங்கள் இருப்பதாக ஜைமிநி கருதுகிறார்.*

**பாவம் ஜைமிநி:** - முக்தனுக்கு ஶரீர-இந்த்ரியங்கள் உண்டு என்பதை ஆசார்யர் ஜைமிநி கருதுகிறார்.

ஏன்?

**விகல்பாமநநாத்** - விவித: கல்ப: விகல்ப:; பலவிதமாதல் என்று அர்த்தம்.

[3]**''அவன் (முக்தி பெற்றவன்) ஒருவனாக ஆகிறான்; மூவிதமாக ஆகிறான்; ஐந்து விதமாக, ஏழுவிதமாக...''** முதலியதாக வேதம் சொல்வதால்.

ஆத்மாவாகிற அவன் ஒருவன்தான்; அந்த ஆத்மாவை வெட்டிப் பிளக்க முடியாது; அதனால், ஒரே ஆத்மாவுக்கு பலவிதமாக ஆதல் வராது; அதனால், மூவித-

त्रिधाभावादयः शरीरनिबन्धना इत्यवगम्यते। अशरीरत्ववचनं तु कर्मनिमित्तशरीराभावपरम्, तदेव हि शरीरं प्रियाप्रियहेतुः॥ ११ ॥



भगवांस्तु बादरायणः स्वमतेन सिद्धान्तमाह -

**५३५.द्वादशाहवदुभयविधं बादरायणोऽतः (४-४-१२)**

"सङ्कल्पादेव" इत्येतत् **अत**श्शब्देन परामृश्यते, अत एव सङ्कल्पात्, उभयविधं सशरीरमशरीरं च मुक्तं भगवान् बादरायणो मन्यते। एवञ्चोभयी श्रुतिरुपपद्यते। **द्वादशाहवत्** - यथा "**द्वादशाहमृद्धिकामा उपेयुः**"(पू.मी.सू.8-2-5,10-6-16)[1], "**द्वादशाहेन प्रजाकामं याजयेत्**"(पू.मी.सू.8-2-5,10-6-16)[2] इत्युपैतियजतिचोदनाभ्यां सङ्कल्पभेदेन सत्रमहीनं च भवति॥ १२ ॥



---

நிபந்தநா: இத்யவகம்யதே। அஶரீரத்வவசநம் து கர்மநிமித்தஶரீராபாவ-பரம், ததேவ ஹி ஶரீரம் ப்ரியாப்ரியஹேது:॥ 11 ॥



பகவான் து பாதராயண: ஸ்வமதேந ஸித்தாந்தமாஹ-

**535. த்வாதஶாஹவதுபயவிதம் பாதராயணோऽத: (4-4-12)**

"ஸங்கல்பாதேவ" இத்யேதத் அதஶ்ஶப்தேந பராம்ருஶ்யதே; அத ஏவ ஸங்கல்பாத், உபயவிதம் ஸஶரீரம் அஶரீரம் ச முக்தம் பகவாந் பாத-ராயணோ மந்யதே। ஏவஞ்ச உபயீ ஶ்ருதிருபபத்யதே। **த்வாதஶாஹவத்** - யதா "*த்வதஶாஹம்ருத்திகாமா உபேயு:*"(பூ.மீ.8-2-5,10-6-16)[1], "**த்வாதஶா-**ஹேந ப்ரஜாகாமம் யாஜயேத்"(பூ.மீ.8-2-5,10-6-16)[2] இதி உபைதி-யஜதி சோதநாப்யாம் ஸங்கல்பபேதேந ஸத்ரமஹீநம் ச பவதி॥ 12 ॥



மாக ஆதல் முதலியவை ஶரீரத்தை அடிப்படையாகக் கொண்டு வருபவை என்பது தெரிகிறது; (மூன்று ஶரீரங்கள் எடுத்து இருப்பவன் மூவிதமாக ஆகிறான் என்று கருத்து).

(வேத-வாக்யத்தில்) முக்தனை ஶரீரமற்றவனாகச் சொல்வதோ, புண்ய-பாப-கர்மத்தை காரணமாகக் கொண்டு வரும் ஶரீரம் அந்த முக்தனுக்கு இல்லை என்ற கருத்துடையது ஆகும்; அந்த ஶரீரம்தானே ஸுக-துக்கத்துக்கு காரணம் ஆகும்!



**ஸித்தாந்தம்**

பகவான் பாதராயண வ்யாஸர் தன் மதப்படி ஸித்தாந்தம் சொல்கிறார் -

**535.த்வாதஶாஹவத் உபயவிதம் பாதராயண: அத:(4-4-12)**

***அதனால் [ஸங்கல்பத்தால்], த்வாதஶாஹம் போல இருவிதமாகவும் ஆவதை வ்யாஸர் கருதுகிறார்;***

'ஸங்கல்பத்தாலேயே' என்று (போன அதிகரணத்தில்) சொன்னது, இங்கு, 'அதனால்' என்ற சொல்லின் மூலம் நினைக்கப் படுகிறது.

**அத: (அதனால்)** - ஸங்கல்பத்தாலேயே (தன் விருப்பப்படியே)

**உபயவிதம் (இருவிதமாக)** - ஶரீரத்துடன் கூடியவனாகவும் ஶரீரம் அற்றவ-னாகவும் இருவிதமாக முக்தன் ஆவதை

**பாதராயண:** - பகவான் பாதராயண-வ்யாஸர் கருதுகிறார்;

இப்படியாவதால், இருவிதமான வேதமும் சரியாகிறது.

**த்வாதஶாஹவத் (த்வாதஶாஹம் எனும் யாகம் போல)** -

I. [1]**''த்வாதஶாஹம் ருத்திகாமா உபேயு: (செழிப்பு வேண்டுபவர் த்வாதஶா-ஹத்தை அடையவும்)''** என்று 'உப+இண் (அடைதல்)' என்ற வினைச்சொல்-லையிட்டு கட்டளை இருப்பதால், ஸத்ரம் ஆகும்.

II. [2]**''த்வாதஶாஹேந ப்ரஜாகாமம் யாஜயேத்'' (மக்கட்பேறு வேண்டுபவனை த்வாதஶாஹ-யாகம் செய்விக்கவும்)''** என்று 'யஜ (யாகம் செய்தல்)' என்ற வினைச்சொல்லை இட்டு கட்டளை இருப்பதால், அஹீனம் ஆகும்.

(இருவிதமாகவும் ஆகும் அந்த த்வாதஶாஹமானது,) ஸங்கல்பம் வேறாவதை இட்டு ஸத்ரமாகவோ அஹீநமாகவோ செய்யப்படுவதாக ஆகிறது. அது எப்படியோ அப்படி இதுவும் ஆகும்.

*(த்வாதஶாஹம் குறித்து முன்குறிப்பில் காணலாம்; ஶரீரத்துடன் கூடியவனாகவும் ஶரீரம்-அற்றவனாகவும் இருவிதமாகவும் ஆகக் கூடிய ஜீவன், ஸங்கல்பம் வேறாவதை இட்டு அவ்வப்போது ஶரீரம் இல்லாமலோ அல்லது ஶரீரத்துடனோ ஆகலாம்.)*



यदा शरीराद्युपकरणवत्त्वम्; तदा तानि शरीराद्युपकरणानि स्वेनैव सृष्टानीति नास्ति नियम इत्याह -

**५३६.तन्वभावे सन्ध्यवदुपपत्तेः (४-४-१३)**

स्वेनैव सृष्टतनुप्रभृत्युपकरणाभावे परमपुरुषसृष्टैरुपकरणैर्भोगोपपत्तेः सत्यसङ्कल्पोऽपि स्वयं न सृजति। यथा स्वप्ने,

- **"अथ रथान् रथयोगान् पथः सृजते"**(बृ.6-3-10)[1] इत्यारभ्य, **"अथ वेशान्तान् पुष्करिण्यः स्रवन्त्यः सृजते। स हि कर्ता"**(बृ.6-3-10)[2] इति
- **"य एषु सुप्तेषु जागर्ति कामंकामं पुरुषो निर्मिमाणः। तदेव शुक्रं तद्ब्रह्म तदेवामृतमुच्यते। तस्मिन् लोकाः श्रिताः सर्वे तदु नात्येति कश्चन"**(क.5-8)[3]

इति ईश्वर-सृष्टैः रथाद्युपकरणैर्जीवो भुङ्क्ते, तथा मुक्तोऽपि लीलाप्रवृत्तेनेश्वरेण सृष्टैः पितृलोकादिभिर्लीलारसं भुङ्क्ते॥ १३ ॥

**५३७.भावे जाग्रद्वत् (४-४-१४)**

स्वसङ्कल्पादेव सृष्टतनुप्रभृतिपितृलोकाद्युपकरणभावे जाग्रत्पुरुष(भोग)वत् मुक्तोऽपि

---

யதா ஶரீராத்யுபகரணவத்த்வம்; ததா தாநி ஶரீராத்யுபகரணாநி ஸ்வேநைவ ஸ்ருஷ்டாநீதி நாஸ்தி நியம இத்யாஹ-

**536.தந்வபாவே ஸந்த்யவதுபபத்தே: (4-4-13)**

ஸ்வேநைவ ஸ்ருஷ்டதநுப்ரப்ருத்யுபகரணாபாவே பரமபுருஷஸ்ருஷ்டைருபகரணை: போகோபபத்தே: ஸத்யஸங்கல்போऽபி ஸ்வயம் ந ஸ்ருஜதி। யதா ஸ்வப்நே,

- *"அத ரதாந் ரதயோகாந் பத: ஸ்ருஜதே"*(ப்ரு.6-3-10)[1] இத்யாரப்ய, *"அத வேஶாந்தாந் புஷ்கரிண்ய: ஸ்ரவந்த்ய: ஸ்ருஜதே। ஸ ஹி கர்தா"*(ப்ரு.6-3-10)[2] இதி,
- *"ய ஏஷு ஸுப்தேஷு ஜாகர்தி காமம் காமம் புருஷோ நிர்மிமாண:। ததேவ ஶுக்ரம் தத்ப்ரஹ்ம ததேவாம்ருதமுச்யதே। தஸ்மிந் லோகா: ஶ்ரிதா: ஸர்வே தது நாத்யேதி கஶ்சந"*(க.5-8)[2]

இதி ஈஶ்வரஸ்ருஷ்டை: ரதாத்யுபகரணைர்ஜீவோ புங்க்தே; ததா முக்தோऽபி லீலாப்ரவ்ருத்தேநேஶ்வரேண ஸ்ருஷ்டை: பித்ருலோகாதிபி: லீலாரஸம் புங்க்தே।। 13 ।।

**537.பாவே ஜாக்ரத்வத் (4-4-14)**

ஸ்வஸங்கல்பாதேவ ஸ்ருஷ்டதநுப்ரப்ருதிபித்ருலோகாத்யுபகரண-பாவே ஜாக்ரத்புருஷ(போக)வத் முக்தோऽபி லீலாரஸம் புங்க்தே।। பரம-

எப்போது ஶரீரம் முதலிய கருவி உள்ளதோ, அப்போது ஶரீரம் முதலிய கருவிகள் தன்னாலேயே படைக்கப்பட்டவையாக ஆக வேண்டும் எனும் நியமம் கிடையாது என்கிறார் -

## 536.தந்வபாவே ஸந்த்யவத் உபபத்தே:(4-4-13)

*தான் படைத்த ஶரீரம் இல்லாதபோது ஸ்வப்னம் போல் ஆவதால்.*

தன்னாலேயே படைக்கப்பட்ட ஶரீரம் முதலிய கருவிகள் இல்லாதபோது பரம-புருஷனால் படைக்கப்பட்ட கருவிகளைக் கொண்டு போகம் ஆகும்; அதனால், முக்தன் ஸத்ய-ஸங்கல்பனாக (விருப்பப்படி செய்ய வல்லவன்) ஆனாலும் அப்-போது தானாக படைப்பதில்லை.

ஸ்வப்நத்தில்,

- [1]**"வேறாக தேர், குதிரைகள் வழிகளையும் படைக்கிறான்"** என்று சொல்ல ஆரம்பித்து, [2]**"வேறாக குட்டைகளையும் குளங்களையும் நதிகளையும் படைக்கிறான்; அவன்தான் படைப்பாளி"** என்றுள்ளது.
- [3]**"இவர்கள் உறங்கும்போது, நினைத்து நினைத்து படைப்பவனாக எந்த புருஷன் விழித்துக் கொண்டிருக்கிறானோ, அதுவே ப்ரகாஶமானது; அதுவே ப்ரஹ்மம், அதுவே அம்ருதம் எனப்படுகிறது; அவனிடம் எல்லா உலகங்-களும் அண்டியிருக்கின்றன; அவனை யாரும் கடக்க முடியாது"** என்றுள்-ளது.

ஸ்வப்னத்தில், ஈஶ்வரன் படைத்த தேர் முதலிய கருவிகளைக் கொண்டு ஜீவன் அனுபவிக்கிறான்; அது எப்படியோ அப்படி முக்தனும் லீலை-செயலில் ஈடுபடும் பெருமானால் படைக்கப்படும் பித்ரு-லோகம் முதலியவற்றைக் கொண்டு லீலா-ரஸத்தை அனுபவிக்கிறான்.



## 537.பாவே ஜாக்ரத்வத்(4-4-14)

*இருக்கும்போது விழித்திருக்கும் நிலை போல ஆகும்*

தனது ஸங்கல்பத்தாலேயே படைக்கப்பட்ட ஶரீரம் முதலிய கருவி இருக்கும் போது, விழித்த-நிலையில் ஆகும் மனிதன் போல், முக்தனும் லீலா-ரஸத்தை அனு-பவிக்கிறான்.

लीलारसं भुङ्क्ते॥ परमपुरुषोऽपि लीलार्थं दशरथवसुदेवादिपितृलोकादिकमात्मनः सृष्ट्वा तैर्मनुष्यधर्मलीलारसं यथा भुङ्क्ते, तथा मुक्तानामपि स्वलीलायै पितृलोकादिकं स्वयमेव सृजति कदाचित्, कदाचिच्च मुक्ताः सत्यसङ्कल्पत्वात् परमपुरुषलीलान्तर्गतस्वपितृलोकादिकं स्वयमेव सृजन्तीति सर्वमुपपन्नम्॥ १४ ॥

नन्वात्माऽणुपरिमाण इत्युक्तम्; कथमनेकशरीरेष्वेकस्याणोरात्माभिमानसम्भव इत्यत्राह -

## ५३८.प्रदीपवदावेशस्तथा हि दर्शयति (४-४-१५)

यथा प्रदीपस्यैकस्यैकस्मिन् देशे वर्तमानस्य स्वप्रभया देशान्तरावेशः, तथाऽऽत्मनोऽप्येकदेहस्थितस्यैव स्वप्रभारूपेण चैतन्येन सर्वशरीरावेशो नानुपपन्नः। यथा चैकस्मिन्नपि देहे हृदयाद्येकप्रदेशवर्तिनोऽपि चैतन्यव्याप्त्या सर्वस्मिन् देहे आत्माभिमानः, तद्वत्।

इयान् विशेषः - अमुक्तस्य कर्मणा सङ्कुचितज्ञानस्य देहान्तरेषु आत्माभिमानानुगुणा व्याप्तिर्न सम्भवति; मुक्तस्य त्वसङ्कुचितज्ञानस्य यथासङ्कल्पमात्माभिमानानुगुणा व्याप्तिः, 'इदम्' इति ग्रहणानुगुणा च नानुपपन्ना।

---

புருஷோऽபி லீலார்தம் தஶரத-வஸுதேவாதிபித்ருலோகாதிகமாத்மந: ஸ்ருஷ்ட்வா தைர்மநுஷ்யதர்மலீலாரஸம் யதா புங்க்தே - ததா முக்தாநாமபி ஸ்வலீலாயை பித்ருலோகாதிகம் ஸ்வயமேவ ஸ்ருஜதி கதாசித், கதாசிச்ச முக்தா: ஸத்யஸங்கல்பத்வாத் பரமபுருஷலீலாந்தர்கதஸ்வபித்ருலோகாதிகம் ஸ்வயமேவ ஸ்ருஜந்தீதி ஸர்வமுபபந்நம்।। 14 ।।

நநு ஆத்மாऽணுபரிமாண: இத்யுக்தம்; கதமநேகஶரீரேஷு ஏகஸ்யாணோராத்மாபிமாநஸம்பவ: இத்யத்ராஹ-

## 538.ப்ரதீபவதாவேஶஸ்ததா ஹி தர்ஶயதி (4-4-15)

யதா ப்ரதீபஸ்யைகஸ்ய ஏகஸ்மிந் தேஶே வர்தமாநஸ்ய ஸ்வப்ரபயா தேஶாந்தராவேஶ:, ததாऽऽத்மநோऽபி ஏகதேஹஸ்திதஸ்யைவ ஸ்வப்ரபாரூபேண சைதந்யேந ஸர்வஶரீராவேஶோ நாநுபபந்ந:। யதா சைகஸ்மிந்நபி தேஹே ஹ்ருதயாத்யேகப்ரதேஶவர்திநோऽபி சைதந்யவ்யாப்த்யா ஸர்வஸ்மிந் தேஹே ஆத்மாபிமாந:, தத்வத்।

இயாந் விஶேஷ: - அமுக்தஸ்ய கர்மணா ஸங்குசிதஜ்ஞாநஸ்ய தேஹாந்தரேஷு ஆத்மாபிமாநாநுகுணா வ்யாப்தி: ந ஸம்பவதி; முக்தஸ்ய த்வஸங்குசிதஜ்ஞாநஸ்ய யதாஸங்கல்பம் ஆத்மாபிமாநாநுகுணா வ்யாப்தி:, 'இதம்', இதி க்ரஹணாநுகுணா ச நாநுபபந்நா।

பரம-புருஷனும் லீலைக்காக, தசரதன் வசுதேவன் முதலிய பித்ரு-குழு முதலியதை தனக்கு படைத்துக்கொண்டு, அவற்றைக் கொண்டு, மனித-தர்மங்கள் பற்றிய லீலா-ரஸத்தை அனுபவிக்கிறான்; அது எப்படியோ, அப்படி முக்தர்களுக்கும் பித்ருலோகம் முதலியதை (அனுபவிக்க ஏற்ற பித்ருக்கள் முதலியவரை) தமது லீலைக்காக பரமபுருஷன் தானே சிலசமயம் படைக்கிறான்; முக்தர்கள் ஸத்ய-ஸங்கல்பர்கள் ஆனபடியால், சில சமயம் பரமபுருஷனுடைய லீலையில் உட்பட்ட தனது பித்ருலோகம் முதலியதை தானே படைத்துக் கொள்கின்றனர்; ஆகவே, எல்லாம் சரியாகும்.



**கேள்வி -** ஆத்மா அணு-அளவானவன் என்று முன்பு சொல்லப்பட்டது; அணு-அளவான ஒரு ஆத்மாவுக்கு, பல ஶரீரங்களில் தான் ஆத்மாவாக இருக்கும் எண்ணம் (பல ஶரீரங்களை ஆளுதல்) எப்படி வரும்?

**பதில் -** இந்த கேள்விக்கு பதில் சொல்கிறார் -

**538.ப்ரதீபவத் ஆவேஶ: ததா ஹி தர்ஶயதி(4-4-15)**

*விளக்கு-சுடர் போல் அடைதல் ஆகும்; அப்படியே வேதம் காண்பிக்கிறது.*

ஒரு இடத்தில் இருக்கும் ஒரு விளக்கு-சுடரானது எப்படி தன் ஒளி மூலம் பிற இடங்களை அடைவதாக ஆகிறதோ, அப்படி ஒரு இடத்தில் இருக்கும் ஆத்மாவானது, தன் ஒளியாகிற ஜ்ஞாநம் மூலம் எல்லா ஶரீரங்களையும் அடைவதும் பொருந்தாமல் போகாது; ஒரு ஶரீரத்திலேயே ஹ்ருதயம் முதலிய ஒரு இடத்தில் இருக்கும் ஆத்மாவுக்கு, ஶரீரம் முழுவதிலும் தான் ஆத்மாவாக இருக்கும் எண்ணமானது (ஶரீரம் முழுவதையும் ஆள்வதானது), ஜ்ஞாநம் பரவுவதன் மூலம் எப்படி வருகிறதோ, அப்படி இதுவும் ஆகும்.

இதுதான் வித்யாசம் - முக்தி பெறாதவனுக்கு புண்ய-பாப-கர்மத்தால் ஜ்ஞாநம் சுருங்கி இருக்கும்; அவனுக்கு பிற ஶரீரங்களில் தான் ஆத்மாவாக எண்ணம் வருவதற்கு ஏற்றதாக (பிற ஶரீரங்களை ஆளுவதற்கு ஏற்றதாக) ஜ்ஞாநம் பரவி இருப்பது வராது; முக்தி பெற்றவனோ ஜ்ஞாந-சுருக்கம் அற்றவன்; அவனுக்கு தன் ஸங்கல்பத்துக்கு ஏற்றபடி ஆத்மாவாக பல ஶரீரங்களை ஆள்வதற்கு ஏற்றதாகவும், இது என்று அறிவதற்கு ஏற்றதாகவும் ஜ்ஞாநம் பரவியிருக்கும்; அது பொருந்தாதது ஆகாது.

तथा हि दर्शयति, **''वालाग्रशतभागस्य शतधा कल्पितस्य च। भागो जीवः स विज्ञेयः स चानन्त्याय कल्पते''**(श्वे.5-9)[1] इति। अमुक्तस्य कर्म नियामकम्, मुक्तस्य तु स्वेच्छेति विशेषः॥ १५ ॥

ननु परं ब्रह्म प्राप्तस्याऽऽन्तरबाह्यज्ञानलोपं दर्शयति श्रुतिः, **''प्राज्ञेनाऽऽत्मना सम्परिष्वक्तो न बाह्यं किञ्चन वेद नान्तरम्''**(बृ.6-3-21)[2] इति; तत् कथं मुक्तस्य सार्वज्ञ्यमुच्यते? तत्रोत्तरम् -

**५३९.स्वाप्ययसम्पत्त्योरन्यतरापेक्षमाविष्कृतं हि (४-४-१६)**

नेदं वचनं मुक्तविषयम्; अपितु स्वाप्ययसम्पत्त्योरन्यतरापेक्षम्। **स्वाप्ययः** - सुषुप्तिः, **सम्पत्तिश्च** - मरणम्, **''वाङ्मनसि सम्पद्यते''**(छा.6-8-6)[3] इत्यारभ्य, **''तेजः परस्यां देवतायाम्''**(छा.6-8-6)[4] इति वचनात्। तयोश्चावस्थयोः प्राज्ञप्राप्तिर्निस्सम्बोधत्वं च विधेते। अतस्तयोरन्यतरापेक्षमिदं वचनम्।

---

*ததா ஹி தர்ஶயதி, ''வாலாக்ரஶதபாகஸ்ய ஶததா கல்பிதஸ்ய ச। பாகோ ஜீவ: ஸ விஜ்ஞேய: ஸ சாநந்த்யாய கல்பதே''*(ஶ்வே.5-9)[1] இதி। அமுக்தஸ்ய கர்ம நியாமகம்; முக்தஸ்ய து ஸ்வேச்சேதி விஶேஷ:॥ 15 ॥

நநு பரம் ப்ரஹ்ம ப்ராப்தஸ்ய ஆந்தரபாஹ்யஜ்ஞாநலோபம் தர்ஶயதி ஶ்ருதி:, *''ப்ராஜ்ஞேநாऽऽத்மநா ஸம்பரிஷ்வக்தோ ந பாஹ்யம் கிஞ்சந வேத நாந்தரம்''*(ப்ரு.6-3-21)[2] இதி, தத் கதம் முக்தஸ்ய ஸார்வஜ்ஞ்யமுச்யதே தத்ரோத்தரம்-

**539.ஸ்வாப்யயஸம்பத்த்யோரந்யதராபேக்ஷமாவிஷ்க்ருதம் ஹி (4-4-16)**

நேதம் வசநம் முக்தவிஷயம் அபிது ஸ்வாப்யய-ஸம்பத்த்யோ: அந்யதராபேக்ஷம்। *ஸ்வாப்யய:* - ஸுஷுப்தி:; *ஸம்பத்திஶ்ச* - மரணம், *''வாங்-மநஸி ஸம்பத்யதே''*(சா.6-8-6)[3] இத்யாரப்ய, *''தேஜ: பரஸ்யாம் தேவதாயாம்''* (6-8-6)[4] இதி வசநாத்। தயோஶ்சாவஸ்தயோ: ப்ராஜ்ஞப்ராப்தி: நிஸ்ஸம்போதத்வம் ச வித்யேதே। அத: தயோரந்யதராபேக்ஷமிதம் வசநம்।

**ததா ஹி தர்சயதி (அப்படியே வேதம் காண்பிக்கிறது) -** [1]**''நெல்லின் வால்-நுனியின் நூறில் ஒரு பங்கை நூறாக பிரித்து கற்பனை செய்யப்பட்ட ஒரு பாகமாக அந்த ஜீவன் அறியப்பட வேண்டியவன்; அவன் அளவற்றவனாக ஆகிறான்''** என்று. (மிக சிறிய அளவினன் ஆன ஜீவன் முக்தி-நிலையில் தனது ஒளியாகிற ஜ்ஞாநம் மூலம் எண்ணற்ற பல விஷயங்களில் பரவி ஆள்கிறான் என்று கருத்து).

முக்தன் ஆகாதவனுக்கு புண்ய-பாப-கர்மம் (ஜ்ஞாநம் பரவாதபடி) கட்டுப்-படுத்துகிறது; முக்தனுக்கோ, அவனது விருப்பம் கட்டுப்படுத்தும் என்பது வித்யாசம்.



**கேள்வி -** பர-ப்ரஹ்மத்தை அடைந்தவனுக்கு உள்-வெளி-விஷயங்கள் பற்றிய ஜ்ஞாநம் இல்லை என்பதை வேதம் காண்பிக்கிறது - [2]**''ஸர்வஜ்ஞனான பரமாத்மாவுடன் கூடியவனாய் வெளிவிஷயம் எதையும் அறிவதில்லை; உள் விஷயத்தையும் அறிவதில்லை''** என்று; எனவே, ப்ரஹ்மத்தை அடைந்த முக்தன், எல்லாம் அறிபவனாக ஆகிறான் என்பது எப்படி சொல்லப்படுகிறது?

**பதில் -** அதற்கு பதில் -

## 539.ஸ்வாப்யயஸம்பத்த்யோ: அந்யதராபேக்ஷம் ஆவிஷ்க்ருதம் ஹி(4-4-16)

*உறக்கம் மரணம் ஆகிய இரண்டில் ஒன்றைக் குறித்து ஆவது; அப்படியாக வேதத்தில் வெளியிடப்பட்டது.*

இந்த வேத-வசநம் முக்தனைக் குறித்தது அல்ல; மாறாக இது -

**ஸ்வாப்யயஸம்பத்த்யோ: அந்யதராபேக்ஷம் -** ஸ்வாப்யயம், ஸம்பத்தி ஆகிய இரண்டில் ஒன்றைக் குறித்து ஆவது.

ஸ்வாப்யயம் என்பது உறக்கம்; ஸம்பத்தி என்பது மரணம்; ஏனெனில் [3]**''வாக் மனஸ்ஸில் ஸம்பத்தி அடைகிறது''** என்று ஆரம்பித்து, [4]**''தேஜஸ் பரதேவதையில் ஸம்பத்தி அடைகிறது''** என்று (மரணத்தைப் பற்றி) சொல்லியுள்ளது. (வாகதி-கரணம் 4-2-1 காண்க)

அந்த இரு நிலைகளிலும் ஜீவன், ஸர்வ- ஜ்ஞனான ப்ரஹ்மத்தை அடைவதும், அவனுக்கு ஜ்ஞாநமற்ற தன்மையும் உள்ளன. ஆகவே, அந்த இரண்டில் ஒன்றைக் குறித்து இந்த வசனம் உள்ளது.

*(முதலில் கேள்வி கேட்கும்போது, உறக்கம் பற்றிய வேத-வாக்யம் சொல்லப்பட்டது; இப்போது பதில் சொல்லும்போது, மரணம் பற்றிய வேத-வாக்யம் சொல்லப்படுகிறது; இரு வாக்-யத்தாலும் இரு நிலைகளைப் பற்றி தெரிய வரும் என்று கருத்து).*

सुषुप्तिमरणयोर्निस्सम्बोधत्वं, मुक्तस्य च सर्वज्ञत्वमाविष्कृतं हि श्रुत्या। **"नाह खल्वयमेवं सम्प्रत्यात्मानं जानाति अयमहमस्मीति, नो एवेमानि भूतानि; विनाशमेवापीतो भवति। नाहमत्र भोग्यं पश्यामि"**(छा.8-11-2)[1] इति सुषुप्तिवेलायां निस्सम्बोधत्वमुक्त्वा तस्मिन्नेव वाक्ये मुक्तमधिकृत्य, **"स वा एष चक्षुषा मनसैतान् कामान् पश्यन् रमते य एते ब्रह्मलोके"**(छा.8-12-5)[2] इति सर्वज्ञत्वमुच्यते।

तथा, **"सर्वं ह पश्यः पश्यति सर्वमाप्नोति सर्वशः"**(छा.7-26-2)[3] इति स्पष्टमेव सर्वज्ञत्वमुच्यते। तथा मरणे च निस्सम्बोधत्वम्, **"एतेभ्यो भूतेभ्यः समुत्थाय तान्येवानुविनश्यति"**(बृ.4-4-12)[4] इत्युक्तम्। **विनश्यति** - न पश्यतीत्यर्थः। अतः **"प्राज्ञेनाऽऽत्मना"**(बृ.6-3-21)[5] इति वचनं स्वाप्ययसम्पत्त्योरन्यतरापेक्षम् ॥१६॥

इति अभावाधिकरणम् ॥ ५॥

---

ஸுஷுப்தி-மரணயோ: நிஸ்ஸம்போதத்வம், முக்தஸ்ய ச ஸர்வஜ்ஞத்வம் ஆவிஷ்க்ருதம் ஹி ஶ்ருத்யா। *"நாஹ கல்வயமேவ ஸம்ப்ரத்யாத்மாநம் ஜாநாதி அயமஹமஸ்மீதி, நோ ஏவேமாநி பூதாநி; விநாஶமேவாபீதோ பவதி। நாஹமத்ர போக்யம் பஶ்யாமி"*(சா.8-11-2)[1] இதி ஸுஷுப்திவேலாயாம் நிஸ்ஸம்போதத்வமுக்த்வா தஸ்மிந்நேவ வாக்யே முக்தமதிக்ருத்ய, *"ஸ வா ஏஷ திவ்யேந சக்ஷுஷா மநஸைதாந் காமாந் பஶ்யந் ரமதே ய ஏதே ப்ரஹ்மலோகே"* (சா.8-12-5)[2] இதி ஸர்வஜ்ஞத்வமுச்யதே।

ததா, *"ஸர்வம் ஹ பஶ்ய: பஶ்யதி ஸர்வமாப்நோதி ஸர்வஶ:"*(சா.7-26-2)[3] இதி ஸ்பஷ்டமேவ ஸர்வஜ்ஞத்வமுச்யதே। ததா மரணே ச நிஸ்ஸம்போதத்வம், *"ஏதேப்யோ பூதேப்ய: ஸமுத்தாய தாந்யேவாநுவிநஶ்யதி"*(ப்ரு.4-4-12)[4] இத்யுக்தம்। *விநஶ்யதி* - ந பஶ்யதீத்யர்த:। அத: *"ப்ராஜ்ஞேநாऽऽத்மநா"* (ப்ரு.6-3-21)[5] இதி வசநம் ஸ்வாப்யய-ஸம்பத்த்யோரந்யதராபேக்ஷம்।।16।।

இதி அபாவாதிகரணம் ।। 5 ।।



**ஆவிஷ்க்ருதம் ஹி (வெளியிடப்பட்டது)** - உறக்கம் மரணம் ஆகிய இரண்டிலும் ஜ்ஞாநம் இல்லை என்பதும், முக்தன் ஸர்வஜ்ஞனாக எல்லாம் அறிந்தவன் என்பதும், வேதத்தால் வெளிப்படுத்தப் பட்டது - [1]**''இந்த உறங்குபவன், இப்போது நான் இப்படியாக இருக்கிறேன் என ஆத்மாவை அறியவில்லை; இந்த பொருள்களையும் அறியவில்லை; விநாஶத்தையே அடைந்தவன் போல ஆகிறான்;இந்த உறக்கத்தில் நான் ஒரு போகத்தையும் காணவில்லை''** என்று உறக்க-வேளையில் ஜ்ஞாநம்-இல்லாமையைச் சொல்கிறது; பின், அதே வாக்யத்திலேயே முக்தனைக் குறித்து [2]**''அவன், ப்ரஹ்மமாகிற உலகத்தில் எந்த கல்யாண-குணங்கள் உண்டோ அவற்றை மனஸ் எனப்படும் திவ்யமான ஜ்ஞாநக்-கண்ணால் காண்பவனாய் சந்தோஷப்படுகிறான்''** என்று முக்தனுக்கு எல்லாம் அறிந்தமை சொல்லப் படுகிறது.

அப்படியே, [3]**''ப்ரஹ்மத்தைக் காண்பவன் எல்லாவற்றையும் நேராகப் பார்க்கிறான்; எல்லாவிடத்திலும் விரும்பிய எல்லாவற்றையும் ஸங்கல்பத்தாலேயே அடைகிறான்''** என்று ஸர்வஜ்ஞனாக இருப்பது தெளிவாகவே சொல்லப்படுகிறது.

அப்படியே மரணத்தில் ஜ்ஞாநம் இல்லை என்பது, [4]**''பஞ்சபூதங்களால் உண்டாகி அவற்றையே தொடர்ந்து விநாஶம் அடைகிறான்''** என்று சொல்லப்பட்டது; விநாஶம் அடைகிறான்' - காண்பதில்லை என்று பொருள். (அறிவற்றவன் ஆகிறான் என்று கருத்து).

ஆகவே, [5]**''ஸர்வஜ்ஞன் ஆன பரமாத்மாவால் அணைக்கப்பட்டவனாய் ...''** என்கிற வேத-வாக்யமானது, உறக்கம், மரணம் ஆகிய இரண்டில் ஒன்றைப் பற்றியது.

**அபாவாதிகரணம் முற்றிற்று.**



# 156.ஜகத்-வ்யாபார-வர்ஜாதிகரணம்(4-4-6)

## முன் குறிப்பு

முக்தன் (மோக்ஷம் பெற்ற ஜீவன்), ஈஶ்வரனுக்கு சமமாக ஆகிறான் என்று வேதம் சொல்கிறது; அதனால், ஈஶ்வரனது செயல் அவனுக்கும் உண்டு என தெரிகிறது; ஈஶ்வரனது செயலாக முக்தன் பெறுவது எது? எல்லா உலகங்களையும் ஆளுதல்; அதாவது, எல்லாவற்றையும் படைத்தல், காத்தல் முதலிய செயலா? அல்லது, ஈஶ்வரனது செயலாக முக்தன் பெறுவது பரமபுருஷனை அனுபவித்தல் மட்டுமா என்று விசாரம்.

ஸ்ரீபாஷ்யத்தில் இங்கு ஐஸ்வர்யம் என்றால் ஈஶ்வரனது செயல் என்று அர்த்தம்.

உலகங்களைப் படைத்தல், காத்தல் ஆளுதல் முதலியவை முக்தனுக்கு வராது; ஏனெனில் அவை ப்ரஹ்மத்தின் லக்ஷணங்கள் ஆகும். லக்ஷணம் என்பது, அதற்கு மட்டுமே உண்டான தன்மை ஆகும். இப்படி ப்ரஹ்மத்தின் லக்ஷணமாக வேதம் சொல்வதால், முக்த ஜீவனுக்கு இவை வராது.

**வாதம்** – முக்தனும் உலகங்களில் சஞ்சாரம் செய்கிறான் என்று வேதம் சொல்கிறது; அதனால், அவனுக்கும் உலக-செயல் உண்டு என்று சொல்ல வேண்டும்.

**மறுப்பு** – நாம் கர்மத்துக்கு கட்டுப்பட்டு உலகில் திரிபவர்கள்; முக்தன் அப்படியல்ல; அவனுக்கு, கர்மபந்தம் கிடையாதானபடியால், தன் இஷ்டப்படி உலகில் உலா வருவான். பகவானது உலகங்களை பகவானது விபூதியாக அனுபவிப்பான். அவனது அனுபவத்தில் இது ஒரு விதம் என்பதுதான்; மற்றபடி பகவான் போல உலகைக் காத்தல் முதலியது கிடையாது.

மோக்ஷம் பெற்று பகவானை அடைந்த ஜீவன், பிறகு மீண்டும் ஸம்ஸாரத்தில் வருவதில்லை என வேதம் சொல்கிறது. மேலும், இவனுக்கு புண்யபாபகர்மம் கிடையாதானபடியால், ஸம்ஸாரம் வர முடியாது; மேலும், ப்ரஹ்ம-ஆனந்தம் அனுபவிக்கும் இவன் அதை விட்டு வர விரும்ப மாட்டான்; எல்லாவற்றுக்கும் மேல், பரமாத்மாவும் தனக்கு ப்ரியனான முக்தனை விட மாட்டான்; திருப்பி அனுப்பவே மாட்டான்.

இப்படியாக மோக்ஷ-பலனை விளக்கி இந்த ஶாஸ்த்ரம் முடிக்கிறது.

## १५६. जगद्व्यापारवर्जाधिकरणम् (४-४-६)

### ५४०.जगद्व्यापारवर्जं प्रकरणादसन्निहितत्वाच्च (४-४-१७)

किं मुक्तस्यैश्वर्यं जगत्सृष्ट्यादि परमपुरुषासाधारणं सर्वेश्वरत्वमपि, उत तद्रहितं केवलपरमपुरुषानुभवविषयमिति संशयः।

किं युक्तम्? जगदीश्वरत्वमपीति। कुतः? **"निरञ्जनः परमं साम्यमुपैति"** (मु.3-1-3) इति परमपुरुषेण परमसाम्यापत्तिश्रुतेः; सत्यसङ्कल्पत्वश्रुतेश्च। न हि परमसाम्यसत्यसङ्कल्पत्वे सर्वेश्वरासाधारणजगन्नियमनेन विनोपपद्येते। अतः सत्यसङ्कल्पत्वपरमसाम्योपपत्तये समस्तजगन्नियमनरूपमपि मुक्तस्यैश्वर्यमिति।

एवं प्राप्ते प्रचक्ष्महे - **जगद्व्यापारवर्जम्** - इति। **जगद्व्यापारः** - निखिलचेतनाचेतनस्वरूपस्थितप्रवृत्तिभेदनियमनम्। तद्वर्जं निरस्तनिखिलतिरोधानस्य निर्व्याजब्रह्मानुभवरूपं मुक्तस्यैश्वर्यम्।

---

## 156. ஜகத்வ்யாபாரவர்ஜாதிகரணம் (4-4-6)

### 540.ஜகத்வ்யாபாரவர்ஜம் ப்ரகரணாதஸந்நிஹிதத்வாச்ச (4-4-17)

கிம் முக்தஸ்யைஶ்வர்யம் ஜகத்ஸ்ருஷ்ட்யாதி பரமபுருஷாஸாதாரணம் ஸர்வேஶ்வரத்வமபி, உத தத்ரஹிதம் கேவலபரமபுருஷாநுபவவிஷயமிதி ஸம்ஶய:।

கிம் யுக்தம் ஜகதீஶ்வரத்வமபீதி। குத:? *"நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி"* (மு.3-1-3)[1] இதி பரமபுருஷேண பரமஸாம்யாபத்திஶ்ருதே:; ஸத்யஸங்கல்பத்வஶ்ருதேஶ்ச। ந ஹி பரமஸாம்ய-ஸத்யஸங்கல்பத்வே ஸர்வேஶ்வராஸாதாரணஜகந்நியமநேந விநோபபத்யேதே। அத: ஸத்யஸங்கல்பத்வபரமஸாம்யோபபத்தயே ஸமஸ்தஜகந்நியமநரூபமபி முக்தஸ்யைஶ்வர்யமிதி।

ஏவம் ப்ராப்தே ப்ரசக்ஷ்மஹே - *ஜகத்வ்யாபாரவர்ஜம்* - இதி। *ஜகத்வ்யாபார:* - நிகிலசேதநாசேதந-ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்திபேதநியமநம்। தத்வர்ஜம் நிரஸ்தநிகிலதிரோதாநஸ்ய நிர்வ்யாஜப்ரஹ்மாநுபவரூபம் முக்தஸ்யைஶ்வர்யம்।

# 156. ஜகத்-வ்யாபார-வர்ஜாதிகரணம் (4-4-6)

**540.ஜகத்-வ்யாபார-வர்ஜம் ப்ரகரணாத் அஸந்நிஹிதத்வாத் ச(4-4-17)**

*முக்தனது செல்வமானது, உலகச் செயல் தவிர ஆகும்; ப்ரஹ்மத்தை சொல்ல ஆரம்பித்து உலகச் செயலை சொல்வதாலும், ஜீவன் அங்கு சொல்லப்படுபவனாக இல்லாதபடியாலும்.*

**ஸம்ஶயம் (ஸந்தேஹம்)**

முக்தன் பெறும் ஐஶ்வர்யம் என்பது, பரம-புருஷனுக்கு மட்டுமே இருக்கும் ஐஶ்வர்யமான உலக-படைப்பு முதலியதாக எல்லாவற்றையும் ஆளுதலா? அல்லது, அது இல்லாமல் பரம-புருஷனை அனுபவித்தலை மட்டும் பற்றியதா? என்று ஸந்தேஹம்.

**பூர்வபக்ஷம்**

எது சரியாகும்? உலகங்களை ஆளுதலும் கூட என்பது; ஏன்? **''கர்ம-ஒட்டுதல் அற்றவனாய் (ப்ரஹ்மத்துடன்) மிகவும் ஸமமாக ஆதலை அடைகிறான்''** என்று பரம-புருஷனுடன் மிகவும் ஸமமாக ஆகும் நிலையை அடைதலை வேதம் சொல்வதால்; மேலும், ஸத்ய-ஸங்கல்பனாக ஆவதையும் வேதம் சொல்வதாலும் ஆகும். ஸர்வேஶ்வரனுக்கு மட்டுமேயான உலக-ஆட்சி எனும் தன்மை முக்தனுக்கு இல்லையானால், மிகவும் ஸமமாக ஆதலும்,ஸத்ய-ஸங்கல்பனாக ஆதலும் வராமல் போய்விடும்; ஆகையால், மிகவும் ஸமமாக ஆதலும்,ஸத்ய-ஸங்கல்பனாக ஆதலும் சரியாக வரவேண்டும் என்பதற்காக, எல்லா உலகங்களையும் ஆளுதல் என்பதாகவும் முக்தனின் ஐஶ்வர்யம் ஆக வேண்டும் என்று.

**ஸித்தாந்தம்**

இப்படி பூர்வபக்ஷம் நேரிட ஸித்தாந்தம் சொல்கிறோம் - **'ஜகத்வ்யாபாரவர்ஜம் (உலகசெயலைத் தவிர்த்ததாக)'** என்று.

**ஜகத்வ்யாபார: -** எல்லா சேதன-அசேதனங்களுடைய தனிப்பட்ட விஶேஷங்களான ஸ்வரூபம், இருப்பு, செயல்பாடுகளை நியமனம் செய்தல்; (தன் கட்டுப்பாட்டில் வைத்து ஆளுதல்)

**ஜகத்வ்யாபாரவர்ஜம் -** (இந்த உலக-செயலைத் தவிர்த்து ஆகும்),

(அவித்யை ஆகிற) எல்லா மறைவும் விலகப் பெற்றவனாய், உலக-செயலைத் தவிர்த்து, உள்ளது உள்ளபடியான ப்ரஹ்மத்தை அனுபவித்தல் என்பதே முக்தனது ஐஶ்வர்யம் ஆகும்.

कुतः? **प्रकरणात्।** निखिलजगन्नियमनं हि परं ब्रह्म प्रकृत्याऽऽम्नायते, **''यतो वा इमानि भूतानि जायन्ते येन जातानि जीवन्ति यत् प्रयन्त्यभिसंविशन्ति तद्विजिज्ञासस्व तद्ब्रह्म''**(तै.1.भृ.1) इति। यद्येतन्निखिलजगन्नियमनं मुक्तानामपि साधारणं स्यात्, ततश्चेदं जगदीश्वरत्वरूपं ब्रह्मलक्षणं न सङ्गच्छते। असाधारणस्य हि लक्षणत्वम्। तथा,

- **''सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयं तदैक्षत बहु स्यां प्रजायेयेति, तत्तेजोऽसृजत''**(छा.6-2-1),
- **''ब्रह्म वा इदमेकमेवाग्र आसीत्। तदेकं सन्न व्यभवत्। तच्छ्रेयोरूपमत्यसृजत क्षत्रम्। यान्येतानि देवत्रा क्षत्राणि इन्द्रो वरुणः सोमो रुद्रः पर्जन्यो यमो मृत्युरीशान इति''**(बृ.3-4-11)
- **''आत्मा वा इदमेक एवाग्र आसीत् नान्यत्किञ्चन मिषत्। स ईक्षत लोकान्नु सृजा इति। स इमान् लोकानसृजत''**(ऐ.1-1)
- **''एको ह वै नारायण आसीन्न ब्रह्मा नेशानो नेमे द्यावापृथिवी न नक्षत्राणि नापो नाग्निर्न सोमो न सूर्यः। स एकाकी न रमेत। तस्य ध्यानान्तःस्थस्यैका कन्या दशेन्द्रियाणि''**(महो.१-१) इत्यादिषु,

---

குத:? *ப்ரகரணாத்।* நிகி॒லஜக॒ந்நியமநம் ஹி பரம் **ப்ர**ஹ்ம ப்ரக்ருத்ய-ஆம்நாயதே, *"யதோ வா இமாநி **பூ**தாநி ஜாயந்தே யேந ஜாதாநி ஜீவந்தி யத் ப்ரயந்த்யபி॒ஸம்விமந்தி தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்ம"*(தை.1.ப்ரு.1)[1] இதி। யத்யேதந்நிகி॒லஜக॒ந்நியமநம் முக்தாநாமபி ஸா**தா**ரணம் ஸ்யாத், ததஶ்சேதம் ஜகதீஶ்வரத்வரூபம் **ப்ர**ஹ்மலக்ஷணம் ந ஸங்கச்ச॒தே। அஸா**தா**ரணஸ்ய ஹி லக்ஷணத்வம்। ததா,

- *"ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம் ததைக்ஷத ப**ஹு** ஸ்யாம் ப்ரஜாயேயேதி, தத்தேஜோऽஸ்ருஜத"*(சா.6-2-1)[1]
- *"ப்ரஹ்ம வா இதமேகமேவாக்ர ஆஸீத்। ததேகம் ஸந்ந வ்யபவத்। தச்ச்ரேயோரூபமத்யஸ்ருஜத க்ஷத்ரம்। யாந்யேதாநி தேவத்ரா க்ஷத்ராணி இந்த்ரோ வருண: ஸோமோ ருத்ர: பர்ஜந்யோ யமோ ம்ருத்யுரீஶாந இதி"*(ப்ரு.3-4-11)[1]
- *"ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத் நாந்யத்கிஞ்சந மிஷத்। ஸ ஐக்ஷத லோகாந்நு ஸ்ருஜா இதி। ஸ இமாந் லோகாநஸ்ருஜத"* (ஐ.1-1)[1]
- *"ஏகோ ஹ வை நாராயண ஆஸீந்ந ப்ரஹ்மா நேஶாநோ நேமே த்யாவாப்ருதிவீ ந நக்ஷத்ராணி நாபோ நாக்நிர்ந ஸோமோ ந ஸூர்ய:। ஸ ஏகாகீ ந ரமேத। தஸ்ய த்யாநாந்த:ஸ்தஸ்யைகா கந்யா தஶேந்த்ரியாணி"*(மஹோ.1-1)[1] இத்யாதிஷு,

ஏன்?

**ப்ரகரணாத் -** வேதத்தில், பர-ப்ரஹ்மத்தைப் பற்றி சொல்ல ஆரம்பித்து சொல்-லிக் கொண்டு வரும்போது, எல்லா உலகங்களையும் ஆளுதல் என்பது ஓதப்-படுகிறது - **''எதிலிருந்து இந்த பொருள்கள் உண்டாகின்றனவோ, உண்டா-னவை எதனால் வாழ்கின்றனவோ, எதை அடைபவையாய் லயம் அடை-கின்றனவோ, அதுவே ப்ரஹ்மம் என்று அதைத் தெரிந்துகொள்''** என்று.

எல்லா உலகங்களையும் ஆளுதல் என்கிற இது, முக்தர்களுக்கும் பொதுவாக ஆகுமானால், உலக-ஈஶ்வரனாதல் என்கிற இது ப்ரஹ்மத்தின் லக்ஷணமாவது பொருந்தாமல் போகும்; ஏனெனில், பொதுவாக ஆகாத (தனக்கு மட்டும் இருக்-கும்) தன்மைதானே லக்ஷணம் ஆக முடியும்!

அப்படியே -

- **அழகனே, இந்த ப்ரபஞ்சம்முதலில் ஸத் ஆகவே இருந்தது; ஒன்றாகவே, இரண்-டாவது எதுவும் அற்றதாக இருந்தது; அது பலவாக ஆவேன் என பார்த்தது; அது தேஜஸ்ஸினைப் படைத்தது.**

- **இந்த ப்ரபஞ்சம்முதலில் ப்ரஹ்மமாகவே இருந்தது; அது ஒன்றாக இருந்து-கொண்டு வைபவப் பெருமையை அடையவில்லை; அது சிறந்த உருவமான க்ஷத்ரியனை உயர்ந்ததாக படைத்தது; தேவர்களில் க்ஷத்ரியர்களாக யாவர் உண்டோ, இந்த்ரன், வருணன், ஸோமன், ருத்ரன், பர்ஜந்யன், யமன், ம்ருத்யு, ஈசானன் என்று அவர்களைப் படைத்தது.**

- **இந்த ப்ரபஞ்சம் முதலில் ஒரே ஆத்மாவாகவே இருந்தது; வேறு எதுவும் இல்லை; அது உலகங்களைப் படைப்பேன் என பார்த்தது; அது இந்த உல-கங்களைப் படைத்தது.**

- **நாராயணன் ஒருவனே இருந்தான்; ப்ரஹ்மா இல்லை; சிவன் இல்லை; இந்த மேல்-உலகமும் பூமியும் இல்லை; நக்ஷத்ரங்கள் இல்லை; ஜலம் இல்லை; அக்னி இல்லை; ஸோமன் இல்லை, ஸூர்யன் இல்லை; அவன் ஒருவனாய் மகிழவில்லை; த்யானத்தில் இருக்கும் அவனுக்கு ஒரு மனஸ்ஸும், பத்து இந்த்ரியங்களும் ...**

முதலியவற்றிலும் (ஸ்ருஷ்டி பற்றிய வாக்யங்களிலும்)

★ **"यः पृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरः"**(बृ.5-7-3) इत्यारभ्य, **"य आत्मनि तिष्ठन्"**(बृ.मा.14-5-30) इत्यादिषु च निखिलजगन्नियमनं परमपुरुषं प्रकृत्यैव श्रूयते।

**असन्निहितत्वाच्च।** न चैतेषु निखिलजगन्नियमनप्रसङ्गेषु मुक्तस्य सन्निधानमस्ति ; येन जगद्व्यापारस्तस्यापि स्यात्॥१७॥



## ५४१.प्रत्यक्षोपदेशादिति चेन्नाऽऽधिकारिकमण्डलस्थोक्तेः(४-४-१८)

**"स स्वराड्भवति तस्य सर्वेषु लोकेषु कामचारो भवति"**(छा.7-25-2), **"इमान् लोकान् कामान्नी कामरूप्यनुसञ्चरन्"**(तै.1.भृ.10) इति **प्रत्यक्षेण** - श्रुत्या मुक्तस्य जगद्व्यापार उपदिश्यते। अतो न जगद्व्यापारवर्जमिति चेत्,

तन्न; **आधिकारिकमण्डलस्थोक्तेः। आधिकारिकाः** - अधिकारेषु नियुक्ता हिरण्यगर्भादयः; **मण्डलानि** तेषां लोकाः, तत्स्थाः भोगाः मुक्तस्याकर्मवश्यस्य भवन्तीत्ययमर्थः ; **"तस्य सर्वेषु लोकेषु कामचारो भवति"**(छा.7-25-2) इत्यादिनोच्यते। अकर्मप्रतिहतज्ञानो मुक्तो विकारलोकान् ब्रह्मविभूतिभूतान् अनुभूय यथाकामं तृप्यतीत्यर्थः।

---

★ *"யঃ ப்ருதிவ்யாம் திஷ்டந் ப்ருதிவ்யா அந்தரঃ"*(ப்ரு.5-7-3)[1] இத்யாரப்ய, *"ய ஆத்மநி திஷ்டந்"* (ப்ரு.14-5-30)[1] இத்யாதிஷு ச நிகிலஜகந்நியமநம் பரமபுருஷம் ப்ரக்ருத்யைவ ஶ்ரூயதே।

*அஸந்நிஹிதத்வாச்ச।* ந சைதேஷு நிகிலஜகந்- நியமநப்ரஸங்கேஷு முக்தஸ்ய ஸந்நிதாநமஸ்தி; யேந ஜகத்வ்யாபாரঃ தஸ்யாபி ஸ்யாத்।।17।।



## 541.ப்ரத்யக்ஷோபதேஶாதிதி சேந்நாऽऽதிகாரிக-மண்டலஸ்தோக்தேঃ (4-4-18)

*"ஸ ஸ்வராட்பவதி தஸ்ய ஸர்வேஷு லோகேஷு காமசாரோ பவதி"*(சா.7-25-2)[1], *"இமாந் லோகாந் காமாந்நீ காமரூப்யநுஸஞ்சரந்"*(தை.1.ப்ரு.10)[1] இதி ப்ரத்யக்ஷேண - ஶ்ருத்யா முக்தஸ்ய ஜகத்வ்யாபார உபதிஶ்யதே। அதோ ந ஜகத்வ்யாபாரவர்ஜமிதி சேத் -

தந்ந, *ஆதிகாரிகமண்டலஸ்தோக்தேঃ।* ஆதிகாரிகாঃ அதிகாரேஷு நியுக்தா ஹிரண்யகர்பாதயঃ, *மண்டலாநி* தேஷாம் லோகாঃ, தத்ஸ்தாঃ போகாঃ முக்தஸ்யாகர்மவஶ்யஸ்ய பவந்தீத்யயமர்தঃ; *"தஸ்ய ஸர்வேஷு லோகேஷு காமசாரோ பவதி"*(சா.7-25-2)[1] இத்யாதிநோச்யதே। அகர்மப்ரதிஹதஜ்ஞாநோ முக்தோ விகாரலோகாந் ப்ரஹ்மவிபூதிபூதாந் அநுபூய யதாகாமம் த்ருப்யதீத்யர்தঃ।

✸ **''யார் பூமியில் இருப்பவன்; பூமிக்கு உள்ளிருப்பவன்''** என்று ஆரம்பித்து, **''யார் ஜீவாத்மாவில் இருப்பவன்''**

முதலியவற்றிலும், (அந்தர்யாமி வாக்யங்களிலும்) எல்லா உலகங்களையும் ஆளுதல் என்பது, பரம-புருஷனைப் பற்றி சொல்ல ஆரம்பித்து அந்த இடத்தில்தான் வேதத்தில் ஓதப்படுகிறது.

**அஸந்நிஹிதத்வாச்ச** - எல்லா உலகங்களையும் ஆளுதல் பற்றிய இந்த வசன-இடங்களில் (சொல்லப் படுபவனாக) முக்தன் அருகில் இல்லை; அப்படி இருந்தால், ஜகத்வ்யாபாரம் (உலக-செயல்) என்பது அவனுக்கும் ஆகலாம். (அவனைப் பற்றிய குறிப்பு எதுவும் இல்லாததால், அவனையும் சொன்ன-தாக எடுத்துக் கொள்ள முடியாது).



## 541.ப்ரத்யக்ஷோபதேஶாத் ந இதி சேத் ந ஆதிகாரிகமண்டலஸ்தோக்தே:(4-4-18)

***வேதம் மூலம் உபதேஶம் செய்வதால் அது ஆகாது என்றால் அதல்ல; ஆதிகாரிகர்களின் உலகங்களில் இருக்கும் போகங்களைச் சொல்வதால்***

கேள்வி: - **ப்ரத்யக்ஷோபதேஶாத் ந இதி சேத் -**

ப்ரத்யக்ஷம் என்றால் வேதம்; (அதன் மூலம் உபதேஶம் செய்வதால்),

**''அவன் சுதந்திரன் ஆகிறான்; அவனுக்கு எல்லா உலகங்களிலும் விருப்-பப்படி சஞ்சாரம் ஆகும்''** என்றும், **''இந்த உலகங்களில் சஞ்சரிப்பவனாய்''** என்றும் வேதம் மூலம் முக்தனுக்கு உலக-செயல் உண்டு என உபதேஶிக்கப் படுகிறது; ஆகையால், உலக-செயலைத் தவிர்த்ததாக ஆகாது - என்றால்,

**பதில் - ந -** அதல்ல;

**ஆதிகாரிக-மண்டல-ஸ்த-உக்தே: -** (ஆதிகாரிகர்களது உலகங்களில் இருப்-பவற்றைச் சொல்வதால்)

**ஆதிகாரிகா: -** அதிகாரங்களில் நியமிக்கப்பட்ட ப்ரஹ்மதேவன் முதலியவர்.

**மண்டலாநி -** அவர்களது உலகங்கள்

**(தத்-)ஸ்தா: -** அவற்றில் இருக்கும் போகங்கள்.

அவர்களது உலகங்களில் இருக்கும் போகங்கள், புண்ய-பாப-கர்மத்துக்கு வசப்படாத முக்தனுக்கு வரும் எனும் இந்த அர்த்தமானது, **''அவனுக்கு எல்லா உலகங்களிலும் விருப்பப்படி சஞ்சாரம் ஆகும்''** முதலிய வாக்யத்தால் சொல்லப்-படுகிறது. கர்மத்தால் விளையும் ஜ்ஞாந-தடை என்பது முக்தனுக்கு கிடையாது; அவன், உண்டாகக் கூடிய இந்த உலகங்களை ப்ரஹ்மத்தின் விபூதிகளாக அனுப-வித்து, விருப்பப்படி திருப்தி அடைகிறான் என்று இந்த வேதவாக்யத்துக்கு அர்த்தம்.

तदेवं विकारान्तर्वर्तिनः आधिकारिकमण्डलस्थान् सर्वान् ब्रह्मविभूतिभूतान् अनुभवतीति अनेन वाक्येनोच्यते; न जगद्व्यापारः॥ १८ ॥

यदि संसारिवत् मुक्तोऽपि विकारान्तर्वर्तिनो भोगान् भुङ्क्ते, तर्हि बद्धस्येव मुक्तस्याप्यन्तवदेन भोग्यजातम्, अल्पं च स्यात्, तत्राह -

## ५४२.विकारावर्ति च तथा हि स्थितिमाह (४-४-१९)

**विकारे** - जन्मादिके न वर्तत इति विकारावर्ति; निर्धूतनिखिलविकारं निखिलहेयप्रत्यनीककल्याणैकतानं निरतिशयानन्दं परं ब्रह्म सविभूतिकं सकलकल्याणगुणमनुभवति मुक्तः। तद्विभूत्यन्तर्गतत्वेन विकारवर्तिनां लोकानामपि मुक्तभोग्यत्वम्।

तथा हि परस्मिन् ब्रह्मणि निर्विकारेऽनवधिकातिशयानन्दे मुक्तस्यानुभवितृत्वेन **स्थितिमाह** श्रुतिः,

* **"यदा ह्येवैष एतस्मिन् अदृश्येऽनात्म्येऽनिरुक्तेऽनिलयनेऽभयं प्रतिष्ठां विन्दते, अथ सोऽभयं गतो भवति"**(तै.1.आन.8)
* **"रसो वै सः। रसं ह्येवायं लब्ध्वाऽऽनन्दी भवति"** (तै.1.आन.8) इत्यादिका।

---

ததேவம்விகாராந்தர்வர்திந: ஆதிகாரிகமண்டலஸ்தாந் ஸர்வாந் ப்ரஹ்மவிபூதிபூதாந் அநுபவதீதி அநேந வாக்யேநோச்யதே; ந ஜகத்வ்யாபார:।।18।।

யதி ஸம்ஸாரிவத் முக்தோऽபி விகாராந்தர்வர்திநோ போகாந் புங்க்தே, தர்ஹி பத்தஸ்யேவ முக்தஸ்யாபி அந்தவதேவ போக்யஜாதம், அல்பம் ச ஸ்யாத், தத்ராஹ-

## 542.விகாராவர்தி ச ததா ஹி ஸ்திதிமாஹ (4-4-19)

*விகாரே* - ஜந்மாதிகே ந வர்தத இதி விகாராவர்தி; நிர்தூதநிகிலவிகாரம் நிகிலஹேயப்ரத்யநீககல்யாணைகதாநம் நிரதிஶயாநந்தம் பரம் ப்ரஹ்ம ஸவிபூதிகம் ஸகலகல்யாணகுணமநுபவதி முக்த:। தத்விபூத்யந்தர்கதத்வேந விகாரவர்திநாம் லோகாநாமபி முக்தபோக்யத்வம்।

ததா ஹி பரஸ்மிந் ப்ரஹ்மணி நிர்விகாரே அநவதிகாதிஶயாநந்தே முக்தஸ்ய அநுபவித்ருத்வேந ஸ்திதிமாஹ ஶ்ருதி:,

* *"யதா ஹ்யேவைஷ ஏதஸ்மிந் அத்ருஶ்யேऽநாத்ம்யேऽநிருக்தேऽநிலயநேऽபயம் ப்ரதிஷ்டாம் விந்ததே, அத ஸோऽபயம் கதோ பவதி"*(தை.1.ஆந.8)[1]
* *"ரஸோ வை ஸ:। ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாऽऽநந்தீ பவதி"*(தை.1.ஆந.8)[1] இத்யாதிகா।

**(தேஷாம்) உக்தே: -** (அந்த போகங்களை இந்த வாக்யம் சொல்வதால்)

உண்டாகும் பொருள்களில் உட்படுபவையும் ஆதிகாரிகர்களது உலகங்களில் இருப்பவையுமான எல்லா போகங்களையும் ப்ரஹ்மத்தின் விபூதிகளாக அனுபவிக்கிறான் என்பது,இப்படியாக, இந்த வாக்யத்தின் மூலம் சொல்லப்படுகிறது; உலக-செயல் சொல்லப்படவில்லை.



**கேள்வி -** ஸம்ஸாரத்தில் இருப்பவனைப்போல், முக்தனும், உண்டாகும் உலகங்களில் உட்படும் போகங்களை அனுபவிக்கிறான் என்றால், ஸம்ஸார-பந்தத்தில் இருப்பவனைப் போல் முக்தனுக்கும் போகமானது அழியக் கூடியதாகவும் அல்பமாகவும் ஆக நேரிடும்.

**பதில் -** அதற்கு பதில் சொல்கிறார் -

**542.விகாராவர்த்தி ச ததா ஹி ஸ்திதிம் ஆஹ(4-4-19)**

*மாற்றமற்ற ப்ரஹ்மத்தை அனுபவிக்கிறான்; அப்படியே அவனது இருப்பைச் சொல்கிறது.*

**விகாராவர்த்தி (மாற்றமற்ற ப்ரஹ்மத்தை) -** விகாரே ந வர்ததே இதி விகாராவர்த்தி என்று இலக்கணக் குறிப்பு; பிறப்பு முதலிய மாற்றத்தில் இல்லாதது என்று அர்த்தம்.

எல்லா மாற்றங்களும் அற்றதாய் எல்லா விடத்தக்க இழி-குணங்களுக்கும் எதிர்த்தட்டாய் கல்யாண-குணங்களுக்கு மட்டும் இருப்பிடமாய் அளவற்ற ஆனந்தமாகிற பர-ப்ரஹ்மத்தை விபூதிகளுடன் கூடியதாகவும் எல்லா கல்யாண-குணங்களை உடையதாகவும் முக்தன் அனுபவிக்கிறான்; அந்த ப்ரஹ்மத்தின் விபூதிகளில் உட்படுவதால், மாற்றத்துக்கு உட்படும் உலகங்களும் கூட முக்தனுக்கு போக்யமாக ஆகின்றன.

**ததா ஹி ஸ்திதிம் ஆஹ (அப்படி இருத்தலைச் சொல்கிறது) -** மாற்றமற்றதும் உயர்வற உயர்ந்த ஆனந்த-ஸ்வரூபமும் ஆன பர-ப்ரஹ்மத்தில் அப்படியே அனுபவிப்பவனாக முக்தன் இருப்பதை வேதம் சொல்கிறது -

* **"எப்போது இவன், ஸம்ஸாரம் தொலைவதற்காக, காணப்பட முடியாதவனும், ஶரீரத்தை விட வேறானதும், சொற்களால் சொல்லப்பட முடியாததும் ஆதாரம் அற்றதும் ஆன இந்த பரமாத்மாவில் நிலையான இருப்பைப் பெறுகிறானோ, அப்போது அபயத்தை அடைந்தவன் (ஸம்ஸாரம் நீங்கப் பெற்றவன்) ஆகிறான்".**
* **"அவன் ஆனந்தம் ஆனவன்; அந்த ஆனந்தத்தை அடைந்து ஜீவனும் ஆனந்தமுடையவன் ஆகிறான்".** முதலியது.

तद्विभूतिभूतं च जगत् तत्रैव वर्तते, **''तस्मिन् लोकाः श्रिताः सर्वे तदु नात्येति कश्चन''** (क.5-8) इति श्रुतेः। अतः सविभूतिकं ब्रह्मानुभवन् विकारान्तर्वर्तिनः आधिकारिकमण्डलस्थानपि भोगान् भुङ्क्त इति, **''सर्वेषु कामचारः''** (छा.7-25-2) इत्यादिनोच्यते, न मुक्तस्य जगद्व्यापारः॥१९॥

## ५४३.दर्शयतश्चैवं प्रत्यक्षानुमाने (४-४-२०)

अस्य प्रत्यगात्मनो मुक्तस्य नियाम्यभूतस्य नियन्तृभूतपरपुरुषासाधारणं जगद्व्यापाररूपं नियमनं न सम्भवतीत्युक्तम्; निखिलजगन्नियमनरूपो व्यापारः परमपुरुषासाधारण इति दर्शयतः श्रुतिस्मृती,

- **''भीषाऽस्माद्वातः पवते भीषोदेति सूर्यः। भीषाऽस्मादग्निश्चेन्द्रश्च मृत्युर्धावति पञ्चमः''** (तै.1.आन.9) इति
- **''एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठतः''** (बृ.5-8-8) इत्यादिः;
- तथा **''एष सर्वेश्वर एष भूताधिपतिरेष भूतपाल एष सेतुर्विधरण एषां लोकानामसम्भेदाय''** (बृ.6-4-22) इति च श्रुतिः।

---

தத்விபூதிபூதம் ச ஜகத் தத்ரைவ வர்ததே, *''தஸ்மிந்லோகா: ஶ்ரிதா: ஸர்வே தது நாத்யேதி கஶ்சந''*(க.5-8)[1] இதி ஶ்ருதே:। அத: ஸவிபூதிகம் ப்ரஹ்மாநுபவந் விகாராந்தர்வர்திந: ஆதிகாரிகமண்டலஸ்தாநபி போகாந் புங்க்த இதி, *''ஸர்வேஷு லோகேஷு காமசார:''*(சா.7-25-2)[1] இத்யாதிநோச்யதே, ந முக்தஸ்ய ஜகத்வ்யாபார:।। 19 ।।

## 543.தர்ஶயதஶ்சைவம் ப்ரத்யக்ஷாநுமாநே (4-4-20)

அஸ்ய ப்ரத்யகாத்மநோ முக்தஸ்ய நியாம்யபூதஸ்ய நியந்த்ருபூதபரமபுருஷாஸாதாரணம் ஜகத்வ்யாபாரரூபம் நியமநம் ந ஸம்பவதீத்யுக்தம்; நிகிலஜகந்நியமநரூபோ வ்யாபார: பரமபுருஷாஸாதாரண இதி தர்ஶயத: ஶ்ருதிஸ்ம்ருதீ,

- *''பீஷாऽஸ்மாத்வாத: பவதே பீஷோதேதி ஸூர்ய:। பீஷாऽஸ்மாதக்நிஶ்சேந்த்ரஶ்ச ம்ருத்யுர்தாவதி பஞ்சம:''*(தை.1.ஆந.9)[1] இதி,
- *''ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்கி ஸூர்யாசந்த்ரமஸௌ வித்ருதௌ திஷ்டத:''*(ப்ரு.5-8-8)[1] இத்யாதி:,
- ததா *''ஏஷ ஸர்வேஶ்வர ஏஷ பூதாதிபதிரேஷ பூதபால ஏஷ ஸேதுர்விதரண ஏஷாம் லோகாநாமஸம்பேதாய''*(ப்ரு.6-4-22)[1] இதி ச ஶ்ருதி:।

அந்தப்ரஹ்மத்தின் விபூதியான (செல்வமான) உலகமும் அதனிடமே உள்ளது; ஏனெனில், **''அந்தப்ரஹ்மத்திடம் எல்லா உலகங்களும் அண்டியுள்ளன; அந்த ப்ரஹ்மத்தை எதுவும் மீறி இருப்பதில்லை''** என வேதம் சொல்கிறது;

ஆகையால், முக்தன்ஆனவன், விபூதிகளுடன் கூடிய ப்ரஹ்மத்தை அனுபவிப்பவனாய், மாற்றத்துக்கு உட்படுபவையாய் ஆதிகாரிகர்களது (ப்ரஹ்மதேவன் முதலியவரின்) உலகங்களில் இருக்கும் போகங்களையும் அனுபவிக்கிறான்; இதுவே, **''எல்லா உலகங்களிலும் விருப்பப்படி செல்பவன் ஆகிறான்''** முதலிய வாக்யத்தால் சொல்லப்படுகிறது; முக்தனுக்கு உலக-செயல் இருப்பதாக சொல்லப்படவில்லை.

*(ஸம்ஸார நிலையில் புண்யபாப கர்மத்துக்கு கட்டுப்பட்டு உலகில் நடமாடி உலகை அனுபவித்துக்கொண்டு இருந்தான்; அதனால், சுகதுக்கங்கள் இருந்தன; ஆனால், மோக்ஷநிலையில் புண்யபாபகர்மம் கிடையாது; அதனால் சுகதுக்கங்கள் கிடையாது; மாறாக ப்ரஹ்மத்தின் செல்வமாக உலகை அனுபவிப்பான்; அப்போது உலகில் நடமாடுவான்; அது அவனது ப்ரஹ்ம-ஆநந்த அனுபவத்தில் ஒரு பகுதியாக அடங்கும்; அது தவிர வேறு உலக-நியமநம் முதலிய செயல் எதுவும் கிடையாது.)*



## 543. தர்ஶயத: ச ஏவம் ப்ரத்யக்ஷானுமானே (4-4-20)

*வேதமும் ஸ்ம்ருதியும் இப்படி காண்பிக்கின்றன.*

ஆள்பவனான பரம-புருஷனுக்கு மட்டுமேயான உலக-செயல்ஆகிற ஆட்சியானது, ஆளப்படுபவனான முக்த-ஜீவனுக்கு கிடையாது என சொல்லியாயிற்று; எல்லா உலகங்களையும் ஆளுதல் என்னும் செயல்பரம-புருஷனுக்கு மட்டுமேயானது என்பதை வேதங்களும் ஸ்ம்ருதிகளும் காண்பிக்கின்றன.

- **''இவனிடமிருந்து பயத்தால் காற்று வீசுகிறது; பயத்தால் ஸூர்யன் உதிக்கிறான்; இவனிடமிருந்து பயத்தால் அக்நியும் இந்த்ரனும் செயல் செய்கின்றனர்; ஐந்தாவதாக ம்ருத்யுவும் ஓடுகிறான்''.**
- **''கார்கியே, இந்த அக்ஷர-ப்ரஹ்மத்தின் கட்டளையில்தான் ஸூர்ய-சந்த்ரர்கள் தரிக்கப்பட்டு நிற்கின்றனர்''.**

முதலியது; அப்படியே

- **''இவன் ஸர்வேஶ்வரன், இவன் பூதங்களின் தலைவன்; இவன் பூதங்களைக் காப்பவன்; இந்த உலகப் பொருள்கள் கலக்காமல் இருப்பதற்காக இவன் அணையாக தரிப்பவனாக இருக்கிறான்.''** என்று வேதம் சொல்கிறது.

स्मृतिरपि

* **"मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम्।
हेतुनाऽनेन कौन्तेय जगद्धि परिवर्तते"** (गी.9-10) इति,
* **"विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत्"** (गी.10-42) इति च।

तथा मुक्तस्य सत्यसङ्कल्पत्वादिपूर्वकस्याप्यानन्दस्य परमपुरुष एव हेतुरिति श्रुतिस्मृती दर्शयतः,

* **"एष ह्येवानन्दयाति"** (तै.1.आन.8),
* **"मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते।
स गुणान् समतीत्यैतान् ब्रह्मभूयाय कल्पते॥
ब्रह्मणो हि प्रतिष्ठाऽहममृतस्याव्ययस्य च।
शाश्वतस्य च धर्मस्य सुखस्यैकान्तिकस्य च॥"** (गी.14-26,27) इति।

यद्यप्यपहतपाप्मत्वादिः सत्यसङ्कल्पत्वपर्यन्तो गुणगणः प्रत्यगात्मनः स्वाभाविक एवाऽऽविर्भूतः, तथाऽपि तस्य तथाविधत्वमेव परमपुरुषायत्तम्; तस्य नित्यस्थितिश्च तदायत्ता। परमपुरुषस्यैतन्नित्यतायाः नित्येष्टत्वान्नित्यतया वर्तत इति न कश्चिद्विरोधः।

---

ஸ்ம்ருதிரபி

*"மயாऽத்₄யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம்।
ஹேதுநாऽநேந கௌந்தேய ஜக₃த்₃தி₄ பரிவர்ததே॥"*(கீ.9-10)[1] இதி,

*"விஷ்டப்₄யாஹமித₃ம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்தி₂தோ ஜக₃த்"*(கீ.10-42)[1] இதி ச।

ததா₂ முக்தஸ்ய ஸத்யஸங்கல்பத்வாதி₃பூர்வகஸ்யாப்யாநந்த₃ஸ்ய பரமபுருஷ ஏவ ஹேதுரிதி ஶ்ருதிஸ்ம்ருதீ த₃ர்ஶயத:,

* *"ஏஷ ஹ்யேவாநந்த₃யாதி"*(தை.1.ஆந.8)[1]
* *"மாம் ச யோऽவ்யபி₄சாரேண ப₄க்தியோகே₃ந ஸேவதே।
ஸ கு₃ணாந் ஸமதீத்யைதாந் ப்₃ரஹ்மபூ₄யாய கல்பதே॥
ப்₃ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டா₂ऽஹமம்ருதஸ்யாவ்யயஸ்ய ச।
ஶாஶ்வதஸ்ய ச த₄ர்மஸ்ய ஸுக₂ஸ்யைகாந்திகஸ்ய ச॥"*(கீ.14-27,27)[1] இதி।

யத்₃யபி - அபஹதபாப்மத்வாதி₃: ஸத்யஸங்கல்பத்வபர்யந்தோ கு₃ணக₃ண: ப்ரத்யகா₃த்மந: ஸ்வாபா₄விக ஏவாऽऽவிர்பூ₄த: - ததா₂பி தஸ்ய ததா₂வித₄த்வமேவ பரமபுருஷாயத்தம்; தஸ்ய நித்யஸ்தி₂திஶ்ச தத₃யத்தா। பரமபுருஷஸ்ய ஏதந்நித்யதாயா: நித்யேஷ்டத்வாத் நித்யதயா வர்தத இதி ந கஶ்சித்₃விரோத₄:।

ஸ்ம்ருதியும் (கண்ணன் கீதையில் சொன்னபடி)-

- **''அர்ஜுனா, ப்ரக்ருதியானது அதனை அதிஷ்டானம் செய்யும் என்னால்-தான் அதிஷ்டானம் செய்யப்பட்டதாய் சராசர-உலகைப் பெறுகிறது; இந்த காரணத்தால்தான் உலகம் அழிவதும் கூட.''**

- **''இந்த முழு உலகத்தையும் என் ஒரு அம்ஶத்தினால் தாங்கி இருக்கிறேன்''**

என்றும் உள்ளது.

மேலும், முக்தனுக்கு ஆனந்தமானது அவனது ஸத்ய-ஸங்கல்ப-தன்மை முத-லியதை முன்னிட்டு வருவதானாலும் அந்த ஆனந்தத்துக்கு பரம-புருஷனே கார-ணம் என்று வேதமும் ஸ்ம்ருதியும் சொல்கின்றன -

- **''இந்த ப்ரஹ்மம்தான் ஆனந்தம் ஊட்டுகிறான்''**

- **''என்னை யார் மாறாமல் பக்தியோகத்தால் சேவிக்கிறானோ, அவன் இந்த முக்குணங்களைக் கடந்து, ப்ரஹ்மதன்மைக்கு (ப்ரஹ்மத்துக்கு ஸமமாக ஆவதற்கு) தகுந்த நிலையினன் ஆகிறான்.**

  **அம்ருதமானதும் அழிவற்றதும் ஆன இந்த ப்ரஹ்மதன்மைக்கு தகுந்த நிலைக்கும் (ப்ரஹ்மத்துக்கு ஸமமாக ஆகத் தகுந்த ஜீவனின் கைவல்ய நிலைக்கும்), அதிககாலம் நிலையான ஐஶ்வர்யத்துக்கும், ஏகாந்திகளான ஜ்ஞானிகள் பெறும் மோக்ஷ-சுகத்துக்கும் நானே ஆதாரம்''**

முதலியது.

அபஹத-பாப்ம-தன்மை முதல் ஸத்ய-ஸங்கல்ப-தன்மை வரையிலான குணக்-குழுவானது, ஜீவாத்மாவுக்கு இயல்பானதுதான்; அதுதான் (முக்தியில்) வெளிப்படுகிறது; ஆனாலும், அது அப்படியாவதே பரம-புருஷனால் விளைவது-தான்; அது நித்யமாக இருப்பதும் அவனால்தான்; பரமபுருஷனுக்கு இது நித்யமாக இஷ்டமானபடியால், இது நித்யமாக இருக்கிறது; ஆகவே, எந்த முரண்பாடும் இல்லை.

*(நித்யமான பொருள்கள் எல்லாம் நித்யமாக தொடர்ந்த இருப்பது பரம புருஷனின் ஸங்கல்பத்தால்தான்; ஆகையால், அது நித்யம் என்பதிலும் பரம புருஷனால் ஆவது என்பதிலும் முரண்பாடு இல்லை)*

एवमेव परमपुरुषभोगोपकरणस्य लीलोपकरणस्य च नित्यतया शास्त्रावगतस्य, परमपुरुषस्य नित्येष्टत्वादेव तथाऽवस्थानमस्तीति शास्त्रादवगम्यते। अतो मुक्तस्य सत्यसङ्कल्पत्वं परमपुरुषसाम्यं च जगद्व्यापारवर्जम्॥ २० ॥

## ५४४.भोगमात्रसाम्यलिङ्गाच्च (४-४-२१)

ब्रह्मयाथात्म्यानुभवरूपभोगमात्रे मुक्तस्य ब्रह्मसाम्यप्रतिपादनाच्च लिङ्गात् जगद्व्यापारवर्जमित्यवगम्यते, "**सोऽश्नुते सर्वान् कामान् सह ब्रह्मणा विपश्चिता**" (तै.1.आन.2) इति। अतो मुक्तस्य परमपुरुषसाम्यं सत्यसङ्कल्पत्वं च परमपुरुषासाधारणनिखिलजगन्नियमनश्रुत्यानुगुण्येन वर्णनीयमिति जगद्व्यापारवर्जमेव मुक्तैश्वर्यम् ॥२१॥

यदि परमपुरुषायत्तं मुक्तैश्वर्यम्, तर्हि तस्य स्वतन्त्रत्वेन तत्सङ्कल्पान्मुक्तस्य पुनरावृत्तिसम्भवाशङ्केत्यत्राह -

## ५४५.अनावृत्तिश्शब्दादनावृत्तिश्शब्दात् (४-४-२२)

यथा निखिलहेयप्रत्यनीककल्याणैकतानो जगज्जन्मादिकारणं समस्तवस्तुविलक्षणः

ஏவமேவ பரமபுருஷபோகோபகரணஸ்ய லீலோபகரணஸ்ய ச நித்யதயா ஶாஸ்த்ராவகதஸ்ய, பரமபுருஷஸ்ய நித்யேஷ்டத்வாதேவ ததாऽவஸ்தானமஸ்தீதி ஶாஸ்த்ராதவகம்யதே। அதோ முக்தஸ்ய ஸத்யஸங்கல்பத்வம் பரமபுருஷஸாம்யம் ச ஜகத்வ்யாபாரவர்ஜம்।। 20 ।।

## 544.போகமாத்ரஸாம்யலிங்காச்ச(4-4-21)

ப்ரஹ்மயாதாத்ம்யாநுபவரூபபோகமாத்ரே முக்தஸ்ய ப்ரஹ்மஸாம்யப்ரதிபாதநாச்ச லிங்காத் ஜகத்வ்யாபாரவர்ஜமித்யவகம்யதே, *"ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா"* (தை.1.ஆந.2)[1] இதி। அதோ முக்தஸ்ய பரமபுருஷஸாம்யம் ஸத்யஸங்கல்பத்வம் ச பரமபுருஷாஸாதாரணநிகிலஜகந்நியமநஶ்ருத்யாநுகுண்யேந வர்ணநீயமிதி ஜகத்வ்யாபாரவர்ஜமேவ முக்தைஶ்வர்யம்।। 21 ।।

யதி பரமபுருஷாயத்தம் முக்தைஶ்வர்யம், தர்ஹி தஸ்ய ஸ்வதந்த்ரத்வேந தத்ஸங்கல்பாத் முக்தஸ்ய புநராவ்ருத்தி-ஸம்பவாஶங்கா இத்யத்ராஹ -

## 545.அநாவ்ருத்திஶ்ஶப்தாதநாவ்ருத்திஶ்ஶப்தாத் (4-4-22)

யதா நிகிலஹேயப்ரத்யநீககல்யாணைகதாந: ஜகஜ்ஜந்மாதிகாரணம்

அப்படியே பரம-புருஷனது போக-உபகரணமும் லீலா-உபகரணமும் நித்ய-மாக இருப்பதாக ஶாஸ்த்ரத்தில் தெரிவதானது, பரம-புருஷனுக்கு நித்யமாக இஷ்-டமானபடியால் அப்படி இருப்பதாக உள்ளது என்பதும் ஶாஸ்த்ரத்தால் தெரிகிறது.

ஆகவே, முக்தனுடைய ஸத்ய-ஸங்கல்ப-தன்மையும் பரம-புருஷனுடன் ஸமமாக ஆகும் தன்மையும் உலக-செயலைத் தவிர்த்து அமையும்.



## 544.போகமாத்ர-ஸாம்ய-லிங்காத் ச (4-4-21)

*போகத்தால் மட்டுமே ஸமமாக ஆவதைக் குறிக்கும் அடையாளத்தாலும்*

ப்ரஹ்மத்தின் உண்மை-நிலையை அனுபவித்தல் எனும் போகத்தையிட்டு மட்டுமே முக்தன் ப்ரஹ்மத்துக்கு ஸமமாக ஆகிறான் என்பதை வேதம் சொல்கிறது - **''அவன் ஸர்வஜ்ஞனான ப்ரஹ்மத்துடன் எல்லா கல்யாண-குணங்களையும் அனுபவிக்கிறான்''** என்று; இந்த லிங்க(அடையாள)த்தால், உலக-செயலைத்-தவிர்த்தது (முக்த-ஐஶ்வர்யம்) என்று தெரிகிறது.

ஆகையால், எல்லா உலகையும் நியமநம் செய்தலை பரமபுருஷனுக்கு மட்-டும் தனிப்பட்டதாக சொல்லும் வேதவாக்யங்களுக்கு ஏற்பவே, முக்தன் ஆனவன் பரமபுருஷனுக்கு ஸமமாக ஆதலும், ஸத்யஸங்கல்பன் ஆக இருப்பதும் வர்ணிக்கப் பட வேண்டும்; ஆகையால் (உலகை படைத்து நியமநம் செய்தல் ஆகிற) உலக-செயல்களைத் தவிர்த்தே முக்தனது ஐஶ்வர்யம் ஆகும்.



**கேள்வி -** முக்தனது ஐஶ்வர்யமானது பரம-புருஷனுக்கு அதீனமானது என்-றால், அந்த பரமபுருஷன் சுதந்திரன் ஆனபடியால், அவனது ஸங்கல்பத்தால் முக்-தன் திரும்பி வர நேரிடுமோ எனும் ஶங்கை உதிக்கிறது;

**பதில் -** அதற்கு பதில் சாதிக்கிறார் -

## 545.அநாவ்ருத்தி: ஶப்தாத் அநாவ்ருத்தி: ஶப்தாத்(4-4-22)

*திரும்ப மாட்டான் என்பது வேதவாக்யம் மூலம் [தெரிகிறது].*

பரம-புருஷன் ஆனவன் எல்லா விடத்தக்க இழி-குணங்களுக்கும் எதிர்த்-தட்டாய் கல்யாண-குணங்களுக்கு ஒரே இருப்பிடமானவன்; உலகங்களின் பிறப்பு முதலியதற்குக் காரணமானவன்; எல்லா பொருள்களையும் விட வேறுபட்டவன்;

सर्वज्ञः सत्यसङ्कल्पः आश्रितवात्सल्यैकजलधिः परमकारुणिको निरस्तसमाभ्यधिकसम्भावनः परब्रह्माभिधानः परमपुरुषोऽस्तीति शब्दादवगम्यते, एवमहरहरनुष्ठीयमानवर्णाश्रमधर्मानुगृहीततदुपासनरूपतत्समाराधनप्रीतः उपासीनान् अनादिकालप्रवृत्तानन्तदुस्तरकर्मसञ्चयरूपाविद्यां विनिवर्त्य स्वयाथात्म्यानुभवरूपानवधिकातिशयानन्दं प्रापय्य पुनर्नावर्तयतीत्यपि शब्दादेवावगम्यते। शब्दश्च, **"स खल्वेवं वर्तयन् यावदायुषं ब्रह्मलोकमभिसम्पद्यते न च पुनरावर्तते (न च पुनरावर्तते)"** (छा.8-15-1) इत्यादिकः। तथा च भगवता स्वयमेवोक्तम्,

**"मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम्।**
**नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः॥**

**आब्रह्मभ(भु)वनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन।**
**मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते॥"** (गी.8-15,16) इति।

न च उच्छिन्नकर्मबन्धस्यासङ्कुचितज्ञानस्य परब्रह्मानुभवैकस्वभावस्य तदेकप्रियस्यानवधिकातिशयानन्दं ब्रह्मानुभवतः अन्यापेक्षातदर्थारम्भाद्यसम्भवात् पुनरावृत्तिशङ्का।

---

ஸமஸ்தவஸ்துவிலக்ஷண: ஸர்வஜ்ஞ: ஸத்யஸங்கல்ப: ஆஶ்ரிதவாத்ஸல்யைகஜலதி: பரமகாருணிகோ நிரஸ்தஸமாப்யதிகஸம்பாவந: பரப்ரஹ்மாபிதாந: பரமபுருஷோऽஸ்தீதி ஶப்தாதவகம்யதே - ஏவமஹரஹரநுஷ்டீயமாநவர்ணாஶ்ரமதர்மாநுக்ருஹீத-ததுபாஸநரூபதத்ஸமாராதநப்ரீத: உபாஸீநாந் அநாதிகாலப்ரவ்ருத்தாநந்ததுஸ்தரகர்மஸஞ்சயரூபாவித்யாம் விநிவர்த்ய ஸ்வயாதாத்ம்யாநுபவரூபாநவதிகாதிஶயாநந்தம் ப்ராபய்ய புநர்நாவர்தயதீத்யபி ஶப்தாதேவாவகம்யதே। ஶப்தஶ்ச, "ஸ கல்வேவம் வர்தயந் யாவதாயுஷம் ப்ரஹ்மலோகமபிஸம்பத்யதே ந ச புநராவர்ததே (ந ச புநராவர்ததே)" (சா.9-15-1)[1] இத்யாதிக:। ததா ச பகவதா ஸ்வயமேவோக்தம்,

"மாமுபேத்ய புநர்ஜந்ம து:காலயமஶாஸ்வதம்।
நாப்நுபவந்தி மஹாத்மாந: ஸம்ஸித்திம் பரமா கதா:॥

ஆப்ரஹ்ம(பு)பவநால்லோகா: புநராவர்திநோऽர்ஜுந।
மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே॥" (கீ.8-15,16)[1] இதி।

ந ச உச்சிந்நகர்மபந்தஸ்யாஸங்குசிதஜ்ஞாநஸ்ய பரப்ரஹ்மாநுபவைகஸ்வபாவஸ்ய தத்தேகப்ரியஸ்யாநவதிகாதிஶயாநந்தம் ப்ரஹ்மாநுபவத: அந்யாபேக்ஷாததர்தாரம்பாத்யஸம்பவாத் புநராவ்ருத்திஶங்கா।

எல்லாம் அறிபவன்; (ஸத்ய-ஸங்கல்பன்) தடையற்ற ஸங்கல்பம் உடையவன்; தன்னிடம் அண்டினவர்களிடம் வாத்ஸல்யம் மட்டுமே நிறைந்த கடல் ஆனவன்; பரம-காருணிகன் (கருணையுடையவரில் மிக உயர்ந்தவன்); தனக்கு ஸமமானதோ உயர்வானதோ ஆன ஏதாவது இருக்குமோ என்ற வாய்ப்பே அற்றவன்; பர-ப்ரஹ்மம் என்று சொல்லப்படுபவன்; இப்படியான பரம-புருஷன் இருக்கிறான் என்பது வேதமாகிற சப்தம் மூலம் தெரிய வருகிறது.

அப்படியே, அவனைப் பற்றிய உபாஸநம் ஆனது, அன்றன்று அனுஷ்டானம் செய்யப்படும் வர்ணாஶ்ரம-தர்மங்களின் துணை கொண்டது; அது, அவனுக்கான ஆராதநமாவது; அந்த ஆராதநத்தால் அவன் ப்ரீதி அடைபவனாய், உபாஸநம் செய்பவர்களுக்கு, அநாதி-காலமாக நடந்து வரும் எல்லையற்ற கடக்கமுடியாத புண்ய-பாப-கர்ம-குவியல் ஆகிற அவித்யையை போக்குகிறான்; பின், தன் உண்மை-நிலையை அனுபவித்தல் ஆகிற உயர்வற உயர்ந்த ஆனந்தத்தை அடைவிக்கிறான்; பின் மீண்டும் அவனைத் திருப்பி அனுப்புவதில்லை என்பதும் வேதத்தாலேயே தெரிகிறது.

அந்த வேத வாக்யமானது - **"அவன் ஆயுள் முடியும் வரை இப்படி உபாஸ-நத்துக்கான கர்மம் செய்பவனாக இருப்பவனாய், பின் ப்ரஹ்ம-லோகத்தை அடை-கிறான்; மீண்டும் திரும்பி வருவதில்லை"** முதலானது ஆகும்.

அப்படியே பகவானாலும் தாமாகவே சொல்லப்பட்டது -

**"உயர்ந்த ஸித்தி பெற்ற மஹான்கள், என்னை அடைந்து, துக்கத்தின் இருப்பிடமும் நிலையற்றதுமான மறுபிறவியை அடைவதில்லை;**

**அர்ஜுனா, ப்ரஹ்ம-தேவனின் உலகம் வரை எல்லா உலகங்களும் மீண்டும் தோன்றக் கூடியவை; என்னை அடைந்தாலோ, மறுபிறவி கிடையாது"** என்று.

முக்த-ஜீவனானவன் (தானாக ஸம்ஸாரத்துக்கு) திரும்பி வருவானோ எனும் ஐயம் இல்லை; ஏனெனில் கர்ம-பந்தம் அழியப் பெற்றவனாய், சுருக்கமற்ற ஜ்ஞா-நம் பெற்றவனாய், பர-ப்ரஹ்ம-அனுபவம் மட்டுமே இயல்பாகக் கொண்டவனாய், அதுவே விருப்பமாக உடையவனாய், உயர்வற உயர்ந்த ப்ரஹ்மத்தை அனுபவிக்-கும் இவனுக்கு, வேறொரு தேவை, அதற்கான முயற்சி முதலியதுவராது;

न च परमपुरुषः सत्यसङ्कल्पोऽत्यर्थप्रियं ज्ञानिनं लब्ध्वा कदाचिदावर्तयिष्यति, य एवमाह -

"प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं स च मम प्रियः॥
उदाराः सर्व एवैते ज्ञानी त्वात्मैव मे मतम्।
आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम्॥
बहूनां जन्मनामन्ते ज्ञानवान् मां प्रपद्यते।
वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः॥" (गी.7-17,18,19) इति।

सूत्राभ्यासः शास्त्रपरिसमाप्तिं द्योतयतीति सर्वं समञ्जसम्॥ २२ ॥

इति श्रीभगवद्रामानुजविरचिते शारीरकमीमांसाभाष्ये
चतुर्थस्याध्यायस्य चतुर्थः पादः॥ ४ ॥
श्रीशारीरकमीमांसाशास्त्रं श्रीभाष्यञ्च परिसमाप्तम्॥
श्रीमते रामानुजायनमः॥ श्रीरस्तु॥ शुभमस्तु॥

---

ந ச பரமபுருஷ: ஸத்யஸங்கல்ப: அத்யர்துப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசிதாவர்தயிஷ்யதி, ய ஏவமாஹ -

*"ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்துமஹம் ஸ ச மம ப்ரிய:॥
உதாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்।
ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம்॥
பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே।
வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:॥"* (கீ.7-17,18,19)[1] இதி।

ஸூத்ராப்யாஸ: ஶாஸ்த்ரபரிஸமாப்திம் த்யோதயதி - இதி ஸர்வம் ஸமஞ்ஜஸம்॥ 22 ॥

இதி ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசிதே ஶாரீரகமீமாம்ஸாபாஷ்யே
சதுர்தஸ்யாத்யாயஸ்ய சதுர்த: பாத:॥ 4 ॥
ஸ்ரீஶாரீரகமீமாம்ஸாஶாஸ்த்ரம் ஸ்ரீபாஷ்யஞ்ச பரிஸமாப்தம்॥
ஸ்ரீமதே ராமாநுஜாயநம:॥ ஸ்ரீரஸ்து॥ ஶுபமஸ்து॥



ஸத்ய-ஸங்கல்பன் ஆன பரம-புருஷனும், சொல்லமுடியாத அளவு மிகவும் ப்ரியமானவனான ஜ்ஞானியைப் பெற்று, எப்போதும் திருப்பி அனுப்ப மாட்டான்; எந்த பரம-புருஷன் (ஜ்ஞாநியைப் பற்றி) இப்படி சொல்கிறானோ -

**''ஜ்ஞானிக்கு நான் சொல்லமுடியாத அளவு மிகவும் பிரியமானவன்; அவ-னும் எனக்கு பிரியமானவன்;**

**இவர்கள் எல்லாருமே வள்ளல்கள்; ஜ்ஞாநியோ எனக்கு ஆத்மா என்பது என் மதம்; யோகம் செய்யும் அவன் என்னையே உயர்ந்த கதியாக கொண்டவன்;**

**பல புண்ய-பிறப்புகளின் இறுதியில் ஜ்ஞாநம் பெற்றவன் என்னை அடை-கிறான்; 'வாஸுதேவனே எனக்கு எல்லாம்' என்று இருக்கும் அவன் மஹாத்மா; அவன் எனக்கு கிடைக்க அரியவன்''** என்று. (அப்படி சொல்லும் பெருமான் கட்டாயம் திருப்பி அனுப்ப மாட்டான்).

ஸூத்ரத்தை இருமுறை சொன்னது ஶாஸ்த்ரம் முடிந்து விட்டது என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறது.

இப்படியாக எல்லாம் (எல்லா வேத-வசநமும்) சரியாகிறது.

✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱✱

**ஜகத்வ்யாபாரவர்ஜாதிகரணம்.**

*இப்படியாக ஸ்ரீபகவத்-ராமானுஜர் அருளிய ஶாரீரக-மீமாம்ஸா-பாஷ்யத்தில்*
*நான்காவது அத்யாயத்தின் நான்காவது பாதம் ஆயிற்று.*
*ஸ்ரீபகவத்ராமாநுஜர் அருளிய ஸ்ரீபாஷ்யம் முற்றிற்று*
*ஸ்ரீமதே ராமாநுஜாய நம:*



# பின் இணைப்புகள்

1. பஞ்சாக்னிவித்யை
2. ஆசாரம் - அனுஷ்டானம்
3. யாகத்தில் அஹிம்ஸை
4. உபஸம்ஹாரம் - விகல்பம்
5. ஸர்வவேதாந்தப்ரத்யயாதிகரணம்
6. உத்கீதவித்யை
7. அங்கமாவதை அறிவிக்கும் ப்ரமாணங்கள்
8. ஔபஸதம்
9. பர்ணதா - ஜுஹூ வாக்யங்கள்
10. க்ரமம்
11. அர்ச்சிராதி கதி
12. அருஞ்சொற்பொருள்
13. அதிகரண ஸாரம்

# 1.பஞ்சாக்னி வித்யை

*(3-1 பாதம்முழுவதும்)*

மூன்றாவது அத்யாயத்தில் முதல் பாதம் முழுவதும் பஞ்சாக்னி-வித்-யையில் சொன்ன விஷயங்கள் பற்றி வருகிறது; சாந்தோக்ய உபநிஷத்தில் உள்ள அந்த விஷயங்களை சுருக்கமாக பார்க்கலாம்.

ச்வேதகேது என்பவன், பாஞ்சால அரசனின் சபைக்கு போனான்; அவனை அரசர் ப்ரவாஹணர் என்பவர் ஐந்து கேள்விகள் கேட்டார்.

1. மக்கள் இவ்வுலகிலிருந்து எங்கு போகிறார்கள்? தெரியுமா?
2. எப்படி (இவ்வுலகுக்கு) திரும்பி வருகிறார்கள்? தெரியுமா?
3. தேவயான மார்க்கம், பித்ருயான மார்க்கம் எனும் இரண்டின் வித்-யாசம் தெரியுமா?
4. யாரால் அந்த ஸ்வர்க்க உலகம் அடையப் படுவதில்லை? தெரியுமா?
5. ஐந்தாவது ஆஹுதியில் ஜலமானது எப்படி புருஷன் என்று சொல்லத் தக்கதாக ஆகிறது? தெரியுமா?

ஒவ்வொரு கேள்வி கேட்கும்போதும், 'தெரியாது' என்று அவன் பதில் சொன்னான்.

பிறகு தன் தந்தையிடம் போய் சபையில் நடந்ததைச் சொன்னான்; தான் அவமானப் பட்டதைச் சொன்னான்; ஆனால், அவருக்கும் இந்த கேள்-விகளுக்கு பதில் தெரியவில்லை; எனவே, அவரே ராஜ-சபைக்கு வந்து இவற்றின் பதில்களை மெதுவாக கேட்டு அறிந்தார்.

அவருக்கு ஒவ்வொரு கேள்வியாக அரசன் தானே பதில்-விளக்கம் அளித்தான்.

மரணத்துக்கு பின் இவ்வுலகிலிருந்து போகும் மக்கள் மூன்று விதம் -

1. ப்ரஹ்ம-உபாஸனம் செய்பவர்,அர்ச்சிராதி வழியில் சென்று ப்ரஹ்-மத்தை அடைவர்; அர்ச்சிராதி மார்க்கம்தான் தேவயான மார்க்கம் ஆகும். அவர்கள்மறுபிறவி பெற மாட்டார்.
2. ப்ரஹ்ம-உபாஸனம் செய்யாமல், புண்யங்கள் செய்பவர், தூமாதி மார்க்-கத்தில் (பித்ருயானத்தில்)ஸ்வர்க்கம் செல்வர்; அங்கு பலனை அனுப-வித்துவிட்டு, மறுபிறவி எடுப்பர்; அப்போது பஞ்சாஹுதி முறையில் அடுத்த சரீரம் கிடைக்கும்.

3. இரண்டும் செய்யாமல், வெறும் பாபம் மட்டும்செய்பவர், ஸ்வர்க்க லோகம் போக மாட்டார்; இங்கேயே அடுத்தடுத்த பிறவிகளில் புழு பூச்சிகளாக பிறப்பர்; இவர்களுக்கு பஞ்சாஹுதி முறை கிடையாது; அல்ப வாழ்வு வாழ்ந்து, அநேக பிறவிகள் எடுத்து அல்லல் உறுவர்.

ஜீவன், மரணத்தில், இந்த சரீரத்தை விட்டு ஸ்வர்க்க லோகத்துக்காக வெளியேறும்போது, கூடவே, ஸூக்ஷ்மமான பஞ்சபூதங்கள் போகின்றன; அந்த பஞ்சபூதங்கள்தாம், பின்னர், அடுத்த பிறவியில், ஒரு உடலாக மாறு-கின்றன.

அந்த முறைதான் பஞ்சாஹுதி முறையாகும் -

1. ஜீவன் இங்கிருந்து போகும்போது, ஸூக்ஷ்மமான பஞ்ச பூதங்களுடன் போகிறான்; அவை இந்த்ரியங்கள் மற்றும் ப்ராணன்களால் ஸ்வர்க்க-உலகில் இடப்படும்; அங்கு அவை ஸ்வர்க்க-சுக-அனுபவம் பெறு-வதற்கு ஏற்ப அம்ருதமயமான சரீரம் ஆக ஆகின்றன.
2. ஸ்வர்க்க-உலகில் போகம் அனுபவித்தபின், அந்த சரீரமானது, த்ரவ-மாக மாறி, மேகமண்டலத்தில் விழுந்து, பின்னர் மழையாக ஆகிறது.
3. மழையானது, மண்ணில் விழுந்து, நெல் முதலிய உணவுப் பொரு-ளாக ஆகிறது.
4. அந்த உணவை ஆண் சாப்பிட, அது விந்துவாக ஆகிறது.
5. அந்த விந்துவினை பெண்ணிடம் சேர்க்க, அவளுடைய கர்ப்பமாக ஆகிறது

இப்படியாக இந்த பஞ்சபூதங்களுடன் கூடிய ஜீவனை வரிசையாக ஐந்து இடங்களில் இந்த்ரியங்களும் ப்ராணன்களும் இடுகின்றன; இதனை வேதம் சொல்லும் போது, ஒரு உருவாக கற்பனையாக சொல்கிறது; ஐந்து அக்னிகளில் ஐந்து ஹோமங்களாக இதனை இடுகின்றன என்று சொல்கி-றது; எனவே, இந்த வித்யைக்கு பஞ்சாக்னி வித்யை என்று பெயர்.

இதையெல்லாம் வேதம் விளக்குவதை இப்போது பார்க்கலாம்.

**ஐந்தாவது கேள்விக்கு பதில் விளக்கம் -**

**ஸூக்ஷ்மமான பஞ்சபூதங்கள், புருஷன் என்று சொல்லும்படியாக மறுபிறவி எடுக்கும் முறையில் ஐந்து ஆஹுதிகள் -**

1. ஸ்வர்க்க-உலகம் எனும் அக்னியில் தேவர்கள் ச்ரத்தையை ஹோமம் செய்கின்றனர்; அந்த ஆஹுதியிலிருந்து ஸோம-ராஜன் உண்டாகிறான்.

(தேவர்கள்- இந்த்ரியங்கள் அல்லது ப்ராணவாயுக்கள் என்று அர்த்தம்.

ச்ரத்தையை - ஜலத்தை என்று அர்த்தம்; இது பஞ்சபூதங்களையும் குறிக்கும்.

ஸோமராஜன் - ஸ்வர்க்க உலகில் போகம் அனுபவிக்க ஏற்றதான இனிமையான சரீரத்தை உடையவனாக ஆகிறான் என்று அர்த்தம்.)

2. அந்த சரீரத்தை பர்ஜன்யன் (மழை-தேவன்) எனும் அக்னியில் அதே தேவர்கள் இடுகின்றனர்; அங்கு இடப்பட்ட அது மழை ஆகிறது.

3. அந்த மழையை பூமி என்னும் அக்னியில் இடுகின்றனர்; அது உண-வாக ஆகிறது

4. அந்த உணவை ஆண் என்னும் அக்னியில் இடுகின்றனர்; அது ரேதஸ்-ஸாக ஆகிறது.

5. அந்த ரேதஸ்ஸினை பெண் என்னும் அக்னியில் இடுகின்றனர்; அது கர்ப்பமாக ஆகிறது.

இப்படியாக முதலில் சொன்ன ஜலமானது, ஐந்தாவது ஆஹுதியில் (ஹோமத்தில்) 'புருஷன்' என்று சொல்லும்படியாக ஆகிறது.

(ஜீவன் இறந்தபின், ஸூக்ஷ்மமான பஞ்ச-பூதங்களுடன் ஸ்வர்க்க-உல-கம் போகிறான்; பின்னர், அவனே அங்கு நல்ல ஒரு சரீரம் எடுப்பதால், ஸோமராஜன் என்னும்படி ஆகிறான்; பின்னர், வரிசையாக, மழையாக ஆகி, உணவாக ஆகி, ரேதஸ்ஸாக ஆகி, இறுதியில் கர்ப்பமாக ஆகிறான். அந்தந்த பொருட்களுடன் ஜீவன் கூடவே பயணிக்கிறான்; அந்த பொருள்-களுடன் மிக நெருக்கமாக ஒட்டி இருக்கிறான்; அதனால், அந்தந்த பொரு-ள்களாகவே ஜீவன் ஆகிறான் என்று சொல்கிறது).

**மூன்றாம் கேள்விக்கும் முதல் கேள்விக்கும் பதில் விளக்கம் -**

**தேவயான-பித்ருயான வழிகள் - இங்கிருந்து போகும் முறை**

தொடர்ந்து உபநிஷத் சொல்கிறது - ''யார் ஜீவாத்மாவை இப்படி பஞ்-சாக்னி-வித்யையில் சொல்லப்பட்டபடி ஐந்து உருவினனாக உபாஸனம் செய்கிறாரோ, மற்றும் யார் காட்டில் ச்ரத்தையை முன்னிட்டு தபஸ்ஸினை (ப்ரஹ்மத்தை) உபாஸனம் செய்கின்றனரோ, அவர்கள் அர்சிர்தேவனை அடைவர்; அர்சிர்தேவனிடமிருந்து அஹஸ்ஸினை, அஹஸ்ஸிலிருந்து சுக்-லபக்ஷத்தை, சுக்லபக்ஷத்திலிருந்து உத்தராயணத்தை, உத்தராயணத்திலிருந்து ஸம்வத்ஸரத்தை, ஸம்வத்ஸரத்திலிருந்து ஆதித்யனை; ஆதித்யனிடமிருந்து

சந்த்ரனை; சந்த்ரனிடமிருந்து வித்யுத்-புருஷனை அடைவர்; அந்த வித்யுத்-புருஷன் அமானவன் (ஸம்ஸாரி அல்ல); அவன் இவர்களை ப்ரஹ்ம-லோகம் அடைவிக்கிறான்; இதுதான் தேவயான-வழி ஆகும். (விளக்கம் 4-3 பாதத்தில்)

யார் (காட்டுக்கு போகாமல்) ஊரில் இருந்துகொண்டே யாகம், பூர்த்தம் (பொதுத்தொண்டு), தானம் ஆகியவற்றை (புண்யசெயல்களை) செய்கிறார்-களோ, அவர்கள், தூமத்தை (புகை-தேவனை) அடைகின்றனர்; தூமத்திலி-ருந்து இரவினை; இரவிலிருந்து க்ருஷ்ணபக்ஷத்தை; க்ருஷ்ணபக்ஷத்திலி-ருந்து தக்ஷிணாயனத்தை அடைகின்றனர்; இவர்கள் ஸம்வத்ஸரத்தை அடை-வதில்லை; தக்ஷிணாயனத்திலிருந்து பித்ருலோகத்தை; பித்ருலோகத்திலி-ருந்து ஆகாசத்தை; ஆகாசத்திலிருந்து சந்த்ரனை அடைவர்; இவன் ஸோம-ராஜன் ஆகிறான் (நல்ல போகத்துக்குரிய சரீரம் எடுக்கிறான்); அவன் தேவர்-களின் உணவு ஆகிறான்; அவனை தேவர்கள் உண்கின்றனர். (விளக்கம் - 3-1-7 ஸூத்ரத்தில்)

**இரண்டாம் கேள்விக்கு பதில் - திரும்பி வரும் முறை**

அங்கு ஸம்பாதம் (அனுபவிக்க வேண்டிய கர்மம்) தீரும்வரை வசித்-துவிட்டு, பின்னர், எஞ்சிய கர்மங்களுடன் இந்த வழியிலேயே திரும்பி வருகின்றனர்; (ஏறினபோது) சென்ற முறையில் (சந்த்ரனிலிருந்து) ஆகாசத்தை; ஆகாசத்திலிருந்து வாயுவை; வாயுவாக ஆனபின், தூமம் ஆகிறான்; தூமமாக ஆனபின் அப்ரம் (நீருண்ட மேகம்) ஆகிறான்; அப்ரமாக ஆனபின், (மழை பொழியும்) மேகமாக ஆகிறான்; மேகமாக ஆனபின், மழையாகிறான்; இங்கு நெல்-யவங்கள், ஓஷதி-மரங்கள், எள்-உளுந்துகள் என்றிப்படி பிறக்கிறான்; இந்த நிலையிலிருந்து கஷ்டப்பட்டு (அதிக காலம் கழித்து) வெளிவருதல் ஆகும்; பிறகு யார் உணவு உண்கிறானோ, யார் ரேதஸ் சேர்த்து நனைக்கிறானோ, அப்படி ஆகிறான்.

(அதிகரணங்கள் 3-1-2 முதல் 3-1-6 வரை இதன் விளக்கமே.)

அவர்களில் யார் திரும்பி வருபவர்களாக எப்போது நல்ல புண்யகர்-மங்களை உடையவரோ, அப்போது அவர் நல்ல கருவை - ப்ராஹ்மணபிறப்-பையோ, க்ஷத்ரியபிறப்பையோ, வைச்யபிறப்பையோ அடைவர்.

யார் திரும்பி வருபவர்களாக எப்போது மோசமான கர்மங்கள் உடைய-வர்களோ, அப்போது அவர்கள் மோசமான கருவை - நாய்ப்பிறப்பையோ, பன்றிப் பிறப்பையோ, சண்டாளப் பிறப்பையோ அடைவர். (ஜீவர்கள் அவ்வப்போது கர்மத்துக்கு ஏற்ற பிறவி எடுப்பர்).

**நான்காம் கேள்விக்கு பதில் - ஸ்வர்க்க லோகம் அடையாதவர்கள்**

அடுத்து, யார் இந்த தேவயானம், பித்ருயானம் எனும் இரு வழிகளிலும் போகவில்லையோ, அவர்கள் (வித்யையும் புண்யகர்மமும் செய்யாதவர்கள்) அடிக்கடி பிறக்கும் நீச ஜந்துக்களாக மீண்டும் மீண்டும் பிறப்பதும் இறப்பதுமாக ஆகின்றனர்; இது மூன்றாவது வகுப்பு; இதனால், (இதில் உள்ளவரால்) ஸ்வர்க்க-உலகம் அடையப் படுவதில்லை. *(அதிகரணம் 3-1-3)*

**முடிவுரை - வைராக்யபாதத்தின் விஷயம்**

ஸம்ஸாரிகளின் கதி இப்படியெல்லாம் இருப்பதால், ஸம்ஸாரத்தில் வெறுப்பு கொள்ளுக. (வைராக்யம் பெறுக); அதையே இந்த வைராக்ய-பாதம் உணர்த்துகிறது.

★★★★★★★★★★★★★★★

# 2.ஆசாரம் - அனுஷ்டானம்

*(3-2-1 - க்ருதாத்யயாதிகரணம்)*

ஆசாரம், அனுஷ்டானம் என இரண்டு விஷயங்களை சாஸ்த்ரங்கள் சொல்கின்றன; ஆசாரம் என்பது அனுஷ்டானத்துக்கு தேவையான அடிப்படை தகுதியைக் கொடுப்பது; உதாஹரணமாக ஸ்நானம் முதலியது ஆசாரம் ஆகும்; ஸ்நானம் செய்தபின் செய்ய வேண்டிய திருவாராதனம். பஞ்சமஹாயஜ்ஞம் முதலியவை அனுஷ்டானம் ஆகும்.

ஆசாரத்துக்கு என்று தனியாக பலன் எதுவும் கிடையாது; ஆசாரத்துடன் நாம் செய்யும் அனுஷ்டானத்துக்குதான் பலன் உண்டு; ஆகவே வெறும் ஆசாரத்தை கடைபிடிப்பது பலன் அளிக்காது; ஆசாரம் என்பது அனுஷ்டானத்துக்காகவே ஆகும்.

அதே சமயம் ஆசாரம் இல்லாமல் வெறும் அனுஷ்டானம் மட்டும் செய்யக் கூடாது; அது மோசமான அனுஷ்டானம் ஆகும்; அது பலன் அளிக்காமல் போகலாம். விபரீத பலனும் அளிக்கலாம்.

சாந்தோக்ய-உபநிஷத்தில் ஒரு வாக்யம் - ''நல்ல சரணம் உடையவர்கள் நல்ல பிறவி எடுப்பர்; மோசமான சரணம் உடையவர்கள் தாழ்ந்த பிறவி எடுப்பர்'' என்று சொல்கிறது; இங்கு சரணம் என்றால் கர்ம-அனுஷ்டானம் என்று அர்த்தம்.

இது பற்றிய விசாரம் ஒன்று இந்த அதிகரணத்தில் உள்ளது.

கார்ஷ்ணாஜினி முனிவரின் கருத்து - 'சரணம்' என்றால் ஆசாரம்; 'கர்மம்' என்றால் அனுஷ்டானம்; இப்படி இரண்டுக்கும் வேறுபாடு சொல்ல வேண்டும்; ஏனெனில், தைத்திரீய உபநிஷத்தில்

- முதலில், ''யான்யனவத்யானி கர்மாணி ... (நல்ல கர்மங்கள் செய்ய வேண்டும்)''என்று முதலில் சொல்லிவிட்டு,
- பின்னர்''யான்யஸ்மாகம் ஸுசரிதானி(நல்ல ஆசாரம் செய்ய வேண்டும்)'' என்று தனியாக சொல்கிறது;

ஆகவே, கர்மம் என்பதும் சரிதம் (ஆசாரம்) என்பதும் வெவ்வேறாகும்; கர்மம் என்பது அனுஷ்டானம்; சரணம் என்பது ஆசாரம் ஆகும் என்று தெரிகிறது.

கேள்வி - ''ரமணீயசரணா:'' என்று ஆரம்பிக்கும் ஒரு வாக்யம் சாந்தோக்ய உபநிஷத்தில் உள்ளது; அதில்'நல்ல சரணம் உள்ளவர்கள் நல்ல

பிறவியில் பிறப்பார்; மோசமான சரணம் உடையவர்கள் மோசமான பிறவி எடுப்பார்' என்று சொல்கிறது; இங்கு சரணம் என்றால் 'ஆசாரம்' என்ற அர்த்தம் பொருந்தாது;ஏனெனில், வெறும் ஆசாரம் ஆனது பலன் அளிக்-காது; அது நற்பிறவிக்கோ மோசமான பிறவிக்கோ காரணமாக ஆகாது.

கார்ஷ்ணாஜினிபதில் - உண்மைதான்; பொதுவாக சரணம் என்றால் ஆசாரம் என்று அர்த்தம்; ஆனால், இங்கு இந்த உபநிஷத் வாக்யத்தில், 'சரிதம்(சரணம்) என்றால், ஆசாரத்தை முன்வைத்து செய்யும் கர்ம-அனுஷ்-டானம் என்று அர்த்தம்; இதுநேர் அர்த்தம் அல்ல; லக்ஷணையால் கிடைக்-கும் அர்த்தம் ஆகும்.

பாதரி முனிவரின் கருத்து - 'சரணம்' என்றாலும், 'கர்மம்' என்றாலும், இரண்டுக்கும் பொதுவாக கர்ம-அனுஷ்டானம் என்றுதான் அர்த்தம்; எடுத்துக்காட்டாக உலக வழக்கில் உள்ள சில வாக்யங்கள் -

- புண்யம் ஆசரதி- (புண்யசெயலைச் செய்கிறான்).
- பாபம் ஆசரதி - (பாப செயலைச் செய்கிறான்)
- நித்யகர்ம ஆசரதி - (நித்யகர்ம அனுஷ்டானம் செய்கிறான்)

கேள்வி - அப்படியானால், தைத்திரீய உபநிஷத்தில் 'கர்மாணி' என்றும் 'சரிதானி' என்றும் பிரித்து சொன்னது எதற்கு?

பதில் - பொதுவாக இரண்டுக்கும் கர்ம-அனுஷ்டானம் என்றுதான் அர்த்தம்; இந்ததைத்திரீயவாக்யத்தில் பிரித்து சொல்லி இருப்பதால் பிரித்து அர்த்தம் வைத்துக் கொள்ள வேண்டும்; இங்கே, 'கர்மாணி' என்றால் லௌகிக செயல்கள் என்று அர்த்தம்; (ஸு)சரிதானி' என்றால் வைதிக-செயல் அனுஷ்-டானம் என்று அர்த்தம்.

ஆகவே, சாந்தோக்ய உபநிஷத்தில், ''நல்ல சரணம் உடையவர் நற்பிறவி எடுப்பர்'' என்று சொல்லும்போது 'சரணம்' என்றால், 'கர்ம-அனுஷ்டானம் என்றுதான் அர்த்தம்.

கார்ஷ்ணாஜினி பாதரி ஆகிய இருவருக்கும் உள்ள கருத்து ஒற்றுமைகள் -

- ஆசாரம், அனுஷ்டானம் ஆகிய இரண்டும் வெவ்வேறு.
- வெறும் ஆசாரம் பலன் அளிக்காது.
- சாந்தோக்யத்தில், ''நல்ல சரணம் உடையவர் நற்பிறவி எடுப்பர் ...'' என்று சொல்லும் போது; 'சரணம்' என்னும் சொல்லுக்கு கர்ம-அனுஷ்-டானம் என்று அர்த்தம்.

கார்ஷ்ணாஜினி பாதரி ஆகிய இருவருக்கும் உள்ள கருத்து வேறுபாடு -

- 'கார்ஷ்ணாஜினி முனிவரின் கருத்து - சரணம்' என்ற சொல்லுக்கு 'ஆசாரம் என்பது நேர்ப்பொருள்; புண்யபாப-கர்ம-அனுஷ்டானம் என்பது லக்ஷணையால் கிடைக்கும் பொருள்.
- பாதரி முனிவரின் கருத்து - சரணம்' என்ற சொல்லுக்கு புண்யபாப-கர்ம-அனுஷ்டானம் என்பதே நேர்ப் பொருள் ஆகும்.

இதில் பாதரி முனிவரின் கருத்தை ஸ்ரீவ்யாசர் ஸித்தாந்தமாக ஏற்கிறார்.

இங்கு வேறொரு முக்கிய குறிப்பு ஸ்ரீபாஷ்யத்தில் உள்ளது - நாம் செய்யும் ஸந்த்யாவந்தநம் என்பது ஆசாரம் ஆகும்; கர்ம-அனுஷ்டானம் அல்ல; ஸந்த்யாவந்தநம் செய்வதற்கு தனியாக பலன் எதுவும் கிடையாது; அதே சமயம் ஸந்த்யாவந்தநம் செய்தால்தான் மற்ற அனுஷ்டானங்கள் செய்யலாம்; குளிக்காமல்அனுஷ்டானம் செய்யக் கூடாது என்பதுபோல, ஸந்த்யாவந்தநம் செய்யாமல் எந்த அனுஷ்டானமும் செய்யக் கூடாது.

★★★★★★★★★★★★★★★★★★★★

# 3.யாகத்தில் அஹிம்ஸா

*(3-1-6 அன்யாதிஷ்டிதாதிகரணம்)*

ஸோமயாகத்தில், 'அக்னீஷோமீயம்' என்று ஒரு க்ரது (யாகம்) உள்ளடங்கியது; ''அக்னீஷோமீயம் பசும் ஆலபேத'' என்று வேதம் விதிக்கிறது; ''அக்னி-ஸோமன் ஆகிய இரு தேவர்களுக்காக ஒரு மிருகத்தை அர்ப்பணம் செய்யவும்'' என்று அர்த்தம். வேத-விதியை மாறாமல் செய்ய வேண்டும்; எனவே, ஒரு ஆடு எனும் மிருகத்தை வேதம் சொல்லும் முறைப்படி கொன்று, அதன் வபை எனும் பாகத்தை அக்னியில் ஹோமம் செய்து, இந்த யாகம் செய்வர்.

இதில் ஒரு கேள்வி - ''ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதானி'' என்று ஒரு பொது விதி இருக்கிறது; ''எந்த உயிரினத்தையும் துன்புறுத்தக் கூடாது'' என்று அர்த்தம்; ஆனால், அக்னீஷோமீய-யாகத்தில் ஒரு மிருகத்தை ஹிம்ஸா செய்ய வேண்டும் என்று சொல்கிறது; இரண்டு வேத-விதிகளுக்கும் முரண்பாடு வருகிறது; இதில் எது சரியாகும்?

பதில் - பல விதமான பதில்களை சாஸ்த்ரத்தில் சொல்கின்றனர்; ஒவ்வொன்றாக பார்ப்போம்.

1. உத்ஸர்க-அபவாத-ந்யாயம்.
2. க்ரத்வர்த்தம், புருஷார்த்தம் எனும் வித்யாசம்.
3. யாகத்திலும் ஹிம்ஸா உள்ளதால் பாபம் உண்டு எனும் கருத்து.
4. யாகத்தில் ஹிம்ஸா இல்லை எனும் ஸித்தாந்த-கருத்து.

**உத்ஸர்க-அபவாத-ந்யாயம் (மீமாம்ஸா மதம்)**

உத்ஸர்கம் என்றால் பொதுவாக சொன்ன விஷயம்; அபவாதம் என்றால், அதில் விலக்கம்; இது இரண்டும் முரண்பட்டு வரும்போது அபவாத-விஷயம் தவிர மீதி விஷயத்தில் உத்ஸர்கம் செல்லும்; இதற்கு உத்ஸர்க-அபவாத-ந்யாயம் என்று பெயர்.

(உ.ம்) ''எப்போதும் ஸ்தோத்ரங்கள் சொல்லலாம் என்பது உத்ஸர்கம்; ''மஹாப்ரதோஷத்தில் சொல்லக் கூடாது'' என்பது அபவாதம்; இரண்டுக்கும் முரண்பாடு வருகிறது; அப்போது, அபவாத-விஷயத்தைத் தவிர மீதி விஷயத்தில் உத்ஸர்கம் செல்லும் என்பது முறை; அதாவது, மஹாப்ரதோஷம் தவிர மீதி சமயத்தில் எப்போதும் ஸ்தோத்ரங்கள் சொல்லலாம் என்று அர்த்தம்.

மீமாம்ஸாவில் பத-ஆஹவநீய ந்யாயம் என்றும் சொல்வர்; அதாவது பொதுவாக எல்லா ஹோமத்தையும் ஆஹவநீய-அக்னியில் செய்ய வேண்டும் என்று விதி உள்ளது; ஆனால், ஸோமக்ரயணத்தில் பதஹோமம் சொல்கிறது; குதிரையின் ஏழாவது அடிவைப்பு நடக்கும் இடத்தில் தரையில் ஒரு ஹோமம் செய்ய வேண்டும் என்கிறது; அப்போது, முரண்பாடு தோன்றுகிறது; அதற்கு பரிஹாரம்தான் இந்த ந்யாயம்; இதன்படி, இந்த பத-ஹோமம் தவிர மீதி எல்லா ஹோமமும் ஆஹவனீய-அக்னியில் செய்ய வேண்டும் என்று கருத்து; அதனால், முரண்பாடு இல்லை.

இங்கும் அதே முறை சொல்ல வரும்; ''எந்த உயிரினத்தையும் துன்புறுத்தக் கூடாது'' என்பது பொதுவான விதி; ''யாகத்தில் மிருகத்தை கொடுக்க வேண்டும்'' என்பது, அதற்கு விலக்கான அபவாத-விதி; எனவே இரண்டையும் சேர்த்து அர்த்தம் சொல்ல வேண்டும்; யாகத்தில் செய்யும் மிருக ஹிம்ஸா தவிர வேறு எந்த துன்புறுத்தலும் செய்யக் கூடாது'' என்று அர்த்தம்.

முரண்பாடுக்கு இதுவே பரிஹாரம் ஆகும் என்று மீமாம்ஸாமதத்தில் சிலர் சொல்கின்றனர்.

ஆனால், இதில் ஒரு ஆராய்ச்சி - உத்ஸர்க்கமும் அபவாதமும் ஒரே விஷயத்தைப் பற்றியதாக இருந்தால்தான் முரண்பாடு வரும்; வெவ்வேறு விஷயத்தைப் பற்றியதாக இருந்தால் முரண்பாடு வராது; (உ.ம்) ''புகை இதயத்துக்கு கெடுதலானது'' என்று ஒரு வாக்யம்; ''கொசுத் தொல்லை போக கொசுவர்த்தி-புகை உதவும்'' என்று ஒரு வாக்யம்; இரண்டுக்கும் முரண்பாடு இல்லை; ஏனெனில், இரண்டும் வெவ்வேறு விஷயம் பற்றியது; ஒன்று புகையின் தீமையைச் சொல்கிறது; மற்றொன்று புகையின் நன்மையைச் சொல்லவில்லை; மாறாக கொசுத்தொல்லை போகும் வழியைச் சொல்கிறது; அந்த வழி நல்லதா கெட்டதா என்பதை அந்த வாக்யம் சொல்லவில்லை; எனவே, முரண்பாடு இல்லை.

அதுபோல இங்கு முரண்பாடு இல்லை -

- ''எந்த உயிரினத்தையும் துன்புறுத்தக் கூடாது'' என்று வேதம் சொல்கிறது; ஹிம்ஸா செய்தால் பாபம் வரும் என்பது இதன் அர்த்தம்; இது ஹிம்ஸாவின் தீமையைப் பற்றி சொல்வது.
- ''அக்னீஷோம தேவர்களுக்கு யாகத்தில் ஹிம்ஸா செய்ய வேண்டும்'' என்று வேறொரு வாக்யம் சொல்கிறது; இது ஹிம்ஸாவைப் பற்றி

சொல்லவில்லை; ''ஹிம்ஸா செய்தால் பாபம் வராது'' என்று இது சொல்லவில்லை; யாகத்தைப் பற்றிச் சொல்கிறது; ஹிம்ஸா செய்தால்தான் அந்த யாகம் நிறைவேறும் என்று சொல்கிறது; அந்த ஹிம்ஸா செய்வது பாபமா இல்லையா என்பதை சொல்லவில்லை.

எனவே, வேறு விஷயமாவதால், இதற்கும் அதற்கும் முரண்பாடு வராது.

முரண்பாடு இருந்தால்தான் உத்ஸர்க்க-அபவாத முறையில் பரிஹாரம் வரும்; இங்கு முரண்பாடு இல்லாததால், இந்த பரிஹாரம் வராது! எனவே, யாகத்தில் மிருக-ஹிம்ஸா இருக்கிறது; எல்லா ஹிம்ஸாவுக்கும் பாபம் உண்டு; எனவே, யாகத்திலும் பாபம் கலந்துள்ளது என்று ஆகும்.

எனவே, இந்த விளக்கம் சரியில்லை.

**க்ரத்வர்த்தம் - புருஷார்த்தம் (ப்ரபாகர குரு மதம்)**

இது வேறொரு பரிஹாரம் - க்ரத்வர்த்தம் என்றால், யாகத்தின் பொருட்டு செய்வது; புருஷார்த்தம் என்றால் மனிதன் தனக்காக செய்துகொள்வது; இதில் யாகத்தின் பொருட்டு ஹிம்ஸா செய்வது தவறில்லை; ஆனால், மனிதன் தனக்காக பிறரை ஹிம்ஸா செய்வது தவறு.

''எந்த உயிரினத்தையும் துன்புறுத்தக் கூடாது'' என்று வேதம் சொல்கி-றது; அதே வேதமே, அக்னிஷோமீய-யாகத்தில் மிருக-ஹிம்ஸா செய்ய வேண்டும் என்பதை விதிக்கிறது; அதனால், அதை மனிதன் தானாக விரும்பி செய்யவில்லை; தனக்காக செய்யவில்லை; யாகத்தின் பொருட்டுதான் செய்கிறான். அதில் தவறில்லை.

ஒருவன், தன் விருப்பப்படி தனக்காக (உணவுக்காகவோ, வேறு எதற்-காகவோ) ஹிம்ஸா செய்தால், அது புருஷார்த்தம் ஆகும்; அதை செய்யக் கூடாது; ஏனெனில் யாரையும் ஹிம்ஸா செய்யக்கூடாது என பொதுவாக சொல்லியுள்ளது; ஆனால், வேதமே விதித்தபடி யாகம் நடப்பதற்காக ஒரு ஹிம்ஸா செய்தால், தவறில்லை; ஏனென்றால், வேதமே செய்ய சொல்கிற-படியால்.

'ஹிம்ஸா' என்று சொன்னால், உடனே, மனிதன் தானாக தனக்காக செய்யும் ஹிம்ஸாதான் நினைவுக்கு வரும்; அந்த ஹிம்ஸா செய்யக் கூடாது என்பதுதான், ''எந்த உயிரினத்தையும் ஹிம்ஸா செய்யக் கூடாது'' என்று சொன்னதன் அர்த்தம் ஆகும் என்று பரிஹாரம்.

இந்த பரிகாரமும் சரியில்லை; ஏனெனில், மனிதன் யாகம் செய்வது கூட, தன் பலனுக்காகத்தானே செய்கிறான்! யாகம் செய்தால், தனக்கு ஸ்வர்க்கம் கிட்டும் என்று வேதம் சொல்வதால்தானே யாகம் செய்கிறான்! எனவே அதுவும் தன் பலனுக்காக செய்வதால், புருஷார்த்தம் ஆகும்; அப்படியான யாகத்தில் உள்ள ஹிம்ஸாவும் புருஷார்த்தம்தான்! எனவே, தன் பலனுக்காக வேறொரு ஜீவனை ஹிம்ஸா செய்வது கூடாது! செய்தால் பாபம் வரும்.

**ஸாங்க்யமதம்**

ஸாங்க்ய மதத்தின்படி யாகத்தில் ஹிம்ஸா கலந்துள்ளது; அது தோஷ-ம்தான்! யாகத்தால் பெரும்புண்யம் உண்டாகும் அதே சமயத்தில் இந்த தோஷத்தால் சிறிது பாபமும் உண்டாகும்; புண்யத்தின் பலனை ஸ்வர்க்-கத்தில் நீண்டநாள் அனுபவிப்பான்; பாபத்தின் பலனாக மறுபிறவி எடுக்-கும்போது, நெல் முதலிய தாவரங்களாக ஆவான்; பின்னர், அந்த நெல்-அரிசி முதலியதிலிருந்து கர்ப்பமாக பிறப்பான் என்பது பஞ்சாக்னி-வித்-யையில் சொல்லப் பட்டது.

இந்த கருத்தை வைதிகர்கள் ஏற்பதில்லை.

**ஸித்தாந்தம்**

யாகத்தில் ஹிம்ஸா என்பது கிடையாது.

முதலில் ஹிம்ஸா என்றால் என்ன?

- கொலை செய்வதுதான் ஹிம்ஸா என்பது கிடையாது; வலி வரும்படி அடித்து குத்தினால் அதுவும் ஹிம்ஸாதானே!
- பிறருக்கு வலியைக் கொடுப்பது ஹிம்ஸா என்று சொல்லலாமோ? அப்படியானால், ரண-சிகிச்சை செய்யும் மருத்துவர் கூட ஊசி, ஆப-ரேஷன் மூலம் துன்பம் கொடுக்கிறார் என்பதால், ஹிம்ஸா செய்கிறார் என்று சொல்வோமோ? சொல்ல மாட்டோம்; மருத்துவர் தாற்காலி-கமாக சிறிது கஷ்டம் கொடுத்தாலும், அது உண்மையில் பெரும் நல-னுக்கே ஆகிறது; உயிரைப் பிழைக்க வைக்கிறார்! எனவே, அது ஹிம்ஸா அல்ல என்கிறோம்; மருத்துவர் மிகவும் நல்லவர் என்கிறோம்.
- எனவே, தாற்காலிகமாக வரும் துக்கத்தை வைத்து ஹிம்ஸா என்று சொல்லக் கூடாது; முடிவில் பெரும் துக்கத்தை அளிக்கக் கூடியதுதான் ஹிம்ஸா ஆகும்.

யாகத்தில் மிருகத்துக்கு செய்யப்படும் துக்கமானது தாற்காலிகம் ஆனதுதான்; பின்னர் அந்த மிருகமே ஸ்வர்க்க-பலனை பெறப் போகிறது என வேதம் சொல்கிறது; எனவே, வேத-சாஸ்த்ரத்தின்படி பெரும் பலனான ஸ்வர்க்க-சுகம் என்பது வரப் போகிறது என்பதால், இது ஹிம்ஸா அல்ல.

யாகத்தில் உபயோகப் படும் மிருகம் ஆனது ஸ்வர்க்கத்தை அடையும் என்பதை வேதமே சொல்கிறது; ''உன்னை நான் ஹிம்ஸா செய்யப் போவ-தில்லை; தேவர்களிடம் சேர்க்கப் போகிறேன்'' என்கிறது. உண்மையில், யாகம் முதலிய புண்ய-கர்மங்கள் செய்து மனிதன் பெற வேண்டிய ஸ்வர்க்-கத்தை ஒன்றும் செய்யாமலே அந்த மிருகம் பெற முடிகிறது! இல்லாவிட்-டால், மிருகங்களுக்கு ஸ்வர்க்கம் போகும் வாய்ப்பே கிடையாது;

மிருகங்களுக்கு புண்யகர்மம் என்று ஒன்று கிடையாது; அப்படியிருக்க ஒரு மிருகமானது, ஸ்வர்க்கம் போகிறது என்பது ஆச்சர்யம்! யாகம் செய்த மனிதன் ஸ்வர்க்க-பலனைப் பெறுவதற்கு முன் அதற்கு அந்த பலன் கிடைக்-கிறது! இது, அந்த மிருக-பிறப்பைப் பொறுத்தவரை பெரும் பலன்தான்!

உலகரீதியில் ஒரு ஆராய்ச்சி - அக்னிஷோமீய யாகத்தில் உபயோகப் படும் அந்த மிருகம் ஆடுதான்! ஒரே ஒரு ஆடுதான்! (இரண்டு ஆடுகள் கொடுத்தால் மஹாபாபம் என்கிறது) ஆடு என்பதே மனிதனால் கொல்லப்-படும் மிருகம்தான்! ஆடு வளர்ப்பவர்கள் எதற்காக வளர்க்கிறார்கள்? அது என்ன செல்ல பிராணியா? அல்லது பசு போல பால் தருமா? அல்லது நாய் போல சேவகம் செய்யுமா? ஒன்றும் கிடையாது; ஆடு வளர்ப்பவர்களுக்கு ஒரே குறிக்கோள்தான்! அந்த ஆட்டைக் கொன்று தின்ன வேண்டும் என்பதுதான்! இதை மனிதன் செய்யாமல் விட மாட்டான்! எந்த ஆடும் இயற்கையாக இறந்ததாக வரலாறே கிடையாது; இயற்கையாக சாக விட மாட்டான்; அப்படி மனிதனால் உணவுக்காக கொல்லப்படும் பல்லாயிரக் கணக்கான ஆடுகளில், ஒன்றை தேவர்களின் உணவுக்காக படைத்தால், அது ஸ்வர்க்கம் போகும்! இல்லாவிட்டால் இங்கேயே மனிதனால் கொல்-லப்பட்டு சாகும்! அதற்கு வேறு கதி இல்லை; யாகத்தில் அதை உபயோகப் படுத்தாவிட்டால், அது முழு வாழ்வு வாழும் என்பது கிடையாது! அதை வாழ விட மாட்டான் மனிதன்!

எப்படியானாலும் ஆடு கொல்லப்பட்டு உணவாக ஆகப் போவதுதான்! இது படைப்பின் நியதி! இதனைத் தவிர்க்க முடியாது; இப்படி இருக்க ஒரு மனிதனுக்கு உணவாகி மாய்ந்து போவதை விட தேவர்களுக்கு

உணவாகி ஸ்வர்க்க-வாழ்வு பெறுவது எவ்வளவோ மேல்! இதைத்தான் வேதம் சொல்கிறது.

எனவே, யாகத்தில் மிருக-ஹிம்ஸா என்பது கிடையாது; மிருக-நன்மை என்பதே உண்டு; அதனால்தான் யாகத்துக்கு அத்வரம் என்று பெயர்; அத்-வரம் என்றால், ஹிம்ஸா இல்லாதது என்று அர்த்தம்; அதாவது ஆடானது வேறு விதத்தில் கொல்லப் பட்டால் ஹிம்ஸா ஆகும்! யாகத்தில் கொல்லப் பட்டால் ஹிம்ஸா அல்ல என்று கருத்து; யாகத்தில் எந்த விதத்திலும் எந்த ஹிம்ஸாவும் கூடாது என்பதில் வேதம் மிகக் கவனம் செலுத்துகிறது! யாக மந்த்ரங்களில் பல இடங்களில் இது புரியும்.

ஸ்ரீஉபநிஷத் பாஷ்யகாரர் பாவப்ரகாசிகா வ்யாக்யானத்தில் உத்ஸர்க-அபவாத முறையில் சொன்ன பரிஹாரமும் ஆகலாம் என்பதை ஸ்தாபித்து விரிவாக அருளியுள்ளார்.

★★★★★★★★★★★★★★★★★★★★

# 4.உபஸம்ஹாரம் - விகல்பம்

*(3-3 குணோபஸம்ஹார பாதம்)*

*(3-3-1 ஸர்வவேதாந்த ப்ரத்யயாதிகரணம்)*

ஸ்ரீபாஷ்யத்தில் 3-3 பாதத்தில் வித்யைகளில் குணங்களுக்கு உபஸம்ஹாரமா அல்லது விகல்பமா என்று ஆராய்கிறது; அதற்காக, ஆங்காங்கே சொல்லப்பட்ட வித்யைகள் ஒன்றா வெவ்வேறா என்னும் விசாரம் உள்ளது.

அதற்கு அடிப்படையான சில விஷயங்கள் பூர்வமீமாம்ஸா சாஸ்த்ரத்தில் உள்ளன. அவற்றைப் பற்றி பார்க்கலாம்.

**மீமாம்ஸாவில் கர்மங்கள் வேறாவதை அறிய உதவும் காரணங்கள் -**

வேதத்தில் விதிக்கப்பட்ட யாகம் முதலிய கர்மங்கள் பல உள்ளன; அவை வெவ்வேறானவை என்பதை அறிய உதவும் காரணங்கள் ஆறு உண்டு; அவற்றை கர்ம-பேதக-ப்ரமாணங்கள் என்பர்.

*1.* சப்தாந்தரம் - வேறு வினைச்சொல்

வேறு வினைச்சொல் (தாது) இருந்தால், அதில் சொல்லப்படும் கர்மம் வேறாகும். (உ.ம்) 'யஜதி' என்றால், யாகம் செய் என்று அர்த்தம்; 'ஜுஹோதி' என்றால், ஹோமம் செய் என்று அர்த்தம்; 'ததாதி' என்றால், தானம் செய் என்று அர்த்தம்; இப்படி வினைச் சொல் வேறாக இருப்பதால், யாகம், ஹோமம், தானம் ஆகியவை வெவ்வேறாகும்.

*2.* அப்யாஸ: - (மாறாமல் மீண்டும் சொல்லுதல்)

ஒரே வாக்யத்தை அர்த்தம் மாறாமல் அப்படியே மீண்டும் சொன்னால், அப்போது வேறொரு கர்மம் சொல்லப் படுவதைக் ஆகும்; (உ.ம்) 'ஸமிதோ யஜதி', 'தநூநபாதம் யஜதி' முதலியதாக ஐந்து வாக்யங்கள் உள்ளன; ஐந்து யாகங்களின் பெயர்களை ஸமித், தநூநபாதம் சொல்கிறது; 'யஜதி' - யாகம் செய்ய வேண்டும் என்பதையே துளியும் வித்யாசம் இல்லாமல், ஐந்து முறை திருப்பித் திருப்பி சொல்கிறது; எனவே ஐந்து யாகங்கள் வெவ்வேறாக செய்ய வேண்டும் என்று அர்த்தம்.

*3.* ஸங்க்யா - எண்ணிக்கை

''திஸ்ர: ஆஹுதீ; ஜுஹோதி'' (மூன்று ஹோமங்கள் செய்ய வேண்டும்)'' என்கிறது; எனவே, இவை மூன்றும் வெவ்வேறான ஹோமங்கள் என தெரிகிறது.

4. ஸம்ஜ்ஞா - பெயர் வேறாதல்.

ஜ்யோதி, விச்வஜ்யோதி, ஸர்வஜ்யோதி என்று வெவ்வேறு பெயரால் யாகங்களை சொல்கிறது; அதனால், அங்கு சொல்லப்படும் யாகங்களும் வெவ்வேறாகும்.

5. குண: - யாகத்தின் ரூபமான த்ரவ்யமும் தேவதையும் வேறாதல்.

யாகம் என்றாலே, ஒரு தேவதையைக் குறித்து ஒரு த்ரவ்ய-பொருளை அர்ப்பணம் செய்வதுதான்; அந்த த்ரவ்ய-பொருளோ, தேவதையே வேறானால், யாகமும் வேறாகும். (உ.ம்) ''வைச்வதேவீ ஆமிக்ஷா, வாஜிப்ய: வாஜினம்'' என்கிறது; விச்வேதேவர்களுக்கு ஆமிக்ஷா என்பதையும், வாஜி-தேவர்களுக்கு வாஜி எனும் பொருளையும் யாகம் செய்யச் சொல்கிறது; இங்கு இரு தேவர்களுக்கு இரு த்ரவ்ய-பொருள் சொல்வதால், இரு யாகங்கள் வெவ்வேறாகும்.

6. ப்ரகரணாந்தரம் - ஆரம்பித்து சொல்லப்பட்டு வரும் இடம் வேறாதல்.

அக்னிஹோத்ரம் என்பது தினமும் செய்ய வேண்டிய அனுஷ்டானம் ஆகும்; குண்டபாயினாம் அயனம் என்று ஒரு ஸத்ரயாகத்தில் ஒரு மாசம் மட்டும் செய்ய வேண்டிய அக்னிஹோத்ரம் ஒன்றைச் சொல்கிறது; இது தினமும் செய்ய வேண்டிய அக்னிஹோத்ரத்தை விட வேறாகும்; ஏனெனில், அந்த ஸத்ரயாகத்தை சொல்லிக் கொண்டு வரும்போது அந்த இடத்தில் சொல்கிறது.

இப்படியாக இவற்றின் மூலம் யாகம் முதலிய கர்மங்கள் வெவ்வேறாவதை அறியலாம்.

இந்த ஆறில், நான்கு விஷயங்கள் எல்லாருக்கும் தெரிந்ததுதான்; 1. வினைச்சொல், 3. எண்ணிக்கை, 4. பெயர், 5. தேவதையும் த்ரவ்யமும் - ஆகியவை வேறானால், கர்மம் வேறாகும் என்பது பொதுவாக எல்லாருக்கும் தெரியும்; இதில் விசாரம் அதிகமாக கிடையாது.

மீதி உள்ள இரண்டில்தான் விசாரம் வர நேரிடும்; அது, 2. அப்யாஸ: - மாறாமல் மீண்டும் சொல்லுதல், 6. ப்ரகரணம் - வேறு இடத்தில் சொல்லுதல் ஆகியவை.

**மீமாம்ஸாவில் கர்மங்கள் ஒன்றாவதை அறிய உதவும் காரணங்கள்**

அப்போது ஒரு கேள்வி வருகிறது - ஒரே யாகத்தையே இரண்டு வேத-

சாகைகளில் சொல்லி இருக்கும்; அங்கே, முன் சொன்ன இரண்டு காரணங்களை வைத்து, யாகங்கள் வெவ்வேறு என்று சொல்லலாமா?

பதில் - சொல்லக் கூடாது; அது ஒரே யாகம்தான். யாகம் முதலியவை ஒன்றுதான் என அறிய உதவும் ப்ரமாணங்கள் சில உள்ளன. அவை நான்கு -

1. ஸம்யோகம் - பலன் ஒன்றாக இருத்தல்.
2. ரூபம் - யாகத்தின் ரூபமான த்ரவ்யமும் தேவதையும் ஒன்றாக இருத்தல்.
3. சோதனா - கட்டளை ஒன்றாக இருத்தல்.
4. ஆக்யா - பெயர் ஒன்றாக இருத்தல்.

இந்த நான்கும் ஒன்றாக இருந்தால் சொல்லப்படும் கர்மம் ஒன்றாகும்; இந்த நான்கில் ஏதாவது ஒன்று வேறானாலும், கர்மம் வேறாகும்; வெவ்வேறு சாகைகளில் ஒரே யாகத்தை சொல்லும்போது இந்த நான்கும் ஒன்றாக இருக்கும்; அதனால், யாகம் ஒன்றே.

கேள்வி - ஒரே யாகத்தை இரு சாகைகளில் வேதம் சொல்வது எதற்காக?

பதில் - இரு சாகையினரும் தெரிந்து கொள்வதற்காக சொல்கிறது; பொதுவாக ஒரு மனிதர் ஒரு சாகையைத்தான் அத்யயனம் செய்வார்; அவரவர் தம்தமது சாகையை அத்யயனம் செய்ய வேண்டும்'' என்றுதான் விதி உள்ளது; ஆகையால், ஒரு சாகையில் சொன்ன விஷயம் மற்ற சாகையினருக்கு தெரிய வாய்ப்பில்லை; அதற்காக அந்தந்த சாகையினரும் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக ஒரே விஷயத்தை பல சாகைகளில் வேதம் சொல்லும்; இதை வைத்து கர்மம் வேறானது என்று சொல்லக் கூடாது.

எப்போது கர்மம் வேறாகும்? - என்றால், ஒரே சாகையிலேயே ஒரே விஷயத்தையே திரும்பிச் சொன்னால், அதை திரும்பிச் செய்ய வேண்டும் என்று அர்த்தம்; அப்போது கர்மம் வேறாகும்.

இப்படியாக கர்மம் வேறாவதற்கான காரணங்கள், மற்றும் கர்மம் ஒன்றாக ஆவதற்கான காரணங்கள் பூர்வமீமாம்ஸாவில் உள்ளன.

**வேதாந்தத்தில் வித்யைகள் வேறா / ஒன்றா என ஆராய்தல் -**

பூர்வமீமாம்ஸாவில் சொன்ன இந்த காரணங்களே இந்த வேதாந்த சாஸ்த்ரத்திலும் ஆகும்; இவற்றை வைத்துக் கொண்டே உபநிஷத்தில் சொன்ன வித்யைகள் (உபாஸனங்கள்) வேறா அல்லது ஒன்றா என தீர்மானித்து அறியலாம்.

அதில் வித்யைகள் வேறாவதை, சப்தாதிபேதாதிகரணம் (*3-3-24*) சொல்கிறது.

வெவ்வேறு சாகைகளில் சொன்ன வித்யைகள் ஒன்றாவதை, ஸர்வ-வேதாந்தப்ரத்யாதிகரணம் (*3-3-1*) சொல்கிறது.

இதிலும் முன் சொன்னமாதிரி, ஒரே வித்யையை வெவ்வேறு சாகை-களில் வேதம் சொல்வது வழக்கம்தான்.

இவற்றில், வித்யைகள் வேறாக ஆவதை அறிவதற்கு முக்கியமாக மூன்று உபயோகப் படும்.

1. சப்தாந்தரம் - (வேறு வினைச்சொல்)

   ''உபாஸீத (உபாஸனம் செய்), என்று உபாஸனத்தை சொல்கிறது; 'யுஞ்ஜீத' (ஆத்மாவை ஒப்படைத்து சேர்த்து விடு) என்று சரணாகதியை சொல்கிறது; இரண்டும் வெவ்வேறு என அறியலாம்.

2. ஸம்ஜ்ஞா - (பெயர் வேறாதல்)

   ஸத்வித்யை, தஹரவித்யை முதலிய பெயர்கள் வேறாவதை வைத்தும் அந்தந்த வித்யை வேறாகும் என அறியலாம்;

3. குண: - உபாஸனத்தின் ரூபமான குணங்கள் வேறாதால்

   சாந்தோக்யத்திலும், தைத்திரீயத்திலும் புருஷவித்யை உள்ளது; ஆனால், சொல்லப்பட்ட குணங்கள் வேறாக உள்ளதால், அந்த வித்யைகள் வேறாகும்.

இந்த மூன்றிலும் கூட முக்கிய காரணம் - குணபேதம் எனப்படும் ரூபபேதம்தான்; வித்யையின் ரூபம் என்பது உபாஸநம் செய்யப்பட வேண்-டிய விஷயமான ப்ரஹ்ம-குணங்கள் ஆகும்; அது வேறானால், வித்யை வேறாகும்.

உபநிஷத்களில் பலவேறு வித்யைகள் உள்ளன; மோக்ஷ-பலனுக்கான வித்யைகள் எல்லாவற்றிலும் ப்ரஹ்மத்தைத்தான் உபாஸனம் செய்ய வேண்-டும்; ஆனாலும், ஒவ்வொரு வித்யையிலும் உபாஸனம் செய்யப்பட வேண்டிய ப்ரஹ்ம-குணங்கள் வெவ்வேறாகும்; அதனால், விஷயம் வேறா-வதால், வித்யை வேறாகும்.

இதுதான் 3-3 இல் செய்யும் விசாரம்; சில வித்யைகளை எடுத்துக்

கொண்டு, அவற்றில் உபாஸனம் செய்யப்படும் ப்ரஹ்ம-குணங்கள் ஒன்றா வேறா என்று விசாரம்;

- ➢ உபாஸன-விஷயமான ப்ரஹ்மகுணங்கள் ஒன்றானால், வித்யை ஒன்றாகும்.
- ➢ உபாஸன-விஷயமான ப்ரஹ்ம-குணங்கள் வேறானால், வித்யை வேறாகும்.

**உபஸம்ஹாரம் - விகல்பம்**

இரு இடங்களில் சொல்லப்படும் வித்யைகள் ஒன்றானால், அப்போது ஒரு இடத்தில் சொல்ல விட்டுப்போன குணங்களை மற்றொரு இடத்திலிருந்து எடுத்து சேர்த்துக் கொண்டு உபாஸனம் செய்யலாம்; இதற்கு குண-உபஸம்ஹாரம் என்று பெயர். குணங்களை சேர்த்துக் கொள்ளுதல் என்று அர்த்தம். (உ.ம்) - காமாத்யதிகரணம் *(3-3-16)*; ஸர்வாபேதாதிகரணம் *(3-3-3)* முதலியவை.

இரு இடங்களில் சொல்லப்படும் வித்யைகள் வேறானால், அப்போது ஒரு இடத்தில் சொன்ன குணங்களை மற்றொரு இடத்திலிருந்து எடுத்து சேர்த்துக் கொள்ளக் கூடாது; அந்தந்த இடத்தில் சொன்ன வித்யையில் அந்தந்த இடத்தில் சொன்ன குணங்களை உபாஸனம் செய்ய வேண்டும்; இதற்கு குண-விகல்பம் என்று பெயர்; வேறான நிலை என்று அர்த்தம்; வேறு வித்யையில் இருப்பதால், இதில் சேர்க்கப்பட முடியாத நிலை என்று கருத்து. (உ.ம்) - அன்யதாத்வாதிகரணம் *(3-3-2)*, புருஷவித்யாதிகரணம் *(3-3-9)* முதலியவை.

★★★★★★★★★★★★★★★★★★★★

# 5.ஸர்வவேதாந்தப்ரத்யயாதிகரணம் (3-3-1)

வேதத்தில் வெவ்வேறு சாகைகளில் சொன்ன யாகங்கள் ஒன்றா வெவ்-வேறா எனதெரிந்து கொள்ள ஒரு வழியை பூர்வமீமாம்ஸா சாஸ்த்ரம் சொல்கிறது - பலன், யாக-ரூபம், விதி, பெயர் ஆகிய நான்கும் ஒன்றாக இருக்குமானால், வெவ்வேறு சாகைகளில் சொல்லப்படும் யாகம் ஒன்று ஆகும்; இவற்றில் ஏதாவது ஒன்று வேறுபடுமானால், சொல்லப்படும் யாக-மும் வேறானது ஆகும்; இவ்வாறுஅந்த சாஸ்த்ரத்தில் சொன்ன அதே முறையை இங்கும் கையாளலாம். வெவ்வேறுசாகைகளில் சொல்லப்படும் உபாஸனங்களில் இந்த நான்கும் ஒன்றாக இருக்குமானால், உபாஸனமும் ஒன்றுதான்.

ஆனால் கர்ம-அனுஷ்டானத்தில் சொன்ன அந்த முறையானது வேதாந்-தத்தில் உபாஸனத்தில் வராது என்று பூர்வபக்ஷம்;வரும் என்பது ஸித்தாந்தம்.

சிரோவ்ரதம் - பூர்வபக்ஷம்(3-3-1-1)

அக்ஷர-ப்ரஹ்ம-வித்யை என்று ஒரு வித்யை ஆனது அதர்வவேதத்-திலும், யஜுர்வேதத்திலும் உள்ளது; அதர்வவேதத்தினருக்கு சிரோவ்ரதம் என்று ஒரு வ்ரதம் உண்டு; தலையில் அக்னி-பாத்ரத்தை வைத்துக்கொள்-ளுதல் தான் சிரோவ்ரதம் ஆகும். இதில் அதர்வண வேதம் ஒரு நியமம் சொல்கிறது - ''சிரோவ்ரதம் செய்பவருக்கு மட்டுமே இந்த ப்ரஹ்மவித்-யையை உபதேசம் செய்க'' என்று; இதனால், அதர்வண வேதத்தினருக்கு மட்டுமே இந்த ப்ரஹ்மவித்யை என்று ஆகிறது; இதனால் அதர்வ வேதத்தில் சொன்ன ப்ரஹ்மவித்யையும் யஜுர்வேதத்தில் சொன்ன ப்ரஹ்ம வித்யையும் வேறானது என்று தெரிகிறது: ஆகையால், பூர்வமீமாம்ஸாவில் சொன்ன முறையில் ஒரே வித்யை என இங்கு சொல்ல முடியாது என்பது தெரிகிறது.

பூர்வமீமாம்ஸா சொன்ன முறையில், இங்கு இரு சாகைகளிலும் வித்யை ஒன்றேயானால், அதர்வவேதத்தில் சொன்ன வித்யையின் அங்கமான சிரோவ்ரதமும் யஜுர்வேதத்தினருக்கும் வந்துவிடும்; அப்படியானால், இரு சாகையினருக்கும் சிரோவ்ரதமும் உண்டு, வித்யையும் உண்டு என்று ஆகி-விடும்; அப்படியானால்,'சிரோவ்ரதம் உள்ளவருக்கு மட்டுமே இந்த வித்-யையை உபதேசிக்க வேண்டும்' என்று நியமம் சொன்னது தேவையற்றதாக ஆகிவிடும்.

எனவே, பூர்வமீமாம்ஸாவில் சொன்னபடியான முறை இங்கு வராது என தெரிகிறது என்று பூர்வபக்ஷம்.இதற்குஸித்தாந்தம் மூன்றாவது ஸூத்ரத்-தில் உள்ளது.

அவிசேஷபுன: ச்ரவணம்(3-3-1-2)

அவிசேஷ புன:ச்ரவணம் என்றால் ஒரு விசேஷக் குறிப்பும் இல்லாமல் சொன்னதையே மறுபடியும் சொல்லுதல்; அப்படி சொன்னால், சொல்லப்பட்ட விஷயம் வெவ்வேறு என்று ஆகும். வைச்வானர-வித்யை ஆனது இரு சாகைகளில் அப்படியே மாறாமல் சொல்லப்பட்டு உள்ளது; எனவே இரு சாகைகளிலும் சொன்ன வித்யை வேறானது என பூர்வபக்ஷம்.

வேறல்ல என்பது ஸித்தாந்தம்.

வேதத்தில் ஒரு விஷயத்தை ஒரு சாகையில் மட்டும் சொன்னால், மற்றொரு சாகையினர் அதனை அறிய வாய்ப்பு இல்லை; ஏனெனில், அவரவர் தம் சாகையை ஓத வேண்டும் என்றே வேதம் விதிக்கிறது; அதற்காக, மற்றவரும் அறிய வேண்டும் என்பதற்காக வேறு சாகையில் மீண்டும் சொல்லப்பட்டது. அவ்வளவுதான்; அதனால் வித்யை வேறாக ஆகாது.

ஒரே சாகைக்கு உள்ளேயே,ஒரு விஷயத்தை மீண்டும் வேறொரு இடத்தில் விதித்தால்தான், அவிசேஷ-புன:ச்ரவணம் ஆகும்; எதற்காக அப்படி மீண்டும் விதிக்கிறது என்று கேள்வி வரும்; அதனால், அங்கு விதிக்கப்படும் விஷயம் வேறாகும் என்று சொல்ல வேண்டும்; இங்கே அப்படி இல்லை.

சிரோவ்ரதம் - ஸித்தாந்தம் (3-3-1-3)

சிரோவ்ரதம் என்பது ப்ரஹ்மவித்யைக்கு (உபாஸனத்துக்கு) அங்கம் அல்ல; அது வேத-அத்யயனத்துக்கு அங்கம் ஆகும் என ஸித்தாந்தம்.

அத்யயனம் என்பது வேதத்துக்கு செய்யும் ஸம்ஸ்காரம் ஆகும்; அதாவது அத்யயனம் மூலமாக, வேதமானது, யாகத்திலும் பாராயணத்திலும் உபயோகப் படுத்தப்படும் தகுதி பெறுகிறது; இங்கும், சிரோவ்ரதம் எனும் வ்ரதத்துடன் அத்யயனம் செய்தால், அந்த வேதம் ஸம்ஸ்காரம் பெறுகிறது. எனவே வேதத்துக்கு அந்த ஸம்ஸ்காரம் அல்லது தகுதி கிடைப்பதற்காக அத்யயனமும், அதன் அங்கமான இந்த வ்ரதமும் ஆகிறது.

அக்ஷரவித்யை எனும் ப்ரஹ்மவித்யையை அனுஷ்டானம் செய்வதற்கும் இந்த வ்ரதத்துக்கும் எந்த தொடர்பும் கிடையாது; எனவே பூர்வமீமாம்ஸா சொன்ன முறையில் இங்கு இரு சாகைக்ளிலும் சொன்ன அக்ஷரவித்யை ஒன்றே ஆகலாம்.

ஸவஹோமங்கள் *(3-3-1-3)*

யஜுர்வேதத்தினர் மூன்று அக்னிகளில் வைதிக-யாக-அனுஷ்டானம் செய்வர்; அதர்வணவேதத்தினர் ஒரு அக்னியில்தான் செய்வர்;

ஸவஹோமங்கள் என்பவை அதர்வண வேதத்தில் ஒரு அக்னியில் செய்யுமாறு விதிக்கப்பட்டவை; எனவே, அவற்றை மற்றவர் மூன்று அக்னிகளில் செய்யக் கூடாது.

இப்படியாக ஒரு கர்மமானது, ஒரு விசேஷ-சாகையினருக்கு அவருக்கு உரிய விசேஷ முறையில் ஆகிறது; அதுபோல, அதர்வணவேதத்தில் சம்பந்தப்பட்ட சிரோவ்ரதம் என்பது, அதர்வண வேத-அத்யயனத்துக்கு மட்டுமே அங்கம் ஆகும்; மற்ற வேத-அத்யயனத்துக்கு அங்கமாக ஆகாது; அதனால், அந்த சிரோவ்ரதம் செய்தவருக்கே அதர்வண வேதத்தை அத்யயனம் செய்விக்க வேண்டும் எனும் நியமம் சரியாகும்.

தஹர வித்யை *(3-3-1-4)*

- தைத்திரீயத்தில், ''அந்த தஹர-ஆகாசமான பரமாத்மாவின் உள்ளில் எது இருக்கிறதோ அது உபாஸநம் செய்யப்பட வேண்டியது'' என்று உள்ளது. உள்ளே என்ன இருக்கிறது என்பதைச் சொல்லவில்லை;
- சாந்தோக்யத்தில் ''தஹர-ஆகாசமான பரமாத்மாவின் உள்ளே எட்டு குணங்கள் உள்ளன; அவை உபாஸநம் செய்யப்பட வேண்டியவை'' என்று சொல்கிறது;

எனவே, சாந்தோக்யத்தில் சொன்னதை தைத்திரீயத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும்; இரண்டும் ஒரே வித்யையால் இருப்பதால்தானே, அங்கு சொன்ன விஷயத்தை இங்கு எடுத்துக் கொள்ள முடிகிறது! இப்படியாக இரண்டு வேதத்திலும் சொன்ன தஹரவித்யை ஒன்றே என்பதை வேதமே உணர்த்துகிறது.

உபஸம்ஹாரம்-விகல்பம்(3-3-1-5)

➢ உபஸம்ஹாரம்-இரு வேத-சாகைகளில்சொன்ன வித்யை ஒரே வித்யையானால், உபஸம்ஹாரம் ஆகும்; உபஸம்ஹாரம் என்றால் சேர்த்துக் கொள்ளுதல் என்று அர்த்தம்; அதாவது, ஒரு சாகையில் சொன்ன குணங்களையும் மற்றொரு சாகையில் சொன்ன வித்யையில் ஏற்றுக் கொள்ளுதல் ஆகும்; அப்போது, இரண்டு சாகைகளில் சொன்ன குணங்களையும் சேர்த்து ஒரே வித்யையில் உபாஸனம் செய்ய வேண்டும்.

- விகல்பம் -இரு வேத-சாகைகளில் சொன்ன வித்யைகள் வெவ்வேறானால், விகல்பம் ஆகும்; விகல்பம் என்றால், வெவ்வேறான முறை என்று அர்த்தம்; அதாவது, அந்தந்த சாகையில் சொன்னதை அந்தந்த வித்யையில் மட்டுமே எடுத்துக்கொள்ளுதல் ஆகும். அப்போது இரண்டையும் ஒன்று சேர்த்து உபாஸனம் செய்யக் கூடாது.

★★★★★★★★★★★★★★

# 6.உத்கீதவித்யை

(3-3 - 3-4பாதங்களில் பல அதிகரணங்கள்)

உத்கீதவித்யை பற்றிய விசாரம் மூன்றாவது அத்யாயத்தில் 3, மற்றும் 4வது பாதங்களில் பல அதிகரணங்களில் உள்ளது; அந்த உத்கீதவித்யை பற்றிய அறிமுகம் இது.

யாகத்தில் அங்கமாக ஸாமவேத-மந்த்ரங்களின் கானம் செய்யப்படும்; ஸாமத்தில், காயத்ரம், ரதந்தரம் முதலிய பல விதங்கள் உள்ளன; அதில் ஒவ்வொரு ஸாமத்திலும் ஐந்து பக்திகள் உள்ளன; பக்தி என்றால் பாகம் என்று அர்த்தம்; அவற்றுக்கு - ஹிங்காரம், ப்ரஸ்தாவம், உத்கீதம், ப்ரதிஹாரம், நிதனம் என்று பெயர்; இதையே சுருக்கி மூன்று பக்திகள் என்றும், விரிவாக்கி ஏழு பக்திகள் என்றும் வேதம் சொல்கிறது; எல்லா விதத்திலும் நடுநாயகமாக இருப்பது உத்கீதம் என்பது.

யாகத்தில் உத்கீதம் என்னும் ஸாம-பக்தியை கானம் செய்பவருக்கு உத்காதா என்று பெயர்; உத்கானம் செய்பவர் என்று அர்த்தம்; இந்த உத்கீதம் என்பது யாகத்தின் அங்கம் ஆகும்; கட்டாயம் உத்கீதத்தை கானம் செய்ய வேண்டும்.

இந்த விஷயம் வேதத்தில், யாகத்தைப் பற்றி விதிக்கும் கர்மபாகத்தில் உள்ளது.

உபநிஷத் பாகத்தில் உத்கீதம் பற்றிய உபாஸனங்கள் சொல்லப் பட்டுள்ளன; அவைதாம் உத்கீத-வித்யைகள்; அதாவது, யாகத்தின் அங்கமான உத்கீதத்தை உபாஸனம் செய்ய வேண்டும்; அப்படி உபாஸனம் செய்தால், அதற்கு தனியாக பலன் உண்டு; யாகத்தின் பலன் தவிர தனியாக உத்கீத-உபாஸனத்துக்கு ஒரு பலன் இருக்கும்.

இந்த உத்கீத-உபாஸனங்கள் (உத்கீத வித்யைகள்) பல உள்ளன; எல்லாமே த்ருஷ்டி-விதியாக சொல்லப் பட்டவை; அதாவது, உத்கீதத்தை வேறொன்றாக கற்பனை செய்து அப்படி த்யானம் செய்ய வேண்டும்;

அவற்றுள் முக்கியமான சில மட்டும் பார்ப்போம்; உத்கீதத்தை ஆரம்பிக்கும்போது 'ஓம்' என்று சொல்வர்; அந்த ஓம் என்னும் பாகத்தைப் பற்றிய உபாஸனங்கள் சாந்தோக்யத்தில் உள்ளன.

1. உத்கீதமான (உத்கீதத்தின் ஒரு பாகமான) 'ஓம்' என்னும் அக்ஷரமானது ரஸங்களுக்கு எல்லாம் ரஸமாக உயர்ந்ததானது'' - (சாந்தோக்யம் 1-1).

இப்படி ரஸங்களுக்கு ரஸமாக ப்ரணவத்தை உபாஸனம் செய்ய வேண்டும் என்று கருத்து. *(ஸ்துதிமாத்ராதிகரணம் 3-4-2)*

2. உத்கீதத்தை (ஓம் என்னும் பாகத்தை) முக்யப்ராணனாக உபாஸனம் செய்தனர்; இப்படி உபாஸனம் செய்பவனிடம் பாபம் செய்ய நினைப்பவன் கல்லில் மண்கட்டி மோதி உடைவது போல அழிவான். *(சாந்தோக்யம் 1-2) (அன்யதாத்வாதிகரணம் 3-3-2)*

3. முழு உத்கீதத்தை கானம் செய்யும் உத்காதாவை முக்யப்ராணனாக உபாஸநம் செய்தனர்; இப்படி உபாஸனம் செய்பவனிடம் பாபம் செய்ய நினைப்பவன் கல்லில் மண்கட்டி மோதி உடைவது போல அழிவான். *(ப்ருஹதாரண்யகம் 3-3-1) (அன்யதாத்வாதிகரணம் 3-3-2)*

4. உத்கீதத்தை (ஓம் என்னும் பாகத்தை) ஆதித்யனை (ஆதித்யனாக) உபாஸனம் செய்தால், இருட்டினால் நேரும் பயம் விலகும். *(சாந்தோக்யம் 1-3) (ஆதித்யாதிமத்யதிகரணம் 4-1-4)*

5. உத்கீதத்தை (ஓம் என்னும் பாகத்தை)ஆதித்யமண்டலத்தில் இருக்கும் ஹிரண்மய புருஷனாக (பரப்ரஹ்மமாக) உபாஸனம் செய்தால், மேல் உலகங்களையும் தேவகாமங்களையும் அடைவான். *(சாந்தோக்யம் 1-6-6)(ஸூத்ரம் - 3-3-7).*

6. உத்கீதத்தை (ஓம் என்னும் பாகத்தை)பரோவரீயஸ்த்வம் எனும் குணத்துடன் கூடிய ஆகாசமாக (ப்ரஹ்மமாக) உபாஸனம் செய்தால், பரோவரீயஸ்த்வ குணத்துடன் வாழ்க்கை அமையும். *(சாந்தோக்யம் - 1-9-2) (ஸூத்ரம் - 3-3-7).*

7. ஐந்து விதமான ஸாமத்தை உலகங்களாக உபாஸனம் செய்க; உயர்ந்த உலகங்களில் வாழ்வு கிடைக்கும். *(சாந்தோக்யம் 2-2-1) (அங்காவபத்தாதிகரணம் 3-3-22)*

உத்கீத உபாஸனம் பற்றிய சில விஷயங்கள் -

- இங்கு உத்கீதம் பற்றி வேதத்தில் சொன்னதெல்லாம் உத்கீதத்தை புகழ்வதற்காக சொன்னவை அல்ல; இவை அப்படி உபாஸனம் செய்வதற்காக சொன்னவை. *(ஸ்துதிமாத்ராதிகரணம் 3-4-2)*
- இந்த உத்கீத-உபாஸனத்தை யாகத்தில் கர்த்தாவான யஜமானன் செய்வதில்லை; ருத்விக்தான் செய்வார்; பலன் யஜமானனுக்கு *(ஸ்வாம்யதிகரணம் 3-4-11)*
- யாகத்தில் உத்கீத-உபாஸனம் செய்யலாம்; செய்யாமலும் இருக்கலாம்; கட்டாய-நியமம் கிடையாது; இதை வேதம் சொல்கிறது, ''யார் இந்த

உபாஸனம் செய்கிறாரோ, யார் உபாஸனம் செய்யவில்லையோ, இரு-வரும் யாகம் செய்கின்றனர்'' - என்று. (தந்நிர்தாரணாநியமாதிகரணம் *3-3-17*; யதாச்ரயபாவாதிகரணம் *3-3-26*)

- உத்கீத-உபாஸனத்தின் பலனை வேதம் சொல்கிறது -''எந்த யாகத்தை உபாஸனத்துடன், ச்ரத்தையுடன், உபநிஷத்தால் வந்த ப்ரஹ்மஜ்ஞா-னத்துடன் செய்கிறானோ, அந்த யாகமே அதிக வீர்யம் உடையதாக ஆகும்'' என்று.

உத்கீத உபாஸனத்தின் பலன், யாகத்தை அதிக வீர்யம் உடையதாக ஆக்குதல் ஆகும்; அதாவது,யாகத்தின் பலனுக்கு வேறொரு விதத்தால் ஏற்படும் தடையை போக்கும் என்று அர்த்தம். (ஸூத்ரம் *3-3-41 -4-1-18*)

- முதலில், ''ஓம் எனும் அக்ஷரமாகிற உத்கீதத்தை உபாஸனம் செய்க'' என்று வேதம் சொல்கிறது; பின்னர், ''எந்த யாகத்தை உபாஸனத்து-டன் செய்கிறானோ, அதுவே அதிக வீர்யம் உடையதாக ஆகிறது'' என்று சொல்கிறது; இப்படி, முதலில் சொன்ன உபாஸனத்துக்கு தனிப்-பலன் சொல்கிறது; எனவே, இந்த பலனை வேண்டுபவர் உபாஸநம் செய்யலாம்; வேண்டாதவர் உபாஸனம் செய்ய வேண்டிய தேவை-யில்லை என்பது தெரிகிறது.
- இந்த கட்டுரையில் முதலில் எடுத்துச் சொன்ன ஏழு விதமான உத்கீத-உபாஸனங்களில் ஐந்தாவதும், ஆறாவதும் ஒன்று போல தோன்றும்; இரண்டிலுமே உத்கீதத்தின் பாகமான ப்ரணவத்தை பரமாத்மாவாக எண்ணி உபாஸனம் செய்தலைச் சொல்கிறது;

அதில் ஒரு சிறிய வித்யாசம் -

- ஐந்தாவதில், ஹிரண்மய புருஷனான பரமாத்மாவாக எண்ண வேண்டும்;
- ஆறாவதில், பரோவரீயஸ்த்வம் முதலிய குணங்களுடன் கூடிய பரமாத்-மாவாக எண்ண வேண்டும்;

இங்கே, ப்ரணவத்தை பரமாத்மாவாக நினைத்தல் என்பது பொதுவா-னாலும், உபாஸனம் செய்யப்பட வேண்டிய குணங்கள் வேறாக உள்ளன; ஆகையால், உபாஸனத்தின் விஷயம் வேறாகும்; ஆகவே, இவை வெவ்வேறு வித்யைகள் ஆகும்;(ஸூத்ரம் *3-3-8*).

ஹிரண்மய புருஷன் - தங்கமயன்;அதாவதுமிக அழகானவன்.

பரோவரீயஸ் - சிறந்தவர்களில் உயர்ந்தவன்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★

# 7.அங்கமாவதை அறிவிக்கும் ப்ரமாணங்கள்

(ச்ருதி, லிங்கம் ...)

*(3-3 - 3-4பாதங்களில் பல அதிகரணங்கள்)*

ஒரு செயலைச் செய்யும்போது அதற்கு அங்கமாக (உறுப்பாக) சில செயல்களும் பொருள்களும் ஆகலாம். (உ.ம்) உணவு உண்பது என்பது முக்கிய செயல்; அதற்காக உணவைப் பிசைந்து உண்ண ஏற்றதாக ஆக்குதல் முதலியது அங்கம் ஆகும்; அதுபோல, உண்பதற்கு முன்னும் பின்னும் கைகால் அலம்புதல், ஆசமனம் செய்தல் முதலியவையும் அங்கம் ஆகும்.

பெருமாள்-திருவாராதனம் என்பது முக்கியமான செயல்; அதற்கு அங்கமாக திருமஞ்சனம் முதலியது ஆகும்; புஷ்பம் பறித்து வைத்துக் கொள்ளுதல் முதலியதும் அங்கம் ஆகும்.

வைதிக கர்ம அனுஷ்டானங்களில் யாகம் முதலியதில்,எது எதற்கு அங்கமாகும் என்பதை வேதத்தின் மூலம் அறிய வேண்டும்; அப்படி அறிவதற்கு உதவும் ப்ரமாணங்கள் ஆறு உண்டு; இவற்றை அங்கதா-போதக-ப்ரமாணங்கள் என்பர். (அங்கமாவதை அறிவிக்கும் சான்றுகள் என்று அர்த்தம்).

அந்த ஆறு ப்ரமாணங்கள் -

1. ஶ்ருதி (அங்கமாவதை நேரிடையாக சொல்லும் சொற்பகுதி) -

   (உ.ம்) ''நெற்களால் யாகம் செய்க'' என்று சொல்கிறது; இங்கே, 'நெற்களால்' என்கிற சொல்லில் மூன்றாம் விபக்தி (வேற்றுமை-உருபு) உள்ளது; இதற்கு கரணத்வம் என்று அர்த்தம்; இந்த சொற்பகுதி மூலம், நெற்கள் ஆனவை, யாகத்துக்கு கரணம் என்று புரிகிறது; அதாவது, யாகத்துக்கு அங்கமாக, யாகத்துக்கு உபயோகப்படும் முக்கிய-மான மூலப் பொருள் என்று தெரிகிறது.

2. லிங்கம் (அங்கமாவதை புரிய வைக்கும் அடையாளம்) -

   (உ.ம்) ''பர்ஹிர் தேவஸதனம் தாமி'' என்று ஒரு மந்த்ரம்; தேவர்களின் இடமாக ஆகக் கூடிய தர்ப்பத்தை (தேவர்களுக்காக) அறுக்கிறேன்'' என்று அர்த்தம்; இந்த மந்த்ரம் ஆனது தர்ப்பத்தை அறுத்து எடுத்தல் என்னும் செயலுக்கு அங்கம் ஆகும்; அதை இங்கு நேராக சொல்ல-வில்லை -''இந்த மந்த்ரத்தால் தர்பம் எடுக்க வேண்டும்'' என்று சொல்-

லவில்லை; ஆனாலும், மந்த்ரத்தில் ''தர்ப்பம் அறுக்கிறேன்'' என்று சொல்வதால், அந்த அடையாளத்தையிட்டு, இந்த மந்த்ரம் தர்ப்பம் அறுக்கும்போது சொல்ல வேண்டிய மந்த்ரம் என்பது தெரிகிறது.

3. வாக்யம் - பதங்களை சேர்த்துச் சொல்லுதல்.

(உ.ம்) - ''ஸ்வர்க்கம் விரும்புபவன் யாகம் செய்க'' என்று சொல்கிறது; இதனால், யாகமானது ஸ்வர்க்க-பலனுக்கு கரணம் ஆன அங்கம் என தெரிகிறது; இங்கு ''யாகத்தால் ஸ்வர்கம் பெறலாம்'' என்று நேராக சொல்லவில்லை; அப்படி சொல்லியிருந்தால், 'யாகத்தால்' எனும் மூன்றாம் விபக்தி மூலம் (ச்ருதி மூலம்) யாகமானது ஸ்வர்க்கத்துக்கு கரணம் என்று புரியும்; ஆனால், அப்படி சொல்லவில்லை; இருந்தாலும், ஒரே வாக்யத்தில் ஸ்வர்க்கம் விரும்புபவன் யாகம் செய்க என்று சொன்னதால், அந்த வாக்யத்தின் மூலம் ஸ்வர்க்கத்துக்கு காரணமாக யாகம் ஆகும் என தெரிகிறது.

4. ப்ரகரணம் - சொல்லப்பட்டு வரும் இடம்.

(உ.ம்) வேதத்தில், தர்சபூர்ணமாஸ-யாகத்தை விரிவாக சொல்லிக் கொண்டு வரும் இடத்தில், ப்ரயாஜம் எனப்படும் ஐந்து யாகங்களை சொல்கிறது; இந்த ஐந்து யாகங்களும் அந்த தர்சபூர்ணமாஸ-யாகத்துக்கு அங்கமானவை; என்னில், அந்த இடத்தில் இவற்றை சொல்வதால்.

5. ஸ்தானம் - ஒரே இடத்தில் சொல்லுதல்.

(உ.ம்) -வேதத்தில் முதல் காண்டத்தில் வரிசையாக சில மந்த்ரங்கள் உள்ளன; அடுத்த காண்டத்தில் வரிசையாக சில யாகங்களை சொல்கிறது; அப்போது முதல் மந்த்ரம் முதல் யாகத்துக்கு அங்கம்; இரண்டாம் மந்த்ரம் இரண்டாவது யாகத்துக்கு அங்கம் என்று வரிசையாக புரிந்து கொள்ளலாம். அந்தந்த இடத்தில் வரிசையாக சொல்லியிருப்பதால்.

6. ஸமாக்யா - பெயர்.

(உ.ம்) யாகத்தில் 'ஆத்வர்யவம்' என்று சிலவற்றுக்கு பெயர்; அத்வர்யு என்பவரோடு சம்பந்தப் பட்டது என்று அர்த்தம்; இந்த பெயரை வைத்தே அத்வர்யு ஆனவர் இவற்றை செய்பவராக இவற்றுக்கு அங்கம் ஆகிறார் என்று தெரிய வரும்.

இந்த ஆறு ப்ரமாணங்கள் மூலம் எது எதற்கு அங்கம் என்பதை புரிந்து கொள்கிறோம்.

உலக முறையில் ஆறுக்கும் உதாஹரணம் சொல்கிறேன். பால் என்பது ஆரோக்யத்துக்கு தேவையானது என்பதை அறிவிக்கும்படி ஆறு விதத்தில் சொல்லலாம்.

1. ச்ருதி - ''பாலால் ஆரோக்யம்'' என்று சொல்லுதல்.
2. லிங்கம் - ''பாலில் நல்ல சத்துக்கள் உள்ளன'' என்று சொல்லுதல்.
3. வாக்யம் - ஆரோக்யம் வேண்டுபவர் பால் சாப்பிடவும் என்று சொல்லுதல்.
4. ப்ரகரணம் - ஆரோக்யம் பற்றி சொல்லும் கட்டுரையில் பாலைப் பற்றி சொல்லுதல்.
5. ஸ்தானம் - ''ஆரோக்யம், ஊட்டச்சத்து, கொழுப்புசத்து ஆகியவற்றை சொல்லி,பின்னர், ''பாலும் தயிரும் நெய்யும் சாப்பிடவும்'' என்று சொல்லுதல்.
6. ஸமாக்யா - பாலுக்கே ''ஆரோக்யா' என்று பெயர் இடுதல்.

(இது சற்றே உதாஹரணத்துக்காக சொன்னதுதான்; பெரியோர்கள் மன்னிக்கவும்; உண்மையில் வேதத்திலிருந்து உதாஹரணம் கொடுக்க வேண்டும்)

கேள்வி - ஒரு அங்கத்தை அறிவிக்கும்போது, இரண்டு ப்ரமாணங்கள் முரண்பட்டு அறிவிக்குமானால் எதை எடுத்துக் கொள்வது?

பதில் - இந்த ஆறில் முன்முன் ப்ரமாணத்துக்கு வலிமை அதிகம்; அடுத்தடுத்த ப்ரமாணம் வலிவு குறைந்தது ஆகும்; அதாவது, ச்ருதி, லிங்கம் ஆகிய இரண்டில் முதலாவதான ச்ருதி சொல்வதைத்தான் எடுத்துக் கொள்ள வேண்டும்; இப்படியே ஒவ்வொன்றிலும் புரிந்து கொள்ளலாம்; இதனை தகுந்த காரணங்களுடன் உதாஹரணங்களுடன் மீமாம்ஸா சாஸ்த்ரத்தில் விளக்கி உள்ளனர்;

இங்கேயும், அந்த அடிப்படையில் விஷயங்களை தீர்மானம் செய்கிறார் -

- லிங்கபூயஸ்த்வாதிகரணத்தில், நான்காவதான ப்ரகரணத்தை விட மூன்றாவதான வாக்யம் வலுவானது என்கிறார்;
- பூர்வவிகல்பாதிகரணத்தில், ச்ருதி, லிங்கம், வாக்யம் என்றிவை நான்காவதான ப்ரகரணத்தை விட வலுவானவை என்கிறார்;
- வேதாத்யதிகரணத்தில் ப்ரகரணத்தை விட லிங்கம் வலுவானது என்கிறார்.

இதன் அடிப்படையில், இங்கே ஸ்ரீபாஷ்யத்தில் சாதிக்கும் விஷயங்களில் ஒன்று -

1. யாகத்தில் உத்கீதம் என்பது அங்கம் ஆகும்; இதனை கர்ம-பாகத்தில் சொல்லியுள்ளது; எனவே, அங்கத்தை கட்டாயம் செய்ய வேண்டும்.

2. யாகத்துக்கு உத்கீத-உபாஸனம் என்பது அங்கம் அல்ல; அது அங்கமாவதை அறிவிக்கும் ச்ருதியோ, லிங்கமோ எதுவும் கிடையாது.

★★★★★★★★★★★★★★★★★★★★★

## 8.ஔபஸத:

*(3-3-14- அக்ஷரத்யதிகரணம்)*

யஜுர்வேதத்தில் ஜாமதக்ன்ய சதூராத்ரம் என்று ஒரு யாகம் சொல்லி-யுள்ளது; அதில் புரோடாசத்துடன் கூடிய உபஸத் ஹோமங்கள் 12 செய்ய வேண்டும்; அவற்றுக்கான மந்த்ரங்கள் ஸாமவேதத்தில் உள்ளன. இந்த மந்த்ரங்களை உரக்க சொல்ல வேண்டுமா? அல்லது மெல்லியதாக சொல்ல வேண்டுமா என்று ஒரு ஸந்தேஹம்.

பொதுவாக ஸாமவேத சம்பந்தப் பட்டவற்றை உரக்க சொல்ல வேண்-டும்; யஜுர்வேத சம்பந்தப் பட்டவற்றை மெதுவாக சொல்ல வேண்டும் என்று விதி உள்ளது. ஆனால், இங்கோ யாகம் யஜுர்வேதத்தை சேர்ந்தது; மந்த்ரம் ஸாமவேதத்தை சேர்ந்தது; எதை அனுசரித்து சொல்ல வேண்டும்? யாகத்தை அனுசரித்து யஜுர்வேதமுறையில் மெல்லியதாகச் சொல்ல வேண்-டுமா? அல்லது மந்த்ரத்தை அனுசரித்து ஸாமவேதமுறையில் உரக்க சொல்ல வேண்டுமா? - என்றுவிசாரம்

பூர்வமீமாம்ஸா சாஸ்த்ரத்தில் இதற்கு ஸித்தாந்தம் சொல்கிறது - யஜுர்-வேதத்தை அனுசரித்து, மெதுவாக சொல்ல வேண்டும்; ஏனெனில், யாகம், மந்த்ரம் ஆகிய இரண்டில் யாகம்தான் ப்ரதானம் ஆனது; மந்த்ரம் என்பது யாகத்தின் அங்கம் ஆகும்; ப்ரதானத்தை அனுசரித்து அங்கங்களின் முறைகள் ஆவதுதான் தகும்.எனவே, ப்ரதானத்தை அனுசரித்து யஜுர்வேத முறையை ஏற்க வேண்டும்; மெதுவாக சொல்ல வேண்டும்.

பூர்வமீமாம்ஸா சாஸ்த்ரத்தில் சொன்னஇந்த முறையைப் பின்பற்றி அக்ஷரத்யதிகரணத்தில் ஸித்தாந்தம் உள்ளது.

அதர்வணவேதத்தில் அக்ஷரவித்யையில் ப்ரஹ்மத்துக்கு அஸ்தூலத்வம் (பருத்த பொருள்களை விட வேறுபட்டமை)முதலிய குணங்கள் சொல்லப் பட்டன. அவற்றை எல்லா ப்ரஹ்மவித்யைகளிலும் உபாஸனத்தில் எண்ண வேண்டுமா? அல்லது வேண்டாமா? என்பது விசாரம்.

எல்லா ப்ரஹ்மவித்யைகளிலும் இந்த குணங்களை எண்ண வேண்டும் என்பது ஸித்தாந்தம்.

கேள்வி - ஆனால், அதர்வணவேதத்தில் அக்ஷரவித்யையில் சொன்ன குணங்களை பிற வேதங்களில் பிற வித்யைகளில் எடுத்துக் கொள்வது சரி-யாகுமா?

பதில் - சரியாகும்; ஏனெனில், எல்லா ப்ரஹ்மவித்யைகளிலும் ப்ரஹ்மம்தான் ப்ரதானம் ஆனது; அதைஅனுசரித்து குணங்கள் எண்ணப்பட வேண்டும்; அந்த குணங்கள் வேறுஇடத்தில் வேறு வித்யைகளில் சொல்லப் பட்டாலும், ப்ரதானத்தை அனுசரித்து அவையும் எண்ணப்பட வேண்டியவையே.

ப்ரதானத்தை அனுசரித்து அங்கங்களின் தர்மங்கள் ஆகும் என்று பூர்வ மீமாம்ஸாவில் சொல்லியுள்ளது; அதேபோல இங்கும் ஆகும்.

கேள்வி- அப்படியானால், எல்லா ப்ரஹ்மவித்யைகளிலும் ப்ரஹ்மம்தான் ப்ரதானம் ஆவதால், அதை அனுசரித்து எல்லா குணங்களும் எல்லா வித்யைகளிலும் எண்ண வேண்டும் என்று ஆகிவிடும்; ஒரு வரையறை இல்லாமல் ஆகிவிடும்.

பதில் - அப்படியல்ல; ப்ரதானமானப்ரஹ்மத்தைசரியாகப் புரிந்து கொள்ள வேண்டுமானால், அந்த ப்ரஹ்மம் சேதன-அசேதனங்களை விட வேறானது என்று புரிந்து கொள்ள வேண்டும்; அப்படி புரிந்து கொள்வதற்கு உதவும் குணங்கள் எவையோ, அவற்றை ப்ரதானத்துடன் எல்லா வித்யைகளிலும் எண்ண வேண்டும்;இல்லாவிட்டால், ப்ரஹ்மத்தையே சரியாக எண்ணுவதாக ஆகாமல் போகும். அஸ்தூலத்வம் முதலிய குணங்கள் ஜீவனை விட ப்ரஹ்மம் வேறானது என்பதைப் புரிந்து கொள்ள உதவுபவை; எனவே, அவற்றையும் எல்லா ப்ரஹ்மவித்யைகளிலும் எண்ண வேண்டும்.

அப்படி ப்ரதானமான ப்ரஹ்மத்தை வேறானதாக எண்ணியபின், அந்தந்த வித்யைகளில் சொன்ன குணங்களை அந்தந்த வித்யைகளில் எண்ணிக் கொள்ள வேண்டும்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★

# 9.பர்ணதா - கோதோஹன - வாக்யங்கள்

ஸ்ரீபாஷ்யத்தில் உத்கீதவித்யை பற்றிய வாக்யங்களை நன்கு ஆராய்ந்து பல அதிகரணங்களில் பல விஷயங்களை சாதிக்கிறார். குறிப்பாக பர்ணதா வாக்யம், கோதோஹனவாக்யம் ஆகிய இரண்டுடன் உத்கீதவித்யை பற்றிய வாக்யத்தை எடுத்து ஒப்புமை ஆராய்ந்து நிர்ணயம் செய்கிறார்; அவை பற்றி சுருக்கமான அறிமுகம் இது.

**கோதோஹன வாக்யம்**

யாகத்தில் ப்ரணயனம் என்று ஒன்று உண்டு; ஜலத்தை கொண்டு வருதல் என்று அர்த்தம்; சமஸ-பாத்ரம் எனப்படும் பாத்ரத்தில் கொண்டு வருவர்; அதில் ஒரு வாக்யம் சொல்கிறது, ''கால்நடைச் செல்வம் என்னும் பலன் வேண்டுபவனுக்கு கோதோஹன-பாத்ரத்தைக் கொண்டு ப்ரணயனம் செய்ய வேண்டும்'' என்று.

எனவே, அந்த பலன் வேண்டுபவர் மட்டும், கோதோஹன-பாத்ரத்தைக் கொண்டு ப்ரணயனம் செய்தால் போதும்; மற்றவர் அப்படி செய்ய வேண்டாம் என்று ஆகிறது; இதனால், கோதோஹன-பாத்ரத்தால் ப்ரணயனம் செய்தல் என்பது யாகத்துக்கு அங்கம் அல்ல; இப்படியே செய்ய வேண்டும் என்கிற நியமம் இல்லை; இது புருஷன் தனிப்பட்ட பலனுக்காக செய்வது ஆகும்.

**பர்ணதாவாக்யம்**

யாகத்தில் ''ஜுஹூவினால் ஹோமம் செய்ய வேண்டும்'' என்று ஒரு வாக்யம் சொல்கிறது; ஜுஹூ என்பது ஹோமம் செய்ய உதவும் நீளமான கரண்டி போன்ற ஒன்று; அதன் மூலமாகத்தான் ஹோமம் செய்வார்கள்.

இந்த வாக்யத்தைக் கேட்டவுடன் முதலில் அந்த ஜுஹூ எப்படி இருக்கும்? அது எந்த மரத்தால் செய்யப்பட வேண்டும்? என்னும் கேள்வி பிறக்கிறது; அதற்குப் பதிலைவேறொரு இடத்தில் வேறொரு வாக்யம் சொல்கிறது, ''பலாசமரத்தால் செய்யப்படும் ஜுஹூ யாருக்கு ஆகிறதோ, அவன் பழிச்சொல்லை கேட்கவில்லை'' என்று. ஆக, ஜுஹூ என்பது, பலாசமரத்தினால் செய்ததாக இருக்க வேண்டும்; பலாசமரத்துக்கு வேதத்தில் பர்ணம் என்று பெயர்.

இங்கு, ஜுஹூ என்பது யாகத்தின் அங்கம் ஆகும்; ஜுஹூவின் வாயிலாக பர்ணத்வம் (பலாசமரத்தால் ஆதல்) என்பதும் யாகத்தின் அங்கம் ஆகும்.

கேள்வி - இங்கு பலாசமரத்தால் ஜுஹூ செய்தால், பழிச்சொல்லை கேட்காமை என்னும் பலன் வரும் என்று சொல்லியுள்ளது; ஆகையால், அந்த பலன் வேண்டுபவர் மட்டும், பலாச மரத்தால் ஜுஹூவைச் செய்தால் போதும்; அந்த பலன் வேண்டாதவர், அதனைச் செய்ய வேண்டாம் என்று தெரிகிறது. அப்படியானால், பர்ணதா (பலாசமரத்தால் ஆதல்) என்பது யாகத்தின் அங்கம் அல்ல; யாகத்துக்கு இது கட்டாயத் தேவை இல்லை என்று ஆக நேரிடும்.

பதில் -அப்படி ஆகாது;பலாச மரத்தால் ஜுஹூவைச் செய்யாதவர் வேறு எந்த மரத்தால் செய்வது? அதை எந்த வாக்யமும் சொலவில்லை; எனவே, பலாச மரத்தால்தான் ஜுஹூவைச் செய்ய வேண்டும்.

''ஜுஹூவினால் ஹோமம் செய்ய வேண்டும்'' என்று முதலில் சொன்னதைக் கேட்கும்போதே, ஜுஹூ எந்த மரத்தினால் செய்யப்பட வேண்டும் என்ற கேள்வி பிறக்கிறது; அதற்கு, பதிலாக ''பலாசமரத்தால் செய்யப்படும் ஜுஹூ யாருக்கு ஆகிறதோ, அவன் பழிச்சொல்லை கேட்கவில்லை'' என்னும் வாக்யம் உள்ளது; இதில் பலாச மரத்தால் செய்யப்படும் ஜுஹூ என்று சொல்லும் போதே இவனது கேள்விக்கு விடை கிடைத்து விடுகிறது; ஜுஹூவானது பலாசமரத்தால் ஆக வேண்டும் என்பது விடை; எனவே, 'பலாச மரத்தால் ஜுஹூ ஆகிறது'' என்னும் இந்த வாக்யமானது, ''ஜுஹூவால் ஹோமம் செய்ய வேண்டும்'' எனும் வாக்யத்துடன் இணையும்; ஜுஹூவால் ஹோமம் செய்ய வேண்டும்; அந்த ஜுஹூ பலாச மரத்தால் ஆக வேண்டும் என்று சொன்னதாக ஆகிறது; பழிச் சொல்லைக் கேட்பதில்லை என்பது வேறொரு வாக்யம் ஆகும் எனலாம்.

இதில், ஜுஹூவானது யாகத்துக்கு கட்டாயமான அங்கம் ஆகும்; அது பலாசமரத்தால் ஆக வேண்டும் என்பதால், பர்ணதா (பலாசமரத்தால் ஆதல்) என்பதும் யாகத்துக்கு அங்கம் என முடிவு செய்யப்படும்; அது நேரிடையாக அங்கம் அல்ல; ஜுஹூவின் வாயிலாக அங்கம் ஆகும்; அதனால், அதனை யாகத்தில் தவிர்க்க முடியாது.

அதற்குப் பிறகு பழிச்சொல்லை கேட்காமை எனும் பலன் சொல்லியிருந்தாலும், அது பலன் ஆகாது; ஏனெனில், யாகத்தில் ஜுஹூ போல பலாசமரத்தால் ஆதல் என்பதும் யாகத்தின் அங்கமாகிறது; எனவே, அதுவும் கட்டாயம் தேவையாகிறது; அங்கங்களுக்கு தனியாக பலன் கிடையாது; யாகத்தை நிறைவுபடுத்துதல் என்பதுதான் அங்கங்களின் செயல் ஆகும்; அதனால், யாகத்தின் பலன் தவிர வேறு பலன் கிடையாது.

மேலும், 'பழிச்சொல்லை கேட்கவில்லை' என்று நிகழ்காலத்தில் சொல்கிறது; வரக் கூடிய பலனாக சொல்வதானால், பழிச் சொல்லை கேட்க மாட்டான்'' என்று வருங்காலத்தில் சொல்ல வேண்டும்; எனவே, இது தனி பலன் அல்ல.

(உ.ம்) ஸந்த்யாவந்தனத்தில், ஸூர்யனுக்கு அர்க்ய-ப்ரதானம் செய்தால், எல்லா மங்களங்களும் உண்டாகும்; பின்னர் ப்ரதக்ஷிணமாக சுற்றிக் கொண்டால், பாபம் தொலையும் என்றெல்லாம் வேதம் சொல்கிறது; இந்த பலன் வேண்டுபவர் மட்டும் இதனைச் செய்தால் போதும் அன்று அர்த்தம் இல்லை; இது ஸந்த்யாவந்தனத்தின் அங்கம் ஆகும்; எல்லாரும் கட்டாயம் செய்ய வேண்டும்; அந்த பலன் என்பது, அந்த அங்கத்தை புகழ்வதற்காக சொன்னது; அப்படி புகழ்வதன் மூலம் நமக்கு அதில் ஈடுபாடு வரச் செய்கிறது. (இது மீமாம்ஸக மதக் கருத்து ஆகும்).

மேலும், ''பலாசத்தால் ஜுஹூ யாருக்கு ஆகிறதோ, அவர் பழிச்சொல் கேட்பதில்லை'' என்று பலன் சொல்கிறது; அப்போது, வெறும் பலாச-ஜுஹூ (கரண்டி) எப்படி இந்த பலனை அளிக்கும் என்கிற கேள்வி வருகிறது; அது ஒரு த்ரவ்யம்தானே! வெறும் த்ரவ்யம் மட்டும் ஒரு பலனை அளிக்காது; ஒரு செயல் மூலமாகவே பலன் அளிக்கும்; ''நெய் உடம்புக்கு நல்லது'' என்கிறோம்;வெறும் நெய் பலன் அளிக்காது; சாப்பிட்டால்தான் பலன் கிடைக்கும்; அதுபோல, வெறும் பலாச-ஜுஹூ பலன் அளிக்காது; அதற்காக ஜுஹூவை வைத்து ஒரு செயல் சொல்லப்பட வேண்டும்; அப்போது ''ஜுஹூவினால் ஹோமம் செய்ய வேண்டும்'' என்னும் விதி தெரிகிறது. அந்தஹோமம் யாகத்துக்கு அங்கமாகும்; ஹோமத்துக்கு ஜுஹூ அங்கமாகும்; ஜுஹூவுக்கு பலாசம் அங்கமாகும்; இப்படியாக எல்லாம் யாகத்தில் அங்கமாக சேர்கின்றன. எனவே, தனிப்பலன் கிடையாது.

**உத்கீத-வித்யை வாக்யம்**

யாகத்தில் உத்கீதம் என்று ஒரு அங்கம்;

- ''உத்கீதத்தை உபாஸனம் செய்க'' என்பது உத்கீத-உபாஸனத்தை விதிக்கும் வாக்யம்.
- ''எந்த யாகம் உபாஸனத்துடன் ஆகிறதோ, அது அதிக வீர்யமுடையதாக ஆகிறது'' என்பது பலனைச் சொல்லும் வாக்யம்.

இது பற்றி விரிவாக முன்னர் கட்டுரையில் உள்ளது.

விசாரம் - இந்த உத்கீத-உபாஸனமும் பலனும் சொன்னது எந்த வகையைச் சேர்ந்தது? கோதோஹன-வாக்யம் போலவா? அல்லது பர்ணதா வாக்யம் போலவா?

கோதோஹன-வாக்யம் போல ஆனால், இந்த பலன் வேண்டுபவர், மட்டும் உத்கீத-உபாஸனம் செய்தால் போதும் என்றாகும்; மற்றவர் யாரும் செய்ய வேண்டிய கட்டாயம் இல்லை; இந்த உத்கீத-உபாஸனம் ஆனது, யாகத்துக்கு அங்கம் அல்ல என்று ஆகும்.

பர்ணதா-வாக்யம் போல ஆனால், இந்த உத்கீத-உபாஸனம் ஆனது, யாகத் துக்கு அங்கமாகும்; கட்டாயம் செய்ய வேண்டும் என்று ஆகும்.

பூர்வபக்ஷம் - கோதோஹன-வாக்யத்தில், விதிவாக்யத்திலேயே பலனையும் சொல்கிறது; அதனால், அந்த பலனுக்கு அந்த செயல் என்று ஆகும்; பர்ணதா-வாக்யத்தில் ''பலாசமரத்தால் ஜுஹூ ஆவதைச் சொல்வது வேறு வாக்யம்; பலனைச் சொல்வது வேறு வாக்யம் என்று பார்த்தோம்; இங்கு உத்கீத-உபாஸன-வாக்யத்தைப் பார்த்தால், அதன் அமைப்பு பர்ணதா வாக்யம் போல உள்ளது.

- ''யாருக்கு பலாசமரத்தால் ஆன ஜுஹூ ஆகிறதோ, அவர் பழிச் சொல்லை கேட்பதில்லை''
- ''எந்த யாகத்தை உபாஸனத்துடன் செய்கிறானோ, அது அதிக வீர்யம் உடையதாக ஆகிறது''

இப்படி, பர்ணதா-வாக்யம் போல உத்கீத-உபாஸன-வாக்யம் உள்ளது; எனவே, கட்டாயம் யாகத்துக்கு அங்கமாக உத்கீத-உபாஸனம் செய்யப்பட வேண்டியதுதான்.

ஸித்தாந்தம் - இந்த உத்கீத-உபாஸனத்தை சொன்னது கோதோஹன முறையில் ஆகும்; அதாவது அந்த பலன் வேண்டுபவர் அந்த உபாஸனம் செய்தால் போதும்; எல்லாரும் செய்ய வேண்டிய நியமம் இல்லை; ஏனெனில் இந்த உபாஸனம் யாகத்துக்கு அங்கம் அல்ல.

இப்படி சொல்வதற்கு முக்கிய காரணம் வேதமே அதைத் தெளிவாக வேறொரு வாக்யத்தில் சொல்கிறது - ''யார் உத்கீத-உபாஸனம் செய்கிறாரோ, யார் செய்யவில்லையோ, இருவரும் யாகம் செய்கின்றனர்'' என்று சொல்கிறது. பர்ணதாவாக்யத்தில் அப்படி சொல்லவில்லை என்பது வித்யாசம்.

மேலும், யாகத்தில் ''ஜுஹூவினால் ஹோமம் செய்க'' என்று சொல்லும்போது, ஜுஹூ எந்த மரத்தினால் செய்யப்பட வேண்டும் என்ற கேள்வி பிறக்கும்; அதற்குப் பதிலாக பர்ணதா வாக்யம் ஆகிறது; அதனால், பலாசத்தால் ஜுஹூ ஆக வேண்டும் என்பது யாகத்தின் தேவை ஆகிறது; இங்கோ, யாகத்தில் உத்கீதத்தை பாடும்போது இதுபோன்ற கேள்வி எழாது; உபாஸனம் செய்ய வேண்டுமா என்கிற கேள்வி எழாது; ஒரு கேள்வியும் இல்லாமல் யாகம் நன்கு நடக்கும்; அதனால், வேதம் சொன்ன உபாஸனம் ஆனது யாகத்துக்கு அங்கம் அல்ல.

மேலும், ''யாருக்கு பலாசத்தால் ஜுஹூ ஆகிறதோ, அவன் பழிச்சொல்லை கேட்பதில்லை'' என்னும்போது, பலாச-ஜுஹூ என்னும் த்ரவ்யம் ஆனது இந்த பலனுக்கு காரணமாக சொல்லப்படுகிறது; இதில் ஒரு கேள்வி எழும்; வெறும் த்ரவ்யம் மட்டும் ஒரு பலனை அளிக்காது; அந்த த்ரவ்யத்தைச் சார்ந்து ஏதாவது செயல் இருக்கும்; அந்த செயல்தான் பலன் அளிக்கும்; இங்கு பலாச-ஜுஹூ மட்டும் பலன் அளிக்காது; எனவே, பலாச-ஜுஹூவினால் எந்த செயல் செய்ய வேண்டும் என்கிற கேள்வி பிறக்கும். ''ஜுஹூவினால் ஹோமம் செய்ய வேண்டும் என்னும் பதில் வேறொரு வாக்யத்தில் உள்ளது; அந்த ஜுஹூ-ஹோமம் என்பது யாகத்தில் கட்டாயமான அங்கம் என்பதால், அதன் மூலமாக பலாசம் என்பதும் அங்கமாகும்.

இங்கோ, ''உபாஸனத்தால் செய்யப்படுவது, அதிக வீர்யமுடையதாக ஆகிறது'' என்னும்போது இந்த மாதிரி கேள்வி வராது; ஏனெனில், உபாஸனம் என்பதே செயல்தானே! அந்த செயலைச் செய்தால் அந்த பலன் கிடைக்கும் என புரிந்துவிடும்; எனவே, அந்த பலன் வேண்டுபவர் அதனைச் செய்தால் போதும் என ஆகும். இதில் வேறொரு கேள்வி வரும்; அந்த உபாஸனத்தின் விஷயம் என்ன என்ற கேள்வி மட்டும் இருக்கும்; அப்போது, ''உத்கீதத்தை உபாஸனம் செய்'' என்று சொல்வதால், உபாஸனத்தின் விஷயம் மட்டும் கிடைக்கும்; அதுதவிர உபாஸனம் அங்கம் என்பது கிடைக்காது.

மேலும், ''எந்த யாகத்தை உபாஸனத்துடன் செய்கிறானோ, அது அதிக வீர்யம் உடையதாக ஆகிறது'' என்னும்போது, இங்கு குறிப்பிடப்பட்ட உபாஸனம் ஆனது முன்பே வேறொரு வாக்யத்தில் சொல்லப் பட்டது என்பது தெரிகிறது; முதலில் ''உத்கீதத்தை உபாஸனம் செய்க'' என்று ஒரு வாக்யத்தில் உபாஸனம் விதிக்கப் படுகிறது; அதனை அனுவாதம் செய்து, அந்த உபாஸனம் செய்வதற்கு பலனை இந்த வாக்யம் சொல்கிறது; ஆனால்,

பர்ணதா-வாக்யத்தில் அப்படி இல்லை; ''யாருக்கு பலாசமரத்தால் ஜுஹூ ஆகிறதோ, அவர் பழிச் சொல் கேட்பதில்லை'' என்னும்போது, இங்கு குறிப்பிடப்பட்ட பலாசமரம் என்பது முன்பு வேறொரு வாக்யத்தில் சொல்லப்படவில்லை; இங்குதான் முதலாக சொல்லப் படுகிறது; எனவே, இது புதியதாக ஒரு விஷயத்தைத் தெரியப் படுத்தும் விதி-வாக்யம் ஆகும்; ஏற்கனவே தெரிந்த விஷயத்தைச் சொல்லும் அனுவாத வாக்யம் அல்ல; இந்த ஒரு வித்யாசமும் உள்ளது; இது எந்த அளவு உபயோகப்படும் என்பதையும் ஆராய்வர்.

இப்படி வித்யாசங்கள் உள்ளதால், உத்கீத-உபாஸனம் சொன்னது பர்ணதா-வாக்யம் போல அல்ல; இது கோதோஹன-வாக்யம் போல ஆகும்; எனவே, உபாஸனம் யாகத்தின் அங்கம் அல்ல; இதனைச் செய்ய வேண்டிய கட்டாயம் இல்லை.

★★★★★★★★★★★★★★★★★★★★★★

# 10.க்ரமம் (வரிசை)

*(4-3 அர்ச்சிராதிபாதம் முழுவதும்)*

ஸ்ரீபாஷ்யத்தில் நான்காவது அத்யாயம் மூன்றாவது பாதத்தில் அர்ச்சிராதி கதி பற்றி விசாரங்கள் உள்ளன; அதில் அர்ச்சிராதி கதியில் உள்ள வரிசை முறை பற்றிய விசாரம் அதிகம்; அதை புரிந்து கொள்ள வேண்டுமானால், மீமாம்ஸா சாஸ்த்ரத்தில் ஐந்தாவது அத்யாயத்தில் சொல்லப்பட்டுள்ள 'க்ரமம்' எனும் விஷயம் தெரிந்திருக்க வேண்டும்; அதற்கு ஒரு சுருக்கமான அறிமுகக் குறிப்பு இந்த கட்டுரை.

'க்ரமம்' என்றால் வரிசை என்று அர்த்தம்; யாக-அனுஷ்டானத்தில், வரிசையாக எந்த செயலுக்குப் பின் எந்த செயல் என்பதை தெரிந்து கொள்ள வேண்டும்; வரிசை மாற்றி செய்யக் கூடாது. அந்த வரிசையை புரிந்து கொண்டு நிர்ணயம் செய்வதற்காக சில காரணங்கள் உதவும். அவை ஆறு ஆகும்.

*1.ச்ரௌதக்ரமம் (சொல் மூலம் அறியப்படும் வரிசை)*

வரிசையை அறிவிக்கும் தனிப்பட்ட ஒரு சொல் குறிப்பு இருந்தால் ச்ரௌதக்ரமம் ஆகும்; 'பிறகு', 'செய்துவிட்டு' முதலிய சொல்-குறிப்புகள் மூலம் இந்த வரிசையை நேராகவே புரிந்து கொள்ள முடியும். (உ.ம்) - ''வேதத்தை செய்துவிட்டு வேதியை செய்க'' என்று விதி சொல்கிறது; இதில் முதலில் வேதத்தை செய்ய வேண்டும்; பின்னர் வேதியை செய்ய வேண்டும்; இந்த வரிசை தெளிவாக நமக்கு புரியும்படி, 'செய்துவிட்டு' என்ற சொல்-குறிப்பு உள்ளது. (வேதம் - தர்ப்பமுஷ்டி-கட்டு; வேதி - யாகம் நடக்கும் அக்னிகளை உள்ளடக்கிய இடம்).

*2.அர்த்தக்ரமம் (பயனை அனுசரித்து அறியப்படும் வரிசை)*

பயனை அனுசரித்து சில இடங்களில் வரிசையை புரிந்து கொள்ள வேண்டும்; (உ.ம்) அக்னிஹோத்ரஹோமம் செய்க; யவாகூ (கஞ்சி) தளிகை செய்து கொள்க'' என்கிறது; இங்கு கஞ்சி தளிகை செய்வதே அக்னிஹோத்ர ஹோமத்துக்காகத் தான்! எனவே, அந்த பலனை அனுசரித்து முதலில் யவாகூ-பாகம் செய்ய வேண்டும்; பின்னர் அக்னிஹோத்ரஹோமம் செய்ய வேண்டும்; இந்த வரிசையை வேதம் சொல்லாவிட்டாலும், அதன் பயனை அனுசரித்து தெரிந்து கொள்ளலாம்.

*3.பாடக்ரமம் - சொல்லப்பட்ட வரிசையை அனுசரித்து வரிசையை அறிதல்.*

'பிறகு' முதலிய சொற்கள் இல்லாவிட்டாலும், எந்த வரிசையில் சொல்கிறதோ, அந்த வரிசையை புரிந்து கொள்ளுதல்.

(உ.ம்) -'ஸமிதோ யஜதி', 'தநூனபாதம் யஜதி' முதலிய ஐந்து யாகங்களை வரிசையாக சொல்கிறது; அதே வரிசை முறையில், அந்த ஐந்து யாகங்களையும் செய்ய வேண்டும்.

4.ஸ்தானக்ரமம் - இருப்பிடத்தைக் கொண்டு அறியப்படும் வரிசை.

எந்த இடத்தில் எந்த செயலை செய்ய வேண்டியதாக வேதம் சொன்ன முறையில் நினைவு வருகிறதோ, அதை முதலில் செய்து, அதனுடன் கூட சொல்லப்படும் அனுஷ்டானங்களை பின்னர் செய்ய வேண்டும். (உ.ம்) ஜ்யோதிஷ்டோமயாகத்தில் மூன்று பசுயாகங்கள் செய்ய வேண்டும்; மூன்றும் மூன்று வெவ்வேறு காலத்தில் வரும்; அதுபோல ஸாத்யஸ்க்ரம் எனும் யாகத்திலும் அந்த மூன்றையும் செய்ய வேண்டியுள்ளது; ஆனால் ஒரே காலத்தில் செய்ய வேண்டும்; அது ஸுத்யாகாலத்தில் செய்யப்படுவதால், அதற்கேற்ப முதலில் அந்த காலத்துக்குரிய பசுயாகத்தை செய்ய வேண்டும்; பின்னர் மற்ற இரண்டையும் செய்ய வேண்டும்.

5. முக்யக்ரமம் - ப்ரதானங்களின் வரிசையை அனுசரித்து அங்கங்களின் வரிசை.

ப்ரதானமான யாகங்களின் வரிசையை அனுசரித்து அவற்றின் அங்கங்களின் வரிசை ஆகும்; (உ.ம்) தர்சபூர்ணமாசத்தில் அபிகாரணம் (அன்ன சுத்தி போல நெய் சேர்த்தல்) செய்யும்போது முதலில் ஆக்னேய ஹவிஸ்க்கு அபிகாரணம், பிறகு ஐந்த்ர-ஹவிஸ்க்கு செய்ய வேண்டும்; ஏனெனில், முதலில் ஆக்னேய யாகம், பிறகு ஐந்த்ரயாகம் என்று வரிசை உள்ளது; அதனை அனுசரித்து, அதன் அங்கமான அபிகாரணமும் அதே வரிசையில் செய்ய வேண்டும்.

6.ப்ரவ்ருத்தி க்ரமம் -சில அங்கங்களின் செயல் வரிசையை அனுசரித்து பிற செயல்களின் வரிசை ஆதல்

(உ.ம்) ப்ராஜாபத்ய யாகங்கள் 17 உள்ளன; அத்தனையும் சேர்த்து ஒரே சமயத்தில் செய்ய வேண்டும்; ஆனால், அதன் அங்கங்களை சேர்த்து ஒரே சமயத்தில் செய்ய முடியாது; ஆகவே அடுத்தடுத்து வரிசை விடாமல் சேர்த்து செய்ய வேண்டும் என்பதுதான்; அப்போது 17 பசுக்களில் எதை முதலில் ஆரம்பித்து அங்கங்கள் செய்ய ஆரம்பித்தோமோ, அதே வரிசையில் கடைசி வரை அங்கங்கள் செய்ய வேண்டும்.

இவற்றில் ஒன்றுக்கொன்று முரண்பாடு வரும்போது முன் முன் சொன்ன க்ரம-காரணம் வலுவானது.

அர்ச்சிராதிகளின் வரிசையை நிர்ணயம் செய்வதில் இந்த பிரமாணங்கள் உபயோகப் படும்; குறிப்பாக, முதல் மூன்று ஆன ச்ரௌத க்ரமம், அர்த்தக்ரமம், பாடக்ரமம் ஆகியவை இங்கு சொல்லப் பட்டுள்ளன.

★★★★★★★★★★★★★★★★★★★★★

# 11.அர்ச்சிராதி கதி

*(4-3 பாதம் முழுவதும்)*

மோக்ஷம் பெற்று பரமபதம் செல்பவன், 'தேவயான மார்க்கம் எனும் வழியில் செல்வான் என்று வேதம் சொல்கிறது; தேவனான ப்ரஹ்மம் ஸ்ரீநாராயணனிடம் அடைவிக்கும் பாதை என்று அர்த்தம்.

இந்த பாதையில் முதலில் அர்சிர்தேவனது உலகம் உள்ளது; எனவே, அர்ச்சிராதி மார்க்கம் என்றும் பெயர்; அந்த உலகம் முதல் தொடர்ந்து பல உலகங்கள் வழியாக செல்வான்; அந்தந்த உலகத்தில் இருக்கும் தேவர்கள் இவனை, தமது உலகங்களில் வரவேற்று உபசரித்து தம்தம் உலகங்களின் எல்லை வரை கொண்டு விடுவார்கள். கடைசியில் வித்யுத் புருஷன் (மின்னல் தேவன்) என்பவன், பரமபதம் வரை கொண்டு விடுவான்.

வேதத்தில் அர்ச்சிராதி மார்க்கம் பற்றி பல இடங்களில் சொல்லியுள்ளது.

1. சாந்தோக்ய உபநிஷத்தில் - 4&5 ஆம் அத்யாயம்
2. சாந்தோக்ய உபநிஷத் -8 ஆம் அத்யாயம்.
3. கௌஷீதகீ உபநிஷத் - 1ஆம் அத்யாயம்
4. ப்ருஹதாரண்யக உபநிஷத் - 6 ஆம் அத்யாயம்
5. ப்ருஹதாரண்யக உபநிஷத் - 7 ஆம் அத்யாயம்

இவற்றில் சற்றேவித்யாசங்கள் உள்ளன; இவற்றை ஆராய்ந்து இங்கு 4-3 வது பாதத்தில் நிர்ணயம் செய்கிறார். அந்த அர்ச்சிராதி மார்க்க வரிசை -

1. அர்சி: (அக்னி)
2. அஹ: (பகல்)
3. சுக்லபக்ஷம் (வளர்பிறை)
4. உத்தராயணம்
5. ஸம்வத்ஸர: (ஆண்டு)
6. வாயு
7. ஆதித்யன் (ஸூர்யன்)
8. சந்த்ரன்
9. வித்யுத் (மின்னல்) - கூடவே, வருணன், இந்த்ரன், ப்ரஜாபதி

பகல், சுக்லபக்ஷம் முதலியவை, வெறும்காலங்கள் அல்ல; இவை எல்லாமே அந்தந்த காலம் முதலியதை அதிஷ்டானம் செய்யும் தேவர்கள்;இந்த தேவர்கள் தமது உலகங்கள் வழியாக இவனை அழைத்துச் செல்வர்; அப்படியாக இவர்களை பெருமான் நியமித்து இருக்கிறான்;இந்த வழியில் ஜீவன் அழைத்துச் செல்லப்பட்டு, பரமபதம் சென்று ப்ரஹ்மத்தை அடைவான்; பரப்ரஹ்மம் ஆன ஸ்ரீநாராயணனை அடைவான்.

வேதத்தில் பல விதமாக சொன்ன இந்த வழியைப் பற்றிய ஒரு சிறு அட்டவணை காணலாம்.

| வரிசை | சாந்தோக்யம் | கௌஷீதகீ | ப்ருஹ - 1 | ப்ருஹ - 2 |
|---|---|---|---|---|
| 1. | அர்சி: | அர்சிர்லோகம் | அர்சி: | |
| 2. | அஹ: | | அஹ: | |
| 3. | சுக்லபக்ஷ: | | சுக்லபக்ஷ: | |
| 4. | உத்தராயணம் | உத்தராயணம் | | |
| 5. | ஸம்வத்ஸர: | | | |
| 6. | | வாயுலோகம் | தேவலோகம் | வாயு |
| 7. | ஆதித்யன் | ஆதித்யலோகம் | ஆதித்யன் | ஆதித்யன் |
| 8. | சந்த்ரன் | | | சந்த்ரன் |
| 9. | வித்யுத் | (வருணலோகம், இந்த்ரலோகம் ப்ரஜாபதிலோகம்) | வைத்யுதன் | |
| 10. | ப்ரஹ்மம் | | ப்ரஹ்மலோகம் | ப்ரஹ்மம் |

# 12. அருஞ்சொற்பொருள்

1. **அக்னி** - 1. யாகத்தில், ஹோமம் செய்யப்படும் இடமான அக்னியை வைக்கும் இடம். 2. நெருப்பு 3. அக்னிதேவன்.

2. **அக்னீஷோமீயம்** - ஸோமயாகத்தின் அங்கமான ஒரு யாகம்; அக்னி, ஸோமன் ஆகிய இரு தேவர்களுக்கு உரியது.

3. **அங்கம்** - 1. உறுப்பு; 2. ஒரு பெரிய செயலின் ஒரு பகுதியான சிறு செயல் அல்லது அதற்கு உபயோகப்படும் பொருள் முதலியது. (உ.ம் யாகத்தின் அங்கம் அதில் உபயோகப்படும் நெல் முதலியது.)

4. **அதிகாரம்** - 1. பதவி, 2. ஆரம்பம்.

5. **அதிதேசம்** - ஒரு இடத்தில் சொன்ன முறையை மற்றொரு இடத்திலும் பின்பற்ற வேண்டும் என்று சொல்லுதல்.

6. **அத்வர்யு** - யாகம் செய்து வைக்கும் ரித்விக்களில் முக்கியமானவர்.

7. **அபஹதபாப்மத்வம்** - கர்மத்துக்கு வசப்படாமை; எட்டு குணங்களில் முதலாவது.

8. **அர்சிர்தேவன்** - அக்னிதேவன்; ஆதிவாஹிகர்களில் முதலாமவன்.

9. **அர்ச்சிராதி** - 1. அர்ச்சிர்தேவன் முதலிய ஆதிவாஹிகர்கள். இவர்கள் பரமபதத்துக்கு அழைத்துச் செல்வர்; அதனால், அந்த பாதைக்கு அர்ச்சிராதிமார்க்கம் என்று பெயர்.

10. **அனுவாதம்** - 1. முன்பு தெரிந்த விஷயத்தை மீண்டும் சொல்லுதல். 2. தெரிந்த ஒரு விஷயத்தில் புதிய தகவலைச் சொல்வதற்காக அதை முதலில் எடுத்துரைத்தல்.

11. **ஆசமனம்** - வைதிக-அனுஷ்டானத்துக்கு அங்கமாக செய்யப்படும் ஒரு கர்மம்; (கையில் நீரெடுத்து மந்த்ரங்கள் சொல்லி பருகி, பின்னர் மந்த்ரங்களுடன் சரீரத்தில் தொடுதல்)

12. **ஆச்ரமம்** - தர்ம-அனுஷ்டானத்துக்கு ஆதாரமான மனித நிலைகள்; நான்கு ஆச்ரமங்கள் உள்ளன - ப்ரஹ்மசர்யம், க்ருஹச்தம், வானப்ரஸ்தம், ஸன்யாஸம் என்று நான்கு ஆச்ரமங்கள்.

13. **ஆச்ரயம்** - 1. சார்விடம், இருக்குமிடம் 2. யாகத்தில் அங்கமாக செய்யப்பட வேண்டியவை எதைச் சார்ந்து இருக்குமோ, அது ஆச்ரயம்.

14. **ஆசாரம்** - 1. அனுஷ்டானத்துக்குத் தேவையான சுத்தி, 2. அனுஷ்டானம்

15. **ஆதிகாரிகர்** - அதிகாரத்தில் பெருமானால் நியமிக்கப்பட்ட வஸிஷ்டர் முதலியவர்.

16. **ஆதிவாஹிகர்** - பரமபதம் செல்பவனை வழியில் அழைத்துச் செல்பவர் (அர்சிர்தேவன் முதலியவர்)

17. **உத்கீதம்** - ஸாமத்தின் ஒரு பகுதி; (உத்கீத-உபாஸனம் கட்டுரை பின் இணைப்பில் காண்க).

18. **உபகுர்வாணன்** - முறைப்படி ப்ரஹ்மசாரியாக இருந்து பின்னர் விவாஹம் செய்து கொள்ளப் போகிறவன்.

19. **உபஸம்ஹாரம்** - 1. சேர்த்தல், ஒரு இடத்தில் சொன்னதை மற்றொரு இடத்தில் சேர்த்து எடுத்துக் கொள்ளுதல், 2. முடிவு

20. **உபாயனம்** - ப்ரஹ்மஜ்ஞானியின் புண்யபாபங்கள் இறுதியில் மற்றவரை சென்றடைதல்.

21. **கதி** - 1. செல்லுதல், 2. பாதை, 3. உபாயம்.

22. **கர்மம்** - 1. யாகம் முதலிய அனுஷ்டானம், 2. புண்ய-பாபம்.

23. **கோதோஹனம்** - யாகத்தில் ஒரு பால்-பாத்திரம்.

24. **க்ரது** - யாகம், பசுவை (மிருகத்தை) அர்ப்பணம் செய்யும் யாகம்.

25. **க்ரமம்** - வரிசை

26. **க்ரஹம்** - யாகத்தில் தேவர்களுக்கு ஸோமரஸம் வைக்கும் பாத்ரம்.

27. **க்ருஹஸ்தன்** - நான்கு ஆச்ரமங்களில் இரண்டாவது; வீட்டில் மனைவியுடன் இருந்துகொண்டு தர்மங்கள் செய்பவன்.

28. **சயனம்** - யாகத்தில் அக்னியை வைக்கும் இடத்தை தயார் படுத்துதல். (இது மெய்யெழுத்தில் மூன்றாவதான ச ஆகும்; படுக்கை என்னும் சயனம் என்பது வேறு)

29. **ஜுஹூ** - யாகத்தில் ஹோமம் செய்ய உதவும் நீளமான கரண்டி போன்ற பாத்ரம்.

30. **தமம்** - இந்த்ரியங்களை அடக்குதல்.

31. **தேவயானம்** - ப்ரஹ்மத்தை அடைவதற்கு வைகுண்டம் போகும் வழி; அர்ச்சிராதி மார்க்கம்.

32. **தூமயானம்** - ஸ்வர்க்கத்துக்கு போகும் வழி.

33. **த்ருஷ்டிவிதி** - ப்ரஹ்மம் அல்லாத ஒரு பொருளை ப்ரஹ்மமாக எண்ணி உபாஸனம் செய்ய விதித்தல்.

34. **நக்னம்** - வஸ்த்ரம் தரிக்காமல் இருத்தல்.

35. **நியமம்** - செய்தே ஆக வேண்டிய கட்டாயம்.

36. **நைஷ்டிகப்ரஹ்மசாரி** - விவாஹம் செய்து கொள்வதில்லை என்னும் வ்ரதத்தில் வைராக்யத்துடன் வாழும் ப்ரஹ்மசாரி.

37. **பதிதன்** - தன் ஆச்ரமத்திலிருந்து பெரிய முறையில் தவறியவன். (இவன் பெரிய தோஷம் உள்ளவன், வைதிக-அனுஷ்டானத்துக்குத் தகுதியற்றவன் என ஸ்ம்ருதிகள் கூறும்).

38. **பர்ணம்** - பலாசமரம்.

39. **பாரிப்லவம்** - யாகத்தில் கதை சொல்லுதல் எனும் சஸ்த்ரம்.

40. **பித்ருயானம்** - மரணமடைந்த பின் ஸ்வர்க்கத்துக்கு போகும் வழி.

41. **புருஷார்த்தம்** - மனிதன் வேண்டும் பலன்.

42. **ப்ரகரணம்** - 1. அங்கமாவதை அறிவிக்கும் ப்ரமாணங்களில் நான்காவது (பின் இணைப்பில் காணலாம்); 2. சொல்லப்பட்டு வரும் இடம்.

43. **ப்ரணயனம்** - யாகத்தில் ஒரு அனுஷ்டானம்(ஜலம் கொண்டு வருதல்).

44. **ப்ரணவம்** - ஓம்காரம் (ஓம் எனும் மந்த்ரம்)

45. **ப்ரதீகம்** - அவயவம் (ப்ரஹ்மத்தின் சரீரமான உலகப் பொருள்)

46. **ப்ரதீக உபாஸனம்** - ப்ரஹ்மத்தின் சரீரமான உலகப் பொருளை ப்ரஹ்மமாக உபாஸனம் செய்தல்.

47. **ப்ரஹ்மசர்யம்** - 1. நான்கு ஆச்ரமங்களில் முதலாவது, விவாஹத்துக்கு முன் வேத-அத்யயனம் செய்யும் பருவம், 2. காம-இன்பத்தை அடக்கி இருத்தல்.

48. **மனனம்** - 1. ப்ரஹ்மத்தை சிந்தித்தல், 2. ஆசார்யன் உபதேசம் செய்த விஷயத்தை யுக்திகள் கொண்டு ஆராய்ந்து திடமாக்கிக் கொள்ளுதல், 3. சிந்தித்தல்.

49. **மௌனம்** - 1. முனிவர் போல எப்போதும் பகவானை சிந்திக்கும் பாங்கு, 2. பேசாமல் இருத்தல்.

50. **யஜமானன்** - யாகம் செய்பவன்

51. **யஜ்ஞம்** - யாகம், பஞ்சமஹாயஜ்ஞம் முதலியது.

52. **ரித்விக்** - யாகம் செய்து வைப்பவர்.

53. **லிங்கம்** - அங்கமாவதை அறிவிக்கும் ப்ரமாணங்களில் இரண்டாவது (பின் இணைப்பில் காணலாம்); 2. காரணம், 3. அடையாளம், 4. அனுமானத்தில் ஹேது.

54. **வாக்யம்** - 1. அங்கமாவதை அறிவிக்கும் ப்ரமாணங்களில் மூன்றாவது (பின் இணைப்பில் காணலாம்); 2. சொல்-தொடர்.

55. **வானப்ரஸ்தம்** - நான்கு ஆச்ரமங்களில் மூன்றாவது; காட்டில் வசித்-தல்.

56. **விகல்பம்** - 1. ஒரு இடத்தில் சொன்ன குணங்களை மற்றொரு இடத்-தில் சேர்க்காமல் இருத்தல் 2. பல வழிகளில் ஏதாவது ஒன்று ஆகலாம் என்னும் நிலை.

57. **விதி** - 1. வேதக் கட்டளை, 2. விதிக்கப் படும் விஷயம்.

58. **விதுரர்** - மனைவியை இழந்தவர். (இது நான்காவது 'த'காரம்; மூன்-றாவது தகாரம் சேர்த்து விதுரர் என்பவர், மஹாபாரதத்தில் த்ருதராஷ்-டிரனின் தம்பி).

59. **வித்யுத்புருஷன்** - மின்னல் தேவன்; ஆதிவாஹிகர்களில் ஒருவன்.

60. **வித்யை** - 1. உபாஸனம், 2. உபாஸனத்தை அறிவிக்கும் வேதபாகம்.

61. **வித்வான்** - ப்ரஹ்மத்தைஉபாஸனம் செய்பவர்

62. **வ்யாஹ்ருதி** - 'பூ:' என்று ஆரம்பித்து மூன்றுஉலகங்களை குறிக்கும் மந்த்ரம்.

63. **சமம்** - இந்த்ரிய-அடக்கம்.

64. **சரணாகதி** - உபாஸனம் செய்ய முடியாமல், பகவானையே உபாயமாக பற்றுதல்; இதுவும் ப்ரஹ்ம-வித்யைகளில் ஒன்று.

65. **சஸ்த்ரம்** - யாகத்தில் கானமாக இல்லாமல் உரைநடையாக தேவர்கள் முதலியவரின் குணங்களைப் புகழ்தல்.

66. **சாஸ்த்ரம்** - கட்டளையிடும் வேதம்; வேதம் முதலியது.

67. **ச்ருதி** - 1. அங்கமாதலை அறிவிக்கும் ப்ரமாணங்களில் முதலாவது, 2. வேதம்.

68. **ஸத்யஸங்கல்பன்** - ஸங்கல்பம் தடைபெறாதபடி நடத்திக் கொள்பவன்.

69. **ஸந்யாஸம்** - நான்காவது ஆச்ரமம் ஆன துறவு.

70. **ஸமாக்யா** - 1. அங்கமாவதை அறிவிக்கும் ப்ரமாணங்களில் ஆறாவது (பின் இணைப்பில் காணலாம்), 2. பெயர்.

71. **ஸம்வத்ஸரம்** - ஆண்டு; ஆண்டு என்னும் காலத்தை அதிஷ்டானம் செய்யும் தேவன்; ஆதிவாஹிகர்களில் ஒருவன்.

72. **ஸஹகாரி** - துணைக் காரணம்.

73. **ஸ்தானம்** - அங்கமாவதை அறிவிக்கும் ப்ரமாணங்களில் ஐந்தாவது (பின் இணைப்பில் காணலாம்), 2. இடம், 3. பதவி

74. **ஸ்துதி** - புகழ்தல்.

75. **ஸ்தோத்ரம்** - யாகத்தில் கானமாக தேவர்கள் முதலியவர்களின் குணத்தை புகழ்தல்.

76. **ஹவிஸ்** - தேவர்களுக்கு அர்ப்பணம் செய்யப்படும் உணவுப் பொருள்.

77. **ஹானி** - விடுதல் (ப்ரஹ்மஜ்ஞானி புண்யபாப-கர்மங்களை இறுதியில் விடுதல்).

78. **ஹிம்ஸா** - துன்புறுத்துதல்.

79. **ஹிரண்யகர்ப்பன்** - நான்முகன் (ப்ரஹ்மதேவன்)

80. **ஹோதா** - யாகம் செய்து வைக்கும் ரித்விக்களில் ஒருவர்.

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# ஸ்ரீபாஷ்ய-தாத்பர்ய-ஸாரம்

(ஸ்ரீதேஶிகன் அருளிய அதிகரணஸாராவளி நூலிலிருந்து தொகுத்தது)

(ஸ்ரீதேசிகன் ஸ்ரீபாஷ்யஸாரமாக அதிகரணஸாராவலி என்னும் ஸ்ரீகோசம் அருளியுள்ளார்; அதில் ஒவ்வொரு அதிகரண பொருளையும் பல ச்லோகங்களாக சாதிக்கிறார்; மேலும், ஒவ்வொரு பாதத்தின் முடிவிலும் அந்தந்த பாதத்தில் உள்ள அதிகரணங்களின் ஸாரமான பொருளை தொகுத்து சுருக்கமாக சாதிக்கிறார்; அதன் தொகுப்பாக இந்த இணைப்பு அமைகிறது.

இதில் ஸ்ரீபாஷ்ய-விஷயங்கள் மொத்தமும் ரத்ன-சுருக்கமாக தொகுக்கப்பட்டு அமைகிறது; இதை பாராயணம் செய்வதும் நல்லதே; ஸ்ரீதேசிகன் ஸ்ரீபாஷ்யஸாரத்தை தொகுத்தளிக்கும் அழகையும் அருளையும் இதில் நன்கு அனுபவிக்கலாம்; திருவாய்மொழிக்கு த்ரமிடோபநிஷத்-தாத்பர்ய-ஸாரம் எனும் நூலை ஸ்ரீதேசிகன் அருளியது போல, இது ஒரு ஸ்ரீபாஷ்ய-தாத்பர்ய ஸாரம் என நாம் எண்ணலாம்; அனுபவிக்கலாம்.)

ஸ்ரீமதே ராமானுஜாய நம:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

**ஸ்ரீமான் வேங்கட நாதார்ய: கவிதார்க்கிக கேஸரீ।**
**வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி।।**

## முன்னுரை

स्वस्ति श्रीरङ्गभर्तुः किमपि दधदहं शासनं तत्प्रसत्त्यै
सत्यैकालम्बि भाष्यं यतिपतिकथितं शश्वदध्याप्य युक्तान्।
विश्वस्मिन् नामरूपाण्यनुविहितवता तेन देवेन दत्तां
वेदान्ताचार्यसंज्ञामवहितबहुवित्सार्थमन्वर्थयामि॥१॥

ஸ்ரீதேசிகன் சாதிக்கிறார் -

- ஸ்வஸ்தி ஸ்ரீரங்கநாதனுடைய ஆச்சர்யமான மங்களமான ஒரு திவ்ய-ஆஜ்ஞையை அனுக்ரஹத்தை நான் ஏற்றிருக்கிறேன்;
- ஸத்யத்தைப் பற்றியே ஸத்யமானதாகவே, ஸ்ரீராமானுஜர் அருளிய ஸ்ரீபாஷ்யத்தை, அந்த பெருமானின் திருவுள்ள உகப்புக்காக அடிக்கடி தகுந்தவர்களுக்கு உபதேசம் செய்து வருகிறேன்;
- உலகப் பொருள்களுக்கு பெயரையும் உருவையும் வகுத்தவனான அந்த பெருமானால் 'வேதாந்தாசார்யன்' எனும் பெயரிடப் பெற்றேன்;
- இப்போது, பண்டித-கோஷ்டியினர் கவனிக்க அந்த பெயரை பொருளுடையதாக ஆக்குகிறேன்.

(வேதாந்தத்துக்கு ஆசார்யனாக காலக்ஷேபங்கள் சாதிக்கிறேன்; உலகத்துக்கே வேதாந்த-ஆசார்யனாக பெருமான் அருளியபடி இந்த நூலை செய்கிறேன் என்று ஸ்ரீதேசிகன் சாதிக்கிறார்).

★★★★★★★★★★★★★★★★★★★★★

श्रीमद्भ्यां स्यादसावित्यनुपधि वरदाचार्यरामानुजाभ्यां
सम्यग्दृष्टेन सर्वंसहनिशितधिया वेङ्कटेशेन क्लृप्तः।
सेव्योऽसौ शान्तचित्तैः(पित्तैः) श्रवणरसनया शान्तिलार्थिभिर्वा
सिद्धः शरीरकार्थे सहजबहुगुणः स्रग्धरादुग्धराशिः॥२॥

ஸ்ரீமத் நடாதூர் அம்மாளும், ஸ்ரீமத் அப்புள்ளாராலும் தாமாகவே,

''இவன் சிறந்து திகழ்வான்'' என்று நன்கு கடாக்ஷம் செய்யப் பெற்று அதன் மூலம் எல்லாம் அறியும் கூர்மையான ஜ்ஞானம் பெற்றவர் ஸ்ரீதேசிகன்; அவரால் இயற்றப்படும் இந்த நூலானது, ஸ்ரக்தரா-ச்லோகங்கள் ஆன பாற்கடல் போன்றது ஆகும்.

➤ பாலானது, சாரீரகார்த்தம் (உடல் சுகத்துக்காக ஆகும்);

இந்த நூலானது, சாரீரகார்த்தம் (வேதாந்த -அர்த்தத்தை உடையது).

➤ பாலானது, ஸஹஜ-பஹுகுணம் (இயல்பாகவே இனிமை முதலிய பல குணங்களைக் கொண்டது).

இந்த நூலானது, ஸஹஜ-பஹுகுணம் (எளிதாகவே, அனுபவிக்க இனிமை முதலிய பல குணங்களைக் கொண்டது; அல்லது எம்பெருமானது இயல்பான பல குணங்களை எடுத்துரைப்பது).

➤ பாலானது, சாந்த சித்தர்களால் (நோயற்று நிம்மதியாக இருப்பவர்களால்) ஏற்கத் தக்கது.

இந்த நூலானது, சாந்தசித்தர்களால் (மனதை அடக்கி கவனமாக படிப்பவர்களால்) ஏற்கத் தக்கது.

➤ பாலானது சாந்தியை (நோயற்ற நிம்மதியை) வேண்டுபவர்களாலும் ஏற்கத் தக்கது.

இந்த நூலானது, சாந்தியை (ஸம்ஸார-பயமற்ற நிலையை) விரும்புபவர்களாலும் ஏற்கத் தக்கது.

➤ பாலானது நாவினால் சேவ்யம் (பருக ஏற்றது).

இந்த நூலானது செவியையே நாவாக ஆக்கிக் கொண்டு சேவ்யம் (அனுபவிக்க ஏற்றது).

★★★★★★★★★★★★★★★★★★

**ஸ்ரீபாஷ்யத்தின் முழுப் பொருள்**

शास्त्रं त्वे(चै)तत् समन्वित्यविहतिकरणप्राप्तिचिन्ताप्रधानै-
रध्यायैः षोडशाङ्घ्रि द्विकयुगभिदुरं षट्कभेदादिनीत्या।
तत्राद्यं वक्ति सिद्धं विषयमपि परं तत्प्रतिद्वन्द्वियुग्मं
स्वप्राप्तेः साधनं च स्वयमिति हि परं ब्रह्म तत्रापि चिन्त्यम्॥१७॥

இந்த வேதாந்த-சாஸ்த்ரத்தில் மொத்தமாக இரு பாகங்கள்; ஒவ்வொரு பாகத்திலும் இரு அத்யாயங்கள் -

1. அதில் முதல் பாகமான இரு அத்யாயம் ஸித்த-விஷயம்;ஏற்கனவே இருக்கும் விஷயமான பரமாத்மாவைப் பற்றியது.
2. அடுத்த பாகமான இரு அத்யாயம், ஸாத்ய விஷயம்; இனி வர வேண்டியதான உபாயம், பலன் எனும் விஷயங்களைப் பற்றியது.

இரண்டாவது பாகத்திலும் கூட, அடைய வேண்டிய பலன் பரமாத்மாதான்; பலனளிக்கும் உபாயமும் பரமாத்மாதான்; ஆகையால், பரமாத்மாதான் மொத்த சாஸ்த்ர-விசாரத்துக்கும் ஒரே விஷயமாக ஆகிறான்.

பன்னிரண்டு அத்யாயங்கள் கொண்ட பூர்வமீமாம்ஸாவை ஆறு-அத்யாயங்கள் கொண்ட இரு பாகமாக சொல்வதுபோல, இது ஆகும்.

இந்த சாஸ்த்ரத்தில் நான்கு அத்யாயங்கள்; அவற்றின் விஷயங்கள் -

1. ஸமன்வயம் - உலகின் காரணமாக ப்ரஹ்மம் ஆவதில் வேதாந்தவாக்யங்களின் பொருத்தம்.
2. அவிரோதம் - உலக-காரணமாக ப்ரஹ்மம் ஆவதில் எந்தவிதமான முரண்பாடும் இல்லாமை.
3. உபாயம் - ப்ரஹ்மத்தை அடைவதற்கு உபாயமான ப்ரஹ்மவித்யை.
4. ப்ராப்தி - ப்ரஹ்மத்தை அடைதல் எனும் பலன்.

ஒவ்வொரு அத்யாயத்துக்கும் நான்கு பாதங்களாக பதினாறு பாதங்கள் உள்ளன.

★★★★★★★★★★★★★★★★★★★★★★

**பதினாறு பாதங்களின் கருத்து**

स्रष्टा देही स्वनिष्ठो निरवधिमहिमाऽपास्तबाधः श्रितात्मः
स्वात्मादेरिन्द्रियादेरुचितजननकृत् संसृतौ तन्त्रवाही।
निर्दोषत्वादिरम्यो बहुभजनपदं स्वार्हकर्मप्रसाद्यः
पापच्छिद् ब्रह्मनाडीगतिकृतिवहन् साम्यदश्चात्र वेद्यः॥१९॥

ஸ்ரீபாஷ்யத்தில் பதினாறு பாதங்களில் சொல்லப்படும் விஷயங்கள் -

பரமாத்மா ஆனவன் -

1. உலகங்களை படைப்பவன்.
2. உலக-பொருள்களுக்கு உள்ளே இருந்து ஆளும் ஆத்மா ஆனவன்.
3. உலகப்பொருளை சாராமல் (கர்ம-வசமின்றி) ஸ்வ-தந்த்ரனாக இருப்பவன்.
4. அளவற்ற பெருமை உடையவன்.
5. மறுக்கப்பட முடியாதவன்.
6. அடியவர்களுக்கு உண்மையானவனாய் மற்றவர்களுக்கு அறிய அரியவன்.
7. ஆகாசம், ஆத்மா முதலியதை உரிய முறையில் படைப்பவன்.
8. இந்த்ரியங்கள் முதலியதை உரிய முறையில் படைப்பவன்.
9. ஸம்ஸாரத்தை (மரணம், ஜனனம், ப்ரளயம் உட்பட) வழி நடத்துபவன்.
10. தோஷமற்றவனாக கல்யாண குணக்கடலாக இனியவன்.
11. பல பக்தி-வித்யைகளில் த்யானம் செய்யப்படும் விஷயம் ஆனவன்.
12. தனக்கே உரிய கர்ம-அனுஷ்டானங்களால் திருவுள்ளம் உகப்பவன்.
13. உபாயம் செய்பவரின் பாபங்களை வேரறுப்பவன்.
14. அவர்களை இறுதியில் ப்ரஹ்மநாடி வழியாக சரீரத்திலிருந்து வெளியேறச் செய்பவன்.
15. அவர்களை அர்ச்சிராதிகள் மூலமாக அழைத்துச் செல்பவன்.
16. அவர்களுக்கு மோக்ஷத்தில் தனக்கு சமமான ஆனந்தத்தை அளிப்பவன்.

★★★★★★★★★★★★★★★★★★

**சாஸ்த்ர-ஆரம்பமான முதல் நான்கு அதிகரண-பாகத்தின் ஸாரம்**

आत्मन्येवं परस्मिन्नकृत इति मिते(मते) विश्वहेतुत्वलक्ष्ये
शास्त्रैकस्थापनीये निरुपधिपरमप्रेमयोग्ये प्रसक्ते।
ईदृक्त्वं स्यात् यथार्हं प्रकृतिपुरुषयोर्नानुमानाद्ययोग्यौ
दुःखास्पृष्टौ च तावित्यथ परकथनं दोधवीति क्रमेण॥५४॥

முதல் பாதத்தில் முதல் நான்கு அதிகரணங்கள் சாஸ்த்ர-ஆரம்பமாக உள்ளவை. அதில் சொல்லப்பட்ட பரமாத்மா ஆனவன் -

1.1.1 ஏற்கனவே ஸித்தமாக இருப்பவனாய் சாஸ்த்ரத்தில் அறியத் தக்கவன்.

1.1.2 உலகத்தின் ஸ்ருஷ்டி-ஸ்திதி-நாசத்துக்கு காரணம் ஆனவன்.

1.1.3 சாஸ்த்ரத்தால் மட்டும் அறியப்பட முடிபவன்.

1.1.4 விரும்பத் தக்கவனாக அளவற்ற உயர்ந்த ஆனந்தன் ஆனவன்.

இதற்கு பிறகு, ப்ரக்ருதியும் ஜீவனும்தான் இப்படி ஆகிறவர்கள் என்று பிறமதத்தினர் சொல்வதை அடுத்த இரு அதிகரணங்களால் வரிசையாக போக்குகிறார்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★

**1-1.அயோகவ்யவச்சேத-பாதம்**

*(உலகின் காரணமாக ப்ரஹ்மம் ஆகாது என்பதை மறுத்தல்)*

स्वेच्छातः सर्वहेतुः शुभगुणविभवानन्तनिस्सीमहर्षः
शुद्धाकर्मोत्थदिव्या(नित्या)कृतिरनुपधिकाकाशनादिस्वभावः।
सप्राणाप्राणभेदव्यतिभिदुरजगत्प्राणनो दिव्यदीप्तिः
प्राणेन्द्राद्यान्तरात्मा प्रभुरधिकरणैः सप्तभिः प्रत्यपादि॥७८॥

பரமாத்மா ஆனவன்,

1.1.5 தன் ஸங்கல்பத்தாலேயே எல்லாவற்றுக்கும் காரணம் ஆனவன்.

1.1.6 மங்களமான குணங்களாலும் விபவங்களாலும் எல்லையற்ற அளவற்ற ஆனந்தகுணம் உடையவன்.

1.1.7 கர்மத்தால் உண்டாகாத சுத்தமான திவ்யமான திருமேனி உடையவன்.

1.1.8 எல்லா விதத்தாலும் ப்ரகாசம் ஆனவன்.

1.1.9 ப்ராணனுடைய ஜீவிகளாகவும் ப்ராணன் அற்ற பொருள்களாகவும் இருவிதமாக ஆகும் உலகத்தை வாழ்விப்பவன்.

1.1.10 திவ்ய-ஜ்யோதிஸ் ஆனவன்.

1.1.11 ப்ராணனுக்கும் இந்திரனுக்கும் அந்தராத்மா ஆக சொல்லப்பட்டவன்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## 1-2.அஸ்பஷ்ட ஜீவ லிங்கக பாதம்

(தெளிவில்லாத ஜீவ-அடையாளங்கள் கொண்ட வாக்யங்களை ஆராய்தல்)

स्वाधीनाशेषसत्तास्थितियतनतया सर्वभावेन तिष्ठन्
ग्रस्ताशेषोऽक्षिनित्यस्थितिरखिलतनुः कल्पिताग्न्यादिगात्रः।
स्वर्लोकाद्यङ्गवैश्वानरमितिविषयो लक्षणस्याऽऽदिमस्य
प्रोक्तः पादे द्वितीये श्रुतिनिकरशिरश्शेखरः श्रीनिवासः॥९८॥

உலகின் காரணமான பரமாத்மா ஆனவன் -

1.2.1. எல்லா பொருள்களின் ஸ்வரூபம், நிலைப்பு, செயல்பாடுகளை தனக்கு அதீனமாக கொண்டதால் எல்லா பொருளுமாக இருப்பவன்.

1.2.2. எல்லாவற்றையும் உண்டு, ஸம்ஹாரம் செய்பவன்

1.2.3. கண்ணில் எப்போதும் இருப்பவன் (அப்படி யோகிகளுக்கு தெரிபவன்).

1.2.4. எல்லாவற்றையும் சரீரமாக கொண்ட அந்தர்யாமி ஆனவன்.

1.2.5. த்யானத்தில் ஸ்வர்க்கலோகம் முதலியதை தலை முதலியதாக எண்ணும்படி (மிகப்பெரிய உருவில்) இருப்பவன்.

1.2.6. ஸ்வர்க்கலோகத்தை அங்கமாகக் கொண்ட வைச்வானரனாக த்யானம் செய்யப் படுபவன்.

இப்படியாக வேதாந்த-பூஷணன் ஆன ஸ்ரீநிவாஸன் சொல்லப்பட்டான்.

★★★★★★★★★★★★★★★★★

## 1-3.ஸ்பஷ்ட ஜீவ லிங்கக பாதம்

(தெளிவான ஜீவ-அடையாளங்கள் கொண்ட வாக்யங்களை ஆராய்தல்)

विश्वात्माऽनन्तभूमा नियमनधृतिकृन्मुक्तभोग्यस्वभावो
दहस्वाधारसर्वो हृदयपरिमितावस्थया सर्वयन्ता।
देवादीनामुपास्यो वसुमुखविबुधैः स्वात्मभावेन सेव्यः
शूद्राद्योपास्त्यनर्हः प्रभुरिह बुबुधे नामरूपैककर्ता॥१२९॥

உலகின் காரணமான பரமாத்மா ஆனவன் -

1.3.1 உலக பொருளுக்கு எல்லாம் ஆத்மா ஆனவன்.

1.3.2 அளவற்ற பெருமையால் உயர்ந்தவன்.

1.3.3 உலகை ஆள்பவன், உலகை தரிப்பவன்.

1.3.4 மோக்ஷம் அடைந்தவர்களால் அனுபவிக்கப் படும் தன்மையன்.

1.3.5 ஹ்ருதயத்தில் சிறிய-அளவினனாகவே எல்லாவற்றுக்கும் ஆதாரமானவன்.

1.3.6 ஹ்ருதயத்தில் சிறிய-அளவினனான நிலையில் எல்லாவற்றையும் ஆள்பவன்.

1.3.7 தேவர்கள் முதலியவரால் உபாஸனம் (த்யானம்) செய்யத் தக்கவன்.

1.3.8 வஸுக்கள் முதலான தேவர்களால் தம் அந்தராத்மாவாக உபாஸனம் செய்யத் தக்கவன்.

1.3.9 கடைசி வர்ணத்தவரால் உபாஸனம் செய்யத் தகாத பெருமையன்.

1.3.10 பொருள்களுக்கு நாம-ரூபங்களை (பெயர் மற்றும் உருவத்தை) வகுப்பவன்.

★★★★★★★★★★★★★★★★★★★★★

## 1-4. ஸ்பஷ்டதர ஜீவ லிங்கக பாதம்

(மிகத் தெளிவான ஜீவ-அடையாளங்கள் கொண்ட வாக்யங்களை ஆராய்தல்)

साङ्ख्योक्तप्रक्रियोक्तेः तदभिमतसृजेः तत्प्रसङ्ख्यानक्लृप्तेः
तत्प्रोक्ताव्याकृतैक्यात् स्ववृजिनवचनात् तत्फलावद्ययोगात्।
भेदात् कर्तृप्रकृत्योर्द्रुहिणशिवमुखानेकहेतुश्रुतेश्च
क्षिप्तं पादत्रयोक्तं श्रुतिहृदयसमुद्घाटनादन्वरक्षत्॥१५२॥

பரமாத்மாவை சொல்லும் வேதமானது, சில குறிப்பிட்ட இடங்களில்,

1.4.1. ஸாங்க்யமதத்தினர் சொன்ன தத்த்வ முறையை சொல்கிறது என்னும் வாதம் சரியில்லை; இந்த்ரியங்கள், விஷயங்கள் முதலியதை வசீகரணம் செய்வதன் மூலம் அடையப் படுபவன் பரமாத்மா என்கிறது.

1.4.2. ஸாங்க்யர் சொன்னபடி வெறும் ப்ரக்ருதியிலிருந்து ஸ்ருஷ்டி முறையை சொல்கிறது என்னும் வாதம் சரியில்லை; உலகக் காரணமான மூலப்ரக்ருதிக்கு ஆத்மாவாக பரமாத்மா இருக்கிறான் என்பதை ஏற்கிறது.

1.4.3. ஸாங்க்யர் சொன்ன எண்ணிக்கையை குறிக்கிறது என்னும் வாதம் சரியில்லை; இந்த்ரியங்களை ஒளிரச் செய்பவன் பரமாத்மா என்கிறது.

1.4.4. ஸாங்க்யர் சொன்ன அவ்யாக்ருதம் என்பதை சொல்கிறது என்னும் வாதம் சரியில்லை; அதனை சரீரமாகக் கொண்ட பரமாத்மாவே காரணம் என்கிறது.

1.4.5. புண்யபாபம் ஆகிற கர்மம் உடையதாக காரணப்பொருளை சொல்கிறது என்னும் வாதம் சரியில்லை; உலகப் படைப்பு என்பது பரமாத்மாவின் கர்மம் (செயல்) என்கிறது.

1.4.6. கர்ம-பலனான தாற்காலிக சுகதுக்கமயமான உறவுகள் உடையதாக காரணப் பொருளை சொல்கிறது எனும் வாதம் சரியில்லை; இந்த உறவுகளை அமைத்துத் தரும் ஆனந்தமயன் ஆன பரமாத்மாவை சொல்கிறது.

1.4.7. உபாதானகாரணமும் நிமித்தகாரணமும் வேறாகும் என்னும் வாதம் சரியில்லை; பரமாத்மாவே உபாதானமும் நிமித்தமும் என்கிறது.

1.4.8. ப்ரஹ்மா, சிவன் முதலியவரை காரணமாக சொல்லவில்லை; பரமாத்மாவான நாராயணனே காரணம் என்கிறது.

அப்படி தெளிவான வேதத்தால் சொல்லப்படுபவன் பரமாத்மா என்று கருத்து.

இப்படி, வேதாந்தத்தின் உட்பொருளை விளக்குவதன் மூலம், முன் மூன்று பாதங்களில் சொன்ன விஷயத்தை காப்பாற்றி அருளினார்.

★★★★★★★★★★★★★★★★★★

## 2-1. ஸ்ம்ருதி பாதம்

(ப்ரஹ்மம் காரணம் என்பதை ஸ்ம்ருதியைக் கொண்டு மறுக்க முடியாமை)

साङ्ख्यस्मृत्या विरोधात् विधिमतविहतेः कार्यवैरूप्यतोऽस्मिन्
एकार्थानेकतन्त्रोदितविहततया देहभोगावियुक्त्या।
कार्योपादानभेदात् स्वहितविहतितः कारकस्तोमहानेः
कृत्स्नांशाद्यूहबाधात् कृतिविफलतयाप्युत्थितं प्रत्यविध्यत्॥१७५॥

முன் சொன்னபடி பரமாத்மாவே காரணம் என்பதானது-

2.1.1. ஸாங்க்ய-ஸ்ம்ருதிக்கு முரண்படுவதால், தவறு என்பது கிடையாது; பல நல்ல ஸ்ம்ருதிகளுக்கு முரண்பட்டதான ஸாங்க்ய-ஸ்ம்ருதிதான் தவறாகும்.

2.1.2. நான்முகன் செய்த யோக-மதத்துக்கு முரண்படுவதால் தவறு என்பது கிடையாது; யோகமதம்தான் தவறாகும்.

2.1.3. கார்யப்பொருளும் காரணப் பொருளும் வேறான வகையில் ஆகாது என்பது கிடையாது; வேறான வகையிலும் காரண-கார்ய-பொருள்கள் ஆகலாம் என்பதால், ப்ரஹ்மம் காரணம் ஆகலாம்.

2.1.4. ஒரே கருத்தை உடைய பல சாஸ்த்ரங்களுக்கு முரண்படுவதால் தவறானது என்பது கிடையாது; அவையே ஒன்றுக்கொன்று முரண்பட்டு தவறாக இருக்கின்றன.

2.1.5. சரீரம் உடைய பரமாத்மாவுக்கு சுகதுக்க போகம் தவிர்க்க முடியாது என்னும் வாதம் சரியில்லை; சரீரம் இருந்தாலும் சுகதுக்கம் இல்லாமல் இருக்கலாம்.

2.1.6. கார்ய-பொருளும் உபாதானகாரணமும் வேறாக வேண்டும் என்னும் வாதம் சரியில்லை; பரமாத்மாவே காரணமும் கார்யமும் ஆவான்.

2.1.7. பரமாத்மாவே ஜீவனாக சொல்லப்படுவதால், தனக்கே துக்கம் தேடிக்கொள்ள நேரிடும் என்னும் வாதம் சரியல்லை; பரமாத்ம-ஸ்வரூபம் வேறானதால், அதில் துக்கம் கிடையாது.

2.1.8. துணைக் காரணங்கள் இல்லாமல் பரமாத்மா காரணமாக முடியாது என்னும் வாதம் சரியில்லை; துணைக் காரணம் இல்லாமலேயே ஒரு பொருள் காரணம் ஆகலாம்.

2.1.9. காரணப் பொருள், முழுவதுமாகவோ ஒரு பாகம் மட்டுமோ மாற வேண்டும் என்னும் வாதம் இங்கு வராது; வேதம் சொல்லும் முறையில், மாற்றம் இல்லாத பரமாத்மா காரணமாவதை விளக்கலாம்.

2.1.10. பரமாத்மாவுக்கு படைப்பின் மூலம் பெற வேண்டிய பயனில்லை என்பதால் அவன் படைப்பவன் ஆகமாட்டான் என்னும் வாதம் சரியில்லை; லீலா-ரஸத்துக்காக படைப்பு ஆகிறது.

★★★★★★★★★★★★★★★★★★

## 2-2. தர்க்க பாதம்

(ப்ரஹ்மம் காரணம் என்பதை தர்க்கம் கொண்டு மறுக்க முடியாமை)

पादेऽस्मिन् कापिलस्थैः कणभुगनुगतैर्वृद्धवैभाषिकाद्यैः
योगाचाराभिधानैः सुगतमतरहश्शून्यवादप्रसक्तैः।

अर्हत्सिद्धान्तभक्तैः पशुपतिसमयस्थायिभिश्चोपरोधं
क्षिप्त्वाऽथो पञ्चरात्रे(त्रं) श्रुतिपथमवदत् पञ्चमाम्नायदर्शी॥२१९॥

பிற மதங்களைக் கொண்டு வேத-அர்த்தத்தை மறுக்க முடியாது; ஏனெனில்,

2.2.1 ஸாங்க்ய மதத்தவர் சொல்வது தவறு.

2.2.2 வைசேஷிக மதத்தினர் சொல்வது தவறு.

2.2.3 வைபாஷிக பௌத்த மதத்தினர் சொல்வது தவறு.

2.2.4 யோகாசார பௌத்த மதத்தினர் சொல்வது தவறு.

2.2.5 பௌத்தமத ரகஸ்யமாக சூன்யவாத-மதத்தினர் சொல்வது தவறு.

2.2.6 ஜைனமத-பக்தர்கள் சொல்வது தவறு.

2.2.7 சைவமதத்தினர் சொல்வது தவறு.

2.2.8 வேத நெறிக்கு ஏற்ப ஸ்ரீபாஞ்சராத்ர மதத்தில் சொல்வது சரியானது.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## 2-3. வியத் பாதம்

(ஆகாசம் முதலியவை உண்டாகும் முறை)

क्लृप्तिर्व्योमादिकेऽपि, क्रमभुवि च विभोः प्राच्यतत्त्वैर्विशिष्टात्
जीवस्यौपाधिकौ तु प्रजननविलयौ, चिद्घनज्ञातृताऽस्य।
कर्तृत्वं पारतन्त्र्यं, गुणतनुनयतो विश्वरूपांशता चे-
त्याम्नायान्योन्यबाधव्यपनयनवियत्पादसाध्यानि सप्त॥२५२॥

பரமாத்மாவின் படைப்புகளில் சில விஷயங்கள் -

2.3.1. ஆகாசம் முதலியதும் கூட படைக்கப்படும் பொருள்தான்.

2.3.2. முன்முன் தத்த்வங்களுடன் கூடிய பரமாத்மாதான் வரிசையாக அடுத்தடுத்த பொருள்களுக்கு காரணமாகிறான்.

2.3.3. ஜீவனுக்கு பிறப்பு-இறப்பு என்பது சரீரத்தையும் ஜ்ஞானத்தையும் இட்டு ஆகும்; ஜீவஸ்வரூபம் நிலையானது; அதற்கு ஆக்கமோ அழிவோ கிடையாது.

2.3.4. ஜீவன் ஜ்ஞானஸ்வரூபம் (ஸ்வயம்ப்ரகாசம்) ஆனவன்; எப்போதும் ஜ்ஞானத்தை உடையவனும் கூட.

2.3.5. செயல்களைச் செய்பவன் ஜீவன்தான். (சரீரம் செயல்படுத்தப்படும்)

2.3.6. பரமாத்மாவுக்கு அதீனமாகவே ஜீவன் செய்பவன் ஆகிறான்.

2.3.7. த்ரவ்யத்துக்கு குணம் போல், ஆத்மாவுக்கு சரீரம் போல, பரமாத்மாவுக்கு ஜீவன் (பிரிக்க முடியாதபடி) ஒரு பகுதி ஆவான்.

இப்படி வேதத்தில் பரமாத்மாவிலிருந்து ஆகாசம், ஜீவன் முதலியது உண்டாவதாக சொல்வதில், ஒன்றுக்கொன்று முரண்பாடு இல்லை என்பதை விளக்குகிறது.

★★★★★★★★★★★★★★★★★★★★★★

## 2-4. ப்ராண பாதம்

*(ப்ராணன் முதலியவை உண்டாகும் முறை)*

अक्षाणां जन्मसङ्ख्यापरिमितय इह प्राणवायोस्स्वरूपं
तत्सौक्ष्म्यं देवतादेस्तदुभयविषयाधिष्ठितौ पारतन्त्र्यम्।
प्राणस्यानिन्द्रियत्वं बहुविधचिदचिद्व्यष्टिनामादि चाऽऽख्यात्
पञ्चीकर्तुः स्वनाभिप्रभवकवचितादूचिरे प्राणपादे॥२६६॥

பரமாத்மாவின் படைப்பில் சில விஷயங்கள் -

2.4.1. இந்த்ரியங்கள் படைக்கப் படுபவையே.

2.4.2. இந்த்ரியங்களின் எண்ணிக்கை பதினொன்று.

2.4.3. இந்த்ரியங்களின் அளவு அணு அளவாகும்.

2.4.4. ப்ராண-வாயு என்பது வாயுவின் ஒரு குறிப்பிட்ட நிலை என்பதே.

2.4.5. ப்ராண-வாயு ஸூக்ஷ்மமானது.

2.4.6. ப்ராண-வாயுவையும், இந்த்ரியங்களையும் அதிஷ்டானம் செய்யும் தேவர் முதலியவர் பரமாத்மாவுக்கு கட்டுப்பட்டு அதிஷ்டானம் செய்வர்.

2.4.7. ப்ராண-வாயு என்பது இந்த்ரியம் அல்ல.

2.4.8. முதலில் ஸமஷ்டி-ஸ்ருஷ்டியில் பஞ்சீகரணம் செய்யும் பரமாத்மாவே, வ்யஷ்டி-ஸ்ருஷ்டியில், நான்முகனை சரீரமாகக் கொண்டு, சேதன-அசேதன-பொருள்களில் நாம-ரூபங்களை வகுப்பவன்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★

## 3-1. வைராக்ய பாதம்

(வைராக்யம் பிறப்பதற்காக ஜீவனுக்கு தோஷங்களை சொல்லுதல்)

पादे त्वर्थाः षडस्मिन् वपुरिह विजहत् भूतसूक्ष्मैस्सहेयात्;
भुक्तस्वर्गोऽवरोहेदनुशयसहितो मात्रयाभिन्नमार्गः।
चन्द्रावाप्त्यादि न स्यान्निरयपथजुषाम्; अम्बरादौ सदृक्त्वं
तस्माच्छीघ्रोऽवरोहः; परवपुषि चिरं व्रीहिपूर्वे तु योगः॥२८८॥

ஜீவன் ஆனவன் -

1.1.1. உடலை விட்டு வேறு லோகம் போகும்போது, ஸூக்ஷ்மமான பஞ்ச-பூதங்களுடன் கூட போகிறான்.

1.1.2. ஸ்வர்க்க-சுகத்தை அனுபவித்துவிட்டு, மீதியான புண்யபாப-கர்மங்-களுடன் கூட மறுபிறவிக்காக இறங்குகிறான்; சென்ற வழியிலும், சற்றே வேறான வழியிலுமாக இறங்குகிறான்.

1.1.3. பாபமே செய்து, நரகவழியில் செல்பவர்களுக்கு சந்த்ரனை அடை-தல், அந்த வழியில் திரும்பி இறங்குதல் முதலியது கிடையாது. (புழு பூச்சிகளாக பிறப்பர்)

1.1.4. வரும்போது ஆகாசம் முதலியது போல ஆகிறான்; அதாவது ஆகாசம் என்று சொல்லும்படி அதனுடன் சேர்ந்து இருக்கிறான்.

1.1.5. ஆகாசத்திலிருந்து தாமதம் இல்லாமல் விரைவில் இறங்குகிறான்.

1.1.6. வேறொரு ஜீவன் வசிக்கும் சரீரமான நெல் முதலியதில், அதிக காலம் சேர்ந்து இருக்கிறான்.

(பிறகு உணவாக மனிதனின் உடலுக்குள் போய், பிறக்கிறான்; இப்-படி ஜீவனது ஸம்ஸார பயணத்தை நடத்தி வைப்பவன் பரமாத்மா).

★★★★★★★★★★★★★★★★★★★★★

## 3-2. உபயலிங்க பாதம்

(பரமாத்மாவுக்கு இரு அடையாளங்களை சொல்வதன் மூலம் அவனிடம் பற்று உண்டாக்குதல் )

पादे स्वाप्नार्थहेतुस्तदयमिह सुषुप्स्याधृतिः सुप्तगोप्ता
मुग्धोद्बोधादिकर्ता त्वनघशुभगुणोऽचिद्भिरंशी स्वदेहैः।

पारम्यस्यैकसीमा सकलफलद इत्युच्यते भक्तिभूम्ने
सत्ये ह्येवं(त्वेवं) गुणादावथ परभजने रूपभेदादि चिन्त्यम्॥३२०॥

பரமாத்மா ஆனவன் -

1.2.2. கனவில் தெரியும் பொருள்களை உண்மையாக படைப்பவன்.

1.2.3. உறக்கத்தில் ஜீவனுக்கு ஆதாரமான இருப்பிடம் ஆனவன்.

1.2.4. உறங்கும் ஜீவனை அப்படியே பாதுகாப்பவன்.

1.2.5. மூர்ச்சை அடைந்தவனுக்கு விழிப்பு முதலியது அளிப்பவன்.

1.2.6. தோஷமற்ற கல்யாண குணங்கள் உடையவன்.

1.2.7. அசேதனங்களை தன் சரீரமாகஒரு பாகமாகக் கொண்டவன்.

1.2.8. உயர்வின் எல்லை நிலையில் இருப்பவன்.

1.2.9. எல்லா பலன்களையும் அளிப்பவன்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## 3-3. குணோபஸம்ஹார பாதம்

(ப்ரஹ்ம-உபாஸனத்தில் குணங்களை சேர்த்துக் கொள்ளுதல் பற்றிய் ஆராய்வு)

विद्यैक्योद्गीथविद्याद्वितयविभजन-प्राणविद्यैकभावाः
सर्वास्वानन्दतादेर्गुणवदनुगतिः प्राणवासस्त्वदृष्टिः।
शाण्डिल्यैक्यं विभज्य स्थितिरहरहमोः सम्भृतेस्स्थानसीमा
पुंविद्या या विभेदोऽध्ययननियततः शन्न इत्यादिकानाम्॥३९०॥

हानाद्यन्योन्ययोगः तदुचितसमयो देवयानादिसाम्यं
सर्वत्रास्थूलतादि व्यतिहरणमथानेकशिष्यश्रुतानाम्।
दह्रोपास्त्येकभावो गुणफलतावधिरुद्गीथमाश्रित्य दृष्टौ
गुण्यावृत्तिर्गुणार्थं(र्था) निखिलपरतरोपास्तिविद्यावसायः॥३९१॥

विद्यारूपा मनश्चित्प्रभृतय उचितज्ञानरूपक्रतुस्थाः
क्षेत्री शुद्धोऽनुचिन्त्यः क्रतुगुणसकलोद्गीथपूर्वेषु दृष्टिः।
सामस्त्येनैव वैश्वानरभजनमथानेकविद्योपपत्तिः
मोक्षार्थानां विकल्पः पुनरनियतिरुद्गीथदृष्टेरिहोचे॥३९२॥

உபநிஷத்தில் சொன்ன வித்யைகள் பற்றிய விஷயங்கள் -

**3.3.1.** விஷயம் முதலியது சமமாக இருந்தால், பல சாகைகளில் சொல்லப்-படும் வித்யைகள் ஒன்றாகும்.

**3.3.2.** விஷயம் வேறாவதால், உத்கீதவித்யை, இரு சாகைகளில் வெவ்வே-றாகிறது.

**3.3.3.** ப்ராணவித்யை இரு சாகைகளில் ஒன்றாகும்.

**3.3.4.** எல்லா ப்ரஹ்ம-வித்யைகளிலும் ஆனந்தத்வம் முதலிய ஸ்வரூப-நிரூபக-குணங்கள் எண்ணப்பட வேண்டியவை.

**3.3.5.** ப்ராணனின் வஸ்த்ரமாக ஜலத்தை எண்ணுவது ப்ராண-வித்யையில் சொல்லப் படுகிறது.

**3.3.6.** வேத-சாகைகளில் சொல்லப்படும் சாண்டில்யவித்யை வெவ்வேறல்ல; ஒன்றுதான்.

**3.3.7.** அஹஸ், அஹம் ஆகிய பெயர்கள் இருவேறு வித்யைகளில் ப்ரஹ்-மத்துக்கு ஆகும்.

**3.3.8.** ஸம்ப்ருதி (வீர்யங்கள் சேர்ந்திருத்தல்) முதலிய குணங்களுக்கு, இடத்தை அனுசரித்து சில வித்யைகளில் மட்டும் எண்ணப்பட வேண்டிய வரையறை உண்டு.

**3.3.9.** புருஷவித்யை இரு சாகைகளில் வெவ்வேறாகும். (தைத்திரீயத்தில், சரணாகதி செய்தவன் வேறெதையும் செய்ய வேண்டிய தேவையின்-மையைக் குறிக்கிறது)

**3.3.10.** 'சம் நோ மித்ர:' முதலிய மந்த்ரங்கள் வேத-அத்யயனத்துக்கு அங்க-மாகும். (ப்ரஹ்ம-வித்யைக்கு அங்கம் அல்ல)

**3.3.11.** வித்யையில் எண்ணப்படும் ஹானி (புண்யபாபங்களை விடுதல்), உபாயனம் (புண்யபாபங்கள் பிறரை அடைதல்) ஆகியவை ஒன்றுக்-கொன்று சேர்த்துக் கொள்ளப்படும்.

**3.3.12.** முழு புண்யபாபங்களை விடுதல் என்பது மரணகாலத்திலேயே ஆகும்.

**3.3.13.** அர்ச்சிராதி கதி என்பது ப்ரஹ்மவித்யை அனுஷ்டானம் செய்பவர் எல்லாருக்கும் பொதுவானது.

3.3.14. ஸ்தூலமாக ஆகாமை முதலியதாக சொல்லப்படும் தோஷம் அற்றமை என்கிற குணமானது, எல்லா ப்ரஹ்ம-வித்யைகளிலும் எண்ணப்பட வேண்டியது.

3.3.15. சிஷ்யர்கள் கேட்டு அறிந்த ப்ரஹ்ம-குணங்களை ஒருவருக்கொரு-வர் சேர்த்துக்கொண்டு ப்ரஹ்மத்தை தெளிவாக அறிதல் உஷஸ்த-கஹோல-ப்ரச்னம் எனும் பாகத்தில் உள்ளது.

3.3.16. தஹரவித்யை பல சாகைகளில் ஒன்றே ஆகும்.

3.3.17. உத்கீதவித்யை ஆனது, யாகத்தில் கட்டாயம் செய்யப்பட வேண்டிய அங்கம் அல்ல; அதற்குத் தனி பலன் சொல்லப்பட்டு உள்ளது.

3.3.18. தஹரவித்யையில் ஒவ்வொரு குணத்தை எண்ணும்போதும், குண-முடைய பரமாத்மாவையும் சேர்த்து எண்ண வேண்டும்.

3.3.19. எல்லா ப்ரஹ்ம-வித்யைகளிலும் த்யானம் செய்யப்படும் ப்ரஹ்மம் என்பது ஸ்ரீநாராயணனே.

3.3.20. மனச்சித் முதலிய கற்பனை-அக்னிகள் ஜ்ஞானமயமான யாகத்தில் சேர்பவை.

3.3.21. ஜீவாத்மாவின் சுத்தமான ஸ்வரூபம் வித்யைகளில் எண்ணப்பட வேண்டும்.

3.3.22. யாகத்துக்கு அங்கமான உத்கீதம் என்பது, பலவாக இருந்தாலும், எல்லாவற்றையும் பற்றியும் உபாஸனம் ஆகலாம்.

3.3.23. வைச்வானர-வித்யையில் முழுவதுமான மிகப்பெரிய வைச்வானர-உருவத்தை த்யானம் செய்ய வேண்டும்.

3.3.24. உபநிஷத்தில் வித்யைகள் பல உள்ளன; மொத்தமாக ஒரே வித்யை என்பது இல்லை. (குறிப்பாக சரணாகதி என்பது தனி வித்யை ஆகும்).

3.3.25. மோக்ஷத்துக்கான ப்ரஹ்ம-வித்யைகளில் ஏதாவது ஒன்றை செய்தால் போதும்; பலன் கிடைக்கும். (சரணாகதி செய்தால் போதும்).

3.3.26. உத்கீத-உபாஸனம் கட்டாயமாக செய்ய வேண்டும் என்கிற நியமம் இல்லை என்பது உறுதிதான்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## 3-4. அங்க பாதம்

(ப்ரஹ்ம-உபாஸனத்துக்கு அங்கங்களை சொல்லுதல்)

विद्या कर्माङ्गिका स्यात् रसतममुखधीश्चोदिता प्रास्त्यभावात्
आख्यानानाञ्च विद्याविधिसविधजुषां तद्विधानार्थतैव।
विद्या साङ्गोर्ध्वरेतस्स्वपि गृहवति सा यज्ञदानाद्यपेक्षा
शान्त्याद्यर्हो गृहस्थोऽप्यविपदि विदुषोऽप्यन्नशुद्ध्यैव सिद्धिः॥४२४॥

एकं विद्याश्रमार्थं विधुरमवि(पि)युतं विद्ययाऽऽहुः श्च्युतं न
ऋत्वङ्गे दृष्टिऋत्विक्कृतिरथ मुनिता चोदिता ध्यानसिद्ध्यै।
बाल्यं शक्त्यादिगुप्तिः बलवदभिहितैः कर्मभिर्नान्यविद्या
तद्वन्मुक्त्यर्थविद्या स्वजनकसुकृतेरित्युवाचात्र पादे॥४२५॥

ப்ரஹ்ம-வித்யையின் அங்கங்கள் பற்றிய விஷயங்கள் -

**3.4.1** மோக்ஷத்துக்கு உபாயமான ப்ரஹ்மவித்யைக்கு, யாகம் முதலிய கர்மம் அங்கமாகும்.

**3.4.2** உத்கீதத்தை உயர்ந்த ரஸமாக சொன்னது, அப்படி உபாஸனம் செய்வதற்கான விதி ஆகும். (வெறும் புகழ்ச்சி அல்ல).

**3.4.3** வித்யைகளில் சொல்லப்படும் கதைகள் அந்த வித்யைகளின் உயர்வைச் சொல்லும் பொருட்டே ஆகும்.

**3.4.4** ஸந்யாஸிகளுக்கு யாகம் முதலிய அங்கங்கள் இல்லாவிட்டாலும், ஸந்யாஸ-ஆச்ரமதர்மங்களை அங்கமாகச் செய்துகொண்டு, ப்ரஹ்ம-வித்யை செய்யலாம்.

**3.4.5** க்ருஹஸ்தனுக்கு ப்ரஹ்ம-வித்யை ஆனது, யஜ்ஞம், தானம் முதலிய அங்கங்களுடன் கூட ஆகும்.

**3.4.6** யஜ்ஞம் செய்யும் க்ருஹஸ்தன், மீதி விஷயங்களில் ஈடுபடாமல், புலனடக்கம் எனும் அங்கமும் செய்ய தகுந்தவன்.

**3.4.7** ப்ரஹ்மஜ்ஞானிக்கும் கூட, ஆபத்து-காலம் தவிர மீதி சமயத்தில், ஆசார-சுத்தமாகவே உணவு இருக்க வேண்டும்.

**3.4.8** அக்னிஹோத்ரம் முதலிய கர்மம் ஒன்றே, ப்ரஹ்மவித்யைக்கு அங்கமாகவும், ஆச்ரமதர்மமாகவும் ஆகலாம்.

3.4.9 மனைவியை இழந்தவரும்கூட தபஸ் முதலியதை அங்கமாகக் கொண்டு ப்ரஹ்மவித்யை செய்யலாம்.

3.4.10 ஆச்ரமநியமம் தவறி,ப்ராயச்சித்தத்தாலும் முழுத்தூய்மை பெற முடியாத பதிதன் ஆனவன் வித்யைக்கு தகுதி பெற மாட்டான்.

3.4.11 யாகத்தில் அங்கம் பற்றிய (உத்கீத)உபாஸனத்தை ருத்விக் செய்ய வேண்டும்.

3.4.12 ப்ரஹ்ம-த்யானம் சித்திப்பதற்காக ப்ரஹ்மத்தையே எப்போதும் எண்ணும் பாங்கு (முனித்தன்மை) தேவை.

3.4.13 ஜ்ஞானிக்கு இருக்க வேண்டிய பால்யம் என்பது, தன் திறமை முத-லியதை வெளிக்காட்டாமை ஆகும்.

3.4.14 அல்ப-பலன்களுக்கான வித்யை ஆனது, பிற பலமான கர்ம-பலன்-களால் தடைபட்டு தாமதமாக சித்திக்கலாம் (உண்டாகலாம்).

3.4.15 மோக்ஷபலனுக்கான வித்யையும் கூட,பெரும்புண்யத்தின் அடியாக விளைந்ததானாலும், பாகவத-அபசாரம் முதலிய வலுவான கர்ம-பலன்களால் தடைபட்டு தாமதமாக சித்திக்கலாம்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## 4-1. ஆவ்ருத்தி பாதம்

*(வித்யையின் பலனாக புண்யபாபங்கள் கழிதல்)*

**आवर्त्या(वृत्ता) ब्रह्मविद्या त्वसकृत्, अहमिति स्याच्च, न स्यात् प्रतीके**
**कर्माङ्गेऽर्कादिदृष्टिः, प्रणिधिरपि भवेत् सासनः प्रत्य(सनस्यान्व?)हश्च।**
**पापे,पुण्ये च नाशादिकम्, अथ तु तयोर्भोग्यताऽऽरब्धकार्ये,**
**कार्यत्वं स्वार्हवृत्तेरिति, कथितमिहारब्धशान्तौ च मोक्षः॥४७४॥**

ப்ரஹ்ம-வித்யையின் ஆரம்பகாலப் பலன்கள் -

4.1.1. ப்ரஹ்மவித்யை என்பது பலமுறை மீண்டும் மீண்டும் பரமாத்மாவை இடைவிடாமல் சிந்தித்தல் ஆகும்.

4.1.2. உபாஸனத்தில், பரமாத்மாவை தனக்கு ஆத்மாவாக, ‘நான்’ என்றே எண்ண வேண்டும்.

4.1.3. உலகப் பொருள்கள் பற்றிய ப்ரதீக-உபாஸனத்தில் நான் என்று ஆத்-மாவாக எண்ணுதல் கிடையாது.

4.1.4. ஒரு ப்ரதீக-உபாஸனத்தில், உத்கீதத்தை ஆதித்யனாக உபாஸனம் செய்ய வேண்டும். (ஆதித்யனை உத்கீதமாக எண்ணக் கூடாது)

4.1.5. அமர்ந்து கொண்டு உபாஸனம் செய்ய வேண்டும்.

4.1.6. இறுதி மரணம் வரை தினமும் உபாஸனம் செய்ய வேண்டும்.

4.1.7. ப்ரஹ்ம-உபாஸனத்துக்கு முன் செய்த பாபங்கள் அழியும்; பின் செய்யப் போவது ஒட்டாது.

4.1.8. புண்யங்களும் அப்படியே, உபாஸனத்துக்கு முன் செய்தவை அழியும்; பின் செய்யப்போவது ஒட்டாது.

4.1.9. பலன் தர ஆரம்பித்துவிட்ட ப்ராரப்தமான புண்யபாபங்கள் அழியாது; பலனை அனுபவித்தே ஆக வேண்டும்.

4.1.10. அக்னிஹோத்ரம் முதலிய நித்யகர்ம-அனுஷ்டானம் ப்ரஹ்ம-வித்யைக்கு உதவும் என்பதால், கட்டாயம் செய்ய வேண்டும். (மீதி புண்யங்கள்தாம் ஒட்டாது).

4.1.11. உபாஸனம் செய்ய ஆரம்பித்த அந்த பிறவியிலோ, அல்லது பின் பிறவியிலோ, ப்ராபப்த-கர்மம் கழிந்தாலே மோக்ஷ-பலன் கிடைக்கும்.

★★★★★★★★★★★★★★★★★★★★

## 4-2. உத்க்ராந்தி பாதம்

(மோக்ஷத்துக்காக இறுதியில் உடலிலிருந்து ஜீவன் வெளியேறுதல்)

सम्पद्येतान्यदक्षं मनसि तदपि तत्संयुतं प्राणवायौ,
सोऽध्यक्षे तैस्समेतः, स च तदखिलवान् भूतवर्गे तु सूक्ष्मे।
उत्क्रान्तिः स्यात् समाना, युतिरथ च परे, सा च संश्लेषमात्रं
निर्गच्छेत् ब्रह्मनाड्या, घृणिभिरथ, निशा,देवरात्र्योश्च मोक्षी॥४९९॥

மரணத்தில் சரீரத்தை விட்டு ஜீவன் வெளியேறும் முறை -

4.2.1. எல்லா இந்த்ரியங்களும் மனஸ்ஸில் சேரும்.

4.2.2. அவற்றுடன் சேர்ந்த மனஸ் ப்ராண-வாயுவில் சேரும்.

4.2.3. அவற்றுடன் சேர்ந்த ப்ராணவாயு, ஜீவனிடம் சேரும்.

4.2.4. எல்லாவற்றுடன் கூடிய ஜீவன், ஸூக்ஷ்மமான பஞ்ச-பூதங்களில் சேர்வான்.

4.2.5. ஜீவன் சரீரத்தை விட்டு வெளியேறும் இந்த முறையானது (பரமாத்-மாவில் சேருவதுவரை) எல்லாருக்கும் பொதுவானது.

4.2.6. பிறகு இவையெல்லாம், பரமாத்மாவில் சேர்வது ஆகும்.

4.2.7. பரமாத்மாவில் ஒன்றிச் சேர்ந்து லயம் அடைவது இல்லை; பரமாத்-மாவுடன் கூட சேர்வது மட்டுமே.

4.2.8. ப்ரஹ்ம-ஜ்ஞானி ஆனவன், ப்ரஹ்மநாடி எனப்படும் நடுநாடி வழி-யாக வெளி வருவான்.

4.2.9. பின் ஸூர்ய-ஒளிக் கதிர்களைப் பற்றிக் கொண்டு மேல் வருவான்.

4.2.10. இரவில் மரணம் அடைந்தாலும் ஜ்ஞானிக்கு மோக்ஷம் உண்டு.

4.2.11. தக்ஷிணாயனத்தில் மரணம் அடைந்தாலும், ஜ்ஞானிக்கு மோக்ஷம் உண்டு.

★★★★★★★★★★★★★★★★★★

## 4-3. கதி பாதம்

*(பரமபதம் போகும் வழியான அர்ச்சிராதி கதி)*

एकत्वं ब्रह्मविद्यापरिषदि सुपथोऽधीयमानस्य तस्मिन्
वायौ स्यात् देवलोकश्रुतिरपि वरुणाद्यन्वयो विद्युतोऽधि।
नेतारोऽमानवान्ताः परपदगमने तद्विदां सोऽयमध्वा
तुर्याध्यायस्य पादे सृतिरधिकरणैरित्थमुक्ता तृतीये॥५१७॥

4.3.1. உபநிஷத்தில் பல இடங்களில் ப்ரஹ்ம-ஜ்ஞானிகளுக்கு சொன்ன அர்ச்சிராதி-கதி என்பது ஒன்றுதான்.

4.3.2. அதில், வாயுதேவனை தேவலோகம் என்ற சொல் குறிக்கிறது.

4.3.3. அதில், மின்னல்-புருஷனுக்குப் பிறகு வருணன் முதலிய மூவர் சேருவர்.

4.3.4. அர்சிஷ் முதல் மின்னல் புருஷன் வரை ஆதிவாஹிகர்கள் (பரமபதம் செல்பவனை அந்த வழியில் அழைத்துச் செல்பவர்).

4.3.5. ப்ரஹ்மத்தை உபாஸனம் செய்பவர்களுக்கு மட்டுமே இந்த அர்ச்சி-ராதி வழி ஆகும்.

★★★★★★★★★★★★★★★★★★★★

## 4-4. பல பாதம்

(மோக்ஷ பலன்)

स्वाविर्भावोऽपवर्गे निरुपधिनियतस्वप्रकार्यन्तदृष्टिः
चिद्रूपस्यैव तद्वच्छ्रुतिमकुटमितैः स्वप्रकारैः सहेक्षा।
सङ्कल्पादेव सिद्धिः तनुषु च नियमोन्मुक्तता ब्रह्मसाम्य-
प्राप्तौ तल्लक्षणांशोज्झनमिति चरमाध्यायतुर्याङ्घ्रिसारः(राः)॥५५१॥

மோக்ஷத்தில் ஜீவன் பெறும் பலன்கள் -

4.4.1. மோக்ஷத்தில் ஜீவனது இயல்பான ஆத்ம-ஸ்வரூபம் வெளிப்படும். (புதிய ஆத்ம-ஸ்வரூபம் உண்டாகாது; கர்மத்தினால் மறைந்திருந்த ஸ்வரூபம், இப்போது வெளிப்படும்).

4.4.2. ஜீவன், தனிப்பட்டவனாக தன்னை காணாமல், எப்போதும் பரமாத்மாவுக்கு சரீரமாக அவனுடனே ஒன்றியவனாக காண்பான்.

4.4.3. ஜ்ஞானஸ்வரூபன் ஆன ஜீவன், அபஹதபாப்மத்வம் முதலிய தன் குணங்களுடன் தன்னைக் காண்பான்.

4.4.4. ஜீவன், தன் ஸங்கல்பத்தாலேயே விரும்பியதைப் பெறும் ஸத்யஸங்கல்பன் ஆவான்.

4.4.5. தேவையானால் சரீரம் எடுத்துக் கொள்வான்; கட்டாய நியமம் இல்லை.

4.4.6. ப்ரஹ்மத்தின் தனிப்பட்ட லக்ஷணங்களைப் பெறாமல், ஆனந்த-அனுபவத்தில் மட்டும் ப்ரஹ்மத்துக்கு சமமாக ஆகி, நிலை பெறுவான். (மீண்டும் ஸம்ஸாரம் வர மாட்டான்).

★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## முடிவுரை

प्रज्ञाधम्मिल्लमल्लीपरिमलमिलितप्राज्ञसेवासमुद्य-
च्छुद्धालोकोज्ज्वलं मां श्रुतिपरिषदुपस्कारिसौभाग्यवद्भिः।
पद्यैरेतैः स्वहृद्यैः प्रणवमहिमवत्पाञ्चजन्यक्रमेण
स्वाध्मातं रङ्गनाथः स्वयमिति मुखरीकृत्य संमोदते स्म॥५६१॥

ஶ்ரீரங்கநாதன்,தன் பாஞ்சஜன்யத்தை ஊதி மகிழ்வது போல என்னை இப்படியாக ஊதி மகிழ்கிறான்; அந்த நாதம்தான் இந்த நூல் ஆகும்.

பாஞ்சஜன்யம் சுத்த-ஆலோகத்தால் (வெண்மை மாறாத தோற்றத்தால்) திகழ்வது; நானும், ஜ்ஞானம் ஆகிற மங்கையின் முடியிலுள்ள மல்லிகை-

யின் மணம் கமழும் ஜ்ஞானிகளான ஆசார்யர்களை சேவிப்பதால் பெற்ற சுத்த-ஆலோகத்தால் (தூய கடாக்ஷத்தால்) சிறப்பவன்.

பாஞ்சஜன்யமானது, ப்ரணவ-உருவில் இருந்து கொண்டு ப்ரணவத்தை ஒலிக்கும் பெருமையை உடையது; நானும் ப்ரணவ-உருவில் இருக்கிற ஸ்ரீபாஷ்யம் பேசும் பெருமையை பெற்றவன்.

பாஞ்சஜன்யத்தின் ஒலிகள் பத்யங்கள் - ஏற்கத் தக்கவை; கவனிக்கத் தக்கவை; என்னுடைய ஒலிகளும் பத்யங்கள் - ச்லோகங்கள்.

பாஞ்சஜன்யத்தின் ஒலிகள் ச்ருதி(வேதத்)-திரளின் அலங்காரமாகத் திகழ்பவை; என்னுடைய ஒலிகளான ச்லோகங்களும் ச்ருதி(வேதத்) திரளுக்கு அலங்காரமானவை.

பாஞ்சஜன்யத்தின் ஒலிகள் ச்ருதிகளு(செவிகளு)க்கு இனிமையானவை; என்னுடைய ஒலிகளான ச்லோகங்களும் மஹான்களின் ச்ருதிகளு(செவி-களு)க்கு இனிமையூட்டும் பெருமை உடையவை.

அவை ஹ்ருத்யமானவை (பெருமானின் இதயத்தில் இருந்து வந்த-வை); என்னுடையவையும் ஹ்ருத்யமானவை (மனதுக்கு இனியவை).

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

पाराशर्यः प्रभूतादुपनिषदमृतोदन्वतः सारभूतं
निर्मथ्याऽऽदत्त सूत्रैरवितथनिगमाचार्यनामा मुनीन्द्रः।
यत् तन्निष्कृष्टमित्थं यतिपतिहृदयारूढमारूढतार्क्ष्यः
तद्वक्ता वाजिवक्त्रः सह मम गुरुभिर्वादिहंसाम्बुवाहैः॥५६२॥

ஸ்ரீபராசரரின் திருக்குமாரர் ஆன ஸ்ரீவ்யாஸர், உண்மையாக வேத-ஆசார்-யர் ஆன சிறந்த முனிவர்; அவர் உபநிஷத் எனும் பேரமுதக் கடலிலிருந்து ஸாரமானதை கடைந்து எடுத்து ஸூத்ரங்களில் அளித்தார்; அதில், அவரால் ஸித்தாந்தமாக சொல்லப்பட்டதும், ஸ்ரீராமானுஜர் திருவுள்ளத்தில் இருப்-பதுமான இந்த அர்த்தத்தை கருடவாகனத்தில் ஏறி இருக்கும் ஸ்ரீஹயக்ரீவ-பெருமான்தான், என் ஆசார்யரான அப்புள்ளாரையும் சேர்த்துக் கொண்டு இப்படியாக (என் மூலம்) அருளினான் - என்று ஸ்ரீதேசிகன் சாதிக்கிறார்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

கவிதார்க்கிகஸிம்ஹாய கல்யாணகுணசாலினே।
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம:॥